14. நாலாயிர திவ்யப்பிரபந்தப் பாசுரங்களின் அடைவு. [இதில் திருப்பல்லாண்டு தொடங்கி இராமாநுச நூற்றந்தாதி யளவும் பாசுரங்கள் வரிசையாக லக்கக் குறிப்புடன் அமைக்கப்பட்டுள்ளன. இன்ன பாசுரம் இன்ன லக்கங் கொண்டது என்பது தெரிந்துகொள்வதற்காமிது.

15. பாட்டு முதற்குறிப்பகராதி. [இவ்வகராதியில் பாசுரங்களின் எண்கள் குறிக்கப்பட்டுள்ளன. அந்த எண்ணின்படி பாசுரங்களை யறிந்துகொள்வதற்காகவே பாசுரங்களின் அடைவு எண்களுடன் முன்னம் அமைக்கப்பட்டது.

16. திவ்ய தேசமார்க்க ப்ரதர்சினி. [திவ்யதேசங்கள் ஸேவிக்க ரைல் மார்க்கம்.]

17. திவ்ய தேசங்களுக்குப் பாடல் விசேஷக் குறிப்பு. [இன்ன திருப்பதிகளை இன்ன ஆழ்வார்கள் பாடினாரென்பது.]

18. திவ்ய ப்ரபந்த பகவத் கதாம்ருதம். [நாலாயிரத்திலுமுள்ள பகவத் கதைகளின் விவரணம்.]

| பக்கம் | பாட்டு | அடி | திருத்தம் | பக்கம் | பாட்டு | அடி | திருத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 8 | 6 | 3 | தாளிணை | 191 | 5 | 1 | முண்டொருகால் |
| 10 | 11 | 3 | வேட்கையாற் | 197 | 6 | 3 | விண்ணேற |
| 20 | 8 | 2 | மணிமுடி | 205 | 2 | 4 | நறையூர் |
| 29 | 1 | 1 | தாழ்பீலி | 220 | 9 | 2 | அமரர்கள் |
| 31 | 7 | 3 | குட்டன்களை | 244 | 8 | 2 | நுங்கள் |
| 34 | 3 | 1 | செய்துகொண்டு | 246 | 4 | 1 | தளர்ந்திட் |
| 38 | 5 | 3 | பிடித்துக்கொண்டு | 271 | 7 | 1 | வாய்மடித்து |
| ,, | 6 | 1 | ப்பேய்ச்சி | 276 | 96 | 4 | இறையாவனெ |
| 47 | 2 | 1 | புள்ளை | 278 | 10 | 2 | குடிப்பிறப்பும் |
| 51 | 3 | 3 | யொன்றுமறியேன் | 280 | 63 | 3 | மாயக்குழவி |
| 52 | 5 | 2 | கொண்டேன் | 282 | 85 | 3 | பின்னைக்கா |
| 59 | 15 | 5 | உனக்கென்ன | 2[illegible]3 | 19 | 4 | விளக்[illegible]தன் |
| 64 | 6 | 3 | போல்வண்ணன் | 298 | 36 | 3 | தன்னெடுங் |
| ,, | 4 | 1 | செய்கையும் * எங்களை | 304 | 2 | 5 | தெள்ளியோர் |
| 67 | 10 | 1 | விளையாட்டை | 312 | 1 | 7 | நிமிர்கொடி |
| 73 | 10 | 4 | அடியா | 323 | 8 | 1 | கொடுவினை |
| 74 | 10 | 1 | தடங்கள் | ,, | 4 | 1 | என்னீர்மை |
| 80 | 4 | 2 | விளையாடும் | 332 | 2 | 3 | அத்தாயாய் |
| 82 | 8 | 4 | னென்றுகொலோ | 338 | 9 | 2 | நீர்மல்க |
| 85 | 10 | 2 | பெற்றாலு | 342 | 7 | 4 | மாசூணாதே |
| ,, | 11 | 1 | மன்னிய | 344 | 1 | 2 | வழுவிலா |
| 92 | 4 | 1 | தொத்தலர் | 353 | 4 | 1 | பரிவின்றி |
| 95 | 13 | 2 | பெற்றியோய் | 360 | 5 | 1 | அமரர்தம் |
| 97 | 28 | 2 | முன்கடைந்த | 381 | 9 | 3 | நொடியுமாறவை |
| 100 | 54 | 1 | டழித்தவன் | 393 | 9 | 1 | ஆவி திகைக்க |
| ,, | 60 | 3 | தேன்பொருந்து | 409 | 10 | 1 | என்னெஞ்சென்னை |
| 108 | 7 | 1 | புத்தொடு | 422 | 8 | 2 | யாக்கைபுகாமை |
| 133 | 8 | 1 | யிளைத்தீர் | 424 | 1 | 3 | கூவகிலீர் |
| 142 | 7 | 1 | காலாகித்திசை | 425 | 7 | 4 | என்னுயிர்க்கது |
| 147 | 4 | 4 | அவரெங் | 430 | 8 | 1 | கொண்டெறியுமாலோ |
| 158 | 4 | 4 | அறியச்சென்று | 432 | 8 | 1 | அடியவர்தொழுமின் |
| 161 | 8 | 3 | வேல்நெடுங்கண் | 435 | 10 | 4 | மேய்ப்புவத்தி |
| 167 | 10 | 1 | திருமேனி | | | | |

பிழைதிருத்தம் முற்றிற்று.

ஸ்ரீ







# பதிப்பாசிரியரின் முன்னுரை

—)o(—

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் முந்துற முன்னம் அவதரித்த பொய்கையார் முதலான ஆழ்வார்கள் செய்தருளின மஹோபகாரங்களைப் பற்றி நாம் நிச்சலும் சிந்தனை செய்யவேண்டும். அவரவர்கள் ஜீவித்திருக்கும் நாளில் தம்மையடிபணிந்தவர்களுக்கு உஜ்ஜீவநோபாயமாக உபதேசங்களைச் செய்வது உபகாரமெனப்படும்; பிற்காலத்தவர்களும் நெடுநாள் வாழும்படி நூல்களை இயற்றி வைப்பது மஹோபகார மெனப்படும். இந்த உலகிலிருள் நீங்க அந்தமிழால் நற்கலைகளாய்ந்துரைத்த ஆழ்வார்களின் மஹோபகாரம் உலகமறிந்ததேயாயினும் அறியாதார்சிலரு மறிந்துகொள்ள இங்குத் தெரிவிக்கிறோம்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னுமிவ்வாழ்வார்கள் மூவரும் முதலாழ்வார்களென வழங்கப்படுவர்கள். இம்மூவரும் நூறுநூறு பாசுரங்கள் பணித்தார்கள். அம்மூன்று திவ்யப்ரபந்தங்களும் முறையே முதல் திருவந்தாதி, இரண்டாந்திருவந்தாதி, மூன்றாந்திருவந்தாதி எனப் பிரசித்தி பெற்றவை. இவை மூன்றாவதாயிரமான இயற்பாவில் 1,2,3ஆம் பிரபந்தங்களாகப் பரிகணிக்கப் பட்டவை. நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் இவையே முதன் முதலவதரித்த நற்றமிழ் நூல்களாம். உபதேசரத்தினமாலையில் ' * மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து, நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த—பெற்றிமையோர், என்று முதலாழ்வார்களென்னும் பெயரிவர்க்கு, நின்றதுலகத்தே நிகழ்ந்து * என்று மணவாள மாமுனிகளருளிச் செய்த பாசுரம் இங்கே அநுஸந்திக்கத் தக்கது.

மேலே சொன்ன முதலாழ்வார்களுக்கு அடுத்தவரும், பேயாழ்வாருடைய திருவடிகளைப் பணிந்து உய்ந்தவருமான திருமழிசையாழ்வார் (96 பாசுரங்கள் கொண்ட) நான்முகன் திருவந்தாதியும், (120 பாசுரங்கள் கொண்ட) திருச்சந்த விருத்தமும் ஆகிய இரண்டு திவ்யப் பிரபந்தங்களை யருளிச் செய்தார். இவற்றுள் முதற் பிரபந்தமானது "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்குவதனால் நான்முகன் திருவந்தாதி யெனப் பெயர் பெற்றது. இது முன்சொன்ன இயற்பா ஆயிரத்தில் நான்காவது பிரபந்தமாகவுள்ளது. திருச்சந்த விருத்தமெனும் மற்றொரு திவ்வியப் பிரபந்தம் முதலாயிரத்தில் ஆறாவது திவ்யப்ரபந்தமாக வுள்ளது. இவ்வாழ்வாரைத் திருமழிசைப் பிரானென்றும் வழங்குவர்; ஆசார்ய ஹ்ருதய திவ்ய சாஸ்த்ரத்தில் இவ்வாழ்வாருக்கு 'உறையிலிடாதவர்' என்கிற விருது அளிக்கப்பட்டுள்ளது. கண்டனம் செய்பவர்கள் கத்தியை உறையிலிடாமல் கண்டனமே தொழிலாயிருப்பது போல இவ்வாழ்வார் இதர தெய்வங்களுக்குப் பிறர் சொல்லும் பரத்வத்தைக் கண்டிப்பதிலேயே நோக்குடையவர் என்பது கருத்து. எம்பெருமானுடைய பரத்வத்தைத் தம்முடைய திவ்யப்பிரபந்தங்களில் ஆதிநடுவந்திகளில் நன்றாக ஸ்தாபித்தவரென்றபடி.

திருமழிசையாழ்வார்க்கு அடுத்தவர் நம்மாழ்வார். இவரே ஆழ்வார்களுள் தலைமை ஸ்தானம் பெற்றிருப்பவர். ப்ரபந்நஜநகூடஸ்தரென்று சிறப்பித்துக் கூறப்படுபவர். இவர் நான்கு வேதங்களின் ஸாரமாக நான்கு திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்தவர். அவை முறையே (100 பாசுரங்கொண்ட) திருவிருத்தமென்றும், (7 பாசுரங்கொண்ட) திருவாசிரிய மென்றும், (87 பாசுரங்கொண்ட) பெரிய திருவந்தாதி யென்றும், (1102 பாசுரங்கொண்ட) திருவாய்மொழி யென்றும் வழங்கப்பெறும். * மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோன் ஆறங்கங்கூற வவதரித்த * என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரப்படியே ஆறங்க மாகத் திருமங்கையாழ்வாரருளிச்செய்த ஆறு திவ்யப் பிரபந்தங்களுக்கு நம்மாழ்வாருடைய இந்நான்கு திவ்யப்ரபந்தங்களும் அங்கிகளாம். இவற்றுள் முந்தின மூன்று பிரபந்தங்களும் இயற்பா ஆயிரத்தில் 5, 6, 7 ஆம் பிரபந்தங்களாம். திருவாய்மொழியானது தனிப்பட்ட நான்காவதாயிரமாம்.

நம்மாழ்வார் திருவடிகளில் "தேவுமற்றறியேன்" என்று ஆச்ரயித்திருந்த ப்ராம்ம ணோத்தமரான மதுரகவிகளும் ஆழ்வார்கள் கோஷ்டியில் சேர்ந்தவராயினர். இவர் தம் முடைய திடமான அத்யவஸாயத்தின்படி எம்பெருமானைப் பாடாது நம்மாழ்வாரொரு வரையே நோக்கிப் பதிகம் பாடினர். அப்பிரபந்தம் **கண்ணிநுண் சிறுத்தாம்பு** என்பதாம். அது பகவத் விஷயமல்லாவிடினும் பகவத் விஷயங்களான நாலாயிர திவ்யப்ரபந்தங்களினிடையே பரிகணிக்கப்பட்டதாயிற்று. * வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல், சீர்த்த மதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழாரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே, சேர்வித் தார் தாற்பரியந் தேர்ந்து * என்ற உபதேச ரத்தினமாலைப் பாசுரம் இங்கு நோக்கத்தக்கது இது முதலாயிரத்தில் சரமப் பிரபந்தமாகவுள்ளது.

நம்மாழ்வார்க்கு அடுத்தவர் குலசேகராழ்வார். இவர் (105 பாசுரங்கொண்ட) பெரு மாள் திருமொழியையருளிச்செய்தார். அது முதலாயிரத்தில் ஐந்தாவது பிரபந்தமாகவுள் ளது. இவ்வாழ்வார்க்குக் குலசேகரப் பெருமாளென்றும் திருநாமமுண்டாதலால் அதை மூலமாகக் கொண்டே இவருடைய பிரபந்தம் பெருமாள் திருமொழியென வழங்கப் பெற்றது. இவ்வாழ்வார் வடமொழியில் **முகுந்தமாலை** யென்று ப்ரஸித்தமாய்ப் பரமமதுரமான ஸ்துதியை யருளிச் செய்தாரென்றுஞ் சொல்லுவர்கள். அஃது இவரருளிச் செய்ததன்று; இவரது மர பில் தோன்றியவரும் இவருடைய திருநாமத்தையே கொண்டவருமான மற்றொரு பரமபக்தர் பணித்ததென்றும் சொல்லுவர்கள்.

குலசேகராழ்வார்க்கு அடுத்தவர் பெரியாழ்வார். இவர்க்குப் பட்டர்பிரானென்றும் பட்டநாதரென்றும், விஷ்ணுசித்தரென்றும் புதுவையர்கோனென்றும் மறு பெயர்களு முண்டு. இவரே பாண்டிய ராஜஸதஸ்ஸில் பரதத்வநிர்ணயம் பண்ணிக் கிழியறுத்துப் பெற்ற பேராசிரியர். (12 பாசுரங்கள் கொண்ட) திருப்பல்லாண்டும், (473 பாசுரங்கள் கொண்ட) பெரியாழ்வார் திருமொழியும் இவரருளிச் செய்தவை. இவை முதலாயிரத்தின் 1, 2 பிரபந்தங்களாம். "கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக் கெல்லாம், ஆதி திருப் பல்லாண்டானதுவும், வேதத்துக்கு-ஓமென்னுமதுபோல் உள்ளதுக் கெல்லாஞ் சுருக்காய்த் தான் மங்கலமாதலால்" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் இங்கே அநுஸந்தேயம்.

"பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளை வாழியே" என்கிறபடியே பெரியாழ் வார் திருமகளாரான ஆண்டாள் (30 பாசுரங்கள் கொண்ட) திருப்பாவையும், (143 பாசுரங்கள் கொண்ட) நாச்சியார் திருமொழியும் அருளிச் செய்தாள். அவை முதலாயிரத்தில் 3, 4 ஆம் பிரபந்தங்களாக வுள்ளன. ஆண்டாள் பிராட்டிமார் கோஷ்டியைச் சேர்ந்தவளேயாயினும், இவ்வப்பிரபந்தங்களருளிச் செய்த காரணத்தினால் ஆழ்வார்கள் கோஷ்டியிலும் அந்வயம் பெற்றவளானவள்; ஸ்ரீ பெரும்பூதூரில் நடைபெறும் அத்தியயநோத்ஸவத்தில் ஆழ்வார்கள் கோஷ்டியில் ஆண்டாளும் திகழ்வது பிரசித்தம். இங்ஙனே மற்றுஞ் சில திவ்யதேசங்

களிலுமுண்டென்பர். ஆண்டாளுக்கு சூடிக்கொடுத்தநாச்சியார், கோதை என்னும் திரு நாமங்களுமுண்டு.

பெரியாழ்வார்க்கு அடுத்தவரான தொண்டரடிப்பொடியாழ்வார் (45 பாசுரங் கொண்ட) திருமாலையும் (10 பாசுரம் கொண்ட) திருப்பள்ளியெழுச்சியும் அருளிச் செய்தார். "திருமாலை யறியாதவன் திருமாலையறியான்" (அல்லது) 'பெருமாளை யறியான்' என வழங்கும் பழமொழியினால் திருமாலையின் ஏற்றம் அறியத்தக்கது. இவ்விரண்டு பிரபந்தங்களும் முதலாயிரத்தில் 7, 8-ஆம் பிரபந்தங்களாகவுள்ளன.

தொண்டரடிப்பொடியாழ்வார்க்கு அடுத்தவரான திருப்பாணாழ்வார் (10 பாசுரங் கொண்ட) அமலனாதிபிரானென்னும் திவ்ய ப்ரபந்த மருளிச் செய்தார். ஆழ்வார்களுள் இவரே மிகக் குறைந்த பாசுரமருளிச் செய்தவர்; ஆயினும் இவரது திவ்வியப் பிரபந்தத்திற்குள்ள ஏற்றம் மற்றெந்த பிரபந்தத்திற்கு மில்லை. *காண்பனவு முரைப்பனவும் மற்றொன்றின்றிக் கண்ணனையே கண்டுரைத்த கடியகாதல், பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவுமின்கள்* என்ற (முநிவாஹந போகத்திலுள்ள) தூப்புற்பிள்ளை பாசுரத்தினாலும் அவ்வேற்றம் அறியத்தக்கது.

திருப்பாணாழ்வார்க்கு அடுத்தவரான திருமங்கையாழ்வார், நம்மாழ்வாரருளிய நால் வேதஸாரமான நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கும் ஆறங்கம் போன்ற ஆறு திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்தார். அவையாவன: (1084 பாசுரங்கொண்ட) பெரியதிருமொழி, (20 பாசுரங்கொண்ட) திருக்குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், (30 பாசுரங்கொண்ட) திருநெடுந்தாண்டகம்—என்பனவாம். இவற்றுள், 1, 2, 6-ஆம் பிரபந்தங்கள் இரண்டாவதாயிரமாக வகுக்கப்பட்டவை. 3, 4, 5 ஆம் பிரபந்தங்கள் இயற்பா ஆயிரத்தில் 8, 9, 10 பிரபந்தங்களாக அமைந்தவை. இவ்வாழ்வார்க்கு, கலியன், கலிகன்றி, பரகாலன், திருமங்கைமன்னன், குறையல்பிரான் என்பவை முதலான திருநாமங்களுமுள்ளன.

ஆழ்வார்களினுடைய திவ்வியப்பிரபந்தங்கள் இவ்வளவே. மதுரகவியாழ்வாரையும் ஆண்டாளையும் சேர்த்துக் கணக்கிட்டால் ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்களை விட்டுக் கணக்கிட்டால் ஆழ்வார்கள் பதின்மர். பிறகு ஆசார்ய ஸார்வபௌமரான எம்பெருமானாருடைய காலத்தில் தோன்றியிருந்த திருவரங்கத்தமுதனாரென்னும் பரமபக்தர் ஸ்வாசார்யரான கூரத்தாழ்வானுடைய முகோல்லாஸத்தின் பொருட்டு எம்பெருமானார் துதியாக (108 பாசுரங்கொண்ட) இராமாநுச நூற்றந்தாதியை யருளிச்செய்தார். இதற்குப் ப்ரபன்ன காயத்ரீ யென்பது ஸம்ப்ரதாய வ்ருத்தர்களின் வ்யவஹாரம். நம்மாழ்வார் விஷயமாக மதுரகவிகள் அருளிச் செய்த கண்ணிநுண்சிறுத்தாம்பு போலவே இப்பிரபந்தமும் பூருவர்களால் நாலாயிர திவ்யப்பிரபந்தமாலையில் கோக்கப்பட்டதாயிற்று. திருக்கார்த்திகைக்குப் பின்பு திவ்யப்பிரபந்தங்களுக்குக் கொள்ளும் அநத்யயநக்ரமம் இவ்விரண்டு பிரபந்தங்களுக்கு மொக்கும். இதனால் இவற்றுக்கு ஆழ்வாரருளிச்செயல்களோடு ஸர்வாத்மநா ஸாம்யம் பூர்வாசார்யஸம்மதமென்று தேறுகிறது.

மணவாளமாமுனிகளின் காலம் வரையில் அநத்யயநகாலத்தில் திவ்யப்ரபந்தத் தனியன்களே ஸேவிக்கப்பட்டு வந்தன. சிஷ்யப்ரார்த்தனையாலும் பகவந்நியமநத்தாலும் மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலையும் திருவாய்மொழி நூற்றந்தாதியும் அருளிச்செய்ய அவை அநத்யயநகாலத்திற்கும் மற்றும் விசேஷ திருநக்ஷத்ரோத்ஸவாதிகளுக்கும் அந்நாள் தொடங்கி அநுஸந்தேயமாகக் கொள்ளப்பட்டன. இவையும் திவ்யப்ரபந்தங்களோடொக்கப் பரிகணிதங்களாயின.

பாவங்களைப் போக்க வழிதேடுவதிற்காட்டிலும் போதைப்போக்க வழிதேடுவது மிக அவசியமென்பர் பெரியோர். போதும் இனிதாகக் கழிந்து பாவமும் எளிதாகத் தொலையும் விரகு ஏதென்று பார்ப்பர் ரஸிகர்கள். திவ்யப்ரபந்தாநுபவமே நல்விரகென்று கொண்டார்கள் ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் முதலான நம் பூருவர்கள். வடமொழியிலமைந்த வேதங்களையும் இதிஹாஸ புராணங்களையும் மற்றும் பலவகை நூல்களையும் அவர்கள் அநுபவித்தும் அவற்றில் த்ருப்தி பெறாமல் ஆழ்வார்களின் ஈரச் சொற்களை யநுபவித்தே அவர்கள் உள் கனிந்துருகி உரோமகூபங்களாய்க் கண்ணநீர்கள் துள்ளஞ் சோரத் துயிலணை கொள்ளாது தவித்தனர் என்று நாம் நன்கு அறிகிறோம். உண்மையில, நெஞ்சை நீர்ப்பண்ட மாக்கவல்லவை திவ்யப்ரபந்தங்களே யன்றி வேறில்லை. 'ஸம்ஸ்க்ருத நூல்களில் போதுபோக்கவறியாதவர்களுக்கல்லவோ தமிழ்ப் பாசுரங்கள்' என்று சொல்லுமவர்களைப் பற்றி நாம் "ஆரானு மாதானுஞ் செய்ய, அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே!" என்ற நம்மாழ்வார் பாசுரத்தையே அநுஸந்தித்து நிற்போம். அருளிச் செயல் என்றே பேர்பெற்ற திவ்யப்ரபந்தங்களில் ஈடுபடும் பாக்கியம் பெறுவதென்பது ஒரு விலக்ஷணமான செல்வம். அற்புதமான ஸுக்ருதம். இது ஸாமான்யமாகச் சிலர்க்கு விளையுமதன்று. ஜன்மாந்தரஸஹஸ்ர நற்றவங்களினாலேயே விளையவேண்டுமிது.

ஆழ்வார்களின் திருவவதாரக்ரமம் "பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை யையன் அருள்மாறன் சேரலர்கோன்—துய்ய பட்டநாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நன்கலியன், ஈதிவர் தோற்றத்தடைவாமிங்கு" என்ற உபதேச ரத்தினமாலைப் பாசுரத்தின்படி பொய்கையாழ்வார் முதலாகத் திருமங்கையாழ்வாரீறாக இருந்தாலும் திவ்யப்ரபந்தங்களின் அடைவு நம் பூருவாசாரியர்களால் ஒருவிதமாக அமைக்கப்பட்டுள்ளது. பெரியாழ்வாரருளிச்செய்த திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழி என்னும் திவ்யப்ரபந்தங்களைத் தொடக்கத்திலே வைத்து, நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியை முடிவாக வைத்து நாலாயிர திவ்யப்ரபந்த க்ரமத்தை நிர்வஹித்துள்ளார்கள். முதலாயிரம், பெரிய திருமொழியாயிரம், இயற்பா ஆயிரம், திருவாய்மொழியாயிரம் என நான்கு ஆயிரமாக வகுக்கப்பட்டுள்ளதனால் நாலாயிரமென வழங்குதலாயிற்று. ஒவ்வொரு ஆயிரத்திலும் ஏற்றங் குறைவின்றி ஆயிரம் பாசுரங்கள் இருந்து தீரவேணுமென்கிற நியதி கொள்ளப்படவில்லை. முதலாயிரத்திலும் இயற்பா ஆயிரத்திலும் ஆயிரத்துக்குக் குறைந்த பாசுரங்கள் உள்ளன. பெரிய திருமொழியாயிரத்திலும் திருவாய்மொழியாயிரத்திலும் ஆயிரத்துக்கு மேற்பட்ட பாசுரங்கள் உள்ளன. எனினும் இந்த ஏற்றக் குறைகளில் கணிசிப்பு இல்லை. பெரிய தொகையில் சிறிது ஏறினாலும் குறைந்தாலும் பெரிய தொகையையிட்டே வழங்குவது எங்கு முண்டே. சிறிய திருமடல் பெரிய திருமடல் என்னுமிரண்டு திவ்வியப் பிரபந்தங்களைப் பலபாட்டுக்களாக வுடைத்துக் கணக்கிடுவது இலக்கண நெறிக்குச் சேராது. அவையிரண்டும் தனித்தனி இரண்டு பாட்டுக்களேயாகும். கலிவெண்பா வெனப்படும். நாலாயிரம் பாசுரங்கள் ஏற்றத்தாழ்வில்லாமல் தேறவேணுமென்னுங் கருத்தினால் அவற்றைப் பல பாட்டுக்களாகக் கணக்கிடுவது ஔசித்யம் என்ற ப்ரமாணத்திற்கு ஒக்குமென்னலாம்.

இங்ஙனம் :

**ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.**

---

[**முக்கியமானவொரு குறிப்பு:**—மேலே குறித்த ஸகல திவ்யப்ரபந்தங்களுக்கும் எளிய தெளிய நடையில் அடியேனால் எழுதப்பட்ட திவ்யார்த்ததீபிகையுரை பக்த பாகவத பண்டிதோத்தமர்களால் அநுபவிக்கத்தக்கது. அந்த தீபிகையில், மூலம் பதவுரை பொழிப்புரை விசேஷவுரை ஸ்வாபதேசார்த்தம் எல்லாம் அடங்கியுள்ளன. இவற்றைப் பூர்த்தியாக வாங்கிக் கொள்பவர்களுக்கு விலை 50 ரூ. மட்டுமே. தனித்தனி பிரபந்தங்களாகவும் கிடைக்கும். இதைப்பற்றி "க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்" என்கிற விலாசத்திற் கெழுதி விரிவான கியாடலாக் தருவித்துக் காண்க. மற்றும் பூர்வாசார்ய ஸகல ஸ்ரீஸூக்திகளின் வியாக்கியானங்களும் இங்கே கிடைக்கும்,]

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# முதலாயிரம்.

## பொதுத்தனியன்கள்.

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்,
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்,
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ: ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி: ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்,
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந் ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

## திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழிகளின் தனியன்கள்.

குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந் நரபதிபரிக்லுப்தம் சுல்கமாதாதுகாம:,
ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத் த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி.

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகால்
சொன்னார் கழற்கமலஞ் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம் கீழ்மையினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
ஈண்டிய சங்க மெடுத்தூத—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் முதலாயிரத்தில்

பெரியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பல்லாண்டு.

** பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு * பலகோடிநூறாயிரம்
மல்லாண்ட திண்டோள்மணிவண்ணா * உன் சேவடி செவ்விதிருக் காப்பு. 1

அடியோமோடும்நின்னோடும் பிரிவின்றியாயிரம்பல்லாண்டு *
வடிவாய்நின் வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு*
வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு*
படைபோர்புக்குமுழங்கும் அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே 2

வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல் வந்துமண்ணும்மணமுங்கொண்மின் *
கூழாட்பட்டுநின்றீர்களை யெங்கள்குழுவினில் புகுதலொட்டோம்*
ஏழாட்காலும்பழிப்பிலோம்நாங்கள் இராக்கதர்வாழ் * இலங்கை
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. 3

ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்து எங்கள்குழாம்புகுந்து *
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ *
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணாயவென்று *
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டுகூறுமினே. 4

அண்டக்குலத்துக்கதிபதியாகி அசுரரிராக்கதரை *
இண்டைக்குலத்தையெடுத்துக்களைந்த இருடீகேசன்தனக்கு *
தொண்டக்குலத்திலுள்ளீர்வந்தடிதொழுது ஆயிரநாமஞ்சொல்லி *
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே. 5

எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பன் ஏழ்படிகால்தொடங்கி *
வந்துவழிவழியாட்செய்கின்றோம் * திருவோணத்திருவிழவில்
அந்தியம்போதிலரியுருவாகி அரியையழித்தவனை *
பந்தனைதீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே. 6

தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின் *
கோயிற்பொறியாலேயொற்றுண்டுநின்று குடிகுடியாட்செய்கின்றோம் *
மாயப்பொருபடைவாணனை ஆயிரந்தோளும் பொழிகுருதி
பாய * சுழற்றியவாழிவல்லானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. 7

நெய்யிடைநல்லதோர்சோறும் நியதமுமத்தாணிச்சேவகமும் *
கையடைக்காயும் கழுத்துக்குப்பூணொடு காதுக்குக்குண்டலமும் *
மெய்யிடநல்லதோர்சாந்தமுந்தந்து என்னைவெள்ளுயிராக்கவல்ல *
பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டுகூறுவனே. 8

உடுத்துக்களைந்தநின்பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு *
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம் *
விடுத்ததிசைக்கருமந்திருத்தித் திருவோணத்திருவிழவில் *
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. 9

எந்நாளெம்பெருமான் உன்தனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
அந்நாளே * அடியோங்களடிக்குடில் வீடுபெற்றுய்ந்ததுகாண் *
செந்நாள்தோற்றித் திருமதுரையுட்சிலைகுனித்து * ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே உன்னைப்பல்லாண்டுகூறுதுமே. 10

அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன் * அபிமானதுங்கன்
செல்வனைப்போலத் திருமாலேநானுமுனக்குப்பழவடியேன் *
நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பலபரவி *
பல்வகையாலும்பவித்திரனே உன்னைப்பல்லாண்டுகூறுவனே. 11

பல்லாண்டென்றுபவித்திரனைப் பரமேட்டியை * சார்ங்கமென்னும்
வில்லாண்டான்தன்னை வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல் *
நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று *
பல்லாண்டும்பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே. 12

அடிவரவு;—பல் அடியோம் ஏடண்டம், எந்தை தீ நெய் உடுத்து, எந்நாளல் வழக்கு பல்லாண்டு வண்ணம்.

திருப்பல்லாண்டு முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியாழ்வார் அருளிச்செய்த

# பெரியாழ்வார் திருமொழி

## முதற்பத்து—முதல் திருமொழி—வண்ணமாடங்கள்.

—o—

** வண்ணமாடங்கள்சூழ் திருக்கோட்டியூர் * கண்ணன்கேசவன் நம்பிபிறந்தினில் *
எண்ணெய்சுண்ணம் எதிரெதிர்தூவிட * கண்ணன்முற்றம் கலந்தளறாயிற்றே. 1

ஓடுவார்விழுவார் உகந்தாலிப்பார் * நாடுவார்நம்பிரான் எங்குத்தானென்பார் *
பாடுவார்களும் பல்பறைகொட்டநின்று * ஆடுவார்களும் ஆயிற்றாய்ப்பாடியே. 2

பேணிச்சீருடைப் பிள்ளைபிறந்தினில் * காணத்தாம்புகுவார் புக்குப்போதுவார் *
ஆணொப்பார் இவன்நேரில்லைகாண் * திருவோணத்தான் உலகாளுமென்பார்களே. 3

உறியைமுற்றத்து உருட்டிநின்றாடுவார் * நறுநெய்பால்தயிர் நன்றாகத்தூவுவார் *
செறிமென்கூந்தல் அவிழத்திளைத்து * எங்கும் அறிவழிந்தனர் ஆய்ப்பாடியாயரே. 4

கொண்டதாளுறி கோலக்கொடுமழு * தண்டினர் பறியோலைச்சயனத்தர் *
விண்டமுல்லை அரும்பன்னபல்லினர் * அண்டர்மிண்டிப் புகுந்துநெய்யாடினார். 5

கையுங்காலும் நிமிர்த்துக்கடாரநீர் * பையவாட்டிப் பசுஞ்சிறுமஞ்சளால் *
ஐயநாவழித்தாளுக்கு அங்காந்திட * வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே. 6

வாயுள்வையகங் கண்ட மடநல்லார் * ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம் *
பாயசீருடைப் பண்புடைப்பாலகன் * மாயனென்று மகிழ்ந்தனர்மாதரே. 7

பத்துநாளுங்கடந்த இரண்டாநாள் * எத்திசையும் சயமரங்கோடித்து *
மத்தமாமலை தாங்கியமைந்தனை * உத்தானஞ்செய்து உகந்தனராயரே. 8

கிடக்கில்தொட்டில் கிழியவுதைத்திடும் * எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும் *
ஒடுக்கிப்புல்கில் உதரத்தேபாய்ந்திடும் * மிடுக்கிலாமையால் நான்மெலிந்தேன்நங்காய். 9

செந்நெலார்வயல்சூழ் திருக்கோட்டியூர் * மன்னுநாரணன் நம்பிபிறந்தமை *
மின்னுநூல் விட்டுசித்தன்விரித்த * இப் பன்னுபாடல்வல்லார்க்கு இல்லைபாவமே. 10

அடி வரவு;—வண்ணமோடு பேணியுறி கொண்ட கைவாய்பத்து கிடக்கில் செந்நெல் சீதம்.

---

## முதற்பத்து-இரண்டாந் திருமொழி—சீதக்கடல்.

சீதக்கடலுள் ளமுதன்னதேவகி * கோதைக்குழலாள் அசோதைக்குப்போத்தந்த *
பேதைக்குழவி பிடித்துச்சுவைத்துண்ணும் * பாதக்கமலங்கள்காணீரே பவளவாயீர்
[வந்துகாணீரே. 1

முத்தும்மணியும் வயிரமும்நன்பொன்னும் * தத்திப்பதித்துத் தலைப்பெய்தாற்போல் * எங்கும்
பத்துவிரலும் மணிவண்ணன்பாதங்கள் * ஒத்திட்டிருந்தவாகாணீரே ஒண்ணுதலீர்வந்து
[காணீரே. 2

பணைத்தோளிளவாய்ச்சி பால்பாய்ந்தகொங்கை * அணைத்தாரவுண்டு கிடந்தவிப்பிள்ளை
இணைக்காலில்வெள்ளித் தளைநின்றிலங்கும் * கணைக்காலிருந்தவாகாணீரே காரிகையீர்
[வந்துகாணீரே. 3

உழந்தாள்நறுநெய் ஒரோதடாவுண்ண * இழந்தாளெரிவினால் ஈர்த்தெழில்மத்தின் *
பழந்தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான் * முழந்தாளிருந்தவாகாணீரே முகிழ்
[முலையீர்வந்துகாணீரே. * 4

பிறங்கியபேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு * உறங்குவான்போலே கிடந்தவிப்பிள்ளை *
மறங்கொளிரணியன் மார்வைமுன்கீண்டான் * குறங்குகளைவந்துகாணீரே குவிமுலையீர்
[வந்துகாணீரே. 5

மத்தக்களிற்று வசுதேவர்தம்முடை * சித்தம்பிரியாத தேவகிதன்வயிற்றில் *
அத்தத்தின்பத்தாநாள் தோன்றியவச்சுதன் * முத்தமிருந்தவாகாணீரே முகிழ்நகையீர்
[வந்துகாணீரே. 6

இருங்கைம்மதகளிறு ஈர்க்கின்றவனை * பருங்கிப்பறித்துக் கொண்டோடுபரமன்தன் *
நெருங்குபவளமும் நேர்நாணும்முத்தும் * மருங்குமிருந்தவாகாணீரே வாணுதலீர்வந்து
[காணீரே. 7

வந்தமதலைக் குழாத்தைவலிசெய்து * தந்தக்களிறுபோல் தானேவிளையாடும் *
நந்தன்மதலைக்கு நன்றுமழகிய * உந்தியிருந்தவாகாணீரே ஒளியிழையீர்வந்துகாணீரே. 8

அதிருங்கடல்நிறவண்ணனை * ஆய்ச்சிமதுரமுலையூட்டி வஞ்சித்துவைத்து *
பதறப்படாமே பழந்தாம்பாலார்த்த * உதரமிருந்தவாகாணீரே ஒளிவளையீர்வந்துகாணீரே. 9

பெருமாவுரலில் பிணிப்புண்டிருந்து * அங்கிருமாமருதம் இறுத்தவிப்பிள்ளை *
குருமாமணிப்பூண் குலாவித்திகழும் *திருமார்விருந்தவாகாணீரேசேயிழையீர்வந்து
[காணீரே. 10

நாள்களோர்நாலைந்து திங்களளவிலே * தாளைநிமிர்த்துச் சகடத்தைச்சாடிப்போய் *
வாள்கொள்வளையெயிற் றாருயிர்வவ்வினான் * தோள்களிருந்தவாகாணீரே சுரிகுழலீர்வந்து
[காணீரே. 11

மைத்தடங்கண்ணி அசோதைவளர்க்கின்ற * செய்த்தலைநீலநிறத்துச் சிறுப்பிள்ளை *
நெய்த்தலைநேமியுஞ் சங்கும் நிலாவிய * கைத்தலங்கள்வந்துகாணீரே கனங்குழையீர்வந்து
[காணீரே. 12

வண்டமர்பூங்குழல் ஆய்ச்சிமகனாக * கொண்டுவளர்க்கின்ற கோவலக்குட்டற்கு *
அண்டமும்நாடும் அடங்கவிழுங்கிய*கண்டமிருந்தவாகாணீரே காரிகையீர்வந்துகாணீரே. 13

எந்தொண்டைவாய்ச்சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு *
அந்தொண்டைவாய் அமுதாதரித்து * ஆய்ச்சியர்
தந்தொண்டைவாயால் தருக்கிப்பருகும் * இச்
செந்தொண்டைவாய்வந்துகாணீரே சேயிழையீர்வந்துகாணீரே, 14

நோக்கியசோதை நுணுக்கியமஞ்சளால் * நாக்குவழித்து நீராட்டுமிந்நம்பிக்கு *
வாக்கும்நயனமும் வாயும்முறுவலும் *மூக்குமிருந்தவாகாணீரே மொய்குழலீர்வந்துகாணீரே.
விண்கொளமரர்கள் வேதனைதீர * முன்மண்கொள்வசுதேவர்தம் மகனாய்வந்து *
திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான் * கண்களிருந்தவாகாணீரே கனவளையீர்வந்து
[காணீரே. 16

பருவம்நிரம்பாமே பாரெல்லாமுய்ய * திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற *
உருவுகரிய ஒளிமணிவண்ணன் * புருவமிருந்தவாகாணீரே பூண்முலையீர்வந்துகாணீரே. 17
மண்ணும்மலையும் கடலுமுலகேழும் * உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும்பிள்ளைக்கு *
வண்ணமெழில்கொள் மகரக்குழையிவை * திண்ணமிருந்தவாகாணீரே சேயிழையீர்வந்து
[காணீரே. 18

முற்றிலுந்தூதையும் முன்கைம்மேல்பூவையும் * சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை *
பற்றிப்பறித்துக் கொண்டோடும்பரமன்தன் * நெற்றியிருந்தவாகாணீரே நேரிழையீர்வந்து
[காணீரே. 19

அழகியபைம்பொன்னின் கோல் அங்கைக்கொண்டு* கழல்கள்சதங்கை கலந்தெங்குமார்ப்ப*
மழகன்றினங்கள் மறித்துத்திரிவான்* குழல்களிருந்தவாகாணீரே குவிமுலையீர்வந்துகாணீரே.
சுருப்பார்குழலி அசோதைமுன்சொன்ன * திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப்பட்டன்*
விருப்பாலுரைத்த இருபதோடொன்று முரைப்பார்போய் * வைகுந்தத்தொன்றுவர்தாமே.

அடிவரவு:—சீத முத்துப் பணை யுழ பிற மத்தம் இருங்கை வந்து அதிரும் பெருமா நாள் மை வண்டென் நோக்கி விண் பருவம் மண் முற்றில் அழகிய சுருப்பார் மாணிக்கம்.

———

## முதற்பத்து—மூன்றாந்திருமொழி—மாணிக்கங்கட்டி.

—o—

மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி* ஆணிப்பொன்னாற்செய்த வண்ணச்சிறுத்தொட்டில்*
பேணியுனக்குப் பிரமன் விடுதந்தான்* மாணிக்குறளனே தாலேலோ வையமளந்தானே
[தாலேலோ. 1

உடையார்கனமணியோடு ஒண்மாதுளம்பூ * இடைவிரவிக்கோத்த எழில்தெழ்கினோடு *
விடையேறுகாபாலி யீசன்விடுதந்தான் * உடையாயழேலழேல்தாலேலோ உலகமளந்
[தானே தாலேலோ. 2

எந்தம்பிரானார் எழில்திருமார்வர்க்கு * சந்தமழகிய தாமரைத்தாளர்க்கு *
இந்திரன்றானும் எழிலுடைக்கிண்கிணி * தந்துவனாய்நின்றான் தாலேலோ தாமரைக்
[கண்ணனே தாலேலோ. 3

சங்கின்வலம்புரியுஞ் சேவடிக்கிண்கிணியும் * அங்கைச்சரிவளையும் நாணுமரைத்தொடரும்*
அங்கண்விசும்பில் அமரர்கள்போத்தந்தார் * செங்கட்கருமுகிலே தாலேலோ
[தேவகிசிங்கமே தாலேலோ. 4

எழிலார்திருமார்பிற்கு ஏற்குமிவையென்று * அழகியவைம்படையும் ஆரமுங்கொண்டு *
வழுவில்கொடையான் வயிச்சிரவணன் * தொழுதுவனாய்நின்றான் தாலேலோ
[தூமணிவண்ணனே தாலேலோ. 5

ஓதக்கடலில் ஒளிமுத்தினாரமும் * சாதிப்பவளமுஞ் சந்தச்சரிவளையும் *
மாதக்கவென்று வருணன்விடுதந்தான் * சோதிச்சுடர்முடியாய் தாலேலோ
[சுந்தரத்தோளனே தாலேலோ. 6

கானார்நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்* வானார்செழுஞ்சோலைக் கற்பகத்தின்வாசிகையும்
தேனார்மலர்மேல் திருமங்கைபோத்தந்தாள் * கோனேயழேலழேல்தாலேலோ
குடந்தைக்கிடந்தானே தாலேலோ. 7

கச்சொடுபொற்சுரிகை காம்புகனவளை * உச்சிமணிச்சுட்டி ஒண்டாள்நிரைப்பொற்பூ *
அச்சுதனுக்கென்று அவனியாள்போத்தந்தாள் * நச்சுமுலையுண்டாய் தாலேலோ
[நாராயணாவழேல் தாலேலோ. 8

மெய்திமிருநானப் பொடியோடுமஞ்சளும் * செய்யதடங்கண்ணுக்கு அஞ்சனமும்சிந்துரமும்*
வெய்யகலைப்பாகி கொண்டுவளாய்நின்றாள் * ஐயாவழேலழேல்தாலேலோ
[அரங்கத்தணையானே தாலேலோ. 9

வஞ்சனையால்வந்த பேய்ச்சிமுலையுண்ட * அஞ்சனவண்ணனை ஆய்ச்சிதாலாட்டிய *
செஞ்சொல்மறையவர் சேர்புதுவைப்பட்டன்சொல் * எஞ்சாமைவல்லவர்க்கு
[இல்லையிடர்தானே. 10

அடிவரவு:—மாணியுடையென் சங்கின் எழிலோதக் கானார் கச்சு மெய் வஞ்சனை தன்.

## முதற்பத்து—நான்காந் திருமொழி—தன்முகத்துச்சுட்டி.

—o—

தன்முகத்துச்சுட்டி தூங்கத்தூங்கத்தவழ்ந்துபோய் *
பொன்முகக்கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான் *
என்மகன்கோவிந்தன் கூத்தினையிளமாமதீ *
நின்முகங்கண்ணுளவாகில் நீயிங்கேநோக்கிப்போ. 1

என்சிறுக்குட்டன் எனக்கோரின்னமுதெம்பிரான் *
தன்சிறுக்கைகளால் காட்டிக்காட்டியழைக்கின்றான் *
அஞ்சனவண்ணனோடு ஆடலாடவுறுதியேல் *
மஞ்சில்மறையாதே மாமதீமகிழ்ந்தோடிவா. 2

சுற்றுமொளிவட்டம் சூழ்ந்துசோதிபரந்தெங்கும் *
எத்தனைசெய்யிலும் என்மகன்முகம்நேரொவ்வாய் *
வித்தகன்வேங்கடவாணன் உன்னைவிளிக்கின்ற *
கைத்தலம்நோவாமே அம்புலீகடிதோடிவா. 3

சக்கரக்கையன் தடங்கண்ணால்மலரவிழித்து *
ஒக்கலைமேலிருந்து உன்னையேசுட்டிக்காட்டுங்காண் *
தக்கதறிதியேல் சந்திராசலஞ்செய்யாதே *
மக்கட்பெறாத மலடனல்லையேல்வாகண்டாய். 4

அழகியவாயில் அமுதவூறல்தெளிவுறா * மழலைமுற்றாத இளஞ்சொல்லாலுன்னைக்கூவுகின்றான் *
குழகன்சிரீதரன் கூவக்கூவநீபோதியேல் * புழையிலவாகாதே நின்செவிபுகர்மாமதீ! 5

தண்டொடுசக்கரம் சார்ங்கமேந்துந்தடக்கையன் *
கண்டுயில்கொள்ளக்கருதிக் கொட்டாவிகொள்கின்றான் *
உண்டமுலைப்பாலறாகண்டாய் உறங்காவிடில் *
விண்டனில்மன்னிய மாமதீவிரைந்தோடிவா. 6

பாலகனென்று பரிபவஞ்செய்யேல் * பண்டொருநாள் ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன் *
மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும்வெகுளுமேல் * மாலைமதியாதே மாமதீமகிழ்ந்தோடிவா

சிறியனென்றென்னிளஞ்சிங்கத்தை யிகழேல்கண்டாய் *
சிறுமையின்வார்த்தையை மாவலியிடைச்சென்றுகேள் *
சிறுமைப்பிழைகொள்ளில் நீயுமுன்தேவைக்குரியைகாண் *
நிறைமதி! நெடுமால் விரைந்துன்னைக்கூவுகின்றான். 8

தாழியில்வெண்ணெய் தடங்கையாரவிழுங்கிய *
பேழைவயிற்றெம்பிரான் கண்டாயுன்னைக்கூவுகின்றான் *
ஆழிகொண்டுன்னையெறியும் ஐயுறவில்லைகாண் * வாழவுறுதியேல் மாமதீமகிழ்ந்தோடிவா. 9

* * மைத்தடங்கண்ணி அசோதைதன்மகனுக்கு * இவை
ஒத்தனசொல்லி உரைத்தமாற்றம் * ஒளிபுத்தூர்
வித்தகன்விட்டுசித்தன் விரித்ததமிழிவை * எத்தனையுஞ்சொல்லவல்லவர்க்கு இடரில்லையே. 10

அடிவரவு:—தன் என் சுற்றும் சக்கரம் அழகிய தண்டு பாலகன் சிறியன் தாழி மை உய்ய.

---

## முதற்பத்து—ஐந்தாந்திருமொழி—உய்யவுலகு.

—— o ——

* * உய்யவுலகுபடைத்துண்டமணிவயிறா ஊழிதொறூழிபலவாலினிலையதன்மேல் *
பையவுயோகுதுயில்கொண்டபரம்பரனே பங்கயநீணயனத்தஞ்சனமேனியனே *
செய்யவள்நின்னகலஞ்சேமமெனக்கருதிச் செல்வுபொலிமகரக்காதுதிகழ்ந்திலக *
ஐயவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. 1

கோளரியின்னுருவங்கொண்டவுணனுடலம் குருதிகுழம்பியெழக்கூருகிராற்குடைவாய் *
மீளவவன்மகனைமெய்ம்மைகொளக்கருதி மேலையமர்பதிமிக்குவெகுண்டுவர *
காளநன்மேகமவைகல்லொடுகார்பொழியக் கருதிவரைக்குடையாக்காலிகள்காப்பவனே *
ஆளவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. 2

நம்முடைநாயகனேநான்மறையின்பொருளே நாபியுள்நற்கமலநான்முகனுக்கொருகால் *
தம்மனையானவனேதரணிதலமுழுதும் தாரகையின்னுலகுந்தடவிஅதன்புறமும் *
விம்மவளர்ந்தவனேவேழமுமேழ்விடையும் விரவியவேலைதனுள்வென்றுவருமவனே *
அம்மவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேஆடுகவாடுகவே. 3

வானவர்தாம்மகிழவன்சகடமுருள வஞ்சமுலைப்பேயின்நஞ்சமுதுண்டவனே *
கானகவல்விளவின்காயுதிரக்கருதிக் கன்றதுகொண்டெறியுங்கருநிறவென்கன்றே *
தேனுகனும்முரனுந்திண்டிறல்வெந்நரகன் என்பவர்தாம்மடியச்செருவதிரச்செல்லும் *
ஆனையெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. 4

மத்தளவுந்தயிரும்வார்குழல்நன்மடவார் வைத்தனநெய்களவால்வாரிவிழுங்கி * ஒருங்
கொத்தவிணைமருதமுன்னியவந்தவரை ஊருகரத்தினொடுமுந்தியவெந்திறலோய் *
முத்தினிளமுறுவல்முற்றவருவதன்முன் முன்னமுகத்தணியார்மொய்குழல்களலைய *
அத்தவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. 5

காயமலர்நிறவாகருமுகில்போலுருவா கானகமாமடுவிற்காளியனுச்சியிலே *
தூயநடம்பயிலுஞ்சுந்தரவென்சிறுவா துங்கமதக்கரியின்கொம்புபறித்தவனே *
ஆயமறிந்துபொருவானெதிர்வந்தமல்லை அந்தரமின்றியழித்தாடியதாளிணையாய் *
ஆயவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. 6

துப்புடையாயர்கள்தம்சொல்வழுவாதொருகால் தூயகருங்குழல்நற்றோகைமயிலனைய *
நப்பினைதன்திறமாநல்விடையேழவிய நல்லதிறலுடையநாதனுமானவனே *
தப்பினபிள்ளைகளைத்தனமிகுசோதிபுகத் தனியொருதேர்கடவித்தாயொடுகூட்டிய * என்
அப்பவெனக்கொருகாலாடுகசெங்கீரை ஆயர்கள்போரேறேயாடுகவாடுகவே. 7

உன்னையுமொக்கலையிற்கொண்டுதமில்மருவி உன்னொடுதங்கள்கருத்தாயினசெய்துவரும் *
கன்னியரும்மகிழக்கண்டவர்கண்குளிரக் கற்றவர்தெற்றிவரப்பெற்றவெனக்கருளி *
மன்னுகுறுங்குடியாய்வெள்ளறையாய்மதிள்சூழ் சோலைமலைக்கரசேகண்ணபுரத்தமுதே *
என்னவலங்களைவாயாடுகசெங்கீரை ஏழுலகுமுடையாயாடுகவாடுகவே. 8

பாலொடுநெய்தயிரொண்சாந்தொடுசெண்பகமும் பங்கயநல்லகருப்பூரமுநாறிவர *
கோலநறும்பவளச்செந்துவர்வாயினிடைக் கோமளவெள்ளிமுளைப்போல்சிலபல்லிலக *
நீலநிறத்தழகாரைம்படையின்நடுவே நின்கனிவாயமுதமிற்றுமுறிந்துவிழ *
ஏலுமறைப்பொருளேயாடுகசெங்கீரை ஏழுலகுமுடையாயாடுகவாடுகவே. 9

செங்கமலக்கழலிற்சிற்றிதழ்போல்விரலில் சேர்திகழாழிகளுங்கிண்கிணியும் * அரையில்
தங்கியபொன்வடமுந்தாளநன்மாதுளையின் பூவொடுபொன்மணியும்மோதிரமுங்கிறியும் *
மங்கலவைம்படையுந்தோள்வளையுங்குழையும் மகரமும்வாளிகளுஞ்சுட்டியுமொத்திலக *
எங்கள்குடிக்கரசேயாடுகசெங்கீரை ஏழுலகுமுடையாயாடுகவாடுகவே. 10

* * அன்னமும்மீனுருவுமாளரியுங்குறளும் ஆமையுமானவனே யாயர்கள்நாயகனே *
என்னவலங்களைவாயாடுகசெங்கீரை யேழுலகும்முடையாயாடுகவாடுகவென்று *
அன்னநடைமடவாளசோதையுகந்தபரிசு ஆனபுகழ்ப்புதுவைப்பட்டனுரைத்ததமிழ் *
இன்னிசைமாலைகளிப்பத்தும்வல்லார் உலகிலெண்டிசையும்புகழ்மிக்கின்பமதெய்துவரே. 11

அடிவரவு:—உய்யக் கோளரி நம்முடைவான் மத்துக்காய் துப்புன்னைப்பால் செங்கமல்மன்ன் மாணிக்கம்.

## முதற்பத்து—ஆறுந்திருமொழி—மாணிக்கக்கிண்கிணி

* * மாணிக்கக்கிண்கிணியார்ப்ப மருங்கின்மேல் *
ஆணிப்பொன்னாற்செய்த ஆய்பொன்னுடைமணி *
பேணிப்பவளவாய் முத்திலங்க* பண்டு
காணிகொண்டகைகளாற்சப்பாணி கருங்குழற்குட்டனேசப்பாணி. 1

பொன்னரைநாணொடு மாணிக்கக்கிண்கிணி * தன்னரையாடத் தனிச்சுட்டிதாழ்ந்தாட *
என்னரைமேல்நின்றிழிந்து உங்களாயர்தம் * மன்னரைமேற்கொட்டாய்சப்பாணி மாயவனே
[கொட்டாய்சப்பாணி. 2

பன்மணிமுத்தின் பவளம்பதித்தன்ன * என்மணிவண்ணன் இலங்குபொற்றோட்டின்மேல் *
நின்மணிவாய்முத்திலங்க நின்னம்மைதன் * அம்மணிமேற்கொட்டாய்சப்பாணி ஆழியங்கை
[யனேசப்பாணி. 3

தூநிலாமுற்றத்தே போந்துவிளையாட * வானிலாவம்புலீ சந்திராவாவென்று *
நீநிலாநின்புகழாநின்ற ஆயர்தம் * கோநிலாவக்கொட்டாய்சப்பாணி குடந்தைக்
[கிடந்தானேசப்பாணி. 4

புட்டியிற்சேறும் புழுதியுங்கொண்டுவந்து * அட்டியமுக்கி அகம்புக்கறியாமே *
சட்டித்தயிரும் தடாவினில்வெண்ணெயுமுண் * பட்டிக்கன்றேகொட்டாய்சப்பாணி
[பற்பநாபாகொட்டாய்சப்பாணி. 5

தாரித்துநூற்றுவர் தந்தைசொற்கொள்ளாது * போருய்த்துவந்து புகுந்தவர்மண்ணாள *
பாரித்தமன்னர்படப் பஞ்சவர்க்கு * அன்று, தேருய்த்தகைகளாற்சப்பாணி தேவகி
[சிங்கமேசப்பாணி. 6

பரந்திட்டுநின்ற படுகடல்தன்னை * இரந்திட்டகைம்மேல் எறிதிரைமோத *
கரந்திட்டுநின்ற கடலைக்கலங்க * சரந்தொட்டகைகளாற்சப்பாணி சார்ங்கவிற்
[கையனேசப்பாணி. 7

குரக்கினத்தாலே குரைகடல்தன்னை * நெருக்கியணைகட்டி நீணீரிலங்கை *
அரக்கரவிய அடுகணையாலே * நெருக்கியகைகளாற்சப்பாணி நேமியங்கையனேசப்பாணி. 8

அளந்திட்டதூணை அவன்தட்ட * ஆங்கே வளர்ந்திட்டு வாளுகிர்ச்சிங்கவுருவாய் *
உளந்தொட்டிரணியன் ஒண்மார்பகலம் * பிளந்திட்டகைகளாற்சப்பாணி பேய்
[முலையுண்டானேசப்பாணி. 9

அடைந்திட்டமரர்கள் ஆழ்கடல்தன்னை * மிடைந்திட்டுமந்தரம் மத்தாகநாட்டி *
வடஞ்சுற்றி வாசுகிவன்கயிறாக * கடைந்திட்டகைகளாற்சப்பாணி கார்முகில்வண்ணனே
[சப்பாணி. 10

* * ஆட்கொள்ளத்தோன்றிய ஆயர்தங்கோவினை *
நாட்கமழ்பூம்பொழில் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
வேட்கையால்சொன்ன சப்பாணியீரைந்தும் *
வேட்கையினாற்சொல்லுவார் வினைபோமே. 11

அடிவரவு:—மாணி பொன் பன் தூநிலா புட்டி தாரித்து பரந்து குரக்கினம் அளந்து அடைந்து ஆட்கொள்ளத் தொடர்.

---

## முதற்பத்து—ஏழாந்திருமொழி—தொடர்சங்கிலிகை.

---

* * தொடர்சங்கிலிகைசலார்பிலாரென்னத் தூங்குபொன்மணியொலிப்ப *
படுமும்மதப்புனல்சோர வாரணம்பையநின்றூர்வதுபோல் *
உடன்கூடிக்கிண்கிணியாரவாரிப்ப உடைமணிபறைகறங்க *
தடந்தாளிணைகொண்டுசார்ங்கபாணி தளர்நடைநடவானோ. 1

செக்கரிடைநுனிக்கொம்பில்தோன்றுஞ் சிறுபிறைமுளைப்போல *
நக்கசெந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர்வெண்பல்முளையிலக *
அக்குவடமுடுத்தாமைத்தாலிபூண்ட அனந்தசயனன் *
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. 2

மின்னுக்கொடியுமோர்வெண்டிங்களும் சூழ்பரிவேடமுமாய் *
பின்னல்துலங்குமரசிலையும் பீதகச்சிற்றாடையொடும் *
மின்னிற்பொலிந்ததோர்கார்முகில்போலக் கழுத்தினிற்காறையொடும் *
தன்னிற்பொலிந்தவிருடீகேசன் தளர்நடைநடவானோ. 3

கன்னற்குடந்திறந்தாலொத்தூறிக் கணகணசிரித்துவந்து *
முன்வந்துநின்றுமுத்தந்தரும் என்முகில்வண்ணன்திருமார்வன் *
தன்னைப்பெற்றேற்குத்தன்வாயமுதந்தந்து என்னைத்தளிர்ப்பிக்கின்றான் *
தன்னெற்றுமாற்றலர்தலைகள்மீதே தளர்நடைநடவானோ. 4

முன்னலோர்வெள்ளிப்பெருமலைக்குட்டன் மொடுமொடுவிரைந்தோட *
பின்னைத்தொடர்ந்ததோர்கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல் *
பன்னியுலகம்பரவியோவாப் புகழ்ப்பலதேவனென்னும் *
தன்னம்பியோடப்பின்கூடச்செல்வான் தளர்நடைநடவானோ. 5

ஒருகாலிற்சங்கொருகாலில்சக்கரம் உள்ளடிபொறித்தமைந்த *
இருகாலுங்கொண்டங்கங்கெழுதினாற்போல் இலச்சினைபடநடந்து *
பெருகாநின்றவின்பவெள்ளத்தின்மேல் பின்னையும்பெய்துபெய்து *
கருகார்க்கடல்வண்ணன்காமர்தாதை தளர்நடைநடவானோ. 6

படர்பங்கயமலர்வாய்நெகிழப் பனிபடுசிறுதுளிபோல் *
இடங்கொண்டசெவ்வாயூறியூறி யிற்றிற்றுவீழநின்று *
கடுஞ்சேக்கழுத்தின்மணிக்குரல்போல் உடைமணிகணகணென *
தடந்தாளிணைகொண்டுசார்ங்கபாணி தளர்நடைநடவானோ. 7

பக்கங்கருஞ்சிறுப்பாறைமீதே அருவிகள்பகர்ந்தனைய *
அக்குவடமிழிந்தேறித்தாழ அணியல்குல்புடைபெயர *
மக்களுலகினிற்பெய்தறியா மணிக்குழவியுருவின் *
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. 8

வெண்புழுதிமேற்பெய்துகொண்டளைந்ததோர் வேழத்தின்கருங்கன்றுபோல் *
தெண்புழுதியாடித்திரிவிக்கிரமன் சிறுபுகர்படவியர்த்து *
ஒண்போதலர்கமலச் சிறுகாலுறைத்தொன்றும்நோவாமே *
தண்போதுகொண்டதவிசின்மீதே தளர்நடைநடவானோ. 9

திரைநீர்ச்சந்திரமண்டலம்போல் செங்கண்மாற்கேசவன்தன் *
திருநீர்முகத்துத்துலங்குசுட்டி திகழ்ந்தெங்கும்புடைபெயர *
பெருநீர்த்திரையெழுகங்கையிலும் பெரியதோர்தீர்த்தபலந்
தருநீர் * சிறுச்சண்ணந்துள்ளஞ்சோரத் தளர்நடைநடவானோ. 10

ஆயர்குலத்தினில்வந்துதோன்றிய அஞ்சனவண்ணன்தன்னை *
தாயர்மகிழவொன்னார்தளரத் தளர்நடைநடந்ததனை *
வேயர்புகழ்விட்டுசித்தன் சீரால்விரித்தனவுரைக்கவல்லார் *
மாயன்மணிவண்ணன்தாள்பணியும் மக்களைப்பெறுவர்களே. 11

அடிவரவு:—தொடர் செக்கர் மின்னுக் கன்னல் முன்னல் ஒருகால் படர் பக்கம் வெண் திரை ஆயர் பொன்.

---

## முதற்பத்து—எட்டாந்திருமொழி—பொன்னியல்.

* * பொன்னியற்கிண்கிணி சுட்டிபுறங்கட்டி * தன்னியலோசை சலன்சலனென்றிட *
மின்னியல்மேகம் விரைந்தெதிர்வந்தாற்போல் * என்னிடைக்கோட்டராவச்சோவச்சோ
[எம்பெருமான்வாராவச்சோவச்சோ. 1

செங்கமலப்பூவில் தேனுண்ணும்வண்டேபோல் * பங்கிகள்வந்து உன்பவளவாய்மொய்ப்ப *
சங்குவில்வாள்தண்டு சக்கரமேந்திய * அங்கைகளாலேவந்தச்சோவச்சோ
[ஆரத்தழுவாவந்தச்சோவச்சோ. 2

பஞ்சவர்தூதனாய்ப் பாரதங்கைசெய்து * நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு *
அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டருள்செய்த * அஞ்சனவண்ணனேயச்சோவச்சோ ஆயர்
[பெருமானேயச்சோவச்சோ. 3

நாறியசாந்தம் நமக்கிறைநல்கென்ன * தேறியவளுந் திருவுடம்பில்பூச *
ஊறியகூனினை உள்ளேயொடுங்க * அன்றேறவுருவினாயச்சோவச்சோ எம்பெருமான்வாரா
[வச்சோவச்சோ. 4

கழல்மன்னர்சூழக் கதிர்போல்விளங்கி * எழலுற்றுமீண்டே யிருந்துன்னைநோக்கும் *
சுழலைப்பெரிதுடைத் துச்சோதனனை * அழலவிழித்தானேயச்சோவச்சோ ஆழியங்கையனே
[யச்சோவச்சோ. 5

போரொக்கப்பண்ணி யிப்பூமிப்பொறைதீர்ப்பான் *
தேரொக்கவூர்ந்தாய் செழுந்தார்விசயற்காய் *
காரொக்குமேனிக் கரும்பெருங்கண்ணனே *
ஆரத்தழுவாவந்தச்சோவச்சோ ஆயர்கள்போரேறேயச்சோவச்சோ. 6

மிக்கபெரும்புகழ் மாவலிவேள்வியில் * தக்கதிதன்றென்று தானம்விலக்கிய *
சுக்கிரன்கண்ணைத் துரும்பால்கிளறிய * சக்கரக்கையனேயச்சோவச்சோ சங்கமிடத்தானே
யச்சோவச்சோ. 7

என்னிதுமாயம் என்னப்பனறிந்திலன் * முன்னையவண்ணமேகொண்டு அளவாயென்ன *
மன்னுநமுசியை வானிற்சுழற்றிய * மின்னுமுடியனேயச்சோவச்சோ வேங்கடவாணனேயச்
[சோவச்சோ. 8

கண்டகடலும் மலையுமுலகேழும் * முண்டத்துக்காற்றா முகில்வண்ணாவென்று *
இண்டைச்சடைமுடி யீசனிரக்கொள்ள * மண்டைநிறைத்தானேயச்சோவச்சோ மார்வில்
[மறுவனேயச்சோவச்சோ. 9

துன்னியபேரிருள் சூழ்ந்துலகைமூட * மன்னியநான்மறை முற்றுமறைந்திட *
பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க * அன் றன்னமதானானேயச்சோவச்சோ
[அருமறைதந்தானேயச்சோவச்சோ. 10

* * நச்சுவார்முன்னிற்கும் நாராயணன்தன்னை * அச்சோவருகவென்று ஆய்ச்சியுரைத்தன *
மச்சணிமாடப் புதுவைக்கோன்பட்டன்சொல் * நிச்சலும்பாடுவார் நீள்விசும்பாள்வரே. 11

அடிவரவு:— பொன் செங்கமலம் பஞ்சவர் நாறிய கழல் போர் மிக்க என்னிது கண்ட துன்னிய நச்சு வட்டு.

---

## முதற்பத்து—ஒன்பதாந்திருமொழி—வட்டுநடுவே.

—o—

** வட்டுநடுவேவளர்கின்ற * மாணிக்க மொட்டுநுனையில் முளைக்கின்றமுத்தேபோல் *
சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்க * என் குட்டன்வந்தென்னைப்புறம்
[புல்குவான் கோவிந்தனென்னைப்புறம்புல்குவான். 1

கிண்கிணிகட்டிக் கிறிகட்டி * கையினிற் கங்கணமிட்டுக் கழுத்தில்தொடர்கட்டி *
தங்கணத்தாலே சதிராநடந்துவந்து * என்கண்ணனென்னைப்புறம்புல்குவான் எம்பிரானென்
[னைப்புறம்புல்குவான். 2

கத்தக்கதித்துக் கிடந்தபெருஞ்செல்வம் *
ஒத்துப்பொருந்திக்கொண்டு உண்ணாதுமண்ணாள்வான் *
கொத்துத்தலைவன் குடிகெடத்தோன்றிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவான் ஆயர்களேறென்புறம்புல்குவான். 3

நாந்தகமேந்திய நம்பிசரணென்று * தாழ்ந்ததனஞ்சயற்காகித் தரணியில் *
வேந்தர்களுட்க விசயன்மணித்திண்டேர் * ஊர்ந்தவனென்னைப்புறம் புல்குவான்
[உம்பர்கோனென்னைப்புறம்புல்குவான். 4

வெண்கலப்பத்திரங் கட்டிவிளையாடி * கண்பலசெய்த கருந்தழைக்காவின்கீழ் *
பண்பலபாடிப் பல்லாண்டிசைப்ப * பண்டு மண்பலகொண்டான்புறம்புல்குவான் வாமன
னென்னைப்புறம்புல்குவான். 5

சத்திரமேந்தித் தனியொருமாணியாய் * உத்தரவேதியில் நின்றவொருவனை *
கத்திரியர்காணக் காணிமுற்றுங்கொண்ட * பத்திராகாரன்புறம்புல்குவான் பாரளந்தானென்
புறம்புல்குவான். 6

பொத்தவுரலைக்கவிழ்த்து அதன்மேலேறி * தித்தித்தபாலும் தடாவினில்வெண்ணெயும்*
மெத்தத்திருவயிறார விழுங்கிய * அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவான் ஆழியானென்னைப்
புறம்புல்குவான். 7

மூத்தவைகாண முதுமணற்குன்றேறி * கூத்துவந்தாடிக் குழலாலிசைபாடி *
வாய்த்தமறையோர் வணங்க * இமையவர் ஏத்தவந்தென்னைப்புறம்புல்குவான் எம்பிரானென்
னைப்புறம்புல்குவான். 8

கற்பகக்காவு கருதியகாதலிக்கு * இப்பொழுதீவனென்று இந்திரன்காவினில் *
நிற்பனசெய்து நிலாத்திகழ்முற்றத்துள் * உய்த்தவனென்னைப்புறம்புல்குவான் உம்பர்கோ
[னென்னைப்புறம்புல்குவான். 9

**ஆய்ச்சியன்றாழிப்பிரான் புறம்புல்கிய* வேய்த்தடந்தோளிசொல் விட்டுசித்தன்மகிழ்ந்து *
ஈத்ததமிழிவை யீரைந்தும்வல்லவர் * வாய்த்தநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. 10

அடிவரவு:—வட்டு கிண்கிணி கத்த நாந்தகம் வெண்கலம் சத்திரம் பொத்த மூத்தவை
கற்பகம் ஆய்ச்சி மெச்சூது.

முதற்பத்து முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## இரண்டாம்பத்து—முதல் திருமொழி—மெச்சூது.

** மெச்சூதுசங்கமிடத்தான் நல்வேயூதி*பொய்ச்சூதில்தோற்ற பொறையுடைமன்னர்க்காய்*
பத்தூர்பெறாதன்று பாரதங்கைசெய்த * அத்தூதனப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்
பூச்சிகாட்டுகின்றான். 1

மலைபுரைதோள்மன்னவரும் மாரதரும்மற்றும்*பலர்குலைய நூற்றுவரும்பட்டழிய*பார்த்தன்
சிலைவளையத் திண்டேர்மேல்முன்னின்ற * செங்கண் அலைவலைவந்தப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனேயப்பூச்சி காட்டுகின்றான். 2

காயுநீர்புக்குக் கடம்பேறி * காளியன் தீயபணத்தில் சிலம்பார்க்கப்பாய்ந்தாடி *
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற * ஆயன்வந்தப்பூச்சி காட்டுகின்றான் அம்மனேயப்
பூச்சிகாட்டுகின்றான். 3

இருட்டிற்பிறந்துபோய் ஏழைவல்லாயர் * மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாள *
புரட்டியந்நாளெங்கள் பூம்பட்டுக்கொண்ட * அரட்டன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். 4

சேப்பூண்ட சாடுசிதறி * திருடிநெய்க் காப்பூண்டு நந்தன்மனைவிகடைதாம்பால் *
சோப்பூண்டுதுள்ளித் துடிக்கத்துடிக்க * அன்று ஆப்பூண்டானப்பூச்சிகாட்டுகின்றான்
அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். 5

செப்பிளமென்முலைத் தேவகிநங்கைக்கு*சொப்படத்தோன்றித் தொறுப்பாடியோம்வைத்த*
துப்பமும்பாலும் தயிரும்விழுங்கிய * அப்பன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்
பூச்சிகாட்டுகின்றான். 6

தத்துக்கொண்டாள்கொலோ தானேபெற்றாள்கொலோ *
சித்தமனையாள் அசோதையிளஞ்சிங்கம் *
கொத்தார்கருங்குழல் கோபாலகோளரி *
அத்தன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். 7

கொங்கைவன்கூனிசொற்கொண்டு * குவலயத் துங்கக்கரியும் பரியுமிராச்சியமும் *
எங்கும்பரதற்கருளி வன்கானடை * அங்கண்ணனப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்
பூச்சிகாட்டுகின்றான். 8

பதகமுதலைவாய்ப் பட்டகளிறு * கதறிக்கைகூப்பி யென்கண்ணாகண்ணாவென்ன *
உதவப்புள்ளூர்ந்து அங்குறுதுயர்தீர்த்த * அதகன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்
பூச்சிகாட்டுகின்றான். 9

** வல்லாளிலங்கைமலங்கச் சரந்துரந்த * வில்லாளனை விட்டுசித்தன்விரித்த *
சொல்லார்ந்தவப்பூச்சிப் பாடலிவைபத்தும் வல்லார்போய் * வைகுந்தம்மன்னியிருப்பரே. 10

அடிவரவு:—மெச்சு மலை காய் இருட்டில் சேப்பு செப்பு தத்துக் கொங்கை பதகம் வல்லா ளரவணை.

---

## இரண்டாம்பத்து—இரண்டாந்திருமொழி—அரவணையாய்.

o

அரவணையாயாயரேறே அம்மமுண்ணத்துயிலெழாயே *
இரவுமுண்ணாதுறங்கிநீபோய் இன்றுமுச்சிகொண்டதாலோ *
வரவுங்காணேன்வயிறசைந்தாய் வனமுலைகள்சோர்ந்துபாய *
திருவுடையவாய்மடுத்துத் திளைத்துதைத்துப்பருகிடாயே. 1

வைத்தநெய்யுங்காய்ந்தபாலும் வடிதயிரும்நறுவெண்ணெயும் *
இத்தனையும்பெற்றறியேன் எம்பிரான்நீபிறந்தபின்னை *
எத்தனையுஞ்செய்யப்பெற்றாய் ஏதுஞ்செய்யேன்கதம்படாதே *
முத்தனையமுறுவல்செய்து மூக்குறிஞ்சிமுலையுணாயே. 2

தந்தம்மக்களழுதுசென்றால் தாய்மாராவார்தரிக்ககில்லார் *
வந்துநின்மேற்பூசல்செய்ய வாழவல்லவாசுதேவா *
உந்தையாருன்திறத்தரல்லர் உன்னைநானொன்றுரப்பமாட்டேன் *
நந்தகோபனணிசிறுவா நான்சுரந்தமுலையுணாயே. 3

கஞ்சன்தன்னாற்புணர்க்கப்பட்ட கள்ளச்சகடுகலக்கழிய *
பஞ்சியன்னமெல்லடியால் பாய்ந்தபோதுநொந்திடுமென்று *
அஞ்சினேன்காணமரர்கோவே ஆயர்கூட்டத்தளவன்றாலோ *
கஞ்சனையுன்வஞ்சனையால் வலைப்படுத்தாய்முலையுணாயே. 4

தீயபுந்திக்கஞ்சனுன்மேல் சினமுடையன்சோர்வுபார்த்து *
மாயந்தன்னால்வலைப்படுக்கில் வாழகில்லேன்வாசுதேவா *
தாயர்வாய்ச்சொல்கருமங்கண்டாய் சாற்றிச்சொன்னேன்போகவேண்டா *
ஆயர்பாடிக்கணிவிளக்கே அமர்ந்துவந்தென்முலையுணாயே. 5

மின்னனையநுண்ணிடையார் விரிகுழல்மேல்நுழைந்தவண்டு *
இன்னிசைக்கும்வில்லிபுத்தூர் இனிதமர்ந்தாயுன்னைக்கண்டார் *
என்னநோன்புநோற்றாள்கொலோ இவனைப்பெற்றவயிறுடையாள் *
என்னும்வார்த்தையெய்துவித்த இருடீகேசாமுலையுணாயே. 6

பெண்டிர்வாழ்வார்நின்னொப்பாரைப் பெறுதுமென்னுமாசையாலே *
கண்டவர்கள்போக்கொழிந்தார் கண்ணிணையாற்கலக்கநோக்கி *
வண்டுலாம்பூங்குழலினார் உன்வாயமுதமுண்ணவேண்டி *
கொண்டுபோவான்வந்துநின்றார் கோவிந்தாநீமுலையுணாயே. 7

இருமலைபோலெதிர்ந்தமல்லர் இருவரங்கமெரிசெய்தாய் * உன்
திருமலிந்துதிகழுமார்வு தேக்கவந்தென்னல்குலேறி *
ஒருமுலையைவாய்மடுத்து ஒருமுலையைநெருடிக்கொண்டு *
இருமுலையும்முறைமுறையாய் ஏங்கியேங்கியிருந்துணாயே. 8

அங்கமலப்போதகத்தில் அணிகொள்முத்தஞ்சிந்தினாற்போல் *
செங்கமலமுகம்வியர்ப்பத் தீமைசெய்திம்முற்றத்தூடே *
அங்கமெல்லாம்புழுதியாக அளையவேண்டாவம்மவிம்ம *
அங்கமரர்க்கமுதளித்த அமரர்கோவேமுலையுணாயே. 9

ஓடவோடக்கிண்கிணிகள் ஒலிக்குமோசைப்பாணியாலே *
பாடிப்பாடிவருகின்றாயைப் பற்பநாபனென்றிருந்தேன் *
ஆடியாடியசைந்தசைந்திட்டு அதனுக்கேற்றகூத்தையாடி *
ஓடியோடிப்போய்விடாதே உத்தமாநீமுலையுணாயே. 10

** வாரணிந்தகொங்கையாய்ச்சி மாதவாவுண்ணென்றமாற்றம் *
நீரணிந்தகுவளைவாசம் நிகழநாறும்வில்லிபுத்தூர் *
பாரணிந்ததொல்புகழான் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
சீரணிந்தசெங்கண்மால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. 11

அடிவரவு:—அரவணை வைத்த தந்தம் கஞ்சன் தீய மின் பெண்டிர் இருமலை அங்கமலம் ஓட வாரணி போய்.

## இரண்டாம்பத்து—மூன்றாந்திருமொழி—போய்ப்பாடுடைய.

** போய்ப்பாடுடையநின்தந்தையுந்தாழ்த்தான் பொருதிறல்கஞ்சன்கடியன் *
காப்பாருமில்லைகடல்வண்ணாவுன்னைத் தனியேபோயெங்குந்திரிதி *
பேய்ப்பால்முலையுண்டபித்தனே கேசவநம்பியுன்னைக்காதுகுத்த *
ஆய்ப்பாலர்பெண்டுகளெல்லாரும்வந்தார் அடைக்காய்திருத்திநான்வைத்தேன். 1

வண்ணப்பவளமருங்கினிற்சாத்தி மலர்ப்பாதக்கிண்கிணியார்ப்ப *
நண்ணித்தொழுமவர்சிந்தைபிரியாத நாராயணாவிங்கேவாராய் *
எண்ணற்கரியபிரானே திரியையெரியாமேகாதுக்கிடுவன் *
கண்ணுக்குநன்றுமழகுமுடைய கனகக்கடிப்புமிவையா. 2

வையமெல்லாம் பெறும்வார்கடல்வாழும் மகரக்குழைகொண்டுவைத்தேன் *
வெய்யவேகாதில்திரியையிடுவன் நீவேண்டியதெல்லாந்தருவன் *
உய்யவிவ்வாயர்குலத்தினில்தோன்றிய ஒண்சுடராயர்கொழுந்தே *
மையன்மைசெய்திளவாய்ச்சியருள்ளத்து மாதவனேயிங்கேவாராய். 3

வணநன்றுடையவயிரக்கடிப்பிட்டு வார்காதுதாழப்பெருக்கி *
குணநன்றுடையரிக்கோபாலபிள்ளைகள் கோவிந்தா நீசொல்லுக்கொள்ளாய் *
இணைநன்றழகியவிக்கடிப்பிட்டால் இனியபலாப்பழந்தந்து *
சுணநன்றணிமுலையுண்ணத்தருவன்நான் சோத்தம்பிரானிங்கேவாராய். 4

சோத்தம்பிரானென்றிரந்தாலுங்கொள்ளாய் சுரிகுழலாரொடுநீபோய் *
கோத்துக்குரவைபிணைந்திங்குவந்தால் குணங்கொண்டிடுவனோநம்பீ *
பேர்த்தும்பெரியனவப்பந்தருவன் பிரானேதிரியிடவொட்டில் *
வேய்த்தடந்தோளார்விரும்புகருங்குழல் விட்டுவேநீயிங்கேவாராய். 5

விண்ணெல்லாங்கேட்கவழுதிட்டாய் உன்வாயில்விரும்பியதனைநான்நோக்கி *
மண்ணெல்லாங்கண்டென்மனத்துள்ளேயஞ்சி மதுசூதனேயென்றிருந்தேன் *
புண்ணேதுமில்லையுன்காதுமறியும் பொறுத்திறைப்போதிருநம்பீ *
கண்ணாவென்கார்முகிலேகடல்வண்ணா காவலனேமுலையுணாயே. 6

முலையேதும்வேண்டேனென்றோடி நின்காதிற்கடிப்பைப்பறித்தெறிந்திட்டு *
மலையையெடுத்துமகிழ்ந்துகன்மாரிகாத்துப் பசுநிரைமேய்த்தாய் *
சிலையொன்றிறுத்தாய்திரிவிக்கிரமா திருவாயர்பாடிப்பிரானே *
தலைநிலாப்போதேயுன்காதைப்பெருக்காதே விட்டிட்டேன் குற்றமேயன்றே. 7

என்குற்றமேயென்றுசொல்லவும்வேண்டாகாண் என்னைநான்மண்ணுண்டேனாக *
அன்புற்றுநோக்கியடித்தும்பிடித்தும் அனைவர்க்குங்காட்டிற்றிலையே *
வன்புற்றரவின்பகைக்கொடி வாமனநம்பீயுன்காதுகள்தூரும் *
துன்புற்றனவெல்லாந்தீர்ப்பாய்பிரானே திரியிட்டுச்சொல்லுகேன்மெய்யே. 8

மெய்யென்றுசொல்லுவார்சொல்லைக்கருதித் தொடுப்புண்டாய்வெண்ணெயையென்று *
கையைப்பிடித்துக்கரையுரலோடென்னைக் காணவேகட்டிற்றிலையே *
செய்தனசொல்லிச்சிரித்தங்கிருக்கில் சிரீதராவுன்காதுதூரும் *
கையில்திரியையிடுகிடாய் இந்நின்றகாரிகையார்சிரியாமே. 9

காரிகையார்க்குமுனக்குமிழுக்குற்றென்? காதுகள்வீங்கியெரியில் *
தாரியாதாகில்தலைநொந்திடுமென்று விட்டிட்டேன்குற்றமேயன்றே *
சேரியிற்பிள்ளைகளெல்லாருங்காதுபெருக்கித் திரியவுங்காண்டி *
ஏர்விடைசெற்றிளங்கன்றெறிந்திட்ட இருடிகேசாவென்றன்கண்ணே. 10

கண்ணைக்குளிரக்கலந்தெங்குநோக்கிக் கடிகமழ்பூங்குழலார்கள் *
எண்ணத்துளென்றுமிருந்துதித்திக்கும் பெருமானேயெங்களமுதே *
உண்ணக்கனிகள்தருவன் கடிப்பொன்றும்நோவாமேகாதுக்கிடுவன் *
பண்ணைக்கிழியச்சகடமுதைத்திட்ட பற்பநாபாவிங்கேவாராய். 11

வாவென்றுசொல்லியென்கையைப்பிடித்து வலியவேகாதிற்கடிப்பை *
நோவத்தரிக்கிலுனக்கிங்கிழுக்குற்றென் காதுகள்நொந்திடுங்கில்லேன் *
நாவற்பழங்கொண்டுவைத்தேன் இவைகாணாய்நம்பீ * முன்வஞ்சமகளைச்
சாவப்பாலுண்டுசகடிறப்பாய்ந்திட்ட தாமோதராவிங்கேவாராய். 12

* * வார்காதுதாழப்பெருக்கியமைத்து மகரக்குழையிடவேண்டி *
சீராலசோதைதிருமாலைச்சொன்னசொல் சிந்தையுள்நின்றுதிகழ *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன் பன்னிருநாமத்தாற்சொன்ன *
ஆராதவந்தாதிபன்னிரண்டும்வல்லார் அச்சுதனுக்கடியாரே. 13

அடிவரவு:—போய் வண்ணம் வையம் வணம் சோத்தம் விண் முலை என் மெய் காரிகை கண்ணை வா வார்காது வெண்ணெய்.

## இரண்டாம்பத்து—நான்காந்திருமொழி—வெண்ணெயளைந்த.

* * வெண்ணெயளைந்தகுணுங்கும் விளையாடுபுழுதியுங்கொண்டு *
திண்ணெனவிவ்விராவுன்னைத் தேய்த்துக்கிடக்கநானொட்டேன் *
எண்ணெய்புளிப்பழங்கொண்டு இங்கெத்தனைபோதுமிருந்தேன் *
நண்ணலரியபிரானே நாரணாநீராடவாராய். 1

கன்றுகளோடச்செவியில் கட்டெறும்புபிடித்திட்டால் *
தென்றிக்கெடுமாகில் வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்பன் *
நின்றமராமரஞ்சாய்த்தாய்! நீபிறந்ததிருவோணம் *
இன்றுநீநீராடவேண்டும் எம்பிரானோடாதேவாராய். 2

பேய்ச்சிமுலையுண்ணக்கண்டு பின்னையுமில்லாதென்னெஞ்சம் *
ஆய்ச்சியரெல்லாருங்கூடி அழைக்கவும்நான்முலைதந்தேன் *
காய்ச்சினநீரொடுநெல்லி கடாரத்திற்பூரித்துவைத்தேன் *
வாய்த்தபுகழ்மணிவண்ணா மஞ்சனமாடநீவாராய். 3

கஞ்சன்புணர்ப்பினில்வந்த கடியசகடமுதைத்து *
வஞ்சகப்பேய்மகள்துஞ்ச வாய்முலைவைத்தபிரானே *
மஞ்சளுஞ்செங்கழுநீரின் வாசிகையும்நாறுசாந்தும் *
அஞ்சனமுங்கொண்டுவைத்தேன் அழகனேநீராடவாராய். 4

அப்பங்கலந்தசிற்றுண்டி அக்காரம்பாலிற்கலந்து *
சொப்படநான்சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேல்நம்பி *
செப்பிளமென்முலையார்கள் சிறுபுறம்பேசிச்சிரிப்பர் *
சொப்படநீராடவேண்டும் சோத்தம்பிரானிங்கேவாராய். 5

எண்ணெய்க்குடத்தையுருட்டி யிளம்பிள்ளைகிள்ளியெழுப்பி *
கண்ணைப்புரட்டிவிழித்துக் கழைகண்டுசெய்யும்பிரானே *
உண்ணக்கனிகள்தருவன் ஒலிகடலோதநீர்போலே *
வண்ணமழகியநம்பீ மஞ்சனமாடநீவாராய். 6

கறந்தநற்பாலுந்தயிரும் கடைந்துறிமேல்வைத்தவெண்ணெய் *
பிறந்ததுவேமுதலாகப் பெற்றறியேனெம்பிரானே *
சிறந்தநற்றாயலர்தூற்றும் என்பதனால்பிறர்முன்னே *
மறந்தும்உரையாடமாட்டேன் மஞ்சனமாடநீவாராய். 7

கன்றினைவாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து *
பின்தொடர்ந்தோடியோர்பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினாய்போலும் *
நின்திறத்தேனல்லேன்நம்பி நீபிறந்ததிருநன்னாள் *
நன்றுநீநீராடவேண்டும் நாரணாவோடாதேவாராய். 8

பூணித்தொழுவினிற்புக்குப் புழுதியளைந்தபொன்மேனி *
காணப்பெரிதுமுகப்பன் ஆகிலுங்கண்டார்பழிப்பர் *
நாணெத்தனையுமிலாதாய் நப்பின்னைகாணிற்சிரிக்கும் *
மாணிக்கமேயென்மணியே மஞ்சனமாடநீவாராய். 9

* * கார்மலிமேனிநிறத்துக் கண்ணபிரானையுகந்து *
வார்மலிகொங்கையசோதை மஞ்சனமாட்டியவாற்றை *
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே. 10

அடிவரவு:—வெண்ணெய் கன்று பேய்ச்சி கஞ்சன் அப்பம் எண்ணெய் கறந்த கன்றினை பூணி கார் பின்னை.

---

## இரண்டாம்பத்து—ஐந்தாந்திருமொழி—பின்னைமணாளனை.

---

* * பின்னைமணாளனைப் பேரிற்கிடந்தானை * முன்னையமரர் முதல்தனிவித்தினை *
என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட * மன்னனைவந்துகுழல்வாராயக்காக்காய்
மாதவன்தன்குழல்வாராயக்காக்காய். 1

பேயின்முலையுண்ட பிள்ளையிவன்முன்னம் * மாயச்சகடும் மருதுமிறுத்தவன் *
காயாமலர்வண்ணன் கண்ணன்கருங்குழல் * தூய்தாகவந்துகுழல்வாராயக்காக்காய்
தூமணிவண்ணன்குழல்வாராயக்காக்காய். 2

திண்ணக்கலத்துத் திரையுறிமேல்வைத்த * வெண்ணெய்விழுங்கி விரையவுறங்கிடும் *
அண்ணலமரர் பெருமானையாயர்தம் * கண்ணனைவந்துகுழல்வாராயக்காக்காய்
கார்முகில்வண்ணன்குழல்வாராயக்காக்காய். 3

பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டு * கள்ளவசுரன் வருவானைத்தான்கண்டு *
புள்ளிதுவென்று பொதுக்கோவாய்கீண்டிட்ட * பிள்ளையைவந்துகுழல்வாராயக்காக்காய்
பேய்முலையுண்டான்குழல்வாராயக்காக்காய். 4

கற்றினம்மேய்த்துக் கனிக்கொருகன்றினை * பற்றியெறிந்த பரமன்திருமுடி *
உற்றனபேசி நீயோடித்திரியாதே * அற்றைக்கும்வந்துகுழல்வாராயக்காக்காய் ஆழியான்
தன்குழல்வாராயக்காக்காய், 5

கிழக்கிற்குடிமன்னர் கேடிலாதாரை * அழிப்பான்நினைந்திட்டு அவ்வாழிபதனால் *
விழிக்குமளவிலே வேரறுத்தானை * குழற்கணியாகக்குழல்வாராயக்காக்காய் கோவிந்தன்தன்
குழல்வாராயக்காக்காய். 6

பிண்டத்திரளையும் பேய்க்கிட்டநீர்ச்சோறும் * உண்டற்குவேண்டி நீயோடித்திரியாதே *
அண்டத்தமரர் பெருமானழகமர் * வண்டொத்திருண்டகுழல்வாராயக்காக்காய் மாயவன்
தன் குழல்வாராயக்காக்காய். 7

உந்தியெழுந்த உருவமலர்தன்னில் * சந்தச்சதுமுகன்தன்னைப் படைத்தவன் *
கொந்தக்குழலைக் குறந்துபுளியட்டி * தந்தத்தின்சீப்பால்குழல்வாராயக்காக்காய்
தாமோதரன்தன்குழல்வாராயக்காக்காய். 8

மன்னன்தன்தேவிமார் கண்டுமகிழ்வெய்த * முன்னிவ்வுலகினை முற்றுமளந்தவன் *
பொன்னின்முடியினைப் பூவணைமேல்வைத்து * பின்னேயிருந்துகுழல்வாராயக்காக்காய்
பேராயிரத்தான்குழல்வாராயக்காக்காய். 9

** கண்டார்பழியாமே அக்காக்காய் *கார்வண்ணன்
வண்டார்குழல்வார வாவென்றவாய்ச்சிசொல் *
விண்டோய்மதிள் வில்லிபுத்தூர்க்கோன்பட்டன்சொல் *
கொண்டாடிப்பாடக் குறுகாவினைதாமே. 10

அடிவரவு:—பின்னை பேய் திண்ணம் பள்ளத்தில் கற்று கிழக்கில் பிண்டம் உந்தி மன்னன்
கண்டார் வேலி.

---

## இரண்டாம்பத்து—ஆறாந்திருமொழி—வேலிக்கோல்

——— o ———

**வேலிக்கோல்வெட்டி விளையாடுவில்லேற்றி * தாலிக்கொழுந்தைத் தடங்கழுத்திற்பூண்டு *
பீலித்தழையைப் பிணைத்துப்பிறகிட்டு * காலிப்பின்போவாற்கோர்கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்கோர்கோல்கொண்டுவா. 1

கொங்குங்குடந்தையும் கோட்டியூரும்பேரும் * எங்குந்திரிந்து விளையாடுமென்மகன் *
சங்கம்பிடிக்கும் தடக்கைக்குத்தக்க * நல் அங்கமுடையதோர்கோல்கொண்டுவா அரக்கு
வழித்ததோர்கோல்கொண்டுவா. 2

கறுத்திட்டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான்
பொறுத்திட்டெதிர்வந்த புள்ளின்வாய்கீண்டான் *
நெறித்தகுழல்களை நீங்கமுன்னோடி *
சிறுக்கன்றுமேய்ப்பாற்கோர் கோல்கொண்டுவா தேவபிரானுக்கோர் கோல்கொண்டுவா. 3

ஒன்றேயுரைப்பான் ஒருசொல்லேசொல்லுவான் * துன்றுமுடியான் துரியோதனன்பக்கல் *
சென்றங்குப்பாரதம் கையெறிந்தானுக்கு * கன்றுகள்மேய்ப்பதோர் கோல்கொண்டுவா
கடல்நிறவண்ணற்கோர்கோல்கொண்டுவா. 4

சீரொன்றுதூதாய்த் துரியோதனன்பக்கல் * ஊரொன்றுவேண்டிப் பெறுதவுரோடத்தால் *
பாரொன்றிப்பாரதம் கைசெய்துபார்த்தற்கு * தேரொன்றையூர்ந்தாற்கோர்கோல்கொண்டு
வா தேவபிரானுக்கோர்கோல்கொண்டுவா. 5

ஆலத்திலையான் அரவினணைமேலான் * நீலக்கடலுள் நெடுங்காலங்கண்வளர்ந்தான் *
பாலப்பிராயத்தே பார்த்தற்கருள்செய்த * கோலப்பிரானுக்கோர்கோல்கொண்டுவா
குடந்தைக்கிடந்தாற்கோர்கோல்கொண்டுவா. 6

பொற்றிகழ் சித்திரகூடப்பொருப்பினில் * உற்றவடிவில் ஒருகண்ணுங்கொண்ட * அக்
கற்றைக்குழலன் கடியன்விரைந்துன்னை * மற்றைக்கண்கொள்ளாமேகோல்கொண்டுவா
மணிவண்ணநம்பிக்கோர்கோல்கொண்டுவா. 7

மின்னிடைச்சீதைபொருட்டா இலங்கையர் * மன்னன்மணிமுடி பத்துமுடன்வீழ *
தன்னிகரொன்றில்லாச் சிலைகால்வளைத்திட்ட * மின்னுமுடியற்கோர்கோல்கொண்டுவா
வேலையடைத்தாற்கோர்கோல்கொண்டுவா. 8

**தென்னிலங்கைமன்னன் சிரந்தோள்துணிசெய்து* மின்னிலங்குபூண் விபீடணநம்பிக்கு *
என்னிலங்குநாமத்தளவும் அரசென்ற * மின்னிலங்காரற்கோர்கோல்கொண்டுவா வேங்கட
வாணற்கோர்கோல்கொண்டுவா. 9

*** அக்காக்காய்நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று *
மிக்காளுரைத்தசொல் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
ஒக்கவுரைத்த தமிழ்ப்பத்தும்வல்லவர் *
மக்களைப்பெற்று மகிழ்வரிவ்வையத்தே. 10

அடிவரவு:—வேலி கொங்கு கறுத்து ஒன்றே சீர் ஆலப் பொற்றிகழ் மின் தென்னிலங்கை அக்காக்காய் ஆநிரை.

---

## இரண்டாம்பத்து—ஏழாந்திருமொழி—ஆநிரைமேய்க்க

** ஆநிரைமேய்க்கநீபோதி அருமருந்தாவதறியாய் *
கானகமெல்லாந்திரிந்து உன்கரியதிருமேனிவாட *
பானையிற்பாலைப்பருகிப் பற்றாதாரெல்லாஞ்சிரிப்ப *
தேனிலினியபிரானே செண்பகப்பூச்சூட்டவாராய். 1

கருவுடைமேகங்கள்கண்டால் உன்னைக்கண்டாலொக்குங்கண்கள் *
உருவுடையாயுலகேழும் உண்டாகவந்துபிறந்தாய் *
திருவுடையாள்மணவாளா திருவரங்கத்தேகிடந்தாய் *
மருவிமணங்கமழ்கின்ற மல்லிகைப்பூச்சூட்டவாராய். 2

மச்சொடுமாளிகையேறி மாதர்கள்தம்மிடம்புக்கு *
கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி *
நிச்சலுந்தீமைகள்செய்வாய் நீள்திருவேங்கடத்தெந்தாய் *
பச்சைத்தமனகத்தோடு பாதிரிப்பூச்சூட்டவாராய். 3

தெருவின்கண்நின்றிளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே *
மருவுந்தமனகமுஞ் சீர்மாலைமணங்கமழ்கின்ற *
புருவங்கருங்குழல்நெற்றி பொலிந்தமுகிற்கன்றுபோலே *
உருவமழகியநம்பி உகந்திவைசூட்டநீவாராய். 4

புள்ளினைவாய்பிளந்திட்டாய் பொருகரியின்கொம்பொசித்தாய் *
கள்ளவரக்கியைமூக்கொடு காவலனைத்தலைகொண்டாய் *
அள்ளிநீவெண்ணெய்விழுங்க அஞ்சாதடியேனடித்தேன் *
தெள்ளியநீரிலெழுந்த செங்கழுநீர்சூட்டவாராய். 5

எருதுகளோடுபொருதி ஏதுமுலோபாய்காண்நம்பி *
கருதியதீமைகள்செய்து கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய் *
தெருவின்கண்தீமைகள்செய்து சிக்கெனமல்லர்களோடு *
பொருதுவருகின்றபொன்னே புன்னைப்பூச்சூட்டவாராய். 6

குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே *
மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லவென்மைந்தா *
இடந்திட்டிரணியனெஞ்சை இருபிளவாகமுன்கீண்டாய் *
குடந்தைக்கிடந்தவெங்கோவே குருக்கத்திப்பூச்சூட்டவாராய். 7

சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும்வல்லாய் *
சாமாறவனைநீயெண்ணிச் சக்கரத்தால்தலைகொண்டாய் *
ஆமாறறியும்பிரானே அணியரங்கத்தேகிடந்தாய் *
ஏமாற்றமென்னைத்தவிர்த்தாய் இருவாட்சிப்பூச்சூட்டவாராய். 8

அண்டத்தமரர்கள்சூழ அத்தாணியுள்ளங்கிருந்தாய் *
தொண்டர்கள்நெஞ்சிலுறைவாய் தூமலராள்மணவாளா *
உண்டிட்டுலகினையேழும் ஓராலிலையில்துயில்கொண்டாய் *
கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய். 9

** செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி *
எண்பகர்பூவுங்கொணர்ந்தேன் இன்றிவைசூட்டவாவென்று *
மண்பகர்கொண்டானை ஆய்ச்சிமகிழ்ந்துரைசெய்தவிம்மாலை *
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்னபத்தே. 10

அடிவரவு:—ஆனிரை கரு மச்சு தெரு புள் எருது குடம் சீமாலிகன் அண்டம் செண்பகம் இந்திரன்.

---

## இரண்டாம்பத்து—எட்டாந்திருமொழி—இந்திரனோடு.

** இந்திரனோடுபிரமன் ஈசனிமையவரெல்லாம் *
மந்திரமாமலர்கொண்டு மறைந்துஉவராய்வந்துநின்றார் *
சந்திரன்மாளிகைசேரும் சதுரர்கள்வெள்ளறைநின்றாய் *
அந்தியம்போதிதுவாகும் அழகனேகாப்பிடவாராய். 1

கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம் *
நின்றொழிந்தேனுன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய் *
மன்றில்நில்லேலந்திப்போது மதிட்திருவெள்ளறைநின்றாய் *
நன்றுகண்டாயென்றன்சொல்லு நானுன்னைக்காப்பிடவாராய். 2

செப்போதுமென்முலையார்கள் சிறுசோறுமில்லுஞ்சிதைத்திட்டு *
அப்போதுநானுரப்பப்போய் அடிசிலுமுண்டிலையாள்வாய் *
முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள்வெள்ளறைநின்றாய் *
இப்போதுநானொன்றுஞ்செய்யேன் எம்பிரான்காப்பிடவாராய். 3

கண்ணில்மணற்கொடுதூவிக் காலினாற்பாய்ந்தனையென்றென்று *
எண்ணரும்பிள்ளைகள்வந்திட்டு இவரால்முறைப்படுகின்றார் *
கண்ணனேவெள்ளறைநின்றாய் கண்டாரோடேதீமைசெய்வாய் *
வண்ணமேவேலையதொப்பாய் வள்ளலேகாப்பிடவாராய். 4

பல்லாயிரவரிவ்வூரிற்பிள்ளைகள் தீமைகள்செய்வார் *
எல்லாமுன்மேலன்றிப்போகாது எம்பிரான்நீயிங்கேவாராய் *
நல்லார்கள்வெள்ளறைநின்றாய் ஞானச்சுடரேயுன்மேனி *
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். 5

கஞ்சன்கறுக்கொண்டுநின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை *
வஞ்சிப்பதற்குவிடுத்தான் என்பதோர்வார்த்தையுமுண்டு *
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறைநின்றாய் *
அஞ்சுவன்நீயங்குநிற்க அழகனேகாப்பிடவாராய். 6

கள்ளச்சகடுமருதுங் கலக்கழியவுதைசெய்த *
பிள்ளையரசேநீபேயைப்பிடித்து முலையுண்டபின்னை *
உள்ளவாறொன்றுமறியேன் ஒளியுடைவெள்ளறைநின்றாய் *
பள்ளிகொள்போதிதுவாகும் பரமனேகாப்பிடவாராய். 7

இன்பமதனையுயர்த்தாய் இமையவர்க்கென்றுமரியாய் *
கும்பக்களிறட்டகோவே கொடுங்கஞ்சன் நெஞ்சினிற்கூற்றே *
செம்பொன்மதிள்வெள்ளறையாய் செல்வத்தினால் வளர்பிள்ளாய்*
கம்பக்கபாலிகாணங்குக் கடிதோடிக் காப்பிடவாராய். 8

இருக்கொடுநீர் சங்கிற்கொண்டிட்டு எழில்மறையோர் வந்துநின்றார்*
தருக்கேல்நம்பிசந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய் சிலநாள் *
திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறை நின்றாய் *
உருக்காட்டுமந்திவிளக்கு இன்றொளிகொள்ளவேற்றுகேன்வாராய். 9

* * போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்றன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. 10

அடிவரவு:—இந்திரன் கன்று செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளம் இன்பம் இருக்கு போதமர் வெண்ணெய்.

## இரண்டாம்பத்து—ஒன்பதாந்திருமொழி.

* * வெண்ணெய்விழுங்கிவெறுங்கலத்தைவெற்பிடையிட்டு அதனோசைகேட்கும் *
கண்ணபிரான்கற்றகல்விதன்னைக் காக்ககில்லோமுன்மகனைக்காவாய் *
புண்ணிற்புளிப்பெய்தாலொக்குந்தீமை புரைபுரையாலிவைசெய்யவல்ல *
அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற அசோதைநங்காயுன்மகனைக்கூவாய். 1

வருகவருகவருகவிங்கே வாமனநம்பீவருகவிங்கே *
கரியகுழற்செய்யவாய்முகத்துக் காகுத்தநம்பீவருகவிங்கே *
அரியனிவனெனக்கின்றுநங்காய் அஞ்சனவண்ணாவசலகத்தார் *
பரிபவம்பேசத்தரிக்ககில்லேன் பாவியேனுக்கிங்கேபோதராயே. 2

திருவுடைப்பிள்ளைதான்தீயவாறு தேக்கமொன்றுமிலன்தேசுடையன் *
உருகவைத்தகுடத்தொடுவெண்ணெய் உறிஞ்சியுடைத்திட்டுப்போந்துநின்றான் *
அருகிருந்தார்தம்மையநியாயஞ்செய்வதுதான் வழக்கோவசோதாய் *
வருகவென்றுன்மகன்தன்னைக்கூவாய் வாழவொட்டான்மதுசூதனனே. 3

கொண்டல்வண்ணாவிங்கேபோதராயே கோயிற்பிள்ளாயிங்கேபோதராயே *
தெண்டிரைசூழ்திருப்பேர்க்கிடந்த திருநாரணாவிங்கேபோதராயே *
உண்டுவந்தேனம்மமென்றுசொல்லி ஓடியகம்புகவாய்ச்சிதானும் *
கண்டெதிரேசென்றெடுத்துக்கொள்ளக் கண்ணபிரான்கற்றகல்விதானே. 4

பாலைக்கறந்தடுப்பேறவைத்துப் பல்வளையாளென்மகளிருப்ப *
மேலையகத்தேநெருப்புவேண்டிச்சென்று இறைப்பொழுதங்கேபேசிநின்றேன் *
சாளக்கிராமமுடையநம்பி சாய்த்துப்பருகிட்டுப்போந்துநின்றான் *
ஆலைக்கரும்பின்மொழியனைய அசோதைநங்காயுன்மகனைக்கூவாய். 5

போதர்கண்டாயிங்கேபோதர்கண்டாய் போதரேனென்னாதேபோதர்கண்டாய் *
ஏதேனுஞ்சொல்லியசலகத்தார் ஏதேனும்பேசநான்கேட்கமாட்டேன் *
கோதுகலமுடைக்குட்டனேயோ குன்றெடுத்தாய்குடமாடுகூத்தா *
வேதப்பொருளேயென்வேங்கடவா வித்தகனேயிங்கேபோதராயே. 6

செந்நெலரிசிசிறுபருப்புச் செய்தவக்காரம்நறுநெய்பாலால் *
பன்னிரண்டுதிருவோணமட்டேன் பண்டுமிப்பிள்ளைபரிசறிவன் *
இன்னமுகப்பனானென்றுசொல்லி யெல்லாம்விழுங்கிட்டுப்போந்துநின்றான் *
உன்மகன்தன்னையசோதைநங்காய் கூவிக்கொள்ளாயிவையுஞ்சிலவே. 7

கேசவனேயிங்கேபோதராயே கில்லேனென்னாதிங்கேபோதராயே *
நேசமிலாதாரகத்திருந்து நீவிளையாடாதேபோதராயே *
தூசனஞ்சொல்லுந்தொழுத்தைமாருந் தொண்டரும்நின்றவிடத்திநின்று *
தாய்சொல்லுக்கொள்வதுதன்மங்கண்டாய் தாமோதராவிங்கேபோதராயே. 8

கன்னலிலட்டுவத்தோடுசீடை காரெள்ளினுண்டைகலத்திலிட்டு *
என்னகமென்றுநான்வைத்துப்போந்தேன் இவன்புக்கவற்றைப்பெறுத்திப்போந்தான் *

பின்னுமகம்புக்குறியைநோக்கிப் பிறங்கொளிவெண்ணெயுஞ்சோதிக்கின்றான் *
உன்மகன்தன்னையசோதைநங்காய் கூவிக்கொள்ளாயிவையுஞ்சிலவே. 9

சொல்லிலரசிப்படுதிநங்காய் சூழலுடையனுன்பிள்ளைதானே *
இல்லம்புகுந்தென்மகளைக்கூவிக் கையில்வளையைக்கழற்றிக்கொண்டு *
கொல்லையினின்றுங்கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக்கவ்வளைகொடுத்து*
நல்லனநாவற்பழங்கள்கொண்டு நானல்லேனென்றுசிரிக்கின்றானே. 10

** வண்டுகளித்திரைக்கும்பொழில்சூழ் வருபுனற்காவிரித்தென்னரங்கன் *
பண்டவன்செய்தகிரீடையெல்லாம் பட்டர்பிரான்விட்டுசித்தன்பாடல் *
கொண்டிவைபாடிக்குனிக்கவல்லார் கோவிந்தன்தன்னடியார்களாகி *
எண்டிசைக்கும்விளக்காகிநிற்பார் இணையடியென்தலைமேலனவே. 11

அடிவரவு:—வெண்ணெய் வருக திரு கொண்டல் பாலை போதர் செந்நெல் கேசவன் கன்னல் சொல்லில் வண்டு ஆற்றில்.

---

## இரண்டாம்பத்து—பத்தாந்திருமொழி—ஆற்றிலிருந்து.

o

** ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை * சேற்றாலெறிந்து வளைதுகில்கைக்கொண்டு *
காற்றிற்கடியனாய் ஓடியகம்புக்கு * மாற்றமுந்தாரானாலின்றுமுற்றும் வளைத்திறம்பேசா
[னாலின்றுமுற்றும். 1

குண்டலந்தாழக் குழல்தாழநாண்தாழ * எண்டிசையோரும் இறைஞ்சித்தொழுதேத்த*
வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு * விண்டோய்மரத்தானாலின்றுமுற்றும்
வேண்டவுந்தாரானாலின்றுமுற்றும். 2

தடம்படுதாமரைப் பொய்கைகலக்கி * விடம்படுநாகத்தை வால்பற்றியீர்த்து *
படம்படுபைந்தலை மேலெழப்பாய்ந்திட்டு * உடம்பையசைத்தானாலின்றுமுற்றும்
[உச்சியில்நின்றானாலின்றுமுற்றும். 3

தேனுகனாவிசெகுத்துப் பனங்கனி * தானெறிந்திட்ட தடம்பெருந்தோளினால் *
வானவர்கோன்விட வந்தமழைதடுத்து * ஆனிரைகாத்தானாலின்றுமுற்றும் அவையுய்
யக்கொண்டானாலின்றுமுற்றும். 4

ஆய்ச்சியர்சேரி அளைதயிர்பாலுண்டு * பேர்த்தவர்கண்டுபிடிக்கப் பிடியுண்டு *
வேய்த்தடந்தோளினார் வெண்ணெய்கொள்மாட்டாது * அங்காப்புண்டிருந்தானாலின்று
[முற்றும் அடியுண்டழுதானாலின்றுமுற்றும். 5

தள்ளித்தளர்நடையிட்டு இளம்பிள்ளையாய் * உள்ளத்தினுள்ளே அவளையுறநோக்கி *
கள்ளத்தினால்வந்த பேய்ச்சிமுலையுயிர் * துள்ளச்சுவைத்தானாலின்றுமுற்றும்
[துவக்கறவுண்டானாலின்றுமுற்றும். 6

மாவலிவேள்வியில் மாணுருவாய்ச்சென்று * மூவடிதாவென்று இரந்தவிம்மண்ணினை*
ஓரடியிட்டு இரண்டாமடிதன்னிலே * தாவடியிட்டானாலின்றுமுற்றும்
[தரணியளந்தானாலின்றுமுற்றும். 7

தாழைதண்ணாம்பல் தடம்பெரும்பொய்கைவாய் * வாழுமுதலை வலைப்பட்டுவாதிப்புண்*
வேழந்துயர்கெட விண்ணோர்பெருமானாய் * ஆழிபணிகொண்டானாலின்றுமுற்றும்
[அதற்கருள்செய்தானாலின்றுமுற்றும். 8

வானத்தெழுந்த மழைமுகில்போல் * எங்கும் கானத்துமேய்ந்து களித்துவிளையாடி *
ஏனத்துருவாய் இடந்தவிம்மண்ணினை * தானத்தேவைத்தானுலின்றுமுற்றும்
[தரணியிடந்தானுலின்று முற்றும். 9

* * அங்கமலக்கண்ணன்தன்னை அசோதைக்கு *
மங்கைநல்லார்கள்தாம் வந்துமுறைப்பட்ட *
அங்கவர்சொல்லைப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
இங்கிவைவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. 10

அடிவரவு:—ஆற்றில் குண்டலம் தடம் தேனுகன் ஆய்ச்சி தள்ளி மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னேர்.

---

## மூன்றும்பத்து—முதல் திருமொழி-தன்னேராயிரம்.

* * தன்னேராயிரம்பிள்ளைகளோடு தளர்நடையிட்டுவருவான் *
பொன்னேய்நெய்யொடுபாலமுதுண்டு ஒருபுள்ளுவன்பொய்யேதவழும் *
மின்னேர்நுண்ணிடைவஞ்சமகள்கொங்கைதுஞ்ச வாய்வைத்தபிரானே *
அன்னேயுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 1

பொன்போல்மஞ்சனமாட்டியமுதூட்டிப்போனேன் வருமளவிப்பால் *
வன்பாரச்சகடமிறச்சாடி வடக்கிலகம்புக்கிருந்து *
மின்போல்நுண்ணிடையாளொருகன்னியை வேற்றுருவஞ்செய்து வைத்த *
அன்பாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 2

கும்மாயத்தொடுவெண்ணெய்விழுங்கிக் குடத்தயிர்சாய்த்துப்பருகி *
பொய்ம்மாயமருதானவசுரரைப் பொன்றுவித்தின்றுநீவந்தாய் *
இம்மாயம்வல்லபிள்ளைநம்பீ உன்னையென்மகனேயென்பர்நின்றார் *
அம்மாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 3

மையார்கண்மடவாய்ச்சியர்மக்களை மையன்மைசெய்தவர்பின்போய் *
கொய்யார்பூந்துகில்பற்றித்தனிநின்று குற்றம்பலபலசெய்தாய் *
பொய்யாவுன்னைப்புறம்பலபேசுவ புத்தகத்துக்குளகேட்டேன் *
ஐயாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 4

முப்போதுங்கடைந்தீண்டியவெண்ணெயினோடு தயிரும்விழுங்கி *
கப்பாலாயர்கள்காவிற்கொணர்ந்த கலத்தொடுசாய்த்துப்பருகி *
மெய்ப்பாலுண்டழுபிள்ளைகள்போல நீவிம்மிவிம்மியழுகின்ற *
அப்பாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 5

கரும்பார்நீள்வயல்காய்கதிர்செந்நெலைக் கற்றாநிரைமண்டித்தின்ன *
விரும்பாக்கன்றொன்றுகொண்டு விளங்கனிவீழவெறிந்தபிரானே *
சுரும்பார்மென்குழல்கன்னியொருத்திக்குச் சூழ்வலைவைத்துத்திரியும் *
அரம்பாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 6

மருட்டார்மென்குழல்கொண்டுபொழில்புக்கு வாய்வைத்தவ்வாயர்தம்பாடி *
சுருட்டார்மென்குழல்கன்னியர்வந்துன்னைச் சுற்றுந்தொழநின்றசோதி *
பொருட்டாயமிலேனெம்பெருமான் உன்னைப்பெற்றகுற்றமல்லால் * மற்றிங்
கரட்டாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 7

வாளாவாகிலுங்காணகில்லார் பிறர்மக்களைமையன்மைசெய்து *
தோளாலிட்டவரோடுதிளைத்து நீசொல்லப்படாதனசெய்தாய் *
கேளாராயர்குலத்தவரிப்பழி கெட்டேன்வாழ்வில்லை * நந்தற்
காளாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 8

தாய்மார்மோர்விற்கப்போவர் தமப்பன்மார்கற்றுநிரைப்பின்புபோவர் *
நீயாய்ப்பாடியிளங்கன்னிமார்களை நேர்படவேகொண்டுபோதி *
காய்வார்க்கென்றுமுகப்பனவேசெய்து கண்டார்கழறத்திரியும் *
ஆயாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 9

தொத்தார்பூங்குழற்கன்னியொருத்தியைச் சோலைத்தடங்கொண்டுபுக்கு *
முத்தார்கொங்கைபுணர்ந்திராநாழிகை மூவேழுசென்றபின்வந்தாய் *
ஒத்தார்க்கொத்தனபேசுவர் உன்னையுரப்பவேநானொன்றும்மாட்டேன் *
அத்தாவுன்னையறிந்துகொண்டேன் உனக்கஞ்சுவனம்மந்தரவே. 10

* * காரார்மேனிநிறத்தெம்பிரானைக் கடிகமழ்பூங்குழலாய்ச்சி *
ஆராவின்னமுதுண்ணத்தருவன்நான் அம்மந்தாரேனென்றமாற்றம் *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
ஏராரின்னிசைமாலைவல்லார் இருடீகேசனடியாரே. 11

அடிவரவு :—தன்னேர் பொன் கும்மாயம் மையார் முப்போதும் கரும்பு மருட்டார் வாளா தாய்மார் தொத்தார் காரார் அஞ்சனம்.

## மூன்றாம்பத்து—இரண்டாந்திருமொழி—அஞ்சனவண்ணனை.

* * அஞ்சனவண்ணனை ஆயர்கோலக்கொழுந்தினை *
மஞ்சனமாட்டி மனைகடோறுந்திரியாமே *
கஞ்சனைக்காய்ந்த கழலடிநோவக்கன்றின்பின் *
என்செயப்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. 1

பற்றுமஞ்சள்பூசிப் பாவைமாரொடுபாடியில் *
சிற்றில்சிதைத்தெங்கும் தீமைசெய்துதிரியாமே *
கற்றுத்தூளியுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
எற்றுக்கென்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. 2

நன்மணிமேகலை நங்கைமாரொடுநாடோறும் *
பொன்மணிமேனி புழுதியாடித்திரியாமே *
கன்மணிநின்றதிர் கானதரிடைக்கன்றின்பின் *
என்மணிவண்ணனைப்போக்கினேன் எல்லேபாவமே. 3

வண்ணக்கருங்குழல் மாதர்வந்தலர்தூற்றிட *
பண்ணிப்பலசெய்து இப்பாடியெங்குந்திரியாமே *
கண்ணுக்கினியானைக் கானதரிடைக்கன்றின்பின் *
எண்ணற்கரியானைப்போக்கினேன் எல்லேபாவமே. 4

அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர்பெண்டிர்க்கணுக்கனாய் *
கொவ்வைக்கனிவாய்கொடுத்துக் கூழைமைசெய்யாமே *
எவ்வுஞ்சிலையுடை வேடர்கானிடைக்கன்றின்பின் *
தெய்வத்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே. 5

மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய்விழுங்கிப்போய் *
படிறுபலசெய்து இப்பாடியெங்குந்திரியாமே *
கடிறுபலதிரி கானதரிடைக்கன்றின்பின் *
இடறவென்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. 6

வள்ளிநுடங்கிடை மாதர்வந்தலர்தூற்றிட *
துள்ளிவிளையாடித் தோழரோடுதிரியாமே *
கள்ளியுணங்கு வெங்கானதரிடைக்கன்றின்பின் *
புள்ளின்தலைவனைப்போக்கினேன் எல்லேபாவமே. 7

பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்டவப்பாங்கினால் *
என்னிளங்கொங்கை அமுதமூட்டியெடுத்தியான் *
பொன்னடிநோவப் புலரியேகானிற்கன்றின்பின் *
என்னிளஞ்சிங்கத்தைப்போக்கினேன் எல்லேபாவமே. 8

குடையுஞ்செருப்புங்கொடாதே தாமோதரனைநான் *
உடையுங்கடியன வூன்றுவெம்பரற்களுடை *
கடியவெங்கானிடைக் காலடிநோவக்கன்றின்பின் *
கொடியேனென்பிள்ளையைப்போக்கினேன் எல்லேபாவமே. 9

* * என்றுமெனக்கினியானை யென்மணிவண்ணனை *
கன்றின்பின்போக்கினேனென்று அசோதைதகழிய *
பொன்திகழ்மாடப் புதுவையர்கோன்பட்டன்சொல் *
இன்தமிழ்மாலைகள்வல்லவர்க்கு இடரில்லையே. 10

அடிவரவு :—அஞ்சனம் பற்று நன்மணி வண்ணம் அவ்வவ்விடம் மிடறு வள்ளி பன்னிரு குடை என்றும் சீலை.

---

## மூன்றும்பத்து—மூன்றாந்திருமொழி—சீலைக்குதம்பை.

* * சீலைக்குதம்பையொருகாதொருகாது செந்நிறமேற்றோன்றிப்பூ *
கோலப்பணைக்கச்சுங்கூறையுடையுங் குளிர்முத்தின்கோடாலமும் *
காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன்வேடத்தைவந்துகாணீர் *
ஞாலத்துப்புத்திரனைப்பெற்றார் நங்கைமீர்நானேமற்றாருமில்லை. 1

கன்னிநன்மாமதிள்சூழ்தரு பூம்பொழிற்காவிரித்தென்னரங்கம் *
மன்னியசீர்மதுசூதனகேசவா பாவியேன்வாழ்வுகந்து *
உன்னையிளங்கன்றுமேய்க்கச் சிறுகாலேயூட்டியொருப்படுத்தேன் *
என்னின்மனம்வலியாளொருபெண்ணில்லையென்குட்டனேமுத்தந்தா. 2

காடுகளூடுபோய்க் கன்றுகள்மேய்த்துமறியோடி * கார்க்கோடல்பூச்
சூடிவருகின்றதாமோதரா கற்றுத்தூளிகாணுன்னுடம்பு *
பேடைமயிற்சாயல்பின்னைமணாள நீராட்டமைத்துவைத்தேன் *
ஆடியமுதுசெய்யப்பனுமுண்டிலன் உன்னோடுடனேயுண்பான். 3

** கடியார்பொழிலணிவேங்கடவா கரும்போரேறே * நீயுகக்குங்
குடையுஞ்செருப்புங்குழலுந்தருவிக்கக் கொள்ளாதேபோனாய்மாலே *
கடியவெங்கானிடைக்கன்றின்பின்போன சிறுக்குட்டச்செங்கமல
வடியும்வெதும்பி * உன்கண்கள்சிவந்தாயசைந்திட்டாய் நீயெம்பிரான். 4

பற்றார்நடுக்கமுன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்தபோரேறே * என்
சிற்றாயர்சிங்கமேசீதைமணாளா சிறுக்குட்டச்செங்கண்மாலே *
சிற்றாடையுஞ்சிறுப்பத்திரமும் இவைகட்டிலின்மேல்வைத்துப்போய் *
கற்றாயரோடுநீகன்றுகள்மேய்த்துக் கலந்துடன்வந்தாய்போலும். 5

அஞ்சுடராழியுன்கையகத்தேந்தும் அழகாநீபொய்கைபுக்கு *
நஞ்சுமிழ்நாகத்தினோடுபிணங்கவும் நானுயிர்வாழ்ந்திருந்தேன் *
என்செய்யவென்னைவயிறுமறுக்கினாய் ஏதுமோரச்சமில்லை *
கஞ்சன்மனத்துக்குகப்பனவேசெய்தாய் காயாம்பூவண்ணங்கொண்டாய். 6

பன்றியுமாமையுமீனமுமாகிய பாற்கடல்வண்ணாவுன்மேல் *
கன்றினுருவாகிமேய்புலத்தேவந்த கள்ளவசுரர்தம்மை *
சென்றுபிடித்துச்சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தாய்போலும் *
என்றுமென்பிள்ளைக்குத்தீமைசெய்வார்கள் அங்ஙனமாவர்களே. 7

கேட்டறியாதனகேட்கின்றேன் கேசவாகோவலர்இந்திரற்கு *
காட்டியசோறுங்கறியுந்தயிருங் கலந்துடனுண்டாய்போலும் *
ஊட்டமுதலிலேனுன்றன்னைக்கொண்டு ஒருபோதுமெனக்கரிது *
வாட்டமிலாப்புகழ்வாசுதேவா உன்னையஞ்சுவனின்றுதொட்டும். 8

திண்ணார்வெண்சங்குடையாய் திருநாள்திருவோணமின்றேழுநாள் * முன்
பண்ணேர்மொழியாரைக்கூவிமுளையட்டிப் பல்லாண்டுகூறுவித்தேன் *
கண்ணாலஞ்செய்யக் கறியுங்கலத்ததரிசியுமாக்கிவைத்தேன் *
கண்ணாநீநாளைத்தொட்டுக்கன்றின்பின்போகேல் கோலஞ்செய்திங்கேயிரு. 9

புற்றரவல்குலசோதைநல்லாய்ச்சி தன்புத்திரன்கோவிந்தனை *
கற்றினம்மேய்த்துவரக்கண்டுகந்தவள் கற்பித்தமாற்றமெல்லாம் *
செற்றமிலாதவர்வாழ்தரு தென்புதுவைவிட்டுசித்தன்சொல் *
கற்றிவைபாடவல்லார் கடல்வண்ணன்கழலிணைகாண்பர்களே. 10

அடிவரவு:—சீலை கன்னி காடு கடி பற்றார் அஞ்சுடர் பன்றி கேட்டு திண்ணார் புற்று தழை.

---

## மூன்றும்பத்து—நான்காந்திருமொழி—தழைகளும்.

* * தழைகளுந்தொங்கலுந்ததும்பியெங்குந் தண்ணுமையெக்கம்மத்தளிதாழ்பீலி *
குழல்களுங்கீதமுமாகியெங்கும் கோவிந்தன்வருகின்றகூட்டங்கண்டு *
மழைகொலோவருகின்றதென்றுசொல்லி மங்கைமார்சாலகவாசல்பற்றி *
நுழைவனர்நிற்பனராகியெங்கும் உள்ளம்விட்டூண்மறந்தொழிந்தனரே. 1

வல்லிநுண்ணிதழன்னவாடைகொண்டு வசையறத்திருவரைவிரித்துடுத்து *
பல்லிநுண்பற்றாகவுடைவாள்சாத்திப் பணைக்கச்சுந்திப்பலதழைநடுவே *
முல்லைநன்னறுமலர்வேங்கைமலரணிந்து பல்லாயர்குழாநடுவே *
எல்லியம்போதாகப்பிள்ளைவரும் எதிர்நின்றங்கினவளையிழவேல்மினே. 2

சுரிகையுந்தெறிவில்லுஞ்செண்டுகோலும் மேலாடையுந்தோழன்மார்கொண்டோட *
ஒருகையாலொருவன்தன்தோளையூன்றி ஆநிரையினம்மீளக்குறித்தசங்கம் *
வருகையில்வாடியபிள்ளைகண்ணன் மஞ்சளும்மேனியும்வடிவுங்கண்டாள் *
அருகேநின்றாளென்பெண்ணோக்கிக்கண்டாள் அதுகண்டிவ்வூரொன்றுபுணர்க்கின்றதே.

குன்றெடுத்தாநிரைகாத்தபிரான் கோவலனாய்க்குழலூதியூதி *
கன்றுகள்மேய்த்துத்தன்தோழரோடு கலந்துடன்வருவானைத்தெருவில்கண்டு *
என்றுமிவனையொப்பாரைநங்காய் கண்டறியேனேடிவந்துகாணாய் *
ஒன்றுநில்லாவளைகழன்று துகில்ஏலந்திளமுலையுமென்வசமல்லவே. 4

சுற்றிநின்றாயர்தழைகளிடச் சுருள்பங்கிநேத்திரத்தாலணிந்து *
பற்றிநின்றாயர்கடைத்தலையே பாடவுமாடக்கண்டேன் * அன்றிப்பின்
மற்றொருவற்கென்னைப்பேசலொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால் *
கொற்றவனுக்கிவளாமென்றெண்ணிக் கொடுமின்கள்கொடீராகிற்கோழம்பமே. 5

சிந்துரமிலங்கத்தன்திருநெற்றிமேல் திருத்தியகோறம்புந்திருக்குழலும் *
அந்தரமுழவத்தண்தழைக்காவின்கீழ் வருமாயரோடுடன்வளைகோல்வீசா *
அந்தமொன்றில்லாதவாயப்பிள்ளை அறிந்தறிந்திவ்வீதிபோதுமாகில் *
பந்துகொண்டானென்றுவளைத்துவைத்துப் பவளவாய்முறுவலுங்காண்போந்தோழீ. 6

சாலப்பல்ஃநிரைப்பின்னேதழைக்காவின்கீழ்த் தன்திருமேனிநின்றொளிதிகழ *
நீலநன்னறுங்குஞ்சிநேத்திரத்தாலணிந்து பல்லாயர்குழாநடுவே *
கோலச்செந்தாமரைக்கண்மிளிரக் குழலூதியிசைபாடிக்குனித்து * ஆயரோ
டாலித்துவருகின்றவாயப்பிள்ளை அழகுகண்டென்மகளயர்க்கின்றதே. 7

சிந்துரப்பொடிக்கொண்டுசென்னியப்பித் திருநாமமிட்டங்கோரிலையந்தன்னால் *
அந்தரமின்றித்தன்னெறிபங்கியை அழகியநேத்திரத்தாலணிந்து *
இந்திரன்போல்வருமாயப்பிள்ளை யெதிர்நின்றங்கினவளையிழவேலென்ன *
சந்தியில்நின்றுகண்டீர் நங்கைதன்துகிலொடுசரிவளைகழல்கின்றதே. 8

வலங்காதில்மேல்தோன்றிப்பூவணிந்து மல்லிகைவனமாலைமௌவல்மாலை *
சிலிங்காரத்தால்குழல்தாழவிட்டுத் தீங்குழல்வாய்மடுத்தூதியூதி *

அலங்காரத்தால்வருமாயப்பிள்ளை அழகுகண்டென்மகளாசைப்பட்டு *
விலங்கிநில்லாதெதிர்நின்றுகண்டீர் வெள்வளைகழன்றுமெய்ம்மெலிகின்றதே. 9

* * விண்ணின்மீதமரர்கள்விரும்பித்தொழ மிறைத்தாயர்பாடியில்வீதியூடே *
கண்ணன்காலிப்பின்னேயெழுந்தருளக்கண்டு இளவாய்க்கன்னிமார்காமுற்ற
வண்ணம் * வண்டமர்பொழிற்புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
பண்ணின்பம்வரப்பாடும்பத்தருள்ளார் பரமானவைகுந்தம்நண்ணுவரே. 10

அடிவரவு:—தழை வல்லி சுரிகை குன்று சுற்றி சிந்துரம் சால சிந்துரப்பொடி வலம் விண் அட்டு.

---

## மூன்றாம்பத்து—ஐந்தாந்திருமொழி—அட்டுக்குவி.

* * அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும் தயிர்வாவியும்நெய்யளறுமடங்கப்
பொட்டத்துற்றி * மாரிப்பகைபுணர்த்த பொருமாகடல்வண்ணன்பொறுத்தமலை *
வட்டத்தடங்கண்மடமான்கன்றினை வலைவாய்ப்பற்றிக்கொண்டு * குறமகளிர்
கொட்டைத்தலைப்பால்கொடுத்துவளர்க்குங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே

வழுவொன்றுமில்லாச்செய்கைவானவர்கோன் வலிப்பட்டுமுனிந்துவிடுக்கப்பட்ட *
மழைவந்தெழுநாள்பெய்துமாத்தடுப்ப மதுசூதனெடுத்துமறித்தமலை *
இழவுதரியாததோரீற்றுப்பிடி யிளஞ்சீயந்தொடர்ந்துமுடுகுதலும் *
குழவியிடைக்காலிட்டெதிர்ந்துபொருங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. 2

அம்மைத்தடங்கண்மடவாய்ச்சியரும் ஆனாயருமாநிரையுமலறி *
எம்மைச்சரணேன்றுகொள்ளென்றிரப்ப இலங்காழிக்கையெந்தையெடுத்தமலை *
தம்மைச்சரணென்றதம்பாவையரைப் புனமேய்கின்றமானினங்காண்மினென்று *
கொம்மைப்புயக்குன்றர்சிலைகுனிக்கும் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. 3

கடுவாய்ச்சினவெங்கட்களிற்றினுக்குக் கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல் *
அடிவாயுறக்கையிட்டெழப்பறித்திட்டு அமரர்பெருமான்கொண்டுநின்றமலை *
கடல்வாய்ச்சென்றுமேகங்கவிழ்ந்திறங்கிக் கதுவாய்ப்படநீர்முகந்தேறி * எங்கும்
குடவாய்ப்படநின்றுமழைபொழியும் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. 4

வானத்திலுள்ளீர்வலியீருள்ளீரேல் அறையோவந்துவாங்குமினென்பவன்போல் *
ஏனத்துருவாகியவீசனெந்தை யிடவனெழவாங்கியெடுத்தமலை *
கானக்களியானைதன்கொம்பிழந்து கதுவாய்மதஞ்சோரத்தன்கையெடுத்து *
கூனற்பிறைவேண்டியண்ணாந்துநிற்குங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. 5

செப்பாடுடையதிருமாலவன்தன் செந்தாமரைக்கைவிரலைந்தினையும் *
கப்பாகமடுத்துமணிநெடுந்தோள் காம்பாகக்கொடுத்துக்கவித்தமலை *
எப்பாடும்பரந்திழிதெள்ளருவி யிலங்குமணிமுத்துவடம்பிறழ *
குப்பாயமெனநின்றுகாட்சிதருங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே.

படங்கள்பலவுமுடைப்பாம்பரையன் படர்பூமியைத்தாங்கிக்கிடப்பவன்போல் *
தடங்கைவிரலைந்தும்மலரவைத்துத் தாமோதரன்தாங்குதடவரைதான் *

அடங்கச்சென்றிலங்கையையீடழித்த அனுமன்புகழ்பாடித்தங்குட்டன்களை *
குடங்கைக்கொண்டுமந்திகள்கண்வளர்த்துங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே

சலமாமுகிற்பல்கணப்போர்க்களத்துச் சரமாரிபொழிந்தெங்கும்பூசலிட்டு *
நலிவானுறக்கேடகங்கோப்பவன்போல் நாராயணன்முன்முகங்காத்தமலை *
இலைவேய்குரம்பைத்தவமாமுனிவர் இருந்தார்நடுவேசென்றணார்சொறிய *
கொலைவாய்ச்சினவேங்கைகள்நின்றுறங்குங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே

வன்பேய்முலையுண்டதோர்வாயுடையன் வன்தூணெனநின்றதோர்வன்பரத்தை *
தன்பேரிட்டுக்கொண்டுதரணிதன்னில் தாமோதரன்தாங்குதடவரைதான் *
முன்பேவழிகாட்டமுசுக்கணங்கள் முதுகிற்பெய்துதம்முடைக்குட்டன்களை *
கொம்பேற்றியிருந்துகுதிபயிற்றுங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. 9

கொடியேறுசெந்தாமரைக்கைவிரல்கள் கோலமுமழிந்திலவாடிற்றில *
வடிவேறுதிருவுகிர்நொந்துமில மணிவண்ணன்மலையுமோர்சம்பிரதம் *
முடியேறியமாமுகிற்பல்கணங்கள் முன்னெற்றிநரைத்தனபோல * எங்குங்
குடியேறியிருந்துமழைபொழியுங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடையே. 10

* * அரவிற்பள்ளிகொண்டரவந்துரந்திட்டு அரவப்பகையூர்தியவனுடைய *
குரவிற்கொடிமுல்லைகள்நின்றுறங்குங் கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடைமேல் *
திருவிற்பொலிமறைவாணர்புத்தூர்த்திகழ் பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும் *
பரவுமனநன்குடைப்பத்தருள்ளார் பரமானவைகுந்தம்நண்ணுவரே. 11

அடிவரவு:—அட்டு வழு வம்மை|கடு வான் செப்பாடு படம் சலம் வன்பேய் கொடி அரவில் நாவல்.

---

## மூன்றாம்பத்து—ஆறாந்திருமொழி-நாவலம்பெரிய.

—o—

* * நாவலம்பெரியதீவினில்வாழும் நங்கைமீர்களிதோரற்புதங்கேளீர் *
தூவலம்புரியுடையதிருமால் தூயவாயிற்குழலோசைவழியே *
கோவலர்சிறுமியரிளங்கொங்கைகுதுகலிப்ப உடலுளவிழ்ந்து * எங்குங்
காவலுங்கடந்துகயிறுமாலையாகி வந்துகவிழ்ந்துநின்றனரே. 1

இடவணரையிடத்தோளொடுசாய்த்து இருகைகூடப்புருவம்நெரிந்தேற *
குடவயிறுபடவாய்கடைகூடக் கோவிந்தன்குழல்கொடூதினபோது *
மடமயில்களொடுமான்பிணைபோலே மங்கைமார்கள்மலர்க்கூந்தலவிழ *
உடைநெகிழவோர்கையால்துகில்பற்றி ஒல்கியோடரிக்கணோடநின்றனரே. 2

வானிளவரசுவைகுந்தக்குட்டன் வாசுதேவன்மதுரைமன்னன் * நந்த
கோனிளவரசுகோவலர்குட்டன் கோவிந்தன்குழல்கொடூதினபோது *
வானிளம்படியர்வந்துவந்தீண்டி மனமுருகிமலர்க்கண்கள்பனிப்ப *
தேனளவுசெறிகூந்தலவிழச் சென்னிவேர்ப்பச்செவிசேர்த்துநின்றனரே. 3

தேனுகன்பிலம்பன்காளியனென்னுந் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி *
கானகம்படியுலாவியுலாவிக் கருஞ்சிறுக்கன்குழலூதினபோது *
மேனகையொடுதிலோத்தமையரம்பை உருப்பசியரவர்வெள்கிமயங்கி *
வானகம்படியில்வாய்திறப்பின்றி ஆடல்பாடலவைமாறினர்தாமே. 4

முன்னரசிங்கமதாகியவுணன்முக்கியத்தைமுடிப்பான் மூவுலகில்,
மன்னரஞ்சும் * மதுசூதனன்வாயிற்குழலினோசை செவியைப்பற்றிவாங்க *
நன்னரம்புடையதும்புருவோடு நாரதனுந்தந்தம்வீணைமறந்து *
கின்னரமிதுனங்களுந்தந்தங்கின்னரம் தொடுகிலோமென்றனரே. 5

செம்பெருந்தடங்கண்ணன்திரடோளன் தேவகிசிறுவன்தேவர்கள்சிங்கம் *
நம்பரமனிந்நாள்குழலூதக்கேட்டவர்கள் இடருற்றனகேளீர் *
அம்பரந்திரியுங்காந்தப்பரெல்லாம் அமுதகீதவலையாற்சுருக்குண்டு *
நம்பரமன்றென்றுநாணிமயங்கி நைந்துசோர்ந்துகைமறித்துநின்றனரே. 6

புவியுள்நான்கண்டதோரற்புதங்கேளீர் பூணிமேய்க்குமிளங்கோவலர்கூட்டத்
தவையுள் * நாகத்தணையான்குழலூத அமரலோகத்தளவுஞ்சென்றிசைப்ப *
அவியுணாமறந்துவானவரெல்லாம் ஆயர்பாடிநிறையப்புகுந்தீண்டி *
செவியுணாவின்சுவைகொண்டுமகிழ்ந்து கோவிந்தனைத்தொடர்ந்தென்றும்விடாரே. 7

சிறுவிரல்கள்தடவிப்பரிமாறச் செங்கண்கோடச்செய்யவாய்கொப்பளிப்ப *
குறுவெயர்ப்புருவங்கூடலிப்பக் கோவிந்தன்குழல்கொடூதினபோது *
பறவையின்கணங்கள்கூடுதுறந்து வந்துசூழ்ந்துபடுகாடுகிடப்ப *
கறவையின்கணங்கள்கால்பரப்பிட்டுக் கவிழ்ந்திறங்கிச்செவியாட்டகில்லாவே. 8

திரண்டெழுதழைமழைமுகில்வண்ணன் செங்கமலமலர்சூழ்வண்டினம்போலே *
சுருண்டிருண்டகுழல்தாழ்ந்தமுகத்தான் ஊதுகின்றகுழலோசைவழியே *
மருண்டுமான்கணங்கள்மேய்கைமறந்து மேய்ந்தபுல்லுங்கடைவாய்வழிசோர *
இரண்டுபாடுந்துலுங்காப்புடைபெயரா எழுதுசித்திரங்கள்போலநின்றனவே. 9

கருங்கண்தோகைமயிற்பீலியணிந்து கட்டிநன்குடுத்தபீதகவாடை *
அருங்கலவுருவினாயர்பெருமான் அவனொருவன்குழலூதினபோது *
மரங்கள்நின்றுமதுதாரைகள்பாயும் மலர்கள்வீழும்வளர்கொம்புகள்தாழும் *
இரங்குங்கூம்புந்திருமால்நின்றநின்றபக்கம்நோக்கி அவைசெய்யுங்குணமே. 10

* * குழலிருண்டுசுருண்டேறியகுஞ்சிக் கோவிந்தனுடையகோமளவாயில் *
குழல்முழைஞ்சுகளினூடுகுமிழ்த்துக் கொழித்திழிந்தவமுதப்புனல்தன்னை *
குழல்முழவம்விளம்புபுதுவைக்கோன் விட்டுசித்தன்விரித்ததமிழ்வல்லார் *
குழலைவென்றகுளிர்வாயினராகிச் சாதுகோட்டியுள்கொள்ளப்படுவாரே. 11

அடிவரவு:—நாவல் இட வான் தேனுகன் முன் செம்பெரும் புவி சிறு திரண்டு கருங் குழல் ஐய.

* * ஐயபுழுதியுடம்பளைந்து இவள்பேச்சுமலந்தலையாய் *
செய்யநூலின்சிற்றாடை செப்பனுடுக்கவும்வல்லளல்லள் *
கையினிற்சிறுதூதையோடு இவண்முற்றில்பிரிந்துமிலள் *
பையரவணைப்பள்ளியானொடு கைவைத்திவள்வருமே. 1

வாயிற்பல்லுமெழுந்தில மயிருமுடிகூடிற்றில *
சாய்விலாதகுறுந்தலைச் சிலபிள்ளைகளோடிணங்கி *
தீயிணக்கிணங்காடிவந்து இவள்தன்னன்னசெம்மைசொல்லி *
மாயன்மாமணிவண்ணன்மேல் இவண்மாலுறுகின்றாளே. 2

பொங்குவெண்மணற்கொண்டு சிற்றிலும்முற்றத்திழைக்கலுறில் *
சங்குசக்கரந்தண்டுவாள் வில்லுமல்லதிழைக்கலுறாள் *
கொங்கையின்னங்குவிந்தெழுந்தில கோவிந்தனோடிவளை *
சங்கையாகியென்னுள்ளம் நாடோறுந்தட்டுளுப்பாகின்றதே. 3

ஏழைபேதையோர்பாலகன்வந்து என்பெண்மகளையெள்கி *
தோழிமார்பலர்கொண்டுபோய்ச் செய்தசூழ்ச்சியையார்க்குரைக்கேன் *
ஆழியானென்னுமாழமோழையில் பாய்ச்சியகப்படுத்தி *
மூழையுப்பறியாததென்னும் மூதுரையுமிலளே. 4

நாடுமூருமறியவேபோய் நல்லதுழாயலங்கல்
சூடி * நாரணன்போமிடமெல்லாஞ் சோதித்துழிதருகின்றாள் *
கேடுவேண்டுகின்றார்பலருளர் கேசவனோடிவளை *
பாடுகாவலிடுமினென்றென்று பார்தடுமாறினதே. 5

பட்டங்கட்டிப்பொற்றோடுபெய்து இவள்பாடகமுஞ்சிலம்பும் *
இட்டமாகவளர்த்தெடுத்தேனுக்கு என்னோடிருக்கலுறாள் *
பொட்டப்போய்ப்புறப்பட்டுநின்று இவள்பூவைப்பூவண்ணாவென்னும் *
வட்டவார்குழல்மங்கைமீர் இவள்மாலுறுகின்றாளே. 6

பேசவுந்தரியாதபெண்மையின் பேதையேன்பேதையிவள் *
கூசமின்றிநின்றார்கள்தம்மெதிர் கோல்கழிந்தான்மூழையாய் *
கேசவாவென்றுங்கேடிலீயென்றும் கிஞ்சுகவாய்மொழியாள் *
வாசவார்குழல்மங்கைமீர் இவள்மாலுறுகின்றாளே. 7

காறைபூணுங்கண்ணாடிகாணும் தன்கையில்வளைகுலுக்கும் *
கூறையுடுக்குமயர்க்கும் தன்கொவ்வைச்செவ்வாய்திருத்தும் *
தேறித்தேறிநின்றாயிரம்பேர்த் தேவன்திறம்பிதற்றும் *
மாறில்மாமணிவண்ணன்மேல் இவள்மாலுறுகின்றாளே. 8

கைத்தலத்துள்ளமாடழியக் கண்ணாலங்கள்செய்து * இவளை
வைத்துவைத்துக்கொண்டென்னவாணிபம் நம்மைவடுப்படுத்தும்.

9

செய்த்தலையெழுநாற்றுப்போல் அவன்செய்வனசெய்துகொள்ள *
மைத்தடமுகில்வண்ணன்பக்கல் வளரவிடுமின்களே. 9

பெருப்பெருத்தகண்ணாலங்கள்செய்து பேணிநம்மில்லத்துள்ளே*
இருத்துவானெண்ணிநாமிருக்க இவளுமொன்றெண்ணுகின்றாள்*
மருத்துவப்பதம்நீங்கினாளென்னும் வார்த்தைபடுவதன்முன் *
ஒருப்படுத்திடுமினிவளை உலகளந்தானிடைக்கே. 10

* * ஞாலமுற்றுமுண்டாலிலைத்துயில் நாராயணனுக்கு * இவள்
மாலதாகிமகிழ்ந்தனளென்று தாயுரைசெய்ததனை *
கோலமார்பொழில்சூழ்புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்ன
மாலைபத்தும் * வல்லவர்கட்கு இல்லைவருதுயரே. 11

அடிவரவு:—ஐய வாயில் பொங்கு ஏழை நாடு பட்டம் பேச காறை கைத்தலம் பெரு ஞாலம் நல்ல. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றாம்பத்து—எட்டாந்திருமொழி—நல்லதோர் தாமரை.

* * நல்லதோர்தாமரைப்பொய்கை நாண்மலர்மேற்பனிசோர *
அல்லியுந்தாதுமுதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ *
இல்லம்வெறியோடிற்றாலோ என்மகளையெங்குங்காணேன் *
மல்லரையட்டவன்பின்போய் மதுரைப்புறம்புக்காள்கொலோ. 1

ஒன்றுமறிவொன்றில்லாத உருவறைக்கோபாலர்தங்கள் *
கன்றுகால்மாறுமாபோலே கன்னியிருந்தாளைக்கொண்டு *
நன்றுங்கிறிசெய்துபோனான் நாராயணன்செய்ததீமை *
என்றுமெமர்கள்குடிக்கு ஓரேச்சுக்கொலாயிடுங்கொலோ. 2

குமரிமணஞ்செய்துகொண்டு கோலஞ்செய்தில்லத்திருத்தி *
தமரும்பிறருமறியத் தாமோதரற்கென்றுசாற்றி *
அமரர்பதியுடைத்தேவி அரசாணியைவழிபட்டு *
துமிலமெழப்பறைகொட்டித் தோரணம்நாட்டிடுங்கொலோ. 3

ஒருமகள்தன்னையுடையேன் உலகம்நிறைந்தபுகழால் *
திருமகள்போலவளர்த்தேன் செங்கண்மால்தான்கொண்டுபோனான் *
பெருமகளாய்க்குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்றவசோதை *
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறஞ்செய்யுங்கொலோ. 4

தம்மாமன்நந்தகோபாலன் தழீஇக்கொண்டென்மகள்தன்னை *
செம்மாந்திரேயென்றுசொல்லிச் செழுங்கயற்கண்ணுஞ்செவ்வாயும் *
கொம்மைமுலையுமிடையுங் கொழும்பணைத்தோள்களுங்கண்டிட்டு *
இம்மகளைப்பெற்றதாயர் இனித்தரியாரென்னுங்கொலோ. 5

வேடர்மறக்குலம்போலே வேண்டிற்றுச்செய்தென்மகளை *
கூடியகூட்டமேயாகக் கொண்டுகுடிவாழுங்கொலோ *
நாடுநகருமறிய நல்லதோர்கண்ணாலஞ்செய்து *
சாடிறப்பாய்ந்தபெருமான் தக்கவாகைப்பற்றுங்கொலோ. 6

அண்டத்தமரர்பெருமான் ஆழியானின்றென்மகளை *
பண்டப்பழிப்புக்கள்சொல்லிப் பரிசறவாண்டிடுங்கொலோ *
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து கோவலப்பட்டங்கவித்து *
பண்டைமணாட்டிமார்முன்னே பாதுகாவல்வைக்குங்கொலோ. 7

குடியிற்பிறந்தவர்செய்யுங் குணமொன்றுஞ்செய்திலனந்தோ *
நடையொன்றுஞ்செய்திலன் நங்காய் நந்தகோபன்மகன்கண்ணன் *
இடையிருபாலும்வணங்க இளைத்திளைத்தென்மகளேங்கி *
கடைகயிறேபற்றிவாங்கிக் கைதழும்பேறிடுங்கொலோ. 8

வெண்ணிறத்தோய்தயிர்தன்னை வெள்வரைப்பின்முன்னெழுந்து *
கண்ணுறங்காதேயிருந்து கடையவுந்தான்வல்லள்கொலோ *
ஒண்ணிறத்தாமரைச்செங்கண் உலகளந்தானென்மகளை *
பண்ணறையாப்பணிகொண்டு பரிசறவாண்டிடுங்கொலோ. 9

** மாயவன்பின்வழிசென்று வழியிடைமாற்றங்கள்கேட்டு *
ஆயர்கள்சேரியிலும்புக்கு அங்குத்தைமாற்றமுமெல்லாம் *
தாயவள்சொல்லியசொல்லைத் தண்புதுவைப்பட்டன்சொன்ன *
தூயதமிழ்பத்தும்வல்லார் தூமணிவண்ணனுக்காளரே. 10

அடிவரவு:—நல்லது ஒன்று குமரி ஒரு தம்மாமன் வேடர் அண்டக்குடி வெண்ணிறம் மாயவன் என்னாதன். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றாம்பத்து—ஒன்பதாந்திருமொழி.

** என்னாதன்தேவிக்கு அன்றின்பப்பூவீயாதாள் * தன்னாதன்காணவே தண்பூமரத்தினை *
வன்னாதப்புள்ளால் வலியப்பறித்திட்ட * என்னாதன்வன்மையைப்பாடிப்பற
[எம்பிரான்வன்மையைப்பாடிப்பற. 1

என்வில்வலிகண்டு போவென்றெதிர்வந்தான் * தன்வில்லினோடும் தவத்தையெதிர்வாங்கி *
முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான் * தன்வில்லின்வன்மையைப்பாடிப்பற
[தாசரதிதன்மையைப்பாடிப்பற. 2

உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு * விருப்புற்றங்கேக விரைந்தெதிர்வந்து *
செருக்குற்றான் வீரஞ்சிதைய * தலையைச் சிரைத்திட்டான்வன்மையைப்பாடிப்பற
[தேவகிசிங்கத்தைப்பாடிப்பற. 3

மாற்றுத்தாய்சென்று வனம்போகேயென்றிட *
ஈற்றுத்தாய்பின்தொடர்ந்து எம்பிரானென்றழ *
கூற்றுத்தாய்சொல்லக் கொடியவனம்போன *
சீற்றமிலாதானைப்பாடிப்பற சீதைமணாளனைப்பாடிப்பற. 4

பஞ்சவர்தூதனாய்ப் பாரதங்கைசெய்து *
நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு *
அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டருள்செய்த *
அஞ்சனவண்ணனைப்பாடிப்பற அசோதைதன்சிங்கத்தைப்பாடிப்பற. 5

முடியொன்றி மூவுலகங்களுமாண்டு * உன் னடியேற்கருளென்று அவன்பின்தொடர்ந்த * படியில்குணத்துப் பரதநம்பிக்கு * அன் றடிநிலையீந்தானைப்பாடிப்பற அயோத்தியர் [கோமானைப்பாடிப்பற. 6

காளியன்பொய்கை கலங்கப்பாய்ந்திட்டு *அவன் நீண்முடியைந்திலும் நின்றுநடஞ்செய்து* மீளவவனுக்கு அருள்செய்தவித்தகன் *தோள்வலிவீரமேபாடிப்பற தூமணிவண்ணனைப் பாடிப்பற. 7

தார்க்கிளந்தம்பிக்கு அரசீந்து *தண்டகம்
நூற்றவள்சொற்கொண்டுபோகி நுடங்கிடை *
சூர்ப்பணகாவைச் செவியொடுமூக்கு * அவள்
ஆர்க்கவரிந்தானைப்பாடிப்பற அயோத்திக்கரசனைப்பாடிப்பற. 8

மாயச்சகடமுதைத்து மருதிறுத்து * ஆயர்களோடுபோய் ஆநிரைகாத்து * அணி
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற * ஆயர்களேற்றினைப்பாடிப்பற
ஆநிரைமேய்த்தானைப்பாடிப்பற. 9

காரார்கடலை அடைத்திட்டிலங்கைபுக்கு *
ஓராதான்பொன்முடி ஒன்பதோடொன்றையும் *
நேராவவன்தம்பிக்கே நீளரசீந்த *
ஆராவமுதனைப்பாடிப்பற அயோத்தியர்வேந்தனைப்பாடிப்பற. 10

* * நந்தன்மதலையைக் காகுத்தனை நவின்று *
உந்திபறந்த ஒளியிழையார்கள் சொல் *
செந்தமிழ்த்தென்புதுவை விட்டுசித்தன்சொல் *
ஐந்தினோடைந்தும்வல்லார்க்கு அல்லலில்லையே. 11

அடிவரவு:—என்னாதன் என்வில் உருப்பிணி மாற்று பஞ்சவர் முடி காளியன் தார் மாய காரார் நந்தன் நெறிந்த. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றாம்பத்து—பத்தாந்திருமொழி—நெறிந்தகருங்குழல்.

* * நெறிந்தகருங்குழல்மடவாய் நின்னடியேன்விண்ணப்பம் *
செறிந்தமணிமுடிச்சனகன் சிலையிறுத்துநினைக்கொணர்ந்த
தறிந்து * அரசுகளைகட்ட அருந்தவத்தோனிடைவிலங்க *
செறுந்தசிலைகொடுதவத்தைச் சிதைத்ததுமோரடையாளம். 1

அல்லியம்பூமலர்க்கோதாய் அடிபணிந்தேன்விண்ணப்பம் *
சொல்லுகேன்கேட்டருளாய் துணைமலர்க்கண்மடமானே *
எல்லியம்போதினிதிருத்தல் இருந்ததோரிடவகையில் *
மல்லிகைமாமாலைகொண்டு அங்கார்த்ததுமோரடையாளம். 2

கலக்கியமாமனத்தனளாய்க் கைகேசிவரம்வேண்ட *
மலக்கியமாமனத்தனனாய் மன்னவனும்மறாதொழிய *
குலக்குமராகாடுறையப் போவென்றுவிடைகொடுப்ப *
இலக்குமணன்றன்னொடும் அங்கேகியதோரடையாளம். 3

வாரணிந்தமுலைமடவாய் வைதேவீவிண்ணப்பம் *
தேரணிந்தவயோத்தியர்கோன் பெருந்தேவீகேட்டருளாய் *
கூரணிந்தவேல்வலவன் குகனோடுங்கங்கைதன்னில் *
சீரணிந்ததோழமை கொண்டதுமோரடையாளம். 4

மானமருமென்னோக்கி வைதேவீவிண்ணப்பம் *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தகாலத்து *
தேனமரும்பொழிற்சாரல் சித்திரகூடத்திருப்ப *
பான்மொழியாய்பரதநம்பி பணிந்ததுமோரடையாளம். 5

சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கைமுலைதீண்ட *
அத்திரமேகொண்டெறிய அனைத்துலகுந்திரிந்தோடி *
வித்தகனேயிராமாவோ நின்னபயமென்றழைப்ப *
அத்திரமேயதன்கண்ணை அறுத்ததுமோரடையாளம். 6

மின்னொத்தநுண்ணிடையாய் மெய்யடியேன்விண்ணப்பம் *
பொன்னொத்தமானொன்று புகுந்தினிதுவிளையாட *
நின்னன்பின்வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேக *
பின்னேயங்கிலக்குமணன் பிரிந்ததுமோரடையாளம். 7

மைத்தகுமாமலர்க்குழலாய் வைதேவீவிண்ணப்பம் *
ஒத்தபுகழ்வானரக்கோன் உடனிருந்துநினைத்தேட *
அத்தகுசீரயோத்தியர்கோன் அடையாளமிவைமொழிந்தான் *
இத்தகையாலடையாளம் ஈதவன்கைமோதிரமே. 8

திக்குநிறைபுகழாளன் தீவேள்விச்சென்றநாள் *
மிக்கபெருஞ்சவைநடுவே வில்லிறுத்தான்மோதிரங்கண்டு *
ஒக்குமாலடையாளம் அனுமானென்றுச்சிமேல் *
வைத்துக்கொண்டுகந்தனளால் மலர்க்குழலாள்சீதையுமே. 9

** வாராரும்முலைமடவாள் வைதேவிதனைக்கண்டு *
சீராருந்திறலனுமன் தெரிந்துரைத்தவடையாளம் *
பாராரும்புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
ஏராரும்வைகுந்தத்து இமையவரோடிருப்பாரே. 10

அடிவரவு:—நெறி அல்லி கலக்கிய வாரணி மான் சித்திர மின் மைத்தகு திக்கு வாராரும் கதிர். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—முதல் திருமொழி-கதிராயிரமிரவி

** கதிராயிரமிரவி கலந்தெறித்தாலொத்தநீண்முடியன் *
எதிரிற்பெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல் *
அதிருங்கழற்பொருதோள் இரணியனாகம்பிளந்தரியாய் *
உதிரமளைந்தகையோடிருந்தானை உள்ளவாகண்டாருளர். 1

நாந்தகஞ்சங்குதண்டு நாணொலிச்சார்ங்கந்திருச்சக்கரம் *
ஏந்துபெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல் *
காந்தள்முகிழ்விரற்சீதைக்காகிக் கடுஞ்சிலைசென்றிறுக்க *
வேந்தர்தலைவன்சனகராசன்றன் வேள்வியிற்கண்டாருளர். 2

கொலையானைகொம்புபறித்துக் கூடலர்சேனைபொருதழிய *
சிலையால்மராமரமெய்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *
தலையால்குரக்கினந்தாங்கிச்சென்று தடவரைகொண்டடைப்ப *
அலையார்கடற்கரைவீற்றிருந்தானை அங்குத்தைக்கண்டாருளர். 3

தோயம்பரந்தநடுவுசூழலின் தொல்லைவடிவுகொண்ட *
மாயக்குழவியதனைநாடுறில் வம்மின்சுவடுரைக்கேன் *
ஆயர்மடமகள்பின்னைக்காகி அடல்விடையேழினையும் *
வீயப்பொருதுவியர்த்துநின்றானை மெய்ம்மையேகண்டாருளர். 4

நீரேறுசெஞ்சடைநீலகண்டனும் நான்முகனும்முறையால் *
சீரேறுவாசகஞ்செய்யநின்ற திருமாலைநாடுதிரேல் *
வாரேறுகொங்கையுருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றி * சேனைநடுவுபோர்செய்யச் சிக்கெனக்கண்டாருளர். 5

பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்சப் புணர்முலை வாய்மடுக்க
வல்லானை * மாமணிவண்ணனை மருவுமிடம்நாடுதிரேல் *
பல்லாயிரம்பெருந்தேவிமாரொடு பௌவமெறிதுவரை *
எல்லாருஞ்சூழச்சிங்காசனத்தே யிருந்தானைக்கண்டாருளர். 6

வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்த்திருச்சக்கரம் ஏந்துகையன் *
உள்ளவிடம்வினவில் உமக்கிறைவம்மின்சுவடுரைக்கேன் *
வெள்ளைப்புரவிக்குரக்குவெல்கொடித் தேர்மிசைமுன்புநின்று *
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்கைசெய்யக்கண்டாருளர். 7

நாழிகைகூறிட்டுக்காத்துநின்ற அரசர்கள்தம்முகப்பே *
நாழிகைபோகப்படைபொருதவன் தேவகிதன்சிறுவன் *
ஆழிகொண்டன்றிரவிமறைப்பச் சயத்திரதன்தலையை *
பாழிலுருளப்படைபொருதவன் பக்கமேகண்டாருளர். 8

மண்ணும்மலையும்மறிகடல்களும் மற்றும்யாவுமெல்லாம் *
திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *

எண்ணற்கரியதோரேனமாகி யிருநிலம்புக்கிடந்து *
வண்ணக்கருங்குழல்மாதரோடு மணந்தானைக்கண்டாருளர். 9

** கரியமுகிற்புரைமேனிமாயனைக் கண்டசுவடுரைத்து *
புரவிமுகஞ்செய்துசெந்நெலோங்கி விளைகழனிப்புதுவை *
திருவிற்பொலிமறைவாணன் பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும் *
பரவுமனமுடைப்பத்தருள்ளார் பரமனடிசேர்வர்களே. 10

அடிவரவு:—கதிர் நாந்தகம் கொலை தோயம் நீரேறு பொல்லா வெள்ளை நாழிகை மண் கரிய அலம்பா. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—இரண்டாந்திருமொழி—அலம்பாவெருட்டா.

* * அலம்பாவெருட்டாக் கொன்றுதிரியுமரக்கரை *
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய்நின்றகோன்மலை *
சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடுஞ்சீர் *
சிலம்பாறுபாயுந் தென்திருமாலிருஞ்சோலையே. 1

வல்லாளன்தோளும் வாளரக்கன்முடியும் * தங்கை
பொல்லாதமூக்கும் போக்குவித்தான்பொருந்தும்மலை *
எல்லாவிடத்திலுமெங்கும்பரந்து பல்லாண்டொலி *
செல்லாநிற்குஞ்சீர்த் தென்திருமாலிருஞ்சோலையே. 2

தக்கார்மிக்கார்களைச் சஞ்சலஞ்செய்யுஞ்சலவரை *
தெக்காநெறியேபோக்குவிக்குஞ் செல்வன்பொன்மலை *
எக்காலமுஞ்சென்று சேவித்திருக்குமடியரை *
அக்கானெறியைமாற்றும் தண்மாலிருஞ்சோலையே. 3

ஆனுயர்கூடி அமைத்தவிழவை * அமரர்தங்
கோனார்க்கொழியக் கோவர்த்தனத்துச்செய்தான்மலை *
வானாட்டில்நின்று மாமலர்க்கற்பகத்தொத்திழி *
தேனாறுபாயுந் தென்திருமாலிருஞ்சோலையே. 4

ஒருவாரணம்பணிகொண்டவன் பொய்கையில் * கஞ்சன்றன்
ஒருவாரணமுயிருண்டவன் சென்றுறையும்மலை *
கருவாரணம் தன்பிடிதுறந்தோட * கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியுந் தண்மாலிருஞ்சோலையே. 5

ஏவிற்றுச்செய்வான் ஏன்றெதிர்ந்துவந்தமல்லரை *
சாவத்தகர்த்த சாந்தணிதோட்சதுரன்மலை *
ஆவத்தனமென்று அமரர்களும்நன்முனிவரும் *
சேவித்திருக்குந் தென்திருமாலிருஞ்சோலையே. 6

மன்னர்மறுக மைத்துனன்மார்க்கொருதேரின்மேல் *
முன்னங்குநின்று மோழைஎழுவித்தவன்மலை *
கொன்னவில்கூர்வேற்கோன் நெடுமாறன்தென்கூடற்கோன் *
தென்னன்கொண்டாடுந் தென்திருமாலிருஞ்சோலையே. 7

குறுகாதமன்னரைக்கூடுகலக்கி வெங்கானிடை *
சிறுகால்நெறியேபோக்குவிக்குஞ் செல்வன்பொன்மலை *
அறுகால்வரிவண்டுகள் ஆயிரநாமஞ்சொல்லி *
சிறுகாலைப்பாடுந் தென்திருமாலிருஞ்சோலையே. 8

சிந்தப்புடைத்துச்செங்குருதிகொண்டு பூதங்கள் *
அந்திப்பலிகொடுத்து ஆவத்தனஞ்செய்யப்பன்மலை *
இந்திரகோபங்கள் எம்பெருமான்கனிவாயொப்பான் *
சிந்தும்புறவில் தென்திருமாலிருஞ்சோலையே. 9

எட்டுத்திசையும் எண்ணிறந்தபெருந்தேவிமார் *
விட்டுவிளங்க வீற்றிருந்தவிமலன்மலை *
பட்டிப்பிடிகள் பகடுறிஞ்சிச்சென்றுமாலைவாய் *
தெட்டித்திளைக்குந் தென்திருமாலிருஞ்சோலையே. 10

* * மருதப்பொழிலணி மாலிருஞ்சோலைமலைதன்னை *
கருதியுறைகின்ற கார்க்கடல்வண்ணனம்மான்தன்னை *
விரதங்கொண்டேத்தும் வில்லிபுத்தூர்விட்டுசித்தன்சொல் *
கருதியுரைப்பவர் கண்ணன்கழலிணைகாண்பர்களே. 11

அடிவரவு:—அலம் வல்லாளன் தக்கார் ஆனுயர் ஒரு ஏவிற்று மன்னர் குறுகாத சிந்த எட்டு மருதம் உருப்பிணி. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—மூன்றாந்திருமொழி—உருப்பிணிநங்கை.

உருப்பிணிநங்கைதன்னைமீட்பான் தொடர்ந்தோடிச்சென்ற *
உருப்பனையோட்டிக்கொண்டிட்டு உறைத்திட்டவுறைப்பன்மலை *
பொருப்பிடைக்கொன்றைநின்று முறியாழியுங்காசுங்கொண்டு *
விருப்பொடுபொன்வழங்கும் வியன்மாலிருஞ்சோலையதே. 1

கஞ்சனுங்காளியனுங் களிறுமருதுமெருதும் *
வஞ்சனையின்மடிய வளர்ந்தமணிவண்ணன்மலை *
நஞ்சுமிழ்நாகமெழுந்தணவி நளிர்மாமதியை *
செஞ்சுடர்நாவளைக்குந் திருமாலிருஞ்சோலையதே. 2

மன்னுநரகன்தன்னைச் சூழ்போகிவளைத்தெறிந்து *
கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்தகடல்வண்ணன்மலை *
புன்னைசெருந்தியொடு புனவேங்கையுங்கோங்கும்நின்று *
பொன்னரிமாலைகள்சூழ் பொழில்மாலிருஞ்சோலையதே. 3

மாவலிதன்னுடைய மகன்வாணன்மகளிருந்த *
காவலைக்கட்டழித்த தனிக்காளைகருதும்மலை *
கோவலர்கோவிந்தனைக் குறமாதர்கள்பண்குறிஞ்சி *
பாவொலிபாடிநடம்பயில் மாலிருஞ்சோலையதே. 4

பலபலநாழஞ்சொல்லிப் பழித்தசிசுபாலன்றன்னை *
அலவலைமைதவிர்த்த அழகனலங்காரன்மலை *
குலமலைகோலமலை குளிர்மாமலைகொற்றமலை *
நிலமலைநீண்டமலை திருமாலிருஞ்சோலையதே. 5

பாண்டவர்தம்முடைய பாஞ்சாலிமறுக்கமெல்லாம் *
ஆண்டங்குநூற்றுவர்தம் பெண்டிர்மேல்வைத்தவப்பன்மலை *
பாண்டகுவண்டினங்கள் பண்கள்பாடிமதுப்பருக *
தோண்டலுடையமலை தொல்லைமாலிருஞ்சோலையதே. 6

கனங்குழையாள்பொருட்டாக் கணைபாரித்து * அரக்கர்தங்கள்
இனங்கழுவேற்றுவித்த எழில்தோளெம்மிராமன்மலை *
கனங்கொழிதெள்ளருவி வந்துசூழ்ந்தகன்ஞாலமெல்லாம் *
இனங்குழுவாடும்மலை யெழில்மாலிருஞ்சோலையதே. 7

எரிசிதறுஞ்சரத்தால் இலங்கையனை * தன்னுடைய
வரிசிலைவாயிற்பெய்து வாய்க்கோட்டந்தவிர்த்துகந்த *
அரையனமரும்மலை அமரரொடுகோனுஞ்சென்று *
திரிசுடர்சூழும்மலை திருமாலிருஞ்சோலையதே. 8

கோட்டுமண்கொண்டிடந்து குடங்கையில்மண்கொண்டளந்து *
மீட்டுமதுண்டுமிழ்ந்து விளையாடும்விமலன்மலை *
ஈட்டியபல்பொருள்கள் எம்பிரானுக்கடியுறையென்று *
ஓட்டருந்தண்சிலம்பாறுடை மாலிருஞ்சோலையதே. 9

* * ஆயிரந்தோள்பரப்பி முடியாயிரமின்னிலக *
ஆயிரம்பைந்தலைய அனந்தசயனனாளும்மலை *
ஆயிரமாறுகளுஞ் சுனைகள்பலவாயிரமும் *
ஆயிரம்பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே. 10

* * மாலிருஞ்சோலையென்னும் மலையையுடையமலையை *
நாலிருமூர்த்திதன்னை நால்வேதக்கடலமுதை *
மேலிருங்கற்பகத்தை வேதாந்தவிழுப்பொருளில் *
மேலிருந்தவிளக்கை விட்டுசித்தன்விரித்தனவே. 11

அடிவரவு:—உருப்பிணி கஞ்சன் மன்னு மாவலி பல பாண்டவர் கனம் எரி கோட்டு ஆயிரம் மாலிரு நா. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—நான்காந்திருமொழி—நாவகாரியம்.

* * நாவகாரியஞ்சொல்லிலாதவர் நாடொறும்விருந்தோம்புவார் *
தேவகாரியஞ்செய்து வேதம்பயின்றுவாழ்திருக்கோட்டியூர் *
மூவர்காரியமுந்திருத்தும் முதல்வனைச்சிந்தியாத * அப்
பாவகாரிகளைப்படைத்தவன் எங்ஙனம்படைத்தான்கொலோ. 1

குற்றமின்றிக்குணம்பெருக்கிக் குருக்களுக்கனுகூலராய் *
செற்றமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
துற்றியேழுலகுண்ட தூமணிவண்ணன்றன்னைத்தொழாதவர் *
பெற்றதாயர்வயிற்றினைப் பெருநோய்செய்வான்பிறந்தார்களே. 2

வண்ணநன்மணியும் மரதகமுமழுத்தி * நிழலெழுந்
திண்ணைசூழ்திருக்கோட்டியூர்த் திருமாலவன்திருநாமங்கள் *
எண்ணக்கண்டவிரல்களால் இறைப்பொழுதுமெண்ணகிலாதுபோய் *
உண்ணக்கண்டதம்மூத்தைவாய்க்குக் கவளமுந்துகின்றார்களே. 3

உரகமெல்லணையான்கையில் உறைசங்கம்போல்மடவன்னங்கள் *
நிரைகணம்பரந்தேறுஞ் செங்கமலவயல்திருக்கோட்டியூர் *
நரகநாசனைநாவிற்கொண்டழையாத மானிடசாதியர் *
பருகுநீருமுடுக்குங்கூறையும் பாவஞ்செய்தனதான்கொலோ. 4

ஆமையின்முதுகத்திடைக்குதிகொண்டு தூமலர்சாடிப்போய் *
தீமைசெய்திளவாளைகள் விளையாடுநீர்த்திருக்கோட்டியூர் *
நேமிசேர்தடங்கையினானை நினைப்பிலாவலிநெஞ்சுடை *
பூமிபாரங்களுண்ணுஞ்சோற்றினைவாங்கிப் புல்லைத்திணிமினே. 5

பூதமைந்தொடுவேள்வியைந்து புலன்களைந்துபொறிகளால் *
ஏதமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
நாதனைநரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய *
பாததூளிபடுதலால் இவ்வுலகம்பாக்கியஞ்செய்ததே. 6

குருந்தமொன்றொசித்தானொடுஞ்சென்று கூடியாடிவிழாச்செய்து *
திருந்துநான்மறையோரிராப்பகல் ஏத்திவாழ்திருக்கோட்டியூர் *
கருந்தடமுகில்வண்ணனைக் கடைக்கொண்டுகைதொழும்பத்தர்கள் *
இருந்தவூரிலிருக்கும்மானிடர் எத்தவங்கள்செய்தார்கொலோ. 7

நளிர்ந்தசீலன்நயாசலன் அபிமானதுங்கனைநாடொறும் *
தெளிந்தசெல்வனைச்சேவகங்கொண்ட செங்கண்மால்திருக்கோட்டியூர் *
குளிர்ந்துறைகின்றகோவிந்தன் குணம்பாடுவாருள்ளநாட்டினுள் *
விளைந்ததானியமுமிராக்கதர் மீதுகொள்ளகிலார்களே. 8

கொம்பினார்பொழில்வாய்க் குயிலினங்கோவிந்தன்குணம்பாடுசீர் *
செம்பொனார்மதில்சூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர் *

நம்பனைநரசிங்கனை நவின்றேத்துவார்களைக்கண்டக்கால் *
எம்பிரான்றனசின்னங்கள் இவரிவரென்றாசைகள்தீர்வனே. 9

காசின்வாய்க்கரம்விற்கிலும் கரவாதுமாற்றிலிசோறிட்டு *
தேசவார்த்தைபடைக்கும் வண்கையினர்கள்வாழ்திருக்கோட்டியூர் *
கேசவாபுருடோத்தமா கிளர்சோதியாய்குறளாவென்று *
பேசுவாரடியார்கள் எந்தம்மைவிற்கவும்பெறுவார்களே. 10

* * சீதநீர்புடைசூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர் *
ஆதியானடியாரையும் அடிமையின்றித்திரிவாரையும் *
கோதில்பட்டர்பிரான் குளிர்புதுவைமன்விட்டுசித்தன்சொல் *
ஏதமின்றியுரைப்பவர் இருடீகேசனுக்காளரே. 11

—நா குற்றம் வண்ணம் உரகம் ஆமை பூதம் குருந்தம் நளிர்ந்த கொம்பின் காசின் சீதநீர் ஆசை. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஐந்தாந்திருமொழி—ஆசைவாய்.

* * ஆசைவாய்ச்சென்றசிந்தையராகி அன்னையத்தனென்புத்திரர்பூமி *
வாசவார்குழலாளென்றுமயங்கி மாளுமெல்லைக்கண்வாய்திறவாதே *
கேசவாபுருடோத்தமாவென்றும் கேழலாகியகேடிலீயென்றும் *
பேசுவாரவரெய்தும்பெருமை பேசுவான்புகில்நம்பரமன்றே. 1

சீயினாற்செறிந்தேறியபுண்மேல் செற்றலேறிக்குழம்பிருந்தெங்கும் *
ஈயினாலரிப்புண்டுமயங்கி யெல்லைவாய்ச்சென்றுசேர்வதன்முன்னம் *
வாயினால்நமோநாரணாவென்று மத்தகத்திடைக்கைகளைக்கூப்பி *
போயினாற்பின்னையித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும்போகவொட்டாரே. 2

சோர்வினாற்பொருள்வைத்ததுண்டாகில் சொல்லுசொல்லென்றுசுற்றுமிருந்து *
ஆர்வினவிலும்வாய்திறவாதே அந்தகாலமடைவதன்முன்னம் *
மார்வமென்பதோர்கோயிலமைத்து மாதவனென்னுந்தெய்வத்தைநாட்டி *
ஆர்வமென்பதோர்பூவிடவல்லார்க்கு அரவதண்டத்திலுய்யலுமாமே. 3

மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினையுள்ளெழவாங்கி *
காலுங்கையும்விதிர்விதிர்த்தேறிக் கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
மூலமாகியவொற்றையெழுத்தை மூன்றுமாத்திரையுள்ளெழவாங்கி *
வேலைவண்ணனைமேவுதிராகில் விண்ணகத்தினில்மேவலுமாமே. 4

மடிவழிவந்துநீர்ப்புலன்சோர வாயிலட்டியகஞ்சியும்மீண்டே *
கடைவழிவாரக்கண்டமடைப்பக் கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
தொடைவழியும்மைநாய்கள்கவரா சூலத்தாலும்மைப்பாய்வதுஞ்செய்யார் *
இடைவழியில்நீர்கூறையுமிழவீர் இருடீகேசனென்றேத்தவல்லீரே. 5

அங்கம்விட்டவையைந்துமகற்றி ஆவிமூக்கினிற்சோதித்தபின்னை *
சங்கம்விட்டவர்கையைமறித்துப் பையவேதலைசாய்ப்பதன்முன்னம் *

வங்கம்விட்டுலவுங்கடற்பள்ளிமாயனை மதுசூதனைமார்பில்
தங்கவிட்டுவைத்து * ஆவதோர்கருமஞ்சாதிப்பார்க்கு என்றுஞ்சாதிக்கலாமே. 6

தென்னவன்தமர்செப்பமிலாதார் சேவதக்குவார்போலப்புகுந்து *
பின்னும்வன்கயிற்றாற்பிணித்தெற்றிப் பின்முன்னாகவிழுப்பதன்முன்னம் *
இன்னவனினையானென்றுசொல்லி யெண்ணியுள்ளத்திருளறநோக்கி *
மன்னவன்மதுசூதனனென்பார் வானகத்துமன்றாடிகள்தாமே. 7

கூடிக்கூடியுற்றார்களிருந்து குற்றம்நிற்கநற்றங்கள்பறைந்து *
பாடிப்பாடியோர்பாடையிலிட்டு நரிப்படைக்கொருபாகுடம்போலே *
கோடிமூடியெடுப்பதன்முன்னங் கௌத்துவமுடைக்கோவிந்தனோடு *
கூடியாடியவுள்ளத்தரானால் குறிப்பிடங்கடந்துய்யலுமாமே. 8

வாயொருபக்கம்வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக்கண்கள்மிழற்ற *
தாயொருபக்கந்தந்தையொருபக்கந் தாரமுமொருபக்கமலற்ற *
தீயொருபக்கஞ்சேர்வதன்முன்னஞ் செங்கண்மாலொடுஞ்சிக்கனச்சுற்ற
மாய் * ஒருபக்கம்நிற்கவல்லார்க்கு அரவதண்டத்திலுய்யலுமாமே. 9

* * செத்துப்போவதோர்போதுநினைந்து செய்யுஞ்செய்கைகள்தேவபிரான்மேல்
பத்தராயிறந்தார்பெறும்பேற்றைப் பாழித்தோள்விட்டுசித்தன்புத்தூர்க்கோன் *
சித்தம்நன்கொருங்கித்திருமாலைச் செய்தமாலையிவைபத்தும்வல்லார் *
சித்தம்நன்கொருங்கித்திருமால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. 10

அடிவரவு:—ஆசை சீ சோர்வு மேல் மடி அங்கம் தென்னவன் கூடி வாய் செத்து காசு.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஆறுந்திருமொழி—காசுங்கறை

* * காசுங்கறைப்புடைக்கூறைக்கும் அங்கோர்கற்றைக்கு
மாசையினால் * அங்கவத்தப்பேரிடும்ஆதர்காள் *
கேசவன்பேரிட்டு நீங்கள்தேனித்திருமினோ *
நாயகன்நாரணன் தம்மன்னைநரகம்புகாள். 1

அங்கொருகூறை அரைக்குடுப்பதனாசையால் *
மங்கியமானிடசாதிப் பேரிடுமாதர்காள் *
செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால் *
நங்கைகாள்நாரணன் தம்மன்னைநரகம்புகாள். 2

உச்சியிவெண்ணெயுஞ் சுட்டியும்வளையுமுகந்து *
எச்சம்பொலிந்தீர்காள் என்செய்வான்பிறர்பேரிட்டீர் *
பிச்சைபுக்காகிலும் எம்பிரான்திருநாமமே *
நச்சுமின் * நாரணன்தம்மன்னைநரகம்புகாள். 3

மானிடசாதியில்தோன்றிற்றோர் மானிடசாதியை *
மானிடசாதியின்பேரிட்டால் மறுமைக்கில்லை *

வானுடைமாதவா கோவிந்தாவென்றழைத்தக்கால் *
நானுடைநாரணன் தம்மன்னைநரகம்புகாள். 4

மலமுடையூத்தையில்தோன்றிற்றோர் மலவூத்தையை *
மலமுடையூத்தையின்பேரிட்டால் மறுமைக்கில்லை *
குலமுடைக்கோவிந்தா கோவிந்தாவென்றழைத்தக்கால் *
நலமுடைநாரணன் தம்மன்னைநரகம்புகாள். 5

நாடுநகருமறிய மானிடப்பேரிட்டு *
கூடியழுங்கிக் குழியில்வீழ்ந்துவழுக்காதே *
சாடிறப்பாய்ந்ததலைவா தாமோதராவென்று
நாடுமின் * நாரணன் தம்மன்னைநரகம்புகாள். 6

மண்ணிற்பிறந்துமண்ணாகும் மானிடப்பேரிட்டு * அங்
கெண்ணமொன்றின்றியிருக்கும் ஏழைமனிசர்காள் *
கண்ணுக்கினிய கருமுகில்வண்ணன்நாமமே
நண்ணுமின் * நாரணன் தம்மன்னைநரகம்புகாள். 7

நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால் *
நம்பும்பிம்புமெல்லாம் நாலுநாளிலழுங்கிப்போம் *
செம்பெருந்தாமரைக்கண்ணன் பேரிட்டழைத்தக்கால் *
நம்பிகாள்நாரணன் தம்மன்னைநரகம்புகாள். 8

ஊத்தைக்குழியில் அமுதம்பாய்வதுபோல் * உங்கள்
மூத்திரப்பிள்ளையை யென்முகில்வண்ணன்பேரிட்டு *
கோத்துக்குழைத்துக் குணலமாடித்திரிமினோ *
நாத்தகுநாரணன் தம்மன்னைநரகம்புகாள். 9

* * சீரணிமால் திருநாமமேயிடத்தேற்றிய *
வீரணிதொல்புகழ் விட்டுசித்தன்விரித்த *
ஓரணியொண்டமிழ் ஒன்பதோடொன்றும்வல்லவர் *
பேரணிவைகுந்தத்து என்றும்பேணியிருப்பரே. 10

அடிவரவு:—காசும் அங்கொரு உச்சி மானிட மல முடை நாடு மண் நம்பி ஊத்தை சீரணி தங்கை. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஏழாந்திருமொழி—தங்கையை.

* * தங்கையைமூக்குந்தமையனைத்தலையுந்தடிந்த எந்தாசரதிபோய் *
எங்குந்தன்புகழாவிருந்தரசாண்ட எம்புருடோத்தமனிருக்கை *
கங்கைகங்கையென்றவாசகத்தாலே கடுவினைகளைந்திடகிற்கும் *
கங்கையின்கரைமேற்கைதொழநின்ற கண்டமென்னுங்கடிநகரே. 1

சலம்பொதியுடம்பில்தழலுமிழ்பேழ்வாய்ச் சந்திரன்வெங்கதிரஞ்ச *
மலர்ந்தெழுந்தணவுமணிவண்ணவுருவின் மால்புருடோத்தமன்வாழ்வு *
நலந்திகழ்சடையான்முடிக்கொன்றைமலரும் நாரணன்பாதத்துழாயும் *
கலந்திழிபுனலாற்புகர்படுகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. 2

அதிர்முகமுடையவலம்புரிகுமிழ்த்தி அழலுமிழாழிகொண்டெறிந்து * அங்
கெதிர்முகவசுரர்தலைகளையிடறும் எம்புருடோத்தமனிருக்கை *
சதுமுகன்கையிற்சதுப்புயன்தாளில் சங்கரன்சடையினில்தங்கி *
கதிர்முகமணிகொண்டிழிபுனற்கங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. 3

இமையவரிறுமாந்திருந்தரசாள ஏற்றுவந்தெதிர்பொருசேனை *
நமபுரம்நணுகநாந்தகம்விசிறு நம்புருடோத்தமன்நகர்தான் *
இமவந்தந்தொடங்கியிருங்கடலளவும் இருகரையுலகிரைத்தாட *
கமையுடைப்பெருமைக்கங்கையின்கரைமேல் கண்டமென்னுங்கடிநகரே. 4

உழுவதோர்படையுமுலக்கையும்வில்லும் ஒண்சுடராழியுஞ்சங்கும் *
மழுவொடுவாளும்படைக்கலமுடைய மால்புருடோத்தமன்வாழ்வு *
எழுமையுங்கூடியீண்டியபாவம் இறைப்பொழுதளவினிலெல்லாம் *
கழுவிடும்பெருமைக்கங்கையின்கரைமேல் கண்டமென்னுங்கடிநகரே. 5

தலைப்பெய்துகுமுறிச்சலம்பொதிமேகஞ் சலசலபொழிந்திடக்கண்டு *
மலைப்பெருங்குடையால்மறுத்தவன்மதுரை மால்புருடோத்தமன்வாழ்வு *
அலைப்புடைத்திரைவாயருந்தவமுனிவர் அவபிரதங்குடைந்தாட *
கலப்பைகள்கொழிக்குங்கங்கையின்கரைமேல் கண்டமென்னுங்கடிநகரே. 6

விற்பிடித்திறுத்துவேழத்தைமுறுக்கி மேலிருந்தவன்தலைசாடி *
மற்பொருதெழப்பாய்ந்தரையனையுதைத்த மால்புருடோத்தமன்வாழ்வு *
அற்புதமுடையவைராவதமதமும் அவரிளம்படியரொண்சாந்தும் *
கற்பகமலருங்கலந்திழிகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. 7

திரைபொருகடல்சூழ்திண்மதில்துவரை வேந்துதன்மைத்துனன்மார்க்காய் *
அரசினையவியவரசினையருளும் அரிபுருடோத்தமனமர்வு *
நிரைநிரையாகநெடியனயூபம் நிரந்தரமொழுக்குவிட்டு * இரண்டு
கரைபுரைவேள்விப்புகைகமழ்கங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. 8

வடதிசைமதுரைசாளக்கிராமம் வைகுந்தந்துவரையயோத்தி *
இடமுடைவதரியிடவகையுடைய எம்புருடோத்தமனிருக்கை *
தடவரையதிரத்தரணிவிண்டிடியத் தலைப்பற்றிக்கரைமரஞ்சாடி *
கடலினைக்கலங்கக்கடுத்திழிகங்கைக் கண்டமென்னுங்கடிநகரே. 9

* * மூன்றெழுத்ததனைமூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி * மூன்றெழுத்தை
ஏன்றுகொண்டிருப்பார்க்கிரக்கநன்குடைய எம்புருடோத்தமனிருக்கை *
மூன்றடிநிமிர்த்துமூன்றினில்தோன்றி மூன்றினில்மூன்றுருவானான் *
கான்தடம்பொழில்சூழ்கங்கையின்கரைமேல் கண்டமென்னுங்கடிநகரே. 10

* * பொங்கொலிகங்கைக்கரைமலிகண்டத்து உறைபுருடோத்தமனடிமேல் *
வெங்கலிநலியாவில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன்விருப்புற்று *
தங்கியவன்பால்செய்தமிழ்மாலை தங்கியநாவுடையார்க்கு *
கங்கையில்திருமால்கழலிணைக்கீழே குளித்திருந்தகணக்காமே. 11

அடிவரவு :—தங்கை சலம் அதிர் இமையவர் உழு தலை வில் திரை வட மூன்று பொங்கு மாதவ. ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—எட்டாந்திருமொழி—மாதவத்தோன்

மாதவத்தோன்புத்திரன்போய் மறிகடல்வாய்மாண்டானை *
ஓதுவித்ததக்கணையா உருவுருவேகொடுத்தானூர் *
தோதவத்தித்தூய்மறையோர் துறைபடியத்துளும்பியெங்கும் *
போதில்வைத்ததேன்சொரியும் புனலரங்கமென்பதுவே. 1

பிறப்பகத்தேமாண்டொழிந்த பிள்ளைகளைநால்வரையும் *
இறைப்பொழுதிற்கொணர்ந்துகொடுத்து ஒருப்படுத்தவுறைப்பனூர் *
மறைப்பெருந்தீவளர்த்திருப்பார் வருவிருந்தையளித்திருப்பார் *
சிறப்புடையமறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே. 2

மருமகன்றன்சந்ததியை உயிர்மீட்டுமைத்துனன்மார் *
உருமகத்தேவீழாமே குருமுகமாய்க்காத்தானூர் *
திருமுகமாய்ச்செங்கமலம் திருநிறமாய்க்கருங்குவளை *
பொருமுகமாய்நின்றலரும் புனலரங்கமென்பதுவே. 3

கூன்தொழுத்தைசிதகுரைப்பக் கொடியவள்வாய்க்கடியசொற்கேட்டு *
ஈன்றெடுத்ததாயரையும் இராச்சியமுமாங்கொழிய *
கான்தொடுத்தநெறிபோகிக் கண்டகரைக்களைந்தானூர் *
தேன்தொடுத்தமலர்ச்சோலைத் திருவரங்கமென்பதுவே. * 4

பெருவரங்களவைபற்றிப் பிழக்குடையவிராவணனை *
உருவரங்கப்பொருதழித்து இவ்வுலகினைக்கண்பெறுத்தானூர் *
குரவரும்பக்கோங்கலரக் குயில்கூவுங்குளிர்பொழில்சூழ் *
திருவரங்கமென்பதுவே யென்திருமால்சேர்விடமே. 5

கீழுலகிலசுரர்களைக் கிழங்கிருந்துகிளராமே *
ஆழிவிடுத்தவருடைய கருவழித்தவழிப்பனூர் *
தாழைமடலூடுரிஞ்சித் தவளவண்ணப்பொடியணிந்து *
யாழினிசைவண்டினங்கள் ஆளம்வைக்குமரங்கமே. 6

கொழுப்புடையசெழுங்குருதி கொழித்திழிந்துகுமிழ்த்தெறிய *
பிழக்குடையவசுரர்களைப் பிணம்படுத்தபெருமானூர் *
தழுப்பரியசந்தனங்கள் தடவரைவாயீர்த்துக்கொண்டு *
தெழிப்புடையகாவிரிவந்து அடிதொழுஞ்சீரரங்கமே. * 7

வல்லெயிற்றுக்கேழலுமாய் வாளெயிற்றுச்சீயமுமாய் *
எல்லையில்லாத்தரணியையும் அவுணனையுமிடந்தானூர் *
எல்லியம்போதிருஞ்சிறைவண்டு எம்பெருமான்குணம்பாடி *
மல்லிகைவெண்சங்கூதும் மதிளரங்கமென்பதுவே. 8

குன்றாடுகொழுமுகில்போல் குவளைகள்போல்குரைகடல்போல் *
நின்றாடுகணமயில்போல் நிறமுடையநெடுமாலூர் *
குன்றாடுபொழில்நுழைந்து கொடியிடையார்முலையணவி *
மன்றாடுதென்றலுலாம் மதிளரங்கமென்பதுவே. 9

* * பருவரங்களவைபற்றிப் படையாலித்தெழுந்தானை *
செருவரங்கப்பொருதழித்த திருவாளன்திருப்பதிமேல் *
திருவரங்கத்தமிழ்மாலை விட்டுசித்தன்விரித்தனகொண்டு *
இருவரங்கமெரித்தானை யேத்தவல்லாரடியோமே. 10

அடிவரவு :—மாதவ பிறப்பு மருமகன் கூன் பெரு கீழ் கொழுப்பு வல்லெயிறு குன்று பரு மரவடி. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஒன்பதாந்திருமொழி—மரவடியை.



* * மரவடியைத்தம்பிக்கு வான்பணயம்வைத்துப்போய்வானோர்வாழ *
செருவுடையதிசைக்கருமம் திருத்திவந்துலகாண்டதிருமால்கோயில்
திருவடிதன்திருவுருவும் திருமங்கைமலர்கண்ணுங்காட்டிநின்ற *
உருவுடையமலர்நீலங் காற்றாட்டவோசலிக்குமொளியரங்கமே. 1

தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ்சிதகுரைக்குமேல் *
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்றுசெய்தாரென்பர்போலும் *
மன்னுடையவிபீடணற்கா மதிளிலங்கைத்திசைநோக்கிமலர்கண்வைத்த *
என்னுடையதிருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்காளாவரே. 2

கருளுடையபொழில்மருதும் கதக்களிறும்பிலம்பனையுங்கடியமாவும் *
உருளுடையசகடினையும் மல்லரையுமுடையவிட்டோசைகேட்டான் *
இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்தூடேற்றிவைத்தேணிவாங்கி *
அருள்கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வானமருமூரணியரங்கமே. 3

பதினாறாமாயிரவர் தேவிமார்பணிசெய்யத்துவரையென்னும்
மதில்* நாயகராகிவீற்றிருந்த மணவாளர்மன்னுகோயில் *
புதுநாண்மலர்க்கமலம் எம்பெருமான்பொன்வயிற்றிற்பூவேபோல்வான் *
பொதுநாயகம்பாவித்திறுமாந்து பொற்சாய்க்கும்புனலரங்கமே. 4

ஆமையாய்க்கங்கையாய் ஆழ்கடலாயவனியாயருவரைகளாய் *
நான்முகனாய்நான்மறையாய் வேள்வியாய்த்தக்கணையாய்த்தானுமானான் *

சேமமுடைநாரதனார் சென்றுசென்றுதுதித்திறைஞ்சக்கிடந்தான்கோயில் *
பூமருவிப்புள்ளினங்கள் புள்ளரையன்புகழ்குழறும்புனலரங்கமே. 5

மைத்துனன்மார்காதலியை மயிர்முடிப்பித்தவர்களையேமன்னராக்கி *
உத்தரைதன்சிறுவனையும் உய்யக்கொண்டவுயிராளனுறையுங்கோயில் *
பத்தர்களும்பகவர்களும் பழமொழிவாய்முனிவர்களும்பரந்தநாடும் *
சித்தர்களுந்தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய்நிற்கின்றதிருவரங்கமே. 6

குறட்பிரமசாரியாய் மாவலியைக்குறும்பதக்கியரசுவாங்கி *
இறைப்பொழுதிற்பாதாளங் கலவிருக்கைகொடுத்துகந்தவெம்மான்கோயில் *
எறிப்புடையமணிவரைமேல் இளஞாயிறெழுந்தாற்போலரவணையின்வாய் *
சிறப்புடையபணங்கள்மிசைச் செழுமணிகள்விட்டெறிக்குந்திருவரங்கமே. 7

உரம்பற்றியிரணியனை உகிர்நுதியாலொள்ளியமார்புறைக்கவூன்றி *
சிரம்பற்றிமுடியிடியக்கண்பிதுங்க வாயலறத்தெழித்தான்கோயில் *
உரம்பெற்றமலர்க்கமலம் உலகளந்தசேவடிபோலுயர்ந்துகாட்ட *
வரம்புற்றகதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத்தலைவணக்குந்தண்ணரங்கமே. 8

தேவுடையமீனமாயாமையாயேனமாய் அரியாய்க்குறளாய் *
மூவுருவினிராமனாய்க் கண்ணனாய்க்கற்கியாய்முடிப்பான்கோயில் *
சேவலொடுபெடையன்னஞ் செங்கமலமலரேறியூசலாடி *
பூவணைமேல்துதைந்தெழு செம்பொடியாடிவிளையாடும்புனலரங்கமே. 9

செருவாளும்புள்ளாளன்மண்ணாளன் செருச்செய்யுநாந்தகமென்னு
மொருவாளன் * மறையாளனோடாதபடையாளன் விழுக்கையாளன் *
இரவாளன்பகலாளனென்னையாளன் ஏழுலகப்பெரும்புரவாளன் *
திருவாளனினிதாகத் திருக்கண்கள்வளர்கின்றதிருவரங்கமே. 10

* * கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப்படையுடையான்கருதுங்கோயில் *
தென்னாடும்வடநாடுந்தொழநின்ற திருவரங்கந்திருப்பதியின்மேல் *
மெய்ந்நாவன்மெய்யடியான்விட்டுசித்தன் விரித்ததமிழுரைக்கவல்லார் *
எஞ்ஞான்றுமெம்பெருமானிணையடிக்கீழ் இணைபிரியாதிருப்பர்தாமே. 11

அடிவரவு :—மரவடி தன் கருள் பதினாறு ஆமை மைத்துனன் குறள் உரம் தேவு செரு கைந்நாக துப்பு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—பத்தாந்திருமொழி—துப்புடையாரை



* * துப்புடையாரையடைவதெல்லாம் சோர்விடத்துத்துணையாவரென்றே *
ஒப்பிலேனாகிலும்நின்னடைந்தேன் ஆனைக்குநீயருள்செய்தமையால் *
எய்ப்பென்னைவந்துநலியும்போது அங்கேதுநானுன்னைநினைக்கமாட்டேன் *
அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 1

சாமிடத்தென்னைக்குறிக்கொள்கண்டாய் சங்கொடுசக்கரமேந்தினானே *
நாமடித்தென்னையனேகதண்டஞ் செய்வதாநிற்பர்நமன்றமர்கள் *
போமிடத்துன்திறத்தெத்தனையும் புகாவண்ணம்நிற்பதோர்மாயைவல்லை *
ஆமிடத்தேயுன்னைச்சொல்லிவைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 2

எல்லையில்வாசல்குறுகச்சென்றால் எற்றிநமன்றமர்பற்றும்போது *
நில்லுமினென்னுமுபாயமில்லை நேமியுஞ்சங்கமுமேந்தினானே * [டென்றும் *
சொல்லலாம்போதேயுன்நாமமெல்லாம் சொல்லினேனென்னைக்குறிக்கொண்
அல்லல்படாவண்ணங்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 3

ஒற்றைவிடையனும்நான்முகனும் உன்னையறியாப்பெருமையோனே *
முற்றவுலகெல்லாம்நீயேயாகி மூன்றெழுத்தாயமுதல்வனேயோ *
அற்றதுவாணாளிவற்கென்றெண்ணி அஞ்சநமன்றமர்பற்றலுற்ற *
அற்றைக்குநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 4

பையரவினணைப்பாற்கடலுள் பள்ளிகொள்கின்றபரமமூர்த்தி *
உய்யவுலகுபடைக்கவேண்டி உந்தியில்தோற்றினாய்நான்முகனை *
வையமனிசரைப்பொய்யென்றெண்ணிக் காலனையுமுடனேபடைத்தாய் *
ஐயவினியென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 5

தண்ணனவில்லைநமன்றமர்கள் சாலக்கொடுமைகள்செய்யாநிற்பர் *
மண்ணொடுநீருமெரியுங்காலும் மற்றுமாகாசமுமாகிநின்றாய் * [டென்றும் *
எண்ணலாம்போதேயுன்நாமமெல்லாம் எண்ணினேனென்னைக்குறிக்கொண்
அண்ணலேநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 6

செஞ்சொல்மறைப்பொருளாகிநின்ற தேவர்கள்நாயகனேயெம்மானே *
எஞ்சலிலென்னுடையின்னமுதே யேழுலகுமுடையாயென்னப்பா *
வஞ்சவுருவின்நமன்றமர்கள் வலிந்துநலிந்தென்னைப்பற்றும்போது *
அஞ்சலமென்றென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 7

நானேதுமுன்மாயமொன்றறியேன் நமன்றமர்பற்றிநலிந்திட்டு * இந்த
ஊனேபுகேயென்றுமோதும்போது அங்குன்னைநானொன்றுநினைக்கமாட்டேன் *
வானேய்வானவர்தங்களீசா மதுரைப்பிறந்தமாமாயனே * என்
ஆனாய்நீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 8

குன்றெடுத்தாநிரைகாத்தவாயா கோநிரைமேய்த்தவனேயெம்மானே *
அன்றுமுதலின்றறுதியாக ஆதியஞ்சோதிமறந்தறியேன் *
நன்றுங்கொடியநமன்றமர்கள் நலிந்துவலிந்தென்னைப்பற்றும்போது *
அன்றங்குநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 9

* * மாயவனைமதுசூதனனை மாதவனைமறையோர்களேத்தும் *
ஆயர்களேற்றினையச்சுதனை அரங்கத்தரவணைப்பள்ளியானை *
வேயர்புகழ்வில்லிபுத்தூர்மன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
தூயமனத்தனராகிவல்லார் தூமணிவண்ணனுக்காளர்தாமே. 10

அடிவரவு:—துப்பு சாமிடம் எல்லை ஒற்றை பை தண்ணனவு செஞ்சொல் நானேது குன்று மாய வாக்கு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—முதல்திருமொழி—வாக்குத்தூய்மை.

* * வாக்குத்தூய்மையிலாமையினாலே மாதவாவுன்னைவாய்க்கொள்ளமாட்டேன் *
நாக்குநின்னையல்லாலறியாது நானதஞ்சுவனென்வசமன்று *
மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலுமென்நாவினுக்காற்றேன் *
காக்கைவாயிலுங்கட்டுரைகொள்வர் காரணாகருளக்கொடியானே. 1

சழக்குநாக்கொடுபுன்கவிசொன்னேன் சங்குசக்கரமேந்துகையானே *
பிழைப்பராகிலும்தம்மடியார்சொல்பொறுப்பது பெரியோர்கடனன்றே *
விழிக்குங்கண்ணிலேன்நின்கண்மற்றல்லால் வேறொருவரோடென்மனம்பற்றாது *
உழைக்கோர்புள்ளிமிகையன்றுகண்டாய் ஊழியேழுலகுண்டுமிழ்ந்தானே. 2

நன்மைதீமைகளொன்றுமறியேன் நாரணாவென்னுமித்தனையல்லால் *
புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப் புகழ்வானன்றுகண்டாய்திருமாலே *
உன்னுமாறுன்னையொன்றும்றியேன் ஓவாதேநமோநாரணாவென்பன் *
வன்மையாவதுன்கோயிலில்வாழும் வைட்டணவனென்னும்வன்மைகண்டாயே. 3

நெடுமையாலுலகேழுமளந்தாய் நின்மலாநெடியாயடியேனை *
குடிமைகொள்வதற்கையுறவேண்டா கூறைசோறிவைவேண்டுவதில்லை *
அடிமையென்னுமக்கோயின்மையாலே அங்கங்கேயவைபோதருங்கண்டாய் *
கொடுமைக்கஞ்சனைக்கொன்றுநின்தாதை கோத்தவன்தளைகோள்விடுத்தானே. 4

தோட்டமில்லவளாத்தொழுவோடை துடவையுங்கிணறுமிவையெல்லாம் *
வாட்டமின்றியுன்பொன்னடிக்கீழே வளைப்பகம்வகுத்துக்கொண்டிருந்தேன் *
நாட்டுமானிடத்தோடெனக்கரிது நச்சுவார்பலர்கேழலொன்றாகி *
கோட்டுமண்கொண்டகொள்கையினானே குஞ்சரம்வீழக்கொம்பொசித்தானே. 5

கண்ணாநான்முகனைப்படைத்தானே காரணாகரியாயடியேன்நான் *
உண்ணாநாள்பசியாவதொன்றில்லை ஓவாதேநமோநாரணாவென்று *
எண்ணாநாளுமிருக்கெசுச்சாமவேத நாண்மலர்கொண்டுனபாதம்
நண்ணாநாள் * அவைதத்துறுமாகில் அன்றெனக்கவைபட்டினிநாளே. 6

வெள்ளைவெள்ளத்தின்மேலொருபாம்பை மெத்தையாகவிரித்ததன்மேலே *
கள்ளநித்திரைகொள்கின்றமார்க்கங் காணலாங்கொலென்றாசையினாலே *
உள்ளஞ்சோரவுகந்தெதிர்விம்மி உரோமகூபங்களாய்க்கண்ணநீர்கள் *
துள்ளஞ்சோரத்துயிலணைகொள்ளேன் சொல்லாயானுன்னைத்தத்துறுமாறே. 7

வண்ணமால்வரையேகுடையாக மாரிகாத்தவனேமதுசூதா *
கண்ணனேகரிகோள்விடுத்தானே காரணாகளிறட்டபிரானே *
எண்ணுவாரிடரைக்களைவானே யேத்தரும்பெருங்கீர்த்தியினானே *
நண்ணினானுன்னைநாடொறுமேத்தும் நன்மையேயருள்செய்யெம்பிரானே. 8

நம்பனேநவின்றேத்தவல்லார்கள் நாதனேநரசிங்கமதானாய் *
உம்பர்கோனுலகேழுமளந்தாய் ஊழியாயினாயாழிமுன்னேந்தி *

கம்பமாகரிகோள்விடுத்தானே காரணாகடலைக்கடைந்தானே *
எம்பிரானென்னையாளுடைத்தேனே யேழையேனிடரைக்களையாயே. 9

* * காமர்தாதைகருதலர்சிங்கம் காணவினியகருங்குழற்குட்டன் *
வாமனனென்மரதகவண்ணன் மாதவன்மதுசூதனன்றன்னை *
சேமநன்கமரும்புதுவையர்கோன் விட்டுசித்தன்வியன்தமிழ்பத்தும் *
நாமமென்றுநவின்றுரைப்பார்கள் நண்ணுவாரொல்லைநாரணனுலகே. 10

அடிவரவு:—வாக்கு சழக்கு நன்மை நெடுமை தோட்டம் கண்ணா வெள்ளை வண்ணம் நம்பன் காமர் நெய். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து—இரண்டாந்திருமொழி—நெய்க்குடத்தை.

நெய்க்குடத்தைப்பற்றி யேறுமெறும்புகள்போல்நிரந்து * எங்கும்
கைக்கொண்டுநிற்கின்றநோய்காள் காலம்பெறவுய்யப்போமின் *
மெய்க்கொண்டுவந்துபுகுந்து வேதப்பிரானார்கிடந்தார் *
பைக்கொண்டபாம்பணையோடும் பண்டன்றுபட்டினங்காப்பே. 1

சித்திரகுத்தனெழுத்தால் தென்புலக்கோன்பொறியொற்றி *
வைத்தவிலச்சினைமாற்றித் தூதுவரோடியொளித்தார் *
முத்துத்திரைக்கடற்சேர்ப்பன் மூதறிவாளர்முதல்வன் *
பத்தர்க்கமுதனடியேன் பண்டன்றுபட்டினங்காப்பே. 2

வயிற்றில்தொழுவைப்பிரித்து வன்புலச்சேவையதக்கி *
கயிற்றுமக்காணிகழித்துக் காலிடைப்பாசங்கழற்றி *
எயிற்றிடைமண்கொண்டவெந்தை யிராப்பகலோதுவித்து * என்னைப்
பயிற்றிப்பணிசெய்யக்கொண்டான் பண்டன்றுபட்டினங்காப்பே. 3

மங்கியவல்வினைநோய்காள் உமக்குமோர்வல்வினைகண்டீர் *
இங்குப்புகேன்மின்புகேன்மின் எளிதன்றுகண்டீர்புகேன்மின் *
சிங்கப்பிரானவனெம்மான் சேருந்திருக்கோயில்கண்டீர் *
பங்கப்படாதுய்யப்போமின் பண்டன்றுபட்டினங்காப்பே. 4

மாணிக்குறளுருவாய மாயனையென்மனத்துள்ளே *
பேணிக்கொணர்ந்துபுகுதவைத்துக்கொண்டேன் பிறிதின்றி *
மாணிக்கப்பண்டாரங்கண்டீர் வலிவன்குறும்பர்களுள்ளீர் *
பாணிக்கவேண்டாநடமின் பண்டன்றுபட்டினங்காப்பே. 5

உற்றவுறுபிணிநோய்காள் உமக்கொன்றுசொல்லுகேன்கேண்மின் *
பெற்றங்கள்மேய்க்கும்பிரானார் பேணுந்திருக்கோயில்கண்டீர் *
அற்றமுரைக்கின்றேன் இன்னமாழ்வினைகாள் * உமக்கிங்கோர்
பற்றில்லைகண்டீர்நடமின் பண்டன்றுபட்டினங்காப்பே. 6

கொங்கைச்சிறுவரையென்னும் பொதும்பினில்வீழ்ந்துவழுக்கி *
அங்கோர்முழையினிற்புக்கிட்டு அழுந்திக்கிடந்துழல்வேனை *
வங்கக்கடல்வண்ணனம்மான் வல்வினையாயினமாற்றி *
பங்கப்படாவண்ணஞ்செய்தான் பண்டன்றுபட்டினங்காப்பே. 7

ஏதங்களாயினவெல்லாம் இறங்கலிடுவித்து * என்னுள்ளே
பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து *
போதிற்கமலவன்னெஞ்சம் புகுந்துமென்சென்னித்திடரில் *
பாதவிலச்சினைவைத்தார் பண்டன்றுபட்டினங்காப்பே. 8

** உறகலுறகலுறகல் ஒண்சுடராழியேசங்கே *
அறவெறிநாந்தகவாளே அழகியசார்ங்கமேதண்டே *
இறவுபடாமலிருந்த எண்மருலோகபாலீர்காள் *
பறவையரையாவுறகல் பள்ளியறைகுறிக்கொண்மின். 9

** அரவத்தமளியினோடும் அழகியபாற்கடலோடும் *
அரவிந்தப்பாவையுந்தானும் அகம்படிவந்துபுகுந்து *
பரவைத்திரைபலமோதப் பள்ளிகொள்கின்றபிரானை *
பரவுகின்றான்விட்டுசித்தன் பட்டினங்காவற்பொருட்டே. 10

அடிவரவு :—நெய் சித்திர வயிற்றில் மங்கிய மாணி உற்ற கொங்கை ஏதம் உறகல் அரவத் துக்க. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து—மூன்றாந்திருமொழி—துக்கச்சுழலை

---

** துக்கச்சுழலையைச்சூழ்ந்துகிடந்த வலையையறப்பறித்து *
புக்கினிற்புக்குன்னைக்கண்டுகொண்டேன் இனிப்போகவிடுவதுண்டே *
மக்களறுவரைக்கல்லிடைமோத இழந்தவள்தன்வயிற்றில் *
சிக்கெனவந்துபிறந்துநின்றாய் திருமாலிருஞ்சோலையெந்தாய். 1

வளைத்துவைத்தேனினிப்போகலொட்டேன் உன்றனிந்திரஞாலங்களால் *
ஒளித்திடில்நின்திருவாணைகண்டாய் நீயொருவர்க்கும்மெய்யனல்லை *
அளித்தெங்கும்நாடுநகரமும் தம்முடைத்தீவினைதீர்க்கலுற்று *
தெளித்துவலஞ்செய்யுந்தீர்த்தமுடைத் திருமாலிருஞ்சோலையெந்தாய். 2

** உனக்குப்பணிசெய்திருக்குந்தவமுடையேன் இனிப்போயொருவன்
தனக்குப்பணிந்து * கடைத்தலைநிற்கை நின்சாயையழிவுகண்டாய் *
புனத்தினைக்கிள்ளிப்புதுவவிக்காட்டி உன்பொன்னடிவாழ்கவென்று *
இனக்குறவர்புதியதுண்ணும் எழின்மாலிருஞ்சோலையெந்தாய். 3

காதம்பலவுந்திரிந்துழன்றேற்கு அங்கோர்நிழலில்லைநீரில்லை * உன்
பாதநிழலல்லால்மற்றோருயிர்ப்பிடம் நானெங்குங்காண்கின்றிலேன் *
தூதுசென்றாய்குருபாண்டவர்க்காய் அங்கோர்பொய்ச்சுற்றம்பேசிச்சென்று *
பேதஞ்செய்தெங்கும்பிணம்படுத்தாய் திருமாலிருஞ்சோலையெந்தாய். 4

காலுமெழாகண்ணநீரும்நில்லா உடல்சோர்ந்துநடுங்கி * குரல்
மேலுமெழாமயிர்க்கூச்சுமறா எனதோள்களும்வீழ்வொழியா *
மாலுகளாநிற்குமென்மனமே உன்னைவாழத்தலைப்பெய்திட்டேன் *
சேலுகளாநிற்கும்நீள்சுனைசூழ் திருமாலிருஞ்சோலையெந்தாய். 5

எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் * மற்று
மொருத்தருமிப்பிறவியென்னும்நோய்க்கு மருந்தறிவாருமில்லை *
மருத்துவனாய்நின்றமாமணிவண்ணா மறுபிறவிதவிரத்
திருத்தி * உன்கோயில்கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலையெந்தாய். 6

அக்கரையென்னுமனத்தக்கடலுளழுந்தி உன்பேரருளால் *
இக்கரையேறியிளைத்திருந்தேனை அஞ்சேலென்றுகைகவியாய் *
சக்கரமுந்தடக்கைகளும் கண்களும்பீதகவாடையொடும் *
செக்கர்நிறத்துச்சிவப்புடையாய் திருமாலிருஞ்சோலையெந்தாய். 7

எத்தனைகாலமுமெத்தனையூழியும் இன்றொடுநாளையென்றே *
இத்தனைகாலமும்போய்க்கிறிப்பட்டேன் இனியுன்னைப்போகலொட்டேன் *
மைத்துனன்மார்களைவாழ்வித்து மாற்றலர் நூற்றுவரைக்கெடுத்தாய் *
சித்தம்நின்பாலதறிதியன்றே திருமாலிருஞ்சோலையெந்தாய். 8

அன்றுவயிற்றிற்கிடந்திருந்தே அடிமைசெய்யலுற்றிருப்பன் *
இன்றுவந்திங்குன்னைக்கண்டுகொண்டேன் இனிப்போகவிடுவதுண்டே *
சென்றங்குவாணனையாயிரந்தோளும் திருச்சக்கரமதனால்
தென்றி * திசைதிசைவீழச்செற்றாய் திருமாலிருஞ்சோலையெந்தாய். 9

* * சென்றுலகங்குடைந்தாடுஞ்சுனைத் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் * அடிமேலடிமைத்திறம் நேர்படவிண்ணப்பஞ்செய் *
பொன்திகழ்மாடம்பொலிந்துதோன்றும் புதுவைக்கோன்விட்டுசித்தன் *
ஒன்றினோடொன்பதும்பாடவல்லார் உலகமளந்தான்தமரே. 10

அடிவரவு:—துக்க வளைத்து உனக்கு காதம் காலும் எருத்து அக்கரை எத்தனை அன்று சென்று சென்னி. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து—நான்காந்திருமொழி—சென்னியோங்கு.

* * சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய் * உலகு
தன்னைவாழநின்றநம்பீ தாமோதராசதிரா *
என்னையுமென்னுடைமையையும் உன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு *
நின்னருளேபுரிந்திருந்தேன் இனியென்திருக்குறிப்பே. 1

பறவையேறுபரம்புருடா நீயென்னைக்கைக்கொண்டபின் *
பிறவியென்னுங்கடலும்வற்றிப் பெரும்பதமாகின்றதால் *
இறவுசெய்யும்பாவக்காடு தீக்கொளீஇவேகின்றதால் *
அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றிவாய்க்கொண்டதே. 2

எம்மனாவென்குலதெய்வமே யென்னுடைநாயகனே *
நின்னுளேனாய்ப்பெற்றநன்மை யிவ்வுலகினிலார்பெறுவார் *

நம்மன்போலேவீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ளபாவமெல்லாம் *
சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே. 3

கடல்கடைந்தமுதங்கொண்டு கலசத்தைநிறைத்தாப்போல் *
உடலுருகிவாய்திறந்து மடுத்துன்னைநிறைத்துக்கொண்டேன் *
கொடுமைசெய்யுங்கூற்றமும் என்கோலாடிகுறுகப்பெறா *
தடவரைத்தோட்சக்கரபாணீ சார்ங்கவிற்சேவகனே. 4

பொன்னைக்கொண்டுரைகல்மீதே நிறமெழவுரைத்தாற்போல் *
உன்னைக்கொண்டென்னாவகம்பால் மாற்றின்றியுரைத்துக்கொண்டேன் *
உன்னைக்கொண்டென்னுள்வைத்தேன் என்னையுமுன்னிலிட்டேன் *
என்னப்பாவென்னிருடீகேசா என்னுயிர்காவலனே. 5

உன்னுடையவிக்கிரமம் ஒன்றொழியாமலெல்லாம் *
என்னுடையநெஞ்சகம்பால் சுவர்வழியெழுதிக்கொண்டேன் *
மன்னடங்கமழுவலங்கைக்கொண்ட இராமநம்பீ *
என்னிடைவந்தெம்பெருமான் இனியெங்குப்போகின்றதே. 6

* * பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர்குலபதிபோல் *
திருப்பொலிந்தசேவடி யென்சென்னியின்மேற்பொறித்தாய் *
மருப்பொசித்தாய்மல்லடர்த்தாய் என்றென்றுன்வாசகமே *
உருப்பொலிந்தநாவினேனை உனக்குரித்தாக்கினையே. 7

அனந்தன்பாலுங்கருடன்பாலும் ஐதுநொய்தாகவைத்து * என்
மனந்தனுள்ளேவந்துவைகி வாழச்செய்தாயெம்பிரான் *
நினைந்தெனுள்ளேநின்றுநெக்குக் கண்களசும்பொழுக *
நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேன் நேமிநெடியவனே. 8

பனிக்கடலிற்பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்து * என்
மனக்கடலில்வாழவல்ல மாயமணாளநம்பீ *
தனிக்கடலேதனிச்சுடரே தனியுலகேயென்றென்று *
உனக்கிடமாயிருக்க என்னையுனக்குரித்தாக்கினையே. 9

தடவரைவாய்மிளிர்ந்துமின்னுந் தவளநெடுங்கொடிப்போல் *
சுடரொளியாய்நெஞ்சினுள்ளே தோன்றுமென்சோதிநம்பீ *
வடதடமும்வைகுந்தமும் மதிள்துவராவதியும் *
இடவகைகளிகழ்ந்திட்டு என்பாலிடவகைகொண்டனையே. 10

* * வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தன்மனத்தே *
கோயில்கொண்டகோவலனைக் கொழுங்குளிர்முகில்வண்ணனை *
ஆயரேற்றையமரர்கோவை அந்தணர்தமமுதத்தினை *
சாயைபோலப்பாடவல்லார்தாமும் அணுக்கர்களே. 11

அடிவரவு:—சென்னி பறவை எம்மனா கடல் பொன்னுன் பருப்பனந்தன் பனி தடவரை வேயர் மார்கழி. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியாழ்வார் திருமொழி முற்றிற்று.

## ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவையின் தனியன்கள்.



நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்ய க்ர்ஷ்ணம்
பாரார்த்யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ்ஸித்தமத்யாபயந்தீ
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:

அன்னவயல்புதுவையாண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்*— இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை * பூமாலை
சூடிக்கொடுத்தாளைச் சொல்லு.

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே! * தொல்பாவை
பாடியருளவல்லபல்வளையாய் ! *— நாடிநீ
வேங்கடவற்கென்னைவிதியென்றவிம்மாற்றம் *
நாம் கடவாவண்ணமே நல்கு.

---

# திருப்பாவை.

---

** மார்கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால் *
நீராடப்போதுவீர் போதுமினோ நேரிழையீர் ! *
சீர்மல்குமாய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்காள் !
கூர்வேற்கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன் *
ஏரார்ந்தகண்ணி யசோதையிளஞ்சிங்கம் *
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல்முகத்தான் *
நாராயணனே நமக்கேபறைதருவான் *
பாரோர்புகழப் படிந்தேலோரெம்பாவாய்.

வையத்துவாழ்வீர்காள்! நாமும்நம்பாவைக்கு *
செய்யும்கிரிசைகள் கேளீரோ * பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி *
நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி *
மையிட்டெழுதோம் மலரிட்டுநாம்முடியோம் *
செய்யாதனசெய்யோம் தீக்குறளைசென்றோதோம் *
ஐயமும்பிச்சையும் ஆந்தனையும்கைகாட்டி *
உய்யுமாறெண்ணி உகந்தேலோரெம்பாவாய்.

** ஓங்கியுலகளந்த உத்தமன்பேர்பாடி *
நாங்கள்நம்பாவைக்குச் சாற்றிநீராடினால் *
தீங்கின்றிநாடெல்லாம் திங்கள்மும்மாரிபெய்து *
ஓங்குபெருஞ்செந்நெலூடு கயலுகள *

பூங்குவளைப்போதில் பொருவண்டுகண்படுப்ப *
தேங்காதே புக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்க * குடம்நிறைக்கும் வள்ளல்பெரும்பசுக்கள் *
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரெம்பாவாய். 3

ஆழிமழைக்கண்ணா! ஒன்றுநீகைகரவேல் *
ஆழியுள்புக்கு முகந்துகொடுஆர்த்தேறி *
ஊழிமுதல்வ னுருவம்போல்மெய்கறுத்து *
பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில் *
ஆழிபோல்மின்னி வலம்புரிபோல்நின்றதிர்ந்து *
தாழாதே சார்ங்கமுதைத்தசரமழைபோல் *
வாழவுலகினில்பெய்திடாய் * நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய். 4

மாயனை மன்னுவடமதுரைமைந்தனை *
தூயபெருநீர் யமுனைத்துறைவனை *
ஆயர்குலத்தினில்தோன்றும் அணிவிளக்கை *
தாயைக்குடல்விளக்கஞ்செய்த தாமோதரனை *
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது *
வாயினால்பாடி மனத்தினால்சிந்திக்க *
போயபிழையும் புகுதருவான்நின்றனவும் *
தீயினில்தூசாகும் செப்பேலோரெம்பாவாய். 5

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன்கோயில் *
வெள்ளைவிளிசங்கின் பேரரவம்கேட்டிலையோ *
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு *
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி *
வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை *
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும் *
மெள்ளவெழுந்து அரியென்றபேரரவம் *
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். 6

கீசுகீசென்றெங்கும் ஆனைச்சாத்தன் * கலந்து
பேசினபேச்சரவம்கேட்டிலையோ பேய்ப்பெண்ணே! *
காசும்பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து *
வாசநறுங்குழலாய்ச்சியர் * மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம்கேட்டிலையோ *
நாயகப்பெண்பிள்ளாய்! நாராயணன்மூர்த்தி *
கேசவனைப்பாடவும்நீ கேட்டேகிடத்தியோ *
தேசமுடையாய்! திறவேலோரெம்பாவாய். 7

கீழ்வானம்வெள்ளென்று எருமைசிறுவீடு *
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும் *

போவான்போகின்றாரைப் போகாமல்காத்து * உன்னைக்
கூவுவான்வந்துநின்றோம் * கோதுகலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப்பறைகொண்டு *
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய *
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால் *
ஆவாவென்றாராய்ந் தருளேலோரெம்பாவாய். 8

தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரிய *
தூபங்கமழத் துயிலணைமேல் கண்வளரும் *
மாமான்மகளே! மணிக்கதவம் தாள்திறவாய் *
மாமீர்! அவளையெழுப்பீரோ?* உன்மகள்தான்
ஊமையோ அன்றிச் செவிடோ அனந்தலோ *
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ *
மாமாயன் மாதவன் வைகுந்தனென்றென்று *
நாமம்பலவும் நவின்றேலோரெம்பாவாய். 9

நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றவம்மனாய்! *
மாற்றமும்தாராரோ வாசல்திறவாதார் *
நாற்றத்துழாய்முடி நாராயணன் * நம்மால்
போற்றப்பறைதரும்புண்ணியனால் * பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகரணனும் *
தோற்றுமுனக்கே பெருந்துயில்தான் தந்தானோ *
ஆற்றவனந்தலுடையாய்! அருங்கலமே! *
தேற்றமாய்வந்து திறவேலோரெம்பாவாய். 10

கற்றுக்கறவைக் கணங்கள் பலகறந்து *
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும் *
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே! *
புற்றரவல்குல் புனமயிலே! போதராய் *
சுற்றத்துத்தோழிமா ரெல்லாரும்வந்து * நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாட *
சிற்றாதேபேசாதே செல்வப்பெண்டாட்டி! * நீ
எற்றுக்குறங்கும் பொருளேலோரெம்பாவாய். 11

கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி *
நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர *
நனைத்தில்லம்சேறாக்கும் நற்செல்வன்தங்காய் *
பனித்தலைவீழ நின்வாசற்கடைபற்றி *
சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச்செற்ற *
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய் *
இனித்தானெழுந்திராய் ஈதென்னபேருறக்கம் *
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோரெம்பாவாய். 12

புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லாவரக்கனை *
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய் *
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார் *
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று *
புள்ளும்சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய்! *
குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே *
பள்ளிக்கிடத்தியோபாவாய்! நீ நன்னாளால் *
கள்ளம்தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய். 13

உங்கள்புழைக்கடைத் தோட்டத்துவாவியுள் *
செங்கழுநீர்வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பினகாண் *
செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர் *
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான்போகின்றார் *
எங்களைமுன்னம் எழுப்புவான்வாய்பேசும் *
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய் *
சங்கொடுசக்கரமேந்தும்தடக்கையன் *
பங்கயக்கண்ணானைப் பாடேலோரெம்பாவாய். 14

எல்லே! இளங்கிளியே! இன்னமுறங்குதியோ? *
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன் *
வல்லையுன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும் *
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக *
ஒல்லைநீபோதாய் உனக்கென்னவேறுடையை *
எல்லாரும்போந்தாரோபோந்தார்போந்தெண்ணிக்கொள் *
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை * மாயனைப் பாடேலோரெம்பாவாய். 15

** நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே! * கொடித்தோன்றும்தோரண
வாசல்காப்பானே! * மணிக்கதவம்தாள்திறவாய் *
ஆயர்சிறுமியரோமுக்கு * அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான் *
தூயோமாய்வந்தோம் துயிலெழப்பாடுவான் *
வாயால்முன்னமுன்னம் மாற்றாதேஅம்மா! * நீ
நேசநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய். 16

அம்பரமேதண்ணீரே சோறேஅறஞ்செய்யும் *
எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய் *
கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே! *
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறாய் *
அம்பரமூடறுத் தோங்கியுலகளந்த *
உம்பர்கோமானே! உறங்காதெழுந்திராய் *
செம்பொற்கழலடிச் செல்வா! பலதேவா! *
உம்பியும்நீயும் உறங்கேலோரெம்பாவாய். 17

** உந்துமதகளிற்றன் ஓடாததோள்வலியன் *
நந்தகோபாலன்மருமகளே! நப்பின்னாய்! *
கந்தங்கமழுங்குழலீ! கடைதிறவாய் *
வந்தெங்கும் கோழியழைத்தனகாண் * மாதவிப்
பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள்கூவினகாண் *
பந்தார்விரலி! உன்மைத்துனன்பேர்பாட *
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப *
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய். 18

குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால்கட்டில்மேல் *
மெத்தென்றபஞ்சசயனத்தின்மேலேறி *
கொத்தலர்பூங்குழல் நப்பின்னைகொங்கைமேல் *
வைத்துக்கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய் *
மைத்தடங்கண்ணினாய்! நீயுன்மணாளனை *
எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண் *
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால் *
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய். 19

முப்பத்துமூவர் அமரர்க்குமுன்சென்று *
கப்பம்தவிர்க்குங்கலியே! துயிலெழாய் *
செப்பமுடையாய்! திறலுடையாய்! * செற்றார்க்கு
வெப்பங்கொடுக்கும் விமலா! துயிலெழாய் *
செப்பன்னமென்முலைச் செவ்வாய்ச்சிறுமருங்குல் *
நப்பின்னைநங்காய்! திருவே! துயிலெழாய் *
உக்கமுந்தட்டொளியும் தந்துன்மணாளனை *
இப்போதேயெம்மை நீராட்டேலோரெம்பாவாய். 20

ஏற்றகலங்கள் எதிர்பொங்கிமீதளிப்ப *
மாற்றாதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள் *
ஆற்றப்படைத்தான்மகனே! அறிவுறாய் *
ஊற்றமுடையாய்! பெரியாய்! * உலகினில்
தோற்றமாய்நின்ற சுடரே! துயிலெழாய் *
மாற்றாருனக்கு வலிதொலைந்துன்வாசற்கண் *
ஆற்றாதுவந்து உன்னடிபணியுமாபோலே *
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய். 21

அங்கண்மாஞாலத்தரசர் * அபிமான
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டில்கீழே *
சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம் *
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே *
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல்விழியாவோ *
திங்களுமாதித்தியனுமெழுந்தாற்போல் *
அங்கணிரண்டுங்கொண்டு எங்கள்மேல்நோக்குதியேல் *
எங்கள்மேல்சாபம் இழிந்தேலோரெம்பாவாய். 22

** மாரிமலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் *
சீரியசிங்கம் அறிவுற்றுத்தீவிழித்து *
வேரிமயிர்பொங்க எப்பாடும்பேர்ந்துதறி *
மூரிநிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டு *
போதருமாபோலே நீபூவைப்பூவண்ணா! * உன்
கோயில்நின்றிங்ஙனேபோந்தருளி * கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து * யாம்வந்த
காரியமாராய்ந்தருளேலோரெம்பாவாய். 23

** அன்றிவ்வுலகமளந்தாய்! அடிபோற்றி *
சென்றங்குத்தென்னிலங்கைசெற்றாய்! திறல்போற்றி *
பொன்றச்சகடமுதைத்தாய்! புகழ்போற்றி *
கன்றுகுணிலாவெறிந்தாய்! கழல்போற்றி *
குன்றுகுடையாவெடுத்தாய்! குணம்போற்றி *
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி *
என்றென்றுன்சேவகமே ஏத்திப்பறைகொள்வான் *
இன்றுயாம்வந்தோம் இரங்கேலோரெம்பாவாய். 24

ஒருத்திமகனாய்ப்பிறந்து * ஓரிரவில்
ஒருத்திமகனாய் ஒளித்துவளர *
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த *
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில் *
நெருப்பென்னநின்ற நெடுமாலே!* உன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில் *
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி *
வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய். 25

மாலே! மணிவண்ணா! மார்கழிநீராடுவான் *
மேலையார்செய்வனகள் வேண்டுவனகேட்டியேல் *
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன *
பாலன்னவண்ணத்துன்பாஞ்சசன்னியமே *
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே *
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே *
கோலவிளக்கே கொடியேவிதானமே *
ஆலினிலையாய்! அருளேலோரெம்பாவாய். 26

** கூடாரைவெல்லும்சீர்க் கோவிந்தா!* உன்தன்னைப்
பாடிப்பறைகொண்டு யாம்பெறுசம்மானம் *
நாடுபுகழும்பரிசினால் நன்றாக *
சூடகமேதோள்வளையே தோடேசெவிப்பூவே *
பாடகமேயென்றனையபல்கலனும்யாமணிவோம் *
ஆடையுடுப்போம் அதன்பின்னேபாற்சோறு *

மூட நெய்பெய்து முழங்கைவழிவார *
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய் 27

கறவைகள்பின்சென்று கானம்சேர்ந்துண்போம் *
அறிவொன்றுமில்லாதவாய்க்குலத்து * உன்தன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம் *
குறைவொன்றுமில்லாத கோவிந்தா!* உன்தன்னோ
டுறவேல்நமக்கு இங்கொழிக்கவொழியாது *
அறியாதபிள்ளைகளோம் அன்பினால் * உன்தன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே *
இறைவா! நீதாராய் பறையேலோரெம்பாவாய். 28

** சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச்சேவித்து * உன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய் *
பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து * நீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகாது *
இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா!
எற்றைக்குமேழேழ்பிறவிக்கும் * உன்தன்னோ
டுற்றோமேயாவோம் உனக்கேநாமாட்செய்வோம் *
மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய். 29

** வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனை *
திங்கள்திருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி *
அங்கப்பறைகொண்டவாற்றை * அணிபுதுவைப்
பைங்கமலத்தண்தெரியல் பட்டர்பிரான்கோதைசொன்ன *
சங்கத்தமிழ்மாலை முப்பதும்தப்பாமே *
இங்கிப்பரிசுரைப்பார் ஈரிரண்டுமால்வரைத்தோள் *
செங்கண்திருமுகத்துச் செல்வத்திருமாலால் *
எங்கும்திருவருள்பெற்று இன்புறுவரெம்பாவாய். 30

அடிவரவு:—மார்கழி வையம் ஓங்கி ஆழி மாயன் புள்ளு கீசு கீழ்வானம் தூமணி நோற்று கற்று கனைத்து புள்ளின் உங்கள் எல்லே நாயகன் அம்பரம் உந்து குத்து முப்பத்து ஏற்ற அங்கண் மாரி அன்று ஒருத்தி மாலே கூடாரை கறவைகள் சிற்றம் வங்கம் தை.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆண்டாளருளிச்செய்த

# நாய்ச்சியார் திருமொழி.

தனியன்.

அல்லிநாட் டாமரைமே லாரணங்கி னின்றுணைவி *
மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள் *
ஆயர்குல வேந்த னாகத்தாள் * தென்புதுவை
வேயர்பயந்த விளக்கு.

---

## முதல் திருமொழி—தையொருதிங்கள்.

** தையொருதிங்களும்தரைவிளக்கித் தண்மண்டலமிட்டுமாசிமுன்னாள் *
ஐயநுண்மணற்கொண்டுதெருவணிந்து அழகினுக்கலங்கரித்தனங்கதேவா *
உய்யவுமாங்கொலோவென்றுசொல்லி உன்னையுமும்பியையும்தொழுதேன் *
வெய்யதோர்தழலுமிழ்சக்கரக்கை வேங்கடவற்கென்னைவிதிக்கிற்றியே. 1

வெள்ளைநுண்மணற்கொண்டுதெருவணிந்து வெள்வரைப்பதன்முன்னம்துறைபடிந்து *
முள்ளுமில்லாச்சுள்ளியெரிமடுத்து முயன்றுன்னைநோற்கின்றேன்காமதேவா *
கள்ளவிழ்பூங்கணைதொடுத்துக்கொண்டு கடல்வண்ணனென்பதோர்பேரெழுதி *
புள்ளினைவாய்பிளந்தானென்பதோர் இலக்கினில்புகவென்னையெய்கிற்றியே. 2

மத்தநன்னறுமலர்முருக்கமலர்கொண்டு முப்போதுமுன்னடிவணங்கி *
தத்துவமிலியென்றுநெஞ்செரிந்து வாசகத்தழித்துன்னைவைதிடாமே *
கொத்தலர்பூங்கணைதொடுத்துக்கொண்டு கோவிந்தனென்பதோர்பேரெழுதி *
வித்தகன்வேங்கடவாணனென்னும் விளக்கினில்புகவென்னைவிதிக்கிற்றியே. 3

சுவரில்புராணநின்பேரெழுதிச் சுறவநற்கொடிக்களும்துரங்கங்களும் *
கவரிப்பிணாக்களும்கருப்புவில்லும் காட்டித்தந்தேன்கண்டாய்காமதேவா *
அவரைப்பிராயந்தொடங்கி என்றுமாதரித்தெழுந்தவென்தடமுலைகள் *
துவரைப்பிரானுக்கேசங்கற்பித்துத் தொழுதுவைத்தேனொல்லைவிதிக்கிற்றியே. 4

வானிடைவாழுமவ்வானவர்க்கு மறையவர்வேள்வியில்வகுத்தவவி *
கானிடைத்திரிவதோர்நரிபுகுந்து கடப்பதும்மோப்பதும்செய்வதொப்ப *
ஊனிடையாழிசங்குத்தமர்க்கென்று உன்னித்தெழுந்தவென்தடமுலைகள் *
மானிடவர்க்கென்றுபேச்சுப்படில் வாழகில்லேன்கண்டாய்மன்மதனே. 5

உருவுடையாரிளையார்கள்நல்லார் ஓத்துவல்லார்களைக்கொண்டு * வைகல்
தெருவிடையெதிர்கொண்டு பங்குனிநாள்திருந்தவேநோற்கின்றேன்காமதேவா *

கருவுடைமுகில்வண்ணன்காயாவண்ணன் கருவிளைபோல்வண்ண * கமலவண்ணத்
திருவுடைமுகத்தினில்திருக்கண்களால் திருந்தவேநோக்கெனக்கருள்கண்டாய். 6

காயுடைநெல்லொடுகரும்பமைத்துக் கட்டியரிசிஅவலமைத்து *
வாயுடைமறையவர்மந்திரத்தால் மன்மதனேயுன்னைவணங்குகின்றேன் *
தேசமுன்னளந்தவன்திரிவிக்கிரமன் திருக்கைகளாலென்னைத்தீண்டும்வண்ணம் *
சாயுடைவயிறும்என்தடமுலையும் தரணியில்தலைப்புகழ்தரக்கிற்றியே. 7

மாசுடையுடம்பொடுதலையுலறி வாய்ப்புறம்வெளுத்தொருபோதுமுண்டு *
தேசுடைத்திறலுடைக்காமதேவா! நோற்கின்றநோன்பினைக்குறிக்கொள்கண்டாய் *
பேசுவதொன்றுண்டிங்கெம்பெருமான்! பெண்மையைத்தலையுடைத்தாக்கும்வண்ணம் *
கேசவநம்பியைக்கால்பிடிப்பாள் என்னுமிப்பேறெனக்கருள்கண்டாய். 8

தொழுதுமுப்போதுமுன்னடிவணங்கித் தூமலர்தூய்த்தொழுதேத்துகின்றேன் *
பழுதின்றிப்பார்க்கடல்வண்ணனுக்கே பணிசெய்துவாழப்பெறுவிடில்நான் *
அழுதழுதலமந்தம்மாவழங்க ஆற்றவுமதுவுனக்குறைக்குங்கண்டாய் *
உழுவதோரெருத்தினைநுகங்கொடுபாய்ந்து ஊட்டமின்றித்துரந்தாலொக்குமே! 9

** கருப்புவில்மலர்க்கணைக்காமவேளைக் கழலிணைபணிந்தங்கோர்கரியலற *
மருப்பினையொசித்துப்புள்வாய்பிளந்த மணிவண்ணற்கென்னைவகுத்திடென்று *
பொருப்பன்னமாடம்பொலிந்துதோன்றும் புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை *
விருப்புடையின்தமிழ்மாலைவல்லார் விண்ணவர்கோனடிநண்ணுவரே. 10

அடிவரவு:—தை வெள்ளை மத்தச் சுவர் வானுருக்காய் மாசுதொழுது கருப்புநாமம்.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## இரண்டாவது திருமொழி—நாமமாயிரம்.

நாமமாயிரமேத்தநின்ற நாராயணாநரனே * உன்னை
மாமிதன்மகனாகப்பெற்றால் எமக்குவாதைதவிருமே *
காமன்போதருகாலமென்று பங்குனிநாள்கடைபாரித்தோம் *
தீமைசெய்யும்சிரீதரா எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. 1

இன்றுமுற்றுமுதுகுநோவ இருந்திழைத்தவிச்சிற்றிலை *
நன்றும்கண்ணுறநோக்கி நாங்(கொ)ளுமார்வந்தன்னைத்தணிகிடாய் *
அன்றுபாலகனாகி ஆலிலைமேல்துயின்றவெம்மாதியாய் *
என்றுமுன்றனக்கெங்கள்மேல் இரக்கமெழாததெம்பாவமே. 2

குண்டுநீருறைகோளரீ மதயானைகோள்விடுத்தாய்! * உன்னைக்
கண்டுமாலுறுவோங்களைக் கடைக்கண்களாலிட்டுவாதியேல் *
வண்டல்நுண்மணல்தெள்ளி யாம்வளைக்கைகளால்சிரமப்பட்டோம் *
தெண்டிரைக்கடற்பள்ளியாய் எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. 3

பெய்யுமாமுகில்போல்வண்ணா உன்றன்பேச்சும்செய்கையும் * எ
மையலேற்றிமயக்க உன்முகம்மாயமந்திரந்தான்கொலோ *
நொய்யர்பிள்ளைகளென்பதற்கு உன்னைநோவநாங்களுரைக்கிலோம் *
செய்யதாமரைக்கண்ணினாய் எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. 4

வெள்ளைநுண்மணல்கொண்டு சிற்றில்விசித்திரப்பட * வீதிவாய்த்
தெள்ளிநாங்களிழைத்தகோலம் அழித்தியாகிலுமுன்றன்மேல் *
உள்ளமோடியுருகலல்லால் உரோடமொன்றுமிலோங்கண்டாய் *
கள்ளமாதவா! கேசவா உன்முகத்தனகண்களல்லவே. 5

முற்றிலாதபிள்ளைகளோம் முலைபோந்திலாதோமை * நாடொறும்
சிற்றில்மேலிட்டுக்கொண்டு நீசிறிதுண்டுதிண்ணனநாமது
கற்றிலோம் * கடலையடைத்தரக்கர்குலங்களை முற்றவும்
செற்று-* இலங்கையைப்பூசலாக்கியசேவகா எம்மைவாதியேல். 6

பேதநன்கறிவார்களோடு இவைபேசினால்பெரிதின்சுவை *
யாதுமொன்றறியாதபிள்ளைகளோமை நீநலிந்தென்பயன் ?*
ஓதமாகடல்வண்ணா உன்மணவாட்டிமாரொடுசூழறும் *
சேதுபந்தம்திருத்தினாய் எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. 7

வட்டவாய்ச்சிறுதூதையோடு சிறுசுளகும்மணலுங்கொண்டு -*
இட்டமாவிளையாடுவோங்களைச் சிற்றிலீடழித்தென்பயன் ? *
தொட்டுதைத்துநலியேல்கண்டாய் சுடர்ச்சக்கரம்கையிலேந்தினாய் *
கட்டியும்கைத்தாலின்னாமை அறிதியேகடல்வண்ணனே. 8

முற்றத்தூடுபுகுந்து நின்முகங்காட்டிப்புன்முறுவல்செய்து *
சிற்றிலோடெங்கள்சிந்தையும் சிதைக்கக்கடவையோகோவிந்தா *
முற்றமண்ணிடந்தாவி விண்ணுறநீண்டளந்துகொண்டாய் * எம்மைப்
பற்றிமெய்ப்பிணக்கிட்டக்கால் இந்தப்பக்கம்நின்றவரென்சொல்லார். 9

** சீதைவாயமுதமுண்டாய் எங்கள்சிற்றில்நீசிதையேலென்று *
வீதிவாய்விளையாடும் ஆயர்சிறுமியர்மழலைச்சொல்லை *
வேதவாய்த்தொழிலார்கள்வாழ் வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்றன் *
கோதைவாய்த்தமிழ்வல்லவர் குறைவின்றிவைகுந்தம்சேர்வரே. 10

அடிவரவு:—நாம மின்று குண்டு பெய் வெள்ளை முற்றில் பேதவட்டமுற்றச் சீதைகோழி.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றாவது திருமொழி—கோழியழைப்பதன்.

---

கோழியழைப்பதன்முன்னம் குடைந்துநீராடுவான்போந்தோம் *
ஆழியஞ்செல்வனெழுந்தான் அரவணைமேல்பள்ளிகொண்டாய் *
ஏழைமையாற்றவும்பட்டோம் இனியென்றும்பொய்கைக்குவாரோம் *
தோழியுநானும்தொழுதோம் துகிலைப்பணித்தருளாயே. 1

இதுவென்புகுந்ததிங்கந்தோ! இப்பொய்கைக்கெவ்வாறுவந்தாய்?*
மதுவின்துழாய்முடிமாலே! மாயனே! எங்களமுதே! *
விதியின்மையாலதுமாட்டோம் வித்தகப்பிள்ளாய்! விரையேல் *
குதிகொண்டரவில்நடித்தாய் குருந்திடைக்கூறைபணியாய். 2

எல்லேயீதென்னவிளமை எம்மனைமார்காணிலொட்டார் *
பொல்லாங்கீதென்றுகருதாய் பூங்குருந்தேறியிருத்தி *
வில்லாலிலங்கையழித்தாய் நீவேண்டியதெல்லாம்தருவோம் *
பல்லாரும்காணமேபோவோம் பட்டைப்பணித்தருளாயே 3

பரக்கவிழித்தெங்கும்நோக்கிப் பலர்குடைந்தாடும்சுனையில் *
அரக்கநில்லாகண்ணநீர்கள் அலமருகின்றவாபாராய் *
இரக்கமேலொன்றுமிலாதாய் இலங்கையழித்தபிரானே *
குரக்கரசாவதறிந்தோம் குருந்திடைக்கூறைபணியாய். 4

காலைக்கதுவிடுகின்ற கயலொடுவாளைவிரவி *
வேலைப்பிடித்தென்னைமார்களோட்டில் என்னவிளையாட்டோ *
கோலச்சிற்றாடைபலவுங்கொண்டு நீயேறியிராதே *
கோலங்கரியபிரானே குருந்திடைக்கூறைபணியாய். 5

தடத்தவிழ்தாமரைப்பொய்கைத் தாள்களெங்காலைக்கதுவ *
விடத்தேளெறிந்தாலேபோல வேதனையாற்றவும்பட்டோம் *
குடத்தையெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே *
படிற்றையெல்லாம்தவிர்ந்து எங்கள்பட்டைப்பணித்தருளாயே. 6

நீரிலேநின்றயர்க்கின்றோம் நீதியல்லாதனசெய்தாய் *
ஊரகம்சாலவும்சேய்த்தால் ஊழியெல்லாமுணர்வானே! *
ஆர்வமுனக்கேயுடையோம் அம்மனைமார்காணிலொட்டார் *
போரவிடாயெங்கள்பட்டைப் பூங்குருந்தேறியிராதே. 7

மாமிமார்மக்களேயல்லோம் மற்றுமிங்கெல்லாரும்போந்தார் *
தூமலர்க்கண்கள்வளரத் தொல்லையிராத்துயில்வானே *
சேமமேலன்றிதுசாலச் சிக்கெனநாமிதுசொன்னோம் *
கோமளவாயர்கொழுந்தே குருந்திடைக்கூறைபணியாய். 8

கஞ்சன்வலைவைத்தவன்று காரிருளெல்லில்பிழைத்து *
நெஞ்சுதுக்கம்செய்யப்போந்தாய் நின்றவிக்கன்னியரோமை *
அஞ்சவுரப்பாளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும் *
வஞ்சகப்பேய்ச்சிபாலுண்ட மசுமையிலீகூறைதாராய். 9

** கன்னியரோடெங்கள்நம்பி கரியபிரான்விளையாட்டை *
பொன்னியல்மாடங்கள்சூழ்ந்த புதுவையர்கோன்பட்டன்கோதை *
இன்னிசையால்சொன்னமாலை யீரைந்தும்வல்லவர்தாம்போய் *
மன்னியமாதவனோடு வைகுந்தம்புக்கிருப்பாரே. 10

அடிவரவு:—கோழியிதுஎல்லே பரக்ககாலைதடத்துநீர் மாமிகஞ்சன்கன்னி தெள்ளியார்.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காவது திருமொழி—தெள்ளியார்பலர்.

** தெள்ளியார் பலர்கைதொழும்தேவனார் * வள்ளல் மாலிருஞ்சோலைமணாளனார் *
பள்ளிகொள்ளுமிடத்து அடிகொட்டிட * கொள்ளுமாகில் நீகூடிடுகூடலே. 1

** காட்டில்வேங்கடம் கண்ணபுரநகர் * வாட்டமின்றி மகிழ்ந்துறைவாமனன் *
ஓட்டராவந்து என்கைப்பற்றி * தன்னொடும் கூட்டுமாகில் நீகூடிடுகூடலே. 2

பூமகன்புகழ்வானவர் போற்றுதற் காமகன் * அணிவாணுதல் தேவகி
மாமகன் * மிகுசீர் வசுதேவர்தம் * கோமகன்வரில் கூடிடுகூடலே. 3

ஆய்ச்சிமார்களும் ஆயருமஞ்சிட * பூத்தநீள் கடம்பேறிப்புகப்பாய்ந்து *
வாய்த்தகாளியன்மேல் நடமாடிய * கூத்தனார்வரில் கூடிடுகூடலே. 4

மாடமாளிகைசூழ் மதுரைப்பதி நாடி * நந்தெருவின் நடுவேவந்திட்டு *
ஓடைமா மதயானையுதைத்தவன் * கூடுமாகில் நீகூடிடுகூடலே. 5

அற்றவன் மருதமுறியநடை கற்றவன் * கஞ்சனை வஞ்சனையில்
செற்றவன் * திகழும்மதுரைப்பதி * கொற்றவன்வரில் கூடிடுகூடலே. 6

அன்றின்னாதனசெய் சிசுபாலனும் * நின்றநீள் மருதுமெருதம்புள்ளும் *
வென்றிவேல் விறற்கஞ்சனும்வீழ * முன் கொன்றவன்வரில் கூடிடுகூடலே. 7

ஆவலன்புடையார்தம் மனத்தன்றிமேவலன் * விரைசூழ் துவராபதிக்
காவலன் * கன்றுமேய்த்து விளையாடும் * கோவலன்வரில் கூடிடுகூடலே. 8

கொண்டகோலக் குறளுருவாய்ச்சென்று * பண்டுமாவலிதன் பெருவேள்வியில் *
அண்டமும்நிலனும் அடியொன்றினால் * கொண்டவன்வரில் கூடிடுகூடலே. 9

பழகுநான்மறையின் பொருளாய் * மத மொழுகுவாரணம் உய்யவளித்த * எம்
மழகனார் அணியாய்ச்சியர்சிந்தையுள் * குழகனார்வரில் கூடிடுகூடலே. 10

** ஊடல்கூடல் உணர்தல்புணர்தலை * நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர் *
கூடலைக் குழற்கோதைமுன்கூறிய * பாடல்பத்தும்வல்லார்க்கு இல்லைபாவமே. 11

அடிவரவு:—தெள்ளி காட்டில் பூமக ளுய்ச்சி மாட மற்றன்று ஆவல் கொண்ட பழகு ஊடல் மன்னு. ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாவதுதிருமொழி—மன்னுபெரும்புகழ்.

---

** மன்னுபெரும்புகழ்மாதவன் மாமணிவண்ணன்மணிமுடிமைந்தன்
தன்னை * உகந்ததுகாரணமாக என்சங்கிழக்கும்வழக்குண்டே *
புன்னைகுருக்கத்திநாழல்செருந்திப் பொதும்பினில்வாழும்குயிலே *
பன்னியெப்போதுமிருந்துவிரைந்து என்பவளவாயன்வரக்கூவாய். 1

வெள்ளைவிளிசங்கிடங்கையிற்கொண்ட விமலனெனக்குருக்காட்டான் *
உள்ளம்புகுந்தென்னைநைவித்து நாளுமுயிர்ப்பெய்துகூத்தாட்டுக்காணும் *
கள்ளவிழ்செண்பகப்பூமலர்கோதிக் களித்திசைபாடும்குயிலே *
மெள்ளவிருந்துமிழற்றிமிழற்றாது என்வேங்கடவன்வரக்கூவாய். 2

மாதலிதேர்முன்புகோல்கொள்ள மாயனிராவணன்மேல் * சரமாரி
தாய்தலையற்றற்றுவீழத் தொடுத்ததலைவன்வரவெங்குங்காணேன் *
போதலர்காவில்புதுமணம்நாறப் பொறிவண்டின்காமரங்கேட்டு * உன்
காதலியோடுடன்வாழ்குயிலே யென்கருமாணிக்கம்வரக்கூவாய். 3

என்புருகியினவேல்நெடுங்கண்கள் இமைபொருந்தாபலநாளும் *
துன்பக்கடல்புக்குவைகுந்தனென்பதோர் தோணிபெறாதுழல்கின்றேன் *
அன்புடையாரைப்பிரிவுறுநோய் அதுநீயுமறிதிகுயிலே *
பொன்புரைமேனிக்கருளக்கொடியுடைப் புண்ணியனைவரக்கூவாய். 4

** மென்னடையன்னம்பரந்துவிளையாடும் வில்லிபுத்தூருறைவான்றன் *
பொன்னடிகாண்பதோராசையினால் என்பொருகயற்கண்ணிணைதுஞ்சா *
இன்னடிசிலொடுபாலமுதூட்டி யெடுத்தவென்கோலக்கிளியை *
உன்னொடுதோழமைக்கொள்ளுவன்குயிலே உலகளந்தான்வரக்கூவாய். 5

எத்திசையுமமரர்பணிந்தேத்தும் இருடீகேசன்வலிசெய்ய *
முத்தன்னவெண்முறுவல்செய்யவாயும் முலையுமழகழிந்தேன்நான் *
கொத்தலர்காவில்மணித்தடம் கண்படைகொள்ளுமிளங்குயிலே * என்
தத்துவனைவரக்கூகிற்றியாகில் தலையல்லால்கைம்மாறிலேனே. 6

பொங்கியபாற்கடல்பள்ளிகொள்வானைப் புணர்வதோராசையினால் * என்
கொங்கைகிளர்ந்துகுமைத்துக்குதுகலித்து ஆவியையாகுலஞ்செய்யு
மங்குயிலே * உனக்கென்னமறைந்துறைவு ஆழியும்சங்குமொண்தண்டும் *
தங்கியகையவனைவரக்கூவில்நீ சாலத்தருமம்பெறுதி. 7

சார்ங்கம்வளையவலிக்கும் தடக்கைச்சதுரன்பொருத்தமுடையன் *
நாங்களெம்மிலிருந்தொட்டியகச்சங்கம் நானுமவனுமறிதும்*
தேங்கனிமாம்பொழில்செந்தளிர்கோதும் சிறுகுயிலே * திருமாலை
ஆங்குவிரைந்தொல்லைக்கூகிற்றியாகில் அவனைநான்செய்வனகாணே. 8

பைங்கிளிவண்ணன்சிரீதரனென்பதோர் பாசத்தகப்பட்டிருந்தேன்*
பொங்கொளிவண்டிரைக்கும்பொழில்வாழ்குயிலே குறிக்கொண்டிதுநீகேள் *
சங்கொடுசக்கரத்தான்வரக்கூவுதல் பொன்வளைகொண்டுதருதல் *
இங்குள்ளகாவினில்வாழக்கருதில் இரண்டத்தொன்றேல்திண்ணம்வேண்டும். 9

அன்றுலகமளந்தானையுகந்து அடிமைக்கணவன்வலிசெய்ய *
தென்றலுந்திங்களுமூடறுத்து என்னைநலியும்முறைமையறியேன் *
என்றுமிக்காவிலிருந்திருந்து என்னைத்ததர்த்தாதேநீயுங்குயிலே *
இன்றுநாராயணனைவரக்கூவாயேல் இங்குற்றுநின்றும்துரப்பன். 10

* * விண்ணுறநீண்டடிதாவியமைந்தனை வேற்கண்மடந்தைவிரும்பி *
கண்ணுறவென்கடல்வண்ணனைக் கூவுகருங்குயிலேயென்றமாற்றம் *
பண்ணுறுநான்மறையோர்புதுவைமன்னன் பட்டர்பிரான்கோதைசொன்ன *
நண்ணுறுவாசகமாலைவல்லார் நமோநாராயணாயவென்பாரே. 11

மன்னு வெள்ளை மாதலி என்பு மென்னடை எத்திசை பொங்கிய சார்ங்கம் பைங்கிளி அன்று விண் வாரணம்.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறுவது திருமொழி—வாரணமாயிரம்.

---

* * வாரணமாயிரம் சூழவலம்செய்து *
நாரணநம்பி நடக்கின்றானென்றெதிர்*
பூரணபொற்குடம் வைத்துப்புறமெங்கும் *
தோரணம்நாட்டக் கனாக்கண்டேன்தோழீநான். 1

நாளைவதுவை மணமென்றுநாளிட்டு *
பாளைகமுகு பரிசுடைப்பந்தற்கீழ் *
கோளரிமாதவன் கோவிந்தனென்பானோர் *
காளைபுகுதக் கனாக்கண்டேன்தோழீநான். 2

இந்திரனுள்ளிட்ட தேவர்குழாமெல்லாம் *
வந்திருந்தென்னை மகள்பேசிமந்திரித்து *
மந்திரக்கோடியுடுத்தி மணமாலை *
அந்தரிசூட்டக் கனாக்கண்டேன்தோழீநான். 3

நால்திசைத்தீர்த்தங்கொணர்ந்து நனிநல்கி *
பார்ப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தி*

பூப்புனைகண்ணிப் புனிதனோடென்றன்னை *
காப்புநாண்கட்டக் கனாக்கண்டேன்தோழீநான். 4

கதிரொளிதீபம் கலசமுடனேந்தி *
சதிரிளமங்கையர்தாம் வந்தெதிர்கொள்ள *
மதுரையார்மன்னன் அடிநிலைதொட்டெங்கும் *
அதிரப்புகுதக் கனாக்கண்டேன்தோழீநான். 5

மத்தளம்கொட்ட வரிசங்கம்நின்றூத *
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ் *
மைத்துனன்நம்பி மதுசூதன்வந்தென்னை *
கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன்தோழீநான். 6

வாய்நல்லார் நல்லமறையோதிமந்திரத்தால் *
பாசிலைநாணல்படுத்துப் பரிதிவைத்து *
காய்சினமாகளிறன்னான் என்கைப்பற்றி *
தீவலம்செய்யக் கனாக்கண்டேன்தோழீநான். 7

இம்மைக்கும் ஏழேழ்பிறவிக்கும் பற்றாவான் *
நம்மையுடையவன் நாராயணன்நம்பி *
செம்மையுடைய திருக்கையால்தாள்பற்றி *
அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன்தோழீநான். 8

வரிசிலைவாள்முகத்து என்னைமார்தாம்வந்திட்டு *
எரிமுகம்பாரித்து என்னைமுன்னேநிறுத்தி *
அரிமுகனச்சுதன் கைம்மேலென்கைவைத்து *
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன்தோழீநான். 9

குங்குமமப்பிக் குளிர்சாந்தம்மட்டித்து *
மங்கலவீதி வலம்செய்துமணநீர் *
அங்கவனோடும் உடன்சென்றங்கானைமேல் *
மஞ்சனமாட்டக் கனாக்கண்டேன்தோழீநான். 10

** ஆயனுக்காகத் தான்கண்டகனாவினை *
வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன்கோதைசொல் *
தூயதமிழ்மாலை யீரைந்தும்வல்லவர் *
வாயுநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. 11

அடிவரவு:—வாரணம் நாளை இந்திரன் நாற்றிசை கதிர் மத்தளம் வாயிம்மை வரிசிலை குங்குமம் ஆயன் கருப்பூரம்.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

* * கருப்பூரம்நாறுமோ கமலப்பூநாறுமோ *
திருப்பவளச்செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ *
மருப்பொசித்தமாதவன்றன் வாய்ச்சுவையும்நாற்றமும் *
விருப்புற்றுக்கேட்கின்றேன் சொல்லாழிவெண்சங்கே. 1

கடலில்பிறந்து கருதாது * பஞ்சசன
னுடலில்வளர்ந்துபோய் ஊழியான்கைத்தலத்
திடரில் * குடியேறித் தீயவசுரர் *
நடலைப்படமுழங்கும் தோற்றத்தாய்நற்சங்கே. 2

தடவரையின்மீதே சரற்காலசந்திரன் *
இடையுவாவில்வந்து எழுந்தாலேபோல * நீயும்
வடமதுரையார்மன்னன் வாசுதேவன்கையில் *
குடியேறிவீற்றிருந்தாய் கோலப்பெருஞ்சங்கே. 3

சந்திரமண்டலம்போல் தாமோதரன்கையில் *
அந்தரமொன்றின்றி யேறியவன்செவியில் *
மந்திரம்கொள்வாயேபோலும் வலம்புரியே *
இந்திரனுமுன்னோடு செல்வத்துக்கேலானே. 4

உன்னோடுடனே ஒருகடலில்வாழ்வாரை *
இன்னாரினையாரென்று எண்ணுவாரில்லைகாண் *
மன்னாகிநின்ற மதுசூதன்வாயமுதம் *
பன்னாளுமுண்கின்றாய் பாஞ்சசன்னியமே. 5

போய்த்தீர்த்தமாடாதே நின்றபுணர்மருதம் *
சாய்த்தீர்த்தான்கைத்தலத்தே யேறிக்குடிகொண்டு *
சேய்த்தீர்த்தமாய்நின்ற செங்கண்மால்தன்னுடைய *
வாய்த்தீர்த்தம்பாய்ந்தாடவல்லாய் வலம்புரியே. 6

செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல் *
செங்கட்கருமேனி வாசுதேவனுடைய *
அங்கைத்தலமேறி அன்னவசஞ்செய்யும் *
சங்கரையாவுன்செல்வம் சாலவழகியதே. 7

உண்பதுசொல்லில் உலகளந்தான்வாயமுதம் *
கண்படைகொள்ளில் கடல்வண்ணன்கைத்தலத்தே *
பெண்படையாருன்மேல் பெரும்பூசல்சாற்றுகின்றார் *
பண்பலசெய்கின்றாய் பாஞ்சசன்னியமே. 8

பதினாறுமாயிரவர் தேவிமார்பார்த்திருப்ப *
மதுவாயில்கொண்டாற்போல் மாதவன்றன்வாயமுதம் *
பொதுவாகவுண்பதனைப் புக்குநீயுண்டக்கால் *
சிதையாரோவுன்னோடு செல்வப்பெருஞ்சங்கே. 9

** பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும் *
வாய்ந்தபெருஞ்சுற்றம் ஆக்கியவண்புதுவை *
ஏய்ந்தபுகழ்ப்பட்டர்பிரான் கோதைதமிழீரைந்தும் *
ஆய்ந்தேத்தவல்லார் அவருமணுக்கரே. 10

அடிவரவு:—கருப்பூரம் கடல் தடவரை சந்திர னுன்னோடு போய் செங்கமல முண்பது பதினாறு பாஞ்ச விண்.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாவது திருமொழி—விண்ணீலமேலாப்பு.

** விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல்மேகங்காள் *
தெண்ணீர்பாய்வேங்கடத்து என்திருமாலும்போந்தானே *
கண்ணீர்கள்முலைக்குவட்டில் துளிசோரச்சோர்வேனை *
பெண்ணீர்மையீடழிக்குமிது தமக்கோர்பெருமையே. 1

மாமுத்தநிதிசொரியும் மாமுகில்காள் * வேங்கடத்துச்
சாமத்தின்நிறங்கொண்ட தாடாளன்வார்த்தையென்னே *
காமத்தீயுள்புகுந்து கதுவப்பட்டிடைக்கங்குல் *
ஏமத்தோர்தென்றலுக்கு இங்கிலக்காய்நானிருப்பேனே. 2

ஒளிவண்ணம்வளைசிந்தை உறக்கத்தோடிவையெல்லாம் *
எளிமையாலிட்டென்னை ஈடழியப்போயினவால் *
குளிரருவிவேங்கடத்து என்கோவிந்தன்குணம்பாடி *
அளியத்தமேகங்காள் ஆவிகாத்திருப்பேனே. 3

மின்னாகத்தெழுகின்ற மேகங்காள் * வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கை தங்கியசீர்மார்வற்கு *
என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம்நாடோறும் *
பொன்னாகம்புல்குதற்கு என்புரிவுடைமைசெப்புமினே. 4

வான்கொண்டுகிளர்ந்தெழுந்த மாமுகில்காள் * வேங்கடத்துத்
தேன்கொண்டமலர்சிதறத் திரண்டேறிப்பொழிவீர்காள் *
ஊன்கொண்டவள்ளுகிரால் இரணியனையுடலிடந்தான் *
தான்கொண்டசரிவளைகள் தருமாகில்சாற்றுமினே. 5

சலங்கொண்டுகிளர்ந்தெழுந்த தண்முகில்காள் * மாவலியை
நிலங்கொண்டான்வேங்கடத்தே நிரந்தேறிப்பொழிவீர்காள் *
உலங்குண்டவிளங்கனிபோல் உள்மெலியப்புகுந்து * என்னை
நலங்கொண்டநாரணற்கு என்நடலைநோய்செப்புமினே. 6

** சங்கமாகடல்கடைந்தான் தண்முகில்காள் * வேங்கடத்துச்
செங்கண்மால்சேவடிக்கீழ் அடிவீழ்ச்சிவிண்ணப்பம் *
கொங்கைமேல்குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து * ஒருநாள்
தங்குமேல் என்னாவிதங்குமென்றுரையீரே. 7

கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள் * வேங்கடத்துப்
போர்காலத்தெழுந்தருளிப் பொருதவனார்பேர்சொல்லி *
நீர்காலத்தெருக்கில் அம்பழவிலைபோல்வீழ்வேனை *
வார்காலத்தொருநாள் தம்வாசகம்தந்தருளாரே. 8

மதயானைபோலெழுந்த மாமுகில்காள் * வேங்கடத்தைப்
பதியாகவாழ்வீர்காள் பாம்பணையான்வார்த்தையென்னே *
கதியென்றும்தானாவான் கருதாது * ஓர்பெண்கொடியை
வதைசெய்தானென்னும்சொல் வையகத்தார்மதியாரே. 9

** நாகத்தினணையானை நன்னுதலாள்நயந்துரைசெய்
மேகத்தை * வேங்கடக்கோன் விடுதூதில்விண்ணப்பம் *
போகத்தில்வழுவாத புதுவையர்கோன்கோதைதமிழ் *
ஆகத்துவைத்துரைப்பாரவர் அடியாராகுவரே. 10

-விண் மா ஒளி மின் வான் சலம் சங்கம் கார் மத நாகச் சிந்துரம்.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாவது திருமொழி—சிந்துரச்செம்பொடி.

---

** சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் *
இந்திரகோபங்களே யெழுந்தும்பரந்திட்டனவால் *
மந்தரம்நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறுகொண்ட *
சுந்தரத்தோளுடையான் சுழலையில்நின்றுய்துங்கொலோ. 1

போர்க்களிறுபொரும் மாலிருஞ்சோலையம்பூம்புறவில் *
தார்க்கொடிமுல்லைகளும் தவளநகைகாட்டுகின்ற *
கார்க்கொள்படாக்கள்நின்று கழறிச்சிரிக்கத்தரியேன் *
ஆர்க்கிடுகோதோழீ அவன்தார்செய்தபூசலையே. 2

கருவிளையொண்மலர்காள்! காயாமலர்காள்! * திருமா
லுருவொளிகாட்டுகின்றீர் எனக்குய்வழக்கொன்றுரையீர் *
திருவிளையாடுதிண்டோள் திருமாலிருஞ்சோலைநம்பி *
வரிவளையில்புகுந்து வந்திபற்றும்வழக்குளதே. 3

பைம்பொழில்வாழ்குயில்காள்மயில்காள் ஒண்கருவிளைகாள்!*
வம்பக்களங்கனிகாள் வண்ணப்பூவைநறுமலர்காள் *
ஐம்பெரும்பாதகர்காள் அணிமாலிருஞ்சோலைநின்ற *
எம்பெருமானுடையநிறம் உங்களுக்கென்செய்வதே. 4

துங்கமலர்ப்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
செங்கட்கருமுகிலின் திருவுருப்போல் * மலர்மேல்
தொங்கியவண்டினங்காள் தொகுபூஞ்சுனைகாள்! * சுனையில்
தங்குசெந்தாமரைகாள் எனக்கோர்சரண்சாற்றுமினே. 5

** நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலைநம்பிக்கு * நான்
நூறுதடாவில்வெண்ணெய் வாய்நேர்ந்துபராவிவைத்தேன் *
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில்சொன்னேன் *
ஏறுதிருவுடையான் இன்றுவந்திவைகொள்ளுங்கொலோ. 6

இன்றுவந்தித்தனையும் அமுதுசெய்திடப்பெறில் * நான்
ஒன்றுநூறாயிரமாக்கொடுத்துப் பின்னுமாளும்செய்வன் *
தென்றல்மணங்கமழும் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் * அடியேன்மனத்தேவந்துநேர்படிலே. 7

காலையெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள் *
மாலின்வரவுசொல்லி மருள்பாடுதல்மெய்ம்மைகொலோ *
சோலைமலைப்பெருமான் துவராபதியெம்பெருமான் *
ஆலினிலைப்பெருமான் அவன்வார்த்தையுரைக்கின்றவே. 8

கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில்கொன்றைகள்மேல்*
தூங்குபொன்மாலைகளோடு உடனாய்நின்றுதூங்குகின்றேன் *
பூங்கொள்திருமுகத்து மடுத்தூதியசங்கொலியும் *
சார்ங்கவில்நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ. 9

** சந்தொடுகாரகிலும்சுமந்து தடங்கள்பொருது *
வந்திழியும்சிலம்பாறுடை மாலிருஞ்சோலைநின்ற
சுந்தரனை * சுரும்பார்குழல் கோதைதொகுத்துரைத்த *
செந்தமிழ்பத்தும்வல்லார் திருமாலடிசேர்வர்களே. 10

அடிவரவு—சிந்துரப் போர் கருவிளை பைம்பொழில் துங்க நாறு இன்று காலைகோங்கு சந்து கார்க்கோடல். ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாவதுதிருமொழி—கார்க்கோடல்பூக்காள்.

** கார்க்கோடல்பூக்காள் கார்க்கடல்வண்ணனென்மேல் * உம்மைப்
போர்க்கோலம்செய்து போரவிடுத்தவனெங்குற்றான்? *
ஆர்க்கோவினிநாம் பூசலிடுவது - * அணிதுழாய்த்
தார்க்கோடும்நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேனந்தோ! 1

மேல்தோன்றிப்பூக்காள் மேலுலகங்களின்மீதுபோய் *
மேல்தோன்றும்சோதி வேதமுதல்வர்வலங்கையின் *
மேல்தோன்றுமாழியின் வெஞ்சுடர்போலச்சுடாது* எம்மை
மாற்றோலைப்பட்டவர்கூட்டத்து வைத்துக்கொள்கிற்றிரே. 2

கோவைமணாட்டி நீயுன்கொழுங்கனிகொண்டு * எம்மை
ஆவிதொலைவியேல் வாயழகர்தம்மையஞ்சுதும் *
பாவியேன்தோன்றிப் பாம்பணையார்க்கும்தம்பாம்புபோல் *
நாவுமிரண்டுளவாய்த்து நாணிலியேனுக்கே. 3

முல்லைப்பிராட்டி நீயுன்முறுவல்கள்கொண்டு * எம்மை
அல்லல்விளைவியேல் ஆழிநங்காயுன்னடைக்கலம் *
கொல்லையரக்கியைமூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும்பொய்யானால் * நானும்பிறந்தமைபொய்யன்றே. 4

பாடும்குயில்காள் ஈதென்னபாடல் * நல்வேங்கட
நாடர்நமக்கொருவாழ்வுதந்தால் வந்துபாடுமின் *
ஆடும்கருளக்கொடியுடையார் வந்தருள்செய்து *
கூடுவராயிடில் கூவிநும்பாட்டுக்கள்கேட்டுமே. 5

கணமாமயில்காள் கண்ணபிரான்திருக்கோலம்போன்று *
அணிமாநடம்பயின்றாடுகின்றீர்க்கு அடிவீழ்கின்றேன் *
பணமாடரவணைப் பற்பலகாலமும்பள்ளிகொள் *
மணவாளர் நம்மைவைத்தபரிசிதுகாண்மினே. 6

நடமாடித்தோகைவிரிக்கின்ற மாமயில்காள் * உம்மை
நடமாட்டங்காணப் பாவியேன்நானோர்முதலிலேன் *
குடமாடுகூத்தன் கோவிந்தன்கோமிறைசெய்து * எம்மை
யுடைமாடுகொண்டான் உங்களுக்கினியொன்றுபோதுமே. 7

** மழையேமழையேமண்புறம்பூசி உள்ளாய்நின்ற
மெழுகூற்றினாற்போல் * ஊற்றுநல்வேங்கடத்துள்நின்ற *
அழகப்பிரானார்தம்மை யென்னெஞ்சத்தகப்படத்
தழுவநின்று * என்னைத்ததர்த்திக்கொண்டு ஊற்றவும்வல்லையே. 8

கடலேகடலேயுன்னைக்கடைந்து கலக்குறுத்து *
உடலுள்புகுந்துநின்று ஊறலறுத்தவர்க்கு - * என்னையு
முடலுள்புகுந்துநின்று ஊறலறுக்கின்றமாயற்கு * என்
நடலைகளெல்லாம் நாகணைக்கேசென்றுரைத்தியே. 9

** நல்லவென்தோழி நாகணைமிசைநம்பரர் *
செல்வர்பெரியர் சிறுமானிடவர்நாம் செய்வதென் ? *
வில்லிபுதுவை விட்டுசித்தர்தங்கள்தேவரை *
வல்லபரிசுவருவிப்பரேல் அதுகாண்டுமே. 10

—கார்மேல் கோவை முல்லை பாடும் கண நடமழை கடலே நல்ல தாம்.

ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பதினோராவதுதிருமொழி—தாமுகக்கும்.

** தாமுகக்குந்தம்கையில் சங்கமேபோலாவோ *
யாமுகக்குமென்கையில் சங்குமேந்திழையீர் *
தீமுகத்துநாகணைமேல் சேருந்திருவரங்கர் *
ஆமுகத்தைநோக்காரால் அம்மனேயம்மனே. 1

எழிலுடையவம்மனைமீர் என்னரங்கத்தின்னமுதர் *
குழலழகர்வாயழகர் கண்ணழகர் * கொப்பூழில்
லெழுகமலப்பூவழகர் எம்மானார் * என்னுடைய
கழல்வளையைத் தாமும்கழல்வளையேயாக்கினரே. 2

** பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும் *
அங்காதுஞ்சோராமே ஆள்கின்றவெம்பெருமான் *
செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார் *
எங்கோல்வளையால் இடர்தீர்வராகாதே.

மச்சணிமாட மதிளரங்கர்வாமனனார் *
பச்சைப்பசுந்தேவர் தாம்பண்டுநீரேற்ற *
பிச்சைக்குறையாகி யென்னுடையபெய்வளைமேல் *
இச்சையுடையரேல் இத்தெருவேபோதாரே. 4

பொல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில்நீரேற்று *
எல்லாவுலகும் அளந்துகொண்டவெம்பெருமான் *
நல்லார்கள்வாழும் நளிரரங்கநாகணையான் *
இல்லாதோம்கைப்பொருளும் எய்துவானொத்துளனே. 5

கைப்பொருள்கள்முன்னமே கைக்கொண்டார் * காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச்செல்வனார் *
எப்பொருட்கும்நின்றார்க்கும் எய்தாது * நான்மறையின் *
சொற்பொருளாய்நின்றார் என்மெய்ப்பொருளும்கொண்டாரே. 6

உண்ணாதுறங்காது ஒலிகடலையூடறுத்து *
பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்றபேதெல்லாம் *
திண்ணார்மதிள்சூழ் திருவரங்கச்செல்வனார் *
எண்ணாதேதம்முடைய நன்மைகளேயெண்ணுவரே. 7

பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்கு * பண்டொருநாள்
மாசுடம்பில்நீர்வாரா மானமிலாப்பன்றியாம் *
தேசுடையதேவர் திருவரங்கச்செல்வனார் *
பேசியிருப்பனகள் பேர்க்கவும்பேராவே. 8

கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக்கைப்பிடிப்பான் *
திண்ணார்ந்திருந்த சிசுபாலன்தேசழிந்து *

அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக்கைப்பிடித்த *
பெண்ணாளன்பேணுமூர் பேருமரங்கமே. 9

** செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த *
மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர் *
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும்சொல் *
தம்மிடையேபொய்யானால் சாதிப்பாராரினியே? 10

தா மெழில் பொங்கு மச்சு பொல்லாக் கை யுண்ணப் பாசி கண்ணாலம் செம்மை மற்று. ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பன்னிரண்டாவது திருமொழி—மற்றிருந்தீர்கட்கு.

---

** மற்றிருந்தீர்கட்கறியலாகா மாதவனென்பதோரன்புதன்னை *
உற்றிருந்தேனுக்குரைப்பதெல்லாம் ஊமையரோடுசெவிடர்வார்த்தை *
பெற்றிருந்தாளையொழியவேபோய்ப் பேர்த்தொருதாயில்வளர்ந்தநம்பி *
மற்பொருந்தாமற்களமடைந்த மதுரைப்புரத்தென்னையுய்த்திடுமின். 1

நாணியினியோர்கருமமில்லை நாலயலாருமறிந்தொழிந்தார் *
பாணியாதென்னைமருந்துசெய்து பண்டுபண்டாக்கவுறுதிராகில் *
மாணியுருவாயுலகளந்த மாயனைக்காணில்தலைமறியும் *
ஆணையால்நீரென்னைக்காக்கவேண்டில் ஆய்ப்பாடிக்கேயென்னையுய்த்திடுமின். 2

தந்தையும்தாயுமுற்றாருநிற்கத் தனிவழிபோயினாளென்னும்சொல்லு *
வந்தபின்னைப்பழிகாப்பரிது மாயவன்வந்துருக்காட்டுகின்றான் *
கொந்தளமாக்கிப்பரக்கழித்துக் குறும்புசெய்வானோர்மகனைப்பெற்ற *
நந்தகோபாலன்கடைத்தலைக்கே நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின். 3

அங்கைத்தலத்திடையாழிகொண்டான் அவன்முகத்தன்றிவிழியேனென்று *
செங்கச்சுக்கொண்டுகண்ணாடையார்த்துச் சிறுமானிடவரைக்காணில்நாணும் *
கொங்கைத்தலமிவைநோக்கிக்காணீர் கோவிந்தனுக்கல்லால்வாயில்போகா *
இங்குத்தைவாழ்வையொழியவேபோய் எமுனைக்கரைக்கென்னையுய்த்திடுமின். 4

ஆர்க்குமென்னோயிதறியலாகாது அம்மனைமீர்துழதிப்படாதே *
கார்க்கடல்வண்ணனென்பானொருவன் கைகண்டயோகம்தடவத்தீரும் *
நீர்க்கரைநின்றகடம்பையேறிக் காளியனுச்சியில்நட்டம்பாய்ந்து *
போர்க்களமாகநிருத்தஞ்செய்த பொய்கைக்கரைக்கென்னையுய்த்திடுமின். 5

கார்த்தண்முகிலும்கருவிளையும் காயாமலரும்கமலப்பூவும் *
ஈர்த்திடுகின்றனவென்னைவந்திட்டு இருடீகேசன்பக்கல்போகேயென்று *
வேர்த்துப்பசித்துவயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது * ஈதென்று
பார்த்திருந்துநெடுநோக்குக்கொள்ளும் பத்தவிலோசனத்துய்த்திடுமின். 6

வண்ணம்திரிவும்மனங்குழைவும் மானமிலாமையும்வாய்வெளுப்பும் *
உண்ணலுறாமையுமுள்மெலிவும் ஓதநீர்வண்ணனென்பானொருவன் *

தண்ணந்துழாயென்னும்மாலைகொண்டு சூட்டத்தணியும்பிலம்பன்றன்னை *
பண்ணழியப்பலதேவன்வென்ற பாண்டிவடத்தென்னையுய்த்திடுமின். 7

கற்றினம்மேய்க்கலும்மேய்க்கப்பெற்றான் காடுவாழ்சாதியுமாகப்பெற்றான் *
பற்றியுரலிடையாப்புமுண்டான் பாவிகாளுங்களுக்கேச்சுக்கொலோ *
கற்றனபேசிவசவுணாதே காலிகளுய்யமழைதடுத்து *
கொற்றக்குடையாகவேந்திநின்ற கோவர்த்தனத்தென்னையுய்த்திடுமின். 8

கூட்டிலிருந்துகிளியெப்போதும் கோவிந்தா! கோவிந்தாவென்றழைக்கும் *
ஊட்டுக்கொடாதுசெறுப்பனாகில் உலகளந்தானென்றுயரக்கூவும் *
நாட்டில்தலைப்பழியெய்தி உங்கள்நன்மையிழந்துதலையிடாதே *
சூட்டுயர்மாடங்கள்சூழ்ந்துதோன்றும் துவராபதிக்கென்னையுய்த்திடுமின். 9

**மன்னுமதுரைதொடக்கமாக வண்துவராபதிதன்னளவும் *
தன்னைத்தமருய்த்துப்பெய்யவேண்டித் தாழ்குழலாள்துணிந்ததுணிவை *
பொன்னியல்மாடம்பொலிந்துதோன்றும் புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை
இன்னிசையால்சொன்னசெஞ்சொல்மாலை யேத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே. 10

அடிவரவு:—மற்று நாணி தந்தை அங்கை ஆர்க்கும் கார்த்தண் வண்ணம் கற்றின் கூட்டில் மன்னு கண்ணன். ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பதின்மூன்றாவது திருமொழி—கண்ணனென்னும்.

---

** கண்ணனென்னும்கருந்தெய்வம் காட்சிபழகிக்கிடப்பேனை *
புண்ணிற்புளிப்பெய்தாற்போலப் புறநின்றழகுபேசாதே *
பெண்ணின்வருத்தமறியாத பெருமானரையில்பீதக
வண்ணவாடைகொண்டு - * என்னைவாட்டம்தணியவீசீரே.

பாலாலிலையில்துயில்கொண்ட பரமன்வலைப்பட்டிருந்தேனை *
வேலால்துன்னம்பெய்தாற்போல் வேண்டிற்றெல்லாம்பேசாதே *
கோலால்நிரைமேய்த்தாயனாய்க் குடந்தைக்கிடந்தகுடமாடி *
நீலார்தண்ணந்துழாய்கொண்டு என்னெறிமென்குழல்மேல்சூட்டீரே. 2

கஞ்சைக்காய்ந்தகருவில்லி கடைக்கணென்னும்சிறைக்கோலால் *
நெஞ்சூடுருவவேவுண்டு நிலையும்தளர்ந்துநைவேனை *
அஞ்சேலென்னானவனொருவன் அவன்மார்வணிந்தவனமாலை *
வஞ்சியாதேதருமாகில் மார்வில்கொணர்ந்துபுரட்டீரே. 3

ஆரேயுலகத்தாற்றுவார் ஆயர்பாடிகவர்ந்துண்ணும் *
காரேறுழக்கவுழக்குண்டு தளர்ந்தும்முறிந்தும்கிடப்பேனை *
ஆராவமுதமனையான்றன் அமுதவாயிலூறிய *
நீர்தான்கொணர்ந்துபுலராமே பருக்கியிளைப்பைநீக்கீரே. 4

அழிலும்தொழிலுமுருக்காட்டான் அஞ்சேலென்னானவனொருவன் *
தழுவிமுழுசிப்புகுந்தென்னைச் சுற்றிச்சுழன்றுபோகானால் *
தழையின்பொழில்வாய்நிரைப்பின்னே நெடுமாலூதிவருகின்ற *
குழலின்துளைவாய்நீர்கொண்டு குளிரமுகத்துத்தடவீரே. 5

நடையொன்றில்லாவுலகத்து நந்தகோபன்மகனென்னும் *
கொடியகடியதிருமாலால் குளப்புக்கூறுகொளப்பட்டு *
புடையும்பெயரகில்லேன்நான் போட்கன்மிதித்தவடிப்பாட்டில் *
பொடித்தான்கொணர்ந்துபூசீர்கள் போகாவுயிரென்னுடம்பையே. 6

வெற்றிக்கருளக்கொடியான்றன் மீமீதாடாவுலகத்து *
வெற்றவெறிதேபெற்றதாய் வேம்பேயாகவளர்த்தாளே *
குற்றமற்றமுலைதன்னைக் குமரன்கோலப்பணைத்தோளோடு *
அற்றகுற்றமவைதீர அணையவமுக்கிக்கட்டீரே. 7

உள்ளேயுருகிநைவேனை உளளோவில்ளோவென்னாத *
கொள்ளைகொள்ளிக்குறும்பனைக் கோவர்த்தனனைக்கண்டக்கால் *
கொள்ளும்பயனொன்றில்லாத கொங்கைதன்னைக்கிழங்கோடும் *
அள்ளிப்பறித்திட்டவன்மார்விலெறிந்து என்னழலைத்தீர்வேனே. 8

கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர்குற்றேவல் *
இம்மைப்பிறவிசெய்யாதே யினிப்போய்ச்செய்யும்தவந்தானென் *
செம்மையுடையதிருமார்வில் சேர்த்தானேலுமொருநான்று *
மெய்ம்மைசொல்லிமுகம்நோக்கி விடைதான்தருமேல்மிகநன்றே. 9

** அல்லல்விளைத்தபெருமானை ஆயர்பாடிக்கணிவிளக்கை *
வில்லிபுதுவைநகர்நம்பி விட்டுசித்தன்வியன்கோதை *
வில்லைத்தொலைத்தபுருவத்தாள் வேட்கையுற்றுமிகவிரும்பும் *
சொல்லைத்துதிக்கவல்லார்கள் துன்பக்கடலுள்துவளாரே. 10

கண்ணன் பால் கஞ்சை ஆரே அழில் நடை வெற்றி உள்ளே கொம்மை அல்லல்
ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பதினான்காவதுதிருமொழி—பட்டிமேய்ந்து.

---

** பட்டிமேய்ந்தோர்காரேறு பல்தேவற்கோர்கீழ்க்கன்றாய் *
இட்டீறிட்டுவிளையாடி யிங்கேபோதக்கண்டீரே? *
இட்டமானபசுக்களை யினிதுமறித்துநீரூட்டி *
விட்டுக்கொண்டுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. 1

அனுங்கவென்னைப்பிரிவுசெய்து ஆயர்பாடிகவர்ந்துண்ணும் *
குணுங்குநாறிக்குட்டேற்றைக் கோவர்த்தனனைக்கண்டீரே? *
கணங்களோடுமின்மேகம் கலந்தாற்போல்வனமாலை *
மினுங்கநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. 2

மாலாய்ப்பிறந்தநம்பியை மாலேசெய்யும்மணாளனை *
ஏலாப்பொய்களுரைப்பானை யிங்கேபோதக்கண்டீரே ?*
மேலால்பரந்தவெயில்காப்பான் வினதைசிறுவன்சிறகென்னும் *
மேலாப்பின்கீழ்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. 3

கார்த்தண்கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்து * என்னை
ஈர்த்துக்கொண்டுவிளையாடும் ஈசன்றன்னைக்கண்டீரே ? *
போர்த்தமுத்தின்குப்பாயப் புகர்மால்யானைக்கன்றேபோல் *
வேர்த்துநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. 4

**மாதவனென்மணியினை வலையில்பிழைத்தபன்றிபோல் *
ஏதுமொன்றுங்கொளத்தாரா ஈசன்றன்னைக்கண்டீரே ? *
பீதகவாடையுடைதாழப் பெருங்கார்மேகக்கன்றேபோல் *
வீதியாரவருவானை விருந்தாவனத்தேகண்டோமே. 5

தருமமறியாக்குறும்பனைத் தன்கைச்சார்ங்கமதுவேபோல் *
புருவவட்டமழகிய பொருத்தமிலியைக்கண்டீரே ?*
உருவுகரிதாய்முகம்செய்தாய் உதயபருப்பதத்தின்மேல் *
விரியுங்கதிரேபோல்வானை விருந்தாவனத்தேகண்டோமே. 6

பொருத்தமுடையநம்பியைப் புறம்போலுள்ளுங்கரியானை *
கருத்தைப்பிழைத்துநின்ற அக்கருமாமுகிலைக்கண்டீரே ? *
அருத்தித்தாராகணங்களால் ஆரப்பெருகுவானம்போல் *
விருத்தம்பெரிதாய்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. 7

வெளியசங்கொன்றுடையானைப் பீதகவாடையுடையானை *
அளிநன்குடையதிருமாலை ஆழியானைக்கண்டீரே ? *
களிவண்டெங்குங்கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள்தடந்தோள்மேல் *
மிளிரநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. 8

**நாட்டைப்படையென்றயன்முதலாத்தந்த நளிர்மாமலருந்தி *
வீட்டைப்பண்ணிவிளையாடும் விமலன்றன்னைக்கண்டீரே *
காட்டைநாடித்தேனுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய *
வேட்டையாடிவருவானை விருந்தாவனத்தேகண்டோமே. 9

** பருந்தாள்களிற்றுக்கருள்செய்த பரமன்றன்னைப்பாரின்மேல் *
விருந்தாவனத்தேகண்டமை விட்டுசித்தன்கோதைசொல் *
மருந்தாமென்றுதம்மனத்தே வைத்துக்கொண்டுவாழ்வார்கள் *
பெருந்தாளுடையபிரானடிக்கீழ்ப் பிரியாதென்றுமிருப்பாரே. 10

அடிவரவு—பட்டி அனுங்க மால் கார்த்தண் மாதவன் தருமம் பொருத்தம் வெளிய நாட்டைப் பருந்தாள் இருள். ஆண்டாள் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நாய்ச்சியார் திருமொழி முற்றிற்று.

ஆக பதிகங்கள் பதினொன்றுக்கு—பாட்டுக்கள் 143

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

குலசேகரப்பெருமாளருளிச்செய்த

# பெருமாள் திருமொழி

## தனியன்கள்.

இன்னமுதமூட்டுகேனிங்கேவா பைங்கிளியே! தென்னரங்கம்பாடவல்லசீர்ப்பெருமாள் -
சிலைசேர்நுதலியர்வேள்சேரலர்கோனெங்கள் குலசேகரனென்றேகூறு. [பொன்னஞ்

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்றவர்களுக்கே *
வாரங்கொடுகுடப்பாம்பிற்கையிட்டவன் — மாற்றலரை *
வீரங்கெடுத்தசெங்கோல்கொல்லிகாவலன் வில்லவர்கோன் *
சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே.

## முதல் திருமொழி — இருளிரிய.

** இருளிரியச்சுடர்மணிகளிமைக்கும்நெற்றி இனத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த *
அரவரசப்பெருஞ்சோதியனந்தனென்னும் அணிவிளங்குமுயர்வெள்ளையணையைமேவி *
திருவரங்கப்பெருநகருள்தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும் *
கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளென்றுகொலோகளிக்கு
நாளே. 1

** வாயோரீரைஞ்ஞூறுதுதங்களார்ந்த வளையுடம்பினழல்நாகமுமிழ்ந்தசெந்தீ *
வீயாதமலர்ச்சென்னிவிதானமேபோல் மேன்மேலுமிகவெங்கும்பரந்ததன்கீழ் *
காயாம்பூமலர்ப்பிறங்கலன்னமாலைக் கடியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மாயோனைமணத்தூணேபற்றிநின்று என்வாயாரவென்றுகொலோவாழ்த்துநாளே. 2

எம்மாண்பினயன்நான்குநாவினாலுமெடுத்தேத்தி ஈரிரண்டுமுகமுங்கொண்டு *
எம்மாடுமெழிற்கண்களெட்டினோடும் தொழுதேத்தியினிதிறைஞ்சநின்றசெம்பொன் *
அம்மான்றன்மலர்க்கமலக்கொப்பூழ்தோன்ற அணியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
அம்மான்றனடியிணைக்கீழலர்களிட்டு அங்கடியவரோடென்றுகொலோவணுகுநாளே. 3

மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலைவண்ணனையென்கண்ணனைவன்குன்றமேந்தி *
ஆவினையன்றுய்யக்கொண்டவாயரேற்றை அமரர்கள்தந்தலைவனையந்தமிழினின்பப்
பாவினை * அவ்வடமொழியைப்பற்றற்றார்கள் பயிலரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
கோவினைநாவுறவழுத்தியென்றன்கைகள் கொய்ம்மலர்தூயென்றுகொலோகூப்புநாளே. 4

இணையில்லாவின்னிசையாழ்கெழுமி இன்பத்தும்புருவுநாரதனுமிறைஞ்சியேத்த *
துணையில்லாத்தொன்மறைநூல்தோத்திரத்தால் தொன்மலர்க்கணயன்வணங்கியோவாதேத்த
மணிமாடமாளிகைகள்மல்குசெல்வ மதிளரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மணிவண்ணனம்மானைக்கண்டுகொண்டு என்மலர்ச்சென்னியென்றுகொலோவணங்குநாளே;

அளிமலர்மேலயனரனிந்திரனோடு ஏனையமரர்கள்தங்குழுவுமரம்பையரும்மற்றும் *
தெளிமதிசேர்முனிவர்கள்தம்குழுவுமுந்தித் திசைதிசையில்மலர்தூவிச்சென்றுசேரும்*
களிமலர்சேர்பொழிலரங்கத்துரகமேறிக் கண்வளரும்கடல்வண்ணர்கமலக்கண்ணும் *
ஒளிமதிசேர்திருமுகமும்கண்டுகொண்டு என்னுள்ளமிகவென்றுகொலோவுருகுநாளே. 6

மறந்திகழும்மனமொழித்துவஞ்சமாற்றி வன்புலன்களடக்கியிடர்ப்பாரத்துன்பம்
துறந்து* இருமுப்பொழுதேத்தியெல்லையில்லாத்தொன்னெறிக்கண் நிலைநின்றதொண்டரான*
அறந்திகழும்மனத்தவர்தம்கதியைப்பொன்னி அணியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
நிறந்திகழும்மாயோனைக்கண்டென்கண்கள் நீர்மல்கவென்றுகொலோநிற்குநாளே. 7

கோலார்ந்தநெடுஞ்சார்ங்கம்கூனற்சங்கம் கொலையாழிகொடுந்தண்டுகொற்றவொள்வாள் *
காலார்ந்தகதிக்கருடனென்னும் வென்றிக்கடும்பறவையிவையனைத்தும்புறஞ்சூழ்காப்ப *
சேலார்ந்தநெடுங்கழனிசோலைசூழ்ந்த திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மாலோனைக்கண்டின்பக்கலவியெய்தி வல்வினையேனென்றுகெலோவாழுநாளே. 8

தூராதமனக்காதல்தொண்டர்தங்கள்குழாங்குழுமித் திருப்புகழ்கள்பலவும்பாடி *
ஆராதமனக்களிப்போடழுதகண்ணீர்மழைசோர நினைந்துருகியேத்தி * நாளும்
சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டும் திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
போராழியம்மானைக்கண்டுதுள்ளிப் பூதலத்திலென்றுகொலோபுரளுநாளே. 9

** வன்பெருவானகமுய்யவமரருய்யமண்ணுய்ய மண்ணுலகில்மனிசருய்ய *
துன்பமிகுதுயரகலவயர்வொன்றில்லாச்சுகம்வளர அகமகிழுந்தொண்டர்வாழ *
அன்பொடுதென்திசைநோக்கிப்பள்ளிகொள்ளும் அணியரங்கன்திருமுற்றத்தடியார்தங்கள் *
இன்பமிகுபெருங்குழுவுகண்டு ,யானுமிசைந்துடனேயென்றுகொலோவிருக்குநாளே. 1

** திடர்விளங்குகரைப்பொன்னிநடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
கடல்விளங்குகருமேனியம்மான்தன்னைக் கண்ணாரக்கண்டுகக்குங்காதல்தன்னால் * [செய்த*
குடைவிளங்குவிறல்தானைக்கொற்றவொள்வாள்கூடலர்கோன்கொடைக்குலசேகரன்சொற்
நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. 11

அடிவரவு:—இருள் வாயெம்மாண் மாவினை யிணை அளி மறந் கோல் தூரா வன் திடர் தேட்டரு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## இரண்டாந்திருமொழி—தேட்டருந்திறல்.

** தேட்டருந்திறல்தேனினைத் தென்னரங்கனை * திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்வனை வாழ்த்திமால்கொள்சிந்தையராய் *
ஆட்டமேவியலர்ந்தழைத்து அயர்வெய்தும்மெய்யடியார்கள்தம் *
ஈட்டங்கண்டிடக்கூடுமேல் அதுகாணும்கண்பயனாவதே. 1

தோடுலாமலர்மங்கைதோளிணைதோய்ந்ததும் சுடர்வாளியால் *
நீடுமாமரம் செற்றதும் நிரைமேய்த்ததுமிவையேநினைந்து *
ஆடிப்பாடியரங்கவோவென்றழைக்கும் தொண்டரடிப்பொடி
யாடநாம்பெறில் * கங்கைநீர்குடைந்தாடும்வேட்கை என்னாவதே. 2

ஏறடர்த்ததுமேனமாய்நிலங்கீண்டதும் முன்னிராமனாய் *
மாறடர்த்ததும்மண்ணளந்ததும் சொல்லிப்பாடி * வண்பொன்னிப்பே
ராறுபோல்வருங்கண்ணநீர்கொண்டு அரங்கன்கோயில்திருமுற்றம் *
சேறுசெய்தொண்டர்சேவடிச் செழுஞ்சேறென்சென்னிக்கணிவனே. 3

தோய்த்ததண்தயிர்வெண்ணெய்பாலுடனுண்டலும் உடன்றாய்ச்சிகண்டு *
ஆர்த்ததோளுடையெம்பிரான் என்னரங்கனுக்கடியார்களாய் *
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்து மெய்தழும்பத்தொழு
தேத்தி * இன்புறும்தொண்டர்சேவடி யேத்திவாழ்த்துமென்னெஞ்சமே. 4

பொய்சிலைக்குரலேற்றெருத்தமிறுத்துப் போரரவீர்த்தகோன் *
செய்சிலைச்சுடர்சூழொளித் திண்ணமாமதிள்தென்னரங்கனாம் *
மெய்சிலைக்கருமேகமொன்று தம்நெஞ்சில்நின்று திகழப்போய் *
மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந்து என்மனம்மெய்சிலிர்க்குமே. 5

ஆதியந்தமனந்தமற்புதமான வானவர்தம்பிரான் *
பாதமாமலர்சூடும்பத்தியிலாத பாவிகளுய்ந்திட *
தீதில்நன்னெறிகாட்டி யெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே *
காதல்செய்தொண்டர்க்கெப்பிறப்பிலும் காதல்செய்யுமென்னெஞ்சமே. 6

காரினம்புரைமேனிநற்கதிர் முத்தவெண்ணகைச்செய்யவாய் *
ஆரமார்வனரங்கனென்னும் அரும்பெருஞ்சுடரொன்றினை *
சேரும்நெஞ்சினராகிச் சேர்ந்துகசிந்திழிந்தகண்ணீர்களால் *
வாரநிற்பவர்தாளிணைக்கு ஒருவாரமாகுமென்னெஞ்சமே. 7

மாலையுற்றகடல்கிடந்தவன் வண்டுகிண்டுநறுந்துழாய் *
மாலையுற்றவரைப்பெருந்திருமார்வனை மலர்க்கண்ணனை *
மாலையுற்றெழுந்தாடிப்பாடித் திரிந்தரங்கனெம்மானுக்கே *
மாலையுற்றிடும்தொண்டர்வாழ்வுக்கு மாலையுற்றதென்னெஞ்சமே. 8

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்ப ஏங்கியிளைத்துநின்று *
எய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்து ஆடிப்பாடியிறைஞ்சி * என்
அத்தனச்சனரங்கனுக்கடியார்களாகி அவனுக்கே
பித்தராமவர் * பித்தரல்லர்கள் மற்றையார்முற்றும்பித்தரே. 9

** அல்லிமாமலர்மங்கைநாதன் அரங்கன்மெய்யடியார்கள்தம் *
எல்லையிலடிமைத்திறத்தினில் என்றுமேவுமனத்தனாம் *
கொல்லிகாவலன்கூடல்நாயகன் கோழிக்கோன்குலசேகரன் *
சொல்லினின்தமிழ்மாலைவல்லவர் தொண்டர்தொண்டர்களாவரே. 10

தேட்டு தோடேறு தோய்த்த பொய் ஆதி காரினம் மாலை மொய்த்து அல்லி மெய்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றாந்திருமொழி—மெய்யில்வாழ்க்கை.

**மெய்யில்வாழ்க்கையை மெய்யெனக்கொள்ளும்* இவ்வையந்தன்னொடும் கூடுவதில்லையான்*
ஐயனே! அரங்காவென்றழைக்கின்றேன்* மையல்கொண்டொழிந்தேன் என்றன்மாலுக்கே 1

நூலினேரிடையார் திறத்தேநிற்கும் * ஞாலந்தன்னொடும் கூடுவதில்லையான் *
ஆலியாவழையா அரங்காவென்று * மாலெழுந்தொழிந்தேன் என்றன்மாலுக்கே. 2

மாரனார் வரிவெஞ்சிலைக்காட்செய்யும் * பாரினாரொடும் கூடுவதில்லையான் *
ஆரமார்வன் அரங்கனனந்தன் * நல் நாரணன் நரகாந்தகன்பித்தனே. 3

உண்டியேஉடையே உகந்தோடும் * இம்மண்டலத்தொடுங் கூடுவதில்லையான் *
அண்டவாணன் அரங்கன்வன்பேய்முலை * உண்டவாயன்றன் உன்மத்தன்காண்மினே. 4

தீதில்நன்னெறிநிற்க அல்லாதுசெய் * நீதியாரொடும் கூடுவதில்லையான் *
ஆதியாயன் அரங்கனந்தாமரை * பேதைமாமணவாளன்றன் பித்தனே. 5

எம்பரத்தர் அல்லாரொடுங்கூடலன் * உம்பர்வாழ்வை ஒன்றாகக்கருதலன் *
தம்பிரானமரர்க்கு அரங்கநகர் * எம்பிரானுக்கு எழுமையும்பித்தனே. 6

எத்திறத்திலும் யாரொடும்கூடும் * அச்சித்தந்தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால் *
அத்தனே! அரங்காவென்றழைக்கின்றேன் * பித்தனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. 7

பேயரேயெனக்கியாவரும் யானுமோர் பேயனே * எவர்க்குமிதுபேசியென் ?
ஆயனே! அரங்காவென்றழைக்கின்றேன் * பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. 8

* * அங்கையாழி அரங்கனடியிணை * தங்குசிந்தைத் தனிப்பெரும்பித்தனாம் *
கொங்கர்கோன் குலசேகரன்சொன்னசொல் * இங்குவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. 9

அடிவரவு:—மெய் நூல் மாரன் உண்டி தீதில் எம்பரத்தர் எத்திறம் பேயர் அங்கை ஊன்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காந்திருமொழி—ஊனேறுசெல்வம்.

* * ஊனேறுசெல்வத்து உடற்பிறவியான்வேண்டேன் *
ஆனேறேழ்வென்றான் அடிமைத்திறமல்லால் *
கூனேறுசங்கமிடத்தான்றன் வேங்கடத்து *
கோனேரிவாழுங் குருகாய்ப்பிறப்பேனே. 1

ஆனாதசெல்வத்து அரம்பையர்கள்தற்சூழ*
வானாளுஞ்செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன் *
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில் *
மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே. 2

பின்னிட்டசடையானும் பிரமனுமிந்திரனும் *
துன்னிட்டுப்புகலரிய வைகுந்தநீள்வாசல் *
மின்வட்டச்சுடராழி வேங்கடக்கோன்தானுமிழும் *
பொன்வட்டில்பிடித்துடனே புகப் பெறுவேனாவேனே. 3

ஒண்பவளவேலை உலவுதண்பாற்கடலுள் *
கண்துயிலும்மாயோன் கழலிணைகள்காண்பதற்கு *
பண்பகரும்வண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்து *
செண்பகமாய்நிற்கும் திருவுடையேனாவேனே. 4

கம்பமதயானைக் கழுத்தகத்தின்மேலிருந்து *
இன்பமரும்செல்வமும் இவ்வரசும்யான்வேண்டேன் *
எம்பெருமானீசன் எழில்வேங்கடமலைமேல் *
தம்பகமாய்நிற்கும் தவமுடையேனாவேனே. 5

மின்னனையநுண்ணிடையார் உருப்பசியும்மேனகையும் *
அன்னவர்தம்பாடலொடும் ஆடலவையாதரியேன் *
தென்னவெனவண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்துள் *
அன்னனையபொற்குவடாம் அருந்தவத்தனாவேனே. 6

வானாளும்மாமதிபோல் வெண்குடைக்கீழ் * மன்னவர்தம்
கோனாகிவீற்றிருந்து கொண்டாடும்செல்வறியேன் *
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல் *
கானாறாய்ப்பாயும் கருத்துடையேனாவேனே. 7

பிறையேறுசடையானும் பிரமனுமிந்திரனும் *
முறையாயபெருவேள்விக் குறைமுடிப்பான்மறையானான் *
வெறியார்தண்சோலைத் திருவேங்கடமலைமேல் *
நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனாவேனே. 8

** செடியாயவல்வினைகள் தீர்க்கும்திருமாலே *
நெடியானேவேங்கடவா நின்கோயிலின்வாசல் *
அடியாரும்வானவரும் அரம்பையருங்கிடந்தியங்கும் *
படியாய்க்கிடந்து உன்பவளவாய்காண்பேனே. 9

உம்பருலகாண்டு ஒருகுடைக்கீழுருப்பசிதன் *
அம்பொற்கலையல்குல் பெற்றாலுமாதரியேன் *
செம்பவளவாயான் திருவேங்கடமென்னும் *
எம்பெருமான்பொன்மலைமேல் ஏதேனுமாவேனே. 10

** மன்னியதண்சாரல் வடவேங்கடத்தான்தன் *
பொன்னியலுஞ்சேவடிகள் காண்பான்புரிந்திறைஞ்சி *
கொன்னவிலுங்கூர்வேல் குலசேகரன்சொன்ன *
பன்னியநூல்தமிழ்வல்லார் பாங்காயபத்தர்களே. 11

ஊன் ஆனாத பின் ஒண் கம்பம் மின் வான் பிறை செடி உம்பர் மன்னிய தரு.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாந்திருமொழி—தருதுயரம்தடாயேல்

---

தருதுயரம்தடாயேல் உன்சரணல்லால்சரணில்லை *
விரைகுழுவும்மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே!*
அரிசினத்தாலீன்றதாய் அகற்றிடினும் * மற்றவள்தன்
அருள்நினைந்தேயழுங்குழவி அதுவேபோன்றிருந்தேனே. 1

கண்டாரிகழ்வனவே காதலன்றான்செய்திடினும் *
கொண்டானையல்லால் அறியாக்குலமகள்போல் *
விண்டோய்மதிள்புடைசூழ் வித்துவக்கோட்டம்மா! * நீ
கொண்டாளாயாகிலும் உன்குரைகழலேகூறுவனே. 2

மீன்நோக்கும்நீள்வயல்சூழ் வித்துவக்கோட்டம்மா * என்
பால்நோக்காயாகிலும் உன்பற்றல்லால்பற்றிலேன் *
தான்நோக்காதெத்துயரஞ் செய்திடினும் * தார்வேந்தன்
கோல்நோக்கிவாழுங் குடிபோன்றிருந்தேனே.

வாளாலறுத்துச்சுடினும் மருத்துவன்பால் *
மாளாதகாதல் நோயாளன்போல்மாயத்தால் *
மீளாத்துயர்தரினும் வித்துவக்கோட்டம்மா ! * நீ
ஆளாவுனதருளே பார்ப்பனடியேனே. 4

வெங்கட்டிண்களிறடர்த்தாய் வித்துவக்கோட்டம்மானே!*
எங்குப்போயுய்கேன் உன்னிணையடியேஅடையலல்லால் *
எங்கும்போய்க்கரைகாணாது எறிகடல்வாய்மீண்டேயும் *
வங்கத்தின்கூம்பேறும் மாப்பறவைபோன்றேனே. 5

செந்தழலேவந்து அழலைச்செய்திடினும் * செங்கமலம்
அந்தரம்சேர் வெங்கதிரோற்கல்லால்அலராவால் *
வெந்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டப்மா ! * உன்
அந்தமில்சீர்க்கல்லால் அகம்குழையமாட்டேனே. 6

எத்தனையும்வான்வறந்தகாலத்தும் பைங்கூழ்கள் *
மைத்தெழுந்தமாமுகிலே பார்த்திருக்குமற்றவைபோல் *
மெய்த்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா ! * என்
சித்தமிகவுன்பாலே வைப்பனடியேனே. 7

தொக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடித்தொடுகடலே *
புக்கன்றிப்புறம்நிற்க மாட்டாதமற்றவைபோல் *
மிக்கிலங்குமுகில்நிறத்தாய் வித்துவக்கோட்டம்மா ! * உன்
புக்கிலங்குசீரல்லால் புக்கிலன்காண்புண்ணியனே. 8

நின்னையேதான்வேண்டி நீள்செல்வம்வேண்டாதான்
தன்னையே * தான்வேண்டும்செல்வம்போல், மாயத்தால் *
மின்னையேசேர்திகிரி வித்துவக்கோட்டம்மா ! *
நின்னையேதான்வேண்டி நிற்பனடியேனே. 9

வித்துவக்கோட்டம்மா நீவேண்டாயேயாடினும் *
மற்றாரும்பற்றிலேனென்று அவனைத்தாள்நயந்து *
கொற்றவேல்தானைக் குலசேகரன்சொன்ன *
நற்றமிழ்பத்தும்வல்லார் நண்ணார்நரகமே 10

தருக் கண்டார் மீனுக்கு வாளால் வெங்கட்டிண் செந்தழல் எத்தனை தொக்கு நின்னை வித்து ஏர். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறாந்திருமொழி—ஏர்மலர்ப்பூங்குழல்.

---

** ஏர்மலர்ப்பூங்குழலாயர்மாதர் எனைப்பலருள்ளவிவ்வூரில் * உன்றன்
மார்வுதழுவுதற்காசையின்மை அறிந்தறிந்தேயுன்றன் பொய்யைக்கேட்டு *
கூர்மழைபோல்பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கியமுனையாற்றில் *
வார்மணற்குன்றில்புலரநின்றேன் வாசுதேவாவுன்வரவுபார்த்தே. 1

கெண்டையொண்கண்மடவாளொருத்தி கீழையகத்துத்தயிர்கடையக்
கண்டு * ஒல்லைநானும்கடைவனென்று கள்ளவிழியைவிழித்துப்புக்கு *
வண்டமர்பூங்குழல்தாழ்ந்துலாவ வாண்முகம்வேர்ப்பச்செவ்வாய்துடிப்ப *
தண்டயிர்நீகடைந்திட்டவண்ணம் தாமோதராமெய்யறிவன்நானே. 2

கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித்தாங்கேயொருத்திதன்பால் *
மருவிமனம்வைத்துமற்றொருத்திக்குரைத்து ஒருபேதைக்குப்பொய்குறித்து *
புரிகுழல்மங்கையொருத்திதன்னைப்புணர்தி அவளுக்கும்மெய்யனல்லை *
மருதிறுத்தாயுன்வளர்த்தியோடே வளர்கின்றதாலுன்றன்மாயைதானே. 3

தாய்முலைப்பாலிலமுதிருக்கத் தவழ்ந்துதளர்நடையிட்டுச்சென்று *
பேய்முலைவாய்வைத்துநஞ்சையுண்டு பித்தனென்றேபிறரேசநின்றாய் *
ஆய்மிகுகாதலோடுயானிருப்ப யான்விடவந்தவென்தூதியோடே *
நீமிகுபோகத்தைநன்குகந்தாய் அதுவுமுன்கோரம்புக்கேற்குமன்றே. 4

மின்னொத்தநுண்ணிடையாளைக்கொண்டு வீங்கிருள்வாயென்றன்வீதியூடே *
பொன்னொத்தவாடைகுக்கூடவிட்டுப் போகின்றபோதுநான்கண்டுநின்றேன் *
கண்ணுற்றவளைநீகண்ணாலிட்டுக் கைவிளிக்கின்றதும்கண்டேநின்றேன் *
என்னுக்கவளைவிட்டிங்குவந்தாய் இன்னமங்கேநடநம்பிநீயே. 5

மற்பொருதோளுடைவாசுதேவா வல்வினையேன்துயில்கொண்டவாறே *
இற்றையிரவிடையேமத்தென்னை இன்னணைமேலிட்டகன்றுநீபோய் *
அற்றையிரவுமோர்பிற்றைநாளும் அரிவையரோடுமணைந்துவந்தாய் *
எற்றுக்குநீயென்மருங்கில்வந்தாய் எம்பெருமான்நீயெழுந்தருளே. 6

பையரவின்னணைப்பள்ளியினாய் பண்டையோமல்லோம்நாம் * நீயுகக்கும்
மையரியொண்கண்ணினாருமல்லோம் வைகியெம்சேரிவரவொழிநீ *
செய்யவுடையுந்திருமுகமும் செங்கனிவாயுங்குழலுங்கண்டு *
பொய்யொருநாள்பட்டதேயமையும் புள்ளுவம்பேசாதேபோகுநம்பீ ! 7

என்னைவருகவெனக்குறித்திட்டு இனமலர்முல்லையின்பந்தர்நீழல் *
மன்னியவளைப்புணரப்புக்கு மற்றென்னைக்கண்டுஉழறாநெகிழ்ந்தாய்*
பொன்னிறவாடையைக்கையில்தாங்கிப் பொய்யச்சம்காட்டிநீபோதியேலும் *
இன்னமென்கையகத்தீங்கொருநாள் வருதியேலென்சினம்தீர்வன்நானே. 8

மங்கலநல்வனமாலைமார்விலிலங்க மயில்தழைப்பீலிசூடி *
பொங்கிளவாடையரையில்சாத்திப் பூங்கொத்துக்காதில்புணரப்பெய்து *
கொங்குநறுங்குழலார்களோடு குழைந்துகுழலினிதூதிவந்தாய் *
எங்களுக்கேயொருநாள்வந்தூத உன்குழலின்னிசைபோதராதே. 9

அல்லிமலர்த்திருமங்கைகேள்வன் தன்னை நயந்திளவாய்ச்சிமார்கள் *
எல்லிப்பொழுதினிலேமத்தூடி எள்கியுரைத்தவுரையதனை *
கொல்லிநகர்க்கிறைகூடல்கோமான் குலசேகரனின்னிசையில்மேவி *
சொல்லியவின்தமிழ்மாலைபத்தும் சொல்லவல்லார்க்கில்லைதுன்பந்தானே. 10

அடிவரவு—ஏர் கெண்டை கரு தாய் மின் மற்பொரு பையரவின் என்னை மங்கல அல்லி
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஏழாந்திருமொழி—ஆலை நீள்கரும்பு.

** ஆலைநீள்கரும்பன்னவன்தாலோ அம்புயத்தடங்கண்ணினன்தாலோ *
வேலைநீர்நிறத்தன்னவன்தாலோ வேழப்போதகமன்னவன்தாலோ *
ஏலவார்குழலென்மகன்தாலோ என்றென்றுன்னையென்வாயிடைநிறைய *
தாலொலித்திடும்திருவினையில்லாத் தாயரில்கடையாயினதாயே. 1

வடிக்கொளஞ்சனமெழுதுசெம்மலர்க்கண் மருவிமேலினிதொன்றினைநோக்கி *
முடக்கிச்சேவடிமலர்ச்சிறுகருந்தாள் பொலியுநீர்முகிற்குழவியேபோல *
அடக்கியாரச்செஞ்சிறுவிரலனைத்தும் அங்கையோடணைந்தானையிற்கிடந்த *
கிடக்கைகண்டிடப்பெற்றிலேனந்தோ கேசவாகெடுவேன்கெடுவேனே.

முந்தைநன்முறையன்புடைமகளிர் முறைமுறைதந்தம்குறங்கிடையிருத்தி *
எந்தையேயென்தன்குலப்பெருஞ்சுடரே எழுமுகில்கணத்தெழில்கவரேறே! *
உந்தையாவனென்றுரைப்பநின்செங்கேழ்விரலினும் கடைக்கண்ணினும்காட்ட *
நந்தன்பெற்றனன்நல்வினையில்லா நங்கள்கோன்வசுதேவன்பெற்றிலனே. 3

களிநிலாவெழில்மதிபுரைமுகமும் கண்ணனேதிண்கைமார்வும்திண்டோளும் *
தளிர்மலர்க்கருங்குழல்பிறையதுவும் தடங்கொள்தாமரைக்கண்களும்பொலிந்த *
இளமையின்பத்தையின்றென்தன்கண்ணால் பருகுவேற்கிவள்தாயெனநினைந்த *
அளவில்பிள்ளைமையின்பத்தையிழந்த பாவியேனெனதாவிநில்லாதே. 4

மருவுநின்திருநெற்றியில்சுட்டியசைதர மணிவாயிடைமுத்தம்
தருதலும் * உன்றன்தாதையைப்போலும்வடிவுகண்டுகொண்டு உள்ளமுள்குளிர *
விரலைச்செஞ்சிறுவாயிடைச்சேர்த்து வெகுளியாய்நின்றுரைக்குமவ்வுரையும் *
திருவிலேனொன்றும்பெற்றிலேன் எல்லாம்தெய்வநங்கையசோதைபெற்றாளே.

தண்ணந்தாமரைக்கண்ணனே கண்ணா தவழ்ந்தெழுந்துதளர்ந்ததோர்நடையால் *
மண்ணில்செம்பொடியாடிவந்து என்தன் மார்வில்மன்னிடப்பெற்றிலேனந்தோ ! *
வண்ணச்செஞ்சிறுகைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்டவடிசிலின்மிச்சல் *
உண்ணப்பெற்றிலேன் ஓகொடுவினையேன் என்னையென்செய்யப்பெற்றதெம்மோயே. 6

குழகனேயென்தன்கோமளப்பிள்ளாய் கோவிந்தாவென்குடங்கையில்மன்னி *
ஒழுகுபேரெழிலிளஞ்சிறுதளிர்போல் ஒருகையாலொருமுலைமுகம்நெருடா *
மழலைமென்னகையிடையிடையருளா வாயிலேமுலையிருக்கவென்முகத்தே *
எழில்கொள்நின்திருக்கண்ணிணைநோக்கந்தன்னையும் இழந்தேனிழந்தேனே. 7

முழுதும்வெண்ணெயளைந்துதொட்டுண்ணும் முகிழிளஞ்சிறுத்தாமரைக்கையும் *
எழில்கொள்தாம்புகொண்டடிப்பதற்கெள்குநிலையும் வெண்தயிர்தோய்ந்தசெவ்வாயும் *
அழுகையுமஞ்சிநோக்குமந்நோக்கும் அணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும் *
தொழுகையுமிவைகண்டவசோதை தொல்லையின்பத்திறுதிகண்டாளே: 8

குன்றினால்குடைகவித்ததும் கோலக்குரவைகோத்ததும்குடமாட்டும் *
கன்றினால்விளவெறிந்ததும் காலால்காளியன்தலைமிதித்ததும்முதலா *
வென்றிசேர்பிள்ளைநல்விளையாட்டமனைத்திலும் அங்கென்னுள்ளமுள்குளிர *
ஒன்றுங்கண்டிடப்பெற்றிலேனடியேன் காணுமாறினியுண்டெனிலருளே. 9

வஞ்சமேவியநெஞ்சுடைப்பேய்ச்சி வறண்டுநார்நரம்பெழக்கரிந்துக்க *
நஞ்சமார்தருசுழிமுலையந்தோ சுவைத்துநீயருள்செய்துவளர்ந்தாய் *
கஞ்சன்நாள்கவர்கருமுகிலெந்தாய் கடைப்பட்டேன்வெறிதேமுலைசுமந்து *
தஞ்சமேலொன்றிலேனுய்ந்திருந்தேன் தக்கதேநல்லதாயைப்பெற்றாயே. 10

** மல்லைமாநகர்க்கிறையவன்தன்னை வான்செலுத்திவந்தீங்கணைமாயத்து *
எல்லையில்பிள்ளைசெய்வனகாணாத் தெய்வத்தேவகிபுலம்பியபுலம்பல் *
கொல்லிகாவலன்மாலடிமுடிமேல் கோலமாம்குலசேகரன்சொன்ன *
நல்லிசைத்தமிழ்மாலைவல்லார்கள் நண்ணுவாரொல்லைநாரணனுலகே. 11

அடிவரவு:—ஆலை வடி முந்தை களி மருவு தண்ணம் குழகன் முழுது குன்று வஞ்சம் மல்லை மன்னு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாந்திருமொழி—மன்னுபுகழ்.

---

** மன்னுபுகழ்க்கௌசலைதன் மணிவயிறுவாய்த்தவனே *
தென்னிலங்கைக்கோன்முடிகள் சிந்துவித்தாய்செம்பொன்சேர் *
கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்தென்கருமணியே *
என்னுடையவின்னமுதே இராகவனேதாலேலோ. 1

புண்டரிகமலரதன்மேல் புவனியெல்லாம்படைத்தவனே *
திண்டிறலாள்தாடகைதன் உரமுருவச்சிலைவளைத்தாய் *
கண்டவர்தம்மனம்வழங்கும் கணபுரத்தென்கருமணியே *
எண்டிசையுமாளுடையாய் இராகவனேதாலேலோ. 2

கொங்குமலிகருங்குழலாள் கௌசலைதன்குலமதலாய் *
தங்குபெரும்புகழ்ச்சனகன் திருமருகாதாசரதீ *
கங்கையிலும்தீர்த்தமலி கணபுரத்தென்கருமணியே *
எங்கள்குலத்தின்னமுதே இராகவனேதாலேலோ. 3

தாமரைமேலயனவனைப் படைத்தவனே * தயரதன்தன்
மாமதலாய் மைதிலிதன்மணவாளா * வண்டினங்கள்
காமரங்களிசைபாடும் கணபுரத்தென்கருமணியே *
ஏமருவுஞ்சிலைவலவா இராகவனேதாலேலோ. 4

பாராளும்படர்செல்வம் பரதநம்பிக்கேயருளி *
ஆராவன்பிளையவனோடு அருங்கானமடைந்தவனே *
சீராளும்வரைமார்பா திருக்கண்ணபுரத்தரசே *
தாராளும்நீண்முடி என்தாசரதீதாலேலோ. 5

சுற்றமெல்லாம்பின்தொடரத் தொல்கானமடைந்தவனே!*
அற்றவர்கட்கருமருந்தே அயோத்திநகர்க்கதிபதியே *
கற்றவர்கள்தாம்வாழும் கணபுரத்தென்கருமணியே*
சிற்றவைதன்சொற்கொண்ட சீராமாதாலேலோ. 6

ஆலினிலைப்பாலகனாய் அன்றுலகமுண்டவனே *
வாலியைக்கொன்றரசு இளையவானரத்துக்களித்தவனே *
காலின்மணிகரையலைக்கும் கணபுரத்தென்கருமணியே *
ஆலிநகர்க்கதிபதியே அயோத்திமனே தாலேலோ. 7

மலையதனாலணைகட்டி மதிளிலங்கையழித்தவனே *
அலைகடலைக்கடைந்து அமரர்க்கமுதருளிச்செய்தவனே *
கலைவலவர்தாம்வாழும் கணபுரத்தென்கருமணியே *
சிலைவலவாசேவகனே சீராமாதாலேலோ. 8

தளையவிழும்நறுங்குஞ்சித் தயரதன்தன்குலமதலாய் *
வளையவொருசிலையதனால் மதிளிலங்கையழித்தவனே *
களைகழுநீர்மருங்கலரும் கணபுரத்தென்கருமணியே *
இளையவர்கட்கருளுடையாய் இராகவனேதாலேலோ. 9

** தேவரையுமசுரரையும் திசைகளையும்படைத்தவனே *
யாவரும்வந்தடிவணங்க அரங்கநகர்த்துயின்றவனே *
காவிரிநன்னதிபாயும் கணபுரத்தென்கருமணியே *
ஏவரிவெஞ்சிலைவலவா இராகவனேதாலேலோ. 10

** கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்தென்காகுத்தன்
தன்னடிமேல் * தாலேலோவென்றுரைத்த தமிழ்மாலை *
கொன்னவிலும்வேல்வலவன் குடைக்குலசேகரன்சொன்ன *
பன்னியநூல்பத்தும்வல்லார் பாங்காயபத்தர்களே. 11

அடிவரவு:—மன்னு புண்டரிக கொங்கு தாமரை பார் சுற்றம் ஆலின் மலை தளை தேவர் கன்னி வன்தாள். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

** வன்தாளினிணைவணங்கி வளநகரம்தொழுதேத்தமன்னனாவான்
நின்றாயை * அரியணைமேலிருந்தாயை நெடுங்கானம்படரப்போகு *
என்றாளெம்மிராமாவோ உனைப்பயந்தகைகேசிதன்சொற்கேட்டு *
நன்றாகநானிலத்தையாள்வித்தேன் நன்மகனேயுன்னைநானே. 1

வெவ்வாயேன்வெவ்வுரைகேட்டு இருநிலத்தைவேண்டாதேவிரைந்து * வென்றி
மைவாயகளிறொழிந்துதேரொழிந்துமாவொழிந்து வனமேமேவி *
நெய்வாயவேல்நெடுங்கண் நேரிழையுமிளங்கோவும்பின்புபோக *
எவ்வாறுநடந்தனையெம்மிராமாவோ! எம்பெருமானென்செய்கேனே! 2

கொல்லணைவேல்வரிநெடுங்கண் கௌசலைதன்குலமதலாய்குனிவில்லேந்தும் *
மல்லணைந்தவரைத்தோளா வல்வினையேன்மனமுருக்கும்வகையேகற்றாய் *
மெல்லணைமேல்முன்துயின்றாயின்றினிப்போய் வியன்கானமரத்தின்நீழல் *
கல்லணைமேல்கண்துயிலக்கற்றனையோ காகுத்தாகரியகோவே. 3

வாபோகுவாவின்னம்வந்தொருகால்கண்டுபோ மலராள்கூந்தல் *
வேய்போலுமெழில்தோளிதன்பொருட்டா விடையோன்றன்வில்லைச்செற்றாய் *
மாபோகுநெடுங்கானம்வல்வினையேன் மனமுருக்கும்மகனே * இன்று
நீபோகவென்னெஞ்சம் இருபிளவாய்ப்போகாதேநிற்குமாறே. 4

பொருந்தார்கைவேல்நுதிபோல்பரல்பாய மெல்லடிக்கள்குருதிசோர *
விரும்பாதகான்விரும்பிவெயிலுறைப்ப வெம்பசிநோய்கூர * இன்று
பெரும்பாவியேன்மகனேபோகின்றாய் கேகயர்கோன்மகளாய்ப்பெற்ற *
அரும்பாவிசொற்கேட்டவருவினையேன் என்செய்கேனந்தோயானே. 5

அம்மாவென்றுகந்தழைக்கும் ஆர்வச்சொல்கேளாதேயணிசேர்மார்வம் *
என்மார்வத்திடையழுந்தத் தழுவாதேமுழுசாதேமோவாதுச்சி *
கைம்மாவின்நடையன்னமென்னடையும் கமலம்போல்முகமும்காணாது *
எம்மானையென்மகனையிழந்திட்ட இழிதகையேனிருக்கின்றேனே. 6

பூமருவுநறுங்குஞ்சிபுன்சடையாப்புனைந்து பூந்துகில்சேரல்குல் *
காமரெழில்விழலுடுத்துக் கலனணியாதங்கங்களழகுமாறி *
ஏமருதோளென்புதல்வன் யானின்றுசெலத்தக்கவனந்தான்சேர்தல் *
தூமறையீரிதுதகவோசுமந்திரனே வசிட்டனேசொல்லீர்நீரே. 7

பொன்பெற்றாரெழில்வேதப்புதல்வனையும் தம்பியையும்பூவைபோலும் *
மின்பற்றாநுண்மருங்குல் மெல்லியலென்மருகியையும்வனத்திற்போக்கி *
நின்பற்றாநின்மகன்மேல்பழிவிளைத்திட்டு என்னையும்நீள்வானில்போக்க *
என்பெற்றாய்கைகேசீ இருநிலத்திலினிதாகவிருக்கின்றாயே. 8

முன்னொருநாள்மழுவாளிசிலைவாங்கி அவன்தவத்தைமுற்றும்செற்றாய் *
உன்னையுமுன்னருமையையுமுன்மோயின்வருத்தமும் ஒன்றாகக்கொள்ளாது *
என்னையுமென்மெய்யுரையும்மெய்யாகக்கொண்டு வனம்புக்கவெந்தாய் *
நின்னையேமகனாகப்பெறப்பெறுவேன் ஏழ்பிறப்பும்நெடுந்தோள்வேந்தே.

தேனகுமாமலர்க்கூந்தல் கௌசலையுஞ்சுமித்திரையுஞ்சிந்தைநோவ *
கூனுருவின்கொடுந்தொழுத்தைசொற்கேட்ட கொடியவள்தன்சொற்கொண்டு* இ
கானகமேமிகவிரும்பி நீதுறந்தவளநகரைத்துறந்து * நானும் [ன்று
வானகமேமிகவிரும்பிப்போகின்றேன் மனுகுலத்தார்தங்கள்கோவே! 10

** ஏரார்ந்தகருநெடுமால்இராமனாய் வனம்புக்கவதனுக்காற்று *
தாரார்ந்ததடவரைத்தோள்தயரதன்தான்புலம்பிய அப்புலம்பல்தன்னை *
கூரார்ந்தவேல்வலவன்கோழியர்கோன் குடைக்குலசேகரன்சொற்செய்த *
சீரார்ந்ததமிழ்மாலையிவைவல்லார் தீநெறிக்கண்செல்லார்தாமே. 11

அடிவரவு—வன்தாள் வெவ்வாய் கொல்லணை வாபோகு பொருந்தார் அம்மா பூப் பொன் முன் தேன் ஏரார் அங்கண். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாந்திருமொழி— அங்கணெடுமதில்

---

அங்கணெடுமதிள்புடைசூழயோத்தியென்னும் அணிநகரத்துலகனைத்தும்விளக்குஞ்சோதி*
வெங்கதிரோன்குலத்துக்கோர்விளக்காய்த்தோன்றி விண்முழுதுமுய்யக்கொண்டவீரன்தன்
செங்கணெடுங்கருமுகிலையிராமன்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் * [னை *
எங்கள்தனிமுதல்வனையெம்பெருமான்தன்னை என்றுகொலோகண்குளிரக்காணுநாளே. 1

வந்தெதிர்ந்ததாடகைதன்னுரத்தைக்கீறி வருகுருதிபொழிதரவன்கணையொன்றேவி *
மந்திரங்கொள்மறைமுனிவன்வேள்விகாத்து வல்லரக்கருயிருண்டமைந்தன்காண்மின் *
செந்தளிர்வாய்மலர்நகைசேர்செழுந்தண்சோலைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
அந்தணர்களொருமூவாயிரவரேத்த அணிமணியாசனத்திருந்தவம்மான்தானே. 2

செவ்வரிநற்கருநெடுங்கண்சீதைக்காகிச் சினவிடையோன்சிலையிறுத்துமழுவாளேந்தி *
வெவ்வரிநற்சிலைவாங்கிவென்றிகொண்டு வேல்வேந்தர்பகைதடிந்தவீரன்தன்னை *
தெவ்வரஞ்சுநெடும்புரிசெயுயர்ந்தபாங்கர் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எவ்வருவெஞ்சிலைத்தடக்கையிராமன்தன்னை இறைஞ்சுவாரிணையடியேயிறைஞ்சினேனே. 3

கொத்தலர்பூஞ்சுரிகுழல்கைகேசிசொல்லால் தொன்னகரம்துறந்துதுறைக்கங்கைதன்னை *
பத்தியுடைக்குகன்கடத்தவனம்போய்ப்புக்குப் பரதனுக்குப்பாதுகமுமரசுமீந்து *
சித்திரகூடத்திருந்தான்தன்னை யின்றுதில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எத்தனையுங்கண்குளிரக்காணப்பெற்ற இருநிலத்தார்க்கிமையவர்நேரொவ்வார்தாமே. 5

வலிவணக்குவரைநெடுந்தோள்விராதைக்கொன்று வண்தமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்
கலைவணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கிக் கரனோடுதூடணன்தன்னுயிரைவாங்கி * [கி *
சிலைவணக்கிமான்மறியவெய்தான்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
தலைவணக்கிக்கைகூப்பியேத்தவல்லார் திரிதலால்தவமுடைத்தித்தரணிதானே.

தனமருவுவைதேகிபிரியலுற்றுத் தளர்வெய்திச்சடாயுவைவைகுந்தத்தேற்றி *
வனமருவுகவியரசன்காதல்கொண்டு வாலியைக்கொன்றிலங்கைநகரரக்கர்கோமான் *

சினமடங்கமாருதியால்சுடுவித்தானைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
இனிதமர்ந்தவம்மானையிராமன்தன்னை ஏத்துவாரிணையடியேயேத்தினேனே. 6

குரைகடலையடலம்பால்மறுகவெய்து குலைகட்டிமறுகரையையதனாலேறி *
எரிநெடுவேலரக்கரொடுமிலங்கைவேந்தன் இன்னுயிர்கொண்டவன்தம்பிக்கரசுமீந்து *
திருமகளோடினிதமர்ந்தசெல்வன்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால் அரசாகவெண்ணேன்மற்றரசுதானே. 7

அம்பொனெடுமணிமாடவயோத்தியெய்தி அரசெய்தியகத்தியன்வாய்த்தான்முன்கொன்றான்
தன் * பெருந்தொல்கதைகேட்டுமிதிலைச்செல்வி உலகுய்யத்திருவயிறுவாய்த்தமக்கள் *
செம்பவளத்திரள்வாய்த்தன்சரிதைகேட்டான் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
எம்பெருமான்தன்சரிதைசெவியால்கண்ணால்பருகுவோம் இன்னமுதம்மதியோமன்றே. 8

செறிதவச்சம்புகன்தன்னைச்சென்றுகொன்று செழுமறையோனுயிர்மீட்டுத்தவத்தோனீந்த*
நிறைமணிப்பூணணியுங்கொண்டிலவணன்தன்னைத் தம்பியால்வானேற்றிமுனிவன்வேண்ட *
திறல்விளங்குமிலக்குமனைப்பிரிந்தான்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
உறைவானைமறவாதவுள்ளந்தன்னையுடையோம் மற்றுறுதுயரமடையோமன்றே. 9

** அன்றுசராசரங்களைவைகுந்தத்தேற்றி அடலரவப்பகையேறியசுரர்தம்மை
வென்று* இலங்குமணிநெடுந்தோள்நான்குந்தோன்ற விண்முழுதுமெதிர்வரத்தன்தாமமேவி
சென்றினிதுவீற்றிருந்தவம்மான்தன்னைத் தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் *
என்றும்நின்றானவனிவனென்றேத்தி நாளுமிறைஞ்சுமினோவெப்பொழுதுந்தொண்டீரே. 10

** தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள் திறல்விளங்குமாருதியோடமர்ந்தான்தன்னை *
எல்லையில்சீர்த்தயரதன்தன்மகனாய்த்தோன்றிற்றதுமுதலாத் தன்னுலகம்புக்கதீறா *
கொல்லியலும்படைத்தானைக்கொற்றவொள்வாள் கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொ
நல்லியலின்தமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. [ற்செய்த*

அடிவரவு—அங்கண் வந்து செவ்வரி தொத்து வலி ,மனம் குரை அம்பொன் செறி அன்று தில்லை பூநிலா. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

பெருமாள் திருமொழி முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ:

## திருச்சந்தவிருத்தத்தின் தனியன்கள்

தருச்சந்தப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீரத்
திருச்சந்த விருத்தஞ்செய் திருமழிசைப் பரன்வருமூர்
கருச்சந்துங் காரகிலுங் கமழ்கோங்கு மணநாறும்
திருச்சந்தத் துடன்மருவு திருமழிசை வளம்பதியே.

உலகுமழிசையு முள்ளுணர்ந்து தம்மிற் புலவர் புகழ்க்கோலால் தூக்க—உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே வைத்தெடுத்த பக்கம் வலிது.

ஸ்ரீ:

திருமழிசைப்பிரான் திருவாய்மலர்ந்தருளிய

# திருச்சந்த விருத்தம்.

** பூநிலாயவைந்துமாய்ப் புனற்கணின்றநான்குமாய் *
தீநிலாயமூன்றுமாய்ச் சிறந்தகாலிரண்டுமாய் *
மீநிலாயதொன்றுமாகி வேறுவேறுதன்மையாய் *
நீநிலாயவண்ணநின்னை யார்நினைக்கவல்லரே. 1

ஆறுமாறுமாறுமாய் ஓரைந்துமைந்துமைந்துமாய் *
ஏறுசீரிரண்டுமூன்றும் ஏழுமாறுமெட்டுமாய் *
வேறுவேறுஞானமாகி மெய்யினோடுபொய்யுமாய் *
ஊறொடோசையாயவைந்தும் ஆயவாயமாயனே. 2

ஐந்துமைந்துமைந்துமாகி அல்லவற்றுளாயுமாய் *
ஐந்துமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனே *
ஐந்துமைந்துமைந்துமாகி அந்தரத்தணைந்துநின்று *
ஐந்துமைந்துமாயநின்னை யாவர்காணவல்லரே. 3

மூன்றுமுப்பதாறினோடு ஓரைந்துமைந்துமைந்துமாய் *
மூன்றுமூர்த்தியாகிமூன்று மூன்றுமூன்றுமூன்றுமாய் *
தோன்றுசோதிமூன்றுமாய்த் துளக்கமில்விளக்கமாய் *
என்றெனாவியுள்புகுந்தது என்கொலோவெம்மீசனே. 4

நின்றியங்குமொன்றலா உருக்கடோறுமாவியாய் *
ஒன்றியுள்கலந்துநின்ற நின்னதன்மையின்னதென்று *
என்றும்யார்க்குமெண்ணிறந்த ஆதியாய்நின்னுந்திவாய் *
அன்றுநான்முகற்பயந்த ஆதிதேவனல்லையே. 5

நாகமேந்துமேருவெற்பை நாகமேந்துமண்ணினை *
நாகமேந்துமாகமாக மாகமேந்துவார்புனல் *
மாகமேந்துமங்குல்தீயோர் வாயுவைந்தமைந்துகாத்து *
ஏகமேந்திநின்றநீர்மை நின்கணேயியன்றதே. 6

ஒன்றிரண்டுமூர்த்தியாய் உறக்கமோடுணர்ச்சியாய் *
ஒன்றிரண்டுகாலமாகி வேலைஞாலமாயினாய் *
ஒன்றிரண்டுதீயுமாகி ஆயனாயமாயனே *
ஒன்றிரண்டுகண்ணினானும் உன்னையேத்தவல்லனே. 7

ஆதியானவானவர்க்கும் அண்டமாயவப்புறத்து *
ஆதியானவானவர்க்கும் ஆதியானவாதிநீ *
ஆதியானவானவாணர் அந்தகாலநீயுரைத்தி *
ஆதியானகாலநின்னை யாவர்காணவல்லரே. 8

தாதுலாவுகொன்றைமாலை துன்னுசெஞ்சடைச்சிவன் *
நீதியால்வணங்குபாத நின்மலாநிலாயசீர் *
வேதவாணர்கீதவேள்வி நீதியானகேள்வியார் *
நீதியால்வணங்குகின்ற நீர்மைநின்கணின்றதே. 9

தன்னுளேதிரைத்தெழும் தரங்கவெண்தடங்கடல் *
தன்னுளேதிரைத்தெழுந்து அடங்குகின்றதன்மைபோல் *
நின்னுளேபிறந்திறந்து நிற்பவுந்திரிபவும் *
நின்னுளேயடங்குகின்ற நீர்மைநின்கணின்றதே. 10

சொல்லினால்தொடர்ச்சிநீ சொலப்படும்பொருளுநீ *
சொல்லினால்சொலப்படாது தோன்றுகின்றசோதிநீ *
சொல்லினால்படைக்க நீபடைக்கவந்துதோன்றினார் *
சொல்லினால்சுருங்க நின்குணங்கள்சொல்லவல்லரே. 11

உலகுதன்னைநீபடைத்தி உள்ளொடுக்கிவைத்தி * மீண்
டுலகுதன்னுளேபிறத்தி ஓரிடத்தையல்லையால் *
உலகுநின்னொடொன்றிநிற்க வேறுநிற்றியாதலால் *
உலகில்நின்னையுள்ளசூழல் யாவருள்ளவல்லரே. 12

இன்னையென்றுசொல்லலாவது இல்லையாதுமிட்டிடை *
பின்னைகேள்வனென்பர் உன்பிணக்குணர்ந்தபெற்றியோர் *
பின்னையாயகோலமோடு பேருமூருமாதியும் *
நின்னையார்நினைக்கவல்லர் நீர்மையால்நினைக்கிலே. 13

தூய்மையோகமாயினாய் துழாயலங்கல்மாலையாய் *
ஆமையாகியாழ்கடல்துயின்ற ஆதிதேவ * நின்
நாமதேயமின்னதென்ன வல்லமல்லவாகிலும் *
சாமவேதகீதனாய சக்ரபாணியல்லையே. 14

அங்கமாறும்வேதநான்கும் ஆகிநின்றவற்றுளே *
தங்குகின்றதன்மையாய் தடங்கடல்பணத்தலை *
செங்கணாகணைக்கிடந்த செல்வமல்குசீரினாய் *
சங்கவண்ணமன்னமேனி சார்ங்கபாணியல்லையே. 15

தலைக்கணத்துகட்குழம்பு சாதிசோதிதோற்றமாய் *
நிலைக்கணங்கள்காணவந்து நிற்றியேலும்நீடிரும் *
கலைக்கணங்கள்சொற்பொருள் கருத்தினால்நினைக்கொணா *
மலைக்கணங்கள்போலுணர்த்தும் மாட்சிநின்றன்மாட்சியே. 16

ஏகமூர்த்திமூன்றுமூர்த்தி நாலுமூர்த்திநன்மைசேர் *
போகமூர்த்திபுண்ணியத்தின்மூர்த்தி யெண்ணில்மூர்த்தியாய் *
நாகமூர்த்திசயனமாய் நலங்கடற்கிடந்து * மேல்
ஆகமூர்த்தியாயவண்ணம் என்கொலாதிதேவனே. 17

விடத்தவாயொராயிரம் இராயிரங்கண்வெந்தழல் *
விடுத்துவீழ்விலாதபோகம் மிக்கசோதிதொக்கசீர் *
தொடுத்துமேல்விதானமாய பௌவநீரராவணை *
படுத்தபாயல்பள்ளிகொள்வது என்கொல்வேலைவண்ணனே. 18

புள்ளதாகிவேதநான்கும் ஓதினாய்அதன்றியும் *
புள்ளின்வாய்பிளந்து புட்கொடிப்பிடித்தபின்னரும் *
புள்ளையூர்தியாதலால் அதென்கொல்மின்கொள்நேமியாய் *
புள்ளின்மெய்ப்பகைக்கடல்கிடத்தல் காதலித்ததே. 19

கூசமொன்றுமின்றி மாசுணம்படுத்துவேலைநீர் *
பேசநின்றதேவர்வந்து பாடமுன்கிடந்ததும் *
பாசநின்றநீரில்வாழும் ஆமையானகேசவா *
ஏசவன்றுநீகிடந்தவாறு கூறுதேறவே. 20

** அரங்கனேதரங்கநீர் கலங்கவன்றுகுன்றுசூழ் *
மரங்கள்தேயமாநிலங்குலுங்க மாசுணஞ்சுலாய் *
நெருங்கநீகடைந்தபோது நின்றசூரரென்செய்தார் *
குரங்கையாளுகந்தவெந்தை கூறுதேறவேறிதே. 21

பண்டுமின்றுமேலுமாயோர் பாலனாகிஞாலமேழும் *
உண்டுமண்டியாலிலைத்துயின்ற ஆதிதேவனே *
வண்டுகிண்டுதண்டுழாய் அலங்கலாய்கலந்தசீர் *
புண்டரீகபாவைசேருமார்ப பூமிநாதனே. 22

வானிறத்தோர்சீயமாய் வளைந்தவாளெயிற்றவன் *
ஊனிறத்துகிர்த்தலம் அழுத்தினாயுலாயசீர் *
நானிறத்தவேதநாவர் நல்லயோகினால்வணங்கு *
பானிறக்கடல்கிடந்த பற்பநாபனல்லையே. 23

கங்கைநீர்பயந்த பாதபங்கயத்தெமண்ணலே *
அங்கையாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்தினாய் *
சிங்கமாயதேவதேவ தேனுலாவுமென்மலர் *
மங்கைமன்னிவாழுமார்ப ஆழிமேனிமாயனே. 24

வரத்தினில்சிரத்தைமிக்க வாளெயிற்றுமற்றவன் *
உரத்தினில்கரத்தைவைத்து உகிர்த்தலத்தையூன்றினாய் *
இரத்திநீயிதென்னபொய் இரந்தமண்வயிற்றுளே
கரத்தி * உன்கருத்தை யாவர்காணவல்லர்கண்ணனே. 25

ஆணினோடுபெண்ணுமாகி அல்லவோடுநல்லவாய் *
ஊணொடோசையூறுமாகி ஒன்றலாதமாயையாய் *
பூணிபேணுமாயனாகிப் பொய்யினோடுமெய்யுமாய் *
காணிபேணுமாணியாய்க் கரந்துசென்றகள்வனே. 26

விண்கடந்தசோதியாய் விளங்குஞானமூர்த்தியாய் *
பண்கடந்ததேசமேவு பாவநாசநாதனே *
எண்கடந்தயோகினோடு இரந்துசென்றுமாணியாய் *
மண்கடந்தவண்ணநின்னை யார்மதிக்கவல்லரே. 27

படைத்தபாரிடந்தளந்து அதுண்டுமிழ்ந்துபௌவநீர் *
படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடந்தபெற்றியோய் *
மிடைத்தமாலிமாலிமான் விலங்குகாலனூர்புக *
படைக்கலம்விடுத்த பல்படைத்தடக்கைமாயனே. 28

பரத்திலும்பரத்தையாதி பௌவநீரணைக்கிடந்து *
உரத்திலுமொருத்திதன்னை வைத்துகந்ததன்றியும் *
நரத்திலும்பிறத்திநாத ஞானமூர்த்தியாயினாய் *
ஒருத்தரும்நினாதுதன்மை யின்னதென்னவல்லரே. 29

வானகமும்மண்ணகமும் வெற்புமேழ்கடல்களும் *
போனகஞ்செய்தாலிலைத்துயின்ற புண்டரீகனே *
தேனகஞ்செய்தண்ணறுமலர்த்துழாய்நன்மாலையாய் *
கூனகம்புகத்தெறித்த கொற்றவில்லியல்லையே. 30

காலநேமிகாலனே கணக்கிலாதகீர்த்தியாய் *
ஞாலமேழுமுண்டுபண்டு ஓர்பாலனாயபண்பனே *
வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீர * நின்
பாலராயபத்தர்சித்தம் முத்திசெய்யுமூர்த்தியே. 31

குரக்கினப்படைகொடு குரைகடலின்மீதுபோய் *
அரக்கரங்கரங்க வெஞ்சரந்துரந்தவாதிநீ *
இரக்கமண்கொடுத்தவற்கு இரக்கமொன்றுமின்றியே *
பரக்கவைத்தளந்துகொண்ட பற்பபாதனல்லையே. 32

மின்னிறத்தெயிற்றரக்கன்வீழ வெஞ்சரந்துரந்து *
பின்னவற்கருள்புரிந்து அரசளித்தபெற்றியோய் *
நன்னிறத்தொரின்சொலேழை பின்னைகேள்வமன்னுசீர் *
பொன்னிறத்தவண்ணனாய புண்டரீகனல்லையே. 33

ஆதியாதியாதிநீ ஓரண்டமாதியாதலால் *
சோதியாதசோதிநீ அதுண்மையில்விளங்கினாய் *
வேதமாகிவேள்வியாகி விண்ணினோடுமண்ணுமாய் *
ஆதியாகியாயனாய மாயமென்னமாயமே. 34

அம்புலாவுமீனுமாகி ஆமையாகியாழியார் *
தம்பிரானுமாகி மிக்கதன்புமிக்கதன்றியும் *
கொம்பராவுநுண்மருங்குல் ஆயர்மாதர்பிள்ளையாய் *
எம்பிரானுமாயவண்ணம் என்கொலோவெம்மீசனே. 35

ஆடகத்தபூண்முலை அசோதையாய்ச்சிபிள்ளையாய் *
சாடுதைத்தோர்புள்ளதாவி கள்ளதாயபேய்மகள் *
வீடவைத்தவெய்யகொங்கை ஐயபாலமுதுசெய்து *
ஆடகக்கைமாதர்வாய் அமுதமுண்டதென்கொலோ. 36

காய்த்தநீள்விளங்கனியுதிர்த்து எதிர்ந்தபூங்குருந்தம்
சாய்த்து * மாபிளந்தகைத்தலத்த கண்ணனென்பரால் *
ஆய்ச்சிபாலையுண்டுமண்ணையுண்டு வெண்ணெயுண்டு * பின்
பேய்ச்சிபாலையுண்டு பண்டோரேனமாயவாமனா. 37

கடங்கலந்தவன்கரி மருப்பொசித்தோர்பொய்கைவாய் *
விடங்கலந்தபாம்பின்மேல் நடம்பயின்றநாதனே *
குடங்கலந்தகூத்தனாய கொண்டல்வண்ண தண்டுழாய் *
வடங்கலந்தமாலைமார்ப காலநேமிகாலனே. 38

வெற்பெடுத்துவேலைநீர் கலக்கினாயதன்றியும் *
வெற்பெடுத்துவேலைநீர் வரம்புகட்டிவேலைசூழ் *
வெற்பெடுத்தவிஞ்சிசூழ் இலங்கைகட்டழித்தநீ *
வெற்பெடுத்துமாரிகாத்த மேகவண்ணனல்லையே. 39

ஆனைகாத்தொரானைகொன்று அதன்றியாயர்பிள்ளையாய் *
ஆனைமேய்த்தியாநெயுண்டி அன்றுகுன்றமொன்றினால் *
ஆனைகாத்துமையரிக்கண் மாதரார்திறத்து * முன்
ஆனையன்றுசென்றடர்த்த மாயமென்னமாயமே. 40

ஆயனாகியாயர்மங்கை வேயதோள்விரும்பினாய் *
ஆயநின்னையாவர்வல்லர் அம்பரத்தொடிம்பராய் *
மாயமாயமாயைகொல் அதன்றிநீவகுத்தலும் *
மாயமாயமாக்கினாய் உன்மாயமுற்றுமாயமே. 41

வேறிசைந்தசெக்கர்மேனி நீறணிந்தபுன்சடை *
கீறுதிங்கள்வைத்தவன் கைவைத்தவன்கபால்மிசை *
ஊறுசெங்குருதியால் நிறைத்தகாரணந்தனை *
ஏறுசென்றடர்த்தவீச பேசுகூசமின்றியே. 42

வெஞ்சினத்தவேழவெண் மருப்பொசித்துருத்தமா *
கஞ்சனைக்கடிந்து மண்ணளந்துகொண்டகாலனே *
வஞ்சனத்துவந்தபேய்ச்சி ஆவிபாலுள்வாங்கினாய் *
அஞ்சனத்தவண்ணனாய ஆதிதேவனல்லையே. 43

பாலினீர்மைசெம்பொனீர்மை பாசியின்பசும்புறம் *
போலுநீர்மைபொற்புடைத்தடத்து வண்டுவிண்டுலாம் *
நீலநீர்மையென்றிவை நிறைந்தகாலநான்குமாம் *
மாலினீர்மைவையகம் மறைத்ததென்னநீர்மையே. 44

மண்ணுளாய்கொல்விண்ணுளாய்கொல் மண்ணுளேமயங்கிநின்று *
எண்ணுமெண்ணகப்படாய்கொல் என்னமாயையின்தமர் *
கண்ணுளாய்கொல்சேயைகொல் அனந்தன்மேற்கிடந்தவெம்
புண்ணியா * புனந்துழாயலங்கல்புனிதனே. 45

தோடுபெற்றதண்டுழாய் அலங்கலாடுசென்னியாய் *
கோடுபற்றியாழியேந்தி அஞ்சிறைப்புள்ளூர்தியால் *
நாடுபெற்றநன்மை நண்ணமில்லையேனுநாயினேன் *
வீடுபெற்றிறப்பொடும் பிறப்பறுக்குமாசொலே. 46

காரொடொத்தமேனிநங்கள்கண்ண விண்ணினாதனே *
நீரிடத்தராவணைக்கிடத்தி யென்பரன்றியும் *
ஓரிடத்தையல்லை எல்லையில்லையென்பராதலால் *
சேர்விடத்தைநாயினேன் தெரிந்திறைஞ்சுமாசொலே. 47

குன்றில்நின்றுவானிருந்து நீள்கடற்கிடந்து * மண்
ணொன்றுசென்றதொன்றையுண்டு அதொன்றிடந்துபன்றியாய்*
நன்றுசென்றநாளவற்றுள் நல்லுயிர்படைத்தவர்க்கு *
அன்றுதேவமைத்தளித்த ஆதிதேவனல்லையே. 48

**கொண்டைகொண்டகோதைமீது தேனுலாவுகூனிகூன் *
உண்டைகொண்டரங்கவோட்டி உள்மகிழ்ந்தநாதனூர் *
நண்டையுண்டுநாரைபேர வாளைபாயநீலமே *
அண்டைகொண்டுகெண்டைமேயும் அந்தணீரரங்கமே. 49

வெண்டிரைக்கருங்கடல் சிவந்துவேவமுன்னொர்நாள் *
திண்டிறற்சிலைக்கைவாளி விட்டவீரர்சேருமூர் *
எண்டிசைக்கணங்களும் இறைஞ்சியாடுதீர்த்தநீர் *
வண்டிரைத்தசோலைவேலி மன்னுசீரரங்கமே. 50

சரங்களைத்துரந்து வில்வளைத்திலங்கைமன்னவன் *
சிரங்கள்பத்தறுத்துதிர்த்த செல்வர்மன்னுபொன்னிடம் *
பரந்துபொன்னிரந்துநுந்தி வந்தலைக்கும்வார்புனல் *
அரங்கமென்பர் நான்முகத்தயன்பணிந்தகோயிலே. 51

பொற்றையுற்றமுற்றல்யானை போரெதிர்ந்துவந்ததை *
பற்றியுற்றுமற்றதன் மருப்பொசித்தபாகனூர் *
சிற்றெயிற்றுமுற்றல்மூங்கில் மூன்றுதண்டரொன்றினர் *
அற்றபற்றர்சுற்றிவாழும் அந்தணீரரங்கமே. 52

மோடியோடிலச்சையாய சாபமெய்திமுக்கணான் *
கூடுசேனைமக்களோடு கொண்டுமண்டிவெஞ்சமத்

தோட*வாணனாயிரம் கரங்கழித்தவாதிமால் *
பீடுகோயில்கூடுநீர் அரங்கமென்றபேரதே. 53

இலைத்தலைச்சரந்துரந்து இலங்கைகட்டழித்தவன் *
மலைத்தலைப்பிறந்திழிந்து வந்துநுந்துசந்தனம் *
குலைத்தலைத்திறுத்தெறிந்த குங்குமக்குழம்பினோடு *
அலைத்தொழுகுகாவிரி அரங்கமேயவண்ணலே. 54

மன்னுமாமலர்க்கிழத்தி வையமங்கைமைந்தனாய் *
பின்னுமாயர்பின்னைதோள் மணம்புணர்ந்ததன்றியும் *
உன்னபாதமென்னசிந்தை மன்னவைத்துநல்கினாய் *
பொன்னிசூழரங்கமேய புண்டரீகனல்லையே. 55

இலங்கைமன்னனைந்தொடைந்து பைந்தலைநிலத்துக *
கலங்கவன்றுசென்றுகொன்று வென்றிகொண்டவீரனே *
விலங்குநூலர்வேதநாவர் நீதியானகேள்வியார் *
வலங்கொளக்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே. 56

சங்குதங்குமுன்கைநங்கை கொங்கைதங்கலுற்றவன் *
அங்கமங்கவன்றுசென்று அடர்த்தெறிந்தவாழியான் *
கொங்குதங்குவார்குழல் மடந்தைமார்குடைந்தநீர் *
பொங்குதண்குடந்தையுள் கிடந்தபுண்டரீகனே. 57

மரங்கெடநடந்தடர்த்து மத்தயானைமத்தகத்து *
உரங்கெடப்புடைத்து ஓர்கொம்பொசித்துகந்தவுத்தமா *
துரங்கம்வாய்பிளந்து மண்ணளந்தபாத * வேதியர்
வரங்கொளக்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே. 58

சாலிவேலிதண்வயல் தடங்கிடங்குபூம்பொழில் *
கோலமாடநீடு தண்குடந்தைமேயகோவலா *
காலநேமிவக்கரன் கரன்முரன்சிரமவை *
காலனோடுகூட வில்குனித்தவிற்கைவீரனே. 59

**செழுங்கொழும்பெரும்பனிபொழிந்திட உயர்ந்தவேய் *
விழுந்துலர்ந்தெழுந்து விண்புடைக்கும்வேங்கடத்துள்நின்று *
எழுந்திருந்துதேன்பொருந்து பூம்பொழில்தழைக்கொழும் *
செழுந்தடங்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே. 60

**நடந்தகால்கள்நொந்தவோ நடுங்கஞாலமேனமாய் *
இடந்தமெய்குலுங்கவோ விலங்குமால்வரைச்சுரம் *
கடந்தகால்பரந்த காவிரிக்கரைக்குடந்தையுள் *
கிடந்தவாறெழுந்திருந்து பேசுவாழிகேசனே. 61

**கரண்டமாடுபொய்கையுள் கரும்பனைப்பெரும்பழம் *
புரண்டுவீழவாளைபாய் குறுங்குடிநெடுந்தகாய் *
திரண்டதோளிரணியன் சினங்கொளாகமொன்றையும் *
இரண்டுகூறுசெய்துகந்த சிங்கமென்பதுன்னையே. 62

** நன்றிருந்துயோகநீதி நண்ணுவார்கள்சிந்தையுள் *
சென்றிருந்துதீவினைகள் தீர்த்ததேவதேவனே *
குன்றிருந்தமாடநீடு பாடகத்துமூரகத்தும் *
நின்றிருந்துவெஃகணைக்கிடந்தது என்னநீர்மையே. 63

** நின்றதெந்தையூரகத்து இருந்ததெந்தைபாடகத்து *
அன்றுவெஃகணைக்கிடந்தது என்னிலாதமுன்னெலாம் *
அன்றுநான்பிறந்திலேன் பிறந்தபின்மறந்திலேன் *
நின்றதுமிருந்ததும் கிடந்ததுமென்னெஞ்சுளே. 64

நிற்பதுமோர்வெற்பகத்து இருப்புவிண்கிடப்பதும் *
நற்பெருந்திரைக்கடலுள் நானிலாதமுன்னெலாம் *
அற்புதனனந்தசயனன் ஆதிபூதன்மாதவன் *
நிற்பதுமிருப்பதும் கிடப்பதுமென்னெஞ்சுளே. 65

இன்றுசாதல்நின்றுசாதல் அன்றியாரும்வையகத்து *
ஒன்றிநின்றுவாழ்தலின்மைகண்டும் நீசரென்கொலோ *
அன்றுபாரளந்த பாதபோதையுன்னிவானின்மேல் *
சென்றுசென்றுதேவராய் இருக்கிலாதவண்ணமே. 66

சண்டமண்டலத்தினூடு சென்றுவீடுபெற்றுமேல் *
கண்டுவீடிலாதகாதல் இன்பநாளுமெய்துவீர் *
புண்டரீகபாதபுண்யகீர்த்தி நுஞ்செவிமடுத்
துண்டு * நும்முறுவினைத் துயருள்நீங்கியுய்ம்மினோ. 67

முத்திறத்துவாணியத்து இரண்டிலொன்றுநீசர்கள் *
மத்தராய்மயங்குகின்றது இட்டதிலிறந்துபோந்து *
எத்திறத்துமுய்வதோர் உபாயமில்லையுய்குறில் *
தொத்திறுத்ததண்டுழாய் நன்மாலைவாழ்த்திவாழ்மினோ. 68

காணிலுமுருப்பொலார் செவிக்கினாதகீர்த்தியார் *
பேணிலும்வரந்தர மிடுக்கிலாததேவரை *
ஆணமென்றடைந்துவாழும் ஆதர்காளெம்மாதிபால் *
பேணிநும்பிறப்பெனும் பிணக்கறுக்ககிற்றிரே. 69

குந்தமோடுசூலம்வேல்கள் தோமரங்கள்தண்டுவாள் *
பந்தமானதேவர்கள் பரந்துவானகமுற *

வந்தவாணனீரைஞ்ஞூறு தோள்களைத்துணித்தநாள் *
அந்தவந்தவாகுலம் அமரரேயறிவரே. 70

வண்டுலாவுகோதைமாதர் காரணத்தினால்வெகுண்டு *
இண்டவாணனீரைஞ்ஞூறு தோள்களைத்துணித்தநாள் *
முண்டனீறன்மக்கள்வெப்பு மோடியங்கியோடிடக்
கண்டு * நாணிவாணனுக்கிரங்கினான் எம்மாயனே. 71

போதில்மங்கைபூதலக்கிழத்தி தேவியன்றியும் *
போதுதங்குநான்முகன் மகனவன்மகன்சொலில் *
மாதுதங்குகூறன் ஏறதூர்தியென்றுவேதநூல் *
ஓதுகின்றதுண்மையல்லதில்லை மற்றுரைக்கிலே. 72

மரம்பொதச்சரந்துரந்து வாலிவீழமுன்னொர்நாள் *
உரம்பொதச்சரந்துரந்த உம்பராளியெம்பிரான் *
வரங்குறிப்பில்வைத்தவர்க்கலாது வானமாளினும் *
நிரம்புநீடுபோகம் எத்திறத்தும்யார்க்குமில்லையே. 73

அறிந்தறிந்துவாமனன் அடியிணைவணங்கினால் *
செறிந்தெழுந்தஞானமோடு செல்வமுஞ்செறிந்திடும் *
மறிந்தெழுந்ததெண்டிரையுள் மன்னுமாலைவாழ்த்தினால் *
பறிந்தெழுந்துதீவினைகள் பற்றறுதல்பான்மையே. 74

ஒன்றிநின்றுநற்றவஞ்செய்து ஊழியூழிதோறெலாம் *
நின்றுநின்றவன்குணங்கள் உள்ளியுள்ளந்தூயராய் *
சென்றுசென்றுதேவதேவர் உம்பரும்பரும்பராய் *
அன்றியெங்கள்செங்கண்மாலை யாவர்காணவல்லரே.

புன்புலவழியடைத்து அரக்கிலச்சினைசெய்து *
நன்புலவழிதிறந்து ஞானநற்சுடர்கொளீஇ *
என்பிலெள்கிநெஞ்சுருகி உள்கனிந்தெழுந்ததோர் *
அன்பிலன்றியாழியானை யாவர்காணவல்லரே. 76

எட்டுமெட்டுமெட்டுமாய் ஒரேழுமேழுமேழுமாய் *
எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனை *
எட்டினாயபேதமோடு இறைஞ்சிநின்றவன்பெயர் *
எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர்வானமாளவே. 77

சோர்விலாதகாதலால் தொடக்கறுமனத்தராய் *
நீரராவணைக்கிடந்த நின்மலனலங்கழல் *
ஆர்வமோடிறைஞ்சிநின்று அவன்பெயரெட்டெழுத்தும் *
வாரமாகவோதுவார்கள் வல்லர்வானமாளவே. 78

பத்தினோடுபத்துமாய் ஒரேழினோடொரொன்பதாய் *
பத்தினான்திசைக்கணின்ற நாடுபெற்றநன்மையாய் *
பத்தினாயதோற்றமோடு ஓராற்றல்மிக்கவாதிபால் *
பத்தராமவர்க்கலாது முத்திமுற்றலாகுமே. 79

வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்ததேனுகன் *
நாசமாகிநாளுலப்ப நன்மைசேர்பனங்கனிக்கு *
வீசிமேல்நிமிர்ந்ததோளின் இல்லையாக்கினாய்கழற்கு *
ஆசையாமவர்க்கலால் அமரராகலாகுமே. 80

கடைந்தபாற்கடற்கிடந்து காலநேமியைக்கடிந்து *
உடைந்தவாலிதந்தனுக்கு உதவவந்திராமனாய் *
மிடைந்தவேழ்மரங்களும் அடங்கவெய்துவேங்கடம் *
அடைந்தமாலபாதமே அடைந்துநாளுமுய்ம்மினோ. 81

எத்திறத்துமொத்துநின்று உயர்ந்துயர்ந்தபெற்றியோய் *
முத்திறத்துமூரிநீர் அராவணைத்துயின்ற * நின்
பத்துறுத்தசிந்தையோடு நின்றுபாசம்விட்டவர்க்கு *
எத்திறத்துமின்பம் இங்குமங்குமெங்குமாகுமே. 82

மட்டுலாவுதண்டுழாய் அலங்கலாய்புலன்கழல் *
விட்டுவீழ்விலாதபோகம் விண்ணில்நண்ணியேறினும் *
எட்டினோடிரண்டெனுங் கயிற்றினால்மனந்தனைக்
கட்டி * வீடிலாதுவைத்த காதலின்பமாகுமே. 83

பின்பிறக்கவைத்தனன்கொல் அன்றிநின்றுதன்கழற்கு *
அன்புறைக்கவைத்தநாள் அறிந்தனன்கொலாழியான் *
தன்திறத்தோரன்பிலா அறிவிலாதநாயினேன் *
என்திறத்திலென்கொல் எம்பிரான்குறிப்பில்வைத்ததே. 84

நச்சராவணைக்கிடந்த நாதபாதபோதினில் *
வைத்தசிந்தைவாங்குவித்து நீங்குவிக்கநீயினம் *
மெய்த்தன்வல்லையாதலால் அறிந்தனன்நின்மாயமே *
உய்த்துநின்மயக்கினில் மயக்கலென்னைமாயனே. 85

சாடுசாடுபாதனே சலங்கலந்தபொய்கைவாய் *
ஆடரவின்வன்பிடர் நடம்பயின்றநாதனே *
கோடுநீடுகைய செய்யபாதநாளுமுள்ளினால் *
வீடனாகமெய்செயாத வண்ணமென்கொல்கண்ணனே. 86

நெற்றிபெற்றகண்ணன் விண்ணினாதனோடுபோதின்மேல் *
நற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர் *
கற்றபெற்றியால்வணங்குபாத நாதவேத * நின்
பற்றலாலோர்பற்று மற்றதுற்றிலேனுரைக்கிலே. 87

வெள்ளைவேலைவெற்புநாட்டி வெள்ளெயிற்றராவளாய் *
அள்ளலாக்கடைந்தவன்று அருவரைக்கொராமையாய் *
உள்ளநோய்கள்தீர்மருந்து வானவர்க்களித்த * எம்
வள்ளலாரையன்றி மற்றோர்தெய்வநான்மதிப்பனே. 88

பார்மிகுத்தபாரமுன் ஒழிச்சுவானருச்சுனன் *
தேர்மிகுத்துமாயமாக்கி நின்றுகொன்றுவென்றிசேர் *
மாரதர்க்குவான்கொடுத்து வையமைவர்பாலதாம் *
சீர்மிகுத்தநின்னலாலோர் தெய்வம்நான்மதிப்பனே. 89

குலங்களாயவீரிரண்டில் ஒன்றிலும்பிறந்திலேன் *
நலங்களாயநற்கலைகள் நாவிலும்நவின்றிலேன் *
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன்புனித * நின்
இலங்குபாதமன்றி மற்றோர்பற்றிலேனெம்மீசனே. 90

பண்ணுலாவுமென்மொழிப் படைத்தடங்கணாள்பொருட்டு *
எண்ணிலாவரக்கரை நெருப்பினால்நெருக்கினாய் *
கண்ணலாலோர்கண்ணிலேன் கலந்தசுற்றமற்றிலேன் *
எண்ணிலாதமாயநின்னை என்னுள்நீக்கலென்றுமே. 91

விடைக்குலங்களேழடர்த்து வென்றிவேற்கண்மாதரார் *
கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாயவேலைநீர் *
படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடைந்துநின்றனக்கு *
அடைக்கலம்புகுந்தவென்னை அஞ்சலென்னவேண்டுமே. 92

சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே *
விரும்பிநின்றிறைஞ்சுவேற்கு இரங்கரங்கவாணனே *
கரும்பிருந்தகட்டியே கடற்கிடந்தகண்ணனே *
இரும்பரங்கவெஞ்சரந்துரந்த வில்லிராமனே. 93

ஊனின்மேயவாவிநீ உறக்கமோடுணர்ச்சிநீ *
ஆனின்மேயவைந்துநீ அவற்றுணின்றதூய்மைநீ *
வானினோடுமண்ணுநீ வளங்கடற்பயனுநீ *
யானுநீயதன்றி யெம்பிரானுநீயிராமனே. 94

அடக்கரும்புலன்களைந்தடக்கி ஆசையாமவை *
துடக்கறுத்துவந்து நின்தொழிற்கணின்றவென்னைநீ *
விடக்கருதிமெய்செயாது மிக்கோராசையாக்கிலும் *
கடற்கிடந்தநின்னலாலோர் கண்ணிலேனெம்மண்ணலே. 95

வரம்பிலாதமாயமாய வையமேழும்மெய்ம்மையே *
வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாதகீர்த்தியாய் *
வரம்பிலாதபல்பிறப்பு அறுத்துவந்துநின்கழல் *
பொருந்துமாதிருந்தநீ வரஞ்செய்புண்டரீகனே. 96

வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்துசீர்க்
கைய* செய்யபோதில்மாது சேருமார்பநாதனே *
ஐயிலாயவாக்கைநோய் அறுத்துவந்துநின்னடைந்து *
உய்வதோருபாயம் நீயெனக்குநல்கவேண்டுமே. 97

மறந்துறந்துவஞ்சமாற்றி ஐம்புலன்களாசையும்
துறந்து * நின்கணாசையே தொடர்ந்துநின்றநாயினேன் *
பிறந்திறந்துபேரிடர்ச் சுழிக்கணின்றுநீங்குமா *
மறந்திடாதுமற்றெனக்கு மாயநல்கவேண்டுமே. 98

காட்டிநான்செய்வல்வினைப் பயன்றனால்மனந்தனை *
நாட்டிவைத்துநல்லவல்ல செய்யவெண்ணினாரென *
கேட்டதன்றியென்னதாவி பின்னைகேள்வநின்னொடும் *
பூட்டிவைத்தவென்னை நின்னுள்நீக்கல்பூவைவண்ணனே. 99

பிறப்பினோடுபேரிடர்ச் சுழிக்கணின்றுநீங்குமஃது *
இறப்பவைத்தஞானநீசரைக் கரைக்கொடேற்றுமா *
பெறற்கரியநின்னபாத பத்தியானபாசனம் *
பெறற்கரியமாயனே யெனக்குநல்கவேண்டுமே. 100

இரந்துரைப்பதுண்டுவாழி ஏமநீர்நிறத்தமா *
வரந்தருந்திருக்குறிப்பில் வைத்ததாகில்மன்னுசீர் *
பரந்தசிந்தையொன்றிநின்று நின்னபாதபங்கயம் *
நிரந்தரம்நினைப்பதாக நீநினைக்கவேண்டுமே. 101

விள்விலாதகாதலால் விளங்குபாதபோதில்வைத்து *
உள்ளுவேனதூனநோய் ஒழிக்குமாதெழிக்குநீர் *
பள்ளிமாயபன்றியாய வென்றிவீரகுன்றினால் *
துள்ளுநீர்வரம்புசெய்த தோன்றலொன்றுசொல்லிடே. 102

திருக்கலந்துசேருமார்ப தேவதேவதேவனே *
இருக்கலந்தவேதநீதி ஆகிநின்றநின்மலா *
கருக்கலந்தகாளமேக மேனியாயநின்பெயர் *
உருக்கலந்தொழிவிலாது உரைக்குமாறுரைசெயே. 103

கடுங்கவந்தன்வக்கரன் கரன்முரன்சிரமவை *
இடந்துகூறுசெய்த பல்படைத்தடக்கைமாயனே *
கிடந்திருந்துநின்றியங்குபோதும் நின்னபொற்கழல் *
தொடர்ந்துவிள்விலாததோர் தொடர்ச்சிநல்கவேண்டுமே. 104

மண்ணையுண்டுமிழ்ந்து பின்னிரந்துகொண்டளந்தமண் *
கண்ணுளல்லதில்லையென்று வென்றகாலமாயினும் *
பண்ணைவென்றவின்சொல்மங்கை கொங்கைதங்குபங்கயக்
கண்ண * நின்னவண்ணமல்லதில்லை யெண்ணும்வண்ணமே. 105

கறுத்தெதிர்ந்தகாலநேமி காலனோடுகூடஅன் *
றறுத்தவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்தினாய் *
தொறுக்கலந்தவூனமஃது ஒழிக்கவன்றுகுன்றமுன் *
பொறுத்தநின்புகழ்க்கலாலோர் நேசமில்லைநெஞ்சமே. 106

காய்சினத்தகாசிமன்னன் வக்கரன்பவுண்டிரன் *
மாசினத்தமாலிமா சுமாலிகேசிதேனுகன் *
நாசமுற்றுவீழ நாள்கவர்ந்தநின்கழற்கலால் *
நேசபாசமெத்திறத்தும் வைத்திடேனெம்மீசனே. 107

கேடில்சீர்வரத்தனுங் கெடும்வரத்தயனரன் *
நாடினோடுநாட்டமாயிரத்தன் நாடுநண்ணினும் *
வீடதானபோகமெய்தி வீற்றிருந்தபோதிலும் *
கூடுமாசையல்லதொன்று கொள்வனோகுறிப்பிலே, 108

சுருக்குவாரையின்றியே சுருங்கினாய்சுருங்கியும் *
பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்துபெற்றியோய் *
செருக்குவார்கள்தீக்குணங்கள் தீர்த்ததேவதேவனென்று *
இருக்குவாய்முனிக்கணங்களேத்த யானுமேத்தினேன். 109

தூயனாயுமன்றியும் சுரும்புலாவுதண்டுழாய் *
மாயநின்னைநாயினேன் வணங்கிவாழ்த்துமீதெலாம் *
நீயுநின்குறிப்பினில் பொறுத்துநல்குவேலைநீர் *
பாயலோடுபத்தர்சித்தம் மேயவேலைவண்ணனே. 110

வைதுநின்னைவல்லவா பழித்தவர்க்குமாறில்போர் *
செய்துநின்னசெற்றத்தீயின் வெந்தவர்க்கும்வந்துனை *
எய்தலாகுமென்பர் ஆதலாலெம்மாயநாயினேன் *
செய்தகுற்றம்நற்றமாகவேகொள் ஞாலநாதனே. 111

வாள்களாகிநாள்கள்செல்ல நோய்மைகுன்றிமூப்பெய்தி *
மாளுநாளதாதலால் வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே *
ஆளதாகுநன்மையென்று நன்குணர்ந்ததன்றியும் *
மீள்விலாதபோகம் நல்கவேண்டுமாலபாதமே. 112

சலங்கலந்தசெஞ்சடைக் கறுத்தகண்டன்வெண்டலை *
புலன்கலங்கவுண்டபாதகத்தன் வன்துயர்கெட *
அலங்கன்மார்வில்வாசநீர் கொடுத்தவனடுத்தசீர் *
நலங்கொள்மாலைநண்ணுவண்ணம் எண்ணுவாழிநெஞ்சமே. 113

ஈனமாயவெட்டுநீக்கி ஏதமின்றிமீதுபோய் *
வானமாளவல்லையேல் வணங்கிவாழ்த்தென்னெஞ்சமே *
ஞானமாகிஞாயிறாகி ஞாலமுற்றுமோரெயிற்று *
ஏனமாயிடந்தமூர்த்தி யெந்தைபாதமெண்ணியே. 114

** அத்தனாகியன்னையாகி ஆளுமெம்பிரானுமாய் *
ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்து நம்மையாட்கொள்வான் *
முத்தனார்முகுந்தனார் புகுந்துநம்முள்மேவினார் *
எத்தினாலிடர்க்கடல்கிடத்தி யேழைநெஞ்சமே. 115

மாறுசெய்தவாளரக்கன் நாளுலப்பவன்றிலங்கை *
நீறுசெய்துசென்றுகொன்று வென்றிகொண்டவீரனார் *
வேறுசெய்துதம்முளென்னை வைத்திடாமையால் * நமன்
கூறுசெய்துகொண்டு இறந்தகுற்றமெண்ணவல்லனே. 116

அச்சநோயொடல்லல் பல்பிறப்பவாயமூப்பிவை *
வைத்தசிந்தைவைத்தவாக்கை மாற்றிவானிலேற்றுவான் *
அச்சுதனனந்தகீர்த்தி ஆதியந்தமில்லவன் *
நச்சுநாகணைக்கிடந்த நாதன்வேதகீதனே. 117

சொல்லினுந்தொழிற்கணும் தொடக்கறாதவன்பினும் *
அல்லுநன்பகலினோடு ஆனமாலைகாலையும் *
வல்லிநாண்மலர்க்கிழத்தி நாதபாதபோதினை *
புல்லியுள்ளம்வீள்விலாது பூண்டுமீண்டதில்லையே. 118

* பொன்னிசூழரங்கமேய பூவைவண்ணமாயகேள் *
என்னதாவியென்னும் வல்வினையினுட்கொழுந்தெழுந்து *
உன்னபாதமென்னநின்ற ஒண்சுடர்க்கொழுமலர் *
மன்னவந்துபூண்டு வாட்டமின்றியெங்கும்நின்றதே. 119

* இயக்கறாதபல்பிறப்பில் என்னைமாற்றியின்றுவந்து *
உயக்கொள்மேகவண்ணனண்ணி யென்னிலாயதன்னுளே *
மயக்கினான்தன்மன்னுசோதி ஆதலாலென்னாவிதான் *
இயக்கெலாமறுத்து அறாதவின்பவீடுபெற்றதே. 120

பூவாறைந்து மூன்று நின்று நாக மொன்றாகி தாது தன்னுள் சொல்;—சொல்லுல கின்னை தூய்மை அங்கம் தலை ஏக விடத்த புள் கூசமரங்கன;— அரங்கன் பண்டு வானிறக் கங்கை வரத்திலாண் விண் படை பரத்தில் வானகம் கால;— கால றாக்கு மின்னாதி அம்பாடகம் காய்த்த கடம் வெற்பானை யாயன்; ஆயன் வேறு வெஞ்சினப் பால் மண் தோடு கார் குன்று கொண்டை வெண்டிரை சரம்; சரம் பொற்றை மோடி இலை மன்னிலங்கை சங்கு மரம் சாலி செழு நடந்த; நடந்த கரண்டம் நன்று நின்றது நிற்ப தின்று சண்ட முத்திறம் காணில் குந்தம் வண்டு;— வண்டு போதில் மரம்பொத வறிந்தொன்றிப் புன்புல வெட்டுச் சோர்வு பத்தின் வாசி கடை;- கடை எத்திரம் மட்டுப்பின் நச்சராச் சாடு நெற்றி வெள்ளை பார் குலம் பண்;— பண் விடை சுரும்பூன் அடக்க வரம்பு வெய்ய மறம் காட்டிப் பிறப்பிரந்து; இரந்து விள் திருக் கடும் மண்கறுத்துக் காய்சினக் கேடு சுருக்குத் தூயன் வைது; வைது வாள் சல மீனம் அத்தன் மாறச்சம் சொல் பொன்னி யியக்கறாக் காவல் ... .... ....

திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.

திருச்சந்தவிருத்தம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

# தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருமாலை.

தனியன்

மற்றொன்றும் வேண்டா மனமே மதிளரங்கர்
கற்றினம்மேய்த்த கழலிணைக்கீழ்— உற்ற
திருமாலைபாடுஞ்சீர்த் தொண்டரடிப்பொடியெம்
பெருமானை யெப்பொழுதும் பேசு.

---

** காவலிற் புலனைவைத்துக் கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து *
நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர்தலைகள்மீதே *
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வநின்னாமங்கற்ற *
ஆவலிப்புடைமைகண்டாய் அரங்கமாநகருளானே. 1

** பச்சைமாமலைபோல்மேனி பவளவாய்கமலச்செங்கண் *
அச்சுதாவமரரேறே ஆயர்தம்கொழுந்தேயென்னும் *
இச்சுவைதவிரயான்போய் இந்திரலோகமாளும் *
அச்சுவைபெறினும்வேண்டேன் அரங்கமாநகருளானே. 2

வேதநூல்பிராயம்நூறு மனிசர்தாம் புகுவரேலும் *
பாதியுமுறங்கிப்போகும் நின்றவிப்பதினையாண்டு *
பேதைபாலகனதாகும் பிணிபசிமூப்புத்துன்பம் *
ஆதலால்பிறவிவேண்டேன் அரங்கமாநகருளானே. 3

மொய்த்தவல்வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால் *
கத்திரபந்துமன்றே பராங்கதிகண்டுகொண்டான் *
இத்தனையடியரானார்க்கு இரங்கும்நம்மரங்கனாய *
பித்தனைப்பெற்றுமந்தோ பிறவியுள்பிணங்குமாறே. 4

பெண்டிரால்சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு *
உண்டிராக்கிடக்கும்போதும் உடலுக்கேகரைந்துநைந்து *
தண்டுழாய்மாலைமார்பன் தமர்களாய்ப்பாடியாடி *
தொண்டுபூண்டமுதமுண்ணாத் தொழும்பர்சோறுகக்குமாறே. 5

மறஞ்சுவர்மதிளெடுத்து மறுமைக்கேவெறுமைபூண்டு *
புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர் *
அறஞ்சுவராகிநின்ற அரங்கனார்க்காட்செய்யாதே *
புறஞ்சுவர்கோலஞ்செய்து புள்கவ்வக்கிடக்கின்றீரே. 6

புலையறமாகிநின்ற புத்தோடுசமணமெல்லாம் *
கலையறக்கற்றமாந்தர் காண்பரோகேட்பரோதாம் *
தலையறுப்புண்டும்சாகேன் சத்தியங்காண்மினையா *
சிலையினாலிலங்கைசெற்ற தேவனேதேவனாவான். 7

வெறுப்பொடுசமணர்முண்டர் விதியில்சாக்கியர்கள் * நின்பால்
பொறுப்பரியனகள்பேசில் போவதேநோயதாகி *
குறிப்பெனக்கடையுமாகில் கூடுமேல்தலையையாங்கே *
அறுப்பதேகருமங்கண்டாய் அரங்கமாநகருளானே. 8

மற்றுமோர்தெய்வமுண்டே மதியிலாமானிடங்காள் *
உற்றபோதன்றிநீங்கள் ஒருவனென்றுணரமாட்டீர் *
அற்றமேலொன்றறியீர் அவனல்லால்தெய்வமில்லை *
கற்றினம்மேய்த்தவெந்தை கழலிணைபணிமினீரே. 9

நாட்டினான்தெய்வமெங்கும் நல்லதோரருள்தன்னாலே *
காட்டினான்திருவரங்கம் உய்பவர்க்குய்யும்வண்ணம் *
கேட்டிரேநம்பிமீர்காள் கெருடவாகனனும்நிற்க *
சேட்டைதன்மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே. 10

ஒருவில்லாலோங்குமுந்நீர் அடைத்துலகங்களுய்ய *
செருவிலேயரக்கர்கோனைச் செற்றநம்சேவகனார் *
மருவியபெரியகோயில் மதிள்திருவரங்கமென்னா *
கருவிலேதிருவிலாதீர் காலத்தைக்கழிக்கின்றீரே. 11

நமனும்முற்கலனும்பேச நரகில்நின்றார்கள்கேட்க *
நரகமேசுவர்க்கமாகும் நாமங்களுடையநம்பி *
அவனதூரரங்கமென்னாது அயர்த்துவீழ்ந்தளியமாந்தர் *
கவலையுள்படுகின்றாரென்று அதனுக்கேகவல்கின்றேனே. 12

எறியுநீர்வெறிகொள்வேலை மாநிலத்துயிர்களெல்லாம் *
வெறிகொள்பூந்துளபமாலை விண்ணவர்கோனையேத்த *
அறிவிலாமனிசரெல்லாம் அரங்கமென்றழைப்பராகில் *
பொறியில்வாழ்நரகமெல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே. 13

** வண்டினமுரலும்சோலை மயிலினமாலும்சோலை *
கொண்டல்மீதணவும்சோலை குயிலினம்கூவும்சோலை *
அண்டர்கோனமரும்சோலை அணிதிருவரங்கமென்னா *
மிண்டர்பாய்ந்துண்ணும்சோற்றை விலக்கிநாய்க்கிடுமினீரே. 14

மெய்யர்க்கேமெய்யனாகும் விதியிலாவென்னைப்போல *
பொய்யர்க்கேபொய்யனாகும் புட்கொடியுடையகோமான் *
உய்யப்போமுணர்வினார்கட்கு ஒருவனென்றுணர்ந்தபின்னை *
ஐயப்பாடறுத்துத்தோன்றும் அழகனூரரங்கமன்றே. 15

சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடிசைந்தகாலம் *
மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை *
போதரேயென்றுசொல்லிப் புந்தியில்புகுந்து * தன்பால்
ஆதரம்பெருகவைத்த அழகனூரரங்கமன்றே. 16

விரும்பிநின்றேத்தமாட்டேன் விதியிலேன்மதியொன்றில்லை *
இரும்புபோல்வலியநெஞ்சம் இறையிறையுருகும்வண்ணம் *
சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே.

இனிதிரைத்திவலைமோத எறியுந்தண்பரவைமீதே *
தனிகிடந்தரச்செய்யும் தாமரைக்கண்ணனெம்மான் *
கனியிருந்தனையசெவ்வாய்க் கண்ணனைக்கண்டகண்கள் *
பனியரும்புதிருமாலோ என்செய்கேன்பாவியேனே. 18

** குடதிசைமுடியைவைத்துக் குணதிசைபாதம்நீட்டி *
வடதிசைபின்புகாட்டித் தென்திசையிலங்கைநோக்கி *
கடல்நிறக்கடவுளெந்தை அரவணைத்துயிலுமாகண்டு *
உடலெனக்குருகுமாலோ என்செய்கேனுலகத்தீரே. 19

பாயுநீரரங்கந்தன்னுள் பாம்பணைப்பள்ளிகொண்ட *
மாயனார்திருநன்மார்வும் மரதகவுருவும்தோளும் *
தூயதாமரைக்கண்களும் துவரிதழ்ப்பவளவாயும் *
ஆயசீர்முடியும்தேசும் அடியரோர்க்ககலலாமே. 20

பணிவினால்மனமதொன்றிப் பவளவாயரங்கனார்க்கு *
துணிவினால்வாழமாட்டாத் தொல்லைநெஞ்சேநீசொல்லாய் *
அணியினார்செம்பொனாய அருவரையனையகோயில் *
மணியனார்கிடந்தவாற்றை மனத்தினால்நினைக்கலாமே. 21

பேசிற்றேபேசலல்லால் பெருமையொன்றுணரலாகாது *
ஆசற்றார்தங்கட்கல்லால் அறியலாவானுமல்லன் *
மாசற்றார்மனத்துளானை வணங்கிநாமிருப்பதல்லால் *
பேசத்தானாவதுண்டோ பேதைநெஞ்சேநீசொல்லாய். 22

கங்கையிற்புனிதமாய காவிரிநடுவுபாட்டு *
பொங்குநீர்பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள் *
எங்கள்மாலிறைவனீசன் கிடந்ததோர்கிடக்கைகண்டும் *
எங்ஙனம்மறந்துவாழ்கேன் ஏழையேனேழையேனே! 23

வெள்ளநீர்பரந்துபாயும் விரிபொழிலரங்கந்தன்னுள் *
கள்வனார்கிடந்தவாறும் கமலநன்முகமும்கண்டும் *
உள்ளமேவலியைபோலும் ஒருவனென்றுணரமாட்டாய் *
கள்ளமேகாதல்செய்து உன்கள்ளத்தேகழிக்கின்றாயே. 24

குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தணமைதன்னை *
ஒளித்திட்டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன் *
களிப்பதென்கொண்டுநம்பீ கடல்வண்ணாகதறுகின்றேன் *
அளித்தெனக்கருள்செய்கண்டாய் அரங்கமாநகருளானே. 25

போதெல்லாம்போதுகொண்டு உன்பொன்னடிபுனையமாட்டேன் *
தீதிலாமொழிகள்கொண்டு உன்திருக்குணம்செப்பமாட்டேன் *
காதலால்நெஞ்சமன்பு கலந்திலேனதுதன்னாலே *
ஏதிலேனரங்கர்க்கெல்லே என்செய்வான்தோன்றினேனே. 26

குரங்குகள்மலையைநூக்கக் குளித்துத்தாம்புரண்டிட்டோடி *
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலும்போலேன் *
மரங்கள்போல்வலியநெஞ்சம் வஞ்சனேன் நெஞ்சுதன்னால் *
அரங்கனார்க்காட்செய்யாதே அளியத்தேனயர்க்கின்றேனே. 27

உம்பராலறியலாகா ஒளியுளாரானைக்காகி *
செம்புலாலுண்டுவாழும் முதலைமேல்சீறிவந்தார் *
நம்பரமாயதுண்டே நாய்களோம்சிறுமையோரா *
எம்பிராற்காட்செய்யாதே யென்செய்வான்தோன்றினேனே. 28

ஊரிலேன்காணியில்லை உறவுமற்றொருவரில்லை *
பாரில்நின்பாதமூலம் பற்றிலேன்பரமமூர்த்தி *
காரொளிவண்ணனே கண்ணனே கதறுகின்றேன் *
ஆருளர்களைகணம்மா அரங்கமாநகருளானே. 29

மனத்திலோர்தூய்மையில்லை வாயிலோரின்சொலில்லை *
சினத்தினால்செற்றம்நோக்கித் தீவிளிவிளிவன்வாளா *
புனத்துழாய்மாலையானே பொன்னிசூழ்திருவரங்கா *
எனக்கினிக்கதியென்சொல்லாய் என்னையாளுடையகோவே. 30

தவத்துளார்தம்மிலல்லேன் தனம்படைத்தாரிலல்லேன் *
உவர்த்தநீர்போல என்றனுற்றவர்க்கொன்றுமல்லேன் *
துவர்த்தசெவ்வாயினார்க்கே துவக்கறத்துரிசனானேன் *
அவத்தமேபிறவிதந்தாய் அரங்கமாநகருளானே. 31

ஆர்த்துவண்டலம்பும்சோலை அணிதிருவரங்கந்தன்னுள் *
கார்த்திரளனையமேனிக் கண்ணனேயுன்னைக்காணும் *
மார்க்கமொன்றறியமாட்டா மனிசரில்துரிசனாய *
மூர்க்கனேன்வந்துநின்றேன் மூர்க்கனேன்மூர்க்கனேனே. 32

மெய்யெல்லாம்போகவிட்டு விரிகுழலாரில்பட்டு *
பொய்யெல்லாம்பொதிந்துகொண்ட போழ்க்கனேன்வந்துநின்றேன் *
ஐயனேயரங்கனே உன்னருளென்னுமாசைதன்னால் *
பொய்யனேன்வந்துநின்றேன் பொய்யனேன்பொய்யனேனே. 33

உள்ளத்தேயுறையும்மாலை உள்ளுவானுணர்வொன்றில்லா *
கள்ளத்தேன்நானும்தொண்டாய்த் தொண்டுக்கேகோலம்பூண்டு *
உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்றே *
வெள்கிப்போயென்னுள்ளேநான் விலவறச்சிரித்திட்டேனே. 34

தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டவெந்தாய் *
சேவியேனுன்னையல்லால் சிக்கெனச்செங்கண்மாலே *
ஆவியேயமுதே யென்றனுருயிரனையவெந்தாய் *
பாவியேனுன்னையல்லால் பாவியேன்பாவியேனே. 35

மழைக்கன்றுவரைமுனேந்தும் மைந்தனேமதுரவாறே *
உழைக்கன்றேபோலநோக்கம் உடையவர்வலையுள்பட்டு *
உழைக்கின்றேற்கென்னைநோக்காதொழிவதே உன்னையன்றே
அழைக்கின்றேன் * ஆதிமூர்த்தி அரங்கமாநகருளானே. 36

தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துள்ளோங்கும் *
ஒளியுளார்தாமேயன்றே தந்தையும்தாயுமாவார் *
எளியதோரருளுமன்றே என்திறத்தெம்பிரானார் *
அளியன்நம்பையலென்னார் அம்மவோகொடியவாறே. 37

** மேம்பொருள் போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து *
ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கி *
காம்பறத்தலைசிரைத்து உன்கடைத்தலையிருந்துவாழும் *
சோம்பரையுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே. 38

அடிமையில்குடிமையில்லா அயல்சதுப்பேதிமாரில் *
குடிமையில்கடைமைபட்ட குக்கரில்பிறப்பரேலும் *
முடியினில்துளபம்வைத்தாய் மொய்கழற்கன்புசெய்யும் *
அடியரையுகத்திபோலும் அரங்கமாநகருளானே. 39

திருமறுமார்பநின்னைச் சிந்தையுள்திகழவைத்து *
மருவியமனத்தராகில் மாநிலத்துயிர்களெல்லாம் *
வெருவுறக்கொன்றுசுட்டிட்டு ஈட்டியவினையரேலும் *
அருவினைப்பயனதுய்யார் அரங்கமா நகருளானே. 40

வானுளாரறியலாகா வானவாவென்பராகில் *
தேனுலாந்துளபமாலைச் சென்னியாவென்பராகில் *
ஊனமாயினகள்செய்யும் ஊனகாரகர்களேலும் *
போனகம்செய்தசேடம் தருவரேல்புனிதமன்றே. 41

பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள் *
இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் *
தொழுமினீர்கொடுமின்கொள்மின் என்றுநின்னோடுமொக்க *
வழிபடவருளினாய்போல் மதிள்திருவரங்கத்தானே. 42

அமரவோரங்கமாறும் வேதமோர்நான்குமோதி *
தமர்களில்தலைவராய சாதியந்தணர்களேலும் *
நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவிலாங்கே *
அவர்கள்தாம்புலையர்போலும் அரங்கமாநகருளானே. 43

பெண்ணுலாம்சடையினானும் பிரமனுமுன்னைக்காண்பான் *
எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார்வெள்கிநிற்ப *
விண்ணுளார்வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த
கண்ணறு(ய்) * உன்னையென்னோ களைகணுக்கருதுமாறே. 44

** வளவெழுந்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள் *
கவளமால்யானைகொன்ற கண்ணனையரங்கமாலை *
துளவத்தொண்டாயதொல்சீர்த் தொண்டரடிப்பொடிசொல் *
இளையபுன்கவிதையேலும் எம்பிராற்கினியவாறே. 45

அடி வரவு:—காவல் பச்சை வேதம் மொய்த்த பெண்டிர் மறம் புலை வெறுப்பு மற்றும் நாட்டினான் ஒரு; நமனும் எறி வண்டு மெய் சூது விரும்பி இனிது குட பாய் பணி பேசு கங்கை; வெள்ளம் குளித்து போது குரங்கு உம்பரால் ஊர் மனம் தவமார்த்து மெய் யுள்ளம் தாவி; மழை தெளி மேம்பொரு ளடிமை திரு வான் பழுதில் அமரப் பெண் வளவெழும் கதிர்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.

திருமாலை முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ:

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பள்ளியெழுச்சி.

தனியன்கள்.

தமேவ மத்வா பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம்,
ப்ராபோதிகீம் யோக்ருத ஸூக்திமாலாம் பக்தாங்க்ரிரேணும்பகவந்தமீடே.

மண்டங்குடியென்பர் மாமறையோர்மன்னியசீர்த்
தொண்டரடிப்பொடி தொன்னகரம்—வண்டு
திணர்த்தவயல்தென்னரங்கத்தம்மானைப் பள்ளி
யுணர்த்தும்பிரானுதித்த வூர்.

---

**கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான் கனவிருளகன்றதுகாலையம்பொழுதாய் *
மதுவிரிந்தொழுகினமாமலரெல்லாம் வானவரரசர்கள்வந்துவந்தீண்டி *
எதிர்திசைநிறைந்தனரிவரொடும்புகுந்த இருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும் *
அதிர்தலிலலைகடல்போன்றுளதெங்கும் அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 1

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக் கூர்ந்ததுகுணதிசைமாருதமிதுவோ *
எழுந்தனமலரணைப்பள்ளிகொள்அன்னம் ஈன்பனிநனைந்ததமிருஞ்சிறகுதறி *
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய் வெள்ளெயிறுறவதன்விடத்தினுக்கனுங்கி *
அழுங்கியவானையினருந்துயர்கெடுத்த அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே.

சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம் துன்னியதாரகைமின்னொளிசுருங்கி *
படரொளிபசுத்தனன்பனிமதியிவனோ பாயிருளகன்றதுபைம்பொழிற்கமுகின் *
மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற வைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ *
அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 3

மேட்டிளமேதிகள்தளைவிடுமாயர்கள் வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும் *
ஈட்டியவிசைதிசைபரந்தனவயலுள் இரிந்தனசுரும்பினமிலங்கையர்குலத்தை *
வாட்டியவரிசிலைவானவரேறே மாமுனிவேள்வியைக்காத்து * அவபிரத
மாட்டியவடுதிறலயோத்தியெம்மரசே அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே.

புலம்பினபுட்களும்பூம்பொழில்களின்வாய் போயிற்றுக்கங்குல்புகுந்ததுபுலரி *
கலந்ததுகுணதிசைக்கனைகடலரவம் களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த *
அலங்கலந்தொடையல்கொண்டடியிணைபணிவான் அமரர்கள்புகுந்தனராதலிலம்மா *
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில் எம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. 5

இரவியர்மணிநெடுந்தேரொடுமிவரோ இறையவர்பதினொருவிடையருமிவரோ *
மருவியமயிலினனறுமுகனிவனோ மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டி *
புரவியோடாடலும்பாடலும் தேரும்குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம் *
அருவரையனையநின்கோயில்முன்னிவரோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 6

அந்தரத்தமரர்கள்கூட்டங்களிவையோ அருந்தவமுனிவரும்மருதருமிவரோ *
இந்திரனானையும்தானும்வந்திவனோ எம்பெருமானுன்கோயிலின்வாசல் *
சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க இயக்கரும்மயங்கினர்திருவடிதொழுவான் *
அந்தரம்பாரிடமில்லைமற்றிதுவோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 7

வம்பவிழ்வானவர்வாயுறைவழங்க மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா *
எம்பெருமான்படிமைக்கலம்காண்டற்கு ஏற்பனவாயினகொண்டுநன்முனிவர் *
தும்புருநாரதர்புகுந்தனரிவரோ தோன்றினனிரவியும்துலங்கொளிபரப்பி *
அம்பரதலத்தில்நின்றகல்கின்றதிருள்போய் அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 8

ஏதமில்தண்ணுமையெக்கம்மத்தளி யாழ்குழல்முழவமோடிசைதிசைகெழுமி *
கீதங்கள்பாடினர்கின்னரர்கருடர்கள் கெந்தருவருமிவர்கங்குலுமெல்லாம் *
மாதவர்வானவர்சாரணரியக்கர் சித்தரும்மயங்கினர்திருவடிதொழுவான் *
ஆதலிலவர்க்குநாளோலக்கமருள அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 9

** கடிமலர்க்கமலங்கள் மலர்ந்தனவிவையோ கதிரவன்கனைகடல்முளைத்தனனிவனோ * துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித் துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா * [யென்னு தொடையொத்ததுளவமுங்கூடையும்பொலிந்து தோன்றியதோள்தொண்டரடிப்பொடி மடியனை * அளியனென்றருளியுன்னடியார்க்காட்படுத்தாய் பள்ளியெழுந்தருளாயே. 10

அடிவரவு: கதிர் கொழு சுடர் மேட்டு புலம்பின இரவியர் அந்தரம் வம்பு ஏதம் கடி அமலன்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.

திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று.

---

ஸ்ரீ:

திருப்பாணாழ்வார் அருளிச்செய்த

# அமலனாதிபிரான்

---

**தனியன்கள்**

ஆபாதசூட மநுபூய ஹரிம் சயாநம் மத்யே கவேரதுஹிதுர் முதிதாந்தராத்மா,
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம் யோ நிச்சிகாய மநவை முநிவாஹநம் தம்.

காட்டவேகண்டபாத கமலநல்லாடையுந்தி
தேட்டருமுதரபந்தந்திருமார்வு கண்டஞ்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள்பரவினோமே.

---

** அமலனாதிபிரான் அடியார்க்கென்னையாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் *
நிமலன்நின்மலன்நீதிவானவன் நீண்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந்து என்கண்ணினுள்ளனவொக்கின்றதே. 1

உவந்தவுள்ளத்தனாய் உலகமளந்தண்டமுற *
நிவந்தநீண்முடியன் அன்றுநேர்ந்தநிசாசரரை *
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத்தம்மான் * அரைச்
சிவந்தவாடையின்மேல் சென்றதாமெனசிந்தனையே. 2

** மந்திபாய்வடவேங்கடமாமலை * வானவர்கள்
சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவினணையான் *
அந்திபோல்நிறத்தாடையும் அதன்மேலயனைப்படைத்ததோரெழில் *
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தினுயிரே. 3

சதுரமாமதிள்சூழிலங்கைக்கிறைவன் தலைபத்து
உதிரவோட்டி * ஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன் *
மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் * திருவயிற்
றுதரபந்தம் என்னுள்ளத்துள்நின் றுலாகின்றதே. 4

பாரமாய பழவினைபற்றறுத்து * என்னைத்தன்
வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றியென்னுள்புகுந்தான் *
கோரமாதவம்செய்தனன்கொலறியேன் அரங்கத்தம்மான் * திரு
வாரமார்பதன்றோ அடியேனையாட்கொண்டதே. 5

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூழ் அரங்கநகர்மேயவப்பன் *
அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலமெழுமால்வரை * முற்று
முண்டகண்டங்கண்டீர் அடியேனையுய்யக்கொண்டதே. 6

கையினார்சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் * துளபவிரையார் கமழ்நீண்முடியெம்
ஐயனார் * அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாயனார் *
செய்யவாய்ஐயோ என்னைச்சிந்தைகவர்ந்ததுவே. 7

பரியனாகிவந்த அவுணனுடல்கீண்ட * அமரர்க்
கரியவாதிப்பிரான் அரங்கத்தமலன்முகத்து *
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி * நீண்டவப்
பெரியவாயகண்கள் என்னைப்பேதைமைசெய்தனவே. 8

** ஆலமாமரத்தினிலைமேல் ஒருபாலகனாய் *
ஞாலமேழுமுண்டான் அரங்கத்தரவினணையான் *
கோலமாமணியாரமும் முத்துத்தாமமும்முடிவில்லதோரெழில் *
நீலமேனிஐயோ நிறைகொண்டதென்னெஞ்சினையே. 9

** கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணெ
யுண்டவாயன் * என்னுள்ளம்கவர்ந்தானை *
அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக்
கண்டகண்கள் * மற்றொன்றினைக்காணாவே. 10

அடிவரவு:—அமலன் உவந்த மந்தி சதுரம் பாரம் துண்டம் கை பரி ஆலம் கொண்டல் கண்ணி. திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்.

அமலனாதிபிரான் முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நம்மாழ்வாரையன்றித் தேவுமற்றறியாத மதுரகவியாழ்வார் அருளிய

# கண்ணிநுண்சிறுத்தாம்பு.

---

தனியன்கள்.

அவிதிதவிஷயாந்தரச் சடாரே: உபநிஷதாமுபகாநமாத்ரபோக:,
அபிச குணவசாத் ததேகசேஷீ மதுரகவிர் ஹ்ருதயே மமாவிரஸ்து.

வேறொன்றும்நானறியேன் வேதந்தமிழ்செய்த மாறன்சடகோபன் வண்குருகூர்—ஏறெங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியாரெம்மை ஆள்வாரவரேயரண்.

---

**கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணியபெருமாயன்*என்னப்பனில்*
நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்கால்*அண்ணிக்குமமுதூறும் என்நாவுக்கே. 1

நாவினால்நவிற்றி இன்பமெய்தினேன்*மேவினேன் அவன்பொன்னடிமெய்ம்மையே*
தேவுமற்றறியேன் குருகூர்நம்பி*பாவினின்னிசை பாடித்திரிவனே. 2

திரிதந்தாகிலும் தேவபிரானுடை*கரியகோலத் திருவுருக்காண்பன்நான்*
பெரியவண்குருகூர் நகர்நம்பிக்காளுரியனாய்*அடியேன்பெற்றநன்மையே. 3

நன்மையால்மிக்க நான்மறையாளர்கள்*புன்மையாகக் கருதுவராதலின்*
அன்னையாயத்தனாய் என்னையாண்டிடும்தன்மையான்*சடகோபனென்நம்பியே. 4

நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையும்*நம்பினேன் மடவாரையும்முன்னெலாம்*
செம்பொன்மாடத் திருக்குருகூர்நம்பிக்கன்பனாய்*அடியேன் சதிர்த்தேனின்றே. 5

இன்றுதொட்டும் எழுமையுமெம்பிரான்*நின்றுதன்புகழ் ஏத்தவருளினான்*
குன்றமாடத் திருக்குருகூர்நம்பி*என்றுமென்னை யிகழ்விலன்காண்மினே. 6

கண்டுகொண்டென்னைக் காரிமாறப்பிரான்*பண்டைவல்வினை பாற்றியருளினான்*
எண்டிசையும் அறியவியம்புகேன்*ஒண்டமிழ்ச் சடகோபனருளையே. 7

அருள்கொண்டாடும் அடியவரின்புற*அருளினான் அவ்வருமறையின்பொருள்*
அருள்கொண்டு ஆயிரமின்றமிழ்பாடினான்*அருள்கண்டீர் இவ்வுலகினில்மிக்கதே. 8

மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள்*நிற்கப்பாடி யென்னெஞ்சுள்நிறுத்தினான்*
தக்கசீர்ச் சடகோபனென்னம்பிக்கு*ஆட்புக்ககாதல் அடிமைப்பயனன்றே. 9

**பயனன்றாகிலும் பாங்கலராகிலும்*செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான்*
குயில்நின்றார்பொழில்சூழ் குருகூர்நம்பி*முயல்கின்றேன் உன்றன்மொய்கழற்கன்பையே. 10

*அன்பன்றன்னை அடைந்தவர்கட்கெல்லாமன்பன்*தென்குருகூர் நகர்நம்பிக்கு*
அன்பனாய் மதுரகவிசொன்னசொல்நம்புவார்பதி*வைகுந்தங்காண்மினே. 11

**அடிவரவு** — கண்ணி நாவி திரி நன்மை, நம்பினே னின்று கண்டருள், மிக்கபயனன்பன்வாடி.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்

முதலாயிரம் முற்றுப்பெற்றது.

| | | | | |
|---|---|---|---|---|
| திருப்பல்லாண்டு | பாட்டு ... 12 | | திருச்சந்த விருத்தம் | ... 120 |
| பெரியாழ்வார் திருமொழி | ,, ... 461 | | திருமாலை | ... 45 |
| திருப்பாவை | ,, ... 30 | | திருப்பள்ளியெழுச்சி | ... 10 |
| நாச்சியார் திருமொழி | ,, ... 143 | | அமலனாதிபிரான் | ... 10 |
| பெருமாள் திருமொழி | ,, ... 105 | | கண்ணிநுண் சிறுத்தாம்பு | ... 11 |

ஆக, முதலாயிரத்திலுள்ள பாட்டுக்கள் மொத்தம். 947

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

முதலாயிரத்திலுள்ள பிரபந்தங்களை யருளிச்செய்தவர்களான

**பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமழிசைப்பிரான், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், மதுரகவியாழ்வார்**

ஆகிய இவர்களின் வைபவம் எழுதப்படுகின்றது.

# பெரியாழ்வார் வைபவம்

### ஆழ்வாருடைய திருத்தொண்டு.

இவ்வாழ்வார் பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் ஆனி மாதத்து ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் வேயர்குலத்திலவதரித்து விஷ்ணுசித்தரென்று திருநாமமுடையவராய் வட பெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே எம்பெருமானுக்குத் தொண்டு பூண்டு அமுதமுண்கையையே இயல்வாகவுடையராய், 'எம்பெருமான் திருவுள்ளத்துக்கு எந்த கைங்கரியம் உகப்போ, அதுவே நாம் செய்யத் தக்கது' என்று உறுதிகொண்டு ஆராய்ந்து பார்த்தவளவில், ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் கம்ஸனுக்குப் பணிசெய்துகொண்டிருந்த மாலாகாரருடைய மனையிலே யெழுந்தருளிப் பூமாலையை இரந்து பெற்று அணிந்து கொண்டானென்கிற கதையை அநுஸந்தித்துப் புஷ்பம் ஸமர்ப்பிக்கையே எம்பெருமான்றனக்கு உவப்பு' என்று நிச்சயித்துத் திருநந்தவனஞ் செய்து வடபெருங் கோயிலுடையானுக்குத் திருமாலை கட்டிச் சாத்தி வந்தார்.

### மதுரையரசனது செய்தி.

இங்ஙனிருக்கையில் பாண்டிய குலத்திற் பிறந்த ஸ்ரீ வல்லப தேவனென்னு மரசன் மதுரையில் தர்மிஷ்டனாய் அரசாட்சிபுரிந்து கொண்டிருக்குங் காலத்தில் ஒரு நாளிரவில் நகர சோதனைசெய்து திரியும்போது ஒரு தெருத் திண்ணையின்மேல் ஒருவன் படுத்திருக்கக் கண்டு அவனை யெழுப்பி 'நீ யார்' என்று கேட்க, 'நான் ஒரு பிராமணன்; கங்கை நீராடி மீண்டு வருகிறேன்.'' என்று அவன் சொல்ல 'உனக்கு ஏதாவது நீதி தெரிந்திருந்தால் சொல்லு பார்ப்போம்' என்று அரசன் சொல்ல; அந்த அந்தணன்,

*வர்ஷார்த்தம்ஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிசார்த்தமர்த்தம் திவஸம் யதேத.
வார்த்தக்யஹேதோர் வயஸா நவேந பரத்ரஹேதோரிஹ ஜந்மநா ச.*

என்ற ச்லோகத்தைச் சொன்னான். [இதன் பொருள்:—மழை காலத்தில் வேண்டியவற்றுக்காக மற்ற எட்டு மாதங்களில் முயற்சிசெய்ய வேண்டியது; இராக் காலத்துக்கு வேண்டியவற்றுக்காகப் பகற்போதில் முயற்சி செய்ய வேண்டியது. கிழத்தனத்தில் வேண்டியவற்றுக்காக யௌவனத்தில் முயற்சி செய்ய வேண்டியது; பரலோக போகத்திற்காக இப்பிறவி முழுவதும் முயற்சி செய்யவேண்டியது என்பதாம்.]

### மதுரையில் பண்டித ஸமாஜம் திரளுதல்.

அரசன் விவேகியாகையால் இந்த ச்லோகத்தைக் கேட்டதும் ''நமக்கோ இஹலோகத்தில் போகங்களுக்கு ஒரு குறையில்லை. இனிப் பரலோக நற்கதிக்கு முயலவேண்டும். இதற்கு என்ன வழி?'' என்று அன்றிரவு முழுதும் இதுவே சிந்தையாயிருந்து, பொழுது விடிந்தவுடனே தன்னுடைய புரோஹிதரான செல்வநம்பியை வரவழைத்து ''நால்வகைப் புருஷார்த்தங்களையும் அளிக்கவல்ல பரதத்துவம் இன்னதென்று நிச்சயிப்பதற்கு என்ன உபாயம்?'' என்று கேட்க; 'வித்வான்களைத் திரட்டி அவர்களைக் கொண்டு இதனை நிர்ணயிக்க வேணும்' என்று அவர் சொல்ல; ராஜாவும் அப்படியே நல்லதென்று இசைந்து அளவற்ற பொருள்களை ஒரு சீலையில் முடிந்து அந்தப் பொற்கிழியை வித்யாசுல்கமாக ஸபாமண்டபத்தின் முன்னிலையில் உயரக் கட்டுவித்துப் ''பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை வைதிக ப்ரமாணங்களால்

நிர்ணயித்துச் சொல்லுகிறவர் இந்தப் பொற்கிழியைப் பெறுதற்கு உரியர்" என்று பலவிடங்களிலும் பிரசுரப் படுத்தினவளவில், அத்தேசத்திலும் மற்றும் பல தேசங்களிலு மிருந்து பலவகை மதத்துப் பல பண்டிதர்கள்வந்து திரண்டனர்.

## எம்பெருமான் விஷ்ணுசித்தர்க்குக் கனவிலே அருள்செய்தல்.

அப்போது ஸ்ரீ வில்லிபுத்தூரெம்பெருமான் ஸ்ரீ விஷ்ணு சித்தரைக்கொண்டு வேதாந்த ஸித்தமான பரதத்துவத்தைப் பிரகாசப்படுத்தி உலகத்தை வாழ்விக்க வேணுமென்று திருவுள்ளங்கொண்டு அந்த அடியவருடைய கனவிலே எழுந்தருளி 'நீர் மதுரைக்கு விரைந்து சென்று பாண்டிய ராஜனுடைய பண்டித ஸபையிற் சேர்ந்து ஸ்ரீமந் நாராயணனே பரம் பொருளென்று ஸ்தாபித்துப் பொற்கிழியை அறுத்துக்கொண்டுவாரும்' என்று நியமனம் தந்தருள, அதற்கு அவர் 'சிறிதும் சாஸ்த்ர ஞானமில்லாத அடியேன் எங்ஙனம் இதனைச் செய்ய வல்லேன்?' என்ன. எம்பெருமான், 'அதைப்பற்றி உமக்கென்ன கவலை? அந்த பாரம் நம்முடையதன்றோ?' என்றருளிச்செய்து மறைந்தான்.

## விஷ்ணுசித்தர் வித்வத்ஸபையில் விரைந்து கிழியறுத்தல்.

அநந்தரம் விஷ்ணுசித்தர் எழுந்து ஆச்சரியப்பட்டு எம்பெருமானது நியமனப்படியே நடக்க நிச்சயித்து உடனே புறப்பட்டுப் பாண்டியராஜ பண்டித ஸபையிலெழுந்தருளின வளவிலே, அவரைக்கண்ட அரசனுக்கும் புரோஹிதர்க்கும் 'இவரிடத்தில் ஏதோ விசேஷமிருக்கிறது' என்று தம்மில் தோன்றினபடியால் பரமகௌரவத்துடனே எதிர்கொண்டழைத்தல் திருவடிதொழுதல் முதலியவற்றால் உபசரித்து ஸபைநடுவே சீரியசிங்காசனத்தில் வீற்றிருக்கச் செய்தனர். இவர்கள் இப்படி பஹுமாநித்ததைக் கண்டு மற்றுள்ள வித்வான்களெல்லோரும் பொறாமைகொண்டு அளவற்ற வேதசாஸ்திரங்களைப் பயின்றுள்ள எங்கட்கெல்லாம் அகௌரவமுண்டாகுமாறு ஒன்றுந்தெரியாத வொருவரை இப்படி கௌரவிப்பது அயுக்தம்' என்று சொல்லி ஆக்ஷேபிக்க, செல்வநம்பி அவர்களை அடக்கி விஷ்ணுசித்தரை நோக்கி "தேவரீர் பரம க்ருபையுடன் பரதத்வநிர்ணயம் செய்தருளவேணும்' என்று பிரார்த்திக்க; அந்த விஷ்ணு சித்தர் கனவில் காட்சிதந்த கமலைகேழ்வனுடைய கருணையைக் கனக்க நம்பியிருந்தபடியால் எம்பெருமானைச் சிந்தைசெய்ய; அவ்வளவிலே பகவத் க்ருபையாலே அவருக்கு ஸகலசாஸ்த்ரார்த்தங்களும் கைகொள் நெல்லிக் கனியாக இலங்கின. இங்ஙனம் எம்பெருமானினருளால் ஸர்வஜ்ஞரான விஷ்ணுசித்தர் அப்போது ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களிலிருந்து பலவாக்கியங்களைப் பிரமாணமாக எடுத்துக்காட்டி அவற்றின் அர்த்தங்களையும் தாமே ஆக்ஷேப ஸமாதாநங்களோடு யுக்தி யுக்தமாக வெளியிட்டு இதர மதக்கொள்கைகளையெல்லாம் கண்டித்து ஸ்ரீவைஷ்ணவ மதமே ப்ராமாணிகமென்றும், ஸ்ரீமந் நாராயணனே பரம புருஷனென்றும், அவனைச் சரணமடைவதே சிறந்த மார்க்கமென்றும் பரக்க உபந்யஸித்துப் பரதத்வ ஸ்தாபநம் பண்ணினவளவிலே, முன்பு பொறாமையாலே தூஷித்த வித்வான்களெல்லாரும் ஒன்றும் வாய்திறக்க வழியில்லாமல் வெள்கித் தலை கவிழ, வல்லபதேவனும் செல்வநம்பியும் அவருடைய ஞான வைபவத்தைக்கண்டு கொண்டாடி ஸாஷ்டாங்கமாக விழுந்து ஸேவித்தனர். முன்பு அரசனால் ஒரு கம்பத்தி னுச்சியிற்கட்டி நிறுத்தப்பட்ட பொற்கிழி தானாகவே ஆழ்வார் முன்னே தாழ விழ்ய, இதுவும் ஒரு பகவத் க்ருபையென்று உவந்து ஆழ்வார் அதனை அறுத்துக் கொண்டருளினர்.

## ஆழ்வார்க்குப் பட்டர்பிரானென்று திருநாமமாதலும், பரமபதநாதன் ஸேவை ஸாதித்தலும்.

அதைக்கண்ட அரசனும் புரோஹிதரும் மற்றும் பல பண்டிதர்களும் ஆழ்வாரை யடி பணிந்து மிகப்புகழ்ந்து அவரைப் பட்டத்து யானையின் மேலேற்றிக் குடைசாமரம் மகர தோரணம் முதலியவற்றைத் தாங்களே பணிமாறிக்கொண்டு கூடவேயிருந்து திருவீதிகளிலே மஹோத்ஸவம் செய்வித்தார்கள். அக்காலத்தில் அவர் பண்டிதர்களனைவர்க்கும் தலைவராய் விளங்கினமையால் ராஜா அவர்க்குப் பட்டர்பிரான் என்று திருநாமம் சாத்திப் பல விருதாவளிகளைக் கோஷிக்க, திருச்சின்னம் ஒலிசெய்ய, வெற்றிச் சங்கமெடுத்தூத, இப்படிப்பட்ட வைபவத்துடனே ஆழ்வார் மஹோத்ஸவம் கண்டருள்வதைப் பார்த்து ஆநந்திக்க விரும்பிய பரமபதநாதன் பிராட்டியுடனே பெரிய திருவடியின் மீதேறி எதிரில் வந்து தோன்றினன்.

### ஆழ்வார் திருப்பல்லாண்டு பாடுதல்.

மகனுடைய மஹோத்ஸவத்தைக் காணவரும் மாதாபிதாக்களைப்போலே தம்முடைய உத்ஸவத்தைக் காணவந்த திருமாலைக் கண்ட ஆழ்வார் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் அந்த தேவாதி தேவனுடைய ஸர்வஜ்ஞத்வம் முதலிய திருக்குணங்களை அநுஸந்திப்பதற்கு முன்னே ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களிற் கண் செலுத்தி அவற்றையே ஸேவித்து ஈடுபட்டு ஆழ்ந்த பக்தி பரவசராய் அதனால் தம்முடைய நிலைமையையும் எம்பெருமானுடைய நிலைமையையும் மறந்து "காலம் நடையாடாத பரம பதத்திலே இருக்குமிப் பரமபுருஷன் காலம் நடையாடுகிற இந்தலோகத்தில் வந்து நிற்கிறானே, இவனுக்கு என்ன தீங்கு வருமோ!' என்று மிகவும் அஞ்சி, இந்த திவ்யமங்கள விக்ரஹத்துக்கு எவ்விதமான அவத்யமும் நேரிடாதிருக்கவேணும் என்று மங்களாசாஸநம் பண்ணுகிறவராய் யானை மணிகளையே தாளமாகக்கொண்டு திருப் பல்லாண்டு என்னும் திவ்ய ப்ரபந்தத்தைப் பாடினார்.

### பெரியாழ்வார்திருமொழி அவதரித்தல்.

அநந்தரம் ஆழ்வார் தம்மைச் சரணமடைந்த பாண்டிய குலபதியைக் குளிரக் கடாக்ஷித்துப் பாகவத கோஷ்டியில் ஒருவனுக்கிவிட்டு ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கெழுந்தருளி, கிழியிற்கிடைத்த பொருள்களையெல்லாம் வடபெருங்கோயிலுடைய பெருமாள் திருமுன்பே வைத்துத் தெண்டன் ஸமர்ப்பித்து அந்தப் பொருளால் அங்கே கோபுரம் கட்டுவித்துப் பழையபடி நந்தவன கைங்கரியமே நடத்திவருகையில், க்ருஷ்ணவதாரத்திலே மிகவும் ஈடுபட்டு ஆழ்ந்தவராகையால் அவ்வவதார சரிதைகளையே பிரதானமாகப் பாராட்டி அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான ஆநந்தம் உள்ளடங்காமற் பெருகவே அதைப் பிரபந்த முகமாக வெளியிடத்தொடங்கிப் பெரியாழ்வார் திருமொழியென்னும் திவ்ய ப்ரபந்தத்தையும் அருளிச்செய்தார். ... ...

பெரியாழ்வார் வைபவம் முற்றிற்று.

---

## ஆண்டாள் வைபவம்

### ஆண்டாள் பிறந்து வளர்தல்.

முன்பு திரேதாயுகத்திலே விதேஹ தேசத்தில் மிதிலைமா நகரில் ஜநக மஹாராஜன் யாக சாலை அமைத்தற் பொருட்டுக் கலப்பைகொண்டு பூமியை உழுகையில், அவ்வுழுபடைச்சாலிலே ஸ்ரீதேவியின் அம்சமான ஒரு மகள் தோன்ற, அவளை அவ்வரசன் தன் புத்திரியாகப் பாவித்துச் சீதையென்று திருநாமஞ்சாத்தி வளர்த்து வந்தான். அதுபோலவே பின்பு கலியுகத்திலே பாண்டியநாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரிலே பெரியாழ்வார் திருத்துழாய்ப் பாத்தியமைத்தற் பொருட்டுக் களைக்கொட்டுக் கொண்டு திருநந்தவனத்தைக் கொத்துகையில் அக்கொத்தின் நிலத்தில் ஸ்ரீதேவி பூதேவிகளின் அம்சமான ஒரு மகள் ஆடிமாசத்துப் பூர்வ பல்குநி நாளிலே தோன்ற, அவளை அவ்வாழ்வார் தமது மகளாகப் பாவித்துக் கோதை என்று நாமகரணஞ்செய்து வளர்க்கலானார். நுகரப்படும் பொருள் ஒரு சிறிதுமில்லாத வறியவனொருவன் பெருநிதியைக் கண்டாற்போல, அப்பெண்ணருங்கலத்தைக் கண்டவளவிலே பெருங்களிப்புக்கொண்டு மிக அருமையாகச் சீராட்டிப் பாராட்டித் தாலாட்டிப் பாலூட்டிப் பாலித்துவந்த பட்டர்பிரான், அவளுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து பரமஞானத்தைப் போதித்தனர்.

### ஆண்டாள் சூடிக்கொடுத்த நாச்சியாரென்று திருநாமம் பெறுதல்.

தந்தை முதலியோர் கண்டு வியக்கும்படி இளமை தொடங்கி எம்பெருமான் பக்கலிலே பக்திப் பெருவேட்கைகொண்டு அவனையே தான் மணஞ்செய்துகொள்ளக் கருதி, அப்பிரானது மஹிமைகளையே எப்பொழுதும் சிந்தித்தல், துதித்தல் முதலியன செய்து நிற்கிற அச்சுரிகுழற் கோதை நாடோறும் விஷ்ணுசித்தர் வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்துதற்காகக் கட்டி வைத்த திருமாலையை அவரில்லாத ஸமயம் பார்த்து எடுத்துத் தன் குழலிலே தரித்துக் கொண்டு, 'அப்பெருமானுக்கு நான் நேரொத்திருக்கின்றேனோ இல்லையோ' என்று சிறந்த ஆபரணங்களை அணிந்து உயர்ந்தபட்டாடையை உடுத்துத் தன்னை அலங்கரித்து அவ்வொப்பனையழகைக் கண்ணாடியிலே கண்டு தந்தையார் வருவதற்கு முன் மலர்மாலையைக் களைந்து

முன்போலவே செண்டாகச் சுற்றிப் பூங்கூடையினுள்ளே நலங்காமல் வைத்து வந்தாள். ரஹஸ்யமாக நடக்கிற அச்செய்தியை உணராமல் ஆழ்வார் அம்மாலையைக் கொண்டுபோய் ஸ்வாமிக்குச் சாத்திவர, பெருமானும் ப்ரீதியுடன் ஏற்றருளினன்.

இங்ஙனம் பலநாள் கழிந்தபின் ஒருநாள், வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில் மீண்டு வந்தபொழுது, பூமாலையைக் கோதை சூடியிருத்தலைப் பார்த்துக் கோபங்கொண்டு "பெண்ணே! நீ செய்த இது மிக்க அபசாரமான காரியம்; இனி இவ்வாறு செய்தற்கு நினைப்புங் கொள்ளாதே" என்று நங்கைக்கு நற்புத்தி சொல்லிவிட்டு அன்று வடபத்திரசாயிக்கு மாலை சாத்தாமல் திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்ததற்கு மனம் வருந்தியிருந்தார். அற்றை நாளிரவில் ஆலிலைத்துயில்வோன் ஆழ்வாரது கனவில் தோன்றி, 'இன்று நீர் நமக்கு மாலை கொண்டு வாராதிருந்தது ஏன்?' என்று வினவியதற்கு, அவர் தம் திருமகளாரது பொருந்தாச் செய்கையை விண்ணப்பஞ்செய்ய, அது கேட்டு அப்பெருமாள், 'அவள் சூடிக்கொடுத்த மாலையே காண் நறுமணமிக்கு நமது உள்ளத்துக்கு நனி உகப்பாவது; ஆதலின் இனி அத்தன்மைத்தான தொடையலையே நமக்குக் கொண்டுவருவீராக' என்றருளிச் செய்தனன். உடனே கண்விழித்த விஷ்ணுசித்தர் அம்மங்கையை மலர் மங்கையென்றே எண்ணி அவள்திறத்து அளவற்ற அன்புகொண்டு அனைத்துலகத்துக்கும் அன்னையாய் அவற்றை ஆண்டு வருகிற இலக்குமியின் அவதார விசேஷமென்ற காரணத்தால் அவளுக்கு 'ஆண்டாள்' என்றும் மாதவனுக்குரிய மலர்மாலையைத் தான் சூடிக்கொண்டு பார்த்துப் பின்புகொடுத்தது காரணமாகச் 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என்றும் திருப்பெயரிட்டு அழைத்துவந்தார்.

### ஆண்டாள் திவ்வியப் பிரபந்தங்களருளிச்செய்தல்.

அந்நாச்சியார் தனது பருவம் வளருந்தோறும் ஞானபக்திகளும் உடன் வளர்ந்து வரப்பெற்று, தனக்கு ஏற்ற காதலனாகக் கருதிய கடல்வண்ணன் விஷயமான வேட்கை விஞ்சியவளாகி இனி அவனை ஒரு நொடிப்பொழுதும் கூடாதிருக்கப்பொறாமல், கண்ணனது பிரிவை ஆற்றாத ஆயர்மங்கைகள்போலத் தானும் நோன்பு நோற்று உயிர்தரிப்பவளாய் அவ்வபிப்ராயத்தைத் திருப்பாவை நாச்சியார் திருமொழி என்ற திவ்வியப் பிரபந்தங்களின் மூலமாகப் பகவத் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்து வாழ்ந்திருந்தாள்.

### ஆண்டாள் ஸ்வயம்வரம்.

இப்படியிருக்கையில், இவட்கு விவாஹத்துக்கு ஏற்றபருவம் வந்ததைக்கண்டு தந்தையார் இவளுக்கு ஏற்றகொழுநனைக் காணப்பெறாது கவலைப்பட்டு இவளையழைத்து 'நீ யாருக்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய்?' என்று வினவ, ஆண்டாள் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றுசொல்ல, பட்டர்பிரான் 'பின்னை எங்ஙனம் நிகழ்வது?' என்று கேட்க, சூடிக்கொடுத்தாள் 'பெருமாளுக்கே உரியவளாகவிருக்கிறேன்' என்று கட்டுரைத்தாள்.

அதுகேட்டு விஷ்ணுசித்தர், 'நூற்றெட்டுத்திருப்பதிகளிலுள்ள எம்பெருமான்களுள் யார்க்கு வாழ்க்கைத்துணைவியாகத்துணிகின்றாய்?' என்று விசாரித்தலும், கோதை, அவ்வப்பெருமான்களுடைய வைபவத்தை விளங்க எடுத்துக்கூறி யருளவேண்டும் என வேண்ட, வேயர்குலத்தலைவரும் அவ்வாறே எடுத்து அருளிச்செய்து வருகையில், ஆண்டாள் வடமதுரையில் எழுந்தருளியுள்ள கண்ணபிரானது வரலாற்றைக் கேட்ட வளவிலே மயிர்ச் சிலிர்ப்பும், திருவேங்கட முடையானது வரன்முறையைச் செவியுற்றபொழுது முகமலர்ச்சியும் திருமாலிருஞ்சோலைமலை யழகரது வடிவழகை அறிந்த மாத்திரத்தில் மன மகிழ்ச்சியும் பெற்று ஸ்ரீரங்கநாதனது மஹிமை செவிப்பட்டவுடனே அளவற்ற ஆனந்த மடைந்து நிற்க, அப்பொழுது அந்தந்தத் திருப்பதி எம்பெருமான்களெல்லாம் அவளது சுயம்வரத்தை யுத்தேசித்து ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு எழுந்தருளி இவளது ஞானக்கண்ணுக்கு விஷயமாக, இவள் அவர்களுள் ரங்கநாதனிடத்தே மனத்தைச் செலுத்தி அவனுக்கே தன்னை மணமகளாக நிச்சயித்து அவ்வமலனையே ஸர்வகாலமும் சிந்தித்திருந்தாள்.

### பெரியாழ்வார் ஆண்டாளுடன் ஸ்ரீரங்கம் புறப்படுதல்.

அதனையறிந்து ஆழ்வார் 'நம்பெருமாள் இவளைக் கடிமணம் புரிதல் கைகூடுமோ' என்று சிந்தித்திருக்கையில், திருவரங்கச் செல்வன் இவருடைய ஸ்வப்நத்திலே யெழுந்தருளி "உமது

திருமகளைக் கோயிலுக்கு அழைத்துக்கொண்டு வாரும். அவளை யாம் அங்கீகரிப்போம்" என்று அருளிச்செய்ய, அதனால் விஷ்ணுசித்தர் வியாகுலம் நீங்கி மனமகிழ்ந்திருந்தனர். பின்பு ஸ்ரீரங்கநாதன் ஸ்தாநிகர் முதலிய கோயிற் பரிஜனங்களுடைய கனவிலேதோன்றி 'நீங்கள் ஸகலமங்கள வாத்தியங்களோடும் சத்திர சாமராதிகளோடும் நமது நவரத்தினப் பல்லக்கையும் உடன்கொண்டு வில்லிபுத்தூருக்குச் சென்று ஆண்டாளைப் பல்லக்கிலேற்றி அழைத்துவாருங்கள்' என்று கட்டளையிட்டான். அவ்வாறே எல்லாப் பரிகரத்தாரும் சென்று பெரியாழ்வாரையடுத்து நம்பெருமாளது அருளப்பாட்டை விண்ணப்பஞ் செய்ய, கர்ணம்ருதமான அவ்வார்த்தையைச் செவியாரக் கேட்டுச் சந்தோஷித்து, கோதைதாதை, வடபெருங்கோயிலுடையானுடைய ஸந்நிதியிலே ஸ்ரீரங்கநாதனது நியமனத்தை விண்ணப்பஞ்செய்து அநுமதி பெற்றுப் பிரயாணமாயினர்.

## வல்லபதேவராஜனும் வந்துசேர்தல்.

அச்செய்தியைக் கேள்வியுற்று ஸ்ரீவல்லபதேவன் அக்கல்யாண மஹோத்ஸவத்தைத் தானும் உடனிருந்து விசேஷமாக நடத்திக்கண்டு களிகூர்ந்து க்ருதார்த்தனாகக் கருதித் தன் ஏவலாளரைக் கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரையும் ஸ்ரீரங்கநகரையும் இவ்விரண்டுக்கும் நடுவிலுள்ள நெடுவழியையும் தண்ணீர் தெளித்தும் பூப்பந்தரிட்டும் தோரணங்கட்டியும் வாழை கமுகு நாட்டியும் நன்றாக அலங்கரிப்பித்துக் கஜதுரங்காதி சதுரங்க பலத்துடனே ஆழ்வார் பக்கல் வந்து சேர்ந்தான்.

## ஆண்டாள் நம்பெருமாளுடைய திருமேனியில் அந்தர்ப்பவித்தல்.

அப்பால் பட்டர்பிரான் ஆண்டாளை மணிச்சிவிகையில் எழுந்தருளப்பண்ணி மங்களவாத்திய கோஷத்துடனே 'ஆண்டாள் வந்தாள்! சூடிக்கொடுத்த சுடர்க்கொடிவந்தாள்! சுரும்பார் குழற்கோதை வந்தாள்! திருப்பாவை பாடிய செல்வி வந்தாள்! பட்டர்பிரான் புதல்விவந்தாள்! வேயர் குலவிளக்கு வந்தாள்!' என்று பல சின்னங்கள் பணிமாற, மெய்க்காப்பாளர் உடன் சூழ்ந்து நிற்க, தாமும் அரசனுமாக இருபுறத்தும் இடைவிடாதிருந்து அழைத்துவந்து திருவரங்கம் பெரியகோயிலை யடைந்து பெரியபெருமாளுடைய முன் மண்டபத்திலே அப்பிராட்டியை நிறுத்திப் பெருமாளைச் சேவிக்கப் பண்ணுவிக்கையில், அத்திருமாலின் திவ்விய ஸௌந்தர்யம் இரும்பைக் காந்தம் இழுக்கின்ற வாறுபோல ஆண்டாளைக் கவரத் தொடங்கியதனால், சூடிக்கொடுத்த நாச்சியார் சிலம்பார்க்கச் சீரார் வளையொலிப்பக் கொடியேரிடையாடக் காதளவு மோடிக் கயல்போல் மிளிருங்கடைக்கண் பிறழ அன்னமென்னடை கொண்டு அருகிற்சென்று ஆனந்தக்கடலில் ஆழ்ந்து திருவரங்கன் திருவடி வருடக் கருதி நாகபரியங்கத்தை மிதித்தேறி நம்பெருமாளது திருமேனியிலே அந்தர்ப்பவித்து அவனை என்றும் பிரியாதிருப்பவளாயினள்.

## ஆழ்வார் அருளிப்பாடு பெறுதல்.

அவ்வண்ணம் அரும்பேறு பெற்றதைத் தரிசித்து ஆழ்வாரும் அவர் சிஷ்யனான வல்லபதேவனுள்ளிட்டாரும் அதிசயித்து நிற்கையில், திருவரங்கமுடையான் அர்ச்சகமுகமாக ஆழ்வாரை அருகிலழைத்து க்ஷீரஸமுத்ரராஜன்போல நீரும் நமக்கு மாமனாராய் விட்டீர் என்று முகமன் கூறித் தமது தீர்த்தம் திருப்பரிவட்டம் மாலை ஸ்ரீசடகோபன் முதலியவற்றை ப்ரஸாதித்து 'வில்லிபுத்தூருறைவானுக்கே தொண்டுபூண்டிரும்' என்று திருவாய் மலர்ந்து விடைகொடுத்தருளினான். அநந்தரம் ஆழ்வார் *ஒரு மகள்தன்னை யுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டுபோனான், பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும்பிள்ளை பெற்றவசோதை, மருமகளைக்கண்டு உகந்துமணாட்டுப் புறஞ்செய்யுங்கொலோ* என்று போர உகந்து அரிதிற்பிரிந்து ஸ்ரீவில்லிபுத்தூர்க்குச் சென்று முன்போலவே கைங்கரியநிரதராய்ச் சண்பகம், மல்லிகை, பாதிரி, செங்கழுநீர், புன்னை, குருக்கத்தி, இருவாட்சி முதலிய பல மலர்களுடன் ஆர்வமென்பதோர் பூவையும் இட்டுக்கொண்டு எண்பத்தைந்து வருஷகாலம் வாழ்ந்திருந்து பேரானந்தப்பெரும்பத மடைந்தனர். ... ... *

ஆண்டாள் வைபவம் முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ குலசேகராழ்வார் வைபவம்

கோழிக்கூடு என்னும் ராஜதானியில் அரசாண்ட த்ருடவ்ரதன் என்ற அரசன் வெகுநாளளவும் பிள்ளையில்லாத குறையால் திருமாலுக்கு விசேஷமான ஆராதனத்தைச்செய்ய, அதன் பயனாக அவனுக்கு ஒரு குமாரன் மாசி மாதத்தில் புநர்வஸு நக்ஷத்திரத்திலே, பட்டத்து இராணியினிடத்தில் திருவஞ்சிக்களமென்கிற ஊரிலே கௌஸ்துபாம்சமாய் அவதரித்தனன். அச்செய்தியை அறிந்த அரசன் ஆநந்தக்கடலில் ஆழ்ந்து, உரியகாலத்தில் நாமகரணஞ் செய்யத்தொடங்கி இம்மகன் தன் குலத்துக்குச் சிரோபூஷணம்போலச் சிறப்புத் தந்து யாவராலும் கொண்டாடத் தக்கவனெனக் கொண்டு 'குலசேகரன்' எனப்பெயரிட்டான்.

பின்பு அவ்விளமகன் நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாகச் சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்போல வளர்ந்து சௌளமும் உபநயநமும் தக்க பருவங்களில் தந்தையாற் செய்விக்கப்பெற்று நல்லாசிரியரைத் துணைகொண்டு நான்கு வேதங்களையும் ஆறு சாஸ்திரங்களையும் தநுர் வித்தையையும், மற்றும் அரசர்க்கு உரிய நீதிநூல்களையும் யானை குதிரை தேர் முதலியவற்றின் நூல்களையும் சிறிது காலத்திலேயே ஐயந்திரிபற முற்றுங் கற்று வல்லனாயினன். அம்மைந்தனது திறத்தைக் கண்டு களிப்புக் கொண்ட காவலன் அவனுக்கு இளவரசு முடி சூட்டினன்.

### ஸ்ரீ குலசேகரர் விருதுகள் பெறுதல்

பின்னர், குலசேகரன் பராக்கிரமத்தாற் பகைவெல்லலுற்று நால்வகைச் சேனையோடு புறப்பட்டுச் சென்று, சோழ பாண்டியர் முதலிய அரசர்களனைவரையும் புறங்கொடுத்தோடுமாறு வென்று அவர்களைக் கீழ்ப்படுத்தி அவர்கள் நாடுகளைத் தம் வசப்படுத்தி இங்ஙனம் சேர சோழ பாண்டிய மென்னும் தமிழ் நாடு மூன்றுக்கும் தலைமை பூண்டதனால் "கொல்லி காவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்னும்படி பல பிருதுகளைப் பெற்று மீண்டு வந்தனன். பிறகு த்ருடவ்ரத மஹாராஜா குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து ராஜ்ய பாரம் முழுவதையும் அம்மகன் தோளில் நிலைநிறுத்தி க்ஷத்ரிய ஜாதி முறைப்படியே தான் தவஞ்செய்து உயர்கதி பெறுதற் பொருட்டுத் தவவனஞ் சென்றான்.

### குலசேகரர்க்கு எம்பெருமான் நல்லறிவூட்டுதல்

தந்தையின் பிரிவுக்கு ஆற்றாது வருந்தி மந்திரிகள் தேற்றத் தேறிய மன்னவ குமாரன், மத்யஸ்த நிலைமை தவறாது, சிறியவற்றைப் பெரியவை நலியாதபடி ராம ராஜ்யம் என்னுமாறு எதிரின்றி அரசாண்டு ஒரு பெண் மணியை மணந்து, திருமாலின் தேவிமார் மூவருள் நீளாதேவியின் அம்சமான இளை என்னும் ஒரு புத்திரியையும் த்ருடவ்ரதனென்று பிதாமஹன் பெயரையே பெறும் ஒரு புத்திரனையும் பெற்றுக் கவலையற்றிருக்கையில், இம்மை மறுமை வீடு என்னும் மும்மையின்பங்களையும் தரவல்லனாய் முதலும் முடிவும் அற்ற முழுமுதற் கடவுள் யாரோ? என்று பரதத்வ விசாரம் பண்ணத் தொடங்கிப் பல பண்டிதர்களுடனே ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் முதலிய ஸகல கலைகளையும் பரிசோதித்துப் பார்த்து வர, அதுவே ஸமயமென்று அவ்வரசனை ஆட்கொண்டு உய்விக்கக் கருதிய கருணாநிதியான கமலக்கண்ணனது திருவருள் நோக்கத்தால் ஸ்ரீமஹாவிஷ்ணுவே சிறந்த தெய்வமென்கிற ஸத்யமான ஸித்தாந்தம் அவனது ஞானக்கண்ணுக்குத் தெள்ளிதிற் புலப்பட்டது.

### ஆழ்வாருடைய நிஷ்டா விசேஷங்கள்

இப்படி எம்பெருமானை எல்லாவுயிர்கட்கும் இறைவனாக அறிந்து அப்பிரானது அநந்தகல்யாண குணகணங்களாகிய பெருங்கடலில் ஆழ்ந்து நெஞ்சுருகி ஈடுபட்ட இந்தக் குலசேகராழ்வார், திருமாலின் விபவாவதாரங்களில் ஸ்ரீ ராமாவதார கிருஷ்ணாவதாரங்களினிடத்திலும் அர்ச்சாவதாரத்தில் திருவரங்கம், திருவேங்கடம் முதலிய திவ்யதேசத்து எம்பெருமான்களிடத்திலும், மிக்க பக்திப் பெருங்காதல் கொண்டு, ஸ்ரீ ராமாயண காலக்ஷேபத்தையே எப்போதும் தமக்குப் போது போக்காகப் பெற்றும், ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டால் எதிர்கொண்டு அழைத்து வந்து விசேஷமாக உபசரித்தும் தமது திருமாளிகைத் திருவாராதநத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ராமபிரானுக்கும் ஸ்ரீ ராஜகோபாலனுக்கும் நித்யநைமித்திக உத்ஸவங்களைக் குறையறச் செய்துகொண்டிருந்தார்.

### ஆழ்வாருடைய வ்யாமோஹாதிசயம்

இவர் ஒருநாள் ஸ்ரீ ராமாயண காலக்ஷேபஞ் செய்து வருகையில், ஆரண்ய காண்டத்தில் 'இராவணன் தங்கையான சூர்ப்பணகை மூக்கு அறுப்புண்டு (தனக்குத் துணையாக இராவணனால் நியமிக்கப்பட்டு) ஜநஸ்தாநத்திலிருந்த கரதூஷணாதியரிடத்திற் போய் முறையிட்டதை யறிந்து அவர்கள் அதி உக்ரமாக எண்ணிறந்த சேனைகளைத் திரட்டிக்கொண்டு படை யெடுத்து வந்த சமயத்தில், பெருமாள் பிராட்டிக்குக் காவலாக இருக்கும்படி இளையபெருமாளைப் பர்ணசாலையிலே நிறுத்திவிட்டுத் தமக்கு ஒருவருந் துணையின்றித் தாம் தனியே அவ்வரக்கர்களனைவரோடும் போர்க்குச்சென்று நின்றார்; என்று பௌராணிகர் சொல்லக்கேட்டவுடனே, ஸ்ரீ ராம சரித்திரத்தில் தமக்குள்ள அன்பினால் வெகு காலத்துக்கு முன்பு நடந்த அந்தச் சரித்திரத்தை அன்றுதான் நடக்கின்றதாக நினைத்து, இப்படிப் பட்ட ஸங்கட காலத்தில் எம்மால் இயன்ற உதவியைச் செய்யாது விடுவது சிறிதும் தக்கதன்று' என்று துணிந்து தமது சேனைகளை யெல்லாம் போர்க்குச் சித்தமாய் முன் செல்லும்படி பணித்துத் தாமும் ஜநஸ்தாநத்தை நோக்கிப் புறப்பட்டார். அச்சமயத்தில் யாவரும் இன்னதென்று அறியாது திடுக்கிட்டு நிற்கையில், அதி நிபுணரான புராணாசிரியர், "இராமபிரான் தாம் ஒருவராகவே நிர்ப்பயமாகப் பெரும்போர்செய்து சத்துருக்களத்தனை பேரையும் வென்று தமது ஆச்ரமத்துக்கு மீண்டுவர அவரைச் சீதாதேவி களிப்புடன் அணைத்து அவரது இளைப்பைத்தணித்தார்"—என்ற செய்தியை எடுத்துக்கூற, அதுகேட்ட ஆழ்வார் ஆநந்தமடைந்து சேனையைத் திருப்பிக்கொண்டு தாமும் பிரயாணத்தை நிறுத்தினார். அதுமுதல், இராமாயணங் கூறுபவர் எந்தெந்த பாகத்தில் இராமனது விஜயப்ரஸ்தாவம் வருகின்றதோ, அந்தந்தப் பாகத்தையே வளர்த்தி யுரைத்தும், அரக்கராதியரால் இராமனுக்குத் துன்பம் நேர்ந்த இடங்களையெல்லாம் சுருக்கி யுரைத்தும் வந்தனர். இப்படி யிருக்கையில், ஒருநாள் அந்தக் குரு வேறொரு காரியநிமித்தம் தாம் அவசியமாக வேறிடஞ் செல்லவேண்டி வந்ததனால் காலக்ஷேபஞ் சொல்லுதற்குத் தாம் வராமல் தமது குமாரரை அனுப்பினார்.

### ஆழ்வாருக்கு இராமபிரான் காட்சி தருதல்

அவர், குலசேகரருடைய இயற்கையை உணராமல் இராவணன் ஸீதையை எடுத்துப்போன வ்யஸநகரமான செய்தியை உபந்யாஸஞ் செய்ய அது செவியிற் பட்டவுடனே குலசேகரர் மனங்கொதித்து 'நான் இப்பொழுதே வெகுவிரைவாகச் சென்று கடல் கடந்து இலங்கையை நீறுபடுத்தி ராக்ஷஸராஜனைப் பந்துமித்திரரோடும் போரில் தொலைத்து எனது அன்னையை மீட்டு வருவேன்' என்று சொல்லி

எழுந்து ஆயுதங்களை யெடுத்துக் கொண்டு ஸேநாஸமூஹத்தோடு இலங்கை நோக்கிப் பிரயாணமானார். அப்பொழுது விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் இதைக்கண்டு பெருவியப்புக் கொண்டு 'இதன் முடிவு என்னகுமோ?' என்று பெருங்கவலையோடு பார்த்து நின்றனர். ஆழ்வார் கடலை நீந்தியே கடக்க நிச்சயித்துக் கழுத்தளவினதான தண்ணீரில் இறங்கி நின்ற சமயத்தில் இவரது அன்புக்கு இடமான இராமமூர்த்தி, இவரைத் தடுப்பதற்கு வேறுவகை யொன்றும் இல்லாமையைக் கருதி, தாம் நேரிலே சீதையைக் கைப்பற்றிக் கொண்டு இலக்குமணனேடு எதிரில் நின்று தரிசனந் தந்து, தமது போர் வெற்றியையும் சத்துருவிநாசத்தையும் தேவியை மீட்டதையும் தெளிவாகக் கூறி, பிறவிப் பெருங்கடலினின்று கரையேற்றுதற்கு ஓர் அறிகுறியாகுமாறு இவரைக் கரையேற்றி நகரினுட் செலுத்தி விட்டு, பின்பு மறைந்தருளினர்.

### ஆழ்வார் ஸ்ரீரங்கம் சென்று சேரவிரும்புதல்

இப்படி எம்பெருமானுடைய திவ்ய சரித்திரங்களைக் கேட்பதில் மிக்க அன்புடையரான குலசேகரர் புராணங்களிற் கூறப்பட்ட ஸ்ரீரங்கக்ஷேத்ர மேன்மையைக் கேட்டு, 'திருவரங்கத்தை நோக்கிப் பிரயாணப்பட்டுச் செல்லுதலும், அத்திருப்பதிக்குச் செல்லவேண்டுமென்ற விருப்பமும் ஸகல கருமங்களையும் தொலைக்கும்' என்ற தன்மையும், 'அக்கோயிலில் நித்யவாஸஞ் செய்தலும் நம் பெருமாளைக் கண்ணுரக் கண்டு களித்தலும் பேரின்பத்தைத்தரும்' என்ற தகைமையையும் உணர்ந்து அங்குப் போவதற்கு மிக்க குதூஹலமுடையராய்ப் பரிவாரங்களோடு புறப்படுபவரானர்.

### ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவ பக்தி

இவர் இவ்விடத்தை விட்டு அவ்விடத்துச் சென்று பெரிய பெருமாளைச் சேவிப்பாராயின் பின்பு இங்கு மீளுதல் அரிது என்றும், அங்குத்தானே நித்ய வாஸஞ் செய்யக் கருதி விடுவரென்றும் நினைத்து அந்த யாத்திரையைத் தடுப்பதற்கு ஆலோசித்து மந்திரிகள் ஒருபாயஞ் செய்தனர். அது யாதெனில் :—இவர் ஸ்ரீவைஷ்ணவர்களை உபசரிப்பதில் மிக்க விருப்பமுள்ளவராதலால் அநேக பாகவதர்களை அமைச்சர்கள் வரவழைத்து இவர் முன் செலுத்த, இவர் அறுபதினயிரம் வருஷகாலம் விஷ்ணுவை ஆராதநஞ்செய்த பயனும், ஒருகால் ஸ்ரீவைஷ்ணவர்களைப் பூசித்த பேற்றுக்கு ஈடாகாது என்ற சாஸ்திர முறைமையை அறிந்தவராதலால் ஸ்ரீரங்க யாத்திரையை நிறுத்தி ஷோடசோபசாரத்தோடு திருமாலடியார்களைப் பலவாறு உபசரித்தார். இவ்வாறு இவர் திவ்ய தேசயாத்திரைகளைத் தொடங்கும் பொழுதெல்லாம் மந்திரிகள் மெய்யடியார்களைக் கொணர்ந்து விட்டுத் தடுத்து வந்தனர். ஆழ்வார் இங்ஙனம் அவர்களை அகங்கனிந்த அன்போடு கொண்டாடி வருகையில் அந்நாடெங்கும் ஸ்ரீவைஷ்ணவத் திரள் மிக்கது.

### மந்திரிகளின் சூழ்ச்சியும் ஆழ்வார் குடப்பாம்பில் கையிடுதலும்

அரண்மனையினுள்ளும் ஆலோசனைச் சபாமண்டபத்திலும் இன்னும் அந்தரங்கமான இடங்களிலும் பாகவதர்கள் எக்காலத்திலும் சிறிதுந்தடையின்றிப் போக்கு வரவு செய்தலையும் தமது அரசன் பக்கல் இவர்கள் வரம்பு கடந்த ஸ்வாதந்திரியம் பாராட்டுதலையுங் கண்டு பொறாமை கொண்ட மந்திரிகள் இவர்களிடத்துக் குலசேகரர்க்கு வெறுப்பை உண்டாக்கக் கருதினர். இவ்வாறு இருக்கையில் அனைவரும் கொண்டாடத் தக்க ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம் வந்தது. அதன் பொருட்டு, தோரணம் நாட்டியும் கொடிகள் கட்டியும் வாழை மரங்களை நிறுத்தியும்

நகர் முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. பின்பு திருக்கோயிலில் அர்ச்சகர் இராம மூர்த்திக்கும் மற்ற விக்ரஹ ரூபமாயுள்ள எம்பெருமான்கட்கும் திருமஞ்சனஞ் செய்தற் பொருட்டு அவர்களுடைய திவ்யாபரணங்களையெல்லாம் களைந்து வைத்தனர். பின்பு வேதகோஷத்தோடும் வாத்யகோஷத்தோடும் திருமஞ்சனம் நடந்தேறிற்று. அச்சமயத்தில் யாவரும் ஸ்வாமிஸேவையிலே கருத்து ஊன்றி நிற்கையில் மந்திரிகள் ஒரு நவரத்ந மாலையைத் திருவாபரணத்திரளிலிருந்து எடுத்து ஒளித்து வைத்திட்டனர். பின்பு பெருமாளுக்கு அலங்காரஞ் செய்யும்பொழுது அவ்வணிகலத்தைக் காணாமல் அர்ச்சகர் கவலைப்பட்டு அரசரிடத்து அறிவிக்க, அதுகேட்டு ஆழ்வார் மனங்கலங்கி மந்திரிகளை அழைப்பித்து 'கள்வனை தேடிப் பிடியுங்கள்' என்று கட்டளை யிட்டார். அதுவே வியாஜமாக, அவர்கள் "இது கொண்டு போனவர் வைஷ்ணவரேயன்றி வேறு எவருமல்லர். இவர்களே எப்போதும் இங்குமங்கும் தட்டின்றித் திரிகின்றனர். பிறனொருவன் புதியனாக வந்து அஞ்சாது இத்தொழில் செய்யான்" என்று பாகவதர்மீது அடாப்பழி சுமத்தினர். நாராசம் புக்கதுபோல அக்கடுஞ்சொல் செவிபுகப்பெற்ற ஆழ்வார் ஹரிபக்தர்களின் நற்குண நற்செய்கைகளை நன்றாக அறிந்தவராதலால் அவர்கள் மேற் சிறிதும் சங்கை கொள்ளாமல் அவர்களின் மீது சீற்றங் கூறின தமது மந்திரிகளையே கடிந்து, 'வைஷ்ணவ சிகாமணிகள் ஒருபோதும் இத்தகைய கடுந் தொழிலை நினைத்தலுஞ் செய்யார்; இது திண்ணம்; இதனை உங்கட்கு உறுதிப் படுத்துதற்காக, யானே பிரமாணங்காட்டுவேன்' என்று சொல்லி, பாம்பை உள்ளிட்டதொரு குடத்தைச் சபை முன்பே தருவித்து "ஸ்ரீ வைஷ்ணவர் மனம் மொழி மெய்யென்னும் த்ரிகரணத்தாலும் சுத்தராயின், இப்பாம்பு என்னை யாதொன்றுஞ் செய்யாது; இல்லையாயின், இந்நாகம் இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லுக' என்று சபதஞ் செய்து அக்குடத்தினுள்ளே கையிட்டனர். அப்பொழுது, ஸத்யத்துக்குக் கட்டுப் படுந்தன்மையதான ஸர்ப்பம் சிறிது கொடுமையும் புரியாது தணிந்திருந்தது. அது நோக்கி மந்திரிகள் தமது சூழ்ச்சி சிறிதும் பலியா தொழிந்ததே! என்று வருத்தமும், தேர்ந்த ஆராய்ச்சியின்றி இங்ஙனம் தவறு செய்துவிட்டோமே! என்று அநுதாபமும், இனி நமது கதி என்னாகுமோ என்று பேரச்சமுங் கொண்டு நடு நடுங்கி, தாம் அறியாது செய்த அப்பெரும் பிழையைப் பொறுத்தருளுமாறு பிரார்த்தித்து, ஆழ்வாரது திருவடித்தாமரைகளைச் சரணமடைந்தார்கள் ஆழ்வார் மிக்க பொறுமை யுடையவராதலால் மந்திரிகளின் பிழையைப் பொறுத்து, இனி நீவிர் பாகவதர்கட்கு எப்பொழுதும் பணிவிடை செய்வதே நுமது குற்றந் தீரும் வகை' என்று சொல்லிவிட, அவர்கள் அங்ஙனமே அடியவர்கட்கு அடியராய்க் குறிப்பறிந்து குற்றேவல் புரிந்து பேறு பெற்றனர்.

### ஆழ்வார் ஸ்ரீரங்கவாஸம் செய்தல்

பின்பு குலசேகரர் பொய்ம்மைக்கு இடமான அரசாட்சியில் இருப்பதற்கு இஷ்டப்படாமல் தமது குமாரனை த்ருடவ்ரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைத்துத் தாம் திருவரங்கம் பெரிய கோயிலுக்குச் சென்று நம்பெருமாளைச் சேவித்து, அவ்வழகிய மணவாளனையே தனக்கு உரியமணவாளனாகக் கருதிய தம் திருமகளை அப்பெருமானுக்கே உரிய பொருளாகக் கொடுத்து மணஞ் செய்வித்து, பகவத் பாகவத கைங்கரியங்களை விதிமுறை வழுவாது நித்தியஞ் செய்து கொண்டு அத்திருப்பதியிற் சிலகாலம் இருந்தனர்.

### நிகமனம்

பிறகு மற்றுஞ் சில திவ்ய தேசங்கட்கும் யாத்திரை செய்ய எண்ணி, திருவேங்கடம், திருவயோத்தி, தில்லைத் திருச்சித்திர கூடம், திருக்கண்ணபுரம் திரு

மாலிருஞ்சோலை, திருவித்துவக்கோடு முதலிய திருப்பதிகட்குச் சென்று ஆங்காங்கு எழுந்தருளி யிருக்கின்ற பெருமாளைக் கண்ணாரக் கண்டு சேவித்து, அப்பால் நம்மாழ்வாரது திருவவதாரஸ்தலமான திருக்குருகூர் அருகிலுள்ள பிரமதேசமென்னும் ஊரை யடைந்து, அங்கு ஸ்ரீ ராஜகோபால ஸ்வாமி ஸந்நிதியிற் சில காலந் திருத்தொண்டு செய்து கொண்டிருந்து தமது அறுபத்தேழாவது பிராயத்திற் பரமபதமடைந்தனர். இவர் எம்பெருமானை அநுபவிக்கும்போது அவ்வநுபவத்தாலாகிய ஆநந்தம் உள்ளடங்காமையால் அதனை வெளியே வழிய விடுவாராகி அருளிச்செய்த திவ்யப்ரபந்தம் பெருமாள்திருமொழி யென்பதாம்.

### ஆழ்வார்க்குப் பெருமாள் என்ற திருநாமம்

"அரசமர்ந்தானடி சூடுமரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசு தானே" என்று கோவிந்த பாதாரவிந்தத்தைச் சிரமேற் கொள்ளுதலையே கிரீடாபிஷேகமாகப் பாவிக்கின்ற இவர், பெருமாளுடைய [இராமபிரானுடைய] இன்ப துன்பங்களைத் தமது சுக துக்கங்களாகக் கருதியதனால் இவர்க்குப் பெருமாள் என்றும் ஒரு பெயர் வழங்கும்.

### குலசேகரப்படி ஐதிஹ்யம்

இவ்வாழ்வார், "செடியாயவல்வினைகள் தீர்க்குந்திருமாலே! நெடியானே வேங்கடவா நின் கோயிலின் வாயில், அடியாரும் வானவரும் அரம்பையருங் கிடந்தியங்கும், படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே" என்று வேண்டியமை பற்றி விஷ்ணு வாலயங்களில் கோயிலின் உள்வாயிற்படி, குலசேகரன்படி என்று இவர் பெயரையிட்டு வழங்கப்படும். ... ... ... ... *

குலசேகராழ்வார் வைபவம் முற்றிற்று.

---

# திருமழிசைப்பிரான் வைபவம்

முன்னொரு காலத்தில் அத்ரி, வஸிஷ்டர், ப்ருகு, பார்க்கவர், புலஸ்த்யர், அங்கிரஸ் முதலான ப்ரஹ்மர்ஷிகள் பலரும் ஸத்யலோகத்தைச் சார்ந்து அங்குத் தலைமைபூண்டு வீற்றிருக்கிற பிரமதேவனைத் திருவடி தொழுது கூப்பியகையராய், 'தேவனே! பூலோகத்தில் மிகச்சிறந்ததான க்ஷேத்ரம் இன்னதென்று தெரிந்து ஆங்குச்சென்று பெருந்தவமியற்றக் கருதி இப்பொழுது ஈங்குவந்திருக்கின்ற எங்களுக்கு அத்தகைய திவ்ய ஸ்தானமின்னதென்று நிச்சயித்துச் சொல்லவேணும்' என்று வேண்ட, அவ்வேண்டுகோளுக் கிரங்கிய த்ரிபுவந கர்த்தாவாகிய நான்முகக் கடவுள் உடனே தேவ சிற்பியான விச்வகர்மாவை வருவித்து 'இம்முனிவர்கள் காணுமாறு துலாக்கோல் நாட்டி அதன் ஒரு தட்டில் ஐம்பது கோடியோஜனை விஸ்தீரணமுள்ள பூமி முழுவதையும் மற்றொரு தட்டில் திருமழிசை என்னும் புண்ணிய க்ஷேத்ரமாத்திரத்தையும் வைத்து நிறுப்பாய்' என்று பணிக்க, அங்ஙனம் அவன் செய்தவளவிலே, மண்ணுலக முழுவதையும் நாட்டியதட்டு இலேசுபட்டு மேலோங்கி நிற்க, திருமழிசைப்பதியை இட்ட தட்டு கனம்பெற்றுத் தாழ்ந்து நின்றது.

அவ்வேறுபாட்டைப் பிரமதேவன் அந்த ப்ரஹ்மர்ஷிகளுக்கு நன்கு எடுத்துக்காட்டி அந்த மழிசைப்பதிக்கு 'மஹீஸாரக்ஷேத்ரம்' என்று காரணப்பெயரிட்டு அதிற்போயிருந்து தவம்புரிந்து உயர்கதி புகுமாறு அநுமதி தந்து அவர்களை யனுப்பினார்.

அவ்வண்ணமே அந்த முனிவர்கள் அவ்விடத்தையடைந்து ஐம்பொறி யடக்கி அருந்தவம் புரிந்தனர். அவர்களில் பார்க்கவர் என்கிற முனிவரர் தீர்க்க ஸத்ரமென்ற பெருவேள்வியைச்செய்து அதனால் வாஸுதேவனை ஆராதித்து அதன் பின்னர் அவ்வெம்பெருமானையே குறித்துப் பெருந்தவ மியற்றுகையில், அதனைக் கண்டு பொறாமை கொண்ட தேவர்கள் அத்தவ வொழுக்கத்தை யழிக்கு மாறு அரம்பை, மேனகை, ஊர்வசி, திலோத்தமை முதலிய அப்ஸரஸ் ஸ்திரீகளை ஏவினார்கள், அவ்வரம்பையர் பலர் வந்து இந்த தபஸ்வியின் தபோநிஷ்டையைக் குலைக்கப் பலவாறு முயன்று பார்த்தும் எம்பெருமானது திருவடித் தாமரைகளில் அழுந்திநின்ற அவரது ஹ்ருதயகமலத்தை மீட்க இயலாமல் வெட்கமும் அச்சமும் கொண்டு மீண்டு செல்ல, அவர்களில் அதிநிபுணையான கநகாங்கி யென்னுங் கட்டழகி விஷ்ணுமாயைபோல வேண்டியவுயிர்களை மோஹிப்பிக்கும் வல்லமையுடையாள் மந்மதனையும் வஸந்த காலத்தையும் மற்றும் காமோத்தீபகமான தென்றல் திங்கள் முதலியவற்றையும் உற்ற துணையாகக்கொண்டு அம்முனிவர் முன்னிலையில் ஆடல் பாடல் முதலிய விநோதங்களைச்செய்ய, அப்பொழுது விதி வசத்தால் அவ்வருந்தவர் தமது உள்ளத்தைப் பகவத்த்யானத்தில் நின்றும் மீட்டு அவளது ஸங்கீத ஸாரஸ்யத்தை அநுபவித்துச் செவிபடைத்த ப்ரயோஜனம் பெற்றோமெனக்கருதிக் கண் விழித்து அந்த உத்தமியின் அதிஸௌந்தர்யத்தைக்கண்டு காமுற்று, யோகம் விட்டுப் போகம் விரும்பி அவளோடு கூடிக்குலாவி மோஹ வலையினுட்சிக்கிச் சில காலம் தம்மை மறந்து மந்மத பரவசராய்க் கிடந்தனர்.

## திருமழிசைப்பிரான் அவதாரம்

அக்காலத்துக் கர்ப்பங்கொண்ட அவளது வயிற்றினின்று தைமாதத்தில் மகா நக்ஷத்ரத்தில் ஸுதர்சனமென்னும் திருவாழியின் அம்சமானதொரு கர்ப்பம் வெளியாயிற்று. அஃது அவயவமொன்றும் காணப்படாது பிண்டாக்ருதியாக இருந்ததனால், அத்தேவமாது அதனை வெறுத்து அருகிலுள்ள பிரப்பம்புதரில் எடுத்தெறிந்துவிட்டுத் தன்னுலகம் சென்றனள். பின்பு தம் வசமடைந்த பார்க்கவர் தவமிழந்ததற்குப் பச்சாதாபப்பட்டு வேறோரிடஞ் சென்று மீண்டுந் தவந் தொடங்கலாயினர். இது நிற்க;

புதரில் எறியப்பட்ட பிண்டம் சிறந்ததோர் ஆண்குழந்தை வடிவமாகப் பரிணமித்து உயிர்பெற்றுப் பசிதாஹங்களால் பரிதபித்துத் தனியே அழுது கொண்டிருக்க, அவ்விடத்துக்கு அருகிலே அந்தத் தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கின்ற ஜகந்நாதப்பெருமாள் பிராட்டியுடனே எழுந்தருளி அந்தச் சிசுவைக் குளிரக் கடாக்ஷித்து அதன் பசி தாஹங்களைத் தவிர்த்து ஆராவமுதமான தமது திருமேனியைக் காட்டித் தேற்றி மறைந்து செல்ல, அப் பெருமானது பிரிவை ஆற்றாமல் அக்குழந்தை மீளவும் அழத்தொடங்கிற்று.

அச்சமயத்தில் அங்குப் பிரம்பறுக்க வந்தானொரு திருவாளனென்னும் வேளாளன் அவ்வழு குரலைக்கேட்டு அருகில்வந்து அக்குழவியைக் கண்டு மிக்க மகிழ்ச்சியுடன் எடுத்துச்சென்று இல்லம் புக்குத் தன் மனைவியான பங்கயச் செல்வியை யழைத்து 'பிள்ளையில்லாத நமக்குத் தைவிகமாகக் கிடைத்தது இது' என்று சொல்லிக் குழந்தையைக் கையிலே கொடுக்க அவளும் அதிக ஆதரத்தோடு வாங்கிச் சீராட்டி வளர்க்கத் தொடங்குகையில் அவளுக்கு அம்மகவின்பாலுண்டான பேரன்பினால் பால் சுரக்க, அவள் அம்முலைப்பாலைக் கொடுக்க முயல, அத தெய்வக் குழவி அங்கீகரியாமல் ஸ்தந்யபாநாதிகளில் விருப்பற்றுப் பகவத் குணாநுபவத்தையே தாரகமாகக்கொண்டு பசி தாஹங்கள் கொள்ளாது அழுதல் அரற்றுதல் கூவுதல் பேசுதல் முதலிய லோக வியாபாரமொன்று மின்றி மல மூத்ர ரஹித

மாய்ப் பரிசுத்தமாக இளஞாயிறுபோலத் திருமேனி யொளிவிளங்க வளர்ந்து வந்தது.

### கணிகண்ணன் ஜனித்தல்

"உண்ணுஞ் சோறு பருகுநீர்த் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்" என்றபடி இக்குமாரர் எம்பெருமானை அநுபவித்தலாகிய அம்ருதபானத்திலே உள்ளமும் உடலும் நிறைந்து உணவு நீர்வேட்கை யொழிந்து காண்பவர் கேட்பவர் யாவரும் வியக்குமாறு எழுந்தருளியிருக்கிற செய்தியை அவ்வூரிலிருப்பாரொரு வேளாளக்கிழவன் கேள்வியுற்று இவரை ஸேவிக்க விரும்பிப் பசுவின்பால் காய்ச்சி எடுத்துக்கொண்டு தன் மனைவியுடனே ஒருநாள் உதயகாலத்தில் அவ ரிருக்குமிடத்தை யடைந்து இவரது இளரொளி யிளமையைக் கண்டு அதியாச்சரியப்பட்டுத் தான் கொணர்ந்த பாலைத் திருமுன்பே ஸமர்ப்பித்து 'இதனை யுட் கொண்டருள வேண்டும்' என்று வெகுவாகப் பிரார்த்தித்தான், அவனுடைய பக்தி மிகுதிக்குத் திருவுள்ளமுகந்து இவர் அதனை அமுது செய்தார். பிள்ளையில்லாத குறையினால் அத்தம்பதிகள் இவரையே தமக்கு எல்லாப் பேறுமாகப் பாவித்து நாள்தோறும் பால் கொண்டுவந்து கொடுக்க, அவர்களது பக்தியமுதத்துக்கு வந்து அதனைப் பானம் செய்துவந்த இவர் ஒருநாள் அவர்களது குறையைத் தீர்க்கக்கருதி, தாம் உண்டு சேஷித்த பாலை 'நீங்கள் உண்ணுங்கள்' என்று அவர்களுக்குக் கொடுக்க அவர்கள் அதனைப் பருகிய வளவிலே கிழத்தனம் நீங்கி இளமைப்பருவ மடைந்தனர். பின்பு அவ்வேளாண்மகள் கர்ப்பவதியாய் ஒரு புத்திரனைப்பெற அதுநோக்கி மகிழ்ச்சிகொண்ட அவள் கொழுநன் அக்குழந்தைக்குக் கணிகண்ணனென்று பெயரிட்டு அன்போடு வளர்த்து அவரது முன்னிலையிலே கொண்டு வந்துவிட அவ்விளமகன் இவரது கடாக்ஷ வீக்ஷணத்தால் நல்லறிவுபெற்று நூல்கலைகளை உணர்ந்து பகவத் பக்தியையும் பாகவத ப்ரதி பத்தியையும் மிகவும் உடையனாயினான்.

### திருமழிசைப்பிரான் பலமதங்களிற் புகுந்து ஆராய்தல்

பார்க்கவ குமாரர் இப்படி ஏழுபிராய மளவும் பிரம்பறுப்பானிடத்திலே யிருந்து பின்பு அஷ்டாங்க யோகத்தால் முழுமுதற் கடவுளை யடையக்கருதி அங்கு நின்றும் புறப்பட்டுப் பலவிடங்களுக்குச் சென்று 'எல்லாப் பொருளுக்கும் தலைமையான பரதத்வம் எதுவோ?' என்று ஆராயலுற்று; லோகாயதம், பௌத்தம், சமணம் முதலிய அவைதிகமான பாஹ்யமதங்களுள்ளும் மாயாவாதம் முதலான வைதிகமான குத்ருஷ்டி மதங்களுள்ளும் ஒவ்வொன்றிலும் தனித்தனி புகுதலுற்றார். முதலிலொரு மதத்தில் பிரவேசித்து அப்பொழுது அதற்குரிய நூல்களையெல்லாம் ஆய்ந்து தேர்ந்து அம்மதத்திற்கேற்ற பெயரோடும் ஒழுக்கத்தோடும் கூடி அதன் நிலையிலே ஊன்றி நின்று பல நூல்களை இயற்றிப் பின்பு அக்கொள்கையில் சில குறைபாடுகளைக் கண்டு அதைவிட்டு வேறொரு சமயத்திலிறங்குவார்.

### திருமழிசைப்பிரானைப் பேயாழ்வார் திருத்திப்பணிகொள்ளுதல்

இவ்வாறே பலகாலம் பல மதங்களையும் பரிசோதித்தவர் பின்பு சைவ சமயமே ஸத்ஸமயமென்று துணிந்து அதில் தலையிட்டுச் சிவவாக்கியர் என்னும் பெயர் பூண்டு சிவபரமாகச் சில நூல்களைச் செய்துகொண்டு பிறமதஸ்தரோடு ஸல்லாபம் செய்வதற்கும் விருப்பமற்று ஏகாந்த சீலராய் ஓரிடத்திலே யிருந்து பரமசிவனைத் தியானித்து வருகையில் முதலாழ்வார்களிலொருவரான பேயாழ்வார் அங்கு எழுந்தருளி அவரது செய்தியை அறிந்து அவரைச் சீர்திருத்தி ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி அவரது ஆச்ரமத்துக்

கருகில் தாம் ஓர் ஆச்ரமமமைத்துக்கொண்டு, அதிலே சில செடிகளைத் தலைகீழாக நட்டுச் சில்லிக்குடமும் அற்றதாம்புங்கொண்டு அவற்றிற்கு நீர்வார்க்கத் தொடங்கி நின்றார். கண்டவர் பரிஹஸிக்கத்தக்க அச்செயலைப் பார்த்துச் சிவவாக்கியர் இகழ்ச்சிப் பெருநகைகொண்டு அவ்விடத்திற்குச் சென்று 'நீர் பித்தரோ? பேயரோ?' என்ன; அவர் 'நான் பித்தனுமல்லேன் பேயனுமல்லேன்; நீரே உந்மத்தர்' என்று உத்தரம் கூறினார். அதுகேட்ட அவர் ப்ரத்யக்ஷமாக அவரது பொருந்தாத செய்கையை எடுத்துக்காட்டித் தாம் சொன்னதை நிலை நிறுத்த, பேயாழ்வார் "வெகுகாலமாக அநேக மதங்களில் அலைந்தும் பரதத்துவ மின்ன தென்று உண்மை தெளியாத உம்மை உந்மத்தரென்னத் தடையென்ன? உற்பத்தி விநாசங்களில்லாத முழுமுதற் கடவுளான ஸ்ரீமந் நாராயணன் இருக்க அவனையறியாது ஜநநமரணங்களோடுகூடிய உருத்திரனைத் தெய்வமாகக்கொண்டது உமது உணர்வின்மையேயாகும்" என்று தாம் கூறியதை வற்புறுத்தத் தொடங்கினார். அப்பொழுது அதிப்ரபலமாக இருவர்க்கும் சைவ வைஷ்ணவ ஸமய ஸம்வாதம் நடந்தது. அதில் தோல்வியடைந்த சிவவாக்கியர் அதுகாறும் காலம் வீணே கழிந்ததற்கு அநுதபித்துச் சைவசிந்நங்களை யொழித்து, தம்மை வாதப் போரில் வென்ற பேயாழ்வாருக்கு சிஷ்யராய் அவரைச் சரணமடைய, அப்பொழுது அவர்க்குப் பேயாழ்வார் பஞ்ச ஸம்ஸ்கார பூர்வகமாகத் தத்வோபதேசம் செய்து எழுந்தருளினர். அது முதல் ஸாரதமமான விஷ்ணு பக்தியையே மேற்கொண்ட திருமழிசைப்பிரான்,

> "சாக்கியங் கற்றோம் சமண்கற்றோம் சங்கரனு
> ராக்கிய வாகமநூ லாராய்ந்தோம்—பாக்கியத்தாற்
> செங்கட்கரியானைச் சேர்ந்தோம்யாம் தீதிலமே
> எங்கட்கரிய தொன்றில்."

என்று எண்ணித் திருமழிசைக்கு வந்து யோகநிலையில் நின்று திருமகள் கொழுநனைத் தியானித்துக் கொண்டிருந்தார்.

### திருமழிசைப்பிரான் சிவபிரானோடு ஸம்பாஷித்தலும் பக்திஸாரர் என்ற திருநாமம் பெறுதலும்

அக்காலத்தில் ஒருநாள், ஆகாச மார்க்கத்தில் எருதின்மீது ஏறிக்கொண்டு பார்வதீ பரமேச்வரர் செல்லுகையில் பார்வதியானவள் இவரது தவவொழுக்கத்தைக் கண்டு கொண்டாடித் தன் கணவனைநோக்கி 'இவன் ஆரோ?' என வினவ, சிவபிரான் இம்மஹாநுபாவன் நம்மைவிட்டு நாராயணனுக்கு அடிமைப்பட்டவன்' என்று சொன்னவளவிலே அம்பிகை, இப்பெரியவனுக்கு நாமும் தரிசனம் தந்து ஏதேனும் வரமளித்துப் போவோம்' என்றுகூற, அவளது விருப்பத்தின்படி செய்ய ஸம்மதித்துச் சிவபிரான் இவரெதிரில் வந்து தோன்றினன். இவர் அச்சிவனைப் பார்த்தும் பாராதவர்போல உபேக்ஷித்து ஒரு கந்தைத் துணியைத் தைத்துக் கொண்டு காரியாந்தரபரராயிருக்க, அதுகண்ட சங்கரன் 'உனக்கு அருள் செய்ய வந்த நம்மை நீ அநாதரஞ்செய்வது தகுதியோ? என்று நவில, யோகிவரர் 'உம்மாலாக வேண்டியது ஒன்றுமில்லை; ஆதலின் நான் உதாஸீனனாயிருந்தேன்' என்றார். பின்பும் கங்காதரக்கடவுள் 'நம்வரவு வீண்போவதன்று; உனக்கு அபீஷ்டமான வரம்பெற்று வாழ்வாய்' என்று நிர்ப்பந்திக்க, அநந்தரம் ஆழ்வார் 'பரமபதம் அருளவல்லீராயின் அருள்வீர்' என வேண்டினார். அதற்கு அக்கடவுள் 'அது நம்மால் தரத்தக்கதன்று; அது தருதற்கு உரிய தேவன் ஸ்ரீமந்நாராயணனே; ஆதலின் வேறுவரம் வேண்டுதி' என்ன, ஆழ்வார் புன் முறுவல் செய்து 'அம் முத்தியைப் பெறும் பொருட்டுப் பல்காலம் இவ்வுலகில் உயிர்த்திருந்து பெருந்தவம் புரிதற்கு உபயோகமாக நீண்ட ஆயுளையேனும் அடியேற்கு அளித்தருளும்!'

என்று ப்ரார்த்தித்தார். அதுகேட்டுக் கைலாஸபதி 'அது கர்மாநுஸாரமாக நடப்பதேயன்றி வளர்த்தத்தக்கதன்று; வேறு வேண்டுவதை விளம்புவாய்' என்ன; திருமழிசைப்பிரான் குறுமுறுவலோடு இகழ்ச்சியாய் 'இவ்வூசியின் பின்னே நூல் வரும்படி வரம் தந்தருளீர்' என்று விநோதமாகச் சொல்ல அப்பரிஹாஸ வார்த்தை செவிப்பட்டவுடனே கடுஞ்சினங்கொண்ட கண்ணுதற் கடவுள் 'இச் செருக்குடையானை இப்போதே அநங்கனைப் போலாக்கிவிடுகிறேன்' என்று தமது நெற்றியிலுள்ள நெருப்புக் கண்ணைத் திறந்துவிட்டார். அதனின்று புகையும் பொறியுமாகக் கிளர்ந்தெழுந்த காலாக்னியைக் கண்டு திருமழிசைப்பிரான் சிறிதும் கலங்காமல் 'இந்திரன் போல உடம்பு முழுவதிலும் கண்காட்டினாலும் அஞ்சுவேனல்லேன்' என்று சொல்லித் தமது வலத்திருவடியின் பெருவிரலிலுள்ளதொரு கண்ணைத் திறந்துவிட, அதினின்றும் ஒரு பெருந் தீ எழுந்து ஊழித்தீயினும் பலமடங்கு மேலிட்டு அவ்வனலை அடர்க்கத் தொடங்கிற்று. அவ்வளவில் அரன் அக்கடு நெருப்பை அவிக்கும்படி தமது சடையிலுள்ள பல மேகங்களை ஏவிவிட, அவையும் அங்ஙனமே கல்பாந்த காலத்திற் போலச் சோனைமழை பொழிந்து பெருவெள்ளம் கோக்கவும் திருமழிசையாழ்வார் சிறிதும் சலியாமல் பகவத் பக்தியிலே ஊன்றியிருந்தார். அதுகண்டு முக்கண்மூர்த்தி மிகவியந்து இவர்க்கு பக்திஸாரர் என்று திருநாமஞ் சாத்தி இவரது வைபவத்தைக் கொண்டாடித் தம்மிடத்துக்குத் திரும்பிப் போயினர்.

### சுக்திஹாரனென்னும் ஸித்தன் ஆழ்வாரை வணங்கி வழிபடுதல்

அதன் பின்பு ஆழ்வார் முன்போலவே யோகத்திலெழுந்தருளியிருக்கையில் சுக்திஹாரனென்பானொரு ஸித்தன் தன் ஸாமர்த்தியத்தினால் ஒரு புலியையடக்கி வாஹனமாகக்கொண்டு அதன் மேலேறி நடாத்தி ஆகாசமார்க்கமாகச் செல்லுகையில், இவரது யோகமஹிமையினால் அவ்வாஹனம் தடைப்பட்டு இவர்க்கு நேரில் மேலே வானத்தில் செல்லமாட்டாது திகைத்து நிற்க, அவன் 'இதற்குக் காரணம் என்னோ?' என்று எப்புறத்தும் பார்க்கையில் கீழே யிருக்கிற யோகியைக்கண்டு ஆச்சரியப்பட்டு அங்கு நின்று இறங்கி இவர் ஸந்நிதாநத்திலே வந்து இவரது சக்தியைச் சோதிக்கக் கருதி 'ஓ முனிச்ரேஷ்டரே! நீர் உடுத்து நின்ற அந்தக் கந்தை சீலையைப் போகட்டுப் பீதாம்பரத்தாலாகிய இந்த உடையை உபயோகித்துக் கொள்ளும்' என்று ஒரு சிறந்த கஞ்சுகத்தை யுண்டாக்கிக் கொடுக்க அவர் அதனைத் திரஸ்கரித்துத் தமது இச்சாமாத்திரத்தால் மாணிக்கமயமானதொரு கவசத்தை நிருமித்துக் காட்டினார். ஸூர்யன்போல ஒளி விளங்குகின்ற அதனைக் கண்டு நாணங்கொண்டு அந்த ஸித்தன் தன் கழுத்திலுள்ள தொரு மணிமாலையை வாங்கி 'இதனை ஜபமாலையாகத் தரித்துக்கொள்ளும்' என்று கொடுக்கவர, ஆழ்வார் தம் திருக்கழுத்தில் தரித்துள்ள துளஸிமணிமாலையையும் தாமரைமணி மாலையையும் எடுத்துக்காட்டினார். அவை சிறந்த நவரத்ந மாலைகளாய் விளங்கக் கண்ணுற்று அவன் வெட்கப்பட்டு 'ஸித்தர்களெல்லாரையும் வென்றுவந்த என்னை நீர் வென்றதனால் உம்மினும் சிறப்புடையானொரு ஸித்தன் உலகத்தில் எங்கும் இலன்' என்று சொல்லித் துதித்து ப்ரதக்ஷிணம்செய்து நமஸ்கரித்து வேறுவழியாகச் சென்றிட்டான்.

### ஆழ்வாரைக் கொங்கணஸித்தன் வணங்குதல்

பின்பும் அவர் அங்கே யோகநிஷ்டராக இருக்கையில் கொங்கண ஸித்தன் என்பானோர் ரஸவாதி அவரது மஹிமையைக் கேள்வியுற்று மிக்க பரபரப்போடு அருகில்வந்து சோடியிரும்பைப் பொன்னாக்க வல்லதோர் ரஸகுளிகையைக் காட்டி 'இதனை நீர் பெற்று மகிழ்மின்' என்ன; ஆழ்வார் அதனை வேண்டாவென்று

விலக்கித் தமது பொன்னொத்த திருமேனியின் புழுதியை எடுத்துத் திரட்டி அவ்வுருண்டையை அவன் கையில் கொடுத்து 'இக்குளிகை பலகோடிக் கற்களைப் பொன்னாக்க வல்லது; இதனைக்கொண்டு நீ பிழைப்பாய்' என்று சொல்லியருள, அவன் அதனை உடனே பரிசோதித்துப் பார்த்து அவ்வாறே யிருக்கக்கண்டு அதிப்ரீதியோடு ஆழ்வாரைத் தண்டனிட்டுப் போயினன்.

### திருமழிசைப்பிரான் முதலாழ்வார்களோடு கூடியிருத்தல்

அப்பால் பக்திஸாரர் வேறோரிடஞ்சென்று ஒரு மலைக் குகையினுள் இருந்து யோகு செய்யா நிற்கையில், திவ்யதேச யாத்திரையாய் ஸஞ்சரித்து வருகிற முதலாழ்வார்கள் மூவரும் அவ்விடத்தை யடைந்து உள்ளே எழுந்தருளியிருக்கின்ற இவரது திவ்யமான திருமேனியொளியை வெளியிலிருந்து கண்டு அதிக ஆச்சரியப்பட்டு முறைமையினுட்புக்குக் குசலப்ரச்நம் பண்ண அதுகேட்டு அவரும் விரைவாக எழுந்து யோகக்ஷேம விசாரணை செய்தவளவிலே நால்வரும் பாலும் பாலுங் கூடினாற்போலவும் தேனும் தேனுங் கலந்தாற்போலவும் ஒருமனப்பட்டு ஸர்வ காலமும் பகவத் குணங்களையே கூறுதல் கேட்டல் சிந்தித்தல் துதித்தல் அநுபவித்தல் முதலியன செய்துகொண்டு தவஞ்செய்து கொண்டிருந்தார்கள். இப்படிச் சிலகாலஞ் சென்றபின் எல்லாரும் பேயாழ்வாரது திருவவதார ஸ்தலமான மயூரபுரிக்கு வந்து அங்கு அவ்வாழ்வார் தோன்றிய இடமாகிய கைரவ தீர்த்தத்தின் கரையிலே சில வருஷகாலம் யோகம் முடித்த பின்னர் முன்னவர் மூவரும் பூமி ஸஞ்சாரார்த்தமாகப் போயினர்கள்.

### திருமழிசைப்பிரான் திருவெஃகா சேர்தல்

அநந்தரம் திருமழிசையாழ்வார் தமது ஜந்மபூமியான மஹீஸாரபுரத்திற்குச் சென்று தாம் வழக்கம்போலச் சாத்திக் கொள்வதற்குத் திருமண் வேண்டிச் சோதித்தவிடத்தில் அகப்படாமையால் மனக்கலக்கமுற அப்போது, திருவேங்கடமுடையான் இவரது கனவிலே ஸேவைஸாதித்து 'கச்சிவெஃகாவையடுத்த பொற்றாமரைப் பொய்கையிலேயுள்ளது' என்று அருளிச்செய்ய உடனே இவர் கவலையொழிந்து அங்கே சென்று திருமண்கண்டு களித்து எடுத்து வந்து தரித்துக்கொண்டு பகவதநுபவைகபரராய்ச் சிலகாலங்கழித்து, பின்பு திருமழிசையை விட்டுக் காஞ்சீபுரத்தைச் சேர்ந்து அங்கே திருவெஃகாவில் திருவணைப்பள்ளியில் கண்வளரா நின்ற (ஸ்ரீயதோக்தகாரிப்) பெருமாளை ஸேவித்து ஈடுபட்டு அப்பிரானையே த்யானம் செய்துகொண்டு அனேக வருஷகாலம் எழுந்தருளியிருந்தார்.

### கணிகண்ணனுடைய பெருமை

அப்பொழுது கணிகண்ணன் வந்து தனது ஆசார்யரான இவர்க்குப் பலவிதமான பரிசர்யைகளைப் பண்ணிக்கொண்டு உபாதாநமூலமாக ஜீவனம் செய்து வந்தான். அக்காலத்தில் தலை நரைத்து உடல் திரைந்து பருவம் முதிர்ந்த கிழவியொருத்தி ஆழ்வாருடைய பாதகமலங்களில் பரமபக்தியுடனே அவருள்ள விடத்தைத் திருவலகிடுதலும் மெழுகுதலும் கோலமிடுதலுமாகிய கைங்கரியங்களை நாள்தோறும் செய்து கொண்டிருந்து ஒருநாள் அவர் திருக்கண் விழித்த ஸமயத்திலே அவரைச் சரணமடைந்து வரங்கேட்டுப் பெற்று மாறாத யௌவனத்தை அடைந்து தேவமாதுபோல அதிஸுந்தரியாயினள். அந்நகரத்தரசனான பல்லவராயன் ஒருநாள் அவளது வடிவழகைக் கண்டு காதலுற்று விலையுயர்ந்த அணிகலங்களையும் நலமிகுந்த பட்டாடைகளையும் பரிசு கொடுத்து அவளை மணஞ்செய்து பட்டமஹிஷியாக்கி அவளுடன் வாழ்ந்திருந்தான். இருக்கையில், தனது யௌவநம் நாளுக்கு

நாள் குறைவதையும் அவளது பருவம் மாறுபடாதிருப்பதையுங் கண்டு வியந்து 'உனது மங்கைப்பிராயம் என்றுன்றும் ஒருபடியாயிருத்தற்கு ஹேது என்ன? என்று கேட்டு ஆழ்வாருடைய வரப்ரஸாத மென்றறிந்து 'அவ்வருளைத் தான் பெறுதற்கு நல்லுபாயத்தை நாடியுரைப்பாய்' என்று அவளையே வேண்டினன். அதுகேட்டு அந்த மங்கை 'நாடோறும் நமது அரண்மனைக்கு பிக்ஷாகராய் வருகின்ற கணிகண்ணரென்பவர் அந்த மஹாயோகிக்கு அந்தரங்கர்; இவர் புருஷகாரமாக அவரை அநுவர்த்தித்தால் மநோரதம் கைகூடும்' என்றாள். அவ்வாறே வேந்தன், மறுநாள் கணிகண்ணன் வந்தபோது அவரைத் தனியே அழைத்து உபசரித்து 'உமது ஆசிரியரை நான் ஸேவிக்கும்படி இங்கு அழைத்து வரவேண்டும்' எனவேண்ட, அவன் 'நம் ஆசிரியர் ஓரிடத்துக்கும் எழுந்தருளமாட்டார்' என்று கூறிவிட, அரசன் 'என்னை அங்கு அழைத்துப்போயாயினும் அவரது திருவருட்கு இலக்காக்குவித்து அவரருளால் என்னை நித்ய யௌவனனாயிருக்கச் செய்யவேண்டும்' என்று ப்ரார்த்திக்க, அதற்கும் அவன் உடன்படாமல் 'உன்னைப்போல் ஐஹிகபோகத்தையே விரும்பி நிற்பவரை எம் ஆழ்வார் கண்ணெடுத்துப் பார்த்தலும் அரிது' என்று மறுத்து விட்டான். பின்பு அரசன் வருந்திய சிந்தையனாயிருக்கையில் மந்திரிகள் வந்து தேற்றி 'இக்கணிகண்ணன் தெய்வப்புலமை யுடையான்; இவன் வாயினால் பாடியபடியெல்லாம் பல அற்புதங்கள் நிகழ்கின்றன; ஆதலின் இவனால் பாடப்பெற்றால் இஷ்டஸித்தி பெறலாம்' என்று உறுதிகூற, அங்ஙனமே மன்னவன் அடுத்த நாளில் அக்கணிகண்ணன் வந்தபோது 'எனக்கு அழியாத இளமை வருமாறு கவிபாடவேண்டும்' என்று புகல, அதற்கு அவன் 'நான் எப்பொழுதும் நாராயண ஸ்தோத்திரம் செய்வேனேயொழிய நரஸ்துதி செய்வேனல்லேன்' என்றான். பின்னும் மன்னவன் தன்னைப் பாடவேண்டுமென்று பலகால் நிர்ப்பந்திக்க, அவன் "ஆடவர்களெங்ஙனகன்றொழிவார் வெஃகாவும், பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமால், நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ, மன்றார் பொழில்கச்சி மாண்பு" என்று ஒரு திருக்கவி சொல்ல; கொற்றவன் கோபங்கொண்டு 'நம்மைப்பாடு என்றால் நகரத்தைப் பாடிய நீ இவ்வூரில் இனி வஸிக்கலாகாது. உடனே வெளியே போ' என்று உறுத்திக்கூற, உடனே கணிகண்ணன் ஆழ்வாரிடம் சென்று நடந்த செய்தியை விண்ணப்பம் செய்து 'அடியேனுக்கு விடை தந்தருள வேண்டும்' என்றான்.

## ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான் புறப்பாடு

ஆழ்வார் 'நானும் பெருமானை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு உடன் வருவேன்' என்று உரைத்துத் திருக்கோயிலுட் சென்று அடியவர்க்கெளியனான எம்பெருமானைத் திருவடி தொழுது

> "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
> மணிவண்ணா நீ கிடக்க வேண்டா—துணிவுடைய
> செந்நாப் புலவனும் போகின்றேன் நீயு முன்றன்
> பைந்நாகப் பாய்சுருட்டிக் கோள்"

என்று ப்ரார்த்திக்கவே, அவ்வெம்பெருமானும் ஆழ்வாருடைய வேண்டுகோளின்படியே யோகநித்திரையை விட்டெழுந்துவர, மூவரும் அவ்வூரைவிட்டு அருகிலுள்ள தோரிடத்தை யடைந்து, அங்கு வஸித்தனர். இங்ஙனம் பெருமாளும் ஆழ்வாரும் அவரடியானும் அப்பதியை விட்டுப்போயினதால் அத்திவ்ய தேசத்திற் பல திருக்கோயில்களி லெழுந்தருளியிருக்கிற மற்றை யெம்பெருமான்களும் விட்டுநீங்க; அந்நகரம் முழுவதும் ஒளியிழந்து அங்கு மற்றும் பல ஆலயங்களிலிருக்கின்ற தேவதைகளின் ஸாந்நித்யமுமில்லையாய் ஸூர்யனொளியுஞ் செல்லாமல் இருள்

மூடப்பட்டது. இப்படி நீளிரவாய் நீண்டதைக்கண்டு கவலைப்பட்டு மன்னவனும் மந்திரிமாரும் அவர்களிடத்தைத் தேடியடைந்து கணிகண்ணன் காலில் விழுந்து தனது அபசாரத்தை க்ஷமித்தருளுமாறு பலவாறு வேண்டிக்கொள்ள, அவனும் மீண்டெழுந்தருளும்படி ஆழ்வார் பக்கல் விண்ணப்பஞ்செய்ய, அவரும் அதனை அங்கீகரித்து ஆச்ரிதபராதந்த்ரனை சேஷசாயியை நோக்கி,

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீ கிடக்க வேண்டும்—துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயு முன்றன்
பைந்நாகப் பாய் படுத்துக் கொள்"

என்று, முன்பு பாடிய பாட்டை மாற்றிப் பாடி வேண்ட, எம்பெருமானும் அதற்கு உடன்பட்டு ஆழ்வாரும் கணிகண்ணரும் உடன்வர மீண்டெழுந்தருளித் திருவெஃகாவை யடைந்து ஆழ்வார் திறத்து அபிமானத்தால் தான் இங்ஙனம் செய்தது பின்புள்ளார்க்கும் ப்ரத்யக்ஷமாக வேணுமென்று முன்போல வலத்திருக்கை கீழாகவன்றி இப்பொழுது இடத்திருக்கை கீழ்ப்படக் கண்வளர்ந் தருளினன்.

இங்ஙனம் பக்தர் சொன்னபடி செய்ததினால் அப்பெருமானுக்கு 'யதோக்தகாரி' என்று வடமொழியிலும் 'சொன்னவண்ணம் செய்த பெருமாள்' என்று தென்மொழியிலும் திருநாமம் வழங்கலாயிற்று. இவர்கள் சென்று ஓர் இராத்திரி தங்கியிருந்த ஊர் ஓரிரவிருக்கை எனப்பெயர் பெற்றது. (அப்பெயர் மருவி ஓரிக்கை என இன்றைக்கும் வழங்கும்).

## பெரும்புலியூரில் விளங்கின ஆழ்வார் பெருமை

அவ்வளவில் காஞ்சீபுரம் முன்போலப் பொலிவுபெறவே அரசனும் பாகவதர்களது மஹிமையையுணர்ந்து அதுமுதல் அவர்களுக்கே அடியவனாய் வாழ்ந்திட்டான். அநந்தரம் ஆழ்வார் திருக்குடந்தை யாத்திரை புறப்பட்டுச் செல்லும் வழியிடையே பெரும்புலியூர் என்கிற கிராமத்தில் ஒரு வேதியன் வீட்டுவாசல் திண்ணையில் சிறிது பொழுது எழுந்தருளியிருக்க, அங்கு வேதமோதிக் கொண்டிருந்த அந்தணர்கள் நீறுபூத்த நெருப்புப்போலுள்ள ஆழ்வாருடைய மஹிமையைத் தெரிந்து கொள்ளாமல் அவரைக் கீழ்ப்பட்ட சாதியனொருவனாக எண்ணி வேதாத்யயநம் அவருடைய காதிற்படலாகாது என்று ஓத்துத் தவிர்ந்திருக்க, அக்குறிப்பையறிந்த ஆழ்வார் அவ்விடத்தைவிட்டு தூரத்திற்சென்று வேறோரகத்து மேடையில் வீற்றிருந்தார். பின்பு அந்த வேதாத்யாயிகள் மீண்டும் வேதபாராயணஞ் செய்யத் தொடங்கி, விட்ட வாக்கியம் தோன்றாது மயங்கி 'இதற்குக் காரணம் வந்த அதிதியை அலக்ஷியம் செய்ததே' என்றறிந்து அவரிடஞ் சென்றுசேர ஆழ்வார் அதனை நோக்கிக் கறுப்பு நெற்களைக் கையுகிராலே யிடந்து அவர்கள் விட்ட சொற்றொடரைக் குறிப்பித்தருளிய மாத்திரத்திலே அப்பொருளுள்ள வேதவாக்கியம் அவர்களுக்குத் தோன்றிற்று. [அதாவது—"க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நக நிர்பிந்நம்" என்பது; இது க்ருஷ்ண யஜுர்வேதம் முதற்காண்டம் எட்டாவது ப்ரச்நத்திலும், தைத்திரீய ப்ராஹ்மணம் முதலஷ்டகம் ஏழாவது ப்ரச்நத்திலும் உள்ள ஒத்து.] உடனே அவர்கள் ப்ரதக்ஷிண ப்ரணாமாதிகளால் இவரை உபசரித்துக் க்ருதார்த்தரானார்கள்,

அப்பொழுது அவ்வூர்த் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான் இவ்வாழ்வார் எந்தெந்த முகமாகத் திரும்புகின்றனரோ அந்தந்த முகமாகத் திரும்பியருள, அந்த ஆச்சரியத்தை அர்ச்சகர் மூலமாக அறிந்து அவ்வூரார் அனை

வரும் அங்கு யாகம் செய்து கொண்டிருந்த பெரும்புலியூரடிகளிடத்தே சென்று இவருடைய வைபவத்தைக் கூற அது கேட்டவுடனே தீக்ஷிதரும் மிக்க மகிழ்ச்சியோடு வந்து ஸ்ரீ பக்திஸாரரை ஸேவித்துக் கண்படைத்த பயன்பெற்றோமென்று களித்து யாகசாலைக்கு எழுந்தருள்வித்துக் கொண்டுபோய் அவர்க்கு அக்ரபூஜை செய்திட்டார். தர்மபுத்ரர் ராஜஸூயயாகத்தில் கண்ணபிரானுக்கு முதல் தாம்பூலம் ஸமர்ப்பித்தபோது சிசுபாலன் கேட்பார் செவி சுடு வசவுகளே வைதாற்போலே இங்கும் அஸூயை கொண்ட வேதியர் பலர் எண்ணிறந்த வசைச்சொற்களைக் கூற அக்ரபூஜை ஸமர்ப்பித்த முனிவர் 'அவர்களை யடக்கியருளவேண்டும்' என்று ஆழ்வார் ஸ்ரீபாதத்திலே விண்ணப்பஞ்செய்து வேண்ட, இவரும் அவரது வேண்டுகோளின்படிச் செய்யக் கருதித் தமக்கு அந்தர்யாமியான எம்பெருமானைக் குறித்து

"அக்கரங்க ளக்கரங்க ளென்றுமாவ தென்கொலோ
இக்குறும்பை நீக்கியென்னை யீசனாக்க வல்லையேல்
சக்கரங்கொள் கையனே சடங்கர் வாயடங்கிட
உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே"

என்று விஜ்ஞாபிக்க எம்பெருமான் "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்கவருள் செய்வார், ஆதலால் திருமகளும் நிலமகளும் திருவடிவருடப் பெரிய திருவனந்தாழ்வான்மீது அறிதுயிலமரும் திருவுருவத்தை இவரது திருமேனியிலே தோற்றுவிக்க அனைவரும் திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்து ஆழ்வாருடைய அபாரமான விபவத்தை உணர்ந்து அவருடைய திருவடித் தாமரைகளிலே ஸாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து அபராத க்ஷாமணஞ் செய்து கொண்டனர்.

### ஆழ்வார் திருக்குடந்தைக்கெழுந்தருளல்

ஆழ்வார் அவர்களுக்கு ஞானோபதேசஞ்செய்து ஆட்கொண்டு வாழ்வித்தருளித் திருக்குடந்தைக்குச்சென்று அங்கு சயனத் திருக்கோலமாக எழுந்தருளியிருக்கின்ற ஆராவமுதனைத் திருவடித் தொழுது அப்பெருமானது திருக்கோலத்திலே ஈடுபட்டு

"நடந்தகால்கள் நொந்தவோ நடுங்க ஞாலமேனமாய்
இடந்தமெய் குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம்
கடந்தகால்பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள்
கிடந்தவாறெழுந்திருந்து பேசு"

என்று விண்ணப்பஞ்செய்ய, அப்பிரானும் ஆழ்வார் அளவில் பெருங்கருணையால் அர்ச்சாவதாரத்தின் வரம்பு கடந்து விபவாவதாரத்திற்போல அங்ஙனம் எழுந்திருந்து பேச முயல, உடனே ஆழ்வார் 'இந்த அத்யந்த ஸௌலப்யத்திற்கு ஒரு தீங்கு வாராதிருக்க வேணும்?' என்று திருவுள்ளம்பற்றி "வாழிகேசனே" என்று மங்களாசாஸநம் பண்ண, பெருமானும் அப்பொழுதிருந்தபடியே உத்தாநசாயியாய் நிலைத்தருளினன். அந்த ஆராவமுதாழ்வாருடைய திவ்யமங்களத் திருமேனியையே தியானம் செய்து கொண்டு திருமழிசைப்பிரான் அத்திருப்பதியிலே அநேக காலம் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

இப்படி இவர் நாலாயிரத்தெழுநூறு வருஷகாலம் பூலோகத்தில் வாழ்ந்திருந்து தாம் பகவானை அநுபவம் பண்ணினபடிகளை நான்முகன் திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம் என்கிற திவ்யப்ரபந்த மூலமாக உலகத்தார்க்கு உதவியருளி, யாவரையும் உய்வித்து அநந்தரம் திருக்குடந்தையிலே திருநாட்டுக்கெழுந்தருளினர்.

திருமழிசைப்பிரான் வைபவம் முற்றிற்று.

# தொண்டரடிப்பொடியாழ்வார் வைபவம்

## ஆழ்வார் ஸகலகலா வல்லபராதல்

இவ்வாழ்வார், சோழநாட்டில் திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸநம் பெற்ற 'புள்ளம் பூதங்குடி' என்னும் திவ்யதேசத்தின் அருகிலுள்ள திருமண்டங்குடியில் மார்கழி மாதத்துக் கேட்டை நக்ஷத்திரத்தில், வைஜயந்தீ என்னும் வநமாலையின் அம்சமாய் வைதிகோத்தமரான ஒரு பூர்வசிகா ப்ராஹ்மணருடைய திருக்குமாரராய்த் திருவவதரித்தார். ஸ்ரீமந்நாராயணனுடைய கடாக்ஷத்தால் அவதரித்த அவ்வந்தண குமாரர்க்குத் தந்தையார் விப்ரநாராயணர் என்று நாமகரணஞ்செய்து சௌளம் உபநயநம் முதலிய வைதிக ஸம்ஸ்காரங்களை உரிய காலங்களில் முறைப்படி செய்வித்து வேதசாஸ்த்ரங்களைப் பயிற்றுவிக்க, அவர் நான்மறைகளையும் ஆறுசாஸ்த்ரங்களையும் கசடறக்கற்று வல்லராய் அக்கல்விக்கு ஏற்பச் சுத்த ஸத்வகுணமே தலையெடுத்து ஞான வைராக்யங்கள் வளரப்பெற்றுத் தந்தை தாயார்க்கு மிக்க மகிழ்ச்சி தந்து வாழ்ந்து வந்தார். அப்படியிருக்கையில் ஸ்ரீஸேனை முதலியார் ஸ்ரீவைகுண்டத்தினின்றும் எழுந்தருளி அவர்க்கு உரிய ஸமாச்ரயணம் முதலிய சடங்குகளைச் செய்து சென்றனர்.

## ஆழ்வார் ஸ்ரீரங்கம்சென்று சேர்ந்து தொண்டுபுரிதல்

அப்போது திருமந்திரார்த்தத்தை அறிந்த விப்ரநாராயணர் கருணைக்கடலான கமலை கேழ்வனது குணம்ருதத்திலே ஆழ்ந்த சிந்தையுடையராய் அதனால் இம்மை யின்பத்தை இகழ்ந்து விவாஹத்தில் விருப்பமற்று ப்ரஹ்மசர்ய ஆச்ரமத்திலே நின்று திவ்ய தேசங்களிற் சென்று எம்பெருமானை மங்களாசாஸநஞ்செய்யக் கருதி, அவற்றில் முதலதான திருவரங்கம் பெரியகோயிலை அடைந்தார். அங்கு உபயகாவேரி மத்தியிலே சேஷசயநத்திலே "குடதிசை முடியைவைத்துக் குணதிசை பாதம்நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கி"ப் பள்ளிக்கொண்டுள்ள பெருமானைச் சேவித்து நிற்க, அப்பொழுது அந்த நம்பெருமாள் தம்முடைய வடிவழகினால் இவரைத் தம்பக்கல் மிகுந்த பக்தியுடையராம்படி செய்தருளினர். உடனே இவர் தமது வாணாள் வீணாளாகாதபடி அப்பெருமானுக்குக் கைங்கரியம் செய்ய விரும்பி, பெரியாழ்வார்போலவே தாமும் பெருமாளுக்குப் புஷ்பம் திருத்துழாய் ஸமர்ப்பிப்பதையே ஏற்ற கைங்கரியமாகக் கடைப்பிடித்து, ஒரு திருநந்தவனத்தை அப்பதியிலே செழிப்பாக அமைத்து, காலந்தோறும் பல்வகைப் பூமாலைகளையும் திருத்துழாய் நன்மாலையையும் கட்டி எடுத்துக்கொண்டு தமது நிலைக்கு ஏற்ப ப்ராஹ்மணர் திருமாளிகைகளில் அந்நபிக்ஷை வாங்கி அமுது செய்து வந்தார்.

## தேவதேவியென்பாள் ஆழ்வாருடைய நந்தவனத்தில் வந்துசேர்தல்

இங்ஙனமிருக்கையில் திருவரங்கத்துக்கு வடக்கிலுள்ள உத்தமர் கோயிலில் தேவமாதரம்சமாய்ப் பிறந்து மிகவும் அழகியான 'தேவதேவி' என்பாளொரு தாஸி, ஒருநாள் தோழிமாரோடும் தமக்கையோடும் உறையூருக்குச் சென்று, சோழராஜனது முன்னிலையில் ஆடல் பாடல்களை நிகரின்றி நிகழ்த்தி அவனை மோஹிப்பித்து அளவிறந்த செல்வத்தை அவனிடத்திற் பெற்று மிக்க கர்வத்தோடு மீண்டு வருகையில் இளைப்பாறுதற்பொருட்டு இவ்வாழ்வாருடைய பூம்பொழிலின் ஒரு புறத்திலே ஒரு மரத்தினடியில் இருந்து அச்சோலையின் சிறப்பை நாற்புறத்திலும் நன்றாக உற்று நோக்கி, அம்மலர்ச் சோலையைத் தனக்கு உரிய பொருளாக்கி அதில் பூக்கொய்தும் புனல் விளையாடியும் பொழுது போக்கி மனமகிழ

விரும்பி, அதற்கு உரியவனைக் கண்டு தன் வசப்படுத்த நினைத்து அங்கு உலாவி கின்றுள். நிற்கையில், ஒரு பக்கத்தில் விப்ரநாராயணர் பள பளவென்ற திருப்பரி வட்டத்துடனும் பன்னிரண்டு திருமண் காப்புகளுடனும் தாமரை மணிமாலை துளசி மணிமாலைகளுடனும் விளங்கி, பூஞ்செடிகளுக்குப் பாத்திகட்டுதலும் தண்ணீர் பாய்ச்சுதலும் செய்து கொண்டிருக்கக் கண்ணுற்றுள். உடனே அவள், அருகில் வந்து முன்னின்று அவரைத்தொழுது தனது தேஹஸௌந்தர்யத்தை அவர்க்குக் காட்டிச் சில குறிப்புச் செய்யவும் விஷயாந்தரங்களிற் குருடராகிய அவர் அவளைக் கண்ணெடுத்தும் பாராது திரஸ்கரித்துத் தமது கைங்கரியத்திற் கருத்தூன்றி யிருந்தனர். அது நோக்கித் தேவ தேவி ஆச்சர்யமுற்று தன் தமக்கையுடன், 'அரசர் முதலிய பலரையும் எளிதில் வசப்படுத்துகிற ரூபலாவண்யங்களிற் சிறந்த யான் சென்று எதிர் நிற்கவும் பாராதிருக்கின்ற இவன் பித்தனே பேடனே?' என்று கூற, அதற்கு அவள் "பித்தனுமல்லன் பேடனுமல்லன்; ஸ்வாமி கைங் கரியத்தில் ஊற்றமுற்ற மஹாவிரக்தன்; இவனை வசப்படுத்த உன்னலாகாது" என்று சொன்னவளவிலே, வடிவழகில் இறுமாப்புடைய தேவதேவி, 'இவனை நான் வசீகரியாமல் விடுவதில்லை' என்று உறுதி கூறுதலும், தமக்கை 'நீ அங் ஙனஞ் செய்தால் நான் உனக்கு ஆறுமாதகாலம் அடியவளாவேன்' என்று சூதஞ்செய்ய, தங்கை 'நான் அங்ஙனஞ் செய்யேனுயின் ஆறுமாதம் உனக்குத் தொழுத்தையாவேன், என்று பிரதிஜ்ஞை பண்ணினுள்.

### தேவதேவி ஆழ்வாரை வசப்படுத்த ஸமயம் பார்த்திருத்தல்

பிறகு அவள், தன் ஆபரணங்களைக் கழற்றிக் கொடுத்துத் தோழியரோடு தமக்கையையும் அனுப்பி விட்டுத் தனியே மெல்லியதொரு செங்காவிச் சேலையை உடுத்து அவரை அடுத்துத் திருவடிகளில் விழுந்து நமஸ்கரிக்க, அவர் 'நீ யார்? ஏன் இங்கு வந்தாய்? என்று கேட்க, அதற்கு அவள் 'அடியேன் முற்பிறப்பில் செய்த தீவினையால் தாஸியாகப் பிறந்தவள். அடியேனைத் தாய் அக்குலத்திற்கு உரிய தொழிலைக் கைக்கொள்ளும்படி நிர்ப்பந்திக்க, அதற்கு இசையாமல் அவளைத் துறந்து மஹாபாகவதரான தேவரீரது திருவடியைச் சரணமடைந்து உய்வுபெற நாடிவந்துற்றேன். கருணைக் கடலான தேவரீர் அநாதையான அடியேனைக் காத் தருள வேணும்; செடிகளுக்கு நீர் பெய்தல், பூப்பறித்தல், மாலைகட்டுதல், தேவரீர் இல்லாத சமயங்களில் சோலையைப் பாதுகாத்தல் முதலிய பணிவிடைகளில் எதை நியமித்தாலும் செய்துவரக் காத்திருக்கிறேன்' என்று மிக்க வணக்கத்தோடு விண்ணப்பஞ் செய்தாள். அவர் அவளது கபடசித்தத்தை உணராமல் உடன் பட்டு, தாம் அமுது செய்து மிகுந்த ப்ரஸாதத்தைக் கொடுத்துவர, அவளும் அதனை வாங்கி உட்கொண்டு பாத்தி கொத்துதல், நீர் பரிமாறுதல் முதலிய குற்றேவல் களைத் தவறாது மிக்க ஊக்கத்துடனே எப்பொழுதும் செய்து கொண்டு சோலை யைச் செழுமையாக வளர்த்து அவர்க்குத் தன்னிடத்து நம்பிக்கையுண்டாகும்படி நல்லவள்போல நடித்து வந்தாள்.

### தேவதேவி ஆழ்வாரை வசப்படுத்தி மீளுதல்

இப்படிப் பல மாதங்கள் கழிந்த பின் ஒருநாள் பெருமழை பொழிகின்ற பொழுது பர்ணசாலையிற் பிரவேசித்திருந்த அவ்வந்தணர், வெளியிலே அவள் நனைந்து வருந்துதலைப் பார்த்து இயற்கையான ஜீவகாருண்யத்தினுல் உள்ளே வந்து நிற்கும்படி நியமிக்க, அதுவே வியாஜமாக அவள் அருகில் வந்து தனது தேன் மொழிகளாலும் மேனி மினுக்கினுலும் மனதைக் கவர்ந்து அவரைத் தன் வசமாக்கிச் சிலகாலம் அவருடனேயிருந்து, பின்பு பொருளில்லாத அவரைப்

பொருள் செய்யாது கைவிட்டுத் தன் வீட்டிற்குச் சென்று சேர்ந்த வளவிலே, இவர் அவள் பிரிவை ஆற்றாமல் அவளது வீட்டு வாயிலில் சென்று தியங்கி நின்றார்.

### நம்பெருமாள் தேவதேவிக்குப் பொன்வட்டில் தருதல்

அவ்வளவிலே, பிராட்டி பெருமாளை நோக்கி 'நமக்குப் பல காலமாகப் பணிசெய்து வந்த விப்ரநாராயணன் அதனை முழுவதும் ஒழித்து ஒரு விலைமாதர்க்குத் தொண்டு பூண்டு அவள் புறக்கணிக்கவும் மனந்திரும்பாது அவளில்லத்துப் புறக்கடைபற்றி ஏங்கி நிற்குமாறு தேவரீர் மாயைக்கு இலக்காக்கலாமோ? இதுவும் ஒரு திருவிளையாட்டு இருந்தபடி என்? இனி அவனை விரைவில் மீட்டு முன் போல ஆட்கொண்டு அந்தரங்க பக்தனுக்கியருள வேணும்' என்று பிரார்த்திக்க, திருமாலும் திருமகள் வார்த்தைக்கு இசைந்து தமது திருக்கோயிற் பாத்திரங்களுள் ஒரு ஸ்வர்ண பாத்திரத்தை எடுத்துக்கொண்டு மனித வடிவம் பூண்டு விப்ரநாராயணற்குத் தெரியாமல் அந்த வேசியின் மனைக்கு எழுந்தருளி வாசற்கதவு திறக்கச் சொல்ல, அவள் உள்ளிருந்தபடியே 'யார் நீ? எங்கு வந்தாய்?' என்று கேட்க, நம்பெருமாள் 'நான் அழகிய மணவாள தாஸன், விப்ரநாராயணரனுப்ப வந்தேன்' என்று விளம்பிய வளவில், தேவதேவி விரைந்து வந்து கதவைத் திறந்து 'வந்தகாரியம் என்ன?' என்று கேட்க, ஸ்ரீரங்கநாதன் தான் கொணர்ந்த பொற்கலத்தை அவள் கையிற் கொடுத்து 'இதனை விப்ரநாராயணர் உனக்கு வரவிடுத்தார்' என்று சொன்னவுடன், அவள் அதிக ஆதரத்தோடு 'அவரை உள்ளே வரச்சொல்லும்' என்று அநுமதி செய்தபின், அடியவர்க்கு எளியவனான எம்பெருமான் விப்ரநாராயணரிடம் வந்து 'தேவதேவி உம்மை உள்ளே வரச்சொன்னாள்' என்று சொல்லிச் சென்றார். அச்செவிக்கினிய செஞ்சொல்லைக் கேட்டமாத்திரத்தில் அவர் பிரிந்த வுயிரைப் பெற்றாற்போல உள்ளங்குளிர்ந்து உடல் பூரித்து உள்ளே போய்ச் சேர்ந்தார்.

### ஆழ்வார் நீதிபதியால் குற்றஞ்சாட்டப் பெறுதல்

அவ்விரவு கழிந்து பொழுது விடிந்தவாறே ஸ்வாமி ஸந்நிதியில் திருக்காப்பு நீக்கிய வளவில், பாத்திரங்களுள் சிறந்ததொரு பொன் வட்டிலைக் காணாமல் கோயில் பரிகரத்தார் இராஜாங்கத்தார்க்கு அறிவிக்க, அவர்கள் உடனே வந்து களவு கண்டு பிடித்தற் பொருட்டு அர்ச்சகர் பரிசாரகர் முதலிய அந்தரங்க பரிஜநங்களைப் பிடித்துப் பலவாறு தண்டித்து வருத்தியும் ஒருவர் மீதும் குற்றங் காணப்படாமையால் ஆங்காங்கும் புலன் விசாரித்து வருகையில் தேவதேவியின் மாளிகையிலிருக்கின்றதென அவள் வீட்டு வேலைக்காரி யொருத்தியால் அறிந்து, அங்குச் சென்று அதனைக் கண்டு அவ்வீட்டிலுள்ளார் யாவரையும் குற்றவாளிகளாக்கி அரசன் முன்னிலையிற் கொண்டுபோய் நிறுத்தினார்கள். அப்போது அரசன் தாஸியை நோக்கிப் 'பெருமாள் பாத்திரத்தை நீ கவரலாமோ?' என்று கேட்க, அவள், 'யான் இன்னாரென்று அறியேன்; அழகிய மணவாள தாஸனென்பானொரு தூதன் மூலமாக விப்ரநாராயணன் எனக்கு இதனை வரவிட்டான். இவ்வளவே யான் அறிவது' என்று உத்தரம் கூறினள். அதன்மேல் இராசன் விப்ரரை விசாரிக்க, அவரும், யான் ஒன்றும் அறியேன்; ஏழையான எனக்கு ஓர் ஏவலாளனும் இல்லை' என்று சொல்ல, இங்ஙனம் இருதலைவாய்மொழியையுங் கேட்டபின் அவன் ஆலோசித்து களவாடிய பொருளை வாங்கியவர் செலுத்தவேண்டிய அபராதப் பொருளைக் கட்டும்படி வேசிக்கு விதித்து, அக்காணிக்கையையும் தங்க வட்டிலையும் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, பொற்கள்வர்க்கு உரிய தண்டனையை ஆராய்ந்து விதிப்பதற்காக விப்ரநாராயணரைச் சிறையிலிட்டான்.

### ஆழ்வார் நம்பெருமாளருளால் விடுதலை பெறுதல்

மீண்டும் ஒருகால் ஸ்ரீ ரங்கநாயகி 'இவ்வடியவனைத் தேவரீர் லீலைக்கு விஷய மாக்காமல் கிருபைக்குப் பாத்திரமாக்கி யருள வேண்டும்!' என்று வேண்ட, பெரு மாள் அதனை அங்கீகரித்து, அரசன் கனவிலே தாம் எழுந்தருளி தாஸியிடத்துக் காதல் கொண்ட இவ்வந்தணனுடைய கருமத்தைக் கழித்தற் பொருட்டு நாமே பொன்வட்டிலைக் கொண்டுபோய்த்தந்து இவனைத் தண்டிப்பித்தோம். உண்மை யில் இவன் கள்ளனல்லன். பரிசுத்தனே' என்று தெரிவிக்க, அரசன் துயிலு ணர்ந்தவுடனே கனுத்தோற்றத்தை மந்திரி முதலியோர்க்கு வியப்புடனே வெளி யிட்டு விப்ரரை விடுவித்து உபசரித்து அனுப்பி விட்டான்.

### பாகவத ஸ்ரீபாததீர்த்தத்தினால் ஆழ்வார் தூய்மை பெறுதல்

பிறவிப் பெருஞ்சிறையினின்றும் விடுபடுவதற்கு ஒரு முற்குறியாகக் காவல் விடுபெற்ற பிராமணர் தாம் துளவத் தொண்டு துறந்து வைதிக வொழுக்கம் மறந்து பொருட் பெண்டிர் பொய்ம்மை மயக்கத்திலே ஆழ்ந்து இடங்கழியாளனாய் அலைந்து பரிபவப்பட்டதை நினைத்து நினைத்து மிகவும் பச்சாத்தாபப்பட்டுப் பிராயச் சித்தம் செய்து கொள்ள முயன்று பெரியோர்களைச் சார்ந்து தமது தோஷங்களை யெல்லாம் விடாது எடுத்து வாயாற் சொல்லி இவற்றிற்குப் பிராயச்சித்தம் இன்ன தென்று துணிந்து கூறியருளவேணும் என்று பிரார்த்திக்க, அவர்கள் பல நூல் களை ஆராய்ந்து 'ஸகல பாபங்களும் பரிஹாரமாவதற்கு ஏற்ற ப்ராயச்சித்தம் பாகவதர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை உட்கொள்வதே' என்று உய்யுமாறு கூற, அங்ஙனமே அவர் அதனைப் பெற்றுப் பருகிப் பரிசுத்தராயினர்.

### ஆழ்வார் தொண்டரடிப்பொடியென்று திருநாமம் பெறுதல்

பின்பு அவர் முன்போலவே பகவத் பாகவதபக்தி தலையெடுத்து "ஆடிப் பாடி யரங்கவோ! என்றழைக்கும் தொண்டரடிப்பொடியாட நாம் பெறில், கங்கை நீர் குடைந்தாடும் வேட்கை என்னாவதே" (பெருமாள் திருமொழி) என்று பல வாறாக அருளிச் செய்யப்பட்ட நூற்பொருளிலே நுழைந்த நெஞ்சமுடையராய், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாததூளியாய், அவர்கட்குக் கீழ்ப்படிந்து அடிமை பண்டு ஒழுகி, அதனால் தமக்கு அதுவே நிரூபகமாகத் தொண்டரடிப்பொடி என்று திருநாமம் பெற்றனர்.

### ஆழ்வார் திவ்யப்பிரபந்தங்களருளிச் செய்தல்

அப்பால் தொண்டரடிப்பொடியாழ்வாருக்கு ஸ்ரீரங்கநாதன் தத்வஞான மளித்துத் தனது பரம் வ்யூகம் விபவம் அந்தர்யாமித்வம் அர்ச்சை என்ற ஐவகை நிலையையும் தெளிவாக விளக்கியருள, அவர் அவற்றில் அர்ச்சாவதாரத்தில் மிக ஈடுபாடு கொண்டு, அதிலும் எம்பெருமான் உகந்தருளின நிலங்கள் எல்லாவற்றி னுள்ளும் திருவரங்கத்து நம்பெருமாளை யல்லது பிறிதொரு பொருளை யறியாராய் அப்பிரானுக்கே தாம் உள்ளளவும் துளவத்தொண்டு பூண்டு வாழ்ந்து தமது அநுபவத்தை பிரபந்த மூலமாக பிறர்க்குத் தெரிவிக்கக் கருதி, திருமாலை, திருப்பள்ளி யெழுச்சியென்று திவ்யப்ரபந்தங்களை அருளிச் செய்து உலகத்தாரை வாழ்வித்து நூற்றைந்து பிராயம் ஸ்ரீ ரங்கத்திலேயே வாழ்ந்திருந்து அநந்தரம் நலமந்த மில்ல தோர் நாட்டை யடைந்தார்.

தன்பால் அன்பால் நிறைந்த விப்ரநாராயணர் ராஜதண்டனையில் நின்று மீண்டு தொண்டரடிப்பொடியாரான செய்தியை அறிந்த தேவதேவி, தானும்

உய்வுபெற உன்னித் தனது பொருளனைத்தையும் அரங்கனுக்கே உரியதாக்கி விட்டுப் பரமஸாத்விகையாய், கோயிலிலே திருவலகிடுதல், மெழுகுதல், கோலமிடுதல் முதலிய அடிமைத் தொழில்களைச் சிலகாலஞ் செய்து கொண்டிருந்து, ஊழ்வினையொழித்து, தனது ஜந்மத்தை ஸபலமாக்கி நற்கதி நண்ணினள்.

தொண்டரடிப்பொடியாழ்வார் வைபவம் முற்றிற்று.

---

# திருப்பாணாழ்வார் வைபவம்

### ஆழ்வாரவதாரமும் பாணர்குலத்தில் வளர்தலும்

கங்கையிற் புனிதமாய காவிரிநதி பாயப்பெறுதலால் ஒப்புயர்வற்ற தூய்மை பெற்ற சோழவள நாட்டிலே ராஜநகரங்கள் ஐந்தினுள் ஒன்றாய்த் தருமவர்மா வென்னும் செம்பியனுக்குக் குமாரியாய் நீளாதேவி அவதரித்த இடமான உறையூரிலே, கார்த்திகை மாதத்து ரோகிணி நக்ஷத்திரத்திலே திருமாலினது ஸ்ரீவத்ஸத்தின் அம்சமாய் ஒருவர் ஓர் அந்தணனது கழனியிலே நெற்பயிர்க்கதிரில் அவதரித்தார்.

பிறவாது பிறந்த அத்தெய்வக் குழந்தையை அவ்வூரிற் பஞ்சமசாதியிற் பாணர் குலத்தில் பிறந்தானொருவன் பார்த்து நல்வினைப் பயனென்று மகிழ்ந்து எடுத்துக்கொண்டுபோய், மலடு தீர்ந்து, மருவியகாதல் மனையாளுந்தானுமாக, பசுவின்பால் முதலிய பரிசுத்த ஆகாரங்களையே கொடுத்துப் போஷித்து வந்தான். அங்ஙனம் வளர்ந்த இவர் திருமாலருளால் தோன்றியவராதலால், இயற்கையிலேயே உலகப்பற்றற்று எம்பெருமானுடைய திருவடித் தாமரைக்கட்குத் தம் மனத்தை மதுகரமாக்கியதுமன்றி, தாம் புகுந்த குலத்துக்கேற்ற யாழ்ப்பாடலிலும் தேர்ச்சிபெற்று அதனால் பாணர் என்றே பேர் கூறப்பட்டு, நாரதபகவான்போல ஞானவைராக்யங்களோடு ஸங்கீதஸாமர்த்தியமும் முதிர்ந்து நின்றார். இவ்வாறிருக்கையில் விஷ்வக்ஸேநர் ரஹஸ்யமாக எழுந்தருளி இவர்க்குத் திருவிலச்சினை ஸாதித்துச்சென்றார்.

### ஆழ்வார் யாழிசைபாடிப் போதுபோக்குதல்

அதனால் மஹாபாகவதோத்தமராகிய இவர் ரங்கநாதனுக்குப் பாடல் திருத்தொண்டு செய்ய உத்தேசித்துப் புறப்பட்டு தாம் தாழ்ந்த குலத்தில் வளர்ந்தவராதலால் உபயகாவேரி மத்தியிலுள்ள ஸ்ரீரங்க திவ்யக்ஷேத்திரத்தில் அடியிடுதலுக்குத் துணியாமல் தென் திருக்காவேரியின் தென்கரையில் திருமுகத்துறைக்கெதிரிலே யாழுங்கையுமாக நின்றுகொண்டு நம்பெருமானைத் திசை நோக்கித் தொழுது அப்பெருமான் விஷயமாக அநேக திவ்யகீர்த்தனங்களை, கண்டமும் கருவியுமொக்க, கேட்பவர் செவியும் மனமும் குளிர, எம்பெருமான் திருவுள்ள முகக்க, கிந்நரகந்தர்வாதியர் வியப்புறப் பாடினர்.

முன்பு திருக்குறுங்குடியில் நாடோறும் பகவத் விஷயமான யாழிசையைப் பாடிக் கைசிகமென்னும் பண்ணின் பயனால் தன்னைச் சரணமடைந்த ஒரு ப்ரஹ்மராக்ஷஸ்ஸையும் தீவினை தீர்த்து நற்கதி அடைவித்துத் தாமும் பிறவிப்பெருங்கடல் கடந்த 'நம்பாடுவான்' என்ற ஜாதிசண்டாளன்போலவே இவ்விழிகுலத்தவரும் பக்தியாற் பரவசப்பட்டு நெஞ்சம் நெக்குருகக் கண்கள் ஆநந்த வருவிசொரிய உடல்

மயிர்கூச்செறிய நாடோறும் வைகறையிலே வந்து இசை பாடாநிற்கையில் ஒரு நாள், திருவரங்கச் செல்வனுக்குத் தீர்த்த கைங்கர்யம் செய்கிற லோகஸாரங்க ரென்னும் அந்தணர்தலைவர் தீர்த்தங் கொண்டு வருவதற்குப் பொற்குடத்தை யெடுத்துக்கொண்டு பொன்னித் துறையையடைகையில் அருகிலுள்ள இந்தப் பாணரைப்பார்த்து அருவருத்து 'எட்டச்செல்' என்று பலமுறைபணிக்கவும், இவர் இவ்வுலகத்தொடர்பை மறந்திருந்ததனால் அம்மொழியைச் செவியுறாமல் வாளா நின்றிட்டார். இவர்மீது பலர் கற்களை வீசியெறிய அவ்வன்சிலைகள் இவருடைய மெல்லுடல்மேல் நன்கு பட்டிடவும், இவர் பக்திவயப்பட்டதனால் சிறிதும் ஸ்பர்ச வுணர்வின்றிச் சலியாதிருந்தார். அதுகண்டு அனைவரும் அஞ்சி அகன்றனர்.

### அரங்கன் திருமேனியில் விபரீதமுண்டாதல்.

அப்பொழுது இவரது உடம்பிலும் உள்ளத்திலும் ஈஷத்தும் வருத்தம் காணப்படவில்லையாயினும் பக்தர்களது அந்தரங்கத்தில் அமர்ந்திருக்கின்ற அரங்க நாதனது திருவுள்ளம் மிகக் கலங்கி, திருநெற்றியும் இரத்தப் பெருக்குற்றது. அதனைநோக்கி அர்ச்சகர் மிகவும் பயப்பட்டுக் கோயிலதிகாரிகளுக்கு அறிவிக்க, அவர்களும் இவ்வுற்பாதச் செய்தியை அரசனுக்குப் போகவிட, மந்திரிகளோடு பலவிதமாக ஆராய்ந்தும் அரசன் காரணங்காணாது கவன்று ஸ்வாமி திருவடியிலே பாரத்தை வைத்திட்டான். அதற்கு முன்னே ஒருநாள், பிராட்டி பெருமானை நோக்கி 'வெகுகாலமாக நம்மை அநவரத பாவனை பண்ணிவருகிற நம்பாணன் புறம்பே நிற்கப் பார்த்திருக்கலாமோ?' என்று விண்ணப்பஞ் செய்ததற்கு, எம் பெருமான், விரைவிலே அவரை அருகில் அழைத்துக்கொள்வதாக வாக்களித் திருந்தனன்.

### அரங்கனால் நியமிக்கப்பட்ட லோகஸாரங்க முனிவர் பாணரை வேண்டுதல்.

அநந்தரம் அவ்வாறே பிராட்டியின் இஷ்டத்தை நிறைவேற்றவும் பாண ரைப் பெருமைப்படுத்தவும் திருவுள்ளங்கொண்டு திருவரங்கேசன் லோகஸாரங்கமா முனிவரை நோக்கி 'நமக்கு நல்லன்பரான பாண்பெருமாளை இழிவாக நினையாமல் நீர் சென்று தோள்களில் எழுந்தருளப் பண்ணிவாரும்' என்று நியமிக்க, அவர் அப்படியே செய்து தாம் பேறுபெறக்கருதி அச்செய்தியை அத்திருப்பதியிலுள்ளார் யாவர்க்குந் தெரிவித்து, அவர்களும் உடன்வரச்சென்று திருமுகத்துறையிலே தீர்த்தமாடித் தௌதவஸ்திர முடுத்துப் பன்னிரண்டு திருமண்காப்புகளணிந்து காலைக்கடன் கழித்துக் கரையேறிப் பாணர் வழக்கமாக நிற்கின்ற விடத்துச் சென்று அவர் திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு 'தேவரீரைத் தம்மிடத்துக்கு எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு வரவேண்டுமென்று நம் பெருமாள் அடியேனுக்குக் கட்டளையிட்டருளினர்' என்று சொல்ல; பாணர் தலைவர், 'நீசனான அடியேன் திருவரங்கப் பெருநகரை மிதித்திடுவேனோ?' என்று தம் சாதியிழிவைச் சொல்லி மறுத்திட்டனர்.

### ஆழ்வார் அடியார்க்கு ஆட்பட்டு முநிவாஹனராகிக் கோயிலுள்ளே புகுதல்

அப்பால் முனிவர் 'தேவரீர் மிதித்திடவேண்டா; பெருமாள் பெரியதிருவடி யின் திருத்தோளில் எழுந்தருளுதல் போலத் தேவரீர் அடியேனது தோளில் ஏறி யருளும்' என்று பிரார்த்திக்க அது கேட்டவளவிலே பாணர் அளவிறந்த அச்சங் கொண்டு அதனால் உடல் நடுநடுங்கிச் சொற்குழறி 'மஹாபரிசுத்தமூர்த்தியான தேவரீர் அடியேன்திறத்து இங்ஙனங் கூறவொண்ணாது; பாகவதர் பாதத்திலே தலையை வணக்குதற்கு உரிய யானோ இக்கொடுந்தொழில் புரிவேன்? இது செய்து

பாகவதாபசாரப்படுதலினும் எரிவாய் நரகத்து அழுந்துவது நலமன்றோ? என்று நைச்சிய வார்த்தைகள் கூறினர். அதன் பின் முனிவர் பகவந்நியமனத்தை விண்ணப்பஞ் செய்து 'அது அதிக்ரமிப்பதற்கு உரியதன்று' என்று பகர, பாணர் பரதந்திரராய் நின்று விட்டார். பின்னர் முனிவரர் பாணநாதரைத் தோளிலேற்றிக்கொண்டு முக்தனைப்போமவனை ஆதிவாஹிகர் எழுந்தருள்வித்துக் கொண்டு திருமாமணி மண்டபத்துக்குச் செல்லுமாறுபோலச் சென்று ரங்கநாதனது திருமுன்பே இறக்கிவிட்டனர்.

### ஆழ்வார் அமலனுதிபிரானருளிச்செய்து அரங்கன் திருமேனியில் அந்தர்ப்பவித்தல்

உடனே முநிவாஹநரான பாணர் இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்தூடேற்றி வைத்தேணி வாங்கி அருள்கொடுத்திட் டடியவரை ஆட்கொள்வானை அணியரங்கனது திவ்யமங்கள விக்ரஹத்தைப் பாதாதிகேசம் நேத்திரானந்தமாகச் சேவித்து அதில் ஆழ்ந்து அதன் அழகை அநுபவித்து அவ்வநுபவாதிசயத்தைப் பின்புள்ளார்க்கும் விசதமாக்குதற் பொருட்டு அமலனுதிபிரான் என்ற திவ்யப்ரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளி அதன் இறுதியில் "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே." என்று தமது துணிபை வெளியிட்டு உலகத்தாரை வாழ்வித்து மிகவும் உகப்போடு நிற்கையில், பெரியபெருமாள் அத்திருமேனியோடு அவரை அங்கீகரித்தருளத் திருப்பாணாழ்வார் அனைவருங் காண அப்பிரானது திருவடிகளிலே அந்தர்ப்பவித்து, காய்ந்த இரும்பு உண்ட நீராயினர். கோபாலன் குழலிசையாற் கோக்களை மகிழ்வித்ததுபோல அக்கோவிந்தனை யாழிசையால் மகிழ்வித்த இவ்வாழ்வார் இவ்வுலகில் வாழ்ந்திருந்தது ஐம்பது வருஷகாலமென்பர். லோகஸாரங்கர் முதலிய பலர் இவ்வாழ்வாரை ஆச்ரயித்து நற்கதி பெற்றனர்.

திருப்பாணாழ்வார் வைபவம் முற்றிற்று.

---

## நம்மாழ்வாருக்கு அந்தரங்கரான மதுரகவி யாழ்வாரது வைபவம்.

திருக்குருகூர் அருகிலுள்ள திருக்கோளூரிலே, சித்திரை மாதத்திலே சித்திரை நக்ஷத்திரத்திலே இவர் அவதரித்தார். ஸூர்யோதயத்திற்கு முன் அருணோதயம்போலப் பராங்குசர் உதிப்பதற்கு முன் தோன்றிய இவர் வேதசாஸ்திரங்களை இளமையிலே பயின்று செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாட வல்லவராய் அதனால் மதுரகவியென்று திருநாமம் பெற்று மெய்யுணர்வினால் அவாவற்று மஹாவிரக்தராய் விஷ்ணுபக்தி விஞ்சி யோகநிஷ்டையிலுந் தேர்ந்து தீர்த்த யாத்திரை திவ்யதேச யாத்திரைகளிலே திருவுள்ளமுடையவராய்ப் புறப்பட்டுச் சஞ்சரிக்கலுற்று வடநாட்டுத் திருப்பதிகளைச் சேவித்துக்கொண்டு திருவயோத்தியை யடைந்து அந்தப் பரிசுத்த பூமியில் நித்யவாஸஞ் செய்யக் கருதிச் சிலகாலம் வஸித்திருந்தார்.

### மதுரகவிகள் நம்மாழ்வாரை ஆச்ரயித்தல்

அக்காலத்தில் ஒருநாளிரவில் இவர் திருக்கோளூரெம்பெருமானைத் திசை நோக்கித் தொழக்கருதித் தெற்குத் திக்கில் கண் செலுத்தியபொழுது அப்பக்கத்திலே வானுற வளர்ந்து விளங்குகின்றதொரு திவ்யமான பேரொளியைக் கண்ணுற்று அது இன்னதென்றறியாமல் 'கிராம நகரங்கள் வேகின்றனவோ?

நாட்டுத் தீயோ?' என்று சங்கித்துத் திகைத்துநின்றார். நின்றவர், இங்ஙனமே இரண்டு மூன்று நாட்களிலுங் கண்டு அச்சுடர்த்திரள் முச்சுடரொளியினும் மிக்கு விளங்கியதனால் வெகு வியப்புற்று அதனை அருகிற்சென்று பார்த்துத் தெளியத் துணிந்து புறப்பட்டு அச்சோதியைக் குறியாகக்கொண்டு அதிவிரைவாக நெடுவழி கடந்து நடந்துவந்து ஆழ்வார்திருநகரியை அடைந்து அதில் அவதரித்தருளியுள்ள சடகோபமுனிவரது திருமேனி விளக்கத்தைச் சேவித்து இதுவே அத்தனை நெடுந் தூரம் ப்ரகாசித்ததென்றறிந்து வியந்து அவ்வாழ்வாரது நிலைமையை முன்பு தாம் கேள்வியுற்றிருந்தபடியே அப்ராக்ருதமா யிருக்கக்கண்டு அவர்க்குக் கட்புலனும் வாய்ப்புலனும் உள்ளனவா வென்பதைச் சில உபாயங்களாற் பரிசோதிக்கலானார். அப்பொழுது காரிமாறப்பிரான் கண்திறந்து கடாக்ஷித்து இவர்கேட்ட கேள்விக் கேற்ற விடைசொல்லியருள அதுகேட்டு மதுரகவியாழ்வார் அவரது ஞானவைப வத்துக்கு அதிசயித்து ஈடுபட்டு அவரையே ஆசார்யராகக்கொண்டார்.

### மதுரகவிகளுக்கு ஆழ்வார் உபதேசித்தருளினது

அப்பொழுது நம்மாழ்வார் பஞ்ச ஸம்ஸ்காரம் ப்ரஸாதித்து இவரை ஆட் கொண்டு பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம் என்னும் நிலைகளுக்கு முறையே வேதம், பாஞ்சராத்ரம் இதிஹாஸம் ஸ்மிருதி என்பனபோல அர்ச்சாவ தாரத்துக்கு ஏற்ற துதி வடிவான தமிழ் நூல்களை அருளிச்செய்யத் தொடங்கி சதுர் வேதத்தின் ஸாரமாக நான்கு திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்து அவற்றை அம் மதுரகவிக்கு உபதேசித்தருளினர்.

### கண்ணிநுண்சிறுத்தாம்பு அவதரித்தல்

'முந்தின மூன்று யுகங்களில் த்யாந யாக அர்ச்சனங்களாற் போலக் கடை யுகத்தில் ஸ்தோத்ரமாத்ரத்தால் உயர்கதி உளதாம்' என்ற நூற்கொள்கைக்கு ஏற்ப மதுரகவிகள் தாம் உபதேசம் பெற்ற திவ்யப்ரபந்தங்களைக் கைத்தாளமெடுத் துப் பண்ணிசையோடு எப்பொழுதும் பாராயணஞ் செய்துகொண்டு திருக்குருகூர் நகர்நம்பிக்கு ப்ரதான சிஷ்யராய், பரதாழ்வானுக்கே பணிவிடை புரிந்தொழுகின சத்ருக்நாழ்வானைப் போலப் பகவத் பக்தியினும் பாகவத ப்ரதிபத்தியையே பரமா நுஷ்டாநமாகத் தலைக்கொண்டு அவ்வாழ்வார் விஷயமாக 'கண்ணிநுண் சிறுத் தாம்பு' என்ற திவ்யப்ரபந்தத்தைப்பாடி முமுக்ஷுக்களுக்கு உபகரித்தருளி வாழ்ந் திருக்கையில், தேவிற்சிறந்த திருமாற்குத் தக்க தெய்வகவிஞரும் பாவிற் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதருமான காரிமாறன் திருநாட்டை அலங்கரித்தார்.

### நம்மாழ்வாருடைய பெருமைகளை நிலைநாட்டுதல்

அப்பால் ஆசிரியரைப் பிரிந்ததற்கு மிக இரங்கி அரிதில் தேறிய மதுர கவிகள் அர்ச்சாரூபமான ஆழ்வாரதுவிக்ரஹத்தை அத்திருநகரியில் எறியருளப் பண்ணிப் பிரதிஷ்டிப்பித்து அவர்க்கு நித்யநைமித்திக உத்ஸவங்களை யெல்லாம் சிறப்புற நடத்திக்கொண்டுவந்தார். இத்திருவிழாக்களில் 'வேதந் தமிழ்செய்த மாறர் வந்தார். திருமாலுக்குரிய தெய்வப் புலவர் வந்தார்.' என்று இவை முதலாக அநேக விருதுகளைக் கூறித் திருச்சின்னம் முழங்குதலைக் கேள்வியுற்றவளவிலே மதுரைச் சங்கத்தாரது தூண்டுதலால் அவர்களுடைய மாணாக்கர்கள் வந்து எதிரிட்டு 'உங்களாழ்வார் பக்தரேயன்றிப் பகவானல்லரே; இவர் சங்கமேறிய புலவரோ? இவர் பாடிய திருவாய்மொழி சங்கமேறிய செய்யுளன்றே; இவரை வேதந்தமிழ் செய்தவரென்று சிலாகிப்பது தகுதியோ?' என்று பல குதர்க்கம் பேசி விருது களைத் தடுத்திட்டனர். அதற்கு மதுரகவிகள் மனம் பொறாமல் வருந்தி 'இவர்கட்

குக் கர்வபங்கமாம்படி தேவரீர் செய்தருளவேண்டுமென்று ஆழ்வாரையே ப்ரார்த்திக்க, சடகோபர் ஒரு கிழ ப்ராஹ்மண வடிவத்தோடு வந்து திருவாய்மொழியில் *கண்ணன் கழலிணையை எழுதிய ஏட்டை எடுத்துப்போய் வைத்திட்ட மாத்ரத்தில் சங்கப்புலவர்கள் ஏறியிருந்த பலகை பொற்றாமரைப் பொய்கையில் மூழ்கித் தன் மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில் வீழ்த்தி உடனே மேலெழுந்து தன்மீது வைத்த சிறுமுறியை மாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது. அப்பொழுது நீரில் விழுந்து அமிழ்ந்து தடுமாறியெழுந்து மெல்ல நீந்திக் கரைசேர்ந்த சங்கப்புலவர்கள் ஸகலவேத சாஸ்த்ரங்களையும் பிறரால் கற்பிக்கப்படாமல் தாமேயுணர்ந்து பகவதம்சமாகிய ஆழ்வாருடைய தைவிகமான பாண்டித்யத்தைத் தெரிந்துகொண்டு இறுமாப் பொழிந்து தாம் முன்பு அபசாரப்பட்டதற்கு அநுதாபமுற்று அதனை க்ஷமித்தற்பொருட்டு அவரது மஹிமையைக் குறித்துத் தோத்திரமாகத் தனித்தனி ஒவ்வொரு பாடல் பாடி வெளியிடுபவரானார்கள். அங்ஙனம் வெளியிடுகையில், அப்பாடல்கள் யாவும்

> "சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
> நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமந்
> துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
> முளவோ பெருமா னுனக்கு" (வெண்பா)

என்ற இப்பாடல் வடிவாகச் சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்க, இதுபற்றி அவர்களனைவரும் 'இது என்ன அற்புதம்! என்ன அற்புதம்; இதுவும் ஆழ்வாரது தெய்வத் திருவருளே!!' என்று அதிசயப்பட்டார்கள்.

### நிகமனம்

இப்படி மதுரகவியாழ்வார் தமது ஆசாரியருடைய பெருமைகளை வெளியிட்டுக்கொண்டு அத்தலத்திலே சிலகாலம் எழுந்தருளியிருந்து பின்பு சிந்தையும் மொழியும் செல்லாநிலைத்தான பேரின்பப் பெருவீட்டை அடைந்தனர்.

"மாறனடி பணிந்துய்ந்த விராமாநுசன்" என்பதற்கிணங்க நம்மாழ்வார் திருவடி நிலைகளுக்கு இராமாநுசன் என்று ஸகல திவ்ய தேசங்களிலும் திருநாமம் வழங்கும்.

மதுரகவியாழ்வார் வைபவம் முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருமங்கையாழ்வார் வைபவம்.

## அவதாரமும் நாமகரணமும்.

சோழமண்டலத்திலே திருமங்கையென்று ஒரு நாடு உண்டு. அதில் திருவாலி திருநகரி யென்கிற திவ்யதேசத்தின் ஸமீபத்திலுள்ள திருக்குறையலூரிலே நான்காம் வருணத்தில் கள்ளக்குடியில், சோழராஜனுக்குச் சேனைத்தலைவனாகவுள்ள ஒருவனது குமாரராய் ஒருத்தர் கார்த்திகைமாதத்தில் கிருத்திகா நக்ஷத்திரத்திலே அவதரித்தார். இப்படி அவதரித்த அவர் நீலநிறமுடையரா யிருந்தது பற்றி இவர்க்குத் தந்தை நீலனென்று நாமகரணஞ் செய்தார். [இவர்க்குத் திருமங்கையாழ்வார், பரகாலன், கலியன், கலிகன்றி முதலிய திருநாமங்களுமுள.]

இவர் தமது குடிக்கு ஏற்ப இளமையிலே ஆயுதப் பயிற்சியில் தேர்ச்சி பெற்றுச் சோழராஜனை யடுத்துச் சேனைபதி உத்யோகத்தில் அமர்ந்து கொற்றனுக்குக் கொடியவரோடு கடும்போர் நேருங்காலங்களுள் படைகளோடு முன் சென்று பராக்கிரமத்தாற் பகை வென்று பரகாலனென்று ப்ரஸித்திபெற்றார். இவருடைய இப்படிப்பட்ட ஒப்பற்ற பராக்கிரமத்தை யுணர்ந்த கொற்றவன் இவரை அத்திருமங்கை நாட்டுக்கு அரசராக்கி முடிசூட்டினன். இவ்வாறு குறுநிலத்தலைமை பூண்ட திருமங்கை மன்னன் அரசாங்க காரியத்தைக் குறைவின்றி நடத்திப் புகழ் பெற்று இசை நாடகங்களில் பிரியமுடையராய் எப்பொழுதும் பல இளமங்கையர் இன்னிசை பாடக்கேட்பதையும் நன்னடம் பயிலக்காண்பதையுமே பொழுதுபோக்காகக் கொண்டிருந்தார்.

இப்படியிருக்கையில் அந்நாட்டில் அண்ணன்கோயில் என்று வழங்குகின்ற திருவெள்ளக்குள மென்னும் திருப்பதியில் மிகச் சிறந்ததொரு தாமரைப் பொய்கையில் தேவலோகத்து அப்ஸர ஸ்த்ரீகள் பலர் வந்து ஜலக்ரீடைசெய்து செல்ல, அவர்களுள் திருமாமகளென்பாள் தன் இச்சையால் தெய்வவடிவத்தைவிட்டு மானுடவடிவங்கொண்டு தனியே குமுதமலர் கொய்து நின்றாள். அங்கு அநுஷ்டானத்திற்காக வந்த ஒரு வைஷ்ணவ வைத்யன் அவளைக் கண்டு செய்தி விசாரிக்க, அவள் 'என்னோடு கூடவந்த மாதர்கள் என்னைவிட்டுப் போய்விட்டார்கள், தனியிருந்து அலைகின்ற என்னை நீர் பாதுகாத்தருளவேணும்' என்று வேண்டினாள். மலடனான அம்மருத்துவன் மகிழ்ச்சியோடு அதற்கு உடன்பட்டு அம்மகளைத் தன் மாளிகைக்கு அழைத்துப்போய் மனையாள் வசம் ஒப்பித்து, குமுதமலர் கொண்டு நின்றது காரணமாகக் குமுதவல்லியென்று அப்பெண்ணுக்கு நாமமிட்டு வளர்த்து வந்தான். வருகையில் அக்கன்னிகைக்கு விவாஹத்துக்குரிய பிராயம் வந்த வளவிலே அவளை வளர்க்கிற அந்த வைத்தியனுக்கு 'மஹா குணவதியான இப்பெண்ணுக்கு ஏற்ற கணவன் உலகத்திலுளனோ' என்ற கவலையும் உடன் வந்தது. அப்பொழுது அவளுடைய ரூபலாவண்ய ஸௌந்தரியங்களையும் குணாதிசயங்களையும் சாரர்கள் திருமங்கை மன்னனிடம் கொண்டாடிக் கூற, உடனே அவர் அவளழகைப் பார்ப்பதற்கு ஆசைகொண்டு ராஜ்யகாரியங்களை இருந்தது இருந்தபடியே விட்டுத் திருநாங்கூரைச் சார்ந்ததான திருவெள்ளக்குளத்துக்கு வந்து அந்த வைத்தியனிருக்கும் வீட்டிலே புக்கு அவனோடு ஸம்பாஷணை செய்து கொண்டிருக்கையில் அக்கன்னிகை கண்ணெதிரிற் படக்கண்டு வியந்து காதல் விஞ்சி அவள் வரலாற்றை வினவி அதைத் தந்தையார்வாயில் அறிந்த வளவில் 'இவளை எனக்குத் தாரைவார்த்துக் கொடுக்கவேணும்' என்று அவரை வணங்கிக் கேட்டார். வஸ்திர பூஷணம் முதலிய வற்றையும் மிகுதியாக முன் வைத்தார். இவர் இங்ஙனம் விரும்

பிக் கேட்டதற்குத் தந்தை தாயார் இசைந்து அப்படியே கன்னிகா தானஞ் செய்ய
விருக்கையில் குமுதவல்லி குருக்கிட்டு " திருவிலச்சினை திருமண் காப்பு முதலிய பஞ்ச
ஸம்ஸ்காரமுடைய ஒரு வைஷ்ணவர்க்கேயன்றிப் பிறர்க்கு வாழ்க்கைப்பட
மாட்டேன் " என்று தன் உறுதியைத் தெரிவித்தாள்.

அதுகேட்ட திருமங்கை மன்னன் உடனே திருநறையூர்க்குச் சென்று
அங்கு எழுந்தருளியுள்ள நம்பி என்னு மெம்பெருமானுடைய திருமுன்பே நின்று
பிரார்த்தித்து அப்பிரானிடத்தில் திருவிலச்சினை பெற்றுப் பன்னிரண்டு திருமண்
காப்புகளும் சாத்திக் கொண்டு விவாஹார்த்தமாக விரைவில் வந்துசேரக் கண்டு
மீண்டும் குமுதவல்லி " நீர் ஓராண்டளவும் நித்தியமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீ வைஷ்ண
வர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையும் போனகஞ்
செய்த சேஷத்தையும் உட்கொண்டாலன்றி உம்மை நான் பாணிக்கிரஹணஞ்
செய்து கொள்ளமாட்டேன் " என்ன, அவளிடத்தில் கொண்ட ஆசையின் கனத்
தால் அவர் இவ்வரிய விரதத்தைச்செய்து முடிப்பதற்கும் உடன்பட்டு அங்ஙனமே
செய்வதாகச் சபதஞ் செய்துகொடுக்க, அதன்பின் இருவர்க்கும் திருமணம் நடை
பெற்றது.

பின்பு திருமங்கை மன்னன் பகவானது ஆராதனத்திற் காட்டிலும் பரம
பாவனமான பாகவதாராதனத்தைச் செய்து கொண்டும் தம் அரசனுக்குச் செலுத்த
வேண்டிய பகுதிப்பொருளு முட்படச் செல்வ முழுதையுஞ் செலவிட்டு வர அச்செய்
தியைச் சிலர் சொல்லக் கேட்ட கொற்றவன் கோபங்கொண்டு இவர் பக்கல் திறை
வாங்கி வருவதற்காகத் தன் சேவகரை அனுப்பினன். அவர்கள் வந்து கேட்ட
தற்கு இவர் காலை பகல் மாலை இரவு நாளை பின்னிட்டு என்பதாகச் சில தவணைகள்
சொல்லிக்கொண்டு கால விளம்பஞ் செய்துவந்தார்.

### பரகாலனுக்குப் பேரருளாளன் நிதி காட்டுதல்.

பின்பு அச்சேவகர்கள் கடுமையாக நிர்ப்பந்தஞ் செய்யவே, நீலர் வெகுண்டு
அவர்களை வெருட்டித் துரத்தினர். அதனை யறிந்த அரசன் சீற்றமுற்றுத் தனது
ஸேனாதிபதியை விளித்து " நீ சென்று பரகாலனைப் பிடித்து வா " என்று நியமிக்க,
அவன் அங்ஙனமே பலசேனைகளோடு வந்து இவரை வளைத்துப் பிடிக்கத் தொடங்க,
இவர் ஆடல்மா என்று பிரசித்தமான தமது குதிரையின்மீது ஏறிக்கொண்டு சேனை
களோடு முன்சென்று எதிர்த்துப் பொருது அவனை முதுகுகாட்டி யோடச்செய்ய,
அஃதுணர்ந்த அரசன் தானே ஸேனாஸமூகங்களோடு வந்து இவரை வளைய, இவர்
தம் படை வலிமையினால் அப்படைக் கடலைக் கடந்து தமது திறமையைக் காட்டிப்
பொருகையில், தாம் அருள்மாரியாதலால் அரசனைக் கொல்லலாகாதென்று சிறிது
காலம் போர் நிறுத்தி நின்றார். அதுவே ஸமயமாக அரசன் தந்திரமாய் நல்வார்த்தை
சொல்லிக்கொண்டு அருகில்வந்து 'உமது பராக்கிரமத்தைக் கண்டு மிகமகிழ்ந்
தோம்' என்று கொண்டாடி 'விரைவில் கப்பஞ் செலுத்திவிடும்' என்று சொல்லி
இவரை மந்திரி வசமாக்கிவிட்டுத் திரும்பிப்போயினன். அந்த மந்திரி இவரைப்
பகுதிப் பொருளுக்காகப்பிடித்து ஒரு தேவாலயத்திற் சிறைவைக்க, அங்கு இவர்
உணவு இல்லாமல் மூன்றுநாள் பட்டினி கிடக்கையில், கச்சிநகர்த் தலைவனான
பேரருளாளன் இவரது கனவிலே வந்து காட்சி தந்து 'உனக்கு வேண்டிய
பொருள் தருகின்றோம், வா' என்று சொல்லியருளினன். இவர் அக்கனவை
நனவாகவே நம்பி எம்பெருமானது திருவருளுக்கு மகிழ்ந்து பொழுதுவிடிந்ததும்
மந்திரியை நோக்கி " காஞ்சீபுரத்திலே நிதி இருக்கின்றது; அங்கு வந்தால் தரு
வேன் " என்றுகூற, அவன் அதனை அரசனுக்கு அறிவித்து அநுமதிபெற்றுப் பல
பரிவாரங்களால் காவல் செய்து கொண்டு கச்சிப்பதிக்கு இவரை அழைத்து வந்

றான். அங்கு இவர் நிதியைத் தேடிக் காணுது கவலைக்கடலில் மூழ்கி மூர்ச்சிக்கு மளவிலே, பேரருளாளனுகிய வரந்தரும் மாமணிவண்ணன் மீண்டும் கனவில் எழுந் தருளி அபயமளித்து வேகவதியாற்றங் கரையில் நிதியுள்ள விடத்தைக் குறிப்பிட்டு அருளிச்செய்த பின்பு, இவர் தெளிந்தெழுந்து பொருள் கண்டெடுத்து அரசன் கட்டளையைச் செலுத்தி மிகுந்த தனத்தைப் பாகவதாராதனத்துக்கு வைத்துக் கொண்டார். அதன் பிறகு மந்திரி பொருளைக் கொண்டுபோய்ப் பிரபுவின் முன் னிலையில் வைத்து நடந்த செய்திகளைத் தெரிவிக்க, அவ்வரசன் இவரது மஹிமையை ஆராய்ந்து அச்சமும் ஆச்சரியமுங்கொண்டு உடனே இவரை வரவழைத்து விசேஷ மாக உபசரித்து, தான் செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தருளும்படி பிரார்த் தித்து, அநந்தரம் 'திரௌபதிக்குப் புடவை சுரந்தாப்போல மாயவனருளாற் பெருகிய இப்பொருளைக் கோசகிருஹத்தில் வைக்கலாகாது' என்று துணிந்து அப்பொருள் முழுவதையும் இவரைப் பட்டினிவைத்த பாவந்தீருகைக்காகப் பலபல பாகவதர்கட்குக் கொடுத்துப் பரிசுத்தனுயினன்.

### வயலாலி மணவாளனை வழிபறித்தல்

பிறகு பரகாலர், சேஷித்த பொருளைக்கொண்டு ததீயாராதனம் நடத்தி வரு கையில் எல்லாம் செலவாய்விட்டதனால் கைப்பொருளொன்றுமின்றி வழிபறித்தா கிலும் பொருள் ஸம்பாதித்து அக்கைங்கர்யத்தைத் தடையற நடப்பிக்கத்துணிந்து, நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தாளூதுவான், தோலாவழக்கன் என்ற நால்வரை உற்றதுணைவராக உடன்கொண்டு ஆங்காங்குசென்று வழிச்செல் வோரைச் சூறையாடிக் கொணர்ந்த பொருளால் திருமாலடியார்களைப் பூசிக்கும் நோன்பை நோற்று வந்தார். இவர் களவு செய்வதும் ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆரா திப்பதற்கே யாதலால் நல்வினையாகவேகொண்டு இவர்க்கு விசேஷகடாக்ஷம் பண்ணி இவரை அங்கீகரிக்கவேண்டுமென்று திருவுள்ளம் பற்றி இவர் தன்னை வழி பறிக்குமாறு தான் ஒரு அந்தணனுக வேடம் பூண்டு பல ஆபரணங்களையும் தரித்து மணவாளக்கோலமாய் மனைவியுடனே இவரிருக்கிறவழியே எழுந்தருள, திருமணங் கொல்லையில் திருவரசமரத்தின்கீழ்ப் பதுங்கியிருந்த குமுதவல்லி மண வாளர் கண்டு களித்து ஆயுதபாணியாய்ப் பரிவாரத்துடனே வந்து அவர்களை வளைந்து வஸ்திரபூஷணங்களை யெல்லாம் அபஹரிக்கையில் அம்மணவாளப்பிள்ளை —லில் அணிந்துள்ள மோதிரமொன்றைக் கழற்றமுடியாமையால் அதனையும் —டாமற் பற்களாலேகடித்து வாங்க அம்மிடுக்கை நோக்கி எம்பெருமான் இவர்க்குக் கலியன் என்று ஒரு பெயர் கூறியருளினன். அதற்குப்பிறகு இவர் பறித்த பொருள்களையெல்லாம் சுமையாகக்கட்டி வைத்து எடுக்கப்பார்க்கையில் அப் பொருட்குவை இடம்விட்டுப் பெயராமல் மலைபோல் அசையாமலிருக்க, அது குறித்து ஆச்சரியப்பட்டுத் திருமங்கைமன்னன் அவ்வந்தணனை நோக்கி 'நீ என்ன மந்திரவாதம் பண்ணினுய்?' என்று விடாது தொடர்ந்து தன் கையிலேந்திய வாட் படையைக் காட்டி அச்சமுறுத்தி நெருங்க, அப்பொழுது ஸர்வேச்வரஸ்வரூபியான அந்த அந்தணன் 'அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம் வாரும்' என்று அருகிலழைத்து ஸகலவேதஸாரமான திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை, முன்பு நரநாராயணராய்த் தனக்குத்தானே சொல்லிக்கொண்ட குறை தீர இவர் செவி யிலே உபதேசித்து உடனே கருடாருடனுய் இவர்முன் எழுந்தருளி ஸேவை ஸாதித்தான்.

### ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களருளிச்செய்யத் தொடங்குதல்.

அங்ஙனம் மந்திரோபதேசம் பெற்றதனுலும் அந்த திவ்ய மங்கள விக்ர ஹத்தை ஸேவித்ததனுலும் முன்பு காலாழியைப்பற்களால் கழற்றநேர்ந்தபோது

பகவத் பாதாரவிந்தத்தில் வாயவைத்ததனுலும் கலியன் அஜ்ஞானவிருள் நீங்கித் தத்துவஞானச் சுடரெழுந்து எம்பெருமானைப் பரிபூரணமாக அநுபவித்து அவ்வநு பவத்தாலுண்டான ஆநந்தாதிசயத்தை வெளியிடுமாறு ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, விஸ்தாரக்கவி என்னும் நால்வகைக் கவிகளையும் பாடவல்ல பாண்டித் திய முடையவராய் "வாடினேன் வாடி வருந்தினேன்" என்று தொடங்கிப் பாடி லுற்று, வடமொழி வேதங்கள் நான்குக்கும் ஆறு அங்கங்கள் அமைந்திருக்கின்றது போல அவ்வேதங்களின் உட்பொருளால் நம்மாழ்வார் அருளிச்செய்த நான்கு திவ்வியப் பிரபந்தங்களுக்கும் தமது பிரபந்தங்கள் அங்கங்களாக அமையும்படி பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரியதிருமடல், திருநெடுந்தாண்டகம் என்னும் ஆறு திவ்ய நூல்களைத் திருவாய் மலர்ந்தருளி, 'திருமங்கையாழ்வார்' என்று திருநாமம் பெற்றார். அவற்றுள் முதற் பிரபந்தம்—பெரிய திருமொழி அது 1084 பாசுரங்கள் கொண்டது.

### ஆழ்வாருடைய திவ்யதேச யாத்திரை.

ஆழ்வார் இப்பிரபந்தம் பாடுகையில் தாம் உஜ்ஜீவந ஹேதுவாகப் பெற்ற திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தின் வைபவத்தை முதல் திருமொழியிலே பன்னி யுரைத்து, அநந்தரம் திவ்யதேச யாத்திரையாகச் சென்று ஆங்காங்கு பெருமானை மங்களாசாஸநஞ் செய்து பாசுரங்கள்பாட உத்தேசித்து பிரிதி, பதரிகாச்ரமம், ஸாளக்ராமம், நைமிசாரணியம், சிங்கவேழ்குன்றம், திருவேங்கடம் என்னும் வட நாட்டுத் திருப்பதிகளிற் சென்று எம்பெருமான்களை ஸேவித்துப் பாசுரம்பாடி, தொண்டைநாட்டுத் திருப்பதிகளுள் திருவெவ்வுளூர்க்கு வந்தபின் திருநின்றவூரைச் சேர்ந்தார்.

அத்திருப்பதியிலெழுந்தருளியுள்ள பத்தராவிப் பெருமாள் அப்பொழுது ஆழ்வார்க்கு முகங்கொடாமல் பிராட்டியோடு ஸரஸ ஸல்லாபஞ் செய்துகொண்டு பராமுகமாயிருக்க, அப்பால் ஆழ்வார் திருவல்லிக்கேணிக்கெழுந்தருளி மங்களா சாஸனஞ் செய்து திருநீர்மலை யெம்பெருமானையும் துதித்து அநந்தரம் திருக்கடன் மல்லையையடைந்து பெருமானை ஸேவித்து நின்றார். அப்பொழுது திருநின்றவூ ரெம்பெருமான் திருமகளால் தூண்டப்பட்டு இவ்வாழ்வார் திருவாக்கினல் பாடல் பெற்றுச் சிறப்புறக் கருதி அக்கடன் மல்லையில் வந்து ஸேவை ஸாதிக்க, கலியன் அப்பெருமானையும் அங்கே கண்ணுரக்கண்டு களித்து அவ்வூர் விஷயமான திரு மொழியிலே "நின்றவூர் நித்திலத்தைத் தொத்தார் சோலைக் காண்டவத்தை கனலெரிவாய்ப் பெய்வித்தானைக் கண்டது நான் கடன்மல்லைத் தலசயனத்தே" என்று பாடினர்.

### ஞானசம்பந்தமூர்த்தி நாயனரை வெல்லுதல்.

இவ்வாறே மற்றுஞ் சில தொண்டைநாட்டுத் திருப்பதிகளையும் நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டையுங் கடந்து சோழநாட்டுத் திருப்பதிகளில் தில்லைத்திருச் சித்திரகூடம் பாடியபின்பு சீர்காழி வழியாக எழுந்தருளுகையில் வழக்கப்படி பரி ஜனங்கள் இவர் முன்னே "நாலு கவிப்பெருமாள் வந்தார்! பரவாதி மத்தகஜ கண்டீரவர் வந்தார்!" இத்யாதி பல பிருதாவளிகளை எடுத்தேத்திக்கொண்டு செல்லா நிற்கையில், அவ்வூரிலுள்ள ஞானசம்பந்த மூர்த்தி நாயனரென்கிற சைவ சமயாசிரியருடைய அடியார்கள் வந்து "எங்கள் நாயனருள்ளவிடத்தே நீர் விருதூதிச் செல்லலாகாது" என்று தடைசெய்ய; அது கேட்டுப் பரகாலர் சம்பந் தருள்ள விடத்தே சென்று அவரோடு வாதப்போர் செய்யத் தொடங்குகையில் நாயனர் ஆழ்வாரை நோக்கி 'உமது கவித் திறத்தை யான் காணுமாறு முந்துற முன்னம் ஒரு பாடல் பாடும்' என்று சொல்ல, உடனே ஆழ்வார் "ஒரு குறளாயிரு

நில மூவடி மண்வேண்டி" என்று தொடங்கி அருகிலிருக்கிற காழிச்சீராம விண்ணகரமென்ற திருப்பதியிலுள்ள தாடாளப்பெருமாள் விஷயமாகப் பதிகம்பாடக்கேட்டு ஞானசம்பந்தர் மிக அதிசயித்து 'உமக்கு இந்த விருதுகள் யாவும் தகும் தகும்' என்று சொல்லித் தமது வேலாயுதத்தை இவர்க்குத் திருமுன் காணிக்கையாக ஸமர்ப்பித்து நன்கு பஹுமானித்து உபசரித்து வழிபட்டு வழிவிட்டுமீள, இம்மெய்யடியவர் வெற்றிவேல் பறித்துக்கொண்ட தமது கொற்றம்முற்றுந் தோன்ற "செங்கமலத்தயனனைய மறையோர் காழிச்சீராம விண்ணகரின் செங்கண்மாலை, அங்கமலத் தடவயல் சூழாலி நாடனருள்மாரி அரட்டமுக்கி யடையார்சீயம், கொங்குமலர்க்குழலியர் வேள் மங்கை வேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன, சங்கமுகத்தமிழ்மாலை பத்தும் வல்லார் தடங்கடல் சூழுலகுக்குத் தலைவர் தாமே" என்று தமது பாயிரத்தோடு அத்திருமொழியை முடித்து ஜயபேரி முழங்க அப்பாலெழுந்தருளித் தமது திருவவதாரஸ்தலத்திற்கு அடுத்த திருவாலியைச் சார்ந்து திருநாங்கூர்த் திருப்பதிகள் முதலியவற்றைப் போற்றித் திருவிந்தளூரை யடைந்தார்.

## திவ்யதேசத் திருப்பணி.

அப்பொழுது அத்திருப்பதி யெம்பெருமான் ஆழ்வார்க்குத் தன்னை ஒருகால் காட்டி மறைய, அவர் த்ருப்தி பெறாமல் மனக் குறையோடு "வாசிவல்லீ ரிந்தளூரீர் வாழ்ந்தேபோம் நீரே" என்று தமது குறைபாடு தோன்றப்பாட, அதற்கு இரங்கிப் பெருமான் நிரந்தர ஸேவைஸாதிக்க அது பெற்று நிரம்பிய மனத்தராய்ப் பல திருப்பதிகளின் வழியாகத் திருவரங்கம் பெரிய கோயில் சேர்ந்து நம்பெருமாள்பக்கலிலே மிக்க ஈடுபாடுகொண்டு பலபதிகங்கள் பாட அது கேட்டுத் திருவுள்ளமுகந்து அப்பெருமான் திருமுக மலர்ச்சியோடு ஆழ்வாரைக் குளிர நோக்கி "நமக்கு விமானம் மண்டபம் கோபுரம் பிராகாரம் முதலிய கைங்கரியங்களைச் செய்யும்" என்று நியமித்தருள,

[ஜிதபாஹ்ய ஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே. மணிமண்டப வப்ர கணந் விததே பரகாலகவிः ப்ரணமேமஹி தாந்] என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் மங்களாசாஸநஞ்செய்துள்ளபடியே திருப்பணிகளைக் குறைவற முடித்தார்.

இந்தத் திருப்பணி நடத்தின விதம்:—நாகப்பட்டணத்தில் புத்தர்கள் பொன்னிலே மிகப் பெரிய பிரதிமைகளைச்செய்து வைத்து வணங்குகிறார்களென்றும் அவற்றைப் பறித்துவந்தால் யதேஷ்டமாகத் திருப்பணிகள் நிறைவேற்றலாமென்றும் அறிந்து ஆழ்வார் தமது பரிஜனங்களுடன் நாகப்பட்டணத்திற்கெழுந்தருளி இரவில் தந்திரத்தினால் அந்த ஸ்வர்ண விக்ரஹங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு அவற்றினால் திருப்பணிகள் செய்து வந்தார். அவ்வாறு செய்துவரும்போது சில சிற்பிகளுக்குக் கூலி கொடுப்பதற்கில்லாமையால் அந்தச் சிற்பிகளைப் பரமபதம் சேர்ப்பதாகச்சொல்லி அவர்கள் இசைவின்மேல் அவர்களைப் படகில் ஏற்றிக் காவிரியின் பெருவெள்ளத்தில் கொண்டுபோய்க் கவிழ்க்க, அதில் விழுந்த சிற்பிகளெல்லோரும் அக்கணமே சோதிவடிவம் பெற்று விமானமேறி, கரையில் நின்று பார்த்தவர்களெல்லோரும் அதிசயப்படும்படி பரமபதம் சென்றனர்.

இங்ஙனே பலபல அதிசயச் செயல்களைச்செய்து விமாந கோபுரப்ராகார மண்டபாதி திருப்பணிகளைக் குறையறச்செய்து தலைக்கட்டி, பிறகுபெருமாள்பக்கல் விடைபெற்று மீண்டும் திவ்யதேசயாத்திரை தொடங்கித் தென் திருப்பேர், நந்திபுர விண்ணகரம், திருவிண்ணகர் என்ற இத்தலங்களை மங்களாசாஸனஞ் செய்தபின் திருநறையூர் சேர்ந்து நம்பிவிஷயமாக நூறு பாசுரம் விண்ணப்பஞ்செய்து, திருச்சேறை, தேரழுந்தூர், சிறுபுலியூர் என்னும் திருப்பதிகளின்வழியாகத் திருக்கண்ண

மங்கை புக்கு அத்திருப்பதி யெம்பெருமானைப்பாடித் துதிக்கையில், திருநின்றவூர்ப் பத்தராவிப்பெருமாள் முன்பு (திருக்கடன் மல்லையில்) ஒருபாடல் பெற்றதுபோதா தென்று மறுபடியும் ஆழ்வாரெதிரில்வந்து காட்சி யளிக்க ஆழ்வார் "நின்றவூர் நின்ற நிலத்திலத் தொத்தினைக்... கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே" என்று அப்பெருமானையுஞ் சேர்த்துத் துதி செய்தனர். அப்பால் திருக்கண்ணபுரம் திருக்கண்ணங்குடி திருநாகை யென்னுஞ் சோழநாட்டுத் திவ்ய தேசங்களையும் திருப்புல்லாணி திருக்குறுங்குடி யென்னும் பாண்டிய நாட்டுத் தலங்களையும் திருவல்லவாழ் என்னும் மலைநாட்டுத் திருப்பதியையும் மங்களாசாஸனஞ் செய்து பின்னும் தென்னாட்டில் திருமாலிருஞ்சோலை திருக்கோட்டியூர் முதலானவற்றைத் தொழுது மற்றும் பல திருப்பதிகளையும் வணங்கி, எம்பெருமானுடைய அர்ச்சாவதாரங்களோடு விபவாவதாரங்களையுங் கருதி உள்ளங் கரைந்து பல பாசுரங்கள் பாடிக்கொண்டு ஆச்சரியமான அநுபவத்தில் ஆழ்ந்திருக்கையில்,—எம்பெருமான் இவர்க்கு உண்டான இவ்வநுபவம் நித்யமாய்ச் செல்லுமாறு இவரைத்திருநாட்டிலே கொண்டுபோக நினைத்து அதற்காக இந்த ஸம்ஸாரமண்டலத்தின் கொடுமையை இவர்க்கு அறிவிப்போமென்றெண்ணி அப்படியே அறிவிக்க, அதனையறிந்த ஆழ்வார் இந்தக்கொடுவுலகத்திலோ எம்பெருமான் நம்மை வைத்திருக்கிறது!' என்று மிகவும் அஞ்சிநடுங்கி இறுதித் திருமொழியிலே, ஆற்றங்கரை வாழ்மரம்போல் அஞ்சுகின்றேன்" "பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல்" "இருபாடெரி கொள்ளியினுள்ளெறும்பேபோல்" "வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே" என்றிப்படி பலவற்றையும் தம்முடைய அச்சத்திற்கு த்ருஷ்டாந்தமாகக் காட்டி "அந்தோ! அடியேற்கு அருளாய் உன்னருளே" என்று பரமபத ப்ராப்திக்கு உறுப்பான பரிபூர்ணகிருபையைப் பிரார்த்தித்துப் பெரியதிருமொழியைத் தலைக்கட்டினார். நம்மாழ்வார் திருவாய்மொழி பாடித்தலைக்கட்டி அவாவற்று வீடுபெற்றாற் போல இவ்வாழ்வார் திருநெடுந்தாண்டகம் பாடித் தலைக்கட்டி வீடு பெற்றாராகிறார்.

திருமங்கையாழ்வார் வைபவம் முற்றிற்று.

---

# முதலாழ்வார் மூவர்

ஆழ்வார்களனைவர்க்கும் முன்னே இந்தவுலகிலிருள் நீங்க வந்துதித்து அந்தமிழால் நற்கலைகளாய்ந்துரைத்த 'பொய்கையார், பூதத்தார், பேயார்' என்னுமிம் மூவரும் முதலாழ்வார்களென்று ப்ரஸித்திபெற்றிருப்பர். "மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து, நற்றமிழால் நூல்செய்து நாட்டையுய்த்த — பெற்றிமையோரென்று, முதலாழ்வார்களென்னும் பெயரிவர்க்கு, நின்றதுலகத்தே நிகழ்ந்து" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் நோக்கத் தக்கது.

விபவத்தில் இம்மூவரும் பகவத்கடாக்ஷம் பெற்ற பின்னர் ஒருவரையொருவர் விட்டுப்பிரியாமல் ஒன்று கூடியே வாழ்ந்தது பற்றி அர்ச்சாவதாரத் திருக்கோயில்களிலெங்கும் இம்மூவரும் ஒன்று சேர்ந்தே கோயில் கொண்டிருப்பர்கள்; அப்படியே இவர்களின் வைபவமும் ஒன்று சேர்ந்தே அநுஸந்திக்கப்படும், இம்மூவர்க்கும் திருநாள் பாட்டு அருளிச்செய்யா நின்ற மணவாள மாமுனிகளும் "ஐப்பசியி லோணம் அவிட்டம் சதயமிவை, ஒப்பிலவா நாள்களுலகத்தீர்—எப்புவியும் பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார், தேசுடனேதோன்று சிறப்பால்" என்று ஒரே பாசுரமாகத் தொகுத்து அருளிச்செய்தமையும் காண்க.

## பொய்கையாழ்வார்

"தெண்ணீர்வயல் தொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என்று ஔவையார்பாடியபடி கல்விகேள்வி அறிவொழுக்கங்களா லான்றவர் பலரையு முடையதான தொண்டை நாட்டிலே புண்ய க்ஷேத்ரங்களெல்லாவற்றினுள்ளும் மிக்க சீர்மைபெற்று விளங்கும் ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே, "முக்தி தரும் நகரேழில் முக்கியமாங் கச்சி" என்றும், "காசி முதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனி யருளாளர் கச்சிக்கு ஒவ்வா" என்றும் சிறப்பித்துக் கூறப்படுவதும் வேகவதி யென்னும் புண்ணியநதியின் தென்பால் விளங்குவதுமான காஞ்சிமாநகரிலே ஸ்ரீயதோக்தகாரி ஸந்நிதியென்று ப்ரஸித்தமான திருவெஃகா வென்னும் திவ்ய தலத்தின் வடபுறத்தில் மஹான்களது திருவுள்ளம்போல் ஆழ்ந்து தெளிந்து விளங்கும் பொற்றாமரைப் பொய்கையிலே பூத்ததொரு நற்றாமரைப்பூவிலே ஐப்பசி மாதத்துத் திருவோணத்திலே இவர் திருவவதரித்தார். இவருடைய ப்ரபாவத்தைப் பார்த்து அனைவரும் இவரைத் தேவிற் சிறந்த திருமாலின் திவ்யாயுதங்களுள் பாஞ்சஜந்யமென்னும் திருச்சங்கின் அம்சமாக அறுதியிட்டனர். பொய்கையிலவ தரித்தது காரணமாகப் பொய்கையாழ்வாரென்று திருநாமம் பெற்றாரிவர்.

## பூதத்தாழ்வார்

நீர்வளம் நிலவளம் முதலிய பலவளங்களும் மலிந்து இப்பூமண்டலத்திற்குத் திலகம் போன்றுள்ள அத்தொண்டைமண்டலத்திலே கீழ்க்கடற்கரையிலுள்ள திருக்கடல்மல்லையென்கிற மஹாபலிபுரத்திலே குருக்கத்திப்பந்தரிலே ஒரு குருக்கத்தி மலரிலே ஐப்பசி மாதத்து அவிட்டநக்ஷத்திரத்திலே இவர் திருவவதரித்தார். இவருடைய வைபவத்தை நோக்கி அனைவருமிவரைக் கௌமோதகி யென்னும் கதாயுதத்தின் அம்சமாக அறுதியிட்டிருந்தனர். இவர்க்குப் பூதத்தாழ்வாரென்று திருநாமமானபடி என்னெனில்;—வடமொழியில் [பூ - ஸத்தாயாம்] என்கிற தாது வடிவாகப் பிறந்தது பூதம் என்னுஞ்சொல். ஸத்தைபெற்றது என்று பொருள். எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுபவித்தே ஸத்தை பெற்றாரென்னும் காரணம்பற்றியே பூதத்தாழ்வாரென்று திருநாமமாயிற் றென்றுணர்க. திருவாய் மொழியில் (5-2-1) "கடல்வண்ணன் பூதம்" என்றவிடத்து வியாக்கியானங்களில் இப்பொருள் விளங்கக் காண்க.

## பேயாழ்வார்

"ஆறோடீரெட்டு தொண்டை" என்றவாறு நூற்றெட்டுத்திருப்பதிகளுள் இருபத்திரண்டு திருப்பதிகளையுடையதான துண்டீர மண்டலமென்கிற அத் தொண்டைவள நாட்டிலே திருவல்லிக்கேணி யென்னுந் திவ்யதேசத்துக்குத் தென்திசையிலுள்ள திருமயிலை நகரியில் ஒரு கிணற்றிலேயுண்டான செவ்வல்லிப் பூவிலே ஐப்பசி மாதத்துச் சதயநக்ஷத்திரத்திலே இவர் திருவவதாரஞ் செய்தருளினர். இவருடைய வைபவத்தைக் கண்டு பலரும் இவரை நந்தகமென்னும் வாட் படையின் அம்சமாக அறுதியிட்டனர். இவர் ஒப்புயர்வற்ற பகவத் பக்தியை யுடையராய், கண்டவர்களடங்கலும் 'இவர் பேய் பிடித்தவர்' என்னும்படி நெஞ் சழிந்துகண் சுழன்று அழுதும் சிரித்தும் தொழுது மெழுந்தாடியும் மகிழ்ந்து பாடியும் அலறியுமே அநவரதம் போதுபோக்கிக் கொண்டிருந்தமையால் பேயாழ்வா ரென்று திருநாமம் பெற்றனர். பரமபக்தி தலையெடுத்து எம்பெருமானை யநுபவிக் கும் திறம் மற்ற ஆழ்வார்களைக்காட்டில் இவர்க்கு மிகப் பெரிதாயிருந்ததனாலும், இவர் தாம் எம்பிரானுக்கு ஆட்பட்டது மாத்திரமேயன்றி, திருமழிசையாழ்வாரைத் திருத்திப் பணிகொண்ட மஹானதலாலும் மஹதாஹ்வயர் என்னவும்படுவர் இவர்.

# இம்முதலாழ்வார்களின் வைபவம்

ஸ்ரீராம பரத லக்ஷ்மணர் போல அடுத்தடுத்த நாள்களில் அவதரித்தவர்களும் அயோநிஜருமாகிய இம்மூவர்க்கும் ஸ்ரீவைகுண்டநாதனுடைய திருவாணையினால் ஸேனைமுதலியார் இந்நிலத்திற்கெழுந்தருளிப் பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து திருமந்திரப்பொருள்களையும் உபதேசித்தருளினர். அதனால் இவர்கள் "முக்குணத் திரண்டவையகற்றி, ஒன்றினிலொன்றி நின்று" என்றாற்போல ரஜோகுணமும் தமோகுணமும் சிறிதுமற்று சுத்தஸாத்விகர்களாய் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதையே பெரும்பேறாகக் கொண்டு ஞானபக்தி விரக்திகளுக்குப் பிறப்பிடமென்னலாம்படி விளங்கி "உண்ணுஞ்சோறு பருகுநீர்த்தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" என்றாற்போல பகவத்குணாநுபவத்தையே தாரகமும் போஷகமும போக்யமுமாகக்கொண்டு அந்நபாநாதிகளை யொழித்து, உண்டியே உடையே உகந்தோடுகின்ற இம்மண்டலத்தாரோடு கூட கில்லாமல் ஒருநாளிருந்த விடத்தில் மற்றொரு நாளிராதபடி ஓடித்திரியும் யோகிகளாய், தம்மில் ஒருவரையொருவர் அறியாமல் தனித்தனியே ஸஞ்சரித்துக்கொண்டிருந்த இம்மூவரையும் ஓரிடத்திலே சேர்த்து ஆட்கொண்டு இவர்கள் முகமாக உலகத்தை வாழ்விக்க வேணுமென்கிற குதூஹலம் எம்பெருமான் திருவுள்ளத்திலுண்டாயிற்று. ஸத்யகாமனாய் ஸத்ய ஸங்கல்பனான எம்பெருமானுடைய மனோரதம் பழுதுபடுமோ? அவனுடைய அத்திருவுள்ளம் நிறைவேறுவதற்கு வழியுண்டாயிற்று. அதாவது ஒருநாள் ஸூர்யன் அஸ்தமித்த பின்பு பொய்கையாழ்வார் திருக்கோவலூரை யடைந்து அங்கு ம்ருகண்டு மஹரிஷியின் திருமாளிகையில் சென்று அதன் இடைகழியில் பள்ளிகொண்டிருந்தார். பிறகு பூதத்தாழ்வாரும் அங்கே வந்து சேர, "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத் புவி" என்கிற சாஸ்த்ர முறைப்படி ஒருவரையொருவர் வந்தனை வழிபாடுகள் செய்தவுடன் "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் உட்கார்ந்திருக்கலாம்" என்று பொய்கையாழ்வார் விண்ணப்பஞ்செய்ய, அவ்விதமே இருவரும் உட்கார்ந்திருந்தனர். அதன் பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்திற்கே வந்துசேர, ஒருவரையொருவர் தண்டன் ஸமர்ப்பித்து உபசரித்துக்கொண்ட பின் "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்" என்று பொய்கை பூதத்தாரிருவரும் சொல்ல, அவ்விதமே மூவரும் அவ்விடத்திலே நின்றுகொண்டு பரஸ்பரம் ப்ரவணர்களாயிருந்தனர்.

அப்பொழுது உலகளந்த மூர்த்தி அவர்கள் திறத்திலே திருவருள் செய்யும் பொருட்டு, பெருத்த இருளையும் கனத்த மழையையும் உண்டாக்கி, பெரிய வடிவதோடு அவர்களிடையே சென்று நின்று பொறுக்கமுடியாத மிக்க நெருக்கத்தைச் செய்தருளினன். அதன்மேல் இவர்கள் 'இதுவரையிலு மில்லாத நெருக்கம் இப்போது உண்டானதற்குக் காரண மென்கொல்? பிறரெவரேனும் இங்குப் புகுந்தவருண்டோ? என்று சங்கிக்கையில், பொய்கையாழ்வார் பூமியாகிய தகழியில் கடல்நீரையே நெய்யாகக் கொண்டு ஸூர்யனை விளக்காக ஏற்ற, பூதத்தாழ்வார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவும்கொண்டு ஞான தீபத்தை ஏற்ற. இவ்விரண்டி னொளியாலும் இருளற்றதனால், பேயாழ்வார் தாம் எம்பெருமானை ஸேவித்தமை கூறியவளவிலே மூவரும் பகவத் ஸ்வரூபத்தை நன்கறிந்து அநுபவித்து ஆநந்தப் பெருவெள்ளமெய்தி அதனுக்குப் போக்கு வீடாகத் திவ்ய ப்ரபந்தங்களருளிச்செய்து உலகத்தாரை உய்விக்கத் திருவுள்ளம் பற்றினர். அப்பொழுது பொய்கையாழ்வார் "வையந்தகளியா என்று தொடங்கியும், பூதத்தாழ்வார் "அன்பேதகளியா" என்று தொடங்கியும், பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்கியும் மூன்று திருவந்தாதி ப்ரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளினர்.

—முதலாழ்வார்கள் வைபவம் முற்றிற்று.—

# நம்மாழ்வார் வைபவம்

பாண்டிய நாட்டிலே, கங்கை, யமுனை முதலிய புண்ணிய நதிகள் பலவற்றினும் விஞ்சிய வீறுபெற்று தாமிரபர்ணி யென்னும் பொருநையாற்றின் கரையிலே திருநகரி யென்பது ஒரு திவ்யதேசம். அத்திருக்குருகூரிலே வேளாளவருணத்தில் வம்சபரம்பரையாகத் திருமாலடிக்கே தொண்டுபூண்டொழுகுஞ் சிறந்த குலத்திலே திருவழுதிவளநாடரென்னும் பாகவதரது அறந்தாங்கியாரீன்ற சக்கரபாணியாரது தநயராகிய அச்சுதரைத் தந்தையாகவுடையவர் செந்தாமரைக்கண்ணன். அவர் பாலுதித்த செங்கண்ணரது குமாரரான பொற்காரியார் தமது புதல்வராய்த் தோன்றிய காரியாருக்குக் கலியாணஞ் செய்விக்கக் கருதி மலயமா நாட்டில் திருவண்பரிசாரமென்னும் திருப்பதியிலுள்ள திருவாழ்மார்பரென்னும் பகவத்பக்தரது திருமகளான உடையநங்கையாரை மணம்பேசி முடிக்க, பின்பு இருவருக்கும் அவ்வூரில் வெகு ஸம்பிரமமாக விவாஹ மஹோத்ஸவம் நடந்தேறியது. பின்னர் இத்தம்பதிகள் திருக்குருகூருக்கு வந்து சிறப்பாகப் பலவாண்டு இல்லறம் நடத்தி வருகையில் ஒருநாள் மாமனார் வேண்டுகோளின்படி, காரியார், தமது வாழ்க்கைத் துணைவியுடனே திருவண்பரிசாரத்தை யடைந்து அங்குச் சிலகாலம் வஸித்திருந்தார். பிறகு தமது தருமபத்தினியுடனே தம் ஊருக்கு மீண்டு வருகையில் திருக்குறுங்குடி யென்னும் திருப்பதியையடைந்து அங்கு எழுந்தருளியிருக்கின்ற நம்பியென்னுந் திருநாமமுடைய எம்பெருமானை வந்தித்து வாழ்த்தி 'அடியேங்களுக்கு ஒரு புத்ரஸந்தானத்தை அளித்தருளவேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ்வாதிமூர்த்தி 'நாமே வந்து பிறக்கிறோம்' என்று பேரருள் பொலிந்து அர்ச்சக முகமாய்ச் சொல்லி யருளித் தனது தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டம் முதலியவற்றைப் பிரசாதித்தருளினான். இங்ஙனம் பெற்ற அவர், திருநகரியிற் சென்று வாழ்கையில் உடைய நங்கையார் கர்ப்பவதியாக அவரது திருவயிற்றினின்று பகவானது அம்சமும் ஸ்ரீகௌஸ்துபத்தினது அம்சமும் ஸேனைமுதலியாரது அம்சமுமாக ஒரு குமாரர் வைகாசி விசாகத்திலே திருவவதரித்தார்.

இப்படி ஒருவர் மூவரது அம்சமாக இருக்கக்கூடுமோ? எனில் சக்ரவர்த்தியான அரசன் அஷ்டதிக் பாலகர்களின் அம்சங்கள் கூடிப் பிறந்தவனென்றும், லக்ஷ்மணனும் பலராமனும் தனித்தனி ஆதிசேஷாம்சத்தோடு பகவானது அம்சமும் பொருந்தியவர் என்றும், ஹநுமான் வாயுவின் அம்சத்துடன் ருத்திராம்சமும் பொருந்தியவரென்றும், நூல்கள் கூறுகையால் அவை போலவே இதுவும் ஒக்குமென்ப. இங்ஙனம் கூறுவது புராண ப்ரக்ரியையை அடியொற்றி யென்பர்.

பூருவாசாரியர்களின் திருவுள்ளத்தை ஆராய்ந்து பேசுமிடத்துப் பலபடியும் பேசலாயிருக்கும். ஆசார்ய ஹ்ருதயத்தில்

> "அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸு நந்தஸூநுவானவனுடைய யுகவர்ணக்ரமாவதாரமோ? வ்யாஸாதிவத் ஆவேசமோ? முதுவர் கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம் நோற்ற அனந்தன்மேற் புண்ணியங்கள் பலித்தவரோவென்று சங்கிப்பர்கள்"

என்றுள்ள சூர்ணிகையின் கருத்தை விவரிப்போமிங்கு;—க்ருத யுகத்திலே அத்ரியும் ஜமதக்நியுமாகிற பிராஹ்மணோத்தமர்களுக்குப் பிள்ளையாய்க் கொண்டு தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய், த்ரேதாயுகத்திலே க்ஷத்ரியனாய்த் தசரத சக்ரவர்த்திக்குப் பிள்ளையாய், த்வாபரயுகத்தில் ராஜ்ய ப்ராப்தியில்லாத யதுகுலத்திற் பிறந்து க்ஷத்ரியரில் தண்ணியரும் வைச்யப்ராயருமான வஸுதேவர்க்கும், கோரக்ஷணத்தாலே ஸாக்ஷாத்வைச்யரான ஸ்ரீ நந்தகோபர்க்கும் பிள்ளையாய் ஆகவிப்படி க்ருதம்

முதலிய யுகங்களினடைவே ப்ராஹ்மணாதி வர்ணக்ரமேண அவதரித்து வந்த ஸர்வேச்வரன் நான்காவதான கலியுகத்திலே நான்காவது வருணத்திலே ஆழ்வாராக வந்து அவதரித்தபடியோ! என்றும்; வேதங்களைப் பகுத்தல் முதலிய கார்யங்களுக்காக வ்யாஸர் முதலிய மஹர்ஷிகள் பக்கல் ஆவேசித்ததுபோல் தமிழ் வேதத்தை வெளியிடுதற்காக இவர் பக்கல் ஆவேசித்தபடியோ! என்றும் இவ் விபூதியைத் திருத்துகைக்காக ஈச்வர நியமனத்தாலே நித்யஸூரிகளிலொருவர் வந்தவதரித்தபடியோ! அன்றியே, முக்தரிலே ஒருவர் அவதரித்தபடியோ!; அன்றியே ச்வேதத்வீபவாஸிகளி லொருவர் வந்தவதரித்தபடியோ வென்றும், அல்லது கீழ்ச்சொன்னவர்களில் ஒருவரும் அன்றியே ஸம்ஸாரிகள் தம்மிலே ஜந்மாந்தர ஸஹஸ்ர ஸஞ்சிதமான தம்முடைய ஸுக்ருத பலமாகக் கொண்டு இங்ஙனம் திருந்தினரொருவரோ? என்றும், அன்றியே நிர்ஹேதுககடாக்ஷ விசேஷத்தாலே நித்ய ஸம்ஸாரியை நித்ய ஸூரிகல்பமாக்கவல்ல அநந்தசாயியான ஸநாதன புண்யம் முழுநோக்காகப் பலித்தபடி திருந்தினரொருவரோ! என்றுமிப்படிப்பட்ட வகைகளாலே இவரை இன்னரென்று நிச்சயிக்கமாட்டாமல் ஜ்ஞானிகள் சங்கிப்பார்கள் என்றவாறு. அதன்மேலுள்ள சூர்ணிகைகளின் போக்கையும் அவற்றின் வ்யாக்யாந ப்ரக்ரியையையும் மற்றும் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை முதலானோர் அருளிச்செயல் வியாக்கியானங்களில் அருளிச்செய்யும் புடைகளையும் நோக்குமிடத்து, நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்தாரொருவர் நிர்ஹேதுக பகவத் கடாக்ஷ விசேஷத்தாலே இங்ஙனே திருந்தினரென்னுமதுவே ஸம்ப்ரதாய நிர்வாஹமாகத் தேறுகின்றதென்று பெரியோர் பணிக்கக் கேட்டிருக்கை.

> "சேமங் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ
> நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமந்
> துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கு
> முளவோ பெருமா னுனக்கு"

என்றிவை முதலான பல பாசுரங்களுக்கிணங்க ஆழ்வாரை பகவதவதாரமென்று கொள்ளுதலும் இவரது மிக்க பெருமைக்குப் பொருந்தியதேயாகும். இது நிற்க.

பகவான் அவதாரஞ் செய்தற்கு முன்னமே அவனுக்குப் பலவாற்றாலும் அடிமை செய்வதையே உறுதொழிலாகக் கொண்ட திருவநந்தாழ்வான், இக்குமாரர்மீது வெயில், மழை முதலியன படாதிருக்குமாறு ஒரு பெரிய புளியமரமாக வந்து அவதரித்திருந்தார்.

நம்பி தந்தருளின வரத்தின்படி உதித்த குமாரர் பிறந்தபொழுதே தொடங்கி அழுதல், பாலுண்ணுதல் முதலிய லோக வ்யாபாரமொன்று மின்றியும் வாட்டமில்லாது பரிபூர்ணராயிருக்கிற அதிசயத்தைக்கண்டு தாய்தந்தையர் எம்பெருமான் பக்கலிலே பாரத்தை வைத்திட்டுத் தாம் சிறிதுங் கவலைப்படாமல் பிறந்த பன்னிரண்டா நாளில் அத்திருநகரிலுள்ள திருக்கோயிலுக்கு அக்குழந்தையை எடுத்துக் கொண்டுபோய் அங்கு எழுந்தருளியிருக்கிற பொலிந்து நின்றபிரானைச் சேவிக்கப் பண்ணுவித்து அப்பெருமானது திருமுன்பே அந்தத் தெய்வக்குழந்தைக்கு, உலகநடைக்கு மாறாக இருந்ததினால் மாறன் என்று திருநாமஞ்சாத்தி அருகிலிருந்த திருப்புளியமரத்தினடியிலே ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச் சிறுத்தொட்டிலிலே வளர்த்தி ஓம்பி வந்தார்கள்.

கர்ப்பத்திலிருக்கும்பொழுது ஞானமுடையனவா யிருக்கிற குழந்தைகளை பிறந்தவுடனே தனது ஸ்பர்சத்தால் அஜ்ஞானத்துக்கு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடுந் தன்மையதான சடமென்னும்

வாயு இவரையும் பிறந்தபொழுது தொடுதற்குவர அப்பொழுது இவர் அதனை ஹுங்காரத்தால் ஒறுத்து ஒட்டி யொழித்ததினால் இவர்க்கு 'சடகோபர்' என்னுந் திருநாமமாயிற்று.

"நஞ்சடகோபனைப் பாடினையோவென நம்பெருமாள், விஞ்சிய வாதரத்தாற் கேட்ப" என்று பின்புள்ளாருங் கொண்டாடும்படி இவர் நம்பெருமாளால் 'நம் ஆழ்வார்' என்று அபிமானித்து விசேஷ கடாக்ஷஞ் செய்யப்பட்டு மற்றை யாழ்வார்களனைவரினும் உயர்வு பெற்றதனால் 'நம்மாழ்வார்' என்று ஒரு திருப்பெயர் பெற்றனர்.

இப்படிப்பட்ட ஆழ்வார் பதினாறுபிராயமளவுங் கண்விழியாமல் மௌனத்தோடு எழுந்தருளியிருக்க அதுநோக்கிய நங்கையாரும் அவர் கொழுநரும் 'இவர், தம்மைப்போன்ற நிலையுடையாரெவரையும் உலகத்தில் காணமையால் யாரோடும் பேசாமலிருக்கிறார்' என்று அறியாமல் எம்பெருமான் விஷயத்தில் நாம் செய்த அபராதம் ஏதேனுமுண்டோ?' என்று கருதிக் கலங்கி யிருந்தனர். அப்பொழுது பரமபதநாதனது நியமனத்தால் சேனைமுதலியார் என்கிற விஷ்வக்ஸேனர் ஏகாந்தமாக எழுந்தருளி இவருக்குத் திருவிலச்சினை செய்து ஸகல மந்த்ரார்த்தங்களையும் உபதேசித்தருளினர்.

இப்படிப்பெற்ற இவர் பதினாறு கலைகளும் நிறைந்த சந்திரன்போலப் பதினாறு பருவம் நிரம்பி உறங்காப்புளி நிழலிலே பத்மாஸநங் கொண்டு வீற்றிருந்து பரதத்துவத்தைத் தியானஞ் செய்துகொண்டு ஞானமுத்திரை கைக்கொண்டிருந்த காலத்தில் திவ்ய தேச யாத்திரையாகச் சென்றிருந்த மதுரகவியாழ்வார் இவரது வைபவத்தைக்கேட்டும் இவரது திவ்ய ஒளியைக்கண்டும் திருவயோத்தியினின்று புறப்பட்டுவந்து அருகில் நின்று 'இவர்க்கு உணர்ச்சி உளதோ? இலதோ?' என்று சோதிக்கும்பொருட்டு இவர் முன்னிலையில் ஒரு சிறு கல்லை யெடுத்துப்போட, அது விழுந்த வொலியைக் கேட்டவுடனே இவர் திருக்கண்களை விழித்துப் பார்த்தருளினர். உடனே மதுரகவிகள் 'இவர்க்கு வாக்கு உண்டோ? இன்றோ? அறிவோம்!' என்று எண்ணி இவரை நோக்கி—: அசித்தாகிற சரீரத்திலே அணுவளவினதான ஆத்மா ஸம்பந்தித்தால் அது எதை யநுபவித்து எங்கு இருக்கும்?' என்னுங் கருத்தையமைத்து 'செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?' என்று வினவ, ஆழ்வார் 'அச்சரீரத்தைச்சார்ந்த சுகதுக்கங்களை அநுபவித்துக்கொண்டு அதனையே ஆச்ரயித்திருக்கும்' என்ற கருத்தையமைத்து 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்று விடையருளிச் செய்தார்.

"சிறியதின் வயிற்றில் பெரியது பிறந்தால் எத்தைத்தின்று எங்கே கிடக்கும்?" என்று மதுரகவிகள் வினவியதாகவும் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று ஆழ்வார் விடையளித்ததாகவுங் கூறுவாருமுளர். ['அணுரூபமான ஜீவனிடத்து விபுரூபமான ஞானவிகாஸமுண்டானால் எதை அநுபவ யோக்யமாகக் கொண்டு எங்குச் சேரும்?' என்பது வினவின் கருத்தாகவும், அகாரவாச்யமான பரப்ரஹ்மத்தை அநுபவித்து அதன் பக்கலிலே பற்றும்' என்பது விடையின் கருத்தாகவுங் கொள்ளத்தக்கது.]

அதுகேட்டு மதுரகவிகள் மிக மகிழ்ந்து சடகோபமுனிவரது ஞானத்தைக் கொண்டாடி இவரை யடைந்து தாம் கடைத்தேறக் கருதி, இவர் திருவடிகளிலே ஸாஷ்டாங்க ப்ரணாமமாகத் தாளுந் தடக்கையுங் கூப்பி விழுந்து தண்டனிட்டு இவரது இணையடித் தாமரைகளைத் தியானித்தலும் திருநாமங்களை வழுத்துதலுஞ்

செய்துகொண்டு இவரை ஆச்ரயித்து 'அடியேனுக்குத் தத்வஹித புருஷார்த்தங் களை விளக்கியருளவேண்டும்' என்று ப்ரார்த்தித்தனர்.

அவ்வாறு இருக்கையில், ஸ்ரீ வைகுண்டநாதன் ஆழ்வாரது ஞானக்கண்ணுக்குச் சேவை சாதிக்கத் திருவுள்ளங் கொண்டவளவிலே பெரிய திருவடியும் தனது பக்ஷபாதந் தோன்ற முன்வந்து நிற்றலும், பெருமாள் பிராட்டியுடனே கருடவாஹநாரூடராய் எழுந்தருளி எதிர்வந்து நிற்க 'கருமுகில் தாமரைக்காடு பூத்து நீடிரு சுடரிருபுறத்தேந்தி ஏடவிழ் திருவொடும் பொலிய ஓர் செம்பொற் குன்றின்மேல் வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றிய" அம்முகில் வண்ணனது திருமேனியழகைச் சேவித்துக் கண்கள் ஆனந்த வருவி சொரிய, உடம்பு உரோமாஞ்சங்கொள்ள, ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார். அநந்தரம் நூற்றெட்டுத் திருப்பதி யெம்பெருமான்களும் அங்கு எழுந்தருளிக் காட்சிகொடுக்க அவர்களை ஸேவித்து அவர்களது திவ்யகுணங்களை அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதி உள்ளடங்காமல் அதனைப் பிரபந்த முகமாக வெளியிடக்கருதி நான்கு வேதங்களுள் ருக்கு, யஜுஸ், அதர்வணம் என்ற மூன்று வேதங்களின் ஸாரப்பொருளைத் திருவிருத்தம், திரு வாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற மூன்று ப்ரபந்தங்களின் மூலமாக வெளியிட்டு, அவ்வேதங்களுள் சிறந்ததும் பகவான ஸ்வரூபமாகவே யுள்ளதுமான ஸாமவேதத்தின் தத்துவப் பொருளைச் சரம ப்ரபந்தமான திருவாய்மொழியால் அருளிச்செய்து அவற்றை மதுரகவிகளுக்கு உபதேசித்தருளினர். அக்காலத்தில் நித்ய ஸூரிகளும் ச்வேதத்வீப வாஸிகளான ஸ்ரீவைஷ்ணவ ச்ரேஷ்டர்களும் காரிமாறப்பிரானது மஹிமையைக் காணும்பொருட்டு முன்வந்து சேர அவர்களைத் தமது ப்ரபந்தத்திலே "பொலிக பொலிக" என்று வாழ்த்தினர்.

இப்படி ஒப்புயர்வற்ற இவ்வாழ்வார் எம்பெருமானது திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கராக இருந்ததனால் பெருமாளது பாதுகை 'ஸ்ரீ சடகோபன்' என்று இவரது திருநாமத்தையிட்டு வழங்கப்படுகிறது.

நம்மாழ்வார் வைபவம் முற்றிற்று.

---

## — முக்கியமான குறிப்பு —

இதற்குமேல் பக்கலக்கம் 157 வரவேண்டியிருந்தாலும் அதில் கண்வைக்க வேண்டா. பெரியதிருமொழி தொடக்கம் இதற்கடுத்தபடியாகவுள்ளது. பக்கலக்கம் சிறிது மாறுபட்டாலும் அடுத்தவிஷயம் பெரியதிருமொழியேயாகும்.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில்

— இரண்டாவதாயிரம் —

# பெரிய திருமொழி.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்தது.



தனியன்கள்:

ஸ்ரீ சைலேச தயாபாத்ரமித்யாதி...ப்ரணதோஸ்மி நித்யம்.

கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோகதிவாகரம்.
யஸ்ய கோபி: ப்ரகாசாபிராவித்யம் நிஹதம் தம:—

வாழிபரகாலன் வாழிகலிகன்றி
வாழிகுறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல்.

நெஞ்சுக்கிருள்கடிதீப மடங்கா நெடும்பிறவி *
நஞ்சுக்குநல்லவமுதம் தமிழ நன்னூல்துறைகள் *
அஞ்சுக்கிலக்கிய மாரணசாரம் பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி பரகாலன்பனுவல்களே.

எங்கள்கதியே! யிராமானுசமுனியே!
சங்கைகெடுத்தாண்ட தவராசா—பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம்நீயெனக்குத் தா.

தனியன்கள் முற்றிற்று.

ஸ்ரீ :

# பெரிய திருமொழி.

## முதற்பத்து — முதல்திருமொழி — வாடினேன்வாடி.

** வாடினேன்வாடிவருந்தினேன்மனத்தால் பெருந்துயரிடும்பையில்பிறந்து *
கூடினேன்கூடியிளையவர்தம்மோடு அவர்தருங்கலவியேகருதி *
ஓடினேனோடியுய்வதோர்பொருளால் உணர்வெனும்பெரும்பதம் திரிந்து *
நாடினேன்நாடிநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். 1

** ஆவியேயமுதேயெனநினைந்துருகி அவரவர்பணைமுலைதுணையா *
பாவியேனுணராதெத்தனைபகலும் பழுதுபோயொழிந்தனநாள்கள் *
தூவிசேரன்னம்துணையொடும்புணரும் சூழ்புனற்குடந்தையேதொழுது * என்
நாவினாலுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம்.

சேமமேவேண்டித்தீவினைபெருக்கித் தெரிவைமாருருவமேமருவி *
ஊமனார்கண்டகனவிலும்பழுதாய் ஒழிந்தனகழிந்தவந்நாள்கள் *
காமனார்தாதைநம்முடையடிகள் தம்மடைந்தார்மனத்திருப்பார் *
நாமநானுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். 3

வென்றியேவேண்டிவீழ்பொருட்கிரங்கி வேற்கணார்கலவியேகருதி *
நின்றவாநில்லாநெஞ்சினையுடையேன் என்செய்கேன்நெடுவிசும்பணவும் *
பன்றியாயன்றுபாரகங்கீண்ட பாழியானாழியானருளே *
நன்றுநானுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். 4

கள்வனேனானேன்படிறுசெய்திருப்பேன் கண்டவாதிரிதந்தேனேலும் *
தெள்ளியேனானேன்செல்கதிக்கமைந்தேன் சிக்கெனத்திருவருள்பெற்றேன் *
உள்ளெலாமுருகிக்குரல்தழுத்தொழிந்தேன் உடம்பெலாம்கண்ணநீர்சோர *
நள்ளிருளளவும்பகலும்நானழைப்பன் நாராயணாவென்னும்நாமம். 5

** எம்பிரானெந்தையென்னுடைச்சுற்றம் எனக்கரசென்னுடைவாணாள் *
அம்பினாலரக்கர்வெருக்கொளநெருக்கி அவருயிர்செகுத்தவெம்மண்ணல் *
வம்புலாஞ்சோலைமாமதிள் தஞ்சைமாமணிக்கோயிலேவணங்கி *
நம்பிகாளுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். 6

இற்பிறப்பறியீரிவரவரென்னீர் இன்னதோர்தன்மையென்றுணரீர் *
கற்பகம்புலவர்களைகணென்றுலகில் கண்டவாதொண்டரைப்பாடும் *
சொற்பொருளாளீர்சொல்லுகேன்வம்மின் சூழ்புனற்குடந்தையேதொழுமின் *
நற்பொருள்காண்மின்பாடிநீருய்ம்மின் நாராயணாவென்னும்நாமம். 7

கற்றிலேன்கலைகள்ஐம்புலன்கருதும் கருத்துளேதிருத்தினேன்மனத்தை *
பெற்றிலேனதனால்பேதையேன்நன்மை பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் *
செற்றமேவேண்டித்திரிதருவேன் தவிர்ந்தேன் செல்கதிக்குய்யுமாறெண்ணி *
நற்றுணையாகப்பற்றினேனடியேன் நாராயணாவென்னும்நாமம். 8

** குலந்தரும்செல்வம்தந்திடும் அடியார்படுதுயராயினவெல்லாம் *
நிலந்தரஞ்செய்யும்நீள்விசும்பருளும் அருளொடுபெருநிலமளிக்கும் *
வலந்தரும்மற்றுந்தந்திடும் பெற்றதாயினுமாயினசெய்யும் *
நலந்தருஞ்சொல்லைநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். 9

** மஞ்சுலாஞ்சோலைவண்டறைமாநீர் மங்கையார்வாள்கலிகன்றி *
செஞ்சொலாலெடுத்ததெய்வநன்மாலை இவைகொண்டுசிக்கெனத்தொண்டீர்!*
துஞ்சும்போதழைமின்துயர்வரில்நினைமின் துயரிலீர்சொல்லிலும்நன்றாம் *
நஞ்சுதான்கண்டீர்நம்முடைவினைக்கு நாராயணாவென்னும்நாமம். 10

**அடிவரவு :**—வாடினேன் ஆவியே சேமம் வென்றி கள்வனேன் எம்பிரான் இற்பிறப்பு கற்றிலேன் குலம் மஞ்சுவாலி.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

————:————

## முதற்பத்து — இரண்டாந் திருமொழி — வாலிமாவலத்து

வாலிமாவலத்தொருவனதுடல்கெட வரிசிலைவளைவித்து *அன்று
ஏலநாறுதண்தடம்பொழிலிடம்பெற இருந்தநல்லிமயத்துள் *
ஆலிமாமுகிலதிர்தரஅருவரை அகடுறமுகடேறி *
பீலிமாமயில்நடஞ்செயும்தடஞ்சுனைப் பிரிதிசென்றடைநெஞ்சே. 1

கலங்கமாக்கடலரிகுலம்பணிசெய்ய அருவரையணைகட்டி *
இலங்கைமாநகர்பொடிசெய்தவடிகள்தாம் இருந்தநல்லிமயத்து *
விலங்கல்போல்வனவிறலிருஞ்சினத்தன வேழங்கள்துயர்கூர *
பிலங்கொள்வாளெயிற்றரியவைதிரிதரு பிரிதிசென்றடைநெஞ்சே! 2

துடிகொள்நுண்ணிடைச்சுரிகுழல் துளங்கெயிற்றிளங்கொடிதிறத்து *ஆயர்
இடிகொள்வெங்குரலினவிடையடர்த்தவன் இருந்தநல்லிமயத்து *
கடிகொள்வேங்கையின்நறுமலரமளியின் மணியறைமிசைவேழம் *
பிடியினோடுவண்டிசைசொலத்துயில்கொளும் பிரிதிசென்றடைநெஞ்சே! 3

மறங்கொளாளரியுருவெனவெருவர ஒருவனதகல்மார்வம்
திறந்து *வானவர்மணிமுடிபணிதர இருந்தநல்லிமயத்துள் *
இறங்கியேனங்கள்வளைமருப்பிடந்திடக் கிடந்தருகெரிவீசும் *
பிறங்குமாமணியருவியொடிழிதரு பிரிதிசென்றடைநெஞ்சே! 4

கரைசெய்மாக்கடல்கிடந்தவன் கனைகழலமரர்கள்தொழுதேத்த *
அரைசெய்மேகலையலர்மகளவளொடும் அமர்ந்தநல்லிமயத்து *
வரைசெய்மாக்களிறிளவெதிர்வளர்முளை அளைமிகுதேன்தோய்த்து *
பிரசவாரிதன்னிளம்பிடிக்கருள்செய்யும் பிரிதிசென்றடைநெஞ்சே! 5

பணங்களாயிரமுடையநல்லரவணைப்பள்ளிகொள் பரமாவென்று *
இணங்கிவானவர்மணிமுடிபணிதர இருந்தநல்லிமயத்து *
மணங்கொள்மாதவிநெடுங்கொடிவிசும்புற நிமிர்ந்தவைமுகில்பற்றி *
பிணங்குபூம்பொழில்நுழைந்துவண்டிசைசொலும் பிரிதிசென்றடைநெஞ்சே! 6

கார்கொள்வேங்கைகள்கனவரைதழுவிய கறிவளர்கொடிதுன்னி *
போர்கொள்வேங்கைகள்புனவரைதழுவிய பூம்பொழிலிமயத்துள் *

ஏர்கொள்பூஞ்சுனைத்தடம்படிந்து இனமலரெட்டுமிட்டிமையோர்கள் *
பேர்களாயிரம்பரவிநின்றடிதொழும் பிரிதிசென்றடைநேஞ்சே ! 7

இரவுகூர்ந்திருள்பெருகியவரைமுழை இரும்பசியதுகூர *
அரவமாவிக்குமகம்பொழில்தழுவிய அருவரையிமயத்து *
பரமன்றியெம்பனிமுகில்வண்ணனென்று எண்ணிநின்றிமையோர்கள் *
பிரமனோடுசென்றடிதொழும்பெருந்தகை பிரிதிசென்றடைநெஞ்சே ! 8

ஓதியாயிரநாமங்களுணர்ந்தவர்க்கு உறுதுயரடையாமல் *
ஏதமின்றிநின்றருளும்நம்பெருந்தகை இருந்தநல்லிமயத்து *
தாதுமல்கியபிண்டிவிண்டலர்கின்ற தழல்புரையெழில்நோக்கி *
பேதைவண்டுகளெரியெனவெருவரு பிரிதிசென்றடைநெஞ்சே ! 9

கரியமாமுகிற்படலங்கள்கிடந்து அவைமுழங்கிட *களிறென்று
பெரியமாசுணம்வரையெனப்பெயர்தரு பிரிதியெம்பெருமானை *
வரிகொள்வண்டறைபைம்பொழில்மங்கையர் கலியனதொலிமாலை *
அரியவின்னிசைபாடுநல்லடியவர்க்கு அருவினையடையாவே.

அடிவரவு :—வாலி கலங்க துடி மறம் கரைசெய் பணங்கள் கார் இரவு ஓதி கரிய முற்ற.

ஆழ்வரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

முதற்பத்து — மூன்றாந் திருமொழி — முற்றமூத்து

** முற்றமூத்துக்கோல்துணையா முன்னடிநோக்கிவளைந்து *
இற்றகால்போல்தள்ளிமெள்ள இருந்தங்கிளையாமுன் *
பெற்றதாய்போல்வந்தபேய்ச்சி பெருமுலையூடு * உயிரை
வற்றவாங்கியுண்டவாயான் வதரிவணங்குதுமே. 1

முதுகுபற்றிக்கைத்தலத்தால் முன்னொருகோலூன்றி *
விதிர்விதிர்த்துக்கண்சுழன்று மேற்கிளைகொண்டிருமி *
இதுவென்னப்பர்மூத்தவாறென்று இளையவரேசாமுன் *
மதுவுண்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. 2

உறிகள்போல்மெய்ந்நரம்பெழுந்து ஊன்தளர்ந்துள்ளமெள்கி *
நெறியைநோக்கிக்கண்சுழன்று நின்றுநடுங்காமுன் *
அறிதியாகில்நெஞ்சமன்பாய் ஆயிரநாமம்சொல்லி *
வெறிகொள்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. 3

பீளைசோரக்கண்ணிடுங்கிப் பித்தெழமூத்திருமி *
தாள்கள்நோவத்தம்மில்முட்டித் தள்ளிநடவாமுன் *
காளையாகிக்கன்றுமேய்த்துக் குன்றெடுத்தன்றுநின்றான் *
வாளைபாயும்தண்டடஞ்சூழ் வதரிவணங்குதுமே. 4

பண்டுகாமரானவாறும் பாவையர்வாயமுதம்
உண்டவாறும் *வாழ்ந்தவாறும் ஒக்கவுரைத்திருமி *
தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளிநடவாமுன் *
வண்டுபாடும்தண்டுழாயான் வதரிவணங்குதுமே. 5

எய்த்தசொல்லோடீளையேங்கி இருமியிளைத்துடலம் *
பித்தர்போலச்சித்தம்வேறாய்ப் பேசியயராமுன் *
அத்தனெந்தையாதிமூர்த்தி ஆழ்கடலைக்கடைந்த *
மைத்தசோதியெம்பெருமான் வதரிவணங்குதுமே. 6

பப்பவப்பர்மூத்தவாறு பாழ்ப்பதுசீத்திரளை
யொப்ப * ஐக்கள்போதவுந்த உந்தமர்காண்மினென்று *
செப்புநேர்மென்கொங்கைநல்லார் தாம்சிரியாதமுன்னம் *
வைப்பும்நங்கள்வாழ்வுமானான் வதரிவணங்குதுமே. 7

ஈசிபோமினீங்கிரேன்மின் இருமியிளைத்தீர் * உள்ளம்
கூசியிட்டீரென்றுபேசும் குவளையங்கண்ணியர்பால் *
நாசமானபாசம்விட்டு நன்னெறிநோக்கலுறில் *
வாசம்மல்குதண்டுழாயான் வதரிவணங்குதுமே. 8

புலன்கள்நையமெய்யில்மூத்துப் போந்திருந்துள்ளமெள்கி *
கலங்கவைக்கள்போதவுந்திக் கண்டபிதற்றாமுன் *
அலங்கலாயதண்டுழாய்கொண்டு ஆயிரநாமம்சொல்லி *
வலங்கொள்தொண்டர்பாடியாடும் வதரிவணங்குதுமே. 9

** வண்டுதண்டேனுண்டுவாழும் வதரிநெடுமாலை *
கண்டல்வேலிமங்கைவேந்தன் கலியனொலிமாலை *
கொண்டுதொண்டர்பாடியாடக் கூடிடில்நீள்விசும்பில் *
அண்டமல்லால்மற்றவர்க்கு ஓராட்சியறியோமே. 10

அடிவரவு :— முற்ற முதுகு உறிகள் பீளை பண்டு எய்த்த பப்ப ஈசி புலன்கள் வண்டு ஏனம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

## முதற்பத்து — நான்காந் திருமொழி — ஏனமுனகி

** ஏனமுனாகியிருநிலமிடந்து அன்றிணையடியிமையவர்வணங்க *
தானவனாகம்தரணியில்புரளத் தடஞ்சிலைகுனித்தவென்தலைவன் *
தேனமர்சோலைக்கற்பகம்பயந்த தெய்வநன்னறுமலர்கொணர்ந்து *
வானவர்வணங்கும்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 1

கானிடையுருவைச்சுடுசரம்துரந்து கண்டுமுன்கொடுந்தொழிலுரவோன் *
ஊனுடையகலத்தடுக்கணைகுளிப்ப உயிர்கவர்ந்துகந்தவெம்மொருவன் *
தேனுடைக்கமலத்தயனொடுதேவர் சென்றுசென்றிறைஞ்சிட * பெருகு
வானிடைமுதுநீர்க்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 2

இலங்கையும்கடலுமடலருந்துப்பின் இருநிதிக்கிறைவனும் * அரக்கர்
குலங்களும்கெடமுன்கொடுந்தொழில்புரிந்தகொற்றவன் கொழுஞ்சுடர்சுழன்ற *
விலங்கலிலுரிஞ்சிமேல்நின்றவிசும்பில் வெண்துகிற்கொடியெனவிரிந்து *
வலந்தருமணிநீர்க்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 3

** துணிவினியுனக்குச்சொல்லுவன்மனமே ! தொழுதெழுதொண்டர்கள்தமக்கு *
பிணியொழித்தமரர்பெருவிசும்பருளும் பேரருளாளனெம்பெருமான் *
அணிமலர்க்குழலாரரம்பையர்துகிலும் ஆரமும்வாரிவந்து * அணிநீர்
மணிகொழித்திழிந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 4

பேயிடைக்கிருந்துவந்தமற்றவள்தன் பெருமுலைசுவைத்திட * பெற்ற
தாயிடைக்கிருத்தலஞ்சுவனென்றுதளர்ந்திட வளர்ந்தவென்தலைவன் *
சேய்முகட்டுச்சியண்டமுஞ்சுமந்த செம்பொன்செய்விலங்கலிலிலங்கு *
வாய்முகட்டிழிந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 5

தேரணங்கல்குல்செழுங்கயற்கண்ணிதிறத்து ஒருமறத்தொழில்புரிந்து *
பாரணங்கிமிலேறேழுமுன்னடர்த்த பனிமுகில்வண்ணனெம்பெருமான் *
காரணந்தன்னால்கடும்புனல்கயத்த கருவரைபிளவெழக்குத்தி *
வாரணங்கொணர்ந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 6

வெந்திறல்களிறும்வேலைவாயமுதும் விண்ணொடுவிண்ணவர்க்கரசும் *
இந்திரற்கருளியெமக்குமீந்தருளும் எந்தையெம்மடிகளெம்பெருமான் *
அந்தரத்தமரரடியிணைவணங்க ஆயிரமுகத்தினாலருளி *
மந்தரத்திழிந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 7

மான்முனிந்தொருகால்வரிசிலைவளைத்த மன்னவன்பொன்னிறத்துரவோன் *
ஊன்முனிந்தவனதுடலிருபிளவா உகிர்நுதிமடுத்து * அயனரனைத்
தான்முனிந்திட்டவெந்திறல்சாபம்தவிர்த்தவன் * தவம்புரிந்துயர்ந்த
மாமுனிகொணர்ந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. 8

கொண்டல்மாருதங்கள்குலவரைதொகுநீர்க் குரைகடலுலகுடனனைத்தும் *
உண்டமாவயிற்றோனொண்சுடரேய்ந்த உம்பருமூழியுமானான் *
அண்டமூடறுத்தன்றந்தரத்திழிந்து அங்கவனியாளலமர * பெருகு
மண்டுமாமணிநீர்க்கங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே. 9

** வருந்திரைமணிநீர்க்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானை *
கருங்கடல்முந்நீர்வண்ணனையெண்ணிக் கலியன்வாயொலிசெய்தபனுவல் *
வரஞ்செய்தவைந்துமைந்தும்வல்லார்கள் வானவருலகுடன்மருவி *
இருங்கடலுலகமாண்டுவெண்குடைக்கீழ் இமையவராகுவர்தாமே. 10

அடிவரவு:—ஏனம் கானிடை இலங்கை துணிவு பேய் தேர்.வெந்திறல் மான் கொண்டல் வருந்திரை கலை.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### முதற்பத்து — ஐந்தாந் திருமொழி — கலையுங்கரியும்

கலையும்கரியும்பரிமாவும் திரியும்கானம்கடந்துபோய் *
சிலையும்கணையும்துணையாகச் சென்றான்வென்றிச்செருக்களத்து *
மலைகொண்டலைநீரணைகட்டி மதிள்நீரிலங்கைவாளரக்கர்
தலைவன் * தலைபத்தறுத்துகந்தான் சாளக்கிராமமடைநெஞ்சே! 1

கடம்சூழ்கரியும்பரிமாவும் ஒலிமாந்தேரும்காலாளும் *
உடன்சூழ்ந்தெழுந்தகடியிலங்கை பொடியாவடிவாய்ச்சரம்துரந்தான் *
இடம்சூழ்ந்தெங்குமிருவிசும்பில் இமையோர்வணங்கமணம்கமழும் *
தடம்சூழ்ந்தெங்குமழகாய சாளக்கிராமமடைநெஞ்சே! 2

உலவுதிரையும்குலவரையும் ஊழிமுதலாவெண்திக்கும் *
நிலவும்சுடருமிருளுமாய் நின்றான்வென்றிவிறலாழி

வலவன் * வானோர்தம்பெருமான் மருவாவரக்கர்க்கெஞ்ஞான்றும்
சலவன் * சலம்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே! 3

ஊரான்குடந்தையுத்தமன் ஒருகாலிருகால்சிலைவளைய *
தேராவரக்கர்தேர்வெள்ளம்செற்றான் வற்றாவருபுனல்சூழ்
பேரான் * பேராயிரமுடையான் பிறங்குசிறைவண்டறைகின்ற
தாரான் * தாராவயல்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே! 4

அடுத்தார்த்தெழுந்தாள்பிலவாய்விட்டலற அவள்மூக்கயில்வாளால்
விடுத்தான் * விளங்குசுடராழி விண்ணோர்பெருமான், நண்ணார்முன் *
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக் கல்லொன்றேந்தியினநிரைக்காத்
தடுத்தான் * தடம்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே! 5

தாயாய்வந்தபேயுயிரும் தயிரும்விழுதுமுடனுண்ட
வாயான் * தூயவரியுருவிற்குறளாய்ச்சென்று மாவலியை
ஏயானிரப்ப * மூவடிமண்ணின்றேதாவென்று உலகேழும்
தாயான் * காயாமலர்வண்ணன் சாளக்கிராமமடைநெஞ்சே! 6

ஏனோரஞ்சவெஞ்சமத்துள் அரியாய்ப்பரியவிரணியனை *
ஊனாரகலம்பிளவெடுத்த ஒருவன்தானேயிருசுடராய் *
வானாய்த்தீயாய்மாருதமாய் மலையாயலைநீருலகனைத்தும்
தானாய் * தானுமானான்தன் சாளக்கிராமமடைநெஞ்சே! 7

வெந்தாரென்புஞ்சுடுநீறும் மெய்யில்பூசிக்கையகத்து * ஓர்
சந்தார்தலைகொண்டுலகேழும் திரியும்பெரியோன்தான்சென்று * என்
எந்தாய்! சாபம்தீரென்ன இலங்கமுதநீர்திருமார்பில்
தந்தான் * சந்தார்பொழில்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே! 8

தொண்டாமினமுமிமையோரும் துணைநூல்மார்பினந்தணரும் *
அண்டாவெமக்கேயருளாயென்று அணையும்கோயிலருகெல்லாம் *
வண்டார்பொழிலின்பழனத்து வயலினயலேகயல்பாய *
தண்டாமரைகள்முகமலர்த்தும் சாளக்கிராமமடைநெஞ்சே! 9

** தாராவாரும்வயல்சூழ்ந்த சாளக்கிராமத்தடிகளை *
காரார்புறவின்மங்கைவேந்தன் கலியனொலிசெய்தமிழ்மாலை *
ஆராருலகத்தறிவுடையார் அமரர்நன்னாட்டரசாள *
பேராயிரமுமோதுமின்கள் அன்றியிவையேபிதற்றுமினே. 10

**அடிவரவு:**—கலை கடம் உலவு ஊரான் அடுத்து தாய் ஏனோர் வெந்தார் தொண்டு வாணிலா.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

## முதற்பத்து—ஆறாந்திருமொழி—வாணிலாமுறுவல்

** வாணிலாமுறுவல்சிறுநுதல்பெருந்தோள் மாதரார்வனமுலைப்பயனே
பேணினேன் * அதனைப்பிழையெனக்கருதிப் பேதையேன்பிறவிநோயறுப்பான் *
ஏணிலேனிருந்தேனெண்ணினேனெண்ணி இளையவர்கலவியின்திறத்தை *
நாணினேன்வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய்! 1

சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார் திறத்தனாயறத்தையேமறந்து *
புலம்படிந்துண்ணும்போகமேபெருக்கிப் போக்கினேன்பொழுதினைவாளா *
அலம்புரிதடக்கையாயனேமாயா ! வானவர்க்கரசனே ; * வானோர்
நலம்புரிந்திறைஞ்சுன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய். 2

சூதினைப்பெருக்கிக்களவினைத்துணிந்து சுரிகுழல்மடந்தையர்திறத்து *
காதலேமிகுத்துக்கண்டவாதிரிந்ததொண்டனேன் நமன்தமர்செய்யும் *
வேதனைக்கொடுங்கிநடுங்கினேன் வேலைவெண்டிரையலமரக்கடைந்த *
நாதனேவந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய் ! 3

வம்புலாங்கூந்தல்மனைவியைத்துறந்து பிறர்பொருள்தாரமென்றிவற்றை *
நம்பினாரிறந்தால்நமன்தமர்பற்றி எற்றிவைத்து * எரியெழுகின்ற
செம்பினாலியன்றபாவையைப் பாவீ! தழுவெனமொழிவதற்கஞ்சி *
நம்பனே !வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய்! 4

இடும்பையாலடர்ப்புண்டிடுமினோதுற்றென்று இரந்தவர்க்கில்லையேயென்று *
நெடுஞ்சொலால்மறுத்தநீசனேனந்தோ! நினைக்கிலேன்வினைப்பயன்தன்னை *
கடுஞ்சொலார்கடியார்காலனார்தமரால் படுவதோர்கொடுமிறைக்கஞ்சி *
நடுங்கிநான்வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய் ! 5

கோடியமனத்தால்சினத்தொழில்புரிந்து திரிந்துநாயினத்தொடுந்திளைத்திட்டு *
ஓடியுமுழன்றுமுயிர்களேகொன்றேன் உணர்விலேனாதலால் * நமனார்
பாடியைப்பெரிதும்பரிசழித்திட்டேன் பரமனே!பாற்கடல்கிடந்தாய் ! *
நாடிநான்வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய் ! 6

நெஞ்சினால்நினைந்தும்வாயினால்மொழிந்தும் நீதியல்லாதனசெய்தும் *
துஞ்சினார்செல்லுந்தொன்னெறிகேட்டே துளங்கினேன்விளங்கனிமுனிந்தாய்! *
வஞ்சனேனடியேன்நெஞ்சினிற்பிரியா வானவா ! *தானவர்க்கென்றும்
நஞ்சனே!* வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய் ! 7

ஏவினார்கலியார்நலிகவென்றென்மேல் எங்ஙனேவாழுமாறு?*ஐவர்
கோவினார்செய்யுங்கொடுமையைமடித்தேன் குறுங்குடிநெடுங்கடல்வண்ணா!*
பாவினாரின்சொல்பன்மலர்கொண்டு உன்பாதமேபரவிநான்பணிந்து *என்
நாவினால்வந்துன்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய் ! 8

ஊனிடைச்சுவர்வைத்தென்புதூண்நாட்டி உரோமம்வேய்ந்தொன்பதுவாசல் *
தானுடைக்குரம்பைபிரியும்போது உன்றன்சரணமேசரணமென்றிருந்தேன் *
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே ! திரைகொள்மாநெடுங்கடற்கிடந்தாய்!*
நானுடைத்தவத்தால்திருவடியடைந்தேன் நைமிசாரணியத்துளெந்தாய் ! 9

* ஏதம்வந்தணுகாவண்ணநாமெண்ணி யெழுமினோதொழுதுமென்று* இமையோர்
நாதன்வந்திறைஞ்சும் நைமிசாரணியத்தெந்தையைச்சிந்தையுள்வைத்து *
காதலேமிகுத்தகலியன்வாயொலிசெய் மாலைதாம்கற்றுவல்லார்கள் *
ஓதநீர்வையகமாண்டுவெண்குடைக்கீழ் உம்பருமாகுவர்தாமே.

அடிவரவு :—வாணிலா சிலம்பு சூதினை வம்பு இடும்பையால் கோடிய நெஞ்சினால் ஏவினார் ஊன் ஏதம் அங்கன்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

முதற்பத்து—ஏழாந்திருமொழி அங்கண்ஞாலமஞ்ச.

**அங்கண்ஞாலமஞ்ச. அங்கோராளரியாய்* அவுணன்
பொங்கவாகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
பைங்கணானைக்கொம்புகொண்டு பத்திமையால்* அடிக்கீழ்ச்
செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேள்குன்றமே. 1

அலைத்தபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய்* அவுணன்
கொலைக்கையாளன்நெஞ்சிடந்த கூருகிராளனிடம் *
மலைத்தசெல்சாத்தெறிந்தபூசல் வன்துடிவாய்கடுப்ப *
சிலைக்கைவேடர்தெழிப்பறாத சிங்கவேள்குன்றமே. 2

ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய்* அவுணன்
வாய்ந்தவாகம்வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம் *
ஓய்ந்தமாவுமுடைந்தகுன்றும் அன்றியும்நின்றழலால் *
தேய்ந்தவேயுமல்லதில்லாச் சிங்கவேள்குன்றமே. 3

எவ்வம்வெவ்வேல்பொன்பெயரோன் ஏதலனின்னுயிரை
வவ்வி* ஆகம்வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம் *
கவ்வுநாயுங்கழுகும் உச்சிப்போதொடுகால்சுழன்று *
தெய்வமல்லால்செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே. 4

மென்றபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய்* அவுணன்
பொன்றவாகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
நின்றசெந்தீமொண்டுசூறை நீள்விசும்பூடிரிய *
சென்றுகாண்டற்கரியகோயில் சிங்கவேள்குன்றமே. 5

எரிந்தபைங்கணிலங்குபேழ்வாய் எயிற்றொடிதெவ்வுருவென்று *
இரிந்துவானோர்கலங்கியோட இருந்தவம்மானதிடம் *
நெரிந்தவேயின்முழையுள்நின்று நீணெறிவாயுழுவை *
திரிந்தவானைச்சுவடுபார்க்கும் சிங்கவேள்குன்றமே, 6

முனைத்தசீற்றம்விண்சுடப்போய் மூவுலகும்பிறவும் *
அனைத்துமஞ்சவாளரியாய் இருந்தவம்மானதிடம் *
கனைத்ததீயும்கல்லுமல்லா வில்லுடைவேடருமாய் *
தினைத்தனையும்செல்லவொண்ணாச் சிங்கவேள்குன்றமே. 7

நாத்தழும்பநான்முகனும் ஈசனுமாய்முறையால்
ஏத்த*. அங்கோராளரியாய் இருந்தவம்மானதிடம் *
காய்த்தவாகைநெற்றொலிப்பக் கல்லதர்வேய்ங்கழைபோய் *
தேய்த்ததீயால்விண்சிவக்கும் சிங்கவேள்குன்றமே. 8

நல்லைநெஞ்சே!நாந்தொழுதும் நம்முடைநம்பெருமான் *
அல்லிமாதர்புல்கநின்ற ஆயிரந்தோளனிடம் *
நெல்லிமல்கிக்கல்லுடைப்பப் புல்லிலையார்த்து* அதர்வாய்ச்
சில்லிசில்லென்றொல்லறாத சிங்கவேள்குன்றமே. 9

**செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேள்குன்றுடைய *
எங்களீசனெம்பிரானை இருந்தமிழ்நூற்புலவன் *

மங்கையாளன்மன்னுதொல்சீர் வண்டறைதார்க்கலியன் *
செங்கையாளன்செஞ்சொல்மாலை வல்லவர்தீதிலரே. 10

அடிவரவு :—அங்கண் அலை ஏய்ந்த எவ்வம் மென்றெரி முனைத்த நா நல்லை செங்கண் கொங்கு.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

முதற்பத்து—எட்டாந்திருமொழி—கொங்கலர்ந்தமலர்க்குருந்தம்.

**கொங்கலர்ந்தமலர்க்குருந்தமொசித்த கோவலனெம்பிரான் *
சங்குதங்குதடங்கடல்துயில்கொண்ட தாமரைக்கண்ணினன் *
பொங்குபுள்ளினைவாய்பிளந்த புராணர்தம்மிடம்*பொங்குநீர்ச்
செங்கயல்திளைக்கும்சுனைத் திருவேங்கடமடைநெஞ்சமே ! 1

பள்ளியாவதுபாற்கடலரங்கம் இரங்கவன்பேய்முலை *
பிள்ளையாயுயிருண்டவெந்தை பிரானவன்பெருகுமிடம் *
வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணனென்றெண்ணி*நாடொறும்
தெள்ளியார்வணங்கும்மலை திருவேங்கடமடைநெஞ்சமே ! 2

நின்றமாமருதிற்றுவீழ நடந்தநின்மலன்நேமியான் *
என்றும்வானவர்கைதொழும் இணைத்தாமரையடியெம்பிரான் *
கன்றிமாரிபொழிந்திடக் கடிதாநிரைக்கிடர்நீக்குவான் *
சென்றுகுன்றமெடுத்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே ! 3

பார்த்தற்காயன்றுபாரதம்கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர் *
கோத்தங்காயர்தம்பாடியில் குரவைபிணைந்தவெங்கோவலன் *
ஏத்துவார்தம்மனத்துள்ளான் இடவெந்தைமேவியவெம்பிரான் *
தீர்த்தநீர்த்தடஞ்சோலைசூழ் திருவேங்கடமடைநெஞ்சமே ! 4

வண்கையானவுணர்க்குநாயகன் வேள்வியில்சென்றுமாணியாய் *
மண்கையாலிரந்தான் மராமரமேழுமெய்தவலத்தினன் *
எண்கையானிமயத்துள்ளான் இருஞ்சோலைமேவியவெம்பிரான் *
திண்கைம்மாதுயர்தீர்த்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே ! 5

எண்டிசைகளுமேழுலகமும்வாங்கிப் பொன்வயிற்றில்பெய்து *
பண்டோராலிலைப்பள்ளிகொண்டவன் பான்மதிக்கிடர்தீர்த்தவன் *
ஒண்டிறலவுணனுரத்துகிர்வைத்தவன் ஒள்ளெயிற்றொடு *
திண்டிறலரியாயவன் திருவேங்கடமடைநெஞ்சமே ! 6

பாருநீரெரிகாற்றினோடு ஆகாசமுமிவையாயினன் *
பேருமாயிரம்பேசநின்ற பிறப்பிலிபெருகுமிடம் *
காரும்வார்பனிநீள்விசும்பிடைச் சோருமாமுகில்தோய்தர *
சேரும்வார்பொழில்சூழ் எழில்திருவேங்கடமடைநெஞ்சமே ! 7

அம்பரமனல்கால்நிலம் சலமாகிநின்றவமரர்கோன் *
வம்புலாமலர்மேல் மலிமடமங்கைதன்கொழுநனவன் *
கொம்பினன்னவிடை மடக்குறமாதர்நீளிதணந்தொறும் *
செம்புனமவைகாவல்கொள் திருவேங்கடமடைநெஞ்சமே ! 8

**பேசுமின் திருநாமமெட்டெழுத்தும் சொல்லிநின்று, பின்னரும் *
பேசுவார்தம்மையுய்யவாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம் *
வாசமாமலர்நாறுவார் பொழில்சூழ்தருமுலகுக்கெல்லாம் *
தேசமாய்த்திகழும்மலை திருவேங்கடமடைநெஞ்சமே! 9

**செங்கயல்திளைக்கும்சுனைத் திருவேங்கடத்துறைசெல்வனை *
மங்கையர்தலைவன்கலிகன்றி வண்டமிழ்ச்செஞ்சொல்மாலைகள் *
சங்கையின்றித்தரித்துரைக்கவல்லார்கள் தஞ்சமதாகவே *
வங்கமாகடல்வையம்காவலராகி வானுலகாள்வரே. 10

அடிவரவு:—கொங்கு பள்ளி நின்ற பார்த்தற்கு வண்கையான் எண்திசைகள் பார் அம்பரம் பேசுமின் செங்கயல் தாய்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

முதற்பத்து—ஒன்பதாந்திருமொழி—தாயேதந்தையென்றும்.

**தாயேதந்தையென்றும் தாரமேகிளைமக்களென்றும் *
நோயேபட்டொழிந்தேன் உன்னைக்காண்பதோராசையினால் *
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார்திருவேங்கடவா!*
நாயேன்வந்தடைந்தேன் நல்கியாளென்னைக்கொண்டருளே. 1

மானேய்கண்மடவார் மயக்கில்பட்டு மாநிலத்து *
நானேநானாவித நரகம்புகும்பாவம்செய்தேன் *
தேனேய்பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை*என்
ஆனாய்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 2

கொன்றேன்பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினால்*
என்றேனுமிரந்தார்க்கு இனிதாகவுரைத்தறியேன் *
குன்றேய்மேகமதிர் குளிர்மாமலைவேங்கடவா!*
அன்றேவந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 3

குலந்தானெத்தனையும் பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன் *
நலந்தானொன்றுமிலேன் நல்லதோரறம்செய்துமிலேன் *
நிலந்தோய்நீள்முகில்சேர் நெறியார்திருவேங்கடவா!*
அலந்தேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 4

எப்பாவம்பலவும் இவையேசெய்திளைத்தொழிந்தேன் *
துப்பா!நின்னடியே தொடர்ந்தேத்தவும்கிற்கின்றிலேன் *
செப்பார்திண்வரைசூழ் திருவேங்கடமாமலை*என்
அப்பா!வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 5

மண்ணாய்நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம் *
புண்ணாராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்தெய்த்தொழிந்தேன் *
விண்ணார்நீள்சிகர விரையார்திருவேங்கடவா!*
அண்ணா!வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 6

தெரியேன்பாலகனாய்ப் பலதீமைகள்செய்துமிட்டேன் *
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்தேழையானேன் *

கரிசேர்பூம்பொழில்சூழ் கனமாமலைவேங்கடவா !*
அரியே!வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 7

நோற்றேன்பல்பிறவி உன்னைக்காண்பதோராசையினால் *
ஏற்றேனிப்பிறப்பே யிடருற்றனனெம்பெருமான்! *
கோல்தேன்பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ்வேங்கடவா !*
ஆற்றேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 8

பற்றேலொன்றுமிலேன் பாவமேசெய்துபாவியானேன் *
மற்றேலொன்றறியேன் மாயனே!எங்கள்மாதவனே !*
கல்தேன்பாய்ந்தொழுகும் கமலச்சுனைவேங்கடவா !*
அற்றேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 9

**கண்ணாயேழுலகுக்கு உயிராயவெங்கார்வண்ணனை *
விண்ணோர்தாம்பரவும் பொழில்வேங்கடவேதியனை *
திண்ணார்மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன்கலியன் *
பண்ணார்பாடல்பத்தும் பயில்வார்க்கில்லைபாவங்களே.

**அடிவரவு** :—தாய் மான் கொன்றேன் குலம் எப்பாவம் மண் தெரியேன் நோற்றேன் ?றல் கண்ணாய் கண்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

———:———

**முதற்பத்து—பத்தாந்திருமொழி—கண்ணார்கடல்சூழ்.**

**கண்ணார்கடல்சூழ் இலங்கைக்கிறைவன்தன்* திண்ணாகம்பிளக்கச் சரம்செலவுய்த்தாய் *
விண்ணோர்தொழும் வேங்கடமாமலைமேய * அண்ணா!அடியேன் இடரைக்களையாயே. 1

இலங்கைப்பதிக்கு அன்றிறையாய*அரக்கர்குலம்கெட்டவர்மாளக் கொடிப்புள்திரித்
விலங்கல்குடுமித் திருவேங்கடம்மேய * அலங்கல்துளபமுடியாய்! அருளாயே. 2 [தாய் !*

நீரார்கடலும் நிலனும்முழுதுண்டு * ஏராலமிளந்தளிர்மேல் துயிலெந்தாய் !*
சீரார் திருவேங்கடமாமலைமேய * ஆராவமுதே! அடியேற்கருளாயே.

உண்டாயுறிமேல் நறுநெய்யமுதாக * கொண்டாய்குறளாய் நிலமீரடியாலே *
விண்தோய்சிகரத் திருவேங்கடம்மேய * அண்டா!அடியேனுக்கு அருள்புரியாயே. 4

தூணாயதனூடு அரியாய்வந்துதோன்றி * பேணாவவுணனுடலம் பிளந்திட்டாய்!*
சேணார் திருவேங்கடமாமலைமேய * கோணாகணையாய்! குறிக்கொள்ளெனைநீயே. 5

மன்னாஇம்மனிசப்பிறவியைநீக்கி * தன்னாக்கித் தன்னின்னருள்செய்யுந்தலைவன் *
மின்னார்முகில்சேர் திருவேங்கடம்மேய*என்னானையென்னப்பன் என்னெஞ்சிலுளானே. 6

மானேய்மடநோக்கிதிறத்து எதிர்வந்த * ஆனேழ்விடைசெற்ற அணிவரைத்தோளா !*
தேனே! திருவேங்கடமாமலைமேய !* கோனே! என்மனம் குடிகொண்டிருந்தாயே. 7

சேயனணியன் எனசிந்தையுள்நின்றமாயன்*மணிவாளொளி வெண்டரளங்கள் *
வேய்விண்டுதிர் வேங்கடமாமலைமேய * ஆயனடியல்லது மற்றறியேனே. 8

வந்தாயென்மனம்புகுந்தாய் மன்னிநின்றாய் * நந்தாதகொழுஞ்சுடரே யெங்கள்நம்பீ !*
சிந்தாமணியே திருவேங்கடம்மேயஎந்தாய் !* இனியானுன்னை யென்றும்விடேனே 9

**வில்லார்மலி வேங்கடமாமலைமேய் * மல்லார்திரடோள் மணிவண்ணனம்மானை *
கல்லார்திரடோள் கலியன்சொன்னமாலை * வல்லாரவர் வானவராகுவர்தாமே. 10

அடிவரவு :—கண் இலங்கை நீர் உண்டாய் தூணாய் மன்னு மானேய் சேயன் வந்தாய் வில் வானவர்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

## இரண்டாம்பத்து முதல்திருமொழி—வானவர்தங்கள்.

**வானவர்தங்கள்சிந்தைபோல என்னெஞ்சமே!யினிதுவந்து*மாதவ
மானவர்தங்கள்சிந்தை அமர்ந்துறைகின்றவெந்தை*
கானவரிடுகாரகில்புகை ஓங்குவேங்கடம்மேவி*மாண்குற
ளானவந்தணற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே. 1

உறவுசுற்றமென்றொன்றிலா வொருவன்உகந்தவர்தம்மை * மண்மிசைப்
பிறவியேகெடுப்பான் அதுகண்டென்னெஞ்சமென்பாய்! *
குறவர்மாதர்களோடு வண்டுகுறிஞ்சிமருளிசைபாடும் * வேங்கடத்து
அறவனாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே. 2

இண்டையாயினகொண்டு தொண்டர்களேத்துவாருறவோடும் * வானிடைக்
கொண்டுபோயிடவும் அதுகண்டென்னெஞ்சமென்பாய்! *
வண்டுவாழ்வடவேங்கடமலை கோயில்கொண்டதனோடும் * மீமிசை
அண்டமாண்டிருப்பாற்கு அடிமைத்தொழில்பூண்டாயே. 3

பாவியாதுசெய்தாய் என்னெஞ்சமே!பண்டுதொண்டுசெய்தாரை * மண்மிசை
மேவியாட்கொண்டுபோய் விசும்பேறவைக்குமெந்தை *
கோவிநாயகன்கொண்டலுந்துயர் வேங்கடமலையாண்டு * வானவர்
ஆவியாயிருப்பாற்கு அடிமைத்தொழில்பூண்டாயே. 4

பொங்குபோதியும்பிண்டியுமுடைப் புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளுறை *
தங்கள்தேவரும்தாங்களுமேயாக என்னெஞ்சமென்பாய்! *
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும் வேங்கடம்மேவிநின்றருள் *
அங்கணாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே. 5

துவரியாடையர்மட்டையர் சமண்தொண்டர்கள்மண்டியுண்டுபின்னரும் *
தமரும்தாங்களுமேதடிக்க என்னெஞ்சமென்பாய்! *
கவரிமாக்கணம்சேரும் வேங்கடம்கோயில்கொண்டகண்ணார்விசும்பிடை *
அமரநாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே. 6

தருக்கினால்சமண்செய்து சோறுதண்தயிரினால்திரளை * மிடற்றிடை
நெருக்குவாரலக்கண் அதுகண்டென்னெஞ்சமென்பாய்! *
மருட்கள்வண்டுகள்பாடும் வேங்கடம்கோயில்கொண்டதனோடும் * வானிடை
அருக்கன்மேவிநிற்பாற்கு அடிமைத்தொழில்பூண்டாயே. 7

சேயனணியன்சிறியன்பெரியனென்பதும் சிலர்பேசக்கேட்டிருந்
தே * என்னெஞ்சமென்பாய்! எனக்கொன்றுசொல்லாதே *
வேய்கள்நின்றுவெண்முத்தமேசொரி வேங்கடமலைகோயில்மேவிய *
ஆயர்நாயகற்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே. 8

கூடியாடியுரைத்ததேயுரைத்தாய் என்னெஞ்சமென்பாய்! துணிந்துகேள் *
பாடியாடிப்பலரும் பணிந்தேத்திக்காண்கிலா *
ஆடுதாமரையோனுமீசனும் அமரர்கோனும்நின்றேத்தும் * வேங்கடத்து
ஆடுகூத்தனுக்கு இன்றடிமைத்தொழில்பூண்டாயே. 9

**மின்னுமாமுகில்மேவு தண் திருவேங்கடமலைகோயில்மேவிய *
அன்னமாய்நிகழ்ந்த அமரர்பெருமானை *
கன்னிமாமதிள்மங்கையர்கலிகன்றி இன்தமிழாலுரைத்த * இம்
மன்னுபாடல்வல்லார்க்கு இடமாகும்வானுலகே. 10

அடிவரவு :—வானவர் உறவு இண்டை பாவியாது பொங்கு துவரி தருக்கினால் சேயன் கூடி மின்னு காசை.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

## இரண்டாம் பத்து—இரண்டாந்திருமொழி—காசையாடைமூடியோடி.

**காசையாடைமூடியோடிக் காதல்செய்தானவனூர் *
நாசமாகநம்பவல்ல நம்பிநம்பெருமான் *
வேயினன்னதோள்மடவார் வெண்ணெயுண்டானிவனென்று *
ஏசநின்றவெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. 1

தையலாள்மேல்காதல்செய்த தானவன்வாளரக்கன் *
பொய்யிலாதபொன்முடிகள் ஒன்பதோடொன்றும் * அன்று
செய்தவெம்போர்தன்னில் அங்கோர்செஞ்சரத்தாலுருள *
எய்தவெந்தையெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. 2

முன்னோர்தூது வானரத்தின்வாயில்மொழிந்து * அரக்கன்
மன்னூர்தன்னை வாளியினால்மாளமுனிந்து * அவனே
பின்னோர்தூது ஆதிமன்னர்க்காகிப்பெருநிலத்தார் *
இன்னார்தூதனெனநின்றான் எவ்வுள்கிடந்தானே.

பந்தணைந்தமெல்விரலாள் பாவைதன்காரணத்தால் *
வெந்திறலேறேழும் வென்றவேந்தன்விரிபுகழ்சேர் *
நந்தன்மைந்தனுகவாகும் நம்பிநம்பெருமான் *
எந்தைதந்தைதம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. 4

பாலனாகிஞாலமேழுமுண்டு பண்டாலிலைமேல் *
சாலநாளும்பள்ளிகொள்ளும் தாமரைக்கண்ணனெண்ணில் *
நீலமார்வண்டுண்டுவாழும் நெய்தலந்தண்கழனி *
ஏலநாறும்பைம்புறவில் எவ்வுள்கிடந்தானே. 5

சோத்தநம்பியென்று தொண்டர்மிண்டித்தொடர்ந்தழைக்கும் *
ஆத்தனம்பிசெங்கணம்பி ஆகிலும்தேவர்க்கெல்லாம் *
மூத்தநம்பிமுக்கணம்பியென்று முனிவர்தொழுது
ஏத்தும் * நம்பியெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. 6

திங்களப்புவானெரிகாலாகி திசைமுகனார் *
தங்களப்பன்சாமியப்பன் பாகத்திருந்த * வண்டுண்

தொங்கலப்புநீண்முடியான் சூழ்கழல்சூடநின்ற *
எங்களப்பனெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. 7

முனிவன்மூர்த்திமூவராகி வேதம்விரித்துரைத்த
புனிதன் *பூவைவண்ணனண்ணல் புண்ணியன்விண்ணவர்கோன் *
தனியன்சேயன்தானொருவனாகிலும் தன்னடியார்க்கு
இனியன் * எந்தையெம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. 8

பந்திருக்கும்மெல்விரலாள் பாவைபனிமலராள் *
வந்திருக்கும்மார்வன் நீலமேனிமணிவண்ணன் *
அந்தரத்தில்வாழும் வானோர்நாயகனாயமைந்த *
இந்திரற்கும்தம்பெருமான் எவ்வுள்கிடந்தானே. 9

** இண்டைகொண்டுதொண்டரேத்த எவ்வுள்கிடந்தானை *
வண்டுபாடும்பைம்புறவில் மங்கையர்கோன்கலியன் *
கொண்டசீரால்தண்டமிழ்செய்மாலை ஈரைந்தும்வல்லார் *
அண்டமாள்வதாணை அன்றேலாள்வரமருலகே. 10

அடிவரவு :—காசை தையலாள் முன் பந்தணைந்த பாலன் சோத்தம் திங்கள் முனிவன் திருக்கும் இண்டை வில்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

### இரண்டாம்பத்து—மூன்றாந்திருமொழி—விற்பெருவிழவும்.

**விற்பெருவிழவும்கஞ்சனும்மல்லும் வேழமும்பாகனும்வீழ *
செற்றவன்தன்னைப்புரமெரிசெய்த சிவனுறுதுயர்களைதேவை *
பற்றலர்வீயக்கோல்கையில்கொண்டு பார்த்தன்தன்தேர்முன்நின்றானை
சிற்றவைபணியால்முடிதுறந்தானைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 1

வேதத்தைவேதத்தின்சுவைப்பயனை விழுமியமுனிவர்விழுங்கும் *
கோதிலின்கனியைநந்தனார்களிற்றைக் குவலயத்தோர்தொழுதேத்தும் *
ஆதியையமுதையென்னையாளுடையப்பனை ஒப்பவரில்லா
மாதர்கள்வாழும்*மாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 2

வஞ்சனைசெய்யத்தாயுருவாகி வந்தபேயலறிமண்சேர *
நஞ்சமர்முலையூடுயிர்செகவுண்ட நாதனைத்தானவர்கூற்றை *
விஞ்சைவானவர்சாரணர்சித்தர் வியந்துதிசெய்யப்பெண்ணுருவாகி *
அஞ்சுவையமுதமன்றளித்தானைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 3

இந்திரனுக்கென்றாயர்களெடுத்த எழில்விழவில்பழநடைசெய் *
மந்திரவிதியில்பூசனைபெறாது மழைபொழிந்திடத்தளர்ந்து * ஆயர்
எந்தம்மோடினவாநிரைதளராமல் எம்பெருமானருளென்ன *
அந்தமில்வரையால்மழைதடுத்தானைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 4

இன்துணைப்பதுமத்தலர்மகள்தனக்குமின்பன் நற்புவிதனக்கிறைவன் *
தன்துணையாயர்பாவைநப்பின்னைதனக்கிறை மற்றையோர்க்கெல்லாம்
வன்துணை *பஞ்சபாண்டவர்க்காகி வாயுரைதூதுசென்றியங்கும்
என்துணை * எந்தைதந்தைதம்மானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே. 5

அந்தகன்சிறுவனரசர்தமரசற்கிளையவன் அணியிழையைச்சென்று *
எந்தமக்குரிமைசெய்யெனத்தரியாது எம்பெருமானருளென்ன *
சந்தமல்குழலாளலக்கண்நூற்றுவர்தம் பெண்டிருமெய்திநூலிழப்ப *
இந்திரன்சிறுவன்தேர்முன்னின்றானைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 6

பரதனும்தம்பிசத்துருக்கனனும் இலக்குமனோடுமைதிலியும் *
இரவுநன்பகலும்துதிசெய்யநின்ற இராவணாந்தகனையெம்மானை *
குரவமேகமழும்குளிர்பொழிலூடு குயிலொடுமயில்கள்நின்றால *
இரவியின்கதிர்கள்நுழைதல்செய்தறியாத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 7

பள்ளியிலோதிவந்ததன்சிறுவன் வாயிலோராயிரநாமம் *
ஒள்ளியவாகிப்போதவாங்கதனுக்கு ஒன்றுமோர்பொறுப்பிலனாகி *
பிள்ளையைச்சீறிவெகுண்டுதூண்புடைப்பப் பிறையெயிற்றனல்விழிப்பேழ்வாய் *
தெள்ளியசிங்கமாகியதேவைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 8

மீனமர்பொய்கைநாண்மலர்கொய்வான் வேட்கையினோடுசென்றிழிந்த *
கானமர்வேழம்கையெடுத்தலறக் கராவதன்காலினைக்கதுவ *
ஆனையின்துயரம்தீரப்புள்ளூர்ந்து சென்றுநின்றாழிதொட்டானை *
தேனமர்சோலைமாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. 9

** மன்னுதண்பொழிலும்வாவியும்மதிளும் மாடமாளிகையும்மண்டபமும் *
தென்னன்தொண்டையர்கோன்செய்தநன்மயிலைத் திருவல்லிக்கேணிநின்றானை *
கன்னிநன்மாடமங்கையர்தலைவன் காமருசீர்க்கலிகன்றி *
சொன்னசொல்மாலைபத்துடன்வல்லார் சுகமினிதாள்வர்வானுலகே. 10

அடிவரவு:—வில் வேதத்தை வஞ்சனை இந்திரனுக்கு இன்துணை அந்தகன் பரதன் பள்ளியில் மீனமர் மன்னு அன்றாயர்.

**ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.**

———:———

### இரண்டாம்பத்து நான்காம்திருமொழி அன்றாயர்குலக்கொடியோடு.

அன்றாயர்குலக்கொடியோடு அணிமாமலர்மங்கையொடன்பளவி * அவுணர்க்கு
என்றானுமிரக்கமிலாதவனுக்கு உறையுமிடமாவது * இரும்பொழில்சூழ்
நன்றாயபுனல்நறையூர்திருவாலிகுடந்தை தடந்திகழ்கோவல்நகர் *
நின்றானிருந்தான்கிடந்தான்நடந்தாற்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 1

காண்டாவனமென்பதோர்காடு அமரர்க்கரையனதுகண்டவன் நிற்க * முனே
மூண்டாரழலுண்ணமுனிந்ததுவும் அதுவன்றியும்முன்னுலகம்பொறைதீர்த்து
ஆண்டான் * அவுணனவன்மார்பகலம் உகிரால்வகிராகமுனிந்தரியாய்
நீண்டான் * குறளாகிநிமிர்ந்தவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 2

அலமன்னுமடல்சுரிசங்கமெடுத்தடலாழியினால் அணியாருருவில் *
புலமன்னுவடம்புனைகொங்கையினாள் பொறைதீரமுனாளடுவாளமரில் *
பலமன்னர்படச்சுடராழியினைப் பகலோன்மறையப்பணிகொண்டணிசேர் -
நிலமன்னனுமாயுலகாண்டவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 3

தாங்காததொராளரியாயவுணன்தனை வீடமுனிந்தவனாலமரும் *
பூங்கோதையர்பொங்கெரிமூழ்கவிளைத்ததுவன்றியும் வென்றிகொள்வாளமரில் *

பாங்காகமுனைவரொடன்பளவிப் பதிற்றைந்திரட்டிப்படைவேந்தர்பட *
நீங்காச்செருவில்நிறைகாத்தவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 4

மாலுங்கடலாரமலைக்குவடிட்டணைகட்டி வரம்புருவமதிசேர்*
கோலமதிளாயவிலங்கைகெடப் படைதொட்டொருகாலமரிலதிர *
காலமிதுவென்றயன்வாளியினால் கதிர்நீண்முடிபத்துமறுத்தமரும் *
நீலமுகில்வண்ணனெமக்கிறைவற்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 5

பாராருலகும்பனிமால்வரையும் கடலும்சுடருமிவையுண்டும்*எனக்
காராதெனநின்றவனெம்பெருமான் அலைநீருலகுக்கரசாகிய*அப்
பேராளைமுனிந்தமுனிக்கரையன் பிறரில்லைநுனக்கெனுமெல்லையினான் *
நீரார்பேரான்நெடுமாலவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 6

புகராருருவாகிமுனிந்தவனைப் புகழ்வீடமுனிந்துயிருண்டு*அசுரன்
நகராயினபாழ்படநாமமெறிந்ததுவன்றியும் வென்றிகொள்வாளவுணன் *
பகராதவனாயிரநாமம் அடிப்பணியாதவனைப்பணியாலமரில் *
நிகராயவன்னெஞ்சிடந்தானவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 7

பிச்சச்சிறுபீலிபிடித்து உலகில்பிணந்தின்மடவாரவர்போல்*அங்ஙனே
அச்சமிலர்நாணிலராதன்மையால் அவர்செய்கைவெறுத்தணிமாமலர்தூய் *
நச்சிநமனாரடையாமை நமக்கருள்செய்யெனவுள்குழைந்தார்வமொடு *
நிச்சம்நினைவார்க்கருள்செய்யுமவற்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 8

பேசுமளவன்றிதுவம்மின் நமர்பிறர்கேட்பதன்முன்,பணிவார்வினைகள் *
நாசமதுசெய்திடுமாதன்மையால் அதுவேநமதுய்விடம்நாண்மலர்மேல் *
வாசமணிவண்டறைபைம்புறவில் மனமைந்தொடுநைந்துழல்வார்*மதியில்
நீசரவர்சென்றடையாதவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. 9

** நெடுமாலவன்மேவியநீர்மலைமேல் நிலவும்புகழ்மங்கையர்கோன்*அமரில்
கடமாகளியானைவல்லான் கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார்க்கு*உடனே
விடுமால்வினை வேண்டிடில்மேலுலகுமெளிதாயிடுமன்றியிலங்கொலிசேர் *
கொடுமாகடல்வையகமாண்டு மதிக்குடைமன்னவராயடிகூடுவரே. 10

அடிவரவு :—அன்று காண்டா அலம் தாங்காத மாலும் பாரார் புகரார் பிச்சம் பேசும் நெடுமால் பார். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

———:———

## இரண்டாம்பத்து—ஐந்தாந்திருமொழி—பாராயதுண்டுமிழ்ந்த.

** பாராயதுண்டுமிழ்ந்தபவளத்தூணைப் படுகடலிலமுதத்தைப்பரிவாய்கீண்ட
சீரானை*எம்மானைத்தொண்டர்தங்கள்சிந்தையுள்ளே முளைத்தெழுந்ததீங்கரும்பினை *
போரானைக்கொம்பொசித்தபோரேற்றினைப் புணர்மருதமிறநடந்தபொற்குன்றினை *
காரானையிடர்கடிந்தகற்பகத்தைக் கண்டதுநான்கடன்மல்லைத்தலசயனத்தே. 1

பூண்டவத்தம்பிறர்க்கடைந்துதொண்டுபட்டுப் பொய்ந்நூலைமெய்ந்நூலென்றென்றுமோதி
மாண்டு*அவத்தம்போகாதேவம்மின் எந்தையென்வணங்கப்படுவானை*கணங்களேத்தும்
நீண்டவத்தைக்கருமுகிலையெம்மான்தன்னை நின்றவூர்நித்திலத்தைத்தொத்தார்சோலை *
காண்டவத்தைக்கனலெரிவாய்ப்பெய்வித்தானைக் கண்டதுநான்கடன்மல்லைத்தலசயனத்தே. 2

உடம்புருவில்மூன்றொன்றாய்மூர்த்திவேறாய் உலகுய்யநின்றானை*அன்றுபேய்ச்சி
விடம்பருகுவித்தகனைக் கன்றுமேய்த்துவிளையாடவல்லானை வரைமீகானில் *
தடம்பருகுகருமுகிலைத்தஞ்சைக்கோயில் தவநெறிக்கோர் பெருநெறியைவையங்காக்கும் *
கடும்பரிமேல்கற்கியைநான்கண்டுகொண்டேன் கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே.

பேய்த்தாயைமுலையுண்டபிள்ளைதன்னைப் பிணைமருப்பிற்கருங்களிற்றைப்பிணைமானோக்கின் *
ஆய்த்தாயர்தயிர்வெண்ணெயமர்ந்தகோவை அந்தணர்தமமுதத்தைக்குரவைமுன்னே
கோத்தானை*குடமாடுகூத்தன்தன்னைக் கோகுலங்கள்தளராமல்குன்றமேந்திக்
காத்தானை*எம்மானைக்கண்டுகொண்டேன் கடிபொழில்சூழ்கடல்மல்லைத்தலசயனத்தே. 4

பாய்ந்தானைத்திரிசகடம்பாறிவீழப் பாலகனாயாலிலையில்பள்ளியின்ப
மேய்ந்தானை*இலங்கொளிசேர்மணிக்குன்றன்ன ஈரிரண்டுமால்வரைத்தோளெம்மான்தன்னை *
தோய்ந்தானைநிலமகள்தோள்தூதிற்சென்று அப்பொய்யறைவாய்ப்புகப்பெய்தமல்லர்மங்கக்
காய்ந்தானை*எம்மானைக்கண்டுகொண்டேன் கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. 5

கிடந்தானைத்தடங்கடலுள்பணங்கள்மேவிக் கிளர்பொறியமறிதிரியவதனின்பின்னே
படர்ந்தானை*படுமதத்தகளிற்றின்கொம்புபறித்தானைப் பாரிடத்தையெயிறுகீற
விடந்தானை*வளைமருப்பினேனமாகி இருநிலனும்பெருவிசும்புமெய்தாவண்ணம்
கடந்தானை*எம்மானைக்கண்டுகொண்டேன் கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. 6

பேணாதவலியரக்கர்மெலியவன்று பெருவரைத்தோளிறநெரித்தன்றவுணர்கோனை *
பூணாகம்பிளவெடுத்தபோர்வல்லோனைப் பொருகடலுள்துயிலமர்ந்தபுள்ளூர்தியை *
ஊணாகப்பேய்முலைநஞ்சுண்டான்தன்னை உள்ளுவாருள்ளத்தேயுறைகின்றானை *
காணாதுதிரிதருவேன்கண்டுகொண்டேன் கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. 7

பெண்ணாகியின்னமுதம்வஞ்சித்தானைப் பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை *
தண்ணார்ந்தவார்புனல்சூழ்மெய்யமென்னும் தடவரைமேல்கிடந்தானைப்பணங்கள்மேவி*
எண்ணானையெண்ணிறந்தபுகழினானை இலங்கொளிசேரரவிந்தம்போன்றுநீண்ட
கண்ணானை*கண்ணாரக்கண்டுகொண்டேன் கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே 8

தொண்டாயார்தாம்பரவுமடியினானைப் படிகடந்ததாளாளற்காளாயுய்தல்
விண்டானை*தென்னிலங்கையரக்கர்வேந்தை விலங்குண்ணவலங்கைவாய்ச்சரங்களாண்டு *
பண்டாயவேதங்கள்நான்கும் ஐந்துவேள்விகளும்கேள்வியோடங்கமாறும்
கண்டானை*தொண்டனேன்கண்டுகொண்டேன் கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. 9

**படநாகத்தணைக்கிடந்தன்றவுணர்கோனைப் படவெகுண்டுமருதிடைபோய்ப்பழனவேலி*
தடமார்ந்தகடன்மல்லைத்தலசயனத்துத் தாமரைக்கண்துயிலமர்ந்ததலைவர்தம்மை *
கடமாரும்கருங்களிறுவல்லான் வெல்போர்க்கலிகன்றியொலிசெய்தவின்பப்பாடல் *
திடமாகவிவையைந்துமைந்தும்வல்லார் தீவினையைமுதலரியவல்லார்தாமே. 10

அடிவரவு:—பாராயது பூண்டு உடம்பு பேய் பாய்ந்தானை கிடந்தானை பேணாத பெண் தொண்டாயார் படம் நண்ணாத. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

### இரண்டாம்பத்து—ஆறுந்திருமொழி—நண்ணாதவாளவுணர்.

** நண்ணாதவாளவுணர் இடைப்புக்கு * வானவரைப்
பெண்ணாகி அமுதூட்டும்பெருமானார்*மருவினிய
தண்ணார்ந்தகடன்மல்லைத் தலசயனத்துறைவாரை *
எண்ணாதேயிருப்பாரை யிறைப்பொழுதுமெண்ணோமே. 1

பார்வண்ணமடமங்கை பனிநன்மாமலர்க்கிழத்தி *
நீர்வண்ணன்மார்வகத்தில் இருக்கையைமுன்நினைந்தவனூர் *
கார்வண்ணமுதுமுந்நீர்க் கடன்மல்லைத்தலசயனம் *
ஆரெண்ணும்நெஞ்சுடையார் அவரெம்மையாள்வாரே. 2

** ஏனத்தினுருவாகி நிலமங்கையெழில்கொண்டான் *
வானத்திலவர்முறையால் மகிழ்ந்தேத்திவலங்கொள்ள *
கானத்தின்கடன்மல்லைத் தலசயனத்துறைகின்ற *
ஞானத்தினொளியுருவை நினைவாரென்நாயகரே. 3

விண்டாரைவென்றாவி விலங்குண்ணமெல்லியலார் *
கொண்டாடுமல்லகலம் அழலேறவெஞ்சமத்து *
கண்டாரை கடன்மல்லைத்தலசயனத்துறைவாரை *
கொண்டாடும்நெஞ்சுடையார் அவரெங்கள்குலதெய்வமே. 4

** பிச்சச்சிறுபீலிச் சமண்குண்டர்முதலாயோர் *
விச்சைக்கிறையென்னும் அவ்விறையைப்பணியாதே *
கச்சிக்கிடந்தவனூர் கடன்மல்லைத்தலசயனம் *
நச்சித்தொழுவாரை நச்சென்றன்நன்னெஞ்சே! 5

புலங்கொள்நிதிக்குவையோடு புழைக்கைம்மாகளிற்றினமும் *
நலங்கொள்நவமணிக்குவையும் சுமந்தெங்குநான்றொசிந்து *
கலங்களியங்கும்மல்லைக் கடன்மல்லைத்தலசயனம் *
வலங்கொள்மனத்தாரவரை வலங்கொள்ளென்மடநெஞ்சே! 6

பஞ்சிச்சிறுகூழை உருவாகிமருவாத *
வஞ்சப்பெண்நஞ்சுண்டவண்ணல் முன்நண்ணாத *
கஞ்சைக்கடந்தவனூர் கடன்மல்லைத்தலசயனம் *
நெஞ்சில்தொழுவாரைத் தொழுவாயென்தூய்நெஞ்சே! 7

செழுநீர்மலர்க்கமலம் திரையுந்துவன்பகட்டால் *
உழுநீர்வயலுழவருழப் பின்முன்பிழைத்தெழுந்த *
கழுநீர்கடிகமழும் கடன்மல்லைத்தலசயனம் *
தொழுநீர்மனத்தவரைத் தொழுவாயென்தூய்நெஞ்சே! 8

பிணங்களிடுகாடதனுள் நடமாடுபிஞ்ஞகனோடு *
இணங்குதிருச்சக்கரத்து எம்பெருமானார்க்கிடம் * விசும்பில்
கணங்களியங்கும்மல்லைக் கடன்மல்லைத்தலசயனம் *
வணங்குமனத்தாரவரை வணங்கென்றன்மடநெஞ்சே! 9

** கடிகமழுநெடுமறுகில் கடன்மல்லைத்தலசயனத்து *
அடிகளடியேநினையும் அடியவர்கள்தம்மடியான் *
வடிகொள்நெடுவேல்வலவன் கலிகன்றியொலிவல்லார் *
முடிகொள்நெடுமன்னவர்தம் முதல்வர்முதலாவாரே. 10

அடிவரவு:—நண்ணாத பார் ஏனத்தின் விண்டாரை பிச்சம் புலம் பஞ்சி செழுநீர் பிணங்கள் கடி திவளும். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

——:——

இரண்டாம்பத்து—ஏழாந்திருமொழி—திவளும்வெண்மதிபோல்.

** திவளும்வெண்மதிபோல்திருமுகத்தரிவை செழுங்கடலமுதினிற்பிறந்த
அவளும்*நின்னாகத்திருப்பதுமறிந்தும் ஆகிலுமாசைவிடாளால் *
குவளையங்கண்ணிகொல்லியம்பாவை சொல்லுநின்தாள்நயந்திருந்த
இவளை*உன்மனத்தாலென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 1

துளம்படுமுறுவல்தோழியர்க்கருளாள் துணைமுலைசாந்துகொண்டணியாள் *
குளம்படுகுவளைக்கண்ணிணையெழுதாள் கோலநன்மலர்குழற்கணியாள் *
வளம்படுமுந்நீர்வையமுன்னளந்த மாலென்னும்மாலினமொழியாள் *
இளம்படியிவளுக்கென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 2

சாந்தமும்பூணும்சந்தனக்குழம்பும் தடமுலைக்கணியிலும்தழலாம் *
போந்தவெண்திங்கள்கதிர்சுடமெலியும் பொருகடல்புலம்பிலும்புலம்பும் *
மாந்தளிர்மேனிவண்ணமும்பொன்னும் வளைகளுமிறையில்லா*என்த
னேந்திழையிவளுக்கென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 3

ஊழியிற்பெரிதால்நாழிகையென்னும் ஒண்சுடர்துயின்றதாலென்னும் *
ஆழியும்புலம்புமன்றிலுமுறங்கா தென்றலும்தீயினிற்கொடிதாம் *
தோழியோவென்னும்துணைமுலையரக்கும் சொல்லுமினென்செய்கேனென்னும் *
ஏழையென்பொன்னுக்கென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 4

ஓதிலுமுன்பேரன்றிமற்றோதாள் உருகுநின்திருவுருநினைந்து *
காதன்மைபெரிதுகையறவுடையள் கயல்நெடுங்கண்டுயில்மறந்தாள் *
பேதையேன்பேதைபிள்ளைமைபெரிது தெள்ளியள்வள்ளிநுண்மருங்குல் *
ஏதலர்முன்னாவென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே. 5

தன்குடிக்கேதும்தக்கவாநினையாள் தடங்கடல்நுடங்கெயிலிலங்கை *
வன்குடிமடங்கவாளமர்தொலைத்த வார்த்தைகேட்டின்புறுமயங்கும் *
மின்கொடிமருங்குல்சுருங்கமேல்நெருங்கி மென்முலைபொன்பயந்திருந்த *
என்கொடியிவளுக்கென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 6

** உளங்கனிந்திருக்குமுன்னையேபிதற்றும் உனக்கன்றியெனக்கன்பொன்றிலளால் *
வளங்கனிபொழில்சூழ்மாலிருஞ்சோலை மாயனேயென்றுவாய்வெருவும் *
களங்கனிமுறுவல்காரிகைபெரிது கவலையோடவலம்சேர்ந்திருந்த *
இளங்கனியிவளுக்கென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 7

** அலங்கெழுதடக்கையாயன்வாயாம்பற்கு அழியுமாலென்னுள்ளமென்னும் *
புலங்கெழுபொருநீர்ப்புட்குழிபாடும் போதுமோநீர்மலைக்கென்னும் *
குலங்கெழுகொல்லிகோமளவல்லி கொடியிடைநெடுமழைக்கண்ணி *
இலங்கெழில்தோளிக்கென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 8

பொன்குலாம்பயலைபூத்தனமென்தோள் பொருகயற்கண்டுயில்மறந்தாள் *
அன்பினாலுன்மேலாதரம்பெரிது இவ்வணங்கினுக்குற்றநோயறியேன் *
மின்குலாமருங்குல்சுருங்கமேல்நெருங்கி வீங்கியவனமுலையாளுக்கு *
என்கொலாம்குறிப்பிலென்னினைந்திருந்தாய் இடவெந்தையெந்தைபிரானே ! 9

** அன்னமுமீனுமாமையுமரியுமாய எம்மாயனேஅருளாய் *
என்னுமின்தொண்டர்க்கின்னருள்புரியும் இடவெந்தையெந்தைபிரானை *

மன்னுமாமாடமங்கையர்தலைவன் மானவேல்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார் நாளும்பழவினைபற்றறுப்பாரே. 10

அடிவரவு :—திவளும் துளம் சாந்தம் ஊழியில் ஓதிலும் தன் உளம் அலம் பொன் முன்னம் திரிபுரம். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

### இரண்டாம்பத்து—எட்டாந்திருமொழி—திரிபுரமூன்றெரித்தானும்.

**திரிபுரமூன்றெரித்தானும் மற்றைமலர்மிசைமேலயனும்வியப்ப *
முரிதிரைமாகடல்போல்முழங்கி மூவுலகும்முறையால்வணங்க *
எரியனகேசரவாளெயிற்றோடு இரணியனாகமிரண்டுகூறா *
அரியுருவாமிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 1

வெந்திறல்வீரரில்வீரரொப்பார் வேதமுரைத்திமையோர்வணங்கும் *
செந்தமிழ்பாடுவார்தாம்வணங்கும் தேவரிவர்கொல்தெரிக்கமாட்டேன் *
வந்துகுறளுருவாய்நிமிர்ந்து மாவலிவேள்வியில்மண்ணளந்த *
அந்தணர்போன்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 2

செம்பொனிலங்குவலங்கைவாளி திண்சிலைதண்டொடுசங்கமொள்வாள் *
உம்பரிருசுடராழியோடு கேடகமொண்மலர்பற்றியெற்றே !*
வெம்புசினத்தடல்வேழம்வீழ வெண்மருப்பொன்றுபறித்து * இருண்ட
வம்புதம்போன்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 3

மஞ்சுயர்மாமணிக்குன்றமேந்தி மாமழைகாத்தொருமாயவானை
யஞ்ச*அதன்மருப்பன்றுவாங்கும் ஆயர்கொல்மாயமறியமாட்டேன் *
வெஞ்சுடராழியும்சங்குமேந்தி வேதமுன்னோதுவர்நீதிவானத்து *
அஞ்சுடர்போன்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 4

**கலைகளும்வேதமும்நீதிநூலும் கற்பமும்சொற்பொருள்தானும்* மற்றை
நிலைகளும்வானவர்க்கும்பிறர்க்கும் நீர்மையினாலருள்செய்து *நீண்ட
மலைகளும்மாமணியும் மலர்மேல்மங்கையும்சங்கமும்தங்குகின்ற *
அலைகடல்போன்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 5

எங்ஙனும்நாமிவர்வண்ணமெண்ணில் ஏதுமறிகிலமேந்திழையார் *
சங்கும்மனமும்நிறைவுமெல்லாம் தம்மனவாகப்புகுந்து*தாமும்
பொங்குகருங்கடல்பூவைகாயா போதவிழ்நீலம்புனைந்தமேகம் *
அங்ஙனம்போன்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 6

முழுசிவண்டாடியதண்டுழாயின் மொய்ம்மலர்க்கண்ணியும்*மேனியஞ்சாந்
திழுசியகோலமிருந்தவாறும் எங்ஙனம்சொல்லுகேனோவிநல்லார் *
எழுதியதாமரையன்னகண்ணும் ஏந்தெழிலாகமும்தோளும்வாயும் *
அழகியதாமிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 7

மேவியெப்பாலும்விண்ணோர்வணங்க வேதமுரைப்பர்முந்நீர்மடந்தை
தேவி*அப்பாலதிர்சங்கமிப்பால்சக்கரம் மற்றிவர்வண்ணமெண்ணில் *
காவியொப்பார்கடலேயுமொப்பார் கண்ணும்வடிவும்நெடியராய்*என்
ஆவியொப்பாரிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 8

தஞ்சமிவர்க்கென்வளையுமில்லா நெஞ்சமும்தம்மதேசிந்தித்தேறகு *
வஞ்சிமருங்குல்நெருங்கநோக்கி வாய்திறந்தொன்றுபணித்ததுண்டு *
நஞ்சமுடைத்திவர்நோக்கும்நோக்கம் நானிவர்தம்மையறியமாட்டேன் *
அஞ்சுவன்மற்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றாரே. 9

**மன்னவன்தொண்டையர்கோன்வணங்கும் நீண்முடிமாலைவயிரமேகன் *
தன்வலிதன்புகழ்சூழ்ந்தகச்சி அட்டபுயகரத்தாதிதன்னை *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன் காமருசீர்க்கலிகன்றி*குன்றா
வின்னிசையால்சொன்னசெஞ்சொல்மாலை ஏத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே. 10

அடிவரவு :—திரி வெந்திறல் செம்பொன் மஞ்சு கலை எங்ஙனும் முழுசி மேவி தஞ்சம் மன்னவன் சொல்லு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

## இரண்டாம்பத்து—ஒன்பதாந்திருமொழி—சொல்லுவன்சொற்பொருள்.

**சொல்லுவன்சொற்பொருள்தானவையாய்ச் சுவையூறொலிநாற்றமும்தோற்றமுமாய் * 1
நல்லரன்நாரணன்நான்முகனுக்கு இடந்தான்தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
பல்லவன்வில்லவனென்றுலகில் பலராய்ப்பலவேந்தர்வணங்குகழற்
பல்லவன்*மல்லையர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே.

கார்மன்னுநீள்விசும்பும் கடலும்சுடரும்நிலனும்மலையும்*தன்னுந்தித்
தார்மன்னுதாமரைக்கண்ணனிடம் தடமாமதிள்சூழ்ந்தழகாயகச்சி *
தேர்மன்னுதென்னவனைமுனையில் செருவில்திறல்வாட்டியதிண்சிலையோன் *
பார்மன்னுபல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 2

**உரந்தருமெல்லணைப்பள்ளிகொண்டான் ஒருகால்முன்னம்மாவுருவாய்க்கடலுள் *
வரந்தருமாமணிவண்ணனிடம் மணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
நிரந்தவர்மண்ணையில்புண்ணுகர்வேல் நெடுவாயிலுகச்செருவில்முனநாள் *
பரந்தவன்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 3

அண்டமுமெண்டிசையும்நிலனும் அலைநீரொடுவானெரிகால்முதலா
வுண்டவன்*எந்தைபிரானதிடம் ஒளிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
விண்டவரிண்டைக்குழாமுடனே விரைந்தாரிரியச்செருவில்முனிந்து *
பண்டொருகால்வளைத்தான்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 4

தூம்புடைத்திண்கைவன்தாள்களிற்றின் துயர்தீர்த்தரவம்வெருவ*முனநாள்
பூம்புனல்பொய்கைபுக்கானவனுக்கு இடந்தான்தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
தேம்பொழில்குன்றெயில்தென்னவனைத் திசைப்பச்செருமேல்வியந்தன்றுசென்ற *
பாம்புடைப்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 5

திண்படைக்கோளரியினுருவாய்த் திறலோனகலம்செருவில்முனநாள் *
புண்படப்போழ்ந்தபிரானதிடம் பொருமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
வெண்குடைநீழல்செங்கோல்நடப்ப விடைவெல்கொடிவேற்படைமுன்னுயர்த்த *
பண்புடைப்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே.

இலகியநீண்முடிமாவலிதன்பெருவேள்வியில் மாணுருவாய்முனநாள் *
சலமொடுமாநிலங்கொண்டவனுக்கு இடந்தான்தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *

உலகுடைமன்னவன்தென்னவனைக் கன்னிமாமதிள்சூழ்கருவூர்வெருவ *
பலபடைசாயவென்றான்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 7

குடைத்திறல்மன்னவனாயொருகால் குரங்கைப்படையா*மலையால்கடலை
யடைத்தவனெந்தைபிரானதிடம் அணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
விடைத்திறல்வில்லவன்நென்மெலியில் வெருவச்செருவேல்வலங்கைப்பிடித்த *
படைத்திறல்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 8

பிறையுடைவாணுதல்பின்னைதிறத்து முன்னேயொருகால்செருவிலுருமின் *
மறையுடைமால்விடையேழடர்த்தாற்கு இடந்தான்தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
கறையுடைவாள்மறமன்னர்கெடக் கடல்போல்முழங்கும்குரல்கடுவாய் *
பறையுடைப்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 9

**பார்மன்னுதொல்புகழ்ப்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகர்மேல் *
கார்மன்னுநீள்வயல்மங்கையர்தம்தலைவன் கலிகன்றிகுன்றாதுரைத்த *
சீர்மன்னுசெந்தமிழ்மாலைவல்லார் திருமாமகள்தன்னருளால் * உலகில்
தேர்மன்னராயொலிமாகடல்சூழ் செழுநீருலகாண்டுதிகழ்வர்களே. 10

அடிவரவு :—சொல்லு கார் உரம் அண்டமும் தூம்பு திண் இலகிய குடை பிறை பார் மஞ்சாடு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

### இரண்டாம்பத்து—பத்தாந்திருமொழி—மஞ்சாடுவரையேழும்.

**மஞ்சாடுவரையெழும்கடல்களேழும் வானகமும்மண்ணகமும்மற்றுமெல்லாம் *
எஞ்சாமல்வயிற்றடக்கியாலின்மேலோர் இளந்தளிரில்கண்வளர்ந்தவீசன்தன்னை *
துஞ்சாநீர்வளஞ்சுரக்கும்பெண்ணைத்தென்பால் தூயநான்மறையாளர்சோமுச்செய்ய *
செஞ்சாலிவிளைவயலுள்திகழ்ந்துதோன்றும் திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 1

கொந்தலர்ந்தநறுந்துழாய்சாந்தந்தூபம் தீபங்கொண்டமரர்தொழப்பணங்கொள்பாம்பில்*
சந்தணிமென்முலைமலராள்தரணிமங்கை தாமிருவரடிவருடுந்தன்மையானை *
வந்தனைசெய்திசையேழாறங்கம் ஐந்துவளர்வேள்விநான்மறைகள்மூன்றுதீயும் *
சிந்தனைசெய்திருபொழுதுமொன்றும் செல்வத்திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 2

கொழுந்தலரும்மலர்ச்சோலைக்குழாங்கொள்பொய்கைக் கோள்முதலைவாளெயிற்றுக்கொண்டற்கெள்கி *
அழுந்தியமாகளிற்றினுக்கன்றாழியேந்தி அந்தரமேவரத்தோன்றியருள்செய்தானை *
எழுந்தமலர்க்கருநீலமிருந்தில்காட்ட இரும்புன்னைமுத்தரும்பிச்செம்பொன்காட்ட *
செழுந்தடநீர்க்கமலம்தீவிகைபோல்காட்டும் திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 3

தாங்கரும்போர்மாலிபடப்பறவையூர்ந்து தராதலத்தோர்குறைமுடித்ததன்மையானை *
ஆங்கரும்பிக்கண்ணீர்சோர்ந்தன்புகூரும் அடியவர்கட்காரமுதமானான்தன்னை *
கோங்கரும்புசுரபுன்னைகுரவார்சோலைக் குழாவரிவண்டிசைபாடும்பாடல்கேட்டு *
தீங்கரும்புகண்வளருங்கழனிசூழ்ந்த திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 4

கறைவளர்வேல்கரன்முதலாக்கவந்தன்வாலி கணையொன்றினால்மடியவிலங்கைதன்னுள் *
பிறையெயிற்றுவாளரக்கர்சேனையெல்லாம் பெருந்தகையோடுடன்துணித்தபெம்மான்தன்னை *
மறைவளரப்புகழ்வளரமாடந்தோறும் மண்டபமொண்டொளியனைத்தும்வாரமோத *
சிறையணைந்தபொழிலணைந்ததென்றல்வீசும் திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 5

உறியார்ந்தநறுவெண்ணெயொளியால்சென்று அங்குண்டானைக்கண்டாய்ச்சியுரலோ
தறியார்ந்தகருங்களிறேபோலநின்று தடங்கண்கள்பனிமல்குந்தன்மையானை * [டார்க்க *
வெறியார்ந்தமலர்மகள்நாமங்கையோடு வியன்கலையெண்டோளினுள்விளங்கு * செல்வச்
செறியார்ந்தமணிமாடந்திகழ்ந்துதோன்றும் திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே.

இருங்கைம்மாகரிமுனிந்துபரியைக்கீறி இனவிடைகளேழடர்த்துமருதஞ்சாய்த்து *
வருஞ்சகடமிறவுதைத்துமல்லையட்டு வஞ்சம்செய்கஞ்சனுக்குநஞ்சானானை *
கருங்கமுகுபசும்பாளைவெண்மூத்தீன்று காயெல்லாம்மரதகமாய்ப்பவளங்காட்ட *
செருந்திமிகமொட்டலர்த்தும்தேன்கொள்சோலைத் திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 7

பாரேறுபெரும்பாரம்தீரப் பண்டுபாரதத்துத்தூதியங்கி * பார்த்தன்செல்வத்
தேரேறுசாரதியாயெதிர்ந்தார்சேனை செருக்களத்துத்திறலழியச்செற்றான்தன்னை *
போரேறொன்றுடையானுமளகைக்கோனும் புரந்தரனும்நான்முகனும்பொருந்துமூர்
சீரேறுமறையாளர்நிறைந்த செல்வத்திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 8 [போல்*

தூவடிவிற்பார்மகள்பூமங்கையோடு சுடராழிசங்கிருபால்பொலிந்துதோன்ற *
காவடிவிற்கற்பகமேபோலநின்று கலந்தவர்கட்கருள்புரியுங்கருத்தினானை *
சேவடிகைதிருவாய்கண்சிவந்தவாடை செம்பொன்செய்திருவுருவமானான்தன்னை *
தீவடிவிற்சிவனயனேபோல்வார்மன்னு திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. 9

**வாரணங்கொளிடர்கடிந்தமாலை நீலமரதகத்தைமழைமுகிலேபோல்வான்தன்னை *
சீரணங்குமறையாளர்நிறைந்த செல்வத்திருக்கோவலூரதனுள்கண்டேனென்று *
வாரணங்குமுலைமடவார்மங்கைவேந்தன் வாட்கலியனொலியைந்துமைந்தும்வல்லார் *
காரணங்களாலுலகம்கலந்தங்கேத்தக் கரந்தெங்கும்பரந்தானைக்காண்பர்தாமே. 10

அடிவரவு:—மஞ்சு கொந்து கொழுந்து தாங்கு கறை யுறி இருங்கை பார் தூவடிவின் வாரணம் இருந்தண். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

### மூன்றாம்பத்து—முதல்திருமொழி—இருந்தண்மாநிலம்.

** இருந்தண்மாநிலமேனமதாய் வளைமருப்பினிலகத்தொடுக்கி *
கருந்தண்மாகடல்கண்டுயின்றவனிடம் கமலநன்மலர்த்தேற
லருந்தி* இன்னிசைமுரன்றெழுமளிகுலம்பொதுளி அம்பொழிலூடே *
செருந்திநாண்மலர்சென்றணைந்துழிதரு திருவயிந்திரபுரமே. 1

மின்னுமாழியங்கையவன் செய்யவளுறைதருதிருமார்பன் *
பன்னுநான்மறைப்பல்பொருளாகிய பரனிடம்வரைச்சாரல் *
பின்னுமாதவிப்பந்தலில்பெடைவரப் பிணியவிழ்கமலத்து *
தென்னவென்றுவண்டின்னிசைமுரல்தரு திருவயிந்திரபுரமே. 2

வையமேழுமுண்டாலிலை வைகியமாயவன்*அடியவர்க்கு
மெய்யனாகியதெய்வநாயகனிடம் மெய்தகுவரைச்சாரல் *
மொய்கொள்மாதவிசண்பகம்முயங்கிய முல்லையங்கொடியாட *
செய்யதாமரைச்செழும்பணைதிகழ்தரு திருவயிந்திரபுரமே. 3

மாறுகொண்டுடன்றெதிர்ந்தவல்லவுணன்றன் மார்பகமிருபிளவா *
கூறுகொண்டவன்குலமகற்கு இன்னருள்கொடுத்தவனிடம்*மிடை

சாறுகொண்டமென்கரும்பிளங்கழைதகை விசும்புறமணிநீழல் *
சேறுகொண்டதண்பழனமதெழில்திகழ் திருவயிந்திரபுரமே. 4

ஆங்குமாவலிவேள்வியிலிரந்துசென்று அகலிடமளந்து-*ஆயர்
பூங்கொடிக்கினவிடைபொருதவனிடம் பொன்மலர்திகழ் * வேங்கை
கோங்குசெண்பகக்கொம்பினில் குதிகொடுகுரக்கினமிரைத்தோடி *
தேன்கலந்ததண்பலங்கனிநுகர்தரு திருவயிந்திரபுரமே. 5

கூனுலாவியமடந்தைதன் கொடுஞ்சொலின்திறத்திளங்கொடியோடும் *
கானுலாவியகருமுகில்திருநிறத்தவனிடம் ; கவின்னரும் *
வானுலாவியமதிதவழ்மால்வரை மாமதிள்புடைசூழ *
தேனுலாவியசெழும்பொழில்தழுவிய திருவயிந்திரபுரமே. 6

மின்னில்நுண்ணிடைமடக்கொடிகாரணம் விலங்கலின்மிசையிலங்கை
மன்னன் * நீண்முடிபொடிசெய்தமைந்தனதிடம் ; மணிவரைநீழல் *
அன்னமாமலரரவிந்தத்தமளியில் பெடையொடுமினிதமர *
செங்நெலார்கவரிக்குலைவீசு தண்திருவயிந்திரபுரமே. 7

விரைகமழ்ந்தமென்கருங்குழல்காரணம் வில்லிறுத்தடல்மழைக்கு *
நிரைகலங்கிடவரைகுடையெடுத்தவன் நிலவியவிடம்தடமார் *
வரைவளந்திகழ்மதகரிமருப்பொடு மலைவளரகிலுந்தி *
திரைகொணர்ந்தணைசெழுநதிவயல்புகு திருவயிந்திரபுரமே. 8

வேல்கொள்கைத்தலத்தரசர்வெம்போரினில் விசயனுக்காய் * மணித்தேர்க்
கோல்கொள்கைத்தலத்தெந்தைபெம்மானிடம் ; குலவுதண்வரைச்சாரல் *
கால்கொள்கண்கொடிக்கையெழக் கமுகிளம்பாளைகள்கமழ்சாரல் *
சேல்கள்பாய்தருசெழுநதிவயல்புகு திருவயிந்திரபுரமே. 9

** மூவராகியவொருவனை மூவுலகுண்டுமிழ்ந்தளந்தானை *
தேவர்தானவர்சென்றுசென்றிறைஞ்சத் தண்திருவயிந்திரபுரத்து *
மேவுசோதியைவேல்வலவன் கலிகன்றிவிரித்துரைத்த *
பாவுதண்டமிழ்பத்திவைபாடிடப் பாவங்கள்பயிலாவே. 10

அடிவரவு :—இருந்தண் மின்வையம் மாருங்கு கூன் மின் விரை வேல் மூவ ரூன்.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

மூன்றும்பத்து—இரண்டாந்திருமொழி—ஊன்வாட.

** ஊன்வாடவுண்ணாதுயிர்காவலிட்டு உடலிற்பிரியாப்புலனைந்தும்நொந்து *
தாம்வாடவாடத்தவம்செய்யவேண்டா தமதாவிமையோருலகாளகிற்பீர் *
கானுடமஞ்ஞைக்கணமாடமாடே கயலாடுகானீர்ப்பழனம்புடைபோய் *
தேனுடமாடக்கொடியாடு தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 1

காயோடுநீடுகனியுண்டுவீசு கடுங்கால்நுகர்ந்துநெடுங்காலம் * ஐந்து
தீயோடுநின்றுதவஞ்செய்யவேண்டா திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர் *
வாயோதுவேதம்மலிகின்றதொல்சீர் மறையாளர்நாளும்முறையால்வளர்த்த *
தீயோங்கவோங்கப்புகழோங்கு தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 2

வெம்பும்சினத்துப்புனக்கேழலொன்றாய் விரிநீர்முதுவெள்ளமுள்புக்கழுந்த *
வம்புண்பொழில்சூழுலகன்றெடுத்தான் அடிப்போதணைவான்விருப்போடிருப்பீர் *
பைம்பொன்னுமுத்தும்மணியும்கொணர்ந்து படைமன்னவன்பல்லவர்கோன்பணிந்த *
செம்பொன்மணிமாடங்கள்சூழ்ந்த தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 3

அருமாநிலமன்றளப்பான்குறளாய் அவுணன்பெருவேள்வியில்சென்றிரந்த *
பெருமான்திருநாமம்பிதற்றி நுந்தம்பிறவித்துயர்நீங்குதுமென்னகிற்பீர் *
கருமாகடலுள்கிடந்தானுவந்து கவைநாவரவினணைப்பள்ளியின்மேல் *
திருமால்திருமங்கையோடாடு தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 4

கோமங்கவங்கக்கடல்வையமுய்யக் குலமன்னரங்கம்மழுவில்துணிய *
தாமங்கமருள்படைதொட்டவென்றித் தவமாமுனியைத்தமக்காக்ககிற்பீர் *
பூமங்கைதங்கிப்புலமங்கைமன்னிப் புகழ்மங்கையெங்கும்திகழப்புகழ்சேர் *
சேமங்கொள்பைம்பூம்பொழில்சூழ்ந்த தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 5

நெய்வாயழலம்புதுரந்து முந்நீர்துணியப்பணிகொண்டணியார்ந்து-* இலங்கு
மையார்வணிவண்ணனையெண்ணி நுந்தம்மனத்தேயிருத்தும்படிவாழவல்லீர் *
அவ்வாயிளமங்கையர்பேசவுந்தான் அருமாமறையந்தணர்சிந்தைபுக *
செவ்வாய்க்கிளிநான்மறைபாடு தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 6

மௌவல்குழலாய்ச்சிமென்தோள்நயந்து மகரஞ்சுழலச்சுழல்நீர்பயந்த *
தெய்வத்திருமாமலர்மங்கைதங்கு திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர் *
கௌவைக்களிற்றின்மருப்பும்பொருப்பில் கமழ்சந்துமுந்திநிவாவலங்கொள் *
தெய்வப்புனல்சூழ்ந்தழகாய தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 7

மாவாயினங்கம்மதியாதுகீறி மழைமாமுதுகுன்றெடுத்து-* ஆயர்தங்கள்
கோவாய்நிரைமேய்த்துலகுண்டமாயன் குரைமாகழல்கூடும்குறிப்புடையீர் *
மூவாயிரநான்மறையாளர்நாளும் முறையால்வணங்கஅணங்காயசோதி *
தேவாதிதேவன்திகழ்கின்ற தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 8

செருநீலவேற்கண்மடவார்திறத்துச் சினத்தோடுநின்றுமனத்தால்வளர்க்கும் *
அருநீல்பாவமகலப்புகழ்சேர் அமரர்க்குமெய்தாதவண்டத்திருப்பீர் *
பெருநீர்நிவாவுந்திமுத்தங்கொணர்ந்து எங்கும்வித்தும்வயலுள்கயல்பாய்ந்துகள *
திருநீலநின்றுதிகழ்கின்ற தில்லைத்திருச்சித்ரகூடம்சென்றுசேர்மின்களே. 9

** சீரார்பொழில்சூழ்ந்தழகாய தில்லைத்திருச்சித்ரகூடத்துறைசெங்கண்மாலுக்கு-*
ஆராதவுள்ளத்தவர்கேட்டுவப்ப அலைநீருலகுக்கருளேபுரியும் *
காரார்புயற்கைக்கலிகன்றி குன்றாவொலிமாலையோரொன்பதோடொன்றும்வல்லார் *
பாராருலகமளந்தானடிக்கீழ்ப் பலகாலம்நிற்கும்படிவாழ்வர்தாமே. 10

அடிவரவு :—ஊன் காய் வெம்பருமா கோமங்க நெய்மௌவல் மாவாய் செருச்சீரார்வாட.
ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

**மூன்றும்பத்து—மூன்றுந்திருமொழி—வாடமருதிடை.**

**வாடமருதிடைபோகி மல்லரைக்கொன்றொக்கலித்திட்டு-*
ஆடல்நன்மாவுடைத்து ஆயராநிரைக்கன்றிடர்தீர்ப்பான்*
கூடியமாமழைகாத்த கூத்தனெனவருகின்றான்*
சேடுயர்பூம்பொழில்தில்லைச் சித்திரகூடத்துள்ளானே. 1

பேய்மகள்கொங்கைநஞ்சுண்ட பிள்ளைபரிசிதுவென்றால்*
மாநிலமாமகள் மாதர்கேள்வனிவனென்றும்*வண்டுண்
பூமகள்நாயகனென்றும் புலங்கெழுகோவியர்பாடி.*
தேமலர்தூவவருவான் சித்திரகூடத்துள்ளானே. 2

பண்டிவன்வெண்ணெயுண்டானென்று ஆய்ச்சியர்கூடியிழிப்ப*
எண்டிசையோரும்வணங்க இணைமருதூடுநடந்திட்டு-*
அண்டரும்வானத்தவரும் ஆயிரநாமங்களோடு*
திண்டிறல்பாடவருவான் சித்திரகூடத்துள்ளானே. 3

வளைக்கைநெடுங்கண்மடவார் ஆய்ச்சியரஞ்சியழைப்ப*
தளைத்தவிழ்தாமரைப்பொய்கைத் தண்தடம்புக்கண்டர்காண*
முளைத்தவெயிற்றழல்நாகத்து உச்சியில்நின்றதுவாட*
திளைத்தமர்செய்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. 4

பருவக்கருமுகிலொத்து முத்துடைமாகடலொத்து-*
அருவித்திரள்திகழ்கின்ற ஆயிரம்பொன்மலையொத்து-*
உருவக்கருங்குழலாய்ச்சிதிறத்து இனமால்விடைசெற்று*
தெருவில்திளைத்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. 5

**எய்யச்சிதைந்ததிலங்கைமலங்க வருமழைகாப்பான்*
உய்யப்பருவரைதாங்கி ஆநிரைகாத்தானென்றேத்தி*
வையத்தெவரும்வணங்க அணங்கெழுமாமலைபோலே*
தெய்வப்புள்ளேறிவருவான் சித்திரகூடத்துள்ளானே. 6

ஆவரிவைசெய்தறிவார் அஞ்சனமாமலைபோலே*
மேவுசினத்தடல்வேழம் வீழமுனிந்து-*அழகாய
காவிமலர்நெடுங்கண்ணார் கைதொழவீதிவருவான்*
தேவர்வணங்குதண்தில்லைச் சித்திரகூடத்துள்ளானே. 7

பொங்கியமரிலொருகால் பொன்பெயரோனைவெருவ*
அங்கவனாகமளைந்திட்டு ஆயிரந்தோளெழுந்தாட*
பைங்கணிரண்டெரிகான்ற நீண்டவெயிற்றொடுபேழ்வாய்*
சிங்கவுருவில்வருவான் சித்திரகூடத்துள்ளானே. 8

**கருமுகில்போல்வதோர்மேனி கையனவாழியும்சங்கும்*
பெருவிறல்வானவர்சூழ ஏழுலகும்தொழுதேத்த*
ஒருமகளாயர்மடந்தை ஒருத்திநிலமகள்*மற்றைத்
திருமகளோடும்வருவான் சித்திரகூடத்துள்ளானே. 9

**தேனமர்பூம்பொழில்தில்லைச் சித்திரகூடமமர்ந்த*
வானவர்தங்கள்பிரானை மங்கையர்கோன்மருவார்*
ஊனமர்வேல்கலிகன்றி ஒண்டமிழொன்பதோடொன்றும்*
தானிவைகற்றுவல்லார்மேல் சாராதீவினைதானே. 10

**அடிவரவு** :—வாடப் பேய் பண்டு வளை பரு எய்ய ஆவர் பொங்கிக் கருமுகில் தேனமர் ஒருகுறள். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

**மூன்றும்பத்து—நான்காந்திருமொழி—ஒருகுறளாய்.**

**ஒருகுறளாயிருநிலம்மூவடிமண்வேண்டி உலகனைத்துமீரடியாலொடுக்கி*ஒன்றும்
தருகவெனுமாவலியைச்சிறையில்வைத்த தாடாளன்தாளணைவீர்* தக்ககீர்த்தி
யருமறையின்திரள்நான்கும்வேள்வியைந்தும் அங்கங்களவையாறுமிசைகளேழும்*
தெருவில்மலிவிழாவளமும்சிறக்கும் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே.

நான்முகனுள்மிகைத்தருக்கையிருக்குவாய்மை நலமிகுசீருரோமசனால்நவிற்றி*நக்க
னூன்முகமார்தலையோட்டூணொழித்தவெந்தை யொளிமலர்ச்சேவடியணைவீர்*உழுசேயோடச்
சூன்முகமார்வளையளைவாயுகுத்தமுத்தைத் தொல்குருகுசினையெனச்சூழ்ந்தியங்க*எங்கும்
தேன்முகமார்கமலவயல்சேல்பாய் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே. 2

வையணைந்தநுதிக்கோட்டுவராகமொன்றாய் மண்ணெல்லாமிடந்தெடுத்துமதங்கள்செய்து*
நெய்யணைந்ததிகிரியினால்வாணன்திண்டோள் நேர்ந்தவன்தாளணைகிற்பீர்*நெய்தலோடு
மையணைந்தகுவளைகள்தங்கண்களென்றும் மலர்க்குமுதம்வாயென்றும்கடைசிமார்கள்*
செய்யணைந்துகளைகளையாதேறும் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே. 3

பஞ்சியமெல்லடிப்பின்னைதிறத்து முன்னாள்பாய்விடைகளேழடர்த்துப்பொன்னன்பைம்பூண்*
நெஞ்சிடந்துகுருதியுகவுகிர்வேலாண்ட நின்மலன்தாளணைகிற்பீர்*நீலமாலைத்
தஞ்சுடையவிருள்தழைப்பத்தரளமாங்கே தண்மதியின்நிலாக்காட்டப்பவளந்தன்னால்*
செஞ்சுடர்வெயில்விரிக்குமழகார் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே. 4

தெவ்வாயமறமன்னர்குருதிகொண்டு திருக்குலத்திலிறந்தோர்க்குத்திருத்திசெய்து*
வெவ்வாயமாகீண்டுவேழமட்ட விண்ணவர்கோன்தாளணைவீர்*விகிர்தமாத
ரவ்வாயவாள்நெடுங்கண்குவளைகாட்ட அரவிந்தம்முகங்காட்டஅருகேயாம்பல்*
செவ்வாயின்திரள்காட்டும்வயல்சூழ் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே. 5

பைங்கண்விறல்செம்முகத்துவாலிமாளப் படர்வனத்துக்கவந்தனொடும்படையார்திண்கை*
வெங்கண்விறல்விராதனுகவிற்குனித்த விண்ணவர்கோன்தாளணைவீர் * வெற்புப்போலும்
துங்கமுகமாளிகைமேலாயங்கூறும் துடியிடையார் முகக்கமலச்சோதிதன்னால்*
திங்கள்முகம்பனிபடைக்குமழகார் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே.

பொருவில்வலம்புரியரக்கன்முடிகள்பத்தும் புற்றுமறிந்தனபோலப்புவிமேல்சிந்த*
செருவில்வலம்புரிசிலைக்கைமலைத்தோள்வேந்தன் திருவடிசேர்ந்துய்கிற்பீர்*திரைநீர்த்தெள்கி
மருவிவலம்புரிகைதைக்கழியூடாடி வயல்நண்ணிமழைதருநீர்த்தவழ்கால்மன்னி*
தெருவில்வலம்புரிதரளமீனும் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே. 7

பட்டரவேரகலல்குல்பவளச்செவ்வாய்ப் பணைநெடுந்தோள்பிணைநெடுங்கண்பாலாமின்சொல்*
மட்டவிழுங்குழலிக்காவானோர்காவில் மரங்கொணர்ந்தானடியணைவீர்*அணில்கள்தாவ
நெட்டிலையகருங்கமுகின்செங்காய்வீழ நீள்பலவின் தாழ்சினையில்நெருங்கு*பீனத்
தெட்டபழம்சிதைந்துமதுச்சொரியும் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே. 8

பிறைதங்குசடையானைவலத்தேவைத்துப் பிரமனைத்தன்னுந்தியிலேதோற்றுவித்து*
கறைதங்குவேல்தடங்கண் திருவைமார்பில் கலந்தவன்தாளணைகிற்பீர்*கழுநீர்கூடித்
துறைதங்குகமலத்துத்துயின்று கைதைத்தோடாரும்பொதிசோற்றுச்சுண்ணம்நண்ணி *
சிறைவண்டுகளிபாடும்வயல்சூழ் காழிச்சீராமவிண்ணகரேசேர்மினீரே. 9

**செங்கமலத்தயனனையமறையோர் காழிச்சீராமவிண்ணகரென்செங்கண்மாலை*
அங்கமலத்தடவயல்சூழாலிநாடன் அருள்மாரியரட்டமுக்கியடையார்சீயம்*

கொங்குமலர்க்குழலியர்வேள்மங்கைவேந்தன் கொற்றவேல்பரகாலன்கலியன்சொன்ன*
சங்கமுகத்தமிழ்மாலைபத்தும்வல்லார் தடங்கடல்சூழுலகுக்குத்தலைவர்தாமே. 10

அடிவரவு:—ஒரு நான் வை பஞ்சி தெவ்வாய பைங்கண் பொருபட்டு பிறை செங்கமலம் வந்து. ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

—:—

மூன்ரும்பத்து—ஐந்தாந்திருமொழி—வந்துனதடியேன்.

**வந்துனதடியேன்மனம்புகுந்தாய் புகுந்ததற்பின்வணங்கும்*என்
சிந்தனைக்கினியாய் திருவேயென்னுருயிரே*
அந்தளிரணியார் அசோகினிளந்தளிர்கள்கலந்து*அவையெங்கும்
செந்தழல்புரையும் திருவாலியம்மானே. 1

நீலத்தடவரை மாமணிநிகழக்கிடந்ததுபோல்*அரவணை
வேலைத்தலைக்கிடந்தாய் அடியேன்மனத்திருந்தாய்*
சோலைத்தலைக்கணமாமயில்நடமாட மழைமுகில்போன்றெழுந்து-எங்கும்
ஆலைப்புகைகமழும் அணியாலியம்மானே. 2

நென்னல்போய்வருமென்றென்றெண்ணியிராமை யென்மனத்தேபுகுந்தது*
இம்மைக்கென்றிருந்தேன் எறிநீர்வளஞ்செறுவில்*
செங்கெற்கூழைவரம்பொரீஇ அரிவார்முகத்தெழுவாளைபோய்*கரும்பு-
அந்நற்காடணையும் அணியாலியம்மானே. 3

மின்னில்மன்னுநுடங்கிடை மடவார்தம்சிந்தைமறந்துவந்து*நின்
மன்னுசேவடிக்கே மறவாமைவைத்தாயால்*
புன்னைமன்னுசெருந்தி வண்பொழில்வாயகன்பணைகள்கலந்து*எங்கும்
அன்னமன்னும்வயல் அணியாலியம்மானே. 4

நீடுபன்மலர்மாலையிட்டு நின்னிணையடிதொழுதேத்தும்*என்மனம்
வாடநீநினையேல் மரமெய்தமாமுனிவா*
பாடலின்னொலிசங்கினோசை பரந்து பல்பணையால்மலிந்து*எங்கும்
ஆடலோசையறு அணியாலியம்மானே. 5

கந்தமாமலரெட்டுமிட்டு நின்காமர்சேவடிகைதொழுதெழும்*
புந்தியேன்மனத்தே புகுந்தாயைப்போகலொட்டேன்*
சந்திவேள்விசடங்குநான்மறை ஓதியோதுவித்தாதியாய்வரும்*
அந்தணாளரறு அணியாலியம்மானே. 6

உலவுதிரைக்கடற்பள்ளிகொண்டுவந்து உன்னடியேன்மனம்புகுந்த*அப்
புலவபுண்ணியனே புகுந்தாயைப்போகலொட்டேன்*
நிலவுமலர்ப்புன்னைநாழல்நீழல் தண்டாமரைமலரின்மிசை* மலி
அலவன்கண்படுக்கும் அணியாலியம்மானே. 7

சங்குதங்குதடங்கடல் கடன்மல்லையுள்கிடந்தாய்*அருள்புரிந்
திங்கென்னுள்புகுந்தாய் இனிப்போயினுலறையோ*
கொங்குசெண்பகமல்லிகைமலர்புல்கி யின்னிளவண்டுபோய்*இளம்
தெங்கின்தாதளையும் திருவாலியம்மானே. 8

ஓதியாயிரநாமமும்பணிந்தேத்தி நின்னடைந்தேற்கு-*ஒருபொருள்
வேதியாஅரையா உரையாயொருமாற்றமெந்தாய்*
நீதியாகியவேதமாமுனியாளர் தோற்றமுரைத்து*மற்றவர்க்
காதியாயிருந்தாய் அணியாலியம்மானே. 9

**புல்லிவண்டறையும்பொழில்புடைசூழ் தென்னாலியிருந்தமாயனை*
கல்லின்மன்னுதிண்டோள் கலியனொலிசெய்த*
நல்லவின்னிசைமாலை நாலுமோரைந்துமொன்றும்நவின்றுதாம்*உடன்
வல்லராயுரைப்பார்க்கு இடமாகும்வானுலகே. 10

அடிவரவு:—வந்து நீலநென்னெல் மின்னில் நீடு கந்த முலவு சங்கு ஓதி புல்லி தூவிரி.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

மூன்றும்பத்து—ஆறுந்திருமொழி—தூவிரிய.

**தூவிரியமலருழக்கித் துணையோடும்பிரியாதே*
பூவிரியமதுநுகரும் பொறிவரியசிறுவண்டே*
தீவிரியமறைவளர்க்கும் புகழாளர்திருவாலி
ஏவரிவெஞ்சிலையானுக்கு என்னிலைமையுரையாயே. 1

பிணியவிழுநறுநீல மலர்கிழியப்பெடையோடும்*
அணிமலர்மேல்மதுநுகரும் அறுகாலசிறுவண்டே*
மணிகெழுநீர்மருங்கலரும் வயலாலிமணவாளன்*
பணியறியேன்நீசென்று என்பயலைநோயுரையாயே. 2

நீர்வானம்மண்ணெரிகாலாய் நின்றநெடுமால்*தன்
தாராயநறுந்துளவம் பெருந்தகையேற்கருளானே*
சீராரும்வளர்பொழில்சூழ் திருவாலிவயல்வாழும்*
கூர்வாயசிறுகுருகே குறிப்பறிந்துகூறாயே.

தானாகநினையானேல் தன்னினைந்துநைவேற்கு-*ஓர்
மீனாயகொடிநெடுவேள் வலிசெய்யமெலிவேனோ*
தேன்வாயவரிவண்டே திருவாலிநகராளும்*
ஆனாயற்கென்னுறுநோய் அறியசென்றுரையாயே. 4

வாளாயகண்பனிப்ப மென்முலைகள்பொன்னரும்ப*
நாணாளும் நின்னினைந்துநைவேற்கு-*ஓமண்ணளந்த
தாளாளா தண்குடந்தைநகராளா வரையெடுத்த
தோளாளா*என்றனக்கோர்துணையாளனாகாயே. 5

தாராயதண்டுளவ வண்டுழுதவரைமார்பன்*
போரானைக்கொம்பொசித்த புட்பாகனென்னம்மான்*
தேராரும்நெடுவீதித் திருவாலிநகராளும்*
காராயனென்னுடைய கனவளையுங்கவர்வானோ. 6

கொண்டரவத்திரையுலவு குரைகடல்மேல்குலவரைபோல்*
பண்டரவினணைக்கிடந்து பாரளந்தபண்பாளா*

வண்டமரும்வளர்பொழில்சூழ் வயலாலிமைந்தா*என்
கண்டுயில்நீகொண்டாய்க்கு என்கனவளையும்கடவேனே. 7

குயிலாலும்வளர்பொழில்சூழ் தண்குடந்தைக்குடமாடி*
துயிலாதகண்ணிணையேன் நின்னினைந்துதுயர்வேனே*
முயலாலுமிளமதிக்கே வளையிழந்தேற்கு-*இதுநடுவே
வயலாலிமணவாளா கொள்வாயோமணிநிறமே. 8

நிலையாளாநின்வணங்க வேண்டாயேயாயினும்*என்
முலையாளவொருநாள் உன்னகலத்தாலாளாயே*
சிலையாளாமரமெய்ததிறலாளா திருமெய்ய
மலையாளா*நீயாளவளையாளமாட்டோமே. 9

**மையிலங்குகருங்குவளை மருங்கலரும்வயலாலி*
நெய்யிலங்குசுடராழிப்படையானை நெடுமாலை*
கையிலங்குவேல்கலியன் கண்டுரைத்ததமிழ்மாலை*
ஐயிரண்டுமிவைவல்லார்க்கு அருவினைகளடையாவே. 10

அடிவரவு :—தூவிரிய பிணி நீர் தான் வாள் தாராய கொண்டு குயில் நிலை மையிலங்கு கள்வன். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

### மூன்றும்பத்து—ஏழாந்திருமொழி— கள்வன்கொல்.

**கள்வன்கொல்யானறியேன் கரியானொருகாளைவந்து*
வள்ளிமருங்குலென்றன் மடமானினைப்போதவென்று*
வெள்ளிவளைக்கைபற்றப் பெற்றதாயரையிட்டகன்று-*
அள்ளலம்பூங்கழனி அணியாலிபுகுவர்கொலோ. 1

பண்டிவனாயன்நங்காய் படிறன்புகுந்து*-என்மகள்தன்
தொண்டையஞ்செங்கனிவாய் நுகர்ந்தானையுகந்து*-அவன்பின்
கெண்டையொண்கண்மிளிரக் கிளிபோல்மிழற்றிநடந்து*
வண்டமர்கானல்மல்கும் வயலாலிபுகுவர்கொலோ. 2

அஞ்சுவன்வெஞ்சொல்நங்காய் அரக்கர்குலப்பாவைதன்னை*
வெஞ்சினமூக்கரிந்த விறலோன்திறங்கேட்கில்மெய்யே*
பஞ்சியமெல்லடி யெம்பணைத்தோளிபரக்கழிந்து*
வஞ்சியந்தண்பணைசூழ் வயலாலிபுகுவர்கொலோ. 3

ஏதவன்தொல்பிறப்பு இளையவன்வளையூதி*மன்னர்
தூதுவனாயவனூர் சொல்வீர்கள்சொல்லீரறியேன்*
மாதவன்தன்துணையாநடந்தாள் தடஞ்சூழ்புறவில்*
போதுவண்டாடுசெம்மல் புனலாலிபுகுவர்கொலோ. 4

தாயெனையென்றிரங்காள் தடந்தோளிதனக்கமைந்த*
மாயனைமாதவனை மதித்தென்னையகன்றவிவள்*
வேயனதோள்விசிறிப் பெடையன்னமெனநடந்து*
போயினபூங்கொடியாள் புனலாலிபுகுவர்கொலோ. 5

**என்துணையென்றெடுத்தேற்கு இறையேனுமிரங்கிற்றிலள்*
தன்துணையாயவென்றன் தனிமைக்குமிரங்கிற்றிலள்*
வன்துணைவானவர்க்காய் வரஞ்செற்றரங்கத்துறையும்*
இன்துணைவனொடும்போய் எழிலாலிபுகுவர்கொலோ. 6

அன்னையுமத்தனுமென்று அடியோமுக்கிரங்கிற்றிலள்*
பின்னைதன்காதலன்தன் பெருந்தோள்நலம்பேணினளால்*
மின்னையும்வஞ்சியையும் வென்றிலங்குமிடையாள்நடந்து*
புன்னையுமன்னமுஞ்சூழ் புனலாலிபுகுவர்கொலோ. 7

முற்றிலும்பைங்கிளியும் பந்துமூசலும்*பேசுகின்ற
சிற்றில்மென்பூவையும் விட்டகன்றசெழுங்கோதைதன்னை*
பெற்றிலேன்முற்றிழையைப் பிறப்பிலிபின்னேநடந்து*
மற்றெல்லாம்கைதொழப்போய் வயலாலிபுகுவர்கொலோ. 8

காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப்பாவையொப்பாள்*
பாவியேன்பெற்றமையால் பணைத்தோளிபரக்கழிந்து*
தூவிசேரன்னமன்னநடையாள் நெடுமாலொடும்போய்*
வாவியந்தண்பணைசூழ் வயலாலிபுகுவர்கொலோ. 9

**தாய்மனம்நின்றிரங்கத் தனியேநெடுமால்துணையா*
போயினபூங்கொடியாள் புனலாலிபுகுவரென்று*
காய்சினவேல்கலியன் ஒலிசெய்தமிழ்மாலைபத்தும்*
மேவியநெஞ்சுடையார் தஞ்சமாவதுவிண்ணுலகே. 10

அடிவரவு :—கள்வன் பண்டஞ்சுவன் ஏதவன்தாய் என்துணை அன்னை முற்றில் காவி தாய் மனம் நந்தா. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

———:———

### மூன்றாம்பத்து—எட்டாந்திருமொழி—நந்தாவிளக்கே.

**நந்தாவிளக்கேயளத்தற்கரியாய் நரநாரணனேகருமாமுகில்போல்
எந்தாய்*எமக்கேயருளாயெனநின்று இமையோர்பரவுமிடம்*எத்திசையும்
கந்தாரமந்தேனிசைபாடமாடே களிவண்டுமிழற்றநிழல்துதைந்து*
மந்தாரநின்றுமணமல்குநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 1

முதலைத்தனிமாமுரண்தீரவன்று முதுநீர்த்தடத்துச்செங்கண்வேழமுய்ய*
விதலைத்தலைச்சென்றதற்கேயுதவி வினைதீர்த்தவம்மானிடம்*விண்ணணவும்
பதலைக்கபோதத்தொளிமாடநெற்றிப் பவளக்கொழுங்காலபைங்கால்புறவம்*
மதலைத்தலைமென்பெடைகூடுநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 2

கொலைப்புண்தலைக்குன்றமொன்றுய்ய அன்றுகொடுமாமுதலைக்கிடர்செய்து*கொங்கார்
இலைப்புண்டரீகத்தவளின்பமன்போடு அணைந்திட்டவம்மானிடம்*ஆளரியால்
அலைப்புண்டயானைமருப்புமகிலும் அணிமுத்தும்வெண்சாமரையோடு*பொன்னி
மலைப்பண்டமண்டத்திரையுந்துநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 3

சிறையாருவணப்புள்ளொன்றேறி அன்றுதிசைநான்குநான்குமிரிய*செருவில்
கறையார்நெடுவேலரக்கர்மடியக் கடல்சூழிலங்கைகடந்தானிடந்தான்*

முறையால்வளர்க்கின்றமுத்தீயர்நால்வேதர் ஐவேள்வியாறங்கரேழினிசையோர் *
மறையோர்வணங்கப்புகழெய்துநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 4

இழையாடுகொங்கைத்தலைநஞ்சமுண்டிட்டு இளங்கன்றுகொண்டுவிளங்காயெறிந்து*
தழைவாடவன்தாள்குருந்தமொசித்துத் தடந்தாமரைப்பொய்கைபுக்கானிடந்தான் *
குழையாடவல்லிக்குலமாடமாடே குயில்கூவநீடுகொடிமாடமல்கு *
மழையாடுசோலைமயிலாலுநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 5

பண்ணேர்மொழியாய்ச்சியரஞ்ச வஞ்சப்பகுவாய்க்கழுதுக்கிரங்காது * அவள்த
னுண்ணாமுலைமற்றவளாவியோடும் உடனேசுவைத்தானிடம் * ஓங்குபைந்தாள்
கண்ணார்கரும்பின்கழைதின்றுவைகிக் கழுநீரில்மூழ்கிச்செழுநீர்த்தடத்து *
மண்ணேந்திளமேதிகள்வைகுநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 6

தளைக்கட்டவிழ்தாமரைவைகுபொய்கைத் தடம்புக்கடங்காவிடங்காலரவம் *
இளைக்கத்திளைத்திட்டதனுச்சிதன்மேல் அடிவைத்தவம்மானிடம் * மாமதியம்
திளைக்குங்கொடிமாளிகைசூழ்தெருவில் செழுமுத்துவெண்ணெற்கெனச்சென்று * முன்றில்
வளைக்கைநுளைப்பாவையர்மாறுநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 7

துளையார்கருமென்குழலாய்ச்சியர்தம் துகில்வாரியும்சிற்றில்சிதைத்தும் * முற்றா
விளையார்விளையாட்டொடுகாதல்வெள்ளம் விளைவித்தவம்மானிடம் * வேல்நெங்கண்
முளைவாளெயிற்றுமடவார்பயிற்று மொழிகேட்டிருந்துமுதிராதவின்சொல் *
வளைவாயகிள்ளைமறைபாடுநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 8

விடையோடவென்றாய்ச்சிமென்தோள்நயந்த விகிர்தாவிளங்குசுடராழியென்னும் *
படையோடுசங்கொன்றுடையாயெனநின்று இமையோர்பரவுமிடம் * பைந்தடத்துப்
பெடையோடுசெங்காலவன்னந்துகைப்பத் தொகைப்புண்டரீகத்திடைச்செங்கழுநீர் *
மடையோடநின்றுமதுவிம்முநாங்கூர் மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. 9

** வண்டார்பொழில்சூழ்ந்தழகாயநாங்கூர் மணிமாடக்கோயில்நெடுமாலுக்கு * என்றும்
தொண்டாயதொல்சீர்வயல்மங்கையர்கோன் கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார் *
கண்டார்வணங்கக்களியானைமீதே கடல்சூழுலகுக்கொருகாவலராய் *
விண்டோய்நெடுவெண்குடைநீழலின்கீழ் விரிநீருலகாண்டுவிரும்புவரே. 10

அடிவரவு—நந்தா முதலை கொலை சிறை இழை பண் தளை துளை விடை வண்டார் சலம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### மூன்றும்பத்து ஒன்பதாந்திருமொழி—சலங்கொண்டவிரணியன்.

** சலங்கொண்டவிரணியனதகல்மார்வங்கீண்டு
தடங்கடலைக்கடைந்தமுதங்கொண்டுகந்தகாளை *
நலங்கொண்டகருமுகில்போல்திருமேனியம்மான்
நாடோறும்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *

சலங்கொண்டுமலர்சொரியும்மல்லிகையொண்செருந்தி
சண்பகங்கள்மணநாறும்வண்பொழிலினூடே *
வலங்கொண்டுகயலோடிவிளையாடுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே.

திண்ணியதோரரியுருவாய்த்திசையனைத்தும்நடுங்கத்
தேவரொடுதானவர்கள்திசைப்ப * இரணியனை
நண்ணியவன்மார்வகலத்துகிர்மடுத்தநாதன்
நாடோறும்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
எண்ணில்மிகுபெருஞ்செல்வத்தெழில்விளங்குமறையும்
ஏழிசையும்கேள்விகளுமியன்றபெருங்குணத்தோர் *
மண்ணில்மிகுமறையவர்கள்மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 2

அண்டமுமிவ்வலைகடலுமவனிகளுமெல்லாம்
அமுதுசெய்ததிருவயிற்றனரன்கொண்டுதிரியும் *
முண்டமதுநிறைத்தவன்கண்சாபமதுநீக்கும்
முதல்வனவன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
எண்டிசையும்பெருஞ்செந்நெலிளந்தெங்குகதலி
யிலைக்கொடியொண்குலைக்கமுகோடிசலிவளஞ்சொரிய *
வண்டுபலவிசைபாடமயிலாலுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 3

கலையிலங்குமகலல்குலரக்கர்குலக்கொடியைக்
காதொடுமூக்குடனரியக்கதறியவளோடி *
தலையிலங்கைவைத்துமலையிலங்கைபுகச்செய்த
தடந்தோளன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
சிலையிலங்குமணிமாடத்துச்சிமிசைச்சூலம்
செழுங்கொண்டலகடிரியச்சொரிந்தசெழுமுத்தம் *
மலையிலங்குமாளிகைமேல்மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. 4

மின்னனையநுண்மருங்குல்மெல்லியற்கா, இலங்கை
வேந்தன்முடியொருபதும்தோளிருபதும்போயுதிர *
தன்னிகரில்சிலைவளைத்தன்றிலங்கைபொடிசெய்த
தடந்தோளன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
செந்நெலொடுசெங்கமலம்சேல்கயல்கள்வாளை
செங்கழுநீரொடுமிடைந்துகழனிதிகழ்ந்தெங்கும் *
மன்னுபுகழ்வேதியர்கள்மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 5

பெண்மைமிகுவடிவுகொடுவந்தவளை, பெரிய
பேயினதுஉருவுகொடுமாளவுயிருண்டு *
திண்மைமிகுமருதொடுநற்சகடமிறுத்தருளும்
தேவனவன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *

உண்மைமிகுமறையொடுநற்கலைகள்நிறைபொறைகள்
　　உதவுகொடையென்றிவற்றினொழிவில்லா * பெரிய
வண்மைமிகுமறையவர்கள் மலிவெய்துநாங்கூர்
　　வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 6

விளங்கனியையிளங்கன்றுகொண்டுதிரவெறிந்து
　　வேல்நெடுங்கணாய்ச்சியர்கள்வைத்ததயிர்வெண்ணெய் *
உளங்குளிரவமுதுசெய்திவ்வுலகுண்டகாளை
　　உகந்தினிதுநாடோறும்மருவியுறைகோயில் *
இளம்படிநற்கமுகுகுலைத்தெங்குகொடிச்செந்நெல்
　　ஈன்கரும்புகண்வளரக்கால்தடவும்புனலால் *
வளங்கொண்டபெருஞ்செல்வம்வளருமணிநாங்கூர்
　　வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 7

ஆறுதசினத்தின்மிகுநரகனுரமழித்த
　　அடலாழித்தடக்கையன்அலர்மகட்குமரற்கும் *
கூறுகக்கொடுத்தருளுந்திருவுடம்பன், இமையோர்
　　குலமுதல்வன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
பாறுதமலர்க்கமலம்செங்கழுநீர்ததும்பி
　　மதுவெள்ளமொழுகவயலுழவர்மடையடைப்ப *
மாறுதபெருஞ்செல்வம்வளருமணிநாங்கூர்
　　வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 9

வங்கமலிதடங்கடலுள்வானவர்களோடு
　　மாமுனிவர்பலர்கூடிமாமலர்கள்தூவி *
எங்கள்தனிநாயகனேயெமக்கருளாயென்னும்
　　ஈசனவன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
செங்கயலும்வாளைகளும்செந்நெலிடைக்குதிப்பச்
　　சேலுகளும்செழும்பணைசூழ்வீதிதொறும்மிடைந்து *
மங்குல்மதியகடுரிஞ்சுமணிமாடநாங்கூர்
　　வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 9

** சங்குமலிதண்டுமுதல்சக்கரமுனேந்தும்
　　தாமரைக்கண்நெடியபிரான்தானமருங்கோயில் *
வங்கமலிகடலுலகில்மலிவெய்துநாங்கூர்
　　வைகுந்தவிண்ணகர்மேல்வண்டறையும்பொழில்சூழ் *
மங்கையர்தம்தலைவன்மருவலர்தமுடல்துணிய
　　வாள்வீசும்பரகாலன்கலிகன்றிசொன்ன *
சங்கமலிதமிழ்மாலைபத்திவைவல்லார்கள்
　　தரணியொடுவிசும்பாளுந்தன்மைபெறுவாரே. 10

அடிவரவு—சலம் திண்ணிய அண்டமும் கலை மின் பெண்மை விளங்கனியை ஆறுத வங்கம் சங்கு திரு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றும்பத்து பத்தாந்திருமொழி—திருமடந்தைமண்மடந்தை.

** திருமடந்தைமண்மடந்தையிருபாலுந்திகழத்
தீவினைகள்போயகலவடியவர்கட்கென்று
மருள்நடந்து * இவ்வேழுலகத்தவர்பணியவானோர்
அமர்ந்தேத்தவிருந்தவிடம் * பெரும்புகழ்வேதியர்வாழ்
தருமிடங்கள்மலர்கள்மிகுகைதைகள்செங்கழுநீர்
தாமரைகள்தடங்கள்தொறுமிடங்கள்தொறுந்திகழ *
அருவிடங்கள்பொழில்தழுவியெழில்திகழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 1

வென்றிமிகுநரகனுரமதுவழியவிசிறும்
விறலாழித்தடக்கையன்விண்ணவர்கட்கன்று *
குன்றுகொடுகுரைகடலைக்கடைந்தமுதமளிக்கும்
குருமணியென்னாரமுதம்குலவியுறைகோயில் *
என்றுமிகுபெருஞ்செல்வத்தெழில்விளங்குமறையோர்
ஏழிசையும்கேள்விகளுமியன்றபெருங்குணத்தோர் *
அன்றுலகம்படைத்தவனையனையவர்கள்நாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 2

உம்பருமிவ்வேழுலகுமேழ்கடலுமெல்லாம்
உண்டபிரானண்டர்கள்முன்கண்டுமகிழ்வெய்த *
கும்பமிகுமதயானைமருப்பொசித்து, கஞ்சன்
குஞ்சிபிடித்தடித்தபிரான்கோயில் * மருங்கெங்கும்
பைம்பொனொடுவெண்முத்தம்பலபுன்னைகாட்டப்
பலங்கனிகள்தேன்காட்டப்படவரவேரல்குல் *
அம்பனையகண்மடவார்மகிழ்வெய்துநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 3

ஓடாதவாளரியினுருவமதுகொண்டு, அன்
றுலப்பில்மிகுபெருவரத்தவிரணியனைப்பற்றி *
வாடாதவள்ளுகிரால்பிளந்தவன்தன்மகனுக்கு
அருள்செய்தான்வாழுமிடம்மல்லிகைசெங்கழுநீர் *
சேடேறுமலர்ச்செருந்திசெழுங்கமுகம்பாளை
செண்பகங்கள்மணநாறும்வண்பொழிலினூடே *
ஆடேறுவயலாலைப்புகைகமழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 4

கண்டவர்தம்மனம்மகிழமாவலிதன்வேள்விக்
களவின்மிகுசிறுகுறளாய்மூவடியென்றிரந்திட்டு *
அண்டமுமிவ்வலைகடலுமவனிகளுமெல்லாம்
அளந்தபிரானமருமிடம்வளங்கொள்பொழிலயலே *

அண்டமுறுமுழவொலியும்வண்டினங்களொலியும்
அருமறையினொலியும்மடவார்சிலம்பினொலியும் *
அண்டமுறுமலைகடலினொலிதிகழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 5

வாள்நெடுங்கண்மலர்க்கூந்தல்மைதிலிக்கா, இலங்கை
மன்னன்முடியொருபதும்தோளிருபதும்போயுதிர *
தாள்நெடுந்திண்சிலைவளைத்ததயரதன்சேய், என்தன்
தனிச்சரண்வானவர்க்கரசுகருதுமிடம்தடமார் *
சேணிடங்கொள்மலர்க்கமலம்சேல்கயல்கள்வாளை
செந்நெலொடுமடுத்தரியவுதிர்ந்தசெழுமுத்தம் *
வாள்நெடுங்கண்கடைசியர்கள்வாருமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 6

தீமனத்தான்கஞ்சனதுவஞ்சனையில்திரியும்
தேனுகனும்பூதனைதனாருயிரும்செகுத்தான் *
காமனைத்தான்பயந்தகருமேனியுடையம்மான்
கருதுமிடம்பொருதுபுனல்துறைதுறைமுத்துந்தி *
நாமனத்தால்மந்திரங்கள் நால்வேதம், ஐந்து
வேள்வியோடாறங்கம்நவின்றுகலைபயின்று * அங்
காமனத்துமறையவர்கள்பயிலுமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 7

கன்றதனால்விளவெறிந்துகனியுதிர்த்தகாளை
காமருசீர்முகில்வண்ணன்காலிகள்முன்காப்பான் *
குன்றதனால்மழைதடுத்துக்குடமாடுகூத்தன்
குலவுமிடம்கொடிமதிள்கள்மாளிகைகோபுரங்கள் *
துன்றுமணிமண்டபங்கள்சாலைகள், தூமறையோர்
தொக்கீண்டித்தொழுதியொடுமிகப்பயிலும்சோலை *
அன்றலர்வாய்மதுவுண்டங்களிமுரலுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 8

வஞ்சனையால்வந்தவள்தனுயிருண்டுவாய்த்த
தயிருண்டு, வெண்ணெயமுதுண்டு * வலிமிக்க
கஞ்சனுயிரதுவுண்டிவ்வுலகுண்டகாளை
கருதுமிடம்காவிரிசந்தகில்கனகமுந்தி *
மஞ்சுலவுபொழிலூடும்வயலூடும்வந்து
வளம்கொடுப்ப, மாமறையோர்மாமலர்கள்தூவி *
அஞ்சலித்தங்கரிசரணென்றிறைஞ்சுமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. 9

** சென்றுசினவிடையேழும்படவடர்த்து, பின்னை
செவ்வித்தோள்புணர்ந்துகந்ததிருமால்தன்கோயில் *
அன்றயனுமரன்சேயுமனையவர்கள்நாங்கூர்
அரிமேயவிண்ணகரமமர்ந்தசெழுங்குன்றை *

கன்றிநெடுவேல்வலவன்மங்கையர்தம்கோமான்
கலிகன்றியொலிமாலையைந்திரெண்டுமூன்றும் *
ஒன்றினொடுமொன்றுமிவைகற்றுவல்லார், உலகத்
துத்தமர்கட்குத்தமராயும்பருமாவர்களே. 1

அடிவரவு:—திருமடந்தை வென்றி உம்பர் ஓடாத கண்டவர் வாள் தீமனத்தான் கன்று வஞ்சனையால் சென்று போது. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து முதல்திருமொழி —போதலர்ந்தபொழிற்சோலை.

** போதலர்ந்தபொழிற்சோலைப் புறமெங்கும்பொருதிரைகள் *
தாதுதிரவந்தலைக்கும் தடமண்ணித்தென்கரைமேல் *
மாதவன்தானுறையுமிடம் வயல்நாங்கை * வரிவண்டு
தேதெனவென்றிசைபாடும் திருத்தேவனார்தொகையே. 1

யாவருமாயாவையுமாய் எழில்வேதப்பொருள்களுமாய் *
மூவருமாய்முதலாய மூர்த்தியமர்ந்துறையுமிடம் *
மாவரும்திண்படைமன்னை வென்றிகொள்வார்மன்னுநாங்கை *
தேவரும்சென்றிறைஞ்சுபொழில் திருத்தேவனார்தொகையே. 2

வானாடும்மண்ணாடும் மற்றுள்ளபல்லுயிரும் *
தானாயவெம்பெருமான் தலைவனமர்ந்துறையுமிடம் *
ஆனாதபெருஞ்செல்வத்து அருமறையோர்நாங்கைதன்னுள் *
தேனாரும்மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே. 3

இந்திரனுமிமையவரும் முனிவர்களுமெழிலமைந்த *
சந்தமலர்ச்சதுமுகனும் கதிரவனும்சந்திரனும் *
எந்தையெமக்கருளெனநின்று அருளுமிடமெழில்நாங்கை *
சுந்தரநற்பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. 4

அண்டமுமிவ்வலைகடலும் அவனிகளுங்குலவரையும் *
உண்டபிரானுறையுமிடம் ஒளிமணிசந்தகில்கனகம் *
தெண்டிரைகள்வரத்திரட்டும் திகழ்மண்ணித் தென்கரைமேல் *
திண்டிறலார்பயில்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. 5

ஞாலமெல்லாமமுதுசெய்து நான்மறையுந்தொடராத *
பாலகனாயாலிலையில் பள்ளிகொள்ளும்பரமனிடம் *
சாலிவளம்பெருகிவரும் தடமண்ணித்தென்கரைமேல் *
சேலுகளும்வயல்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. 6

ஓடாதவாளரியின் உருவாகியிரணியனை *
வாடாதவள்ளுகிரால் பிளந்தவனெந்தமாலதிடம் *
ஏடேறுபெருஞ்செல்வத்து எழில்மறையோர்நாங்கைதன்னுள் *
சேடேறுபொழில்தழுவு திருத்தேவனார்தொகையே. 7

வாராருமிளங்கொங்கை மைதிலியைமணம்புணர்வான் *
காரார்திண் சிலையிறுத்த தனிக்காளைகருதுமிடம் *
ஏராரும்பெருஞ்செல்வத்து எழில்மறையோர்நாங்கைதன்னுள் *
சீராரும்மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே. 8

கும்பமிகுமதயானை பாகனொடுங்குலைந்துவீழ *
கொம்பதனைப்பறித்தெறிந்த கூத்தனமர்ந்துறையுமிடம் *
வம்பவிழுஞ்செண்பகத்தின் மணங்கமழும்நாங்கைதன்னுள் *
செம்பொன்மதிள்பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. 9

** காரார்ந்ததிருமேனிக் கண்ணனமர்ந்துறையுமிடம் *
சீரார்ந்தபொழில்நாங்கைத் திருத்தேவனார்தொகைமேல் *
கூரார்ந்தவேல்கலியன் கூறுதமிழ்பத்தும்வல்லார் *
ஏரார்ந்தவைகுந்தத்து இமையவரோடிருப்பாரே. 10

போது யாவரும் வானாடும் இந்திரனும் அண்டமும் ஞாலம் ஓடாக வாரார் கும்பம்
காரார்ந்த கம்பமா. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து இரண்டாந்திருமொழி—கம்பமா கடல்.

** கம்பமாகடலடைத்திலங்கைக்குமன் கதிர்முடியவைபத்தும் *
அம்பினாலறுத்தரசவன்தம்பிக்கு அளித்தவனுறைகோயில் *
செம்பலாநிரைசெண்பகம்மாதவி சூதகம்வாழைகள்சூழ் *
வம்புலாங்கமுகோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. 1

பல்லவந்திகழ்பூங்கடம்பேறி அக்காளியன்பணவரங்கில் *
ஒல்லைவந்துறப்பாய்ந்தருநடஞ்செய்த உம்பர்கோனுறைகோயில் *
நல்லவெந்தழல்மூன்றுநால்வேதம் ஐவேள்வியோடாறங்கம் *
வல்லவந்தணர்மல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. 2

அண்டரானவர்வானவர்கோனுக்கென்று அமைத்தசோறதுவெல்லா *
முண்டு * கோநிரைமேய்த்தவைகாத்தவன் உகந்தினிதுறைகோயில் *
கொண்டலார்முழவில்குளிர்வார்பொழில் குலமயில்நடமாட *
வண்டுதானிசைபாடிடுநாங்கூர் வண்புருடோத்தமமே. 3

பருங்கையானையின்கொம்பினைப்பறித்து அதன்பாகனைச்சாடிப்புக்கு
ஒருங்கமல்லரைக்கொன்று பின்கஞ்சனையுதைத்தவனுறைகோயில் *
கரும்பினூடுயர்சாலிகள்விளைதரு கழனியில்மலிவாவி *
மருங்கெலாம்பொழிலோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. 4

சாடுபோய்விழத்தாள்நிமிர்த்து ஈசன்தன்படையோடுங்கிளையோடு
மோட * வாணனையாயிரந்தோள்களுந்துணித்தவன் உறைகோயில் *
ஆடுவான்கொடியகல்விசும்பணவிப்போய்ப் பகலவனொளிமறைக்கும் *
மாடமாளிகைசூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. 5

அங்கையாலடிமூன்றுநீரேற்று அயனலர்கொடுதொழுதேத்த *
கங்கைபோதரக்கால்நிமிர்த்தருளிய கண்ணன்வந்துறைகோயில் *
கொங்கைகோங்கவைகாட்டவாய்க்குமுதங்கள்காட்ட மாபதுமங்கள் *
மங்கைமார்முகங்காட்டிடுநாங்கூர் வண்புருடோத்தமமே.

உளையவொண்டிறல்பொன்பெயரோன்தனது உரம்பிளந்துதிரத்தை
யளையும் * வெஞ்சினத்தரிபரிகீறிய அப்பன்வந்துறைகோயில் *
இளையமங்கையரிணையடிச்சிலம்பினொடு எழில்கொள்பந்தடிப்போர் * கை
வளையில்நின்றொலிமல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. 7

வாளையார்தடங்கண்ணுமைபங்கன் வன்சாபம்மற்றதுநீங்க *
மூளையார்சிரத்தையமுன்னளித்த எம்முகில்வண்ணனுறைகோயில் *
பாளைவான்கமுகூடுயர்தெங்கின் வன்பழம்விழவெருவிப்போய் *
வாளைபாய்தடஞ்சூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. 8

இந்துவார்சடையீசனைப்பயந்த நான்முகனைத்தன்னெழிலாரும் *
உந்திமாமலர்மீமிசைப்படைத்தவன் உகந்தினிதுறைகோயில் *
குந்திவாழையின்கொழுங்கனிநுகர்ந்து தன்குருளையைத்தழுவிப்போய் *
மந்திமாம்பணைமேல்வைகுநாங்கூர் வண்புருடோத்தமமே. 9

மண்ணுளார்புகழ்வேதியர்நாங்கூர் வண்புருடோத்தமத்துள் *
அண்ணல்சேவடிக்கீழடைந்துய்ந்தவன் ஆலிமனருள்மாரி *
பண்ணுளார்தரப்பாடியபாடல் இப்பத்தும்வல்லார் * உலகி
லெண்ணிலாதபேரின்பமுற்று இமையவரோடுங்கூடுவரே. 10

அடிவரவு:—கம்பம் பல்லவம் அண்டர் பருங்கை சாடு அங்கை உளைய வாளை இந்து மண் பேரணி. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

### நான்காம்பத்து மூன்றாந்திருமொழி—பேரணிந்துலகத்தவர்.

பேரணிந்துலகத்தவர்தொழுதேத்தும் பேரருளாளனெம்பிரானை *
வாரணிமுலையாள்மலர்மகளோடு மண்மகளுமுடனிற்ப *
சீரணிமாடநாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
காரணிமேகம்நின்றதொப்பானைக் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. 1

பிறப்பொடுமூப்பொன்றில்லவன்தன்னைப் பேதியாவின்பவெள்ளத்தை *
இறப்பெதிர்காலக்கழிவுமானானை ஏழிசையின்சுவைதன்னை *
சிறப்புடைமறையோர்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
மறைப்பெரும்பொருளைவானவர்கோனைக் கண்டுநான்வாழ்ந்தொழிந்தேனே. 2

திடவிசும்பெரிநீர்த்திங்களுஞ்சுடரும் செழுநிலத்துயிர்களும்மற்றும் *
படர்பொருள்களுமாய்நின்றவன்தன்னைப் பங்கயத்தயனவனனைய *
திடமொழிமறையோர்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
கடல்நிறவண்ணன்தன்னைநானடியேன் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. 3

வசையறுகுறளாய்மாவலிவேள்வி மண்ணளவிட்டவன்தன்னை *
அசைவறுமமரரடியிணைவணங்க அலைகடல்துயின்றவம்மானை *
திசைமுகனனையோர்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
உயர்மணிமகுடஞ்சூடிநின்றானைக் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. 4

தீமனத்தரக்கர் திறலழித்தவனேயென்று சென்றடைந்தவர்தமக்கு *
தாய்மனத்திரங்கியருளினைக்கொடுக்கும் தயரதன்மதலையைச்சயமே *
தேமலர்ப்பொழில்சூழ்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
காமனைப்பயந்தான் தன்னைநானடியேன் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. 5

மல்லைமாமுந்நீரதர்பட மலையாலணைசெய்துமகிழ்ந்தவன்தன்னை *
கல்லின்மீதியன்றகடிமதிளிலங்கைகலங்க ஓர்வாளிதொட்டானை *
செல்வநான்மறையோர்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
அல்லிமாமலராள்தன்னொடுமடியேன் கண்டுகொண்டல்லல்தீர்ந்தேனே. 6

வெஞ்சினக்களிறும்வில்லொடுமல்லும் வெருவிடவுடற்றவன்தன்னை *
கஞ்சனைக்காய்ந்தகாளையம்மானைக் கருமுகில்திருநிறத்தவனை *
செஞ்சொல்நான்மறையோர்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
அஞ்சனக்குன்றம்நின்றதொப்பானைக் கண்டுகொண்டல்லல்தீர்ந்தேனே. 7

** அன்றியவாணனாயிரந்தோளுந் துணிய அன்றாழிதொட்டானை *
மின்திகழ்குடுமிவேங்கடமலைமேல் மேவியவேதநல்விளக்கை *
தென்திசைத்திலதமனையவர்நாங்கைச் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
மன்றதுபொலியமகிழ்ந்துநின்றானை வணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே. 8

களங்கனிவண்ணாகண்ணனே என்றன்கார்முகிலேயெனநினைந்திட்டு *
உளங்கனிந்திருக்குமடியவர்தங்கள் உள்ளத்துளூறியதேனை *
தெளிந்தநான்மறையோர்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
வளங்கொள்பேரின்பம்மன்னிநின்றானை வணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே. 9

** தேனமர்சோலைநாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
வானவர்கோனைக்கண்டமைசொல்லும் மங்கையார்வாட்கலிகன்றி *
ஊனமில்பாடலொன்பதோடொன்றும் ஒழிவின்றிக்கற்றுவல்லார்கள் *
மானவெண்குடைக்கீழ்வையகமாண்டு வானவராகுவர்மகிழ்ந்தே. 10

—பேரணி பிறப்பு திட வசை தீ மல்லை வெஞ்சினம் அன்றிய களங்கனி தேனமர் மாற்று. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—நான்காந்திருமொழி—மாற்றரசர்மணிமுடியும்.

** மாற்றரசர்மணிமுடியுந்திறலுந்தேசும்
மற்றவர்தம்காதலிமார்குழையும் * தந்தை
கால்தளையுமுடன்கழலவந்துதோன்றிக்
கதநாகங்காத்தளித்தகண்ணர்கண்டீர் *

நூற்றிதழ்கொளரவிந்தம்நுழைந்தபள்ளத்து
இளங்கமுகின்முதுபாளைபகுவாய்நண்டின் *
சேற்றளையில்வெண்முத்தம்சிந்துநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 1

பொற்றொடித்தோள்மடமகள்தன்வடிவுகொண்ட
பொல்லாதவன்பேய்ச்சிகொங்கைவாங்கி *
பெற்றெடுத்ததாய்போலமடுப்ப, ஆரும்
பேணாநஞ்சுண்டுகந்தபிள்ளைகண்டீர் *
நெல்தொடுத்தமலர்நீலம்நிறைந்தசூழல்
இருஞ்சிறையவண்டொலியும்நெடுங்கணார்தம் *
சிற்றடிமேல்சிலம்பொலியுமிழற்றுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 2

படலடைத்தசிறுகுரம்பைநுழைந்துபுக்குப்
பசுவெண்ணெய்பதமாரப்பண்ணைமுற்றும் *
அடலடர்த்தவேற்கணார்தோக்கைபற்றி
அலந்தலைமைசெய்துழலுமையன்கண்டீர் *
மடலெடுத்தநெடுந்தெங்கின்பழங்கள்வீழ
மாங்கனிகள்திரட்டுருட்டாவருநீர்ப்பொன்னி *
திடலெடுத்துமலர்சுமந்தங்கிழியுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 3

வாரா ரும்முலைமடவாள்பின்னைக்காகி
வளைமருப்பிற்கடுஞ்சினத்துவன்தாளார்ந்த *
காரார்திண்விடையடர்த்துவதுவையாண்ட
கருமுகில்போல்திருநிறத்தென்கண்ணர்கண்டீர் *
ஏராரும்மலர்ப்பொழில்கள்தழுவியெங்கும்
எழில்மதியைக்கால்தொடரவிளங்குசோதி *
சீராருமணிமாடம்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 4

கலையிலங்குமகலல்குல்கமலப்பாவை
கதிர்முத்தவெண்ணகையாள்கருங்கணாய்ச்சி *
முலையிலங்குமொளிமணிப்பூண்வடமுந்தேய்ப்ப
மூவாதவரைநெடுந்தோள்மூர்த்திகண்டீர் *
மலையிலங்குநிரைச்சந்திமாடவீதி
யாடவரை, மடமொழியார்முகத்து * இரண்டு
சிலையிலங்கிமனஞ்சிறைகொண்டிருக்குநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 5

தான்போலுமென்றெழுந்தான்தரணியாளன்
அதுகண்டுதரித்திருப்பானரக்கர்தங்கள் *
கோன்போலுமென்றெழுந்தான்குன்றமன்ன
இருபதுதோளுடன்துணித்தவொருவன்கண்டீர் *

மான்போலும்மென்னோக்கின்செய்யவாயார்
மரதகம்போல்மடக்கிளியைக்கைம்மேல்கொண்டு *
தேன்போலும்மென்மழலைபயிற்றுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 6

பொங்கிலங்குபுரிநூலும்தோலுந்தாழப்
பொல்லாதகுறளுருவாய்ப்பொருந்தாவாணன் *
மங்கலம்சேர்மறைவேள்வியதனுள்புக்கு
மண்ணகலம்குறையிரந்தமைந்தன்கண்டீர் *
கொங்கலர்ந்தமலர்க்குழலார்கொங்கைதோய்ந்த
குங்குமத்தின்குழம்பளைந்தகோலந்தன்னால் *
செங்கலங்கல்வெண்மணல்மேல்தவழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 7

சிலம்பினிடைச்சிறுபரல்போல்பெரியமேரு
திருக்குளம்பில்கணகணப்பத்திருவாகாரம்
குலுங்க * நிலமடந்தைதனையிடந்துபுல்கிக்
கோட்டிடைவைத்தருளியவெங்கோமான்கண்டீர் *
இலங்கியநான்மறையனைத்துமங்கமாறும்
ஏழிசையும்கேள்விகளுமெண்டிக்கெங்கும் *
சிலம்பியநற்பெருஞ்செல்வம்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 8

ஏழுலகும்தாழ்வரையுமெங்குமூடி
எண்டிசையும்மண்டலமும்மண்டி * அண்டம்
மோழையெழுந்தாழிமிகுமூழிவெள்ளம்
முன்னகட்டிலொடுக்கியவெம்மூர்த்திகண்டீர் *
ஊழிதொறுமூழிதொறுமுயர்ந்தசெல்வத்து
ஓங்கியநான்மறையனைத்தும்தாங்குநாவர் *
சேழுயர்ந்தமணிமாடம்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலே. 9

சீரணிந்தமணிமாடம்திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்செங்கண்மாலை *
கூரணிந்தவேல்வலவனாலிநாடன்
கொடிமாடமங்கையர்கோன்குறையலாளி *
பாரணிந்ததொல்புகழான்கலியன்சொன்ன
பாமாலையிவையைந்துமைந்தும்வல்லார் *
சீரணிந்தவுலகத்துமன்னராகிச்
சேண்விசும்பில்வானவராய்த்திகழ்வர்தாமே. 10

மாற்று, பொன், படல், வாரார், கலை, தான், பொங்கு, சிலம்பு, ஏழ், சீரணி, தூம்பு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—ஐந்தாந்திருமொழி—தூம்புடைப்பனைக்கைவேழம்.

தூம்புடைப்பனைக்கைவேழம் துயர்கெடுத்தருளி * மன்னு
காம்புடைக்குன்றமேந்திக் கடுமழைகாத்தவெந்தை *
பூம்புனல்பொன்னிமுற்றும் புகுந்துபொன்வரண்ட * எங்கும்
தேம்பொழில்கமழுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 1

கவ்வைவாளெயிற்றுவன்பேய் கதிர்முலைசுவைத்து * இலங்கை
வவ்வியவிடும்பைதீரக் கடுங்கணைதுரந்தவெந்தை *
கொவ்வைவாய்மகளிர்கொங்கைக் குங்குமங்கழுவிப்போந்த *
தெய்வநீர்கமழுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 2

மாத்தொழில்மடங்கச்செற்று மருதிறநடந்து * வன்தாள்
சேத்தொழில்சிதைத்துப் பின்னைசெவ்வித்தோள்புணர்ந்தவெந்தை *
நாத்தொழில்மறைவல்லார்கள் நயந்தறம்பயந்த * வண்கைத்
தீத்தொழில்பயிலுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 3

தாங்கருஞ்சினத்துவன்தாள் தடக்கைப் மாமருப்புவாங்கி *
பூங்குருந்தொசித்துப்புள்வாய்பிளந்து எருதடர்த்தவெந்தை *
மாங்கனிநுகர்ந்தமந்தி வந்துவண்டிரிய * வாழைத்
தீங்கனிநுகருநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 4

கருமகளிலங்கையாட்டி பிலங்கொள்வாய்திறந்து * தன்மேல்
வருமவள்செவியும்மூக்கும் வாளினால்தடிந்தவெந்தை *
பெருமகள்பேதைமங்கை தன்னொடும்பிரிவிலாத *
திருமகள்மருவுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 5

கெண்டையும்குறளும்புள்ளும் கேழலுமரியும்மாவும் *
அண்டமும்சுடரும் அல்லாவாற்றலுமாயவெந்தை *
ஒண்டிறல்தென்னனோட வடவரசோட்டங்கண்ட *
திண்டிறலாளர்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே.

குன்றமும்வானும்மண்ணும் குளிர்புனல்திங்களோடு *
நின்றவெஞ்சுடரும் அல்லாநிலைகளுமாயவெந்தை *
மன்றமும்வயலும்காவும் மாடமும்மணங்கொண்டு * எங்கும்
தென்றல்வந்துலவுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 7

சங்கையும்துணிவும்பொய்யும் மெய்யுமித்தரணியோம்பும் *
பொங்கியமுகிலும் அல்லாப்பொருள்களுமாயவெந்தை *
பங்கயமுகுத்ததேறல் பருகியவாளைபாய *
செங்கயலுகளும்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 8

பாவமுமறமும்வீடும் இன்பமும்துன்பந்தானும் *
கோவமுமருளும் அல்லாக்குணங்களுமாயவெந்தை *
மூவரிலெங்கள்மூர்த்தி இவனெனமுனிவரோடு *
தேவர்வந்திறைஞ்சுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. 9

** திங்கள்தோய்மாடநாங்கூர்த் திருமணிக்கூடத்தானை *
மங்கையர்தலைவன்வண்தார்க் கலியன்வாயொலிகள்வல்லார் *
பொங்குநீருலகமாண்டு பொன்னுலகாண்டு * பின்னும்
வெங்கதிர்ப்பரிதிவட்டத்து ஊடுபோய்விளங்குவாரே. 10

—தூம்பு கவ்வை மாத்தொழில் தாங்கரும் கருமகள் கெண்டை குன்றம் சங்கை ரவம் திங்கள் தாவளந்து. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்.

---

## நான்காம்பத்து-- ஆறாந்திருமொழி-- தாவளந்துலகமுற்றும்.

** தாவளந்துலகமுற்றும் தடமலர்ப்பொய்கைபுக்கு *
நாவளநவின்றங்கேத்த நாகத்தின்நடுக்கந்தீர்த்தாய் *
மாவளம்பெருகிமன்னு மறையவர்வாழும் * நாங்கைக்
காவளம்பாடிமேய கண்ணனேகளைகணீயே. 1

மண்ணிடந்தேனமாகி மாவலிவலிதொலைப்பான் *
விண்ணவர்வேண்டச்சென்று வேள்வியில்குறையிரந்தாய் *
துண்ணெனமாற்றார்தம்மைத் தொலைத்தவர்நாங்கைமேய *
கண்ணனேகாவளந்தண்பாடியாய் களைகணீயே. 2

உருத்தெழுவாலிமார்பில் ஒருகணையுருவவோட்டி *
கருத்துடைத்தம்பிக்கு இன்பக்கதிர்முடியரசளித்தாய் *
பருத்தெழுபலவும்மாவும் பழம்விழுந்தொழுகுநாங்கை *
கருத்தனேகாவளந்தண்பாடியாய் களைகணீயே. 3

முனைமுகத்தரக்கன்மாள முடிகள்பத்தறுத்துவீழ்த்து * ஆங்
கனையவற்கிளையவற்கே அரசளித்தருளினானே *
சுனைகளில்கயல்கள்பாயச் சுரும்புதேன்நுகருநாங்கை *
கனைகழல்காவளந்தண்பாடியாய் களைகணீயே. 4

படவரவுச்சிதன்மேல் பாய்ந்துபன்னடங்கள்செய்து *
மடவரல்மங்கைதன்னை மார்வகத்திருத்தினானே *
தடவரைதங்குமாடத் தகுபுகழ்நாங்கைமேய *
கடவுளேகாவளந்தண்பாடியாய் களைகணீயே. 5

மல்லரையட்டுமாளக் கஞ்சனைமலைந்துகொன்று *
பல்லரசவிந்துவீழப் பாரதப்போர்முடித்தாய் *
நல்லரண்காவினீழல் நறைகமழ்நாங்கைமேய *
கல்லரண்காவளந்தண்பாடியாய் களைகணீயே. 6

மூத்தவற்கரசுவேண்டி முன்புதூதெழுந்தருளி *
மாத்தமர்பாகன்வீழ மதகரிமருப்பொசித்தாய் *
பூத்தமர்சோலையோங்கிப் புனல்பரந்தொழுகுநாங்கை *
காத்தனேகாவளந்தண்பாடியாய் களைகணீயே. 7

ஏவிளங்கன்னிக்காகி இமையவர்கோனைச்செற்று *
காவளம்கடிதிறுத்துக் கற்பகம்கொண்டுபோந்தாய் *
பூவளம்பொழில்கள்சூழ்ந்த புரந்தரன்செய்தநாங்கை *
காவளம்பாடிமேய கண்ணனேகளைகணீயே. 8

சந்தமாய்ச்சமயமாகிச் சமயவைம்பூதமாகி *
அந்தமாயாதியாகி அருமறையவையுமானாய் *
மந்தமார்பொழில்கடோறும் மடமயிலாலுநாங்கை *
கந்தமார்காவளந்தண்பாடியாய் களைகணீயே. 9

** மாவளம்பெருகிமன்னு மறையவர்வாழும் * நாங்கைக்
காவளம்பாடிமேய கண்ணனைக்கலியன்சொன்ன *
பாவளம்பத்தும்வல்லார் பார்மிசையரசராகி *
கோவிளமன்னர்தாழக் குடைநிழல்பொலிவர்தாமே. 10

அடிவரவு:—தாவளந்து மண் உருத்து முனே படம் மல்லை மூத்தவற்கு ஏவிளம் சந்தம் மாவளம் கண்ணார். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஏழாந்திருமொழி—கண்ணார்கடல்போல்.

** கண்ணார்கடல்போல் திருமேனிகரியாய் *
நண்ணார்முனை வென்றிகொள்வார்மன்னுநாங்கூர் *
திண்ணார்மதிள்சூழ் திருவெள்ளக்குளத்து
ளண்ணா * அடியேனிடரைக்களையாயே. 1

கொந்தார்துளவ மலர்கொண்டணிவானே *
நந்தாதபெரும்புகழ் வேதியர்நாங்கூர் *
செந்தாமரைநீர்த் திருவெள்ளக்குளத்துள்
எந்தாய் * அடியேனிடரைக் களையாயே. 2

குன்றால்குளிர்மாரி தடுத்துகந்தானே *
நன்றாயபெரும்புகழ் வேதியர்நாங்கூர் *
சென்றார்வணங்கும் திருவெள்ளக்குளத்தாய்
நின்றாய் * நெடியாய் அடியேனிடர்நீக்கே. 3

கானார்கரிகொம்பது ஒசித்தகளிறே *
நானாவகை நல்லவர்மன்னியநாங்கூர் *
தேனார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்து
ளானாய் * அடியேனுக்கருள்புரியாயே. 4

** வேடார் திருவேங்கடம் மேயவிளக்கே *
நாடார்புகழ் வேதியர்மன்னியநாங்கூர் *
சேடார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்தாய் *
பாடாவருவேன் வினையாயினபாற்றே. 5

கல்லால்கடலை அணைகட்டியுகந்தாய் *
நல்லார்பலர் வேதியர்மன்னியநாங்கூர் *
செல்வா திருவெள்ளக்குளத்துறைவானே *
எல்லாவிடரும் கெடுமாறருளாயே. 6

கோலால்நிரைமேய்த்த எங்கோவலர்கோவே *
நாலாகிய வேதியர்மன்னியநாங்கூர் *
சேலார்வயல்சூழ் திருவெள்ளக்குளத்துள்
மாலே * எனவல்வினைதீர்த்தருளாயே. 7

வாராகமதாகி இம்மண்ணையிடந்தாய் *
நாராயணனே நல்லவேதியர்நாங்கூர் *
சீரார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்துள் *
ஆராவமுதே அடியேற்கருளாயே. 8

பூவார்திருமாமகள் புல்கியமார்பா *
நாவார்புகழ் வேதியர்மன்னியநாங்கூர் *
தேவா திருவெள்ளக்குளத்துறைவானே *
ஆவாவடியான் இவனென்றருளாயே. 9

** நல்லன்புடை வேதியர்மன்னியநாங்கூர் *
செல்வன் திருவெள்ளக்குளத்துறைவானை *
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை *
வல்லரெனவல்லவர் வானவர்தாமே. 10

அடிவரவு—கண்ணார் கொந்து குன்றால் கான் வேடு கல்லால் கோலால் வாராகமது பூவார் நல்லன்பு கவளயானை. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து எட்டாந்திருமொழி—கவளயானை.

** கவளயானைகொம்பொசித்த கண்ணனென்றுங்காமருசீர் *
குவளைமேகமன்னமேனி கொண்டகோனென்னானையென்றும் *
தவளமாடநீடுநாங்கைத் தாமரையாள்கேள்வனென்றும் *
பவளவாயாளென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. 1

கஞ்சன்விட்டவெஞ்சினத்த களிறடர்த்தகாளையென்றும் *
வஞ்சமேவிவந்தபேயின் உயிரையுண்டமாயனென்றும் *
செஞ்சொலாளர்நீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பஞ்சியன்னமெல்லடியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. 2

அண்டர்கோனென்னானையென்றும் ஆயர்மாதர்கொங்கைபுல்கு
செண்டனென்றும் * நான்மறைகள்தேடியோடும் செல்வனென்றும் *
வண்டுலவுபொழில்கொள்நாங்கை மன்னுமாயனென்றென்றோதி *
பண்டுபோலன்றென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. 3

கொல்லையானாள்பரிசழிந்தாள் கோல்வளையார்தம்முகப்பே *
மல்லைமுன்னீர்தட்டிலங்கை கட்டழித்தமாயனென்றும் *
செல்வமல்குமறையோர்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பல்வளையாளென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே.

அரக்கராவிமாளவன்று ஆழ்கடல்சூழிலங்கைசெற்ற *
குரக்கரசனென்றும் கோலவில்லியென்றும் * மாமதியை
நெருக்குமாடநீடுநாங்கை நின்மலனென்றென்றோதி *
பரக்கழிந்தாளென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. 5

ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்த நாதனென்றும்நானிலஞ்சூழ் *
வேலையன்னகோலமேனி வண்ணனென்றும் * மேலெழுந்து
சேலுகளும்வயல்கொள்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பாலின்நல்லமென்மொழியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. 6

நாடியென்தனுள்ளம்கொண்ட நாதனென்றும் * நான்மறைகள்
தேடியென்றும்காணமாட்டாச் செல்வனென்றும் * சிறைகொள்வண்டு
சேடுலவுபொழில்கொள்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பாடகஞ்சேர்மெல்லடியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. 7

உலகமேத்துமொருவனென்றும் ஒண்சுடரோடும்பரெய்தா *
நிலவுமாழிப்படையனென்றும் நேசனென்றும் * தென்திசைக்குத்
திலதமன்னமறையோர்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பலருமேசவென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. 8

கண்ணனென்றும்வானவர்கள் காதலித்துமலர்கள்தூவும் *
எண்ணனென்றுமின்பனென்றும் ஏழுலகுக்காதியென்றும் *
திண்ணமாடநீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பண்ணினன்னமென்மொழியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. 9

** பாருள்நல்லமறையோர்நாங்கைப் பார்த்தன்பள்ளிச்செங்கண்மாலை *
வார்கொள்நல்லமுலைமடவாள் பாடலைத்தாய்மொழிந்தமாற்றம் *
கூர்கொள்நல்லவேல்கலியன் கூறுதமிழ்பத்தும்வல்லார் *
ஏர்கொள்நல்லவைகுந்தத்துள் இன்பநாளுமெய்துவாரே. 10

அடிவரவு—கவளம் கஞ்சன் அண்டர் கொல்லை அரக்கர் ஞாலம் நாடி உலகம் கண்ணன் பாருள் நும்மை. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### நான்காம்பத்து ஒன்பதாந்திருமொழி—நும்மைத்தொழுதோம்.

நும்மைத்தொழுதோம் நுந்தம்பணிசெய்திருக்கும்நும் மடியோம் *
இம்மைக்கின்பம்பெற்றோம் எந்தாய்இந்தளூரீரே *
எம்மைக்கடிதாக்கருமமருளி ஆவாவென்றிரங்கி *
நம்மையொருகால்காட்டிநடந்தால் நாங்களுய்யோமே. 1

சிந்தைதன்னுள்நீங்காதிருந்ததிருவே மருவினிய
மைந்தா * அந்தணாலிமாலே சோலைமழகளிறே *
நந்தாவிளக்கின்சுடரே நறையூர்நின்றநம்பீ * என்
எந்தாய்இந்தளூராய் அடியேற்கிறையுமிரங்காயே. 2

பேசுகின்றதிதுவே வையமீரடியாலளந்த *
மூசிவண்டுமுரலும் கண்ணிமுடியீர் * உம்மைக்காணு
மாசையென்னும் கடலில்வீழ்ந்திங்கயர்த்தோம் * அயலாரு
மேசுகின்றதிதுவேகாணும் இந்தளூரீரே. 3

ஆசைவழுவாதேத்தும் எமக்கிங்கிழுக்காய்த்து * அடியோர்க்குத்
தேசமறிய உமக்கேயாளாய்த்திரிகின்றேமுக்கு *
காசினொளியின்திகழும்வண்ணம் காட்டீரெம்பெருமான் *
வாசிவல்லீரிந்தளூரீர் வாழ்ந்தேபோம்நீரே. 4

தீயெம்பெருமான்நீரெம்பெருமான் திசையுமிருநிலனு
மாய் * எம்பெருமானாகிநின்றால் அடியோங்காணோமால் *
தாயெம்பெருமான் தந்தைதந்தையாவீர் * அடியோமுக்
கேயெம்பெருமானல்லீரோநீர் இந்தளூரீரே. 5

சொல்லாதொழியகில்லேன் அறிந்தசொல்லில் * நும்மடியா
ரெல்லாரோடுமொக்க எண்ணியிருந்தீரடியேனை *
நல்லாரறிவீர்தீயாரறிவீர் நமக்கிவ்வுலகத்து *
எல்லாமறிவீரீதேயறியீர் இந்தளூரீரே. 6

மாட்டீரானீர்பணிநீர்கொள்ள எம்மைப்பணியறியா
வீட்டீர் * இதனைவேறேசொன்னோம் இந்தளூரீரே *
காட்டீரானீர் நுந்தமடிக்கள்காட்டில் * உமக்கிந்த
நாட்டேவந்துதொண்டரான நாங்களுய்யோமே. 7

முன்னைவண்ணம்பாலின்வண்ணம் முழுதும்நிலைநின்ற *
பின்னைவண்ணம்கொண்டல்வண்ணம் வண்ணமெண்ணுங்கால் *
பொன்னின்வண்ணம்மணியின்வண்ணம் புரையுந்திருமேனி *
இன்னவண்ணமென்றுகாட்டீர் இந்தளூரீரே. 8

எந்தைதந்தைதம்மானென்றென்று எமரேழளவும் *
வந்துநின்றதொண்டரோர்க்கே வாசிவல்லீரால் *
சிந்தைதன்னுள்முந்திநிற்றிர் சிறிதுந்திருமேனி *
இந்தவண்ணமென்றுகாட்டீர் இந்தளூரீரே. 9

** ஏரார்பொழில்சூழ் இந்தளூரிலெந்தைபெருமானை *
காரார்புறவின்மங்கைவேந்தன் கலியனொலிசெய்த *
சீராரின்சொல்மாலை கற்றுத்திரிவாருலகத்து *
ஆராரவரே அமரர்க்கென்றுமமரராவாரே. 10

—நும்மை சிந்தை பேசுகின்றது ஆசை தீ சொல்லாது மாட்டீர் முன்னை எந்தை ஏரார் ஆய்ச்சியர். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து—பத்தாந்திருமொழி—ஆய்ச்சியரழைப்ப,

** ஆய்ச்சியரழைப்பவெண்ணெயுண்டொருகால் ஆலிலைவளர்ந்தவெம்பெருமான் *
பேய்ச்சியைமுலையுண்டிணைமருதிறுத்துப் பெருநிலமளந்தவன்கோயில் *
காய்த்தநீள்கமுகுங்கதலியுந்தெங்கும் எங்குமாம்பொழில்களினடுவே *
வாய்த்தநீர்பாயும்மண்ணியின்தென்பால் திருவெள்ளியங்குடியதுவே. 1

ஆநிரைமேய்த்தன்றலைகடலடைத்திட்டு அரக்கர்தஞ்சிரங்களையுருட்டி *
கார்நிறமேகங்கலந்ததோருருவக் கண்ணனார்கருதியகோயில் *
பூநிரைச்செருந்திபுன்னைமுத்தரும்பிப் பொதும்பிடைவரிவண்டுமிண்டி *
தேனிரைத்துண்டங்கின்னிசைமுரலும் திருவெள்ளியங்குடியதுவே. 2

கடுவிடமுடையகாளியன்தடத்தைக் கலக்கிமுன்னலக்கழித்து * அவன்றன்
படமிறப்பாய்ந்துபன்மணிசிந்தப் பல்நடம்பயின்றவன்கோயில் *
படவரவல்குல்பாவைநல்லார்கள் பயிற்றியநாடகத்தொலிபோய் *
அடைபுடைதழுவியண்டநின்றதிரும் திருவெள்ளியங்குடியதுவே. 3

கறவைமுன்காத்துக்கஞ்சனைக்காய்ந்த காளமேகத்திருவுருவன் *
பறைமுன் னுயர்த்துப்பாற்கடல்துயின்ற பரமனார்பள்ளிகொள்கோயில் *
துறைதுறைதோறும்பொன்மணிசிதறும் தொகுதிரைமண்ணியின்தென்பால் *
செறிமணிமாடக்கொடிகதிரணவும் திருவெள்ளியங்குடியதுவே. 4

பாரினையுண்டுபாரினையுமிழ்ந்து பாரதப்கையெறிந்து * ஒருகால்
தேரினையூர்ந்துதேரினைத்துரந்த செங்கண்மால்சென்றுறைகோயில் *
ஏர்நிறைவயலுள்வாளைகள்மறுகி எமக்கிடமன்றிதென்றெண்ணி *
சீர்மலிபொய்கைசென்றணைகின்ற திருவெள்ளியங்குடியதுவே. 5

காற்றிடைப்பூளைகரந்தனவரந்தையுறக் கடலரக்கர்தம்சேனை *
கூற்றிடைச்செல்லக்கொடுங்கணைதுரந்த கோலவில்லிராமன்தன்கோயில் *
ஊற்றிடைநின்றவாழையின்கனிகள் ஊழ்த்துவீழ்ந்தனவுண்டுமண்டி *
சேற்றிடைக்கயல்களுகள்திகழ்வயல்சூழ் திருவெள்ளியங்குடியதுவே. 6

ஒள்ளியகருமம்செய்வனென்றுணர்ந்த மாவலிவேள்வியில்புக்கு *
தெள்ளியகுறளாய்மூவடிகொண்டு திக்குறவளர்ந்தவன்கோயில் *
அள்ளியம்பொழில்வாயிருந்துவாழ்குயில்கள் அரியரியென்றவையழைப்ப *
வெள்ளியார்வணங்கவிரைந்தருள்செய்வான் திருவெள்ளியங்குடியதுவே. 7

முடியுடையமரர்க்கிடர்செய்யும் அசுரர்தம்பெருமானை * அன்றரியாய்
மடியிடைவைத்துமார்வைமுன்கீண்ட மாயனார்மன்னியகோயில் *
படியிடைமாடத்தடியிடைத்தூணில் பதித்தபன்மணிகளினொளியால் *
விடிபகலிரவென்றறிவரிதாய திருவெள்ளியங்குடியதுவே. 8

குடிகுடியாகக்கூடிநின்றமரர் குணங்களேபிதற்றிநின்றேத்த *
அடியவர்க்கருளியரவணைத்துயின்ற ஆழியானமர்ந்துறைகோயில் *

கடியுடைக்கமலமடியிடைமலரக் கரும்பொடுபெருஞ்செந்நெலசைய *
வடிவுடையன்னம்பெடையொடுஞ்சேரும் வயல்வெள்ளியங்குடியதுவே. 9

** பண்டுமுனேனமாகியன்றொருகால் பாரிடந்தெயிற்றினில்கொண்டு *
தெண்டிரைவருடப்பாற்கடல்துயின்ற திருவெள்ளியங்குடியானை *
வண்டறைசோலைமங்கையர்தலைவன் மானவேற்கலியன்வாயொலிகள் *
கொண்டிவைபாடுந்தவமுடையார்கள் ஆள்வரிக்குரைகடலுலகே. 10

—ஆய்ச்சியர் ஆநிரை கடு கறவை பாரினை காற்று ஒள்ளிய முடி குடி பண்டு அறிவது. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நான்காம்பத்து முற்றிற்று.

---

## ஐந்தாம்பத்து—முதல்திருமொழி—அறிவதரியான்.

**அறிவதரியானனைத்துலகுமுடையான் என்னையாளுடையான் *
குறியமாணியுருவாய கூத்தன்மன்னியமருமிடம் *
நறியமலர்மேல்சுரும்பார்க்க எழிலார்மஞ்ஞைநடமாட *
பொறிகொள்சிறைவண்டிசைபாடும் புள்ளம்பூதங்குடிதானே. 1

கள்ளக்குறளாய்மாவலியைவஞ்சித்து உலகம்கைப்படுத்து *
பொள்ளைக்கரத்தபோதகத்தின் துன்பந்தவிர்த்தபுனிதனிடம் *
பள்ளச்செறுவில்கயலுகளப் பழனக்கழனியதனுள்போய் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும் புள்ளம்பூதங்குடிதானே. 2

மேவாவரக்கர்தென்னிலங்கை வேந்தன்வீயச்சரந்துரந்து *
மாவாய்பிளந்துமல்லடர்த்து மருதம்சாய்த்தமாலதிடம் *
காவார்தெங்கின்பழம்வீழக் கயல்கள்பாயக்குருகிரியும் *
பூவார்கழனியெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. 3

வெற்பால்மாரிபழுதாக்கி விறல்வாளரக்கர்தலைவன்றன் *
வற்பார்திரள்தோள்ஐந்நான்கும் துணித்தவல்வில்இராமனிடம் *
கற்பார்புரிசைசெய்குன்றம் கவினார்கூடம்மாளிகைகள் *
பொற்பார்மாடமெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. 4

மையார்தடங்கண்கருங்கூந்தல் ஆய்ச்சிமறையவைத்ததயிர் *
நெய்யார்பாலோடமுதுசெய்த நேமியங்கைமாயனிடம் *
செய்யாராரலிரைகருதிச் செங்கால்நாரைசென்றணையும் *
பொய்யாநாவின்மறையாளர் புள்ளம்பூதங்குடிதானே. 5

மின்னினன்னநுண்மருங்குல் வேயேய்தடந்தோள்மெல்லியற்கா *
மன்னுசினத்தமழவிடைகள் ஏழன்றடர்த்தமாலதிடம் *
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல் வரிவண்டிசைபாட *
புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும் புள்ளம்பூதங்குடிதானே. 6

குடையாவிலங்கல்கொண்டேந்தி மாரிபழுதாநிரைகாத்து *
சடையானோடவடல்வாணன் தடந்தோள்துணித்ததலைவனிடம் *

குடியாவண்டுகள்ளுண்ணக் கோலநீலம்மட்டுகுக்கும் *
புடையார்கழனியெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. 7

கறையார்நெடுவேல்மறமன்னர்வீய விசயன்தேர்கடவி *
இறையான்கையில்நிறையாத முண்டம்நிறைத்தவெந்தையிடம் *
மறையால்முத்தீயவைவளர்க்கும் மன்னுபுகழால்வண்மையால் *
பொறையால்மிக்கவந்தணர்வாழ் புள்ளம்பூதங்குடிதானே. 8

துன்னிமண்ணும்விண்ணாடும் தோன்றாதிருளாய்மூடியநாள் *
அன்னமாகியருமறைகள் அருளிச்செய்தவமலனிடம் *
மின்னுசோதிநவமணியும் வேயின்முத்தும்சாமரையும் *
பொன்னும்பொன்னிகொணர்ந்தலைக்கும் புள்ளம்பூதங்குடிதானே. 9

** கற்றாமறித்துக்காளியன்தன் சென்னிநடுங்கநடம்பயின்ற *
பொற்றாமரையாள்தன்கேள்வன் புள்ளம்பூதங்குடிதன்மேல் *
கற்றார்பரவும்மங்கையர்கோன் காரார்புயற்கைக்கலிகன்றி *
சொல்தானீரைந்திவைபாடச் சோரநில்லாதுயர்தாமே. 10

அடிவரவு:—அறிவது கள்ளம் மேவா வெற்பால் மையார் மின்னின் குடை கறை துன்னி கற்று தாம். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### ஐந்தாம்பத்து—இரண்டாந்திருமொழி—தாந்தம்பெருமையறியார்.

** தாம்தம்பெருமையறியார் * தூதுவேந்தர்க்காய வேந்தரூர்போல் *
காந்தள்விரல் மென்கலைநன்மடவார் * கூந்தல்கமழும் கூடலூரே. 1

செறுந்திண்திமிலேறுடைய * பின்னைபெறுந்தண்கோலம் பெற்றாரூர்போல் *
நறுந்தண்தீம் தேனுண்டவண்டு * குறிஞ்சிபாடும் கூடலூரே. 2

பிள்ளையுருவாய்த் தயிருண்டு * அடியேனுள்ளம்புகுந்த ஒருவரூர்போல் *
கள்ளநாரைவயலுள் * கயல்மீன்கொள்ளைகொள்ளும் கூடலூரே. 3

கூற்றேருருவின்குறளாய் * நிலநீரேற்றான் எந்தைபெருமானூர்போல் *
சேற்றேருழவர் கோதைப்போதூண் * கோல்தேன்முரலும் கூடலூரே. 4

தொண்டர்பரவச் சுடர்சென்றணவ * அண்டத்தமரும் அடிகளூர்போல் *
வண்டலலையுள் கெண்டைமிளிர * கொண்டலதிரும் கூடலூரே. 5

தக்கன்வேள்வி தகர்த்ததலைவன் * துக்கம்துடைத்த துணைவரூர்போல் *
எக்கலிடு நுண்மணல்மேல் * எங்கும்கொக்கின்பழம்வீழ் கூடலூரே. 6

கருந்தண்கடலும் மலையுமுலகும் * அருந்துமடிகள் அமருமூர்போல் *
பெருந்தண்முல்லைப் பிள்ளையோடி * குருந்தந்தழுவும் கூடலூரே. 7

கலைவாழ்பிணையோடணையும் * திருநீர்மலைவாழெந்தை மருவுமூர்போல் *
இலைதாழ்தெங்கின் மேல்நின்று * இளநீர்க்குலைதாழ்கிடங்கின் கூடலூரே. 8

பெருகுகாதலடியேன் * உள்ளமுருகப்புகுந்த ஒருவரூர்போல் *
அருகுகைதைமலர * கெண்டைகுருகென்றஞ்சும் கூடலூரே. 9

** காவிப்பெருநீர்வண்ணன் * கண்ணன்மேவித்திகழும் கூடலூர்மேல் *
கோவைத்தமிழால் கலியன்சொன்ன * பாவைப்பாடப் பாவம்போமே. 10

வரவு:—தாம் செறும் பிள்ளை கூற்றேர் தொண்டர் தக்கன் கருந்தண் கலை பெருகு காவி வென்றி. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### ஐந்தாம்பத்து மூன்றாந்திருமொழி—வென்றிமாமழுவேந்தி.

** வென்றிமாமழுவேந்திமுன்மண்மிசைமன்னரை மூவெழுகால்
கொன்றதேவ * நின்குரைகழல்தொழுவதோர்வகை எனக்கருள்புரியே *
மன்றில்மாம்பொழில்நுழைதந்து மல்லிகைமௌவலின்போதலர்த்தி *
தென்றல்மாமணம்கமழ்தரவரு திருவெள்ளறைநின்றானே. 1

வசையில்நான்மறைகெடுத்தவம்மலரயற்கருளி முன்பரிமுகமாய் *
இசைகொள்வேதநூலென்றிவைபயந்தவனே எனக்கருள்புரியே *
உயர்கொள்மாதவிப்போதொடுலாவிய மாருதம்வீதியின்வாய் *
திசையெல்லாம்கமழும்பொழில்சூழ் திருவெள்ளறைநின்றானே. 2

வெய்யனுயுலகேழுடன்நலிந்தவன் உடலகமிருபிளவா *
கையில்நீளுகிர்ப்படையதுவாய்த்தவனே எனக்கருள்புரியே *
மையினார்தரு,வராலினம்பாய வண்தடத்திடைக்கமலங்கள் *
தெய்வநாறுமொண்பொய்கைகள்சூழ் திருவெள்ளறைநின்றானே. 3

வாம்பரியுகமன்னர்தமுயிர்செக ஐவர்கட்கரசளித்த *
காம்பினார்திருவேங்கடப்பொருப்ப நின்காதலையருளெனக்கு *
மாம்பொழில்தளிர்கோதியமடக்குயில் வாயதுதுவர்ப்பெய்த *
தீம்பலங்கனிதேனதுநுகர் திருவெள்ளறைநின்றானே. 4

மானவேலொண்கண்மடவரல் மண்மகளழுங்கமுந்நீர்ப்பரப்பில் *
ஏனமாகியன்றிருநிலமிடந்தவனே எனக்கருள்புரியே *
கானமாமுல்லைகழைக்கரும்பேறி வெண்முறுவல்செய்தலர்கின்ற *
தேனின்வாய்மலர்முருகுகுக்கும் திருவெள்ளறைநின்றானே. 5

பொங்குநீண்முடியமரர்கள்தொழுதெழ அமுதினைக்கொடுத்தளிப்பான் *
அங்கோராமையதாகியவாதி நின்னடிமையையருளெனக்கு *
தங்குபேடையோடூடியமதுகரம் தையலார்குழலணைவான் *
திங்கள்தோய்சென்னிமாடஞ்சென்றணை திருவெள்ளறைநின்றானே. 6

ஆறினோடொருநான்குடைநெடுமுடி அரக்கன்தன்சிரமெல்லாம் *
வேறுவேறாகவில்லதுவளைத்தவனே எனக்கருள்புரியே *
மாறில்சோதியமரதகப்பாசடைத் தாமரைமலர்வார்ந்த *
தேறல்மாந்திவண்டின்னிசைமுரல் திருவெள்ளறைநின்றானே. 7

முன்னிவ்வேழுலகுணர்வின்றியிருள்மிக உம்பர்கள்தொழுதேத்த *
அன்னமாகியன்றருமறைபயந்தவனே எனக்கருள்புரியே *
மன்னுகேதகைசூதகமென்றிவை வனத்திடைச்சுரும்பினங்கள் *
தென்னவென்னவண்டின்னிசைமுரல் திருவெள்ளறைநின்றானே.

ஆங்குமாவலிவேள்வியிலிரந்துசென்று அகலிடமுழுதினையும் *
பாங்கினால்கொண்டபரம! நிற்பணிந்தெழுவேன் எனக்கருள்புரியே *
ஓங்குபிண்டியின்செம்மலரேறி வண்டுழிதரமாவேறி *
தீங்குயில்மிழற்றும்படப்பைத் திருவெள்ளறைநின்றானே. 9

** மஞ்சுலாமணிமாடங்கள்சூழ் திருவெள்ளறையதன்மேய *
அஞ்சனம்புரையுந்திருவுருவனை ஆதியையமுதத்தை *
நஞ்சுலாவியவேல்வலவன் கலிகன்றிசொல்ஐயிரண்டும் *
எஞ்சலின்றிநின்றேத்தவல்லார் இமையோர்க்கரசாவர்களே. 10

அடிவரவு—வென்றி வசை வெய்யன் வாம்பரி மானவேல் பொங்கு ஆறு முன் ஆங்கு மஞ்சு உந்திமேல். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து—நான்காந்திருமொழி—உந்திமேல்நான்முகனை.

** உந்திமேல்நான்முகனைப்படைத்தான் உலகுண்டவ
னெந்தைபெம்மான் * இமையோர்கள்தாதைக்கு இடமென்பரால் *
சந்தினோடுமணியுங்கொழிக்கும் புனல்காவிரி *
அந்திபோலும்நிறத்தார்வயல்சூழ் தென்னரங்கமே 1

வையமுண்டாலிலைமேவுமாயன் மணிநீண்முடி *
பைகொள்நாகத்தணையான் பயிலுமிடமென்பரால் *
தையனல்லார்குழல்மாலையும் மற்றவர்தடமுலை *
செய்யசாந்துங்கலந்திழிபுனல்சூழ் தென்னரங்கமே.

பண்டிவ்வையமளப்பான்சென்று மாவலிகையில்நீர்
கொண்ட * ஆழித்தடக்கைக் குறளனிடமென்பரால் *
வண்டுபாடும்மதுவார்புனல் வந்திழிகாவிரி *
அண்டநாறும்பொழில்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. 3

விளைத்தவெம்போர்விறல்வாளரக்கன் நகர்பாழ்பட *
வளைத்தவல்வில்தடக்கையவனுக்கு இடமென்பரால் *
துளைக்கையானைமருப்புமகிலும் கொணர்ந்துந்தி * முன்
திளைக்குஞ்செல்வப்புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. 4

வம்புலாங்கூந்தல்மண்டோதரிகாதலன் வான்புக *
அம்புதன்னால்முனிந்த அழகனிடமென்பரால் *
உம்பர்கோனுமுலகேழும் வந்தீண்டிவணங்கும் * நல்
செம்பொனாருமதில்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. 5

கலையுடுத்தவகலல்குல் வன்பேய்மகள்தாயென *
முலைகொடுத்தாளுயிருண்டவன் வாழிடமென்பரால் *
குலையெடுத்தகதலிப் பொழிலூடும்வந்துந்தி * முன்
அலையெடுக்கும்புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. 6

கஞ்சனெஞ்சுங்கடுமல்லரும் சகடமுங்காலினால் *
துஞ்சவென்றசுடராழியான் வாழிடமென்பரால் *
பஞ்சுசேர்மாளிகை நீடகில்புகையும் * மறையோர்
செஞ்சொல்வேள்விப்புகையுங்கமழும் தென்னரங்கமே. 7

ஏனமீனாமையோடு அரியுஞ்சிறுகுறளுமாய் *
தானுமாய தரணித்தலைவனிடமென்பரால் *
வானும்மண்ணும்நிறையப் புகுந்தீண்டிவணங்கும் * நல்
தேனும்பாலுங்கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே. 8

சேயனென்றும்மிகப்பெரியன் நுண்ணேர்மையினாய * இம்
மாயையாருமறியாவகையான் இடமென்பரால் *
வேயின்முத்தும்மணியுங்கொணர்ந்து ஆர்புனல்காவிரி *
ஆயபொன்மாமதிள்சூழ்ந்து அழகார்தென்னரங்கமே. 9

** அல்லிமாதரமரும் திருமார்வனரங்கத்தை *
கல்லின்மன்னுமதிள் மங்கையர்கோன்கலிகன்றிசொல் *
நல்லிசைமாலைகள் நாலிரண்டுமிரண்டுமுடன் *
வல்லவர்தாமுலகாண்டு பின்வானுலகாள்வரே. 10

உந்தி வையம் பண்டு விளைத்த வம்பு கலை கஞ்சன் ஏனம் சேயன் அல்லி வெருவாதாள். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து—ஐந்தாந்திருமொழி,—வெருவாதாள்வாய்வெருவி.

** வெருவாதாள்வாய்வெருவி வேங்கடமே வேங்கடமே யென்கின்றாளால் *
மருவாளாலென்குடங்கால் வாள்நெடுங்கண் துயில்மறந்தாள் * வண்டார்கொண்ட
லுருவாளன்வானவர்தமுயிராளன் ஒலிதிரைநீர்ப்பௌவம்கொண்ட
திருவாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சிந்திக்கேனே. 1

கலையாளாவகலல்குல் கனவளையும்கையாளாவென்செய்கேன்நான் *
விலையாளாவடியேனை வேண்டுதியோவேண்டாயோவென்னும் * மெய்ய
மலையாளன்வானவர்தம்தலையாளன் மராமரமேழெய்தவென்றிச்
சிலையாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சிந்திக்கேனே. 2

மானாயமென்னோக்கி வாள்நெடுங்கண்ணீர்மல்கும்வளையும்சோரும் *
தேனாயநறுந்துழாயலங்கலின் திறம்பேசியுறங்காள்காண்மின் *
கானாயன்கடிமனையில்தயிருண்டுநெய்பருக நந்தன்பெற்ற
ஆனாயன் * என்மகளைச்செய்தனகள் அம்மனைமீர்அறிகிலேனே. 3

தாய்வாயில்சொற்கேளாள் தன்னாயத்தோடணையாள்தடமென்கொங்கை
யே * ஆரச்சாந்தணியாள் எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் *
பேய்மாயமுலையுண்டிவ்வுலகுண்டபெருவயிற்றன் பேசில்நங்காய் *
மாமாயனென்மகளைச்செய்தனகள் மங்கைமீர்மதிக்கிலேனே.

பூண்முலைமேல்சாந்தணியாள் பொருகயற்கண்மையெழுதாள்பூவைபேணாள் *
ஏணறியாளெத்தனையும் எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் *
நாண்மலராள்நாயகனாய் நாமறியவாய்ப்பாடிவளர்ந்தநம்பி *
ஆண்மகனாயென்மகளைச்செய்தனகள் அம்மனைமீரறிகிலேனே. 5

தாதாடுவனமாலை தாராரோவென்றென்றேதளர்ந்தாள்காண்மின் *
யாதானுமொன்றுரைக்கில் எம்பெருமான்திருவரங்கமென்னும் * பூமேல்
மாதாளன்குடமாடிமதுசூதன் மன்னர்க்காய்முன்னம்சென்ற
தூதாளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்சொல்லுகேனே. 6

வாராளுமிளங்கொங்கை வண்ணம்வேறாயினவாறெண்ணாள் * எண்ணில்
பேராளன்பேரல்லால்பேசாள் இப்பெண்பெற்றேனென்செய்கேன்நான் *
தாராளன்தண்குடந்தைநகராளன் ஐவர்க்காயமரிலுய்த்த
தேராளன் * என்மகளைச்செய்தனகள் எங்ஙனம்நான்செப்புகேனே. 7

உறவாதுமிலளென்றென்றொழியாது பலரேசுமலராயிற்றால் *
மறவாதேயெப்பொழுதும் மாயவனேமாதவனேயென்கின்றாளால் *
பிறவாதபேராளன்பெண்ணாளன்மண்ணாளன் விண்ணோர்தங்க
ளறவாளன் * என்மகளைச்செய்தனகள் அம்மனைமீரறிகிலேனே. 8

பந்தோடுகழல்மருவாள் பைங்கிளியும்பாலூட்டாள்பாவைபேணாள் *
வந்தானோதிருவரங்கன் வாராரோவென்றென்றேவளையுஞ்சோரும் *
சந்தோகன்பௌழியனைந்தழலோம்பு தைத்திரியன்சாமவேதி *
அந்தோவந்தென்மகளைச்செய்தனகள் அம்மனைமீரறிகிலேனே.

** சேலுகளும்வயல்புடைசூழ் திருவரங்கத்தம்மானைச்சிந்தைசெய்த *
நீலமலர்க்கண்மடவாள்நிறையழிவைத் தாய்மொழிந்தவதனை * நேரார்
காலவேல்பரகாலன் கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார் *
மாலைசேர்வெண்குடைக்கீழ்மன்னவராய்ப் பொன்னுலகில்வாழ்வர்தாமே. 10

அடிவரவு:—வெருவாதாள் கலை மான் தாய் பூண் தாதாடு வாராளும் உறவு பந்தோடு சேல் கைம்மானம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### ஐந்தாம்பத்து—ஆறுந்திருமொழி—கைம்மானமழகளிற்றை.

** கைம்மானமழகளிற்றைக் கடல்கிடந்தகருமணியை *
மைம்மானமரதகத்தை மறையுரைத்ததிருமாலை *
எம்மானையெனக்கென்றுமினியானைப் பனிகாத்த
வம்மானை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. 1

பேரானைக் குறுங்குடியெம்பெருமானை * திருத்தண்கா
வூரானைக் கரம்பனூருத்தமனை * முத்திலங்கு
காரார்திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டும் *
ஆராதென்றிருந்தானைக் கண்டதுதென்னரங்கத்தே. 2

ஏனாகியுலகிடந்து அன்றிருநிலனும்பெருவிசும்பும் *
தானாயபெருமானைத் தன்னடியார்மனத்தென்றும் *
தேனாகியமுதாகித் திகழ்ந்தானைமகிழ்ந்தொருகால் *
ஆனாயனானானைக் கண்டதுதென்னரங்கத்தே. 3

வளர்ந்தவனைத்தடங்கடலுள் வலியுருவில்திரிசகடம் *
தளர்ந்ததிரவுதைத்தவனைத் தரியாதன்றிரணியனைப்
பிளந்தவனை * பெருநிலமீரடிநீட்டிப் பண்டொருநாள்
அளந்தவனை * யான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. 4

நீரழலாய்நெடுநிலனாய் நின்றானை * அன்றரக்க
னூரழலாலுண்டானைக் கண்டார்பின்காணாமே *
பேரழலாய்ப்பெருவிசும்பாய்ப் பின்மறையோர்மந்திரத்தின் *
ஆரழலாலுண்டானைக் கண்டதுதென்னரங்கத்தே. 5

தஞ்சினத்தைத்தவிர்த்தடைந்தார் தவநெறியை * தரியாது
கஞ்சனைக்கொன்று அன்றுலகமுண்டுமிழ்ந்தகற்பகத்தை *
வெஞ்சினத்தகொடுந்தொழிலோன் விசையுருவையசைவித்த *
அஞ்சிறைப்புட்பாகனை யான்கண்டதுதென்னரங்கத்தே. 6

** சிந்தனையைத்தவநெறியைத் திருமாலை * பிரியாது
வந்தெனதுமனத்திருந்த வடமலையை * வரிவண்டார்
கொந்தணைந்தபொழிற்கோவல் உலகளப்பானடிநிமிர்த்த *
அந்தணனையான்கண்டது அணிநீர்த்தென்னரங்கத்தே. 7

துவரித்தவுடையவர்க்கும் தூய்மையில்லாச்சமணர்க்கும் *
அவர்கட்கங்கருளில்லாவருளானை * தன்னடைந்த
எமர்கட்குமடியேற்கும் எம்மாற்குமெம்மனைக்கும் *
அமரர்க்கும்பிரானாரைக் கண்டதுதென்னரங்கத்தே. 8

பொய்வண்ணம்மனத்தகற்றிப் புலனைந்தும்செலவைத்து *
மெய்வண்ணம்நினைந்தவர்க்கு மெய்ந்நின்றவித்தகனை *
மைவண்ணம்கருமுகில்போல் திகழ்வண்ணமரதகத்தின் *
அவ்வண்ணவண்ணனை யான்கண்டதுதென்னரங்கத்தே 9

** ஆமருவிநிரைமேய்த்த அணியரங்கத்தம்மானை *
காமருசீர்க்கலிகன்றி ஒலிசெய்தமலிபுகழ்சேர் *
நாமருவுதமிழ்மாலை நாலிரண்டோடிரண்டினையும் *
தாமருவிவல்லார்மேல் சாராதீவினைதானே. 10

—கைம்மானம் பேரானை ஏனாகி வளர்ந்தவனை நீர் தம் சிந்தனை துவரித்த பொய் ஆமருவி பண்டை. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஐந்தாம்பத்து—ஏழாந்திருமொழி—பண்டைநான்மறை.

** பண்டைநான்மறையும்வேள்வியும்கேள்விப்பதங்களும் பதங்களின்பொருளும் *
பிண்டமாய்விரிந்தபிறங்கொளியனலும் பெருகியபுனலொடுநிலனும் *
கொண்டல்மாருதமும்குரைகடலேழும் ஏழுமாமலைகளும்விசும்பும் *
அண்டமும்தானாய்நின்றவெம்பெருமான் அரங்கமாநகரமர்ந்தானே. 1

இந்திரன்பிரமனீசனென்றிவர்கள் எண்ணில்பல்குணங்களேயியற்ற *
தந்தையுந்தாயும்மக்களும்மிக்கசுற்றமும் சுற்றிநின்றகலாப்
பந்தமும் * பந்தமறுப்பதோர்மருந்தும்பான்மையும் பல்லுயிர்க்கெல்லாம் *
அந்தமும்வாழ்வுமாயவெம்பெருமான் அரங்கமாநகரமர்ந்தானே. 2

மன்னுமாநிலனும்மலைகளுங்கடலும் வானமுந்தானவருலகும் *
துன்னுமாயிருளாய்த்துலங்கொளிசுருங்கித் தொல்லைநான்மறைகளும்மறைய *
பின்னும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கிப் பிறங்கிருள்நிறங்கெட * ஒருநாள்
அன்னமாயன்றங்கருமறைபயந்தான் அரங்கமாநகரமர்ந்தானே. 3

மாயிருங்குன்றமொன்றுமத்தாக மாசுணமதனொடுமளவி *
பாயிரும்பௌவம்பகடுவிண்டலறப் படுதிரைவிசும்பிடைப்படர *
சேயிருவிசும்பும்திங்களுஞ்சுடரும் தேவரும்தாமுடன்திசைப்ப *
ஆயிரந்தோளாலலைகடல்கடைந்தான் அரங்கமாநகரமர்ந்தானே. 4

எங்ஙனேயுய்வர்தானவர்நினைந்தால் இரணியனிலங்குபூணகலம் *
பொங்குவெங்குருதிபொன்மலைபிளந்து பொழிதருமருவியொத்திழிய *
வெங்கண்வாளெயிற்றோர்வெள்ளிமாவிலங்கல் விண்ணுறக்கனல்விழித்தெழுந்தது *
அங்ஙனேயொக்கவரியுருவானான் அரங்கமாநகரமர்ந்தானே. 5

ஆயிரங்குன்றம்சென்றுதொக்கனைய அடல்புரையெழில்திகழ்திரடோள் *
ஆயிரந்துணியவடல்மழுப்பற்றி மற்றவனகல்விசும்பணைய *
ஆயிரம்பெயராலமரர்சென்றிறைஞ்ச அறிதுயிலலைகடல்நடுவே *
ஆயிரஞ்சுடர்வாயரவணைத்துயின்றான் அரங்கமாநகரமர்ந்தானே. 6

சுரிகுழல்கனிவாய்த்திருவினைப்பிரித்த கொடுமையிற்கடுவிசையரக்கன் *
எரிவிழித்திலங்குமணிமுடிபொடிசெய்து இலங்கைபாழ்படுப்பதற்கெண்ணி *
வரிசிலைவளையவடுசரந்துரந்து மறிகடல்நெறிபட * மலையால்
அரிகுலம்பணிகொண்டலைகடலடைத்தான் அரங்கமாநகரமர்ந்தானே. 7

ஊழியாயோமத்துச்சியாய் ஒருகாலுடையதேரொருவனாய் * உலகில்
சூழிமால்யானைத்துயர்கெடுத்து இலங்கைமலங்கவன்றடுசரந்துரந்து *
பாழியால்மிக்கபார்த்தனுக்கருளிப் பகலவனொளிகெட * பகலே
ஆழியாலன்றங்காழியைமறைத்தான் அரங்கமாநகரமர்ந்தானே. 8

பேயினார்முலையூண்பிள்ளையாயொருகால் பெருநிலம்விழுங்கியதுமிழ்ந்த
வாயனாய் * மாலாயாலிலைவளர்ந்து மணிமுடிவானவர்தமக்குச்

சேயனாய் * அடியேற்கணியனாய்வந்து என்சிந்தையுள்வெந்துயரறுக்கும் *
ஆயனாயன்றுகுன்றமொன்றெடுத்தான் அரங்கமாநகரமர்ந்தானே. 9

** பொன்னுமாமணியும்முத்தமுஞ்சுமந்து பொருதிரைமாநதிபுடைசூழ்ந்து *
அன்னமாடுலவுமலைபுனல்சூழ்ந்த அரங்கமாநகரமர்ந்தானை *
மன்னுமாமாடமங்கையர்தலைவன் மானவேற்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார் நாளும்பழவினைபற்றறுப்பாரே. 10

அடிவரவு:—பண்டை இந்திரன் மன்னு மாயிரும் எங்ஙனே ஆயிரம் சுரி ஊழி பேயினார் பொன்னும் ஏழை. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து—எட்டாந்திருமொழி—ஏழையேதலன்.

ஏழையேதலன்கீழ்மகனென்னாதிரங்கி மற்றவற்கின்னருள்சுரந்து *
மாழைமான்மடநோக்கியுன்தோழி உம்பியெம்பியென்றொழிந்திலை * உகந்து
தோழன்நீயெனக்கிங்கொழியென்றசொற்கள்வந்து அடியேன்மனத்திருந்திட *
ஆழிவண்ணநின்னடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 1

வாதமாமகன்மற்கடம்விலங்கு மற்றோர்சாதியென்றொழிந்திலை * உகந்து
காதலாதரங்கடலினும்பெருகச் செய்தகவினுக்கில்லைகைம்மாறென்று *
கோதில்வாய்மையினாயொடுமுடனே உண்பன்நானென்றவொண்பொருள் * எனக்கு
மாதல்வேண்டுமென்றடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 2

கடிகொள்பூம்பொழில்காமருபொய்கை வைகுதாமரைவாங்கியவேழம் *
முடியும்வண்ணமோர்முழுவலிமுதலைபற்ற மற்றதுநின்சரண்நினைப்ப *
கொடியவாய்விலங்கினுயிர்மலங்கக் கொண்டசீற்றமொன்றுண்டுளதறிந்து * உன்
அடியனேனும்வந்தடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 3

நஞ்சுசோர்வதோர்வெஞ்சினவரவம் வெருவிவந்துநின்சரணெனச்சரணா *
நெஞ்சில்கொண்டுநின்னஞ்சிறைப்பறவைக்கு அடைக்கலங்கொடுத்தருள்செய்ததறிந்து *
வெஞ்சொலாளர்கள்நமன்தமர்கடியர் கொடியசெய்வனவுள * அதற்கடியேன்
அஞ்சிவந்துநின்னடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 4

மாகமாநிலம்முழுதும்வந்திறைஞ்சும் மலரடிக்கண்டமாமறையாளன் *
தோகைமாமயிலன்னவரின்பம் துற்றிலாமையிலத்தவிங்கொழிந்து *
போகம்நீயெய்திப்பின்னும்நம்மிடைக்கே போதுவாயென்றபொன்னருள் * எனக்கும்
ஆகவேண்டுமென்றடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 5

மன்னுநான்மறைமாமுனிபெற்றமைந்தனை மதியாதவெங்கூற்றந்
தன்னையஞ்சி * நின்சரணெனச்சரணாய்த் தகவில்காலனையுகமுனிந்தொழியா *
பின்னையென்றும்நின்திருவடிபிரியாவண்ணம் எண்ணியபேரருள் * எனக்கும்
அன்னதாகுமென்றடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 6

ஓதுவாய்மையுமுவனியப்பிறப்பும் உனக்குமுன்தந்தவந்தணனொருவன் *
காதலனென்மகன்புகலிடங்காணேன் கண்டுநீதருவாயெனக்கென்று *
கோதில்வாய்மையினானுனைவேண்டிய குறைமுடித்தவன்சிறுவனைக்கொடுத்தாய் *
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே.

வேதவாய்மொழியந்தணனொருவன் எந்தைநின்சரணென்னுடைமனைவி *
காதல்மக்களைப்பயத்தலுங்காணாள் கடியதோர்தெய்வம்கொண்டொளிக்குமென்றழைப்ப *
ஏதலார்முன்னேயின்னருளவர்க்குச்செய்து உன்மக்கள்மற்றிவரென்றுகொடுத்தாய் *
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 8

** துளங்குநீண்முடியரசர்தங்குரிசில் தொண்டைமன்னவன்திண்டிறலொருவற்கு *
உளங்கொளன்பினோடின்னருள்சுரந்து அங்கோடுநாழிகையேழுடனிருப்ப *
வளங்கொள்மந்திரம்மற்றவற்கருளிச்செய்தவாறு அடியேனறிந்து * உலக
மளந்தபொன்னடியேயடைந்துய்ந்தேன் அணிபொழில்திருவரங்கத்தம்மானே. 9

** மாடமாளிகைசூழ்திருமங்கைமன்னன் ஒன்றலர்தங்களைவெல்லும் *
ஆடல்மாவலவன்கலிகன்றி அணிபொழில்திருவரங்கத்தம்மானை *
நீடுதொல்புகழாழிவல்லானை எந்தையைநெடுமாலைநினைந்த *
பாடல்பத்திவைபாடுமின்தொண்டீர் பாடநும்மிடைப்பாவம்நில்லாவே. 10

அடிவரவு:—ஏழை வாதம் கடி நஞ்சு மாகம் மன்னு ஓது வேதம் துளங்கு மாடம் கை.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து—ஒன்பதாந்திருமொழி,—கையிலங்காழிசங்கன்.

** கையிலங்காழிசங்கன் கருமுகில்திருநிறத்தன் *
பொய்யிலன்மெய்யன் தன்தாளடைவரேலடிமையாக்கும் *
செய்யலர்கமலமோங்குசெறிபொழில்தென்திருப்பேர் *
பையரவணையான்நாமம் பரவிநானுய்ந்தவாறே.

வங்கமார்கடல்களேழும் மலையும்வானகமுமற்றும் *
அங்கண்மாஞாலமெல்லாம் அமுதுசெய்துமிழ்ந்தவெந்தை *
திங்கள்மாமுகிலணவு செறிபொழில்தென்திருப்பேர் *
எங்கள்மாலிறைவன்நாமம் ஏத்திநானுய்ந்தவாறே. 2

ஒருவனையுந்திப்பூமேல் ஓங்குவித்தாகந்தன்னால் *
ஒருவனைச்சாபம்நீக்கி உம்பராளென்றுவிட்டான் *
பெருவரைமதிள்கள்சூழ்ந்த பெருநகரரவணைமேல் *
கருவரைவண்ணன்தென்பேர் கருதிநானுய்ந்தவாறே. 3

ஊனமர்தலையொன்றேந்தி உலகெலாந்திரியுமீசன் *
ஈனமர்சாபம்நீக்காயென்ன ஒண்புனலையீந்தான் *
தேனமர்பொழில்கள்சூழ்ந்த செறிவயல்தென்திருப்பேர் *
வானவர்தலைவன்நாமம் வாழ்த்திநானுய்ந்தவாறே. 4

வக்கரன்வாய்முன்கீண்ட மாயனேயென்றுவானோர்
புக்கு * அரண்தந்தருளாயென்னப் பொன்னாகத்தானை *
நக்கரியுருவமாகி நகங்கிளர்ந்திடந்துகந்த *
சக்கரச்செல்வன்தென்பேர்த் தலைவன்தாளடைந்துய்ந்தேனே. 5

விலங்கலால்கடலடைத்து விளங்கிழைபொருட்டு * வில்லால்
இலங்கைமாநகர்க்கிறைவன் இருபதுபுயம்துணித்தான் *
நலங்கொள்நான்மறைவல்லார்கள் ஓத்தொலியேத்தக்கேட்டு *
மலங்குபாய்வயல்திருப்பேர் மருவிநான்வாழ்ந்தவாறே. 6

வெண்ணெய்தானமுதுசெய்ய வெகுண்டுமத்தாய்ச்சியோச்சி *
கண்ணியார்குறுங்கயிற்றால் கட்டவெட்டென்றிருந்தான் *
திண்ணமாமதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள் * வேலை
வண்ணனார்நாமம்நாளும் வாய்மொழிந்துய்ந்தவாறே. 7

அம்பொனாருலகமேழுமறிய ஆய்ப்பாடிதன்னுள் *
கொம்பனார்பின்னைகோலம் கூடுதற்கேறுகொன்றான் *
செம்பொனார்மதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள்மேவும் *
எம்பிரான்நாமம்நாளும் ஏத்திநானுய்ந்தவாறே. 8

நால்வகைவேதம் ஐந்துவேள்வியாறங்கம்வல்லார் *
மேலைவானவரில்மிக்க வேதியராதிகாலம் *
சேலுகள்வயல்திருப்பேர்ச் செங்கண்மாலோடும்வாழ்வார் *
சீலமாதவத்தர்சிந்தையாளி என்சிந்தையானே. 9

** வண்டறைபொழில்திருப்பேர் வரியரவணையில்பள்ளி
கொண்டு * உறைகின்றமாலைக் கொடிமதிள்மாடமங்கை *
திண்திறல்தோள்கலியன் செஞ்சொலால்மொழிந்தமாலை *
கொண்டிவைபாடியாடக் கூடுவர்நீள்விசும்பே. 10

—கை வங்கம் ஒருவனை ஊன் வக்கரன் விலங்கலால் வெண்ணெய் அம்பொன் நால் வகை வண்டறை தீதறு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாம்பத்து பத்தாந்திருமொழி—தீதறுநிலத்தொடு.

** தீதறுநிலத்தொடெரிகாலினொடு நீர்கெழுவிசும்புமவையாய் *
மாசறுமனத்தினொடுறக்கமொடிறக்கை அவையாயபெருமான் *
தாய்செறவுளைந்தயிருண்டுகுடமாடு தடமார்வர்தகைசேர் *
நாதனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 1

உய்யும்வகையுண்டுசொனசெய்யில் உலகேழுமொழியாமைமுனநாள் *
மெய்யினளவேயமுதுசெய்யவல ஐயனவன்மேவுநகர்தான் *
பையவரிவண்டுமதுவுண்டுகிளையோடு மலர்கிண்டியதன்மேல் *
நைவளம்நவிற்றுபொழில் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 2

உம்பருலகேழுகடலேழுமலையேழும் ஒழியாமைமுனநாள் *
தம்பொன்வயிறாரளவுமுண்டவையுமிழ்ந்த தடமார்வர்தகைசேர் *
வம்புமலர்கின்றபொழில்பைம்பொன்வருதும்பிபணி கங்குல்வயல்சூழ் *
நம்பனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 3

பிறையினொளியெயிறிலகமுறுகியெதிர்பொருதுமென வந்தவசுரர் *
இறைகளவைநெறுநெறெனவெறியவவர்வயிறழல நின்றபெருமான் *
சிறைகொள்மயில்குயில்பயிலமலர்களுகவளிமுரல அடிகொள்நெடுமா *
நறைசெய்பொழில்மழைதவழும் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 4

மூளவெரிசிந்திமுனிவெய்தியமர்செய்துமென வந்தவசுரர் *
தோளுமவர்தாளும்முடியோடுபொடியாக நொடியாமளவெய்தான் *
வாளும்வரிவில்லும்வளையாழிகதைசங்கம் இவையங்கையுடையான் *
நாளுமுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 5

தம்பியொடுதாமொருவர்தன்துணைவிகாதல் துணையாகமுனநாள் *
வெம்பியெரிகானகமுலாவுமவர்தாம் இனிதுமேவுநகர்தான் *
கொம்புகுதிகொண்டுகுயில்கூவமயிலாலும் எழிலார்புறவுசேர் *
நம்பியுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 6

தந்தைமனமுந்துதுயர்நந்தவிருள்வந்தவிறல் நந்தன்மதலை *
எந்தையிவனென்றமரர்கந்தமலர்கொண்டுதொழ நின்றநகர்தான் *
மந்தமுழவோசைமழையாகவெழுகார் மயில்களாடுபொழில்சூழ் *
நந்திபணிசெய்தநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 7

எண்ணில்நினைவெய்தியினியில்லையிறையென்று முனியாளர்திருவார் *
பண்ணில்மலிகீதமொடுபாடியவராடலொடு கூடவெழிலார் *
மண்ணிலிதுபோலுநகரில்லையென வானவர்கள்தாம்மலர்கள்தூய் *
நண்ணியுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே.

வங்கமலிபௌவமதுமாமுகடினுச்சிபுக மிக்கபெருநீர் *
அங்கமழியாரவனதாணை தலைசூடுமடியாரறிதியேல் *
பொங்குபுனலுந்துமணிகங்குலிருள்சீறுமொளி யெங்குமுளதால் *
நங்கள்பெருமானுறையும் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. 9

** நறைசெய்பொழில்மழைதவழும் நந்திபுரவிண்ணகரம்நண்ணியுறையும் *
உறைகொள்புகராழிசுரிசங்கமவை அங்கையுடையானை * ஒளிசேர்
கறைவளரும்வேல்வல்ல கலியனொலிமாலையிவையைந்துமைந்தும் *
முறையிலிவைபயிலவலவடியவர்கள்கொடுவினைகள் முழுதகலுமே. 10

அடிவரவு:—தீது உய்யும் உம்பர் பிறை மூள தம்பியொடு தந்தை எண்ணில் வங்கம் நறை செய் வண்டு. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஐந்தாம்பத்து முற்றிற்று.

---

# ஆறாம்பத்து.

---

## முதல் திருமொழி—வண்டுணுநறுமலர்.

** வண்டுணுநறுமலரிண்டைகொண்டு பண்டைநம்வினைகெடவென்று * அடிமேல்
தொண்டருமமரரும்பணியநின்று அங்கண்டமொடகலிடமளந்தவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 1

அண்ணல்செய்தலைகடல்கடைந்து அதனுள்கண்ணுதல்நஞ்சுண்ணக்கண்டவனே *
விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதுண்டவெம்பெருமானே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 2

குழல்நிறவண்ணநின்கூறுகொண்ட தழல்நிறவண்ணன்நண்ணார்நகரம்
விழ * நனிமலைசிலைவளைவுசெய்து அங்கழல்நிறவம்பதுவானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 3

நிலவொடுவெயில்நிலவிருசுடரும் உலகமுமுயிர்களுமுண்டொருகால் *
கலைதருகுழவியினுருவினையாய் அலைகடலாலிலைவளர்ந்தவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 4

பாரெழுகடலெழுமலையெழுமாய்ச் சீர்கெழுமிவ்வுலகேழுமெல்லாம் *
ஆர்கெழுவயிற்றினிலடக்கிநின்று அங்கோரெழுத்தோருருவானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 5

கார்கெழுகடல்களும்மலைகளுமாய் ஏர்கெழுமுலகமுமாகி * முத
லார்களுமறிவருநிலையினையாய்ச் சீர்கெழுநான்மறையானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 6

உருக்குறுநறுநெய்கொண்டாரழலில் இருக்குறுமந்தணர்சந்தியின்வாய் *
பெருக்கமொடமரர்களமரநல்கும் இருக்கினிலின்னிசையானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 7

காதல்செய்திளையவர்கலவிதரும் வேதனைவினையதுவெருவுதலாம் *
ஆதலினுனதடியணுகுவன்நான் போதலர்நெடுமுடிப்புண்ணியனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. 8

சாதலும்பிறத்தலுமென்றிவற்றைக் காதல்செய்யாதுனகழலடைந்தேன் *
ஓதல்செய்நான்மறையாகி உம்பராதல்செய்மூவுருவானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே.

** பூமருபொழிலணி விண்ணகர்மேல் * காமருசீர்க் கலிகன்றிசொன்ன *
பாமருதமிழிவை பாடவல்லார் * வாமனனடியிணை மருவுவரே. 10

அடிவரவு:—வண்டு அண்ணல் குழல் நிலவு பார் கார் உருக்கு காதல் சாதல் பூமரு பொறுத்தேன். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## இரண்டாந்திருமொழி—பொறுத்தேன்.

** பொறுத்தேன்புன்சொல்நெஞ்சில் பொருளின்பமெனவிரண்டும்
இறுத்தேன் * ஐம்புலன்கட்கடனாயின வாயிலொட்டி
யறுத்தேன் * ஆர்வச்செற்றமவைதன்னை மனத்தகற்றி
வெறுத்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. 1

மறந்தேனுன்னைமுன்னம் மறந்தமதியின்மனத்தால் *
இறந்தேனெத்தனையும் அதனாலிடும்பைக்குழியில் *
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமான்திருமார்பா *
சிறந்தேன்நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே. 2

மானேய்நோக்கியர்தம் வயிற்றுக்குழியிலுழைக்கும் *
ஊனேராக்கைதன்னை உதவாமையுணர்ந்துணர்ந்து *
வானேமாநிலமே வந்துவந்தென்மனத்திருந்த
தேனே * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே.

பிறிந்தேன்பெற்றமக்கள் பெண்டிரென்றிவர்பின்னுதவா
தறிந்தேன் * நீபணித்தவருளென்னும் ஒள்வாளுருவி
எறிந்தேன் * ஐம்புலன்களிடர்தீர எறிந்துவந்து
செறிந்தேன் * நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே. 4

பாண்டேன்வண்டறையுங்குழலார்கள் பல்லாண்டிசைப்ப *
ஆண்டார்வையமெல்லாம் அரசாகிமுன்னாண்டவரே
மாண்டார் * என்றுவந்தாரந்தோ மனைவாழ்க்கைதன்னை
வேண்டேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. 5

கல்லாவைம்புலன்களவை கண்டவாறுசெய்யகில்லேன் *
மல்லாமல்லமருள்மல்லர்மாள மல்லடர்த்த
மல்லா * மல்லலம்சீர் மதிள்நீரிலங்கையழித்த
வில்லா * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. 6

வேறாயானிரந்தேன் வெகுளாதுமனக்கொளெந்தாய் *
ஆறாவெந்நரகத்து அடியேனையிடக்கருதி *
கூறாவைவர்வந்துகுமைக்கக் குடிவிட்டவரை *
தேறாதுன்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. 7

தீவாய்வல்வினையார் உடனின்றுசிறந்தவர்போல் *
மேவாவெந்நரகத்திட உற்றுவிரைந்துவந்தார் *
மூவாவானவர்தம்முதல்வா மதிகோள்விடுத்த
தேவா * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. 8

போதார்தாமரையாள் புலவிக்குலவானவர்தம்
கோதா * கோதில்செங்கோல் குடைமன்னரிடைநடந்த
தூதா * தூமொழியாய்சுடர்போல் என்மனத்திருந்த
வேதா * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. 9

** தேனார்பூம்புறவில் திருவிண்ணகர்மேயவனை *
வானாரும்மதில்சூழ் வயல்மங்கையர்கோன் * மருவார்
ஊனார்வேல்கலியன் ஒலிசெய்தமிழ்மாலைவல்லார் *
கோனாய்வானவர்தம் கொடிமாநகர்கூடுவரே. 10

—பொறுத்தேன் மறமானேய் பிரிபாண்டேன் கல்லாவேறுதீவாய் போதார் தேனார் துறப்பேன். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றாந்திருமொழி—துறப்பேனல்லேன்.

** துறப்பேனல்லேன் இன்பம்துறவாது * நின்னுருவம்
மறப்பேனல்லேன் என்றும்மறவாது * யானுலகில்
பிறப்பேனாகவெண்ணேன் பிறவாமைப்பெற்றது * நின்
திறத்தேனாதன்மையால் திருவிண்ணகரானே. 1

துறந்தேனார்வச்செற்றச்சுற்றம் துறந்தமையால் *
சிறந்தேன்நின்னடிக்கே அடிமைதிருமாலே *
அறந்தானாய்த்திரிவாய் உன்னையென்மனத்தகத்தே *
திறம்பாமல்கொண்டேன் திருவிண்ணகரானே. 2

மானேய்நோக்குநல்லார் மதிபோல்முகத்துலவும் *
ஊனேய்கண்வாளிக்கு உடைந்தோட்டந்துன்னடைந்தேன் *
கோனேகுறுங்குடியுள்குழகா திருநறையூர்த்
தேனே * வருபுனல்சூழ் திருவிண்ணகரானே. 3

சாந்தேந்துமென்முலையார் தடந்தோள்புணரின்பவெள்ளத்
தாழ்ந்தேன் * அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன் *
போந்தேன்புண்ணியனே உன்னையெய்தியென்தீவினைகள்
தீர்ந்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகரானே. 4

மற்றோர்தெய்வமெண்ணேன் உன்னையென்மனத்துவைத்துப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமையெம்பெருமான் *
வற்றாநீள்கடல்சூழ் இலங்கையிராவணனைச்
செற்றாய் * கொற்றவனே திருவிண்ணகரானே.

மையொண்கருங்கடலும் நிலனுமணிவரையும் *
செய்யசுடரிரண்டும் இவையாயநின்னை * நெஞ்சில்
உய்யும்வகையுணர்ந்தேன் உண்மையாலினி * யாதுமற்றோர்
தெய்வம்பிறிதறியேன் திருவிண்ணகரானே. 6

வேறேகூறுவதுண்டு அடியேன்விரித்துரைக்கு
மாறே * நீபணியாதடை நின்திருமனத்து *
கூறேன்நெஞ்சுதன்னால் குணங்கொண்டு * மற்றோர்தெய்வம்
தேறேனுன்னையல்லால் திருவிண்ணகரானே. 7

முளிந்தீந்தவெங்கடத்து மூரிப்பெருங்களிற்றால் *
விளிந்தீந்தமாமரம்போல் வீழ்ந்தாரைநினையாதே *
அளிந்தோர்ந்தசிந்தை நின்பாலடியேற்கு * வானுலகம்
தெளிந்தேயென்றெய்துவது திருவிண்ணகரானே. 8

சொல்லாய்திருமார்வா உனக்காகித்தொண்டுபட்ட
நல்லேனை * வினைகள்நலியாமை நம்புநம்பீ *
மல்லாகுடமாடி மதுசூதனே * உலகில்
செல்லாநல்லிசையாய் திருவிண்ணகரானே. 9

** தாரார்மலர்க்கமலத் தடஞ்சூழ்ந்ததண்புறவில் *
சீரார்நெடுமறுகில் திருவிண்ணகரானை *
காரார்புயல்தடக்கைக் கலியனொலிமாலை *
ஆராரிவைவல்லார் அவர்க்கல்லலில்லாவே. 10

அடிவரவு:—துறப்பேன் துறமானேய் சாந்துமற்றோர் மை வேறேமுளிந்து சொல் தாரார்கண்.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காந்திருமொழி—கண்ணும்சுழன்று.

** கண்ணும்சுழன்று பீளையோடீளைவந்தேங்கினால் *
பண்ணின்மொழியார் பையநடமினென்னாதமுன் *
விண்ணும்மலையும் வேதமும் வேள்வியுமாயினான் *
நண்ணுநறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 1

கொங்குண்குழலார் கூடியிருந்துசிரித்து * நீர்
இங்கென்னிருமி யெம்பால்வந்ததென்றிகழாதமுன் *
திங்களெரிகால் செஞ்சுடராயவன்தேசுடை *
நங்கள்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 2

கொங்கார்குழலார் கூடியிருந்துசிரித்து * எம்மை
எங்கோலம்ஐயா என்னினிக்காண்பதென்னுதமுன் *
செங்கோல்வலவன் தான்பணிந்தேத்தித்திகழூர் *
நங்கோன்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 5

கொம்புமரவமும் வல்லியும்வென்றநுண்ணேரிடை *
வம்புண்குழலார் வாசலடைத்திகழாதமுன் *
செம்பொன்கமுகினந்தான் கனியும்செழும்சோலைசூழ் *
நம்பனறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 4

விலங்கும்கயலும் வேலுமொண்காவியும்வென்றகண் *
சலம்கொண்டசொல்லார்தாங்கள் சிரித்திகழாதமுன் *
மலங்கும்வராலும் வாளையும்பாய்வயல்சூழ்தரு *
நலங்கொள்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 5

மின்னேரிடையார் வேட்கையைமாற்றியிருந்து *
என்னீரிருமி யெம்பால்வந்ததென்றிகழாதமுன் *
தொன்னீரிலங்கைமலங்க இலங்கெரியூட்டினன் *
நன்னீர்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 6

வில்லேர்நுதலார் வேட்கையையாற்றிச்சிரித்து * இவன்
பொல்லான்திரைந்தானென்னும் புறனுரைகேட்பதன்முன் *
சொல்லார்மறைநான்கோதி உலகில்நிலாயவர் *
நல்லார்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 7

வாளொண்கண்ணல்லார்தாங்கள் மதனனென்றார்தம்மை *
கேண்மின்களீளையோடு ஏங்குகிழவனென்னுதமுன் *
வேள்வும்விழவும் வீதியிலென்றுமறாதவூர் *
நாளுநறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 8

கனிசேர்ந்திலங்குநல்வாயவர் காதன்மைவிட்டிட *
குனிசேர்ந்துடலம் கோலில்தளர்ந்திளையாதமுன் *
பனிசேர்விசும்பில் பான்மதிகோள்விடுத்தானிடம் *
நனிசேர்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. 9

** பிறைசேர்நுதலார் பேணுதல்நம்மையிலாதமுன் *
நறைசேர்பொழில்சூழ் நறையூர்தொழுநெஞ்சமேயென்ற *
கறையார்நெடுவேல்மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
மறவாதுரைப்பவர் வானவர்க்கின்னரசாவரே. 10

கண் கொங்குண் கொங்கார் கொம்பு விலங்கு மின் வில் வாள் கனிபிறை கலங்க.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஐந்தாந்திருமொழி — கலங்கமுந்நீர்.

** கலங்கமுந்நீர்கடைந்தமுதங்கொண்டு * இமையோர்
துலங்கல்தீர நல்குசோதிச்சுடராய *
வலங்கையாழியிடங்கைச்சங்கம் உடையானூர் *
நலங்கொள்வாய்மை அந்தணர்வாழும்நறையூரே 1

முனையார்சீயமாகி அவுணன்முரண்மார்வம் *
புனைவாளுகிரால் போழ்படவீர்ந்தபுனிதனூர் *
சினையார்தேமாம் செந்தளிர்கோதிக்குயில்கூவும் *
நனையார்சோலைசூழ்ந்து அழகாயநறையூரே. 2

ஆனைப்புரவித் தேரொடுகாலாளணிகொண்ட *
சேனைத்தொகையைச்சாடி யிலங்கைசெற்றானூர் *
மீனைத்தழுவிவீழ்ந்தெழும் மள்ளர்க்கலமந்து *
நானப்புதலில் ஆமையொளிக்கும் நறையூரே.

உறியார்வெண்ணெயுண்டு உரலோடும்கட்டுண்டு *
வெறியார்கூந்தல் பின்னைபொருட்டுஆன்வென்றானூர் *
பொறியார்மஞ்ஞை பூம்பொழில்தோறும்நடமாட *
நறுநாண்மலர்மேல் வண்டிசைபாடும்நறையூரே. 4

விடையேழ்வென்று மென்தோளாய்ச்சிக்கன்பனாய் *
நடையாலின்ற மருதம்சாய்த்தநாதனூர் *
பெடையோடன்னம் பெய்வளையார்தம்பின்சென்று *
நடையோடியலி நாணியொளிக்கும்நறையூரே. 5

பகுவாய்வன்பேய் கொங்கைசுவைத்தாருயிருண்டு *
புகுவாய்நின்ற போதகம்வீழப்பொருதானூர் *
நெகுவாய்நெய்தல் பூமதுமாந்திக்கமலத்தின் *
நகுவாய்மலர்மேல் அன்னமுறங்கும்நறையூரே. 6

முந்துநூலும் முப்புரிநூலும் முன்னீந்த *
அந்தணாளன்பிள்ளையை அந்நான்றளித்தானூர் *
பொந்தில்வாழும்பிள்ளைக்காகிப் புள்ளோடி *
நந்துவாரும் பைம்புனல்வாவிநறையூரே. 7

வெள்ளைப்புரவித்தேர்விசயற்காய் விறல்வியூகம்
விள்ள * சிந்துக்கோன்விழ ஊர்ந்தவிமலனூர் *
கொள்ளைக்கொழுமீனுண் குருகோடிப்பெடையோடும் *
நள்ளக்கமலத் தேறலுகுக்கும்நறையூரே. 8

பாரையூரும்பாரந்தீரப் பார்த்தன்தன்
தேரையூரும் * தேவதேவன்சேருமூர் *

தாரையூரும் தண்தளிர்வேலிபுடைசூழ *
நாரையூரும் நல்வயல்சூழ்ந்தநறையூரே. 9

** தாமத்துளப நீண்முடிமாயன்தான்நின்ற *
நாமத்திரள்மாமாளிகைசூழ்ந்த நறையூர்மேல் *
காமக்கதிர்வேல்வல்லான் கலியனொலிமாலை *
சேமத்துணையாம் செப்புமவர்க்குத்திருமாலே. 10

அடிவரவு:—கலங்க முனை ஆனை உறி விடை பருவாய் முந்து வெள்ளை பாரை தாமத்தம்பரம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறுந்திருமொழி—அம்பரமும்பெருநிலனும்.

** அம்பரமும்பெருநிலனும்திசைகளெட்டும் அலைகடலும்குலவரையுமுண்டகண்டன் *
கொம்பமரும்வடமரத்தினிலைமேல்பள்ளி கூடினான் திருவடியேகூடகிற்பீர் *
வம்பவிழும்செண்பகத்தின்வாசமுண்டு மணிவண்டுவகுளத்தின்மலர்மேல்வைகு *
செம்பியன்கோச்செங்கணான்சேர்ந்தகோயில் திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 1

கொழுங்கயலாய்நெடுவெள்ளங்கொண்டகாலம் குலவரையின்மீதோடியண்டத்தப்பால் *
எழுந்தினிதுவிளையாடுமீசனெந்தை இணையடிக்கீழினிதிருப்பீர்இனவண்டாலும் *
உழும்செறுவில்மணிகொணர்ந்துகரைமேல்சிந்தி உலகெல்லாம்சந்தனமுமகிலுங்கொள்ள *
செழும்பொன்னிவளங்கொடுக்கும்சோழன்சேர்ந்த திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 2

பவ்வநீருடையாடையாகச்சுற்றிப் பாரகலம்திருவடியாப்பவனம்மெய்யா *
செவ்விமாதிரமெட்டும்தோளா அண்டம் திருமுடியாநின்றான்பால்செல்லகிற்பீர் *
கவ்வைமாகளிறுந்திவெண்ணியேற்றக் கழல்மன்னர்மணிமுடிமேல்காகமேற *
தெய்வவாள்வலங்கொண்டசோழன்சேர்ந்த திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 3

பைங்கணாளரியுருவாய்வெருவநோக்கிப் பருவரைத்தோளிரணியனைப்பற்றிவாங்கி *
அங்கைவாளுகிர் நுதியாலவனதாகம் அங்குருதிபொங்குவித்தானடிக்கீழ்நிற்பீர் *
வெங்கண்மாகளிறுந்திவெண்ணியேற்ற விறல்மன்னர்திறலழியவெம்மாவுய்த்த *
செங்கணான்கோச்சோழன்சேர்ந்தகோயில் திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 4

அன்றுலகமூன்றினையுமளந்து வேறோரரியுருவாயிரணியனதாகங்கீண்டு *
வென்றவனைவிண்ணுலகில்செலவுய்த்தாற்கு விருந்தாவீர்மேலெழுந்துவிலங்கல்பாய்ந்து *
பொன்சிதறிமணிகொணர்ந்துகரைமேல்சிந்திப் புலம்பரந்துநிலம்பரக்கும்பொன்னிநாடன் *
தென்தமிழன்வடபுலக்கோன்சோழன்சேர்ந்த திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 5

தன்னாலேதன்னுருவம்பயந்ததானாய்த் தயங்கொளிசேர்மூவுலகும்தானாய்வானாய் *
தன்னாலேதன்னுருவில்மூர்த்திமூன்றாய்த் தானாயனாயினான் சரணென்றுய்வீர் *
மின்னாடுவேலேந்துவிளந்தைவேளை விண்ணேறத்தனிவேலுய்த்துலகமாண்ட *
தென்னாடன்குடகொங்கன்சோழன்சேர்ந்த திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 6

முலைத்தடத்தநஞ்சுண்டுதுஞ்சப்பேய்ச்சி முதுதுவரைக்குலபதியாக்காலிப்பின்னே *
இலைத்தடத்தகுழலூதியாயர்மாதர் இனவளைகொண்டானடிக்கீழெய்தகிற்பீர் *

மலைத்தடத்தமணிகொணர்ந்துவையமுய்ய வளங்கொடுக்கும்வருபுனலம்பொன்னிநாடன் *
சிலைத்தடக்கைக்குலச்சோழன்சேர்ந்தகோயில் திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 7

முருக்கிலங்குகனித்துவர்வாய்ப்பின்னைகேள்வன் மன்னெல்லாம்முன்னவியச்சென்று* வென்றிச்
செருக்களத்துத்திறலழியச்செற்றவேந்தன் சிரந்துணித்தான்திருவடிநம்சென்னிவைப்பீர் *
இருக்கிலங்குதிருமொழிவாயெண்டோளீசற்கு எழில்மாடமெழுபதுசெய்துலகமாண்ட *
திருக்குலத்துவளச்சோழன்சேர்ந்தகோயில் திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 8

தாராளன்தண்ணரங்கவாளன் பூமேல்தனியாளன்முனியாளரேத்தநின்ற
பேராளன் * ஆயிரம்பேருடையவாளன் பின்னைக்குமணவாளன்பெருமைகேட்பீர் *
பாராளரவரிவரென்றழுந்தையேற்ற படைமன்னருடல்துணியப்பரிமாவுய்த்த *
தேராளன்கோச்சோழன்சேர்ந்தகோயில் திருநறையூர்மணிமாடம்சேர்மின்களே. 9

** செம்மொழிவாய்நால்வேதவாணர்வாழும் திருநறையூர்மணிமாடச்செங்கண்மாலை *
பொய்ம்மொழியொன்றில்லாதமெய்ம்மையாளன் புலமங்கைக்குலவேந்தன்புலமையார்ந்த *
அம்மொழிவாய்க்கலிகன்றியின்பப்பாடல் பாடுவார்வியனுலகில்நமனுர்பாடி *
வெம்மொழிகேட்டஞ்சாதேமெய்ம்மைசொல்லில் விண்ணவர்க்குவிருந்தாகும் பெருந்தக்கோரே. 10

அடிவரவு:—அம்பரம் கொழும்பவ்வம் பைங்கணன்று தன்னுலே மூலை முருக்கு தாராளன் செம்மொழி ஆளும். ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாந்திருமொழி—ஆளும்பணியும்.

** ஆளும்பணியுமடியேனைக்கொண்டான் விண்டநிசாசரரை *
தோளும்தலையுர்துணிவெய்தச் சுடுவெஞ்சிலைவாய்ச்சரந்துரந்தான் *
வேளும்சேயுமனையாரும் வேற்கணாரும்பயில்வீதி *
நாளும்விழவினொலியோவா நறையூர்நின்றநம்பியே.

முனியாய்வந்துமூவெழுகால் முடிசேர்மன்னருடல்துணிய *
தனிவாய்மழுவின்படையாண்ட தாரார்தோளான்வார்புறவில் *
பனிசேர்முல்லைபல்லரும்பப் பானலொருபால்கண்காட்ட *
நனிசேர்கமலமுகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. 2

தெள்ளார்கடல்வாய்விடவாய சினவாளரவில்துயிலமர்ந்து *
துள்ளாவருமான்விழ வாளிதுரந்தானிரந்தான்மாவலிமண் *
புள்ளார்புறவில்பூங்காவி புலன்கொள்மாதர்கண்காட்ட *
நள்ளார்கமலமுகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. 3

ஒளியாவெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சியொண்கயிற்றால் *
விளியாவார்க்கவாப்புண்டு விம்மியழுதான்மென்மலர்மேல் *
களியாவண்டுகள்ளுண்ணக் காமர்தென்றலலர்தூற்ற *
நளிர்வாய்முல்லைமுறுவலிக்கும் நறையூர்நின்றநம்பியே. 4

வில்லார்விழவில்வடமதுரை விரும்பிவிரும்பாமல்லடர்த்து *
கல்லார்திரடோள்கஞ்சனைக்காய்ந்தான் பாய்ந்தான்காளியன்மேல் *
சொல்லார்சுருதிமுறையோதிச் சோமுச்செய்யுந்தொழிலினோர் *
நல்லார்மறையோர்பலர்வாழும் நறையூர்நின்றநம்பியே. 5

வள்ளிகொழுநன்முதலாய மக்களோடுமுக்கணான்
வெள்கியோட * விறல்வாணன் வியன்தோள்வனத்தைத்துணித்துகந்தான் *
பள்ளிகமலத்திடைப்பட்ட பகுவாயலவன்முகம்நோக்கி *
நள்ளியூடும்வயல்சூழ்ந்த நறையூர்நின்றநம்பியே. 6

மிடையாவந்தவேல்மன்னர்வீய விசயன்தேர்கடவி *
குடையாவரையொன்றெடுத்தாயர்கோவாய்நின்றான் கூராழிப்
படையான் * வேதநான்கைந்துவேள்வி அங்கமாறிசையேழ் *
நடையாவல்லவந்தணர்வாழ் நறையூர்நின்றநம்பியே. 7

பந்தார்விரலாள்பாஞ்சாலி கூந்தல்முடிக்கப்பாரதத்து *
கந்தார்களிற்றுக்கழல்மன்னர்கலங்கச் சங்கம்வாய்வைத்தான் *
செந்தாமரைமேலயனோடு சிவனுமனையபெருமையோர் *
நந்தாவண்கைமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியே. 8

ஆறும்பிறையுமரவமும் அடம்புஞ்சடைமேலணிந்து * உடலம்
நீறும்பூசியேறூரும் இறையோன்சென்றுகுறையிரப்ப *
மாறொன்றில்லாவாசநீர் வரைமார்வகலத்தளித்துகந்தான் *
நாறும்பொழில்சூழ்ந்தழகாய நறையூர்நின்றநம்பியே. 9

** நன்மையுடையமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியை
கன்னிமதிள்சூழ்வயல்மங்கைக் கலியனொலிசெய்தமிழ்மாலை *
பன்னியுலகில்பாடுவார் பாடுசாராபழவினைகள் *
மன்னியுலகமாண்டுபோய் வானோர்வணங்கவாழ்வாரே. 10

–ஆறும் முனி தெள்ளாரொளி வில் வள்ளி மிடை பந்து ஆறு நன்மை மான்.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாந்திருமொழி—மான்கொண்டதோல்.

** மான்கொண்டதோல் மார்வில்மாணியாய் * மாவலிமண்
தான்கொண்டு தாளாலளந்தபெருமானை *
தேன்கொண்டசாரல் திருவேங்கடத்தானை *
நான்சென்றுநாடி நறையூரில்கண்டேனே. 1

முந்நீரைமுன்னாள்கடைந்தானை * மூழ்த்தநாள்
அந்நீரைமீனாய் அமைத்தபெருமானை *
தென்னாலிமேய திருமாலையெம்மானை *
நன்னீர்வயல்சூழ் நறையூரில்கண்டேனே. 2

தூவாயபுள்ளூர்ந்து வந்துதுறைவேழம் *
மூவாமைநல்கி முதலைதுணித்தானை *
தேவாதிதேவனைச் செங்கமலக்கண்ணனை *
நாவாயுளானை நறையூரில்கண்டேனே.

ஓடாவரியாய் இரணியனையூனிடந்த *
சேடார்பொழில்சூழ் திருநீர்மலையானை *
வாடாமலர்த்துழாய் மாலைமுடியானை *
நாடோறும்நாடி நறையூரில்கண்டேனே. 4

கல்லார்மதிள்சூழ் கடியிலங்கைக்காரரக்கன் *
வல்லாகங்கீள வரிவெஞ்சரம்துரந்த
வில்லானை * செல்வவிபீடணர்க்கு வேறாக *
நல்லானைநாடி நறையூரில்கண்டேனே. 5

உம்பருலகோடு உயிரெல்லாமுந்தியில் *
வம்புமலர்மேல் படைத்தானைமாயோனை *
அம்பன்னகண்ணாள் அசோதைதன்சிங்கத்தை *
நம்பனைநாடி நறையூரில்கண்டேனே. 6

கட்டேறுநீள்சோலைக் காண்டவத்தைத்தீமூட்டி
விட்டானை * மெய்யமமர்ந்தபெருமானை *
மட்டேறுகற்பகத்தை மாதர்க்காய் * வண்துவரை
நட்டானைநாடி நறையூரில்கண்டேனே. 7

மண்ணின்மீபாரங்கெடுப்பான் மறமன்னர் *
பண்ணின்மேல்வந்த படையெல்லாம்பாரதத்து *
விண்ணின்மீதேற விசயன்தேரூர்ந்தானை *
நண்ணிநான்நாடி நறையூரில்கண்டேனே. [illegible]

** பொங்கேறுநீள்சோதிப் பொன்னாழிதன்னோடும் *
சங்கேறுகோலத் தடக்கைப்பெருமானை *
கொங்கேறுசோலைக் குடந்தைக்கிடந்தானை *
நங்கோனைநாடி நறையூரில்கண்டேனே. 9

** மன்னுமதுரை வசுதேவர்வாழ்முதலை *
நன்னறையூர்நின்றநம்பியை * வம்பவிழ்தார்
கன்னவிலும்தோளான் கலியனொலிவல்லார் *
பொன்னுலகில்வானவர்க்குப் புத்தேளிராகுவரே. 10

அடிவரவு:—மான்முன்னீர் தூவாய் ஓடாக்கல்லும்பர் கட்டேறு மண்பொங்கு மன்னுபெ[illegible]
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்.

## ஒன்பதாம்திருமொழி—பெடையடர்த்த.

** பெடையடர்த்தமடவன்னம் பிரியாது * மலர்க்கமலம்
மடலெடுத்துமதுநுகரும் வயலுடுத்ததிருநறையூர் *
முடையடர்த்தசிரமேந்தி மூவுலகும்பலிதிரிவோன் *
இடர்கெடுத்ததிருவாளன் இணையடியேயடைநெஞ்சே. 1

கழியாருங்கனசங்கம் கலந்தெங்குந்நிறைந்தேறி *
வழியாரமுத்தீன்று வளங்கொடுக்குந்திருநறையூர் *
பழியாரும்விறலரக்கன் பருமுடிகளவைசிதற *
அழலாருஞ்சரந்துரந்தான் அடியிணையேயடைநெஞ்சே. 2

சுளைகொண்டபலங்கனிகள் தேன்பாயக்கதலிகளின் *
திளைகொண்டபழங்கெழுமு திகழ்சோலைத்திருநறையூர் *
வளைகொண்டவண்ணத்தன் பின்தோன்றல்மூவுலகோடு *
அளைவெண்ணெயுண்டான்தன் அடியிணையேயடைநெஞ்சே. 3

துன்றோளித்துகிற்படலம் துன்னியெங்குமாளிகைமேல் *
நின்றாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
மன்றாரக்குடமாடி வரையெடுத்துமழைதடுத்த *
குன்றாருந்திரடோளன் குரைகழலேயடைநெஞ்சே. 4

அகிற்குறடுஞ்சந்தனமும் அம்பொன்னுமணிமுத்தும் *
மிகக்கொணர்ந்துதிரையுந்து வியன்பொன்னித்திருநறையூர் *
பகற்கரந்தசுடராழிப்படையான் இவ்வுலகேழும் *
புகக்கரந்ததிருவயிற்றன் பொன்னடியேயடைநெஞ்சே. 5

பொன்முத்துமரியுகிரும் புழைக்கைம்மாகரிக்கோடும் *
மின்னத்தண்திரையுந்து வியன்பொன்னித்திருநறையூர் *
மின்னொத்தநுண்மருங்குல் மெல்லியலை * திருமார்வில்
மன்னத்தான்வைத்துகந்தான் மலரடியேயடைநெஞ்சே. 6

சீர்தழைத்தகதிர்ச்செந்நெல் செங்கமலத்திடையிடையின் *
பார்தழைத்துக்கரும்போங்கிப் பயன்விளைக்குந்திருநறையூர் *
கார்தழைத்ததிருவுருவன் கண்ணபிரான்விண்ணவர்கோன் *
தார்தழைத்ததுழாய்முடியன் தளிரடியேயடைநெஞ்சே. 7

** குலையார்ந்தபழுக்காயும் பசுங்காயும்பாளைமுத்தும் *
தலையார்ந்தவிளங்கமுகின் தடஞ்சோலைத்திருநறையூர் *
மலையார்ந்தகோலஞ்சேர் மணிமாடம்மிகமன்னி *
நிலையாரநின்றான்றன் நீள்கழலேயடைநெஞ்சே. 8

மறையாரும்பெருவேள்விக் கொழும்புகைபோய்வளர்ந்தெங்கும் *
நிறையாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
பிறையாருஞ்சடையானும் பிரமனுமுன்தொழுதேத்த *
இறையாகிநின்றான்றன் இணையடியேயடைநெஞ்சே.

** திண்களகமதிள்புடைசூழ் திருநறையூர்நின்றானை *
வண்களகநிலவெறிக்கும் வயல்மங்கைநகராளன் *
பண்களகம்பயின்றசீர்ப் பாடலிவைபத்தும்வல்லார் *
விண்களகத்திமையவராய் வீற்றிருந்துவாழ்வாரே. 10

அடிவரவு:—பெடை கழி சுனை தான்று அகில் பொன் சீர் குலை மறை திண் கிடந்த.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாந்திருமொழி—கிடந்தநம்பி.

** கிடந்தநம்பிகுடந்தைமேவிக் கேழலாயுலகை
யிடந்தநம்பி * எங்கள்நம்பி யெறிஞரரணழிய *
கடந்தநம்பிகடியாரிலங்கை உலகையீரடியால் *
நடந்தநம்பிநாமம்சொல்லில் நமோநாராயணமே. 1

விடந்தானுடையவரவம்வெருவச் செருவில்முனநாள் * முன்
தடந்தாமரைநீர்ப்பொய்கைபுக்கு மிக்கதாடாளன் *
இடந்தான்வையம்கேழலாகி உலகையீரடியால் *
நடந்தானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. 2

பூணாதனலும் தறுகண்வேழம்மறுக * வளைமருப்பைப்
பேணான்வாங்கி அமுதங்கொண்டபெருமான்திருமார்வன் *
பாணாவண்டுமுரலுங்கூந்தல் ஆய்ச்சிதயிர்வெண்ணெய் *
நாணாதுண்டான்நாமம்சொல்லில் நமோநாராயணமே. 3

** கல்லார்மதிள்சூழ் கச்சிநகருள்நச்சி * பாடகத்து
ளெல்லாவுலகும்வணங்க இருந்தவம்மான் * இலங்கைக்கோன்
வல்லாளாகம் வில்லால்முனிந்தவெந்தை * விபீடணற்கு
நல்லானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. 4

குடையாவரையால் நிரைமுன்காத்தபெருமான் * மருவாத
விடைதானேழும்வென்றான் கோவல்நின்றான் * தென்னிலங்கை
அடையாவரக்கர்வீயப் பொருதுமேவிவெங்கூற்றம் *
நடையாவுண்ணக்கண்டான்நாமம் நமோநாராயணமே. 5

கானவெண்குக் குரங்கும் முசுவும்படையா * அடலரக்கர்
மானமழித்துநின்ற வென்றியம்மான் * எனக்கென்றும்

தேனும்பாலுமமுதுமாய திருமால்திருநாமம் *
நானும்சொன்னேன்நமருமுரைமின் நமோநாராயணமே. 6

நின்றவரையும்கிடந்தகடலும் திசையுமிருநிலனும் *
ஒன்றுமொழியாவண்ணம் எண்ணிநின்றவம்மானார் *
குன்றுகுடையாவெடுத்த அடிகளுடையதிருநாமம் *
நன்றுகாண்மின்தொண்டீர்சொன்னேன் நமோநாராயணமே. 7

கடுங்கால்மாரிகல்லேபொழிய அல்லேயெமக்கென்று
படுங்கால் * நீயேசரணென்று ஆயரஞ்சவஞ்சாமுன் *
நெடுங்கால்குன்றம்குடையொன்றேந்தி நிரையைச்சிரமத்தால் *
நடுங்காவண்ணம்காத்தான்நாமம் நமோநாராயணமே. 8

பொங்குபுணரிக்கடல்சூழாடை நிலமாமகள்மலர்மா
மங்கை * பிரமன்சிவனிந்திரன் வானவர்நாயகராய *
எங்களடிகளிமையோர் தலைவருடையதிருநாமம் *
நங்கள்வினைகள்தவிரவுரைமின் நமோநாராயணமே. 9

** வாவித்தடஞ்சூழ்மணிமுத்தாற்று நறையூர்நெடுமாலை *
நாவில்பரவிநெஞ்சில்கொண்டு நம்பிநாமத்தை *
காவித்தடங்கண்மடவார்கேள்வன் கலியனொலிமாலை *
மேவிச்சொல்லவல்லார்பாவம் நில்லாவீயுமே. 10

—கிடந்த விடம் பூண் கல் குடை கானம் நின்ற கடும் பொங்கு வாவி கறவா.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரிய திருமொழியில் ஆறும்பத்து முற்றிற்று.

---

# ஏழாம்பத்து.

## முதல் திருமொழி—கறவாமடநாகு.

** கறவாமடநாகு தன்கன்றுள்ளினாற்போல் *
மறவாதடியேன் உன்னையேயழைக்கின்றேன் *
நறவார்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பி *
பிறவாமையெனைப்பணி யெந்தைபிரானே. 1

வற்றுமுதுநீரொடு மால்வரையேழும் *
துற்றுமுற்றுமுண்டிட தொல்புகழோனே *
அற்றேனடியேன் உன்னையேயழைக்கின்றேன் *
பெற்றேனருள்தந்திடு என்னெந்தைபிரானே. 2

தாரேன்பிறர்க்கு உன்னருளென்னிடைவைத்தாய் *
ஆரேனதுவே பருகிக்களிக்கின்றேன் *

காரேய்கடலேமலையே திருக்கோட்டி
யூரே * உகந்தாயை உகந்தடியேனே. 3

புள்வாய்பிளந்த புனிதாவென்றழைக்க *
உள்ளேநின்று என்னுள்ளங்குளிருமொருவா *
கள்வா கடன்மல்லைக்கிடந்தகரும்பே !*
வள்ளாலுன்னை யெங்ஙனம்நான் மறக்கேனே. 4

வில்லேர்நுதல் வேல்நெடுங்கண்ணியும்நீயும் *
கல்லார்கடுங்கானம் திரிந்தகளிறே *
நல்லாய்நரநாரணனே யெங்கள்நம்பி *
சொல்லாயுன்னை யான்வணங்கித்தொழுமாறே. 5

பனியேய்பரங்குன்றின் பவளத்திரளே *
முனியே திருமூழிக்களத்துவிளக்கே *
இனியாய்தொண்டரோம் பருகின்னமுதாய
கனியே * உன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. 6

கதியேலில்லை நின்னருளல்லதெனக்கு *
நிதியே திருநீர்மலைநித்திலத்தொத்தே !*
பதியேபரவித்தொழும் தொண்டர்தமக்குக்
கதியே * உன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. 7

அத்தாவரியேயென்று உன்னையழைக்க *
பித்தாவென்றுபேசுகின்றார் பிறரென்னை *
முத்தேமணிமாணிக்கமே முளைக்கின்ற
வித்தே * உன்னையெங்ஙனம்நான்விடுகேனே ? 8

தூயாய்சுடர்மாமதிபோல் உயிர்க்கெல்லாம் *
தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணா *
ஆயாவலைநீருலகேழும் முன்னுண்ட
வாயா * உன்னையெங்ஙனம்நான் மறக்கேனே. 9

** வண்டார்பொழில்சூழ் நறையூர்நம்பிக்கு * என்றும்
தொண்டாய்க் கலியனொலிசெய்தமிழ்மாலை *
தொண்டீரிவைபாடுமின் பாடிநின்றாட *
உண்டேவிசும்பு உந்தமக்கில்லைதுயரே. 10

அடிவரவு :--கறவா வற்று தாரேன் புள் வில் பனி கதி அத்தா தூயாய் வண்டார் புள்ளாய்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## இரண்டாம் திருமொழி—புள்ளாயேனமுமாய்ப் புகுந்து.

** புள்ளாயேனமுமாய்ப்புகுந்து - * என்னையுள்ளங்கொண்ட
கள்வாவென்றலும் என்கண்கள்நீர்கள்சோர்தருமால் *

உன்னைநின்றுருகி நெஞ்சமுன்னையுள்ளியக்கால் *
நள்ளேனுன்னையல்லால் நறையூர்நின்றநம்பீயோ. 1

ஓடாவாளரியின் உருவாய்மருவி * என்றன்
மாடேவந்து அடியேன்மனங்கொள்ளவல்லமைந்தா *
பாடேன்தொண்டர்தம்மைக் கவிதைப்பனுவல்கொண்டு *
நாடேனுன்னையல்லால் நிறையூர்நின்றநம்பீயோ. 2

எம்மானுமெம்மனையும் என்னைப்பெற்றொழிந்ததற்பின் *
அம்மானுமம்மனையும் அடியேனுக்காகிநின்ற *
நன்மானவொண்சுடரே நறையூர்நின்றநம்பீ * உன்
மைம்மானவண்ணமல்லால் மகிழ்ந்தேத்தமாட்டேனே. 3

சிறியாயோர்பிள்ளையுமாய் உலகுண்டோராலிலைமே
லுறைவாய் * என்னெஞ்சினுள்ளே உறைவாயுறைந்ததுதான் *
அறியாதிருந்தறியேனடியேன் அணிவண்டுகிண்டும் *
நறைவாரும்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பீயோ. 4

நீண்டாயைவானவர்கள் நினைந்தேத்திக்காண்பரிதால் *
ஆண்டாயென்றாதரிக்கப்படுவாய்க்கு நானடிமை
பூண்டேன் * என்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நாண்தானுனக்கொழிந்தேன் நறையூர்நின்றநம்பீயோ. 5

எந்தாதைதாதை அப்பாலெழுவர்பழவடிமை
வந்தார் * என்னெஞ்சினுள்ளே வந்தாயைப்போகலொட்டேன் *
அந்தோவென்னாருயிரே! அரசேயருளெனக்கு *
நந்தாமல்தந்தவெந்தாய் நறையூர்நின்றநம்பீயோ! 3

மன்னஞ்சவாயிரந்தோள் மழுவில்துணித்தமைந்தா!
என்னெஞ்சத்துள்ளிருந்து இங்கினிப்போய்ப்பிறரொருவர் *
வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன் வளைத்துவைத்தேன் *
நன்னெஞ்சவன்னமன்னும் நறையூர்நின்றநம்பீயோ. 7

எப்போதும்பொன்மலரிட்டு இமையோர்தொழுது * தங்கள்
கைப்போதுகொண்டிறைஞ்சிக் கழல்மேல்வணங்கநின்றாய் *
இப்போதென்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நற்போதுவண்டுகிண்டும் நறையூர்நின்றநம்பீயோ. 8

ஊனேராக்கைதன்னை உழந்தோம்பிவைத்தமையால் *
யானாயென்றனக்காய் அடியேன்மனம்புகுந்த
தேனே * தீங்கரும்பின்தெளிவே என்சிந்தைதன்னால் *
நானேயெய்தப்பெற்றேன் நறையூர்நின்றநம்பீயோ.

** நன்னீர்வயல்புடைசூழ் நறையூர்நின்றநம்பியை *
கல்நீரமால்வரைத்தோள் கலிகன்றிமங்கையர்கோன் *
சொல்நீரசொல்மாலை சொல்லுவார்கள் * சூழ்விசும்பில்
நன்னீர்மையால்மகிழ்ந்து நெடுங்காலம்வாழ்வாரே.

அடிவரவு:—புள் ஓடா எம்மான் சிறியாய் நீண்டாய் எந்தாதை மன் எப்போதும் ஊனேர் நன்னீர் சினவில்.. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றும் திருமொழி—சினவில்செங்கண்.

** சினவில்செங்கணரக்கருயிர்மாளச் செற்றவில்லியென்றுகற்றவர்தந்தம்
மனவுட்கொண்டு * என்றுமெப்போதும்நின்றேத்தும்மாமுனியை மரமேழெய்தமைந்தனை *
நனவில்சென்றார்க்குநண்ணற்கரியானை நானடியேன்நறையூர்நின்றநம்பியை *
கனவில்கண்டேனின்றுகண்டமையால் என்கண்ணிணைகள்களிப்பக்களித்தேனே.

தாய்நினைந்தகன்றேயொக்க என்னையும்தன்னையேநினைக்கச்செய்து * தானெனக்
காய்நினைந்தருள்செய்யுமப்பனை அன்றிவ்வையகமுண்டுமிழ்ந்திட்ட
வாயனை * மகரக்குழைக்காதனைமைந்தனை மதிள்கோவலிடைகழி
யாயனை * அமரர்க்கரியேற்றை யென்னன்பனையன்றியாதரியேனே. 2

வந்தநாள்வந்தென்னெஞ்சிடங்கொண்டான் மற்றோர்நெஞ்சறியான் * அடியேனுடைச்
சிந்தையாய்வந்துதென்புலர்க்கென்னைச்சேர்கொடான் இதுசிக்கெனப்பெற்றேன் *
கொந்துலாம்பொழில்சூழ்குடந்தைத்தலைக்கோவினைக் குடமாடியகூத்தனை *
எந்தையையெந்தைதந்தைதம்மானை எம்பிரானையெத்தால்மறக்கேனே. 3

உரங்களாலியன்றமன்னர்மாளப் பாரதத்தொருதேரைவர்க்காய்ச்சென்று *
இரங்கியூர்ந்தவர்க்கின்னருள்செய்யுமெம்பிரானை வம்பார்புனல்காவிரி *
அரங்கமாளியென்னாளிவிண்ணாளி ஆழிசூழிலங்கைமலங்கச்சென்று *
சரங்களாண்டதண்டாமரைக்கண்ணனுக்கன்றி யென்மனம்தாழ்ந்துநில்லாதே. 4

ஆங்குவெந்நரகத்தழுந்தும்போது அஞ்சேலென்றடியேனையங்கேவந்து
தாங்கு * தாமரையன்னபொன்னாரடியெம்பிரானை உம்பர்க்கணியாய்நின்ற *
வேங்கடத்தரியைப்பரிகீறியை வெண்ணெயுண்டுரலினிடையாப்புண்ட
தீங்கரும்பினை * தேனைநன்பாலினையன்றி யென்மனம்சிந்தைசெய்யாதே. 5

எட்டனைப்பொழுதாகிலும் என்றுமென்மனத்தகலாதிருக்கும்புகழ் *
தட்டலர்த்தபொன்னேயலர்கோங்கின் தாழ்பொழில்திருமாலிருஞ்சோலையங்
கட்டியை * கரும்பீன்றவின்சாற்றைக் காதலால்மறைநான்குமுன்னோதிய
பட்டனை * பரவைத்துயிலேற்றை யென்பண்பனையன்றிப்பாடல்செய்யேனே. 6

பண்ணினின்மொழியாழ்நரம்பில்பெற்ற பாலையாகிநிங்கேபுகுந்து * என்
கண்ணும்நெஞ்சும்வாயுமிடங்கொண்டான் கொண்டபின்மறையோர்மனந்தன்னுள் *

விண்ணுளார்பெருமானையெம்மானை வீங்குநீர்மகரம்திளைக்கும்கடல்
வண்ணன் * மாமணிவண்ணனெம்மண்ணல் வண்ணமேயன்றிவாயுரையாதே. 7

இனியெப்பாவம்வந்தெய்தும்சொல்லீர் எமக்கிம்மையேயருள்பெற்றமையால் * அடும்
துனியைத்தீர்த்தின்பமேதருகின்றதோர் தோற்றத்தொன்னெறியை * வையம்தொழப்படும்
முனியைவானவரால்வணங்கப்படும்முத்தினைப் பத்தர்தாம்நுகர்கின்றதோர்
கனியை * காதல்செய்தென்னுள்ளங்கொண்டகள்வனை யின்றுகண்டுகொண்டேனே. 8

என்செய்கேனடியேனுரையீர் இதற்கென்றுமென்மனத்தேயிருக்கும்புகழ் *
தஞ்சையாளியைப்பொன்பெயரோன் நெஞ்சமன்றிடந்தவனைத்தழலேபுரை *
மின்செய்வாளரக்கன்நகர்பாழ்படச் சூழ்கடல்சிறைவைத்திமையோர்தொழும் *
பொன்செய்மால்வரையைமணிக்குன்றினையன்றி யென்மனம்போற்றியென்னாதே. 9

* * தோடுவிண்டலர்பூம்பொழில்மங்கையர்தோன்றல் வாள்கலியன் திருவாலி
நாடன் * நன்னறையூர்நின்றநம்பிதன் * நல்லமாமலர்ச்சேவடிசென்னியில்
சூடியும்தொழுதுமெழுந்தாடியும் தொண்டர்கட்கவன்சொன்னசொல்மாலை *
பாடல்பத்திவைபாடுமின்தொண்டீர் பாடநும்மிடைப்பாவம்நில்லாவே. 10

அடிவரவு:—சினவில் தாய் வந்த உரங்கள் ஆங்கு எட்டனை பண்ணின் இனி யென்செய்கேன் தோடு கண். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## மூன்றாந்திருமொழி—கண்சோரவெங்குருதி.

** கண்சோரவெங்குருதிவந்திழிய வெந்தழல்போல்கூந்தலாளை *
மண்சேரமுலையுண்டமாமதலாய் வானவர்தம்கோவேயென்று *
விண்சேருமிளந்திங்களகடுரிஞ்சு மணிமாடமல்கு * செல்வத்
தண்சேறையெம்பெருமான்தாள்தொழுவார்காண்மின் என்தலைமேலாரே. 1

அம்புருவவரிநெடுங்கண் அலர்மகளைவரையகலத்தமர்ந்து * மல்லல்
கொம்புருவவிளங்கனிமேல் இளங்கன்றுகொண்டெறிந்தகூத்தர்போலாம் *
வம்பலரும்தண்சோலைவண்சேறை வானுந்துகோயில்மேய *
எம்பெருமான்தாள்தொழுவார் எப்பொழுதுமென்மனத்தேயிருக்கின்றாரே. 2

மீதோடிவாளெயிறுமின்னிலக முன்விலகுமுருவினாளை *
காதோடுகொடிமூக்கன்றுடனறுத்த கைத்தலத்தாவென்றுநின்று *
தாதோடுவண்டலம்பும் தண்சேறையெம்பெருமான்தாளையேத்தி *
போதோடுபுனல்தூவும்புண்ணியரே விண்ணவரில்பொலிகின்றாரே. 3

தேராளும்வாளரக்கன் தென்னிலங்கைவெஞ்சமத்துப்பொன்றிவீழ *
போராளும்சிலையதனால் பொருகணைகள்போக்குவித்தாயென்று * நாளும்
தாராளும்வரைமார்பன் தண்சேறையெம்பெருமானும்பராளும் *
பேராளன்பேரோதும்பெரியோரை ஒருகாலும்பிரிகிலேனே. 4

வந்திக்கும்மற்றவர்க்கும் மாசுடம்பில்வல்லமணர்தமக்குமல்லேன் *
முந்திச்சென்றரியுருவாய் இரணியனைமுரணழித்தமுதல்வர்க்கல்லால் *
சந்தப்பூமலர்ச்சோலைத் தண்சேறையெம்பெருமான்தாளை * நாளும்
சிந்திப்பார்க்கென்னுள்ளம் தேனூறியெப்பொழுதும்தித்திக்குமே. 5

பண்டேனமாயுலகையன்றிடந்த பண்பாளாவென்றாநின்று *
தொண்டானேன்திருவடியே துணையல்லால்துணையிலேன்சொல்லுகின்றேன் *
வண்டேந்தும்மலர்ப்புறவில் வண்சேறையெம்பெருமானடியார்தம்மை *
கண்டேனுக்கிதுகாணீர் என்னெஞ்சும்கண்ணிணையும்களிக்குமாறே. 6

பைவிரியும்வரியரவில் படுகடலுள்துயிலமர்ந்தபண்பாவென்றும் *
மைவிரியும்மணிவரைபோல் மாயவனேயென்றென்றும், வண்டார்நீலம் *
செய்விரியும்தண்சேறையெம்பெருமான் திருவடியைச்சிந்தித்தேற்கு * என்
ஐயறிவும்கொண்டானுக்கு ஆளானார்க்காளாமென்னன்புதானே. 7

உண்ணாதுவெங்கூற்றம் ஓவாதுபாவங்கள்சேரா * மேலை
விண்ணோரும்மண்ணோரும்வந்திறைஞ்சும் மென்தளிர்போலடியினானை *
பண்ணாரவண்டியம்பும்பைம்பொழில்சூழ் தண்சேறையம்மான்றன்னை *
கண்ணாரக்கண்டுருகிக் கையாரத்தொழுவாரைக்கருதுங்காலே. 8

கள்ளத்தேன்பொய்யகத்தேனாதலால் போதருகால்கவலையென்னும் *
வெள்ளத்தேற்கென்கொலோ விளைவயலுள்கருநீலங்களைஞர்தாளால்
தள்ள * தேன்மணநாறும் தண்சேறையெம்பெருமான்தாளை * நாளும்
உள்ளத்தேவைப்பாருக்கிதுகாணீர் என்னுள்ளமுருகுமாறே. 9

* * பூமாண்சேர்கருங்குழலார்போல்நடந்து வயல்நின்றபெடையோடு * அன்
தேமாவினின்னிழலில்கண்டுயிலும் தண்சேறையம்மான்றன்னை * [னம்
வாமான்தேர்ப்பரகாலன் கலிகன்றியொலிமாலைகொண்டுதொண்டீர் *
தூமாண்சேர்பொன்னடிமேல்சூட்டுமின் நும்துணைக்கையால்தொழுதுநின்றே.

அடிவரவு:—கண் அம்பு மீதோடி தேராளும் வந்தி பண்டு பைவிரி உண்ணாது கள்ளம் பூமாண் தந்தை. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாந்திருமொழி—தந்தைகாலில்பெருவிலங்கு.

* * தந்தைகாலில்பெருவிலங்கு தாளவிழ * நள்ளிருட்கண்
வந்தவெந்தைபெருமானார் மருவிநின்றவூர்போலும் *
முந்திவானம்மழைபொழிய மூவாவுருவின்மறையாளர் *
அந்திமூன்றுமனலோம்பும் அணியார்வீதியழுந்தூரே. 1

பாரித்தெழுந்த படைமன்னர்தம்மைமாள * பாரதத்துத்
தேரில்பாகனாயூர்ந்த தேவதேவனூர்போலும் *

நீரில்பணைத்தநெடுவாளைக்கு அஞ்சிப்போனகுருகினங்கள் *
ஆரல்கவுளோடருகணையும் அணியார்வயல்சூழழுந்தூரே. 2

செம்பொன்மதிள்சூழ்தென்னிலங்கைக்கிறைவன் சிரங்கள்ஐயிரண்டும் *
உம்பர்வாளிக்கிலக்காக உதிர்த்தவுரவோனூர்போலும் *
கொம்பிலார்ந்தமாதவிமேல் கோதிமேய்ந்தவண்டினங்கள் *
அம்பராவும்கண்மடவார் ஐம்பாலணையுமழுந்தூரே. 3

வெள்ளத்துள்ளோராலிலைமேல் மேவியடியேன்மனம்புகுந்து * என்
உள்ளத்துள்ளும்கண்ணுள்ளும் நின்றார்நின்றவூர்போலும் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடிப் போனகாதல்பெடையோடும் *
அள்ளல்செறுவில்கயல்நாடும் அணியார்வயல்சூழழுந்தூரே. 4

பகலுமிரவும்தானேயாய்ப் பாரும்விண்ணும்தானேயாய் *
நிகரில்சுடராயிருளாகி நின்றார்நின்றவூர்போலும் *
துகிலின்கொடியும்தேர்த்துகளும் துன்னிமாதர்கூந்தல்வாய் *
அகிலின்புகையால்முகிலேய்க்கும் அணியார்வீதியழுந்தூரே. 5

ஏடிலங்குதாமரைபோல் செவ்வாய்முறுவல்செய்தருளி *
மாடுவந்தென்மனம்புகுந்து நின்றார்நின்றவூர்போலும் *
நீடுமாடத்தனிச்சூலம் போழ்க்கக்கொண்டல்துளிதூவ *
ஆடலரவத்தார்ப்போவா அணியார்வீதியழுந்தூரே. 6

மாலைப்புகுந்துமலரணைமேல் வைகியடியேன்மனம்புகுந்து * என்
நீலக்கண்கள்பனிமல்க நின்றார்நின்றவூர்போலும் *
வேலைக்கடல்போல்நெடுவீதி விண்தோய்சுதைவெண்மணிமாடத்து *
ஆலைப்புகையாலழல்கதிரை மறைக்கும் வீதியழுந்தூரே. 7

வஞ்சிமருங்குலிடைநோவ மணந்துநின்றகனவகத்து * என்
நெஞ்சுநிறையக்கைகூப்பி நின்றார்நின்றவூர்போலும் *
பஞ்சியன்னமெல்லடி நற்பாவைமார்களாடகத்தின் *
அஞ்சிலம்பினார்ப்போவா அணியார்வீதியழுந்தூரே. 8

என்னைம்புலனுமெழிலுங்கொண்டு இங்கேநெருநலெழுந்தருளி *
பொன்னங்கலைகள்மெலிவெய்தப் போனபுனிதரூர்போலும் *
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல் வரிவண்டிசைபாட *
அன்னம்பெடையோடுடனாடும் அணியார்வயல்சூழழுந்தூரே. 9

* * நெல்லில்குவளைகண்காட்ட நீரில்குமுதம்வாய்காட்ட *
அல்லிக்கமலமுகங்காட்டும் கழனியழுந்தூர்நின்றானை *

வல்லிப்பொதும்பில்குயில்கூவும் மங்கைவேந்தன்பரகாலன் *
சொல்லில்பொலிந்ததமிழ்மாலை சொல்லப்பாவம்நில்லாவே. 10

அடிவரவு:—தந்தை பாரித்துச் செம்பொன் வெள்ளத்து பகலேடு மாலை வஞ்சி என் நெல்லின் சிங்கம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறுந்திருமொழி—சிங்கமதாயவுணன்.

**சிங்கமதாயவுணன் திறலாகமுன்கீண்டுகந்த *
சங்கமிடத்தானைத் தழலாழிவலத்தானை *
செங்கமலத்தயனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற*
அங்கமலக்கண்ணனை அடியேன்கண்டுகொண்டேனே. 1

கோவானார்மடியக் கொலையார்மழுக்கொண்டருளும்*
மூவாவானவனை முழுநீர்வண்ணனை * அடியார்க்கு
ஆவாவென்றிரங்கித் தென்னழுந்தையில்மன்னிநின்ற*
தேவாதிதேவனை யான்கண்டுகொண்டுதிளைத்தேனே. 2

உடையானை ஒலிநீருலகங்கள்படைத்தானை*
விடையானோடவன்று விறலாழிவிசைத்தானை*
அடையார்தென்னிலங்கையழித்தானை அணியழுந்தூ
ருடையானை * அடியேனடைந்துய்ந்துபோனேனே. 3

குன்றால்மாரிதடுத்தவனைக் குலவேழமன்று
பொன்றாமை * அதனுக்கருள்செய்தபோரேற்றை *
அன்றாவின்நறுநெய்யமர்ந்துண்ண அணியழுந்தூர்
நின்றானை * அடியேன்கண்டுகொண்டுநிறைந்தேனே. 4

கஞ்சனைக்காய்ந்தானைக் கண்ணமங்கையுள்நின்றானை *
வஞ்சனப்பேய்முலையூடு உயிர்வாய்மடுத்துண்டானை *
செஞ்சொல்நான்மறையோர் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அஞ்சனக்குன்றந்தன்னை அடியேன்கண்டுகொண்டேனே. 5

பெரியானை அமரர்தலைவற்கும்பிரமனுக்கும் *
உரியானையுகந்தானவனுக்கும் உணர்வதனுக்
கரியானை * அழுந்தூர்மறையோர்கள் அடிபணியும்
கரியானை * அடியேன்கண்டுகொண்டுகளித்தேனே. 6

திருவாழ்மார்வன்றன்னைத் திசைமண்ணீரெரிமுதலா *
உருவாய்நின்றவனை ஒலிசேருமாருதத்தை *
அருவாய்நின்றவனைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
கருவார்கற்பகத்தைக் கண்டுகொண்டுகளித்தேனே. 7

நிலையாளாக என்னையுகந்தானை * நிலமகள்தன்
முலையாள்வித்தகனை முதுநான்மறைவீதிதோறும் *
அலையாரும்கடல்போல்முழங்கும் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
கலையார்சொற்பொருளைக் கண்டுகொண்டுகளித்தேனே. 8

**பேரானைக் குடந்தைப்பெருமானை * இலங்கொளிசேர்
வாரார்வனமுலையாள் மலர்மங்கைநாயகனை *
ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
காரார்கருமுகிலைக் கண்டுகொண்டுகளித்தேனே. 9

**திறல்முருகனனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அறமுதல்வனவனை அணியாலியர்கோன் * மருவார்
கறைநெடுவேல்வலவன் கலிகன்றிசொல்ஐயிரண்டும் *
முறைவழுவாமைவல்லார் முழுதாள்வர்வானுலகே. 10

அடிவரவு:—சிங்கம் கோ உடையான் குன்றால் கஞ்சன் பெரியான் திரு நிலை பேரான் திறல் திரு. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எழாந்திருமொழி—திருவுக்குந்திருவாகியசெல்வா.

**திருவுக்குந்திருவாகியசெல்வா! தெய்வத்துக்கரசே! செய்யகண்ணா! *
உருவச்செஞ்சுடராழிவல்லானே உலகுண்டவொருவா திருமார்பா! *
ஒருவற்காற்றியுய்யும்வகையன்றால் உடனின்றைவரென்னுள்புகுந்து * ஒழியா
தருவித்தின்றிடவஞ்சிநின்னடைந்தேன் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. 1

பந்தார்மெல்விரல்நல்வளைத்தோளி பாவைபூமகள்தன்னொடுமுடனே
வந்தாய் * என்மனத்தேமன்னிநின்றாய் மால்வண்ணா! மழைபோலொளிவண்ணா! *
சந்தோகாபௌழியா தைத்திரியா சாமவேதியனேநெடுமாலே *
அந்தோநின்னடியன்றிமற்றறியேன் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. 2

நெய்யாராழியும்சங்கமுமேந்தும் நீண்டதோளுடையாய் * அடியேனைச்
செய்யாதவுலகத்திடைச்செய்தாய் சிறுமைக்கும்பெருமைக்குமுள்புகுந்து *
பொய்யாலைவரென்மெய்குடியேறிப் போற்றிவாழ்வதற்கஞ்சிநின்னடைந்தேன் *
ஐயாநின்னடியன்றிமற்றறியேன் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே! 3

பரனேபஞ்சவன்பௌழியன்சோழன் பார்மன்னர்மன்னர்தாம்பணிந்தேத்தும்
வரனே * மாதவனேமதுசூதா மற்றோர்நல்துணைநின்னலாலிலேன்காண் *
நரனேநாரணனேதிருநறையூர்நம்பீ எம்பெருமானும்பராளு
மரனே * ஆதிவராகமுன்னானாய் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. 4

விண்டான்விண்புகவெஞ்சமத்தரியாய்ப் பரியோன்மார்வகம்பற்றிப்பிளந்து *
பண்டானுய்யவோர்மால்வரையேந்தும் பண்பாளாபரனேபவித்திரனே!*

கண்டேன்நான்கலியுகத்ததன்தன்மை கருமமாவதுமென்றனக்கறிந்தேன் *
அண்டாநின்னடியன்றிமற்றறியேன் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. 5

தோயாவின்தயிர்நெய்யமுதுண்ணச் சொன்னார்சொல்லிநகும்பரிசே * பெற்ற
தாயாலாப்புண்டிருந்தழுதேங்கும்தாடாளா! தரையோர்க்கும்விண்ணோர்க்கும்
சேயாய் * கிரேதத்திரேதத்துவாபரகலியுகமிவை நான்குமுனாய் *
ஆயாநின்னடியன்றிமற்றறியேன் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. 6

கறுத்துக்கஞ்சனையஞ்சமுனிந்தாய் கார்வண்ணாகடல்போ லொளிவண்ணா *
இறுத்திட்டான்விடையேழுமுன்வென்றாய் எந்தாயந்தரமேழுமுனாய் *
பொறுத்துக்கொண்டிருந்தால்பொறுக்கொணா போகமேநுகர்வான்புகுந்து - *ஐவர்
அறுத்துத்தின்றிடவஞ்சிநின்னடைந்தேன் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே!. 7

நெடியானேகடியார்கலிநம்பீ ! நின்னையேநினைந்திங்கிருப்பேனை *
கடியார்காளையரைவர்புகுந்து காவல்செய்தவக்காவலைப்பிழைத்து *
குடிபோந்துன்னடிக்கீழ்வந்துபுகுந்தேன் கூறைசோறிவைதந்தெனக்கருளி *
அடியேனைப்பணியாண்டுகொளெந்தாய் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே! 8

கோவாயைவரென்மெய்குடியேறிக் கூறைசோறிவைதாவென்றுகுமைத்துப்
போகார் * நானவரைப்பொறுக்ககிலேன்புனிதா! புட்கொடியாய்நெடுமாலே!*
தீவாய்நாகணையில்துயில்வானே திருமாலேயினிச்செய்வதொன்றறியேன் *
ஆவாவென்றடியேற்கிறையிரங்காய் அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே! 9

அன்னமன்னுபைம்பூம்பொழில்சூழ்ந்த அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானை *
கன்னிமன்னுதிண்டோள்கலிகன்றியாலிநாடன் மங்கைக்குலவேந்தன் *
சொன்னவின்தமிழ்நன்மணிக்கோவை தூயமாலையிவைபத்தும்வல்லார் *
மன்னிமன்னவராயுலகாண்டு மானவெண்குடைக்கீழ்மகிழ்வாரே. 10

அடிவரவு:—திருப் பந்தார் செய் பரனே விண் தோயாக் கறுத்து நெடியானே கோவாய் அன்னம் செங்கமலம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### எட்டாந்திருமொழி—செங்கமலத்திருமகளும்.

** செங்கமலத்திருமகளும்புவியும் செம்பொன் திருவடியினிணைவருடமுனிவரேத்த *
வங்கமலிதடங்கடலுளனந்தனென்னும் வரியரவினணைத்துயின்றமாயோன்காண்மின் *
எங்குமலிநிறைபுகழ்நால்வேதம் ஐந்துவேள்விகளும்கேள்விகளுமியன்றதன்மை *
அங்கமலத்தயனனையார்பயிலுஞ்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. 1

முன்னிவ்வுலகேழுமிருள்மண்டியுண்ண முனிவரொடுதானவர்கள்திகைப்ப * வந்து
பன்னுகலைநால்வேதப்பொருளையெல்லாம் பரிமுகமாயருளியவெம்பரமன்காண்மின் *
செந்நெல்மலிகதிர்க்கவரிவீசச் சங்கமவைமுரலச்செங்கமலமலரையேறி *
அன்னமலிபெடையோடுமமரும்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. 2

குலத்தலையமதவேழம்பொய்கைபுக்குக் கோள்முதலைபிடிக்கவதற்கனுங்கிநின்று *
நிலத்திகழும்மலர்ச்சுடரேய்சோதீயென்ன நெஞ்சிடர்தீர்த்தருளியவென்னிமலன்காண்மின் *
மலைத்திகழ்சந்தகில்கனகமணியும்கொண்டு வந்துந்திவயல்கள்தொறும்மடைகள்பாய *
அலைத்துவரும்பொன்னிவளம்பெருகும்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே.3

சிலம்புமுதல்கலனணிந்தோர்செங்கண்குன்றம் திகழ்ந்ததெனத்திருவுருவம்பன்றியாகி *
இலங்குபுவிமடந்தைதனையிடந்துபுல்கி எயிற்றிடைவைத்தருளியவெம்மீசன்காண்மின் *
புலம்புசிறைவண்டொலிப்பப்பூகம்தொக்க பொழில்கடொறும்குயில்கூவமயில்களால *
அலம்புதிரைப்புனல்புடைசூழ்ந்தழகார்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே.4

சினமேவுமடலரியினுருவமாகித் திறல்மேவுமிரணியனதாகங்கீண்டு *
மனமேவுவஞ்சனையால்வந்தபேய்ச்சி மாளவுயிர்வவ்வியவெம்மாயோன்காண்மின் *
இனமேவுவரிவளைக்கையேந்தும் கோவையேய்வாயமரதகம்போல்கிளியினின்சொல் *
அனமேவுநடைமடவார்பயிலும்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. 5

வானவர்தம்துயர்தீரவந்துதோன்றி மாணுருவாய்மூவடிமாவலியைவேண்டி *
தானமரவேழுலகுமளந்தவென்றித் தனிமுதல்சக்கரப்படையென்தலைவன்காண்மின் *
தேனமரும்பொழில்தழுவுமெழில்கொள்வீதிச் செழுமாடமாளிகைகள்கூடந்தோறும் *
ஆனதொல்சீர்மறையாளர்பயிலும்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. 6

பந்தணைந்தமெல்விரலாள்சீதைக்காகிப் பகலவன்மீதியங்காதவிலங்கைவேந்தன் *
அந்தமில்திண்கரம்சிரங்கள்புரண்டுவீழ அடுகணையாலெய்துகந்தவம்மான்காண்மின் *
செந்தமிழும்வடகலையும்திகழ்ந்தநாவர் திசைமுகனேயனையவர்கள், செம்மைமிக்க *
அந்தணர்தமாகுதியின்புகையார்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. 7

கும்பமிகுமதவேழம்குலையக்கொம்புபறித்து மழவிடையடர்த்துக்குரவைகோத்து *
வம்பவிழும்மலர்க்குழலாளாய்ச்சிவைத்ததயிர்வெண்ணெய் உண்டுகந்தமாயோன்காண்மின் *
செம்பவளமரதகநன்முத்தம்காட்டத் திகழ்பூகம்கதலிபலவளமிக்கெங்கும் *
அம்பொன்மதிள்பொழில்புடைசூழ்ந்தழகார்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர் [கோவே. 8

ஊடேறுகஞ்சனொடுமல்லும்வில்லும் ஒண்கரியுமுருள்சகடுமுடையச்செற்ற *
நீடேறுபெருவலித்தோளுடையவென்றி நிலவுபுகழ்நேமியங்கைநெடியோன்காண்மின் *
சேடேறுபொழில்தழுவுமெழில்கொள்வீதித் திருவிழவில்மணியணிந்ததிண்ணைதோறும் *
ஆடேறுமலர்க்குழலார்பயிலும்செல்வத்து அணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. 9

** பன்றியாய்மீனாகியரியாய்ப் பாரைப்படைத்துக்காத்துண்டுமிழ்ந்தபரமன்றன்னை *
அன்றமரர்க்கதிபதியுமயனும்சேயும் அடிபணியவணியழுந்தூர்நின்றகோவை *
கன்றிநெடுவேல்வலவனாலிநாடன் கலிகன்றியொலிசெய்தவின்பப்பாடல் *
ஒன்றினொடுநான்குமோரைந்தும்வல்லார் ஒலிகடல்சூழுலகாளுமும்பர்தாமே. 10

அடிவரவு :—செங்கமல முன் குலச் சிலம்பு சின வான் பந்து கும்ப வூடேறு பன்றி கள்ளம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாந்திருமொழி—கள்ளம்மனம்விள்ளும்வகை.

* * கள்ளம்மனம்விள்ளும்வகை கருதிக்கழல்தொழுவீர் *
வெள்ளம்முதுபரவைத் திரைவிரிய * கரையெங்கும்
தெள்ளும்மணிதிகழும் சிறுபுலியூர்ச்சலசயனத்
துள்ளும் * எனதுள்ளத்துள்ளும் உறைவாரையுள்ளீரே. 1

தெருவில்திரிசிறுநோன்பியர் செஞ்சோற்றொடுகஞ்சி
மருவி * பிரிந்தவர்வாய்மொழி மதியாதுவந்தடைவீர் *
திருவில்பொலிமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
உருவக்குறளடிகளடி உணர்மினுணர்வீரே. 2

பறையும்வினைதொழுதுய்ம்மினீர் பணியும்சிறுதொண்டீர் *
அறையும்புனலொருபால் வயலொருபால்பொழிலொருபால் *
சிறைவண்டினமறையும் சிறுபுலியூர்ச்சலசயனத்
துறையும் * இறையடியல்லது ஒன்றிறையுமறியேனே. 3

வானார்மதிபொதியும்சடை மழுவாளியொடொருபால் *
தானாகியதலைவனவன் அமரர்க்கதிபதியாம் *
தேனார்பொழில்தழுவும் சிறுபுலியூர்ச்சலசயனத்
தானாயனது * அடியல்லது ஒன்றறியேனடியேனே. 4

நந்தாநெடுநரகத்திடை நணுகாவகை * நாளும்
எந்தாயென இமையோர்தொழுதேத்துமிடம் * எறிநீர்ச்
செந்தாமரைமலரும் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
அந்தாமரையடியாய் உனதடியேற்கருள்புரியே. 5

முழுநீலமுமலராம்பலும் அரவிந்தமும்விரவி *
கழுநீரொடுமடவாரவர் கண்வாய்முகமலரும் *
செழுநீர்வயல்தழுவும் சிறுபுலியூர்ச்சலசயனம் *
தொழுநீர்மையதுடையார் அடிதொழுவார்துயரிலரே. 6

** சேயோங்கு தண்திருமாலிருஞ்சோலைமலையுறையும்
மாயா * எனக்குரையாயிது மறைநான்கினுளாயோ *
தீயோம்புகைமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத்
தாயோ * உனதடியார்மனத்தாயோ அறியேனே. 7

மையார்வரிநீலம் மலர்க்கண்ணார்மனம்விட்டிட்டு *
உய்வானுனகழலே தொழுதெழுவேன் * கிளிமடவார்
செவ்வாய்மொழிபயிலும் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஐவாயரவணைமேல் உறையமலாவருளாயே. 8

** கருமாமுகிலுருவா கனலுருவாபுனலுருவா *
பெருமால்வரையுருவா பிறவுருவாநினதுருவா *
திருமாமகள்மருவும் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
அருமாகடலமுதே உனதடியேசரணமே.

** சீரார்நெடுமறுகில் சிறுபுலியூர்ச்சலசயனத்து *
ஏரார்முகில்வண்ணன்றன்னை யிமையோர்பெருமானை *
காரார்வயல்மங்கைக்கிறை கலியனொலிமாலை *
பாராரிவைபரவித்தொழப் பாவம்பயிலாவே. 10

அடிவரவு:—கள்ளம் தெருவில் பறை வான் நந்தா முழு சேயோங்கு மையார் கரு சீரார் பெரும்புற. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாந்திருமொழி—பெரும்புறக்கடலை.

** பெரும்புறக்கடலையடலேற்றினைப் பெண்ணையாணை * எண்ணில்முனிவர்க்
கருள்தரும்தவத்தைமுத்தின் திரள்கோவையைப் பத்தராவியைநித்திலத்தொத்தினை *
அரும்பினையலரையடியேன்மனத்தாசையை அமுதம்பொதியின்சுவை *
கரும்பினைக்கனியைச்சென்றுநாடிக் கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 1

மெய்ந்நலத்தவத்தைத்திவத்தைத்தரும் மெய்யைப்பொய்யினைக்கையிலோர்சங்குடை *
மைந்நிறக்கடலைக்கடல்வண்ணனை மாலையாலிலைப்பள்ளிகொள்மாயனை *
நென்னலைப்பகலையிற்றைநாளினை நாளையாய்வரும்திங்களையாண்டினை *
கன்னலைக்கரும்பினிடைத்தேறலைக் கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 2

** எங்களுக்கருள்செய்கின்றவீசனை வாசவார்குழலாள்மலைமங்கைதன்
பங்கனை * பங்கில்வைத்துகந்தான்றன்னைப் பான்மையைப்பனிமாமதியம்தவழ் *
மங்குலைச்சுடரைவடமாமலையுச்சியை நச்சிநாம்வணங்கப்படும்
கங்குலை * பகலைச்சென்றுநாடிக் கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 3

பேய்முலைத்தலநஞ்சுண்டபிள்ளையைத் தெள்ளியார்வணங்கப்படும்தேவனை *
மாயனைமதிள்கோவலிடைகழிமைந்தனை அன்றியந்தணர்சிந்தையு
ளீசனை * இலங்கும்சுடர்ச்சோதியை யெந்தையையெனக்கெய்ப்பினில்வைப்பினை *
காசினைமணியைச்சென்றுநாடிக் கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 4

ஏற்றினையிமயத்துளெம்மீசனை யிம்மையைமறுமைக்குமருந்தினை *
ஆற்றலையண்டத்தப்புறத்துய்த்திடுமையனைக் கையிலாழியொன்றேந்திய
கூற்றினை * குருமாமணிக்குன்றினை நின்றவூர்நின்றநித்திலத்தொத்தினை *
காற்றினைப்புனலைச்சென்றுநாடிக் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. 5

துப்பனைத்துரங்கம்படச்சீறியதோன்றலைச் சுடர்வான்கலன்பெய்ததோர்
செப்பினை * திருமங்கையுணுளனைத் தேவனைத்திகழும்பவளத்தொளி

யொப்பனை*உலகேழினையூழியை யாழியேந்தியகையனை அந்தணர்
கற்பினை*கழுநீர்மலரும்வயல் கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 6

திருத்தனைத்திசைநான்முகன்தந்தையைத் தேவதேவனைமூவரில்முன்னிய
விருத்தனை*விளங்குஞ்சுடர்ச்சோதியை விண்ணைமண்ணினைக்கண்ணுதல்கூடிய
வருத்தனை*அரியைப்பரிகீறியவப்பனை அப்பிலாரழலாய்நின்ற
கருத்தனை*களிவண்டறையும்பொழில் கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 7

வெஞ்சினக்களிற்றைவிளங்காய்விழக் கன்றுவீசியவீசனை* பேய்மகள்துஞ்ச
நஞ்சுசுவைத்துண்டதோன்றலைத் தோன்றல்வாளரக்கன்கெடத்தோன்றிய
நஞ்சினை*அமுதத்தினைநாதனை நச்சுவாருச்சிமேல்நிற்கும்நம்பியை*
கஞ்சனைத்துஞ்சவஞ்சித்தவஞ்சனைக் கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 8

பண்ணினைப்பண்ணில்நின்றதோர்பான்மையைப் பாலுள்நெய்யினைமாலுருவாய்நின்ற
விண்ணினை*விளங்குஞ்சுடர்ச்சோதியை வேள்வியைவிளக்கினொளிதன்னை*
மண்ணினைமலையையலைநீரினை மாலைமாமதியைமறையோர்தங்கள்
கண்ணினை*கண்களாரளவும்நின்று கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. 9

**கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனென்று காதலால்கலிகன்றியுரைசெய்த*
வண்ணவொண்டமிழொன்பதோடொன்றிவை வல்லராயுரைப்பார், மதியந்தவழ்*
விண்ணில்விண்ணவராய்மகிழ்வெய்துவர் மெய்ம்மைசொல்லில்வெண்சங்கமொன்றேந்திய
கண்ண * நின்றனக்குங்குறிப்பாகில்கற்கலாம் கவியின்பொருள்தானே. 10

அடிவரவு:—பெரு மெய் எங்கள் பேய் ஏற்றினை துப்பன் திருத்தனை வெஞ்சினம் பண் கண்ண மங்கை சிலை. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து.

---

### முதல்திருமொழி—சிலையிலங்குபொன்னாழி.

**சிலையிலங்குபொன்னாழி திண்படைதண்டொண்சங்கமென்கின்றாளால்*
மலையிலங்குதோள்நான்கே மற்றவனுக்கெற்றேகாணென்கின்றாளால்*
முலையிலங்குபூம்பயலை முன்போடவன்போடிருக்கின்றாளால்*
கலையிலங்குமொழியாளர் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? 1

**செருவரைமுன்னாசறுத்த சிலையன்றோகைத்தலத்ததென்கின்றாளால்*
பொருவரைமுன்போர்தொலைத்த பொன்னாழிமற்றொருகையென்கின்றாளால்*
ஒருவரையும்நின்னொப்பார் ஒப்பிலாவென்னப்பாவென்கின்றாளால்*
கருவரைபோல்நின்றானைக் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? 2

துன்னுமாமணிமுடிமேல் துழாயலங்கல்தோன்றுமாலென்கின்றாளால்*
மின்னுமாமணிமகரகுண்டலங்கள் வில்வீசுமென்கின்றாளால்*

பொன்னின்மாமணியாரம் அணியாகத்திலங்குமாலென்கின்றாளால்*
கன்னிமாமதிள்புடைசூழ் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? 3

தாராயதண்டுளப வண்டுழுதவரைமார்பனென்கின்றாளால்*
போரானைக்கொம்பொசித்த புட்பாகனென்னம்மானென்கின்றாளால்*
ஆரானுங்காண்மின்கள் அம்பவளம்வாயவனுக்கென்கின்றாளால்*
கார்வானம்நின்றதிரும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? 4

அடித்தலமுந்தாமரையே அங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால்*
முடித்தலமும்பொற்பூணும் என்னெஞ்சத்துள்ளகலாதென்கின்றாளால்*
வடித்தடங்கண்மலரவளோ வரையாகத்துள்ளிருப்பாளென்கின்றாளால்*
கடிக்கமலம்கள்ளுகுக்கும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? 5

பேராயிரமுடையபேராளன் பேராளனென்கின்றாளால்*
ஏரார்கனமகரகுண்டலத்தன் எண்தோளனென்கின்றாளால்*
நீரார்மழைமுகிலே நீள்வரையேயொக்குமாலென்கின்றாளால்*
காரார்வயலமரும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? 6

செவ்வரத்தவுடையாடை அதன்மேலோர்சிவளிகைக்கச்சென்கின்றாளால்*
அவ்வரத்தவடியிணையும் அங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால்*
மைவளர்க்கும்மணியுருவம் மரகதமோமழைமுகிலோவென்கின்றாளால்*
கைவளர்க்குமழலாளர் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ ? 7

கொற்றப்புள்ளொன்றேறி மன்னாடேவருகின்றானென்கின்றாளால்*
வெற்றிப்போரிந்திரற்கும் இந்திரனேயொக்குமாலென்கின்றாளால்*
பெற்றக்காலவனாகம் பெண்பிறந்தோமுய்யோமோவென்கின்றாளால்*
கற்றநூல்மறையாளர் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ? 8

வண்டமரும்வனமாலை மணிமுடிமேல்மணநாறுமென்கின்றாளால்*
உண்டிவர்பாலன்பெனக்கென்று ஒருகாலும்பிரிகிலேனென்கின்றாளால்*
பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில் யாமென்றேயயில்கின்றாளால்*
கண்டவர்தம்மனம்வழங்கும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ? 9

**மாவளருமென்னோக்கி மாதராள்மாயவனைக்கண்டாளென்று*
காவளருங்கடிபொழில்சூழ் கண்ணபுரத்தம்மானைக்கலியன்சொன்ன*
பாவளருந்தமிழ்மாலை பன்னியநூலிவையைந்துமைந்தும்வல்லார்*
பூவளருங்கற்பகஞ்சேர் பொன்னுலகில்மன்னவராய்ப்புகழ்தக்கோரே. 10

—சிலை, செரு, துன்னு, தார், அடி, பேர், செவ்வரத்த, கொற்ற, வண்டு, மாவளரும், தெள்ளியீர். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## இரண்டாந் திருமொழி—தெள்ளியீர்தேவர்க்கும்.

**தெள்ளியீர் ! தேவர்க்கும்தேவர் திருத்தக்கீர் !* வெள்ளியீர் வெய்யவிழுநிதிவண்ணர் *
துள்ளுநீர்க் கண்ணபுரந்தொழுதாளிவள்கள்வியோ ! * கைவளைகொள்வதுதக்கதே ?

**நீணிலாமுற்றத்து நின்றிவள்நோக்கினாள் * காணுமோ கண்ணபுரமென்றுகாட்டினாள் *
பாணனார்திண்ணமிருக்க இனியிவள்நாணுமோ ? * நன்றுநன்றுநறையூரர்க்கே. 2

**அருவிசோர்வேங்கடம் நீர்மலையென்றுவாய்வெருவினாள் * மெய்யம்வினவியிருக்கின்றாள் *
பெருகுசீர்க் கண்ணபுரமென்றுபேசினாளுருகினாள் * உள்மெலிந்தாளிதுவென்கொலோ ?. 3

உண்ணும்நாளில்லை உறக்கமுந்தானில்லை * பெண்மையுஞ்சால நிறைந்திலள்பேதைதான் *
கண்ணனூர்கண்ணபுரந்தொழும் கார்க்கடல்வண்ணர்மேல்*எண்ணமிவட்கிதுவென்கொலோ?.

கண்ணனூர் கண்ணபுரந்தொழுங்காரிகை*பெண்மையென் தன்னுடையுண்மையுரைக்கின்றாள்*
வெண்ணெயுண்டாப்புண்ட வண்ணம்விளம்பினால் * வண்ணமும் பொன்னிறமாவதொழியுமே.

வடவரைநின்றும்வந்து * இன்றுகணபுரமிடவகைகொள்வது யாமென்றுபேசினாள் *
மடவரல்மாதரென்பேதை யிவர்க்கிவள்கடவதென் * கண்டுயிலின்றிவர்கொள்ளவே. 6

**தரங்கநீர்பேசினும் தண்மதிகாயினும் * இரங்குமோ எத்தனைநாளிருந்தெள்கினாள் *
துரங்கம்வாய்கீண்டுகந்தானது தொன்மையூர் * அரங்கமேயென்பது இவள்தனக்காசையே.

தொண்டெல்லாம்நின்னடியே தொழுதுய்யுமாகண்டு * தான்கணபுரந்தொழப்போயினாள் *
வண்டுலாங்கோதையென்பேதை மணிநிறம்கொண்டுதான் * கோயின்மைசெய்வதுதக்கதே. 8

முள்ளெயிறேய்ந்தில கூழைமுடிகொடா * தெள்ளியளென்பதோர் தேசிலளென்செய்கேன் *
கள்ளவிழ்சோலைக் கணபுரம்கைதொழும்பிள்ளையை * பிள்ளையென்றெண்ணப்பெறுவரே. 9

**கார்மலி கண்ணபுரத்தெம்மடிகளை * பார்மலிமங்கையர்கோன் பரகாலன்சொல் *
சீர்மலிபாடல் இவைபத்தும்வல்லவர் * நீர்மலிவையத்து நீடுநிற்பார்களே. 10

அடிவரவு:—தெள்ளியீர், நீணிலா, அருவி, உண்ணும் கண்ணன், வடவரை, தரங்கம், தொ,
முள், கார், கரை. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—மூன்றாந்திருமொழி—கரையெடுத்தசுரிசங்கு.

**கரையெடுத்தசுரிசங்கும் கனபவளத்தெழுகொடியும்*
திரையெடுத்துவருபுனல்சூழ் திருக்கண்ணபுரத்துறையும்*
விரையெடுத்ததுழாயலங்கல் விறல்வரைத்தோள்புடைபெயர *
வரையெடுத்தபெருமானுக்கு இழந்தேனென்வரிவளையே. 1

அரிவிரவுமுகிற்கணத்தால் அகிற்புகையால்வரையோடும்*
தெரிவரியமணிமாடத் திருக்கண்ணபுரத்துறையும்*
வரியரவினணைத்துயின்று மழைமதத்தசிறுதறுகண் *
கரிவெருவமருப்பொசித்தாற்கு இழந்தேனென்கனவளையே. 2

துங்கமாமணிமாட நெடுமுகட்டின்சூலிகைபோம்*
திங்கள்மாமுகில்துணிக்கும் திருக்கண்ணபுரத்துறையும்*
பைங்கண்மால்விடையடர்த்துப் பனிமதிகோள்விடுத்துகந்த*
செங்கண்மாலம்மானுக்கு இழந்தேனென்செறிவளையே. 3

கணமருவுமயிலகவு கடிபொழில்சூழ்நெடுமறுகில்*
திணமருவுகனமதிள்சூழ் திருக்கண்ணபுரத்துறையும்*
மணமருவுதோளாய்ச்சி ஆர்க்கப்போயுரலோடும்*
புணர்மருதமிறநடந்தாற்கு இழந்தேனென்பொன்வளையே. 4

வாயெடுத்தமந்திரத்தால் அந்தணர்தம்செய்தொழில்கள்*
தீயெடுத்துமறைவளர்க்கும் திருக்கண்ணபுரத்துறையும்*
தாயெடுத்தசிறுகோலுக்கு உளைந்தோடித்தயிருண்ட*
வாய்துடைத்தமைந்தனுக்கு இழந்தேனென்வரிவளையே. 5

மடலெடுத்தநெடுந்தாழை மருங்கெல்லாம்வளர்பவளம்*
திடலெடுத்துச்சுடரிமைக்கும் திருக்கண்ணபுரத்துறையும்*
அடலடர்த்தன்றிரணியனை முரணழியவணியுகிரால்*
உடலெடுத்தபெருமானுக்கு இழந்தேனென்னொளிவளையே. 6

வண்டமரும்மலர்ப்புன்னை வரிநீழலணிமுத்தம்*
தெண்டிரைகள்வரத்திரட்டும் திருக்கண்ணபுரத்துறையும்*
எண்டிசையுமெழுசுடரும் இருநிலனும்பெருவிசும்பும்*
உண்டுமிழ்ந்தபெருமானுக்கு இழந்தேனென்னொளிவளையே. 7

கொங்குமலிகருங்குவளை கண்ணாகத்தெண்கயங்கள்*
செங்கமலமுகமலர்த்தும் திருக்கண்ணபுரத்துறையும்*
வங்கமலிதடங்கடலுள் வரியரவினணைத்துயின்ற*
செங்கமலநாபனுக்கு இழந்தேனென்செறிவளையே. 8

வாராளுமிளங்கொங்கை நெடும்பணைத்தோள்மடப்பாவை*
சீராளும்வரைமார்பன் திருக்கண்ணபுரத்துறையும்*
பேராளனாயிரம்பேர் ஆயிரவாயரவணைமேல்*
பேராளர்பெருமானுக்கு இழந்தேனென்பெய்வளையே. 9

**தேமருவுபொழில்புடைசூழ் திருக்கண்ணபுரத்துறையும்
வாமனனை*மறிகடல்சூழ் வயலாலிவளநாடன்*
காமருசீர்க்கலிகன்றி கண்டுரைத்ததமிழ்மாலை*
**நாமருவியிவைபாட வினையாயநண்ணாவே. 10

—கரை அரி துங்கம் கணம் வாய் மடல் வண்டு கொங்கு வாராளும் தேமருவு விண்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

### எட்டாம்பத்து—நான்காந்திருமொழி—விண்ணவர்தங்கள்பெருமான்.

**விண்ணவர்தங்கள்பெருமான் திருமார்வன்* மண்ணவரெல்லாம்வணங்கும் மலிபுகழ்சேர்*
கண்ணபுரத்தெம்பெருமான் கதிர்முடிமேல்* வண்ணநறுந்துழாய் வந்தூதாய்கோல்தும்பீ! 1

வேதமுதல்வன் விளங்குபுரிநூலன்* பாதம்பரவிப் பலரும்பணிந்தேத்தி* [தும்பீ! 2
காதன்மைசெய்யும் கண்ணபுரத்தெம்பெருமான்* தாதுநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்

விண்டமலரெல்லாம் ஊதிநீயென்பெறுதி?* அண்டமுதல்வன் அமரர்களெல்லாரும்*
கண்டுவணங்கும் கண்ணபுரத்தெம்பெருமான்* வண்டுநறுந்துழாய் வந்தூதாய்கோல்தும்பீ! 3

நீர்மலிகின்றதோர் மீனாயோராமையுமாய்* சீர்மலிகின்றதோர் சிங்கவுருவாய்* [தும்பீ!
கார்மலிவண்ணன் கண்ணபுரத்தெம்பெருமான்* தார்மலிதண்டுழாய் தாழ்ந்தூதாய்கோல்

ஏரார்மலரெல்லாம் ஊதிநீயென்பெறுதி* பாராருலகம் பரவப்பெருங்கடலுள்*
காராமையான கண்ணபுரத்தெம்பெருமான்* தாரார்நறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல் தும்பீ!

மார்வில்திருவன் வலனேந்துசக்கரத்தன்* பாரைப்பிளந்த பரமன்பரஞ்சோதி *
காரில்திகழ் காயாவண்ணன்கதிர்முடிமேல்* தாரில்நறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ! 6

வாமனன்கற்கி மதுசூதன்மாதவன்* தார்மன்னு தாசரதியாயதடமார்வன்*
காமன்றன் தாதை கண்ணபுரத்தெம்பெருமான்* தாமநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ!

நீலமலர்கள் நெடுநீர்வயல்மருங்கில்* சாலமலரெல்லாமூதாதே* வாளரக்கர் [கோல்தும்பீ!
காலன் கண்ணபுரத்தெம்பெருமான்கதிர்முடிமேல்* கோலநறுந்துழாய் கொண்டூதாய்

நந்தன்மதலை நிலமங்கைநற்றுணைவன்* அந்தமுதல்வன் அமரர்கள்தம்பெருமான்*
கந்தங்கமழ் காயாவண்ணன்கதிர்முடிமேல்* கொந்துநறுந்துழாய்கொண்டூதாய்கோல்தும்பீ 9

வண்டமருஞ்சோலை வயலாலிநன்னாடன்*கண்டசீர்வென்றிக் கலியனொலிமாலை*
கொண்டல்நிறவண்ணன் கண்ணபுரத்தானை* தொண்டரோம்பாடநினைந்தூதாய்கோல்தும்பீ.

அடிவரவு :—விண்ணவர் வேதம் விண்ட நீர் ஏரார் மார்வில் வாமனன் நீலம் நந்தன் வண்ட
மரும் தந்தை. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### எட்டாம்பத்து—ஐந்தாந்திருமொழி—தந்தைகாலில்விலங்கற.

** தந்தைகாலில்விலங்கற வந்துதோன்றியதோன்றல்பின் * தமியேன்றன்
சிந்தைபோயிற்றுத் திருவருளவனிடைப்பெறுமளவிருந்தேனை *
அந்திகாவலனமுதுறுபசுங்கதிர் அவைசுடவதனோடும் *
மந்தமாருதம்வனமுலைதடவந்து வலிசெய்வதொழியாதே. 1

மாரிமாக்கடல்வளைவணற்கிளையவன் வரைபுரைதிருமார்பில் *
தாரினாசையிற்போயினநெஞ்சமும் தாழ்ந்ததோர்துணைகாணேன் *
ஊரும்துஞ்சிற்றுலகமுந்துயின்றது ஒளியவன்விசும்பியங்கும் *
தேரும்போயிற்றுத்திசைகளும்மறைந்தன செய்வதொன்றறியேனே. 2

ஆயன்மாயமேயன்றிமற்றென்கையில் வளைகளுமிறைநில்லா *
பேயினாருயிருண்டிடும்பிள்ளை நம்பெண்ணுயிர்க்கிரங்குமோ ?*
தூயமாமதிக்கதிர்சுடத்துணையில்லை யிணைமுலைவேகின்றதால் *
ஆயன்வேயினுக்கழிகின்றதுள்ளமும் அஞ்சேலென்பாரில்லையே. 3

கயங்கொள்புண்தலைக்களிறுந்துவெந்திறல் கழல்மன்னர்பெரும்போரில் *
மயங்கவெண்சங்கம்வாய்வைத்தமைந்தனும் வந்திலன்மறிகடல்நீர் *
தயங்குவெண்டிரைத்திவலைநுண்பனியெனும் தழல்முகந்திளமுலைமேல் *
இயங்குமாருதம்விலங்கிலென்னாவியை யெனக்கெனப்பெறலாமே. 4

ஏழுமாமரம்துளைபடச்சிலைவளைத்து இலங்கையைமலங்குவித்த
ஆழியான் * நமக்கருளியவருளொடும் பகலெல்லைகழிகின்றதால் *
தோழிநாமிதற்கென்செய்தும்துணையில்லை சுடர்படுமுதுநீரில் *
ஆழவாழ்கின்றவாவியையடுவதோர் அந்திவந்தடைகின்றதே. 5

முரியும்வெண்டிரைமுதுகயம்தீப்பட முழங்கழலெரியம்பின் *
வரிகொள்வெஞ்சிலைவளைவித்தமைந்தனும் வந்திலனென்செய்கேன் ?
எரியும்வெங்கதிர்துயின்றது பாவியேனிணைநெடுங்கண்துயிலா *
கரியநாழிகையூழியிற்பெரியன கழியுமாறறியேனே. 6

கலங்கமாக்கடல்கடைந்தடைத்து இலங்கையர்கோனதுவரையாகம்
மலங்க * வெஞ்சமத்தடுசரந்துரந்த எம்மடிகளும்வாராரால் *
இலங்குவெங்கதிரிளமதியதனொடும் விடைமணியடும் * ஆயன்
விலங்கல்வேயினதோசையுமாய் இனிவிளைவதொன்றறியேனே. 7

முழுதிவ்வையகம்முறைகெடமறைதலும் முனிவனும்முனிவெய்தி *
மழுவினால்மன்னராருயிர்வவ்விய மைந்தனும்வாராரால் *
ஒழுகுநுண்பனிக்கொடுங்கியபேடையை அடங்கவஞ்சிறைகோலி *
தழுவுநள்ளிருள்தனிமையிற்கடியதோர் கொடுவினையறியேனே. 8

கனஞ்செய்மாமதிட்கணபுரத்தவனொடும் கனவினிலவன்தந்த *
மனஞ்செயின்பம்வந்துள்புகவெள்கி என்வளைநெகவிருந்தேனை *
சினஞ்செய்மால்விடைச்சிறுமணியோசை யென்சிந்தையைச்சிந்துவிக்கும் *
அனந்தலன்றிலினரிகுரல் பாவியேனாவியையடுகின்றதே. 9

** வார்கொள்மென்முலைமடந்தையர் தடங்கடல்வண்ணனைத்தாள்நயந்து *
ஆர்வத்தாலவர்புலம்பியபுலம்பலை அறிந்துமுன்னுரைசெய்த *
கார்கொள்பைம்பொழில்மங்கையர்காவலன் கலிகன்றியொலிவல்லார் *
ஏர்கொள்வைகுந்தமாநகர்புக்கு இமையவரோடும்கூடுவரே. 10

தந்தை மாரி ஆயன் கயம் ஏழு முரியும் கலங்க முழுது கனஞ்செய் வார்கொள் தொண்டர். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஆறாந்திருமொழி—தொண்டீருய்யும்வகைகண்டேன்.

** தொண்டீருய்யும்வகைகண்டேன் துளங்காவரக்கர்துளங்க * முன்
திண்டோள்நிமிரச்சிலைவளையச் சிறிதேமுனிந்ததிருமார்பன் *
வண்டார்கூந்தல்மலர்மங்கை வடிக்கண்மடந்தைமாநோக்கம்
கண்டான் * கண்டுகொண்டுகந்த கண்ணபுரம்நாம்தொழுதுமே. 1

பொருந்தாவரக்கர்வெஞ்சமத்துப் பொன்றவன்றுபுள்ளூர்ந்து *
பெருந்தோள்மாலிதலைபுரளப் பேர்ந்தவரக்கர்தென்னிலங்கை *
இருந்தார்தம்மையுடன்கொண்டு அங்கெழிலார்பிலத்துப்புக்கொளிப்ப *
கருந்தாள்சிலைகைக்கொண்டானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. 2

வல்லியிடையாள்பொருட்டாக மதிள்நீரிலங்கையார்கோவை *
அல்லல்செய்துவெஞ்சமத்துள் ஆற்றல்மிகுத்தவாற்றலான் *
வல்லாளரக்கர்குலப்பாவைவாட முனிதன்வேள்வியை *
கல்விச்சிலையால்காத்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. 3

மல்லைமுந்நீரதர்பட வரிவெஞ்சிலைகால்வளைவித்து *
கொல்லைவிலங்குபணிசெய்யக் கொடியோனிலங்கைபுகலுற்று *
தொல்லைமரங்கள்புகப்பெய்து துவலைநிமிர்ந்துவானணவ *
கல்லாற்கடலையடைத்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. 4

ஆமையாகியரியாகி அன்னமாகி * அந்தணர்தம்
ஓமமாகியூழியாகி உலகுசூழ்ந்தநெடும்புணரி *
சேமமதிள்சூழிலங்கைக்கோன் சிரமுங்கரமுந்துணித்து * முன்
காமற்பயந்தான்கருதுமூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. * 5

வருந்தாதிருநீமடநெஞ்சே நம்மேல்வினைகள்வாரா * முன்
திருந்தாவரக்கர்தென்னிலங்கை செந்தீயுண்ணச்சிவந்தொருநாள் *
பெருந்தோள்வாணற்கருள்புரிந்து பின்னைமணாளனாகி * முன்
கருந்தாட்களிறொன்றொசித்தானூர் கண்ணபுரநாம்தொழுதுமே. 6

இலையார்மலர்ப்பூம்பொய்கைவாய் முதலைதன்னாலடர்ப்புண்டு *
கொலையார்வேழம்நடுக்குற்றுக்குலைய அதனுக்கருள்புரிந்தான் *
அலைநீரிலங்கைத்தசக்கிரீவற்கு இளையோற்கரசையருளி * முன்
கலைமாச்சிலையாலெய்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. 7

மாலாய்மனமேயருந்துயரில் வருந்தாதிருநீ * வலிமிக்க
காலார்மருதும்காய்சினத்தகழுதும் கதமாக்கழுதையும் *
மாலார்விடையும்மதகரியும் மல்லருயிரும்மடிவித்து *
காலாற்சகடம்பாய்ந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. 8

குன்றால்மாரிபழுதாக்கிக் கொடியேரிடையாள்பொருட்டாக *
வன்றாள்விடையேழன்றடர்த்த வானோர்பெருமான் மாமாயன் *
சென்றான்தூதுபஞ்சவர்க்காய்த் திரிகாற்சகடம்சினமழித்து *
கன்றால்விளங்காயெறிந்தானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. 9

** கருமாமுகில்தோய்நெடுமாடக் கண்ணபுரத்தெம்மடிகளை *
திருமாமகளாலருள்மாரி செழுநீராலிவளநாடன் *
மருவார்புயற்கைக்கலிகன்றி மங்கைவேந்தனொலிவல்லார் *
இருமாநிலத்துக்கரசாகி இமையோரிறைஞ்சவாழ்வாரே. 10

அடிவரவு:—தொண்டர் பொருந்தா வல்லி மல்லை ஆமை வருந்தாதா இலை மால் குன்றால் கரு வியம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாந்திருமொழி—வியமுடைவிடையினம்.

** வியமுடைவிடையினம் உடைதரமடமகள் * குயமிடைதடவரை அகலமதுடையவர் *
நயமுடைநடையனம் இளையவர்நடைபயில் * கயமிடைகணபுரம் அடிகள்தமிடமே. 1

இணைமலிமருதினொடு எருதிற இகல்செய்து * துணைமலிமுலையவள் மணமிகுகலவியுள் *
மணமலிவிழவினொடு அடியவரளவிய * கணமலிகணபுரம் அடிகள்தமிடமே. 2

புயலுறுவரைமழை பொழிதரமணிநிரை * மயலுறவரைகுடை பெடுவியநெடியவர் *
முயல்துளர்மிளைமுயல்துள வளவிளைவயல் * கயல்துளுகணபுரம் அடிகள்தமிடமே. 3

ஏதலர்நகைசெய இளையவரளைவெணெய் * போதுசெய்தமரிய புனிதர்நல்விரைமலர் *
கோதியமதுகரம் குலவியமலர்மகள் * காதல்செய்கணபுரம் அடிகள்தமிடமே. 4

தொண்டருமமரரும் முனிவரும்தொழுதெழ * அண்டமொடகலிடம் அளந்தவரமர்செய்து *
விண்டவர்பட மதிளிலங்கைமுன்னெரியெழ * கண்டவர்கணபுரம் அடிகள்தமிடமே. 5

மழுவியல்படையுடை அவனிடர்கெட மழைமுகில் * தழுவியவுருவினர் திருமகள்மருவிய *
கொழுவியசெழுமலர் முழுசியபறவைபண் * எழுவியகணபுரம் அடிகள்தமிடமே. 6

பரிதியொடணிமதி பனிவரைதிசைநிலம் * எரிதியொடெனவின இயல்வினர்செலவினர் *
சுருதியொடருமறை முறைசொலுமடியவர் * கருதியகணபுரம் அடிகள்தமிடமே. 7

படிபுல்குமடியிணை பலர்தொழமலர்வைகு * கொடிபுல்குதடவரை அகலமதுடையவர் *
முடிபுல்குநெடுவயல் படைசெலவடிமலர் * கடிபுல்குகணபுரம் அடிகள்தமிடமே. 8

புலமனுமலர்மிசை மலர்மகள்புணரிய * நிலமகளெனவின மகளிர்களிவரொடும் *
வலமனுபடையுடை மணிவணர்நிதிகுவை * கலமனுகணபுரம் அடிகள்தமிடமே. 9

** மலிபுகழ்க்கணபுரமுடைய எம்மடிகளை * வலிகெழுமதிளயல் வயலணிமங்கையர் *
கலியனதமிழிவை விழுமியவிசையினொடு * ஒலிசொலுமடியவர் உறுதுயரிலரே. 10

அடிவரவு:—வியம் இணை புயல் ஏதலர் தொண்டர் மழு பரிதி படி புலம் மலிபுகழ் வானோர். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாந்திருமொழி—வானோரளவும்முதுமுந்நீர்.

** வானோரளவும்முதுமுந்நீர் வளர்ந்தகாலம் * வலியுருவின்
மீனாய்வந்துவியந்துய்யக்கொண்ட தண்டாமரைக்கண்ணன் *
ஆனாவுருவிலானாயனவனை அம்மாவிளைவயலுள் *
கானார்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 1

மலங்குவிலங்குநெடுவெள்ளம்மறுக அங்கோர்வரைநட்டு *
இலங்குசோதியாரமுதம் எய்துமளவோராமையாய் *
விலங்கல்திரியத்தடங்கடலுள் சுமந்துகிடந்தவித்தகனை *
கலங்கல்முந்நீர்க்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 2

பாராரளவும்முதுமுந்நீர் பரந்தகாலம் * வளைமருப்பில்
ஏராருருவத்தேனமாய் எடுத்தவாற்றலம்மானை *
கூராராரலிரைகருதிக் குருகுபாயக்கயலிரியும் *
காரார்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 3

உளைந்தவரியும்மானிடமும் உடனாய்த்தோன்றவொன்றுவித்து *
விளைந்தசீற்றம்விண்வெதும்ப வேற்றோனகலம்வெஞ்சமத்து *
பிளந்துவளைந்தவுகிரானைப் பெருந்தண்செந்நெற்குலைதடிந்து *
களஞ்செய்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 4

தொழுநீர்வடிவிற்குறளுருவாய் வந்துதோன்றிமாவலிபால் *
முழுநீர்வையம்முன்கொண்ட மூவாவுருவினம்மானை *
உழுநீர்வயலுள்பொன்கிளைப்ப ஒருபால்முல்லைமுகையோடும் *
கழுநீர்மலரும்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 5

வடிவாய்மழுவேபடையாக வந்துதோன்றிமூவெழுகால் *
படியாரரசுகளைகட்ட பாழியானையம்மானை *
குடியாவண்டுகொண்டுண்ணக் கோலநீலம்மட்டுகுக்கும் *
கடியார்புறவிற்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 6

வையமெல்லாமுடன்வணங்க வணங்காமன்னனாய்த்தோன்றி *
வெய்யசீற்றக்கடியிலங்கை குடிகொண்டோட வெஞ்சமத்து *
செய்தவெம்போர்நம்பரனைச் செழுந்தண்கானல்மணநாறும் *
கைதைவேலிக்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 7

ஒற்றைக்குழையும்நாஞ்சிலும் ஒருபால்தோன்றத்தான்தோன்றி *
வெற்றித்தொழிலார்வேல்வேந்தர் விண்பாற்செல்லவெஞ்சமத்து *
செற்றகொற்றத்தொழிலானைச் செந்தீமூன்றுமில்லிருப்ப *
கற்றமறையோர்கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே.

துவரிக்கனிவாய்நிலமங்கை துயர்தீர்ந்துய்யப்பாரதத்துள் *
இவரித்தரசர்தடுமாற இருள்நாள்பிறந்தவம்மானை *

உவரியோதம்முத்துந்த ஒருபாலொருபாலொண்செந்நெல் *
கவரிவீசுப் கண்ணபுரத்து அடியேன்கண்டுகொண்டேனே. 9

** மீனோடாமைகேழலரிகுறளாய் முன்னுமிராமனாய்த்
தானாய் * பின்னுமிராமனாய்த்தாமோதரனாய்க் கற்கியு
மானான்றன்னை * கண்ணபுரத்தடியன் கலியனொலிசெய்த *
தேனாரின்சொல்தமிழ்மாலை செப்பப்பாவம்நில்லாவே. 10

—வான் பலங்கு பார் உளை தொழு வடி வையம் ஒற்றை துவரி மீன் கைம்மானம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாந்திருமொழி—கைம்மானமதயானை.

** கைம்மானமதயானை யிடர்தீர்த்தகருமுகிலை *
மைம்மானமணியை அணிகொள்மரதகத்தை *
எம்மானையெம்பிரானை யீசனையென்மனத்து
ளம்மானை * அடியேனடைந்துய்ந்து போனேனே. 1

தருமானமழைமுகிலைப் பிரியாதுதன்னடைந்தார் *
வருமானம்தவிர்க்கும் மணியையணியுருவில் *
திருமாலையம்மானை அமுதத்தைக்கடற்கிடந்த
பெருமானை * அடியேனடைந்துய்ந்துபிழைத்தேனே. 2

விடையேழன்றடர்த்து வெகுண்டுவிலங்கலுற *
படையாலாழிதட்ட பரமன்பரஞ்சோதி *
மடையார்நீலமல்கும்வயல்சூழ் கண்ணபுரமொன்
றுடையானுக்கு * அடியேன் ஒருவர்க்குரியேனோ ? 3

** பிக்கானை மறையாய்விரிந்தவிளக்கை * என்னுள்
புக்கானைப் புகழ்சேர்பொலிகின்றபொன்மலையை *
தக்கானைக் கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த *
அக்காரக்கனியை அடைந்துய்ந்துபோனேனே. 4

வந்தாயென்மனத்தே வந்துநீபுகுந்தபின்னை *
எந்தாய்போயறியாய் இதுவேயமையாதோ *
கொந்தார்பைம்பொழில்சூழ் குடந்தைக்கிடந்துகந்த
மைந்தா * உன்னையென்றும் மறவாமைப்பெற்றேனே. 5

எஞ்சாவெந்நரகத்து அழுந்திநடுங்குகின்றேற்கு *
அஞ்சேலென்றடியேனை ஆட்கொள்ளவல்லானை *
நெஞ்சேநீநினையாது இறைப்பொழுதுமிருத்திகண்டாய் *
மஞ்சார்மாளிகைசூழ் வயலாலிமைந்தனையே. 6

பெற்றார்பெற்றொழிந்தார் பின்னும்நின்றடியேனுக்கு *
உற்றானாய்வளர்த்து என்னுயிராகிநின்றானை *
முற்றாமாமதிகோள் விடுத்தானையெம்மானை *
எத்தால்யான்மறக்கேன் இதுசொல்லென்னேழைநெஞ்சே. 7

கற்றார்பற்றறுக்கும் பிறவிப்பெருங்கடலே *
பற்றாவந்தடியேன் பிறந்தேன்பிறந்தபின்னை *
வற்றாநீர்வயல்சூழ் வயலாலியம்மானைப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமைபெற்றேனே. 8

கண்ணார்கண்ணபுரம் கடிகைகடிகமழும் *
தண்ணார்தாமரைசூழ் தலைச்சங்கமேல்திசையுள் *
விண்ணோர்நாண்மதியை விரிகின்றவெஞ்சுடரை *
கண்ணாரக்கண்டுகொண்டு களிக்கின்றதிங்கென்றுகொலோ. 9

** செருநீரவேல்வலவன் கலிகன்றிமங்கையர்கோன் *
கருநீர்முகில்வண்ணன் கண்ணபுரத்தானை *
இருநீரின்தமிழ் இன்னிசைமாலைகள்கொண்டுதொண்டீர் *
வருநீர்வையமுய்ய இவைபாடியாடுமினே. 10

-கைம்மானம், தரு, விடை, மிக்கான், வந்தாய், எஞ்சா, பெற்றார், கற்றார், கண்ணார், செரு, வண்டார்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாந் திருமொழி—வண்டார்பூமாமலர்மங்கை.

** வண்டார்பூமாமலர்மங்கை மணநோக்க
முண்டானே * உன்னையுகந்துகந்து உன்றனக்கே
தொண்டானேற்கு * என்செய்கின்றாய்சொல்லு நால்வேதம்
கண்டானே * கண்ணபுரத்துறையம்மானே. 1

பெருநீரும்விண்ணும் மலையுமுலகேழும் *
ஒருதாராநின்னுளொடுக்கிய நின்னையல்லால் *
வருதேவர்மற்றுளரென்று என்மனத்திறையும்
கருதேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே. 2

மற்றுமோர்தெய்வமுளதென்று இருப்பாரோ
டுற்றிலேன் * உற்றதுமுன்னடியார்க்கடிமை *
மற்றெல்லாம்பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்றுநான் * கண்ணபுரத்துறையம்மானே. 3

பெண்ணானாள் பேரிளங்கொங்கையினாரழல்போல் *
உண்ணாநஞ்சுண்டுகந்தாயை உகந்தேன்நான் *

மண்ணாளாவாள்நெடுங்கண்ணி மதுமலராள்
கண்ணாளா * கண்ணபுரத்துறையம்மானே. 4

பெற்றாருஞ்சுற்றமும் என்றிவைபேணேன்நான் *
மற்றாரும்பற்றிலேன் ஆதலால்நின்னடைந்தேன் *
உற்றானென்றுள்ளத்துவைத்து அருள்செய்கண்டாய் *
கற்றார்சேர் கண்ணபுரத்துறையம்மானே. 5

ஏத்தியுன்சேவடி யெண்ணியிருப்பாரை *
பார்த்திருந்தங்கு நமன்றமர்பற்றாது *
சோத்தம்நாமஞ்சுதுமென்று தொடாமை * நீ
காத்திபோல் கண்ணபுரத்துறையம்மானே. 6

வெள்ளைநீர்வெள்ளத்து அணைந்தவரவணைமேல் *
துள்ளுநீர்மெள்ளத் துயின்றபெருமானே *
வள்ளலேயுன்றமர்க்கென்றும் நமன்றமர்
கள்ளர்போல் * கண்ணபுரத்துறையம்மானே. 7

மாணாகி வையமளந்ததுவும் * வாளவுணன்
பூணாகம்கீண்டதுவும் ஈண்டுநினைந்திருந்தேன் *
பேணாதவல்வினையேன் இடரெத்தனையும்
காணேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே. 8

நாட்டினாயென்னை உனக்குமுன்தொண்டாக *
மாட்டினேனத்தனையேகொண்டு என்வல்வினையை *
பாட்டினாலுன்னை யென்னெஞ்சத்திருந்தமை
காட்டினாய் * கண்ணபுரத்துறையம்மானே. 9

** கண்டசீர்க் கண்ணபுரத்துறையம்மானை *
கொண்டசீர்த்தொண்டன் கலியனொலிமாலை *
பண்டமாய்ப்பாடும் அடியவர்க்கெஞ்ஞான்றும் *
அண்டம்போயாட்சி அவர்க்கதறிந்தோமே. 10

-வண்டார் பெரு மற்று பெண் பெற்றார் ஏத்தி வெள்ளை மாண் நாட்டினாய் கண்டசீர் வங்கம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியதிருமொழி எட்டாம்பத்து முற்றிற்று.

---

# பெரியதிருமொழி--ஒன்பதாம்பத்து.

---

## முதல்திருமொழி—வங்கமாமுந்நீர்.

** வங்கமாமுந்நீர்வரிநிறப்பெரிய வாளரவினணைமேவி *
சங்கமாரங்கைத்தடமலருந்திச் சாமமாமேனியென்தலைவன் *
அங்கமாறைந்துவேள்விநால்வேதம் அருங்கலைபயின்று*எரிமூன்றும் [னே.
செங்கையால்வளர்க்கும்துளக்கமில்மனத்தோர் திருக்கண்ணங்குடியுள் நின்றா

கவளமாகதத்தகரியுய்யப்பொய்கைக் கராங்கொளக்கலங்கியுள்நினைந்து
துவள* மேல்வந்துதோன்றி வன்முதலைதுணிபடச்சுடுபடைதுரந்தோன்*
குவளைநீண்முளரிக்குமுதமொண்கழுநீர் கொய்ம்மலர்நெய்தலொண்கழனி *
திவளும்மாளிகைசூழ்செழுமணிப்புரிசைத் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. 2

வாதைவந்தடரவானமும்நிலனும் மலைகளுமலைகடல்குளிப்ப *
மீதுகொண்டுகளும்மீனுருவாகி விரிபுனல்வரியகட்டொளித்தோன் *
போதலர்புன்னைமல்லிகைமௌவல் புதுவிரைமதுமலரணைந்து *
சீதவொண்தென்றல்திசைதொறுங்கமழும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. 3

வென்றிசேர்திண்மைவிலங்கல்மாமேனி வெள்ளெயிற்றொள்ளெரித்தறுகண் *
பன்றியாயன்றுபார்மகள்பயலைதீர்த்தவன் பஞ்சவர்பாகன் *
ஒன்றலாவுருவத்துலப்பில்பல்காலத்து உயர்கொடியொளிவளர்மதியம்*
சென்றுசேர்சென்னிச்சிகரநன்மாடத் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. 4

மன்னவன்பெரியவேள்வியிற்குறளாய் மூவடிநீரொடுங்கொண்டு *
பின்னுமேழுலகுமீரடியாகப் பெருந்திசையடங்கிடநிமிர்ந்தோன் *
அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத்து அலைபுனலிலைக்குடைநீழல் *
செந்நெலொண்கவரியசையவீற்றிருக்கும் திருக்கணங்குடியுள்நின்றானே. 5

மழுவினாலவனியரசைமூவெழுகால் மணிமுடிபொடிபடுத்து * உதிரக்
குழுவுவார்புனலுட்குளித்து வெங்கோபம்தவிர்ந்தவன், குலைமலிகதலி *
குழுவும்வார்கமுகும்குரவுநற்பலவும் குளிர்தருசூதமாதவியும் *
செழுமையார்பொழில்கள்தழுவுநன்மாடத் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. 6

வானுளாரவரைவலிமையால்நலியும் மலிகடலிலங்கையார்கோனை *
பானுநேர்சரத்தால்பனங்கனிபோலப் பருமுடியுதிரவில்வளைத்தோன் *
கானுலாமயிலின்கணங்கள்நின்றாடக் கணமுகில்முரசநின்றதிர *
தேனுலாவரிவண்டின்னிசைமுரலும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. 7

அரவுநீள்கொடியோனவையுளாசனத்தை அஞ்சிடாதேயிட * அதற்குப்
பெரியமாமேனியண்டமூடுருவப் பெருந்திசையடங்கிடநிமிர்ந்தோன் *
வரையின்மாமணியும்மரதகத்திரளும் வயிரமும்வெதிருதிர்முத்தும் *
திரைகொணர்ந்துந்திவயல்தொறுங்குவிக்கும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே.

பன்னியபாரம்பார்மகட்கொழியப் பாரதமாபெரும்போரில் *
மன்னர்கள்மடியமணிநெடுந்திண்டேர் மைத்துனர்க்குய்த்தமாமாயன் *
துன்னுமாதவியும்சுரபுன்னைப்பொழிலும் சூழ்ந்தெழுசெண்பகமலர்வாய் *
தென்னவென்றளிகள்முரன்றிசைபாடும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. 9

** கலையுலாவல்குல்காரிகைதிறத்துக் கடற்பெரும்படையொடுஞ்சென்று *
சிலையினாலிலங்கைதீயெழச்செற்ற திருக்கண்ணங்குடியுள்நின்றானை *
மலைகுலாமாடமங்கையர்தலைவன் மானவேல்கலியன்வாயொலிகள் *
உலவுசொல்மாலையொன்பதோடொன்றும் வல்லவர்க்கில்லைநல்குரவே. 10

அடிவரவு:—வங்கக் கவளம் வாதை வென்றி மன்னவன் மழு வானுளார் அரவு பன்னிய கலை பொன். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்,



## இரண்டாந்திருமொழி—பொன்னிவர்மேனி.

★

** பொன்னிவர்மேனிமரதகத்தின் பொங்கிளஞ்சோதியகலத்தாரம்
மின் * இவர்வாயில்நல்வேதமோதும் வேதியர்வானவராவர்தோழீ! *
என்னையும்நோக்கியென்னல்குலும்நோக்கி யேந்திளங்கொங்கையும்நோக்குகின்றார் *
அன்னையென்னோக்குமென்றஞ்சுகின்றேன் அச்சோவொருவரழகியவா! 1

தோடவிழ்நீலமணங்கொடுக்கும் சூழ்புனல்சூழ்குடந்தைக்கிடந்த *
சேடர்கொலென்றுதெரிக்கமாட்டேன் செஞ்சுடராழியுஞ்சங்குமேந்தி *
பாடகமெல்லடியார்வணங்கப் பன்மணிமுத்தொடிலங்குசோதி *
ஆடகம்பூண்டொருநான்குதோளும் அச்சோவொருவரழகியவா! 2

வேயிருஞ்சோலைவிலங்கல்சூழ்ந்த மெய்யமணாளர், இவ்வையமெல்லாம் *
தாயினநாயகராவர்தோழீ! தாமரைக்கண்களிருந்தவாறு *
சேயிருங்குன்றம்திகழ்ந்ததொப்பச் செவ்வியவாகிமலர்ந்தசோதி *
ஆயிரந்தோளொடிலங்குபூணும் அச்சோவொருவரழகியவா! 3

வம்பவிழுந்துழாய்மாலைதோள்மேல் கையனவாழியுஞ்சங்குமேந்தி *
நம்பர்நம்மில்லம்புகுந்துநின்றார் நாகரிகர்பெரிதுமிளையர் *
செம்பவளமிவர்வாயின்வண்ணம் தேவரிவரதுஉருவம்சொல்லில் *
அம்பவளத்திரளேயுமொப்பர் அச்சோவொருவரழகியவா! 4

கோழியுங்கூடலுங்கோயில்கொண்ட கோவலரேயொப்பர், குன்றமன்ன *
பாழியந்தோளுமோர்நான்குடையர் பண்டிவர்தம்மையுங்கண்டறியோம் *
வாழியரோவிவர்வண்ணமெண்ணில் மாகடல்போன்றுளர், கையில்வெய்ய *
ஆழியொன்றேந்தியோர்சங்குபற்றி அச்சோவொருவரழகியவா! 5

வெஞ்சினவேழம்மருப்பொசித்த வேந்தர்கொல்ஏந்திழையார்மனத்தை *
தஞ்சுடையாளர்கொல்யானறியேன் தாமரைக்கண்களிருந்தவாறு *

கஞ்சனையஞ்சமுன்கால்விசைத்த காளையராவர், கண்டார்வணங்கும் *
அஞ்சனமாமலையேயுமொப்பர் அச்சோவொருவரழகியவா! 6

** பிணியவிழ்தாமரைமொட்டலர்த்தும் பொருளாளர்கொல்? யானறியேன் *
பணியுமென்னெஞ்சமிதென்கொல்? தோழீ! பண்டிவர்தம்மையுங்கண்டறியோம் *
அணிகெழுதாமரையன்னகண்ணும் அங்கையும்பங்கயம், மேனிவானத்து *
அணிகெழுமாமுகிலேயுமொப்பர் அச்சோவொருவரழகியவா! 7

மஞ்சுயர்மாமதிதீண்டநீண்ட மாலிருஞ்சோலைமணாளர்வந்து * என்
நெஞ்சுள்ளும்கண்ணுள்ளும்நின்றுநீங்கார் நீர்மலையார்கொல்? நினைக்கமாட்டேன் *
மஞ்சுயர்பொன்மலைமேலெழுந்த மாமுகில்போன்றுளர்வந்துகாணீர் *
அஞ்சிறைப்புள்ளுமொன்றேறிவந்தார் அச்சோவொருவரழகியவா! 8

எண்டிசையுமெறிநீர்க்கடலும் ஏழுலகுமுடனேவிழுங்கி *
மண்டியோராலிலைப்பள்ளிகொள்ளும் மாயர்கொல்? மாயமறியமாட்டேன் *
கொண்டல்நன்மால்வரையேயுமொப்பர் கொங்கலர்தாமரைக்கண்ணும்வாயும் *
அண்டத்தமரர்பணியநின்றார் அச்சோவொருவரழகியவா! 9

** அன்னமுங்கேழலுமீனுமாய ஆதியைநாகையழகியாரை *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன் காமருசீர்க்கலிகன்றி * குன்றா
வின்னிசையாற்சொன்னசெஞ்சொல்மாலை யேழுமிரண்டுமொரொன்றும்வல்லார் *
மன்னவராயுலகாண்டு மீண்டும்வானவராய்மகிழ்வெய்துவரே. 10

அடிவரவு:—பொன் தோடு வேய் வம்பு கோழி வெஞ்சினம் பிணி மஞ்சுயர் எண்டிசை அன்னம் தன்னை. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## மூன்றாந்திருமொழி—தன்னைநைவிக்கிலென்.

** தன்னைநைவிக்கிலென் வல்வினையேன்தொழுதுமெழு *
பொன்னைநைவிக்கும் அப்பூஞ்செருந்திமணநீழல்வாய் *
என்னைநைவித்து எழில்கொண்டகன்றபெருமானிடம் *
புன்னைமுத்தம்பொழில்சூழ்ந்து அழகாயபுல்லாணியே.

உருகிநெஞ்சேநினைந்திங்கிருந்தென் தொழுதுமெழு *
முருகுவண்டுண்மலர்க்கைதையின் நீழலில்முன்னொருநாள் *
பெருகுகாதன்மை யென்னுள்ளமெய்தப்பிரிந்தானிடம் *
பொருதுமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே. 2

ஏதுசெய்தால்மறக்கேன் மனமேதொழுதுமெழு *
தாதுமல்குதடஞ்சூழ்பொழில் தாழ்வர்தொடர்ந்து * பின்
பேதைநின்னைப்பிரியேனினி யென்றகன்றானிடம் *
போதுநாளுங்கமழும் பொழில்சூழ்ந்தபுல்லாணியே. 3

கொங்குண்வண்டேகரியாகவந்தான் கொடியேற்கு * முன்
நங்களீசன் நமக்கேபணித்தமொழிசெய்திலன் *

மங்கைநல்லாய்தொழுதுமெழு போயவன்மன்னுமூர் *
பொங்குமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே. 4

உணரிலுள்ளஞ்சுடுமால் வினையேன்தொழுதுமெழு *
துணரிநாழல்நறும்போது நம்சூழ்குழல்பெய்து * பின்
தணரிலாவிதளருமென அன்புதந்தானிடம் *
புணரியோதம்பணிலம் மணியுந்துபுல்லாணியே. 5

எள்கிநெஞ்சேநினைந்திங்கிருந்தென் தொழுதுமெழு *
வள்ளல்மாயன் மணிவண்ணனெம்மான்மருவுமிடம் *
கள்ளவிழும்மலர்க்காவியும் தூமடற்கைதையும் *
புள்ளுமள்ளற்பழனங்களுஞ்சூழ்ந்த புல்லாணியே. 6

பரவிநெஞ்சேதொழுதுமெழு போயவன்பாலமாய் *
இரவுநாளுமினிக் கண்துயிலா திருந்தென்பயன்? *
விரவிமுத்தம் நெடுவெண்மணல்மேற்கொண்டு * வெண்திரை
புரவியென்னப்புதஞ்செய்து வந்துந்துபுல்லாணியே. 7

அலமுமாழிப்படையுமுடையார் நமக்கன்பராய் *
சலமதாகித்தகவொன்றிலர் நாம்தொழுதுமெழு *
உலவுகானற்கழியோங்கு தண்பைம்பொழிலூடு * இசை
புலவுகானல் களிவண்டினம்பாடுபுல்லாணியே. 8

ஓதிநாமங்குளித்துச்சிதன்னால் ஒளிமாமலர் *
பாதநாளும்பணிவோம் நமக்கேநலமாதலில் *
ஆதுதாரானெனிலுந்தரும் அன்றியுமன்பராய் *
போதுமாதேதொழுதும் அவன்மன்னுபுல்லாணியே. 9

** இலங்குமுத்தும்பவளக்கொழுந்தும் எழில்தாமரை *
புலங்கள்முற்றும்பொழில்சூழ்ந்து அழகாயபுல்லாணிமேல் *
கலங்கலில்லாப்புகழான் கலியனொலிமாலை *
வலங்கொள்தொண்டர்க்கிடமாவது பாடில்வைகுந்தமே. 10

—தன்னை உருகி ஏது கொங்கு உணரில் எள்கி பரவி அலம் ஓதி இலங்கு காவார்.

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காந்திருமொழி—காவார்மடற்பெண்ணை.

** காவார்மடற்பெண்ணை அன்றிலரிகுரலும் *
ஏவாயினூடியங்கும் எஃகிற்கொடித்தாலோ *
பூவார்மணங்கமழும் புல்லாணிகைதொழுதேன் *
பாவாயிதுநமக்கோர் பான்மையேயாகாதே.

முன்னம்குறளுருவாய் மூவடிமண்கொண்டளந்த *
மன்னன்சரிதைக்கே மாலாகிப்பொன்பயந்தேன் *
பொன்னங்கழிக்கானல் புள்ளினங்காள்புல்லாணி *
அன்னமாய்நூல்பயந்தாற்கு ஆங்கிதனைச்செப்புமினே. 2

வவ்வித்துழாயதன்மேல் சென்றதனிநெஞ்சம் *
செவ்வியறியாது நிற்குங்கொல் * நித்திலங்கள்
பவவத்திரையுலவு புல்லாணிகைதொழுதேன் *
தெய்வச்சிலையாற்கு என்சிந்தைநோய்செப்புமினே. 3

பரியவிரணியனதாகம் அணியுகிரால் *
அரியுருவாய்க்கீண்டான் அருள்தந்தவாநமக்கு *
பொருதிரைகள்போந்துலவு புல்லாணிகைதொழுதேன் *
அரிமலர்க்கண்ணீர்ததும்ப அந்துகிலும்நில்லாவே. 4

** வில்லாலிலங்கைமலங்கச் சரந்துரந்த *
வல்லாளன்பின்போன நெஞ்சம்வருமளவும் *
எல்லாருமென்தன்னை யேசிலும்பேசிடினும் *
புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே. 5

சுழன்றிலங்குவெங்கதிரோன் தேரோடும்போய்மறைந்தான் *
அழன்றுகொடிதாகி அஞ்சுடரில்தானடுமால் *
செழுந்தடம்பூஞ்சோலைசூழ் புல்லாணிகைதொழுதேன் *
இழந்திருந்தேன் என்றனெழில்நிறமும்சங்குமே. 6

கனையாரிடிகுரலின் கார்மணியின்நாவாடல் *
தினையேனும்நில்லாது தீயிற்கொடிதாலோ *
புனையார்மணிமாடப் புல்லாணிகைதொழுதேன் *
வினையேன்மேல்வேலையும் வெந்தழலேவீசுமே. 7

தூம்புடைக்கைவேழம் வெருவமருப்பொசித்த *
பாம்பினணையான் அருள்தந்தவாநமக்கு *
பூஞ்செருந்திபொன்சொரியும் புல்லாணிகைதொழுதேன் *
தேம்பலிளம்பிறையும் என்றனக்கோர்வெந்தழலே. 8

வேதமும்வேள்வியும் விண்ணுமிருசுடரும் *
ஆதியுமானான் அருள்தந்தவாநமக்கு *
போதலரும்புன்னைசூழ் புல்லாணிகைதொழுதேன் *
ஓதமும்நானும் உறங்காதிருந்தேனே. 9

** பொன்னலரும்புன்னைசூழ் புல்லாணியம்மானை *
மின்னிடையார்வேட்கைநோய்கூர இருந்ததனை *

கன்னவிலும்திண்டோள் கலியனொலிவல்லார் *
மன்னவராய்மண்ணாண்டு வானாடுமுன்னுவரே. 10

—காவார் முன்னம் வவ்விப் பரிய வில் சுழன்று கனை தூம்பு வேதம் பொன்னலரும் தவள. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஐந்தாந்திருமொழி—தவளவிளம்பிறை.

** தவளவிளம்பிறைதுள்ளுமுந்நீர்த் தண்மலர்த்தென்றலோடன்றிலொன்றித்
துவள * என்னெஞ்சகஞ்சோரவீரும் சூழ்பனிநாள்துயிலாதிருப்பேன் *
இவளுமோர்பெண்கொடியென்றிரங்கார் என்னலமைந்துமுன்கொண்டுபோன *
குவளைமலர்நிறவண்ணர்மன்னு குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 1

தாதவிழ்மல்லிகைபுல்லிவந்த தண்மதியினிளவாடையின்னே *
ஊதைதிரிதந்துழறியுண்ண ஓரிரவுமுறங்கேன் * உறங்கும்
பேதையர்பேதைமையாலிருந்து பேசிலும்பேசுகபெய்வளையார் *
கோதைநறுமலர்மங்கைமார்பன் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 2

காலையும்மாலையொத்துண்டு கங்குல்நாழிகையூழியின்நீண்டுலாவும் *
போல்வதோர்தன்மைபுகுந்துநிற்கும் பொங்கழலேயொக்கும்வாடைசொல்லில் *
மாலவன்மாமணிவண்ணன்மாயம் மற்றுமுளவைவந்திடாமுன் *
கோலமயில்பயிலும்புறவில் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 3

** கருமணிபூண்டுவெண்ணாகணைந்து காரிமிலேற்றணர்தாழ்ந்துலாவும் *
ஒருமணியோசையென்னுள்ளந்தள்ள ஓரிரவுமுறங்காதிருப்பேன் *
பெருமணிவானவருச்சிவைத்த பேரருளாளன்பெருமைபேசி *
குருமணிநீர்கொழிக்கும்புறவில் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 4

திண்டிமிலேற்றின்மணியும் ஆயன்தீங்குழலோசையும்தென்றலோடு *
கொண்டதோர்மாலையுமந்தியீன்ற கோலவிளம்பிறையோடுகூடி *
பண்டையவல்லவிவைநமக்குப் பாவியேனாவியைவாட்டஞ்செய்யும் *
கொண்டல்மணிநிறவண்ணர்மன்னு குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 5

எல்லியும்நன்பகலுமிருந்தே யேசிலுமேசுகவேந்திழையார் *
நல்லரவர்திறம்நாமறியோம் நாண்மடமச்சம்நமக்கிங்கில்லை *
வல்லனசொல்லிமகிழ்வரேலும் மாமணிவண்ணரைநாமறவோம் *
கொல்லைவளரிளமுல்லைபுல்கு குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 6

செங்கணெடியகரியமேனித் தேவரொருவரிங்கேபுகுந்து * என்
அங்கமெலியவளைகழல ஆதுகொலோவென்றுசொன்னபின்னை *
ஐங்கணைவில்லிதன்னாண்மை யென்னோடாடுமதனையறியமாட்டேன் *
கொங்கலர்தண்பணைசூழ்புறவில் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 7

கேவலமன்றுகடலிணையை கேண்மின்களாயன்கையாம்பல்வந்து * என்
ஆவியளவுமணைந்துநிற்கும் அன்றியுமைந்துகணைதெரிந்திட்டு *
ஏவலங்காட்டியிவனொருவன் இப்படியேபுகுந்தெய்திடாமுன் *
கோவலர்கூத்தன்குறிப்பறிந்து குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 8

சோத்தெனநின்றுதொழவிரங்கான் தொன்னலங்கொண்டெனக்கின்றுதாறும்*
போர்ப்பதோர்பொற்படம்தந்துபோனான் போயினவூரறியேன் * என்கொங்கை
மூத்திடுகின்றன மற்றவன்றன்மொய்யகலமணையாதுவாளா *
கூத்தனிமையவர்கோன்விரும்பும் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 9

** செற்றவன்தென்னிலங்கைமலங்கத் தேவபிரான்திருமாமகளைப்
பெற்றும் * என்னெஞ்சகம்கோயில்கொண்ட பேரருளாளன்பெருமைபேசக்
கற்றவன் * காமருசீர்க்கலியன் கண்ணகத்தும்மனத்துமகலாக்
கொற்றவன் * முற்றுலகாளிநின்ற குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். 10

அடிவரவு:—தவள தாதவிழ் காலை கருமணி திண்டிமில் எல்லி செங்கண் கேவலம் சோத்தென செற்றவன் அக்கு. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறுந்திருமொழி—அக்கும்புலியினதளும்.

**அக்கும்புலியின் அதளுமுடையாரவரொருவர் *
பக்கம்நிற்கநின்ற பண்பரூர்போலும் *
தக்கமரத்தின் தாழ்சினையேறி * தாய்வாயில்
கொக்கின்பிள்ளை வெள்ளிறவுண்ணும்குறுங்குடியே. 1

துங்காரரவத்திரைவந்துலவ * தொடுகடலுள்
பொங்காரரவில்துயிலும் புனிதரூர்போலும் *
செங்காலன்னம் திகழ்தண்பணையில்பெடையோடும் *
கொங்கார்கமலத்து அலரில்சேருங்குறுங்குடியே.

வாழக்கண்டோம் வந்துகாண்மின்தொண்டீர்காள் *
கேழல்செங்கண் மாமுகில்வண்ணர்மருவுமூர் *
ஏழைச்செங்கால் இன்துணைநாரைக்கிரைதேடி *
கூழைப்பார்வை கார்வயல்மேயும்குறுங்குடியே. 3

சிரமுனைந்துமைந்தும் சிந்தச்சென்று * அரக்க
னூரமும்கரமும்துணித்த உரவோனூர்போலும் *
இரவும்பகலும் ஈன்தேன்முரல * மன்றெல்லாம்
குரவின்பூவேதான் மணநாறும்குறுங்குடியே. 4

கவ்வைக்களிற்றுமன்னர்மாளக் கலிமாந்தேர்
ஐவர்க்காய் * அன்றமரிலுய்த்தானூர்போலும் *
மைவைத்திலங்கு கண்ணார்தங்கள்மொழியொப்பான் *
கொவ்வைக்கனிவாய்க் கிள்ளைபேசும்குறுங்குடியே.

தீநீர்வண்ண மாமலர்கொண்டுவிரையேந்தி *
தூநீர்பரவித் தொழுமினெழுமின்தொண்டீர்காள்! *
மாநீர்வண்ணர் மருவியுறையுமிடம் * வானில்
சூனீர்மதியை மாடம்தீண்டும்குறுங்குடியே. 6

வல்லிச்சிறுநுண்ணிடையாரிடை நீர்வைக்கின்ற *
அல்லல்சிந்தைதவிர அடைமினடியீர்காள்! *
சொல்லில்திருவேயனையார் கனிவாயெயிறொப்பான் *
கொல்லைமுல்லை மெல்லரும்பீனும்குறுங்குடியே. 7

நாராரிண்டை நாண்மலர்கொண்டுநந்தமர்காள்! *
ஆராவன்போடு எம்பெருமானூரடைமின்கள் *
தாராவாரும் வார்புனல்மேய்ந்துவயல்வாழும் *
கூர்வாய்நாரை பேடையோடாடும்குறுங்குடியே. 8

நின்றவினையும்துயரும்கெட மாமலரேந்தி *
சென்றுபணிமினெழுமின் தொழுமின்தொண்டீர்காள்! *
என்றுமிரவும்பகலும் வரிவண்டிசைபாட *
குன்றின்முல்லை மன்றிடைநாறும்குறுங்குடியே. 9

** சிலையாலிலங்கைசெற்றான் மற்றோர்சினவேழம் *
கொலையார்கொம்புகொண்டான் மேயகுறுங்குடிமேல் *
கலையார் பனுவல்வல்லான் கலியனொலிமாலை *
நிலையார்பாடல்பாடப் பாவம்நில்லாவே. 10

—அக்கு துங்கார் வாழ சிரமுன் கவ்வை தீநீர் வல்லி நாரார் நின்ற சிலையால் தந்தை.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### ஏழாந்திருமொழி—தந்தைதாய்மக்களே.

** தந்தைதாய்மக்களே சுற்றமென்றுற்றவர்பற்றிநின்ற *
பந்தமார்வாழ்க்கையை நொந்துநீபழியெனக்கருதினாயேல் *
அந்தமாயாதியாய் ஆதிக்குமாதியாயாயனாய *
மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 1

மின்னுமாவல்லியும்வஞ்சியும்வென்ற நுண்ணிடைநுடங்கும் *
அன்னமென்னடையினார்கலவியை அருவருத்தஞ்சினாயேல் *
துன்னுமாமணிமுடிப்பஞ்சவர்க்காகி முன்தூதுசென்ற *
மன்னனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 2

பூணுலாமென்முலைப்பாவைமார் பொய்யினைமெய்யிதென்று *
பேணுவார்பேசுமப்பேச்சை நீபிழையெனக்கருதினாயேல் *
நீணிலாவெண்குடைவாணனார் வேள்வியில்மண்ணிரந்த *
மாணியார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 3

பண்ணுலாமென்மொழிப்பாவைமார் பணைமுலையணைதும்நாமென்று *
எண்ணுவாரெண்ணம்தொழித்து நீபிழைத்துய்யக்கருதிநீயேல் *
விண்ணுளார்விண்ணின்மீதியன்ற வேங்கடத்துளார் * வளங்கொள்முந்நீர்
வண்ணனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 4

மஞ்சுதோய்வெண்குடைமன்னராய் வாரணம்சூழவாழ்ந்தார் *
துஞ்சினாரென்பதோர்சொல்லை நீதுயரெனக்கருதினையேல் *
நஞ்சுதோய்கொங்கைமேலங்கைவாய்வைத்து அவள்நாளையுண்ட *
மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 5

உருவினார்பிறவிசேர் ஊன்பொதிநரம்புதோற்குரம்பையுள்புக்கு *
அருவிநோய்செய்துநின்றைவர்தாம் வாழ்வதற்கஞ்சினையேல் *
திருவினார்வேதநான்கைந்துதீ வேள்வியோடங்கமாறும் *
மருவினார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 6

நோயெலாம்பெய்ததோராக்கையை மெய்யெனக்கொண்டு * வாளா
பேயர்தாம்பேசுமப்பேச்சை நீபிழையெனக்கருதினையேல் *
தீயுலாவெங்கதிர்த்திங்களாய் மங்குல்வானாகிநின்ற *
மாயனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 7

மஞ்சுசேர்வானெரி நீர்நிலம்காலிவைமயங்கிநின்ற *
அஞ்சுசேராக்கையை அரணமன்றென்றுய்யக்கருதினையேல் *
சந்துசேர்மென்முலைப் பொன்மலர்ப்பாவையும்தாமும் * நாளும்
வந்துசேர்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 8

வெள்ளியார்பிண்டியார்போதியார் என்றிவரோதுகின்ற *
கள்ளநூல்தன்னையும் கருமமன்றென்றுய்யக்கருதினையேல் *
தெள்ளியார்கைதொழும்தேவனார் மாமுநீரமுதுதந்த *
வள்ளலார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே! 9

** மறைவலார்குறைவிலார்உறையுமூர் வல்லவாழடிகள்தம்மை *
சிறைகுலாவண்டறைசோலைசூழ் கோலநீளாலிநாடன் *
கறையுலாவேல்வல்ல கலியன்வாயொலியிவைகற்றுவல்லார் *
இறைவராயிருநிலம்காவல்பூண்டு இன்பநன்கெய்துவாரே. 10

—தந்தை மின்னும் பூண் பண் மஞ்சு உருவின் நோய் மஞ்சுசேர் வெள்ளியார் மறை முந்துற. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாந்திருமொழி—முந்துறவுரைக்கேன்.

** முந்துறவுரைக்கேன்விரைக்குழல்மடவார்கலவியை விடுதடுமாறல் *
அந்தரமேழுமலைகடலேழுமாய எம்மடிகள்தம்கோயில் *
சந்தொடுமணியுமணிமயில்தழையும் தழுவிவந்தருவிகள்நிரந்து *
வந்திழிசாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. 1

இண்டையும்புனலும்கொண்டிடையின்றி யெழுமினோதொழுதுமென்று * இ
அண்டரும்பரவவரவணைத்துயின்ற சுடர்முடிக்கடவுள்தம்கோயில் * [மையோர்
விண்டலர்தூளிவேய்வளர்புறவில் விரைமலர்க்குறிஞ்சியின்நறுந்தேன் *
வண்டமர்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே ! 2

பிணிவளராக்கைநீங்கநின்றேத்தப் பெருநிலமருளில்முன்னருளி *
அணிவளர்குறளாயகலிடமுழுதும் அளந்தவெம்மடிகள்தம்கோயில் *
கணிவளர்வேங்கைநெடுநிலமதனில் குறவர்தம்கவணிடைத்துரந்த *
மணிவளர்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே ! 3

சூர்மையிலாயபேய்முலைசுவைத்துச் சுடுசரமடுசிலைத்துரந்து *
நீர்மையிலாததாடகைமாள நினைந்தவர்மனங்கொண்டகோயில் *
கார்மலிவேங்கைகோங்கலர்புறவில் கடிமலர்க்குறிஞ்சியின்நறுந்தேன் *
வார்புனல்சூழ்தண்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே ! 4

வணங்கலிலரக்கன்செருக்களத்தவிய மணிமுடியொருபதும்புரள *
அணங்கெழுந்தவன்றன்கவந்தம்நின்றாட அமர்செய்தவடிகள்தம்கோயில் *
பிணங்கவில்நெடுவேய்நுதிமுகங்கிழிப்பப் பிரசம்வந்திழிதரப்பெருந்தேன் *
மணங்கமழ்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. 5

விடங்கலந்தமர்ந்தவரவணைத்துயின்று விளங்கனிக்கிளங்கன்றுவிசிறி *
குடங்கலந்தாடிக்குரவைமுன்கோத்த கூத்தவெம்மடிகள்தம்கோயில் *
தடங்கடல்முகந்துவிசும்பிடைப்பிளிறத் தடவரைக்களிறென்றுமுனிந்து *
மடங்கல்நின்றதிரும்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. 6

தேனுகனாவிபோயுகவங்கோர் செழுந்திரள்பனங்கனியுதிர *
தானுகந்தெறிந்ததடங்கடல்வண்ணர் எண்ணிமுனிடங்கொண்டகோயில் *
வானகச்சோலைமரதகச்சாயல் மாமணிக்கல்லதர்நிறைந்து *
மானுகர்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. 7

புதமிகுவிசும்பிற்புணரிசென்றணவப் பொருகடலரவணைத்துயின்று *
பதமிகுபரியின்மிகுசினம்தவிர்த்த பனிமுகில்வண்ணர்தம்கோயில் *
கதமிகுசினத்தகடதடக்களிற்றின் கவுள்வழிகளிவண்டுபருக *
மதமிகுசாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. 8

புந்தியில்சமணர்புத்தரென்றிவர்கள் ஒத்தனபேசவுமுகந்திட்டு *
எந்தைபெம்மானாரிமையவர்தலைவர் எண்ணிமுனிடங்கொண்டகோயில் *
சந்தனப்பொழிலின்தாழ்சினைநீழல் தாழ்வரைமகளிர்கள்நாளும் *
மந்திரத்திறைஞ்சும்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. 9

** வண்டமர்சாரல்மாலிருஞ்சோலை மாமணிவண்ணரைவணங்கும் *
தொண்டரைப்பரவும்சுடரொளிநெடுவேல் சூழ்வயலாலிநன்னாடன் *

கண்டல்நல்வேலிமங்கையர்தலைவன் கலியன்வாயொலிசெய்தபனுவல் *
கொண்டிவைபாடுந்தவமுடையார்கள் ஆள்வரிக்குரைகடலுலகே. 10

அடிவரவு:—முந்துற, இண்டை, பிணி, சூர்மை, வணங்கலில், விடம், தேனுகன், புதமிகு, புந்தி, வண்டமர், மூவர். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாந்திருமொழி—மூவரில்முன்முதல்வன்.

** மூவரில்முன்முதல்வன் முழங்கார்கடலுட்கிடந்து *
பூவலருந்திதன்னுள் புவனம்படைத்துண்டுமிழ்ந்த *
தேவர்கள்நாயகனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
கோவலர்கோவிந்தனைக் கொடியேரிடைகூடுங்கொலோ? 1

* புனைவளர்பூம்பொழிலார் பொன்னிசூழரங்கநகருள்
முனைவனை * மூவுலகும்படைத்த முதல்மூர்த்திதன்னை *
சினைவளர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்றான் *
கனைகழல்காணுங்கொலோ கயற்கண்ணியெம்காரிகையே. 2

உண்டுலகேழினையும் ஒருபாலகனாலிலைமேல் *
கண்டுயில்கொண்டுகந்த கருமாணிக்கமாமலையை *
திண்டிறல்மாகரிசேர் திருமாலிருஞ்சோலைநின்ற *
அண்டர்தங்கோவினையின்று அணுகுங்கொலென்னாயிழையே. 3

சிங்கமதாயவுணன் திறலாகமுன்கீண்டுகந்த *
பங்கயமாமலர்க்கண் பரனையெம்பரஞ்சுடரை *
திங்கள்நன்மாமுகில்சேர் திருமாலிருஞ்சோலைநின்ற *
நங்கள்பிரானையின்று நணுகுங்கொலென்னன்னுதலே. 4

தானவன்வேள்விதன்னில் தனியேகுறளாய்நிமிர்ந்து *
வானமும்மண்ணகமும் அளந்ததிரிவிக்கிரமன் *
தேனமர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
வானவர்கோனையின்று வணங்கித்தொழவல்லள்கொலோ? 5

** நேசமிலாதவர்க்கும் நினையாதவர்க்குமரியான் *
வாசமலர்ப்பொழில்சூழ் வடமாமதுரைப்பிறந்தான் *
தேசமெல்லாம்வணங்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
கேசவநம்பிதன்னைக் கெண்டையொண்கண்ணிகாணுங்கொலோ 6

புள்ளினைவாய்ப்பிளந்து பொருமாகரிகொம்பொசித்து *
கள்ளச்சகடுதைத்த கருமாணிக்கமாமலையை *
தெள்ளருவிகொழிக்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
வள்ளலைவாணுதலாள் வணங்கித்தொழவல்லள்கொலோ? 7

பார்த்தனுக்கன்றருளிப் பாரதத்தொருதேர்முன்னின்று *
காத்தவன்றன்னை விண்ணோர்கருமாணிக்கமாமலையை *
தீர்த்தனைப்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
மூர்த்தியைக்கைதொழவும் முடியுங்கொலென்மொய்குழற்கே. 8

** வலம்புரியாழியனை வரையார்திரடோளன்றன்னை *
புலம்புரிநூலவனைப் பொழில்வேங்கடவேதியனை *
சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலைநின்ற *
நலந்திகழ்நாரணனை நணுகுங்கொலென்னன்னுதலே. 9

** தேடற்கரியவனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
ஆடற்பறவையனை அணியாயிழைகாணுமென்று *
மாடக்கொடிமதிள்சூழ் மங்கையார்கலிகன்றிசொன்ன *
பாடல்பனுவல்பத்தும் பயில்வார்க்கில்லைபாவங்களே. 10

-மூவரில் புனை உண்டு சிங்கமது தானவன் நேசம் புள்ளினை பார்த்தனுக்கு வலம்புரி தேடற்கு எங்கள். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாந்திருமொழி—எங்களெம்மிறையெம்பிரான்.

** எங்களெம்மிறையெம்பிரான் இமையோர்க்குநாயகன் * ஏத்தடியவர்
தங்கள்தம் மனத்துப் பிரியாதருள்புரிவான் *
பொங்குதண்ணருவிபுதம்செய்யப் பொன்களேசிதறுமிலங்கொளி *
செங்கமலமலரும் திருக்கோட்டியூரானே. 1

எவ்வநோய்தவிர்ப்பான் எமக்கிறையின்னகைத்துவர்வாய் * நிலமகள்
செவ்விதோயவல்லான் திருமாமகட்கினியான் *
மௌவல்மாலைவண்டாடும் மல்லிகைமாலையோடுமணைந்து * மாருதம்
தெய்வநாறவரும் திருக்கோட்டியூரானே. 2

வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணன்விண்ணவர்தமக்கிறை * எமக்கு
ஒள்ளியானுயர்ந்தான் உலகேழுமுண்டுமிழ்ந்தான் *
துள்ளுநீர்மொண்டுகொண்டுசாமரைக்கற்றை சந்தனமுந்திவந்தசை *
தெள்ளுநீர்ப்புறவில் திருக்கோட்டியூரானே. 3

ஏறுமேறியிலங்குமொண்மழுப்பற்றும் ஈசற்கிசைந்து * உடம்பிலோர்
கூறுதான்கொடுத்தான் குலமாமகட்கினியான் *
நாறுசண்பகமல்லிகைமலர்புல்கி இன்னிளவண்டு * நன்னறும்
தேறல்வாய்மடுக்கும் திருக்கோட்டியூரானே. 4

வங்கமாகடல்வண்ணன் மாமணிவண்ணன்விண்ணவர்கோன் * மதுமலர்த்
தொங்கல்நீண்முடியான் நெடியான்படிகடந்தான் *
மங்குல்தோய்மணிமாடவெண்கொடி மாகமீதுயர்ந்தேறி * வானுயர்
திங்கள்தானணவும் திருக்கோட்டியூரானே. 5

காவலனிலங்கைக்கிறைகலங்கச் சரம்செலவுய்த்து * மற்றவன்
ஏவலம்தவிர்த்தான் என்னையாளுடையெம்பிரான் *
நாவலம்புவிமன்னர்வந்துவணங்க மாலுறைகின்றதிங்கென *
தேவர்வந்திறைஞ்சும் திருக்கோட்டியூரானே. 6

கன்றுகொண்டுவிளங்கனியெறிந்து ஆநிரைக்கழிவென்று * மாமழை
நின்றுகாத்துகந்தான் நிலமாமகட்கினியான் *
குன்றின்முல்லையின்வாசமும் குளிர்மல்லிகைமணமுமளைந்து * இளந்
தென்றல்வந்துலவுந் திருக்கோட்டியூரானே. 7

பூங்குருந்தொசித்தானைகாய்ந்து அரிமாச்செகுத்து * அடியேனையாளுகந்து
ஈங்கென்னுள்புகுந்தான் இமையோர்கள்தம்பெருமான் *
தூங்குதண்பலவின்கனி தொகுவாழையின்கனியொடுமாங்கனி *
தேங்குதண்புனல்சூழ் திருக்கோட்டியூரானே. 8

கோவையின்தமிழ்பாடுவார் குடமாடுவார்தடமாமலர்மிசை *
மேவுநான்முகனில் விளங்குபுரிநூலர் *
மேவுநான்மறைவாணர்ஐவகைவேள்வி ஆறங்கம்வல்லவர்தொழும் *
தேவதேவபிரான் திருக்கோட்டியூரானே. 9

** ஆலுமாவலவன்கலிகன்றி மங்கையர்தலைவன் * அணிபொழில்
சேல்கள்பாய்கழனித் திருக்கோட்டியூரானை *
நீலமாமுகில்வண்ணனைநெடுமாலையின்தமிழால்நினைந்த * இந்
நாலுமாறும்வல்லார்க்கு இடமாகும்வானுலகே. 10

அடிவரவு:—எங்கள் எவ்வம் வெள்ளி ஏறு வங்கம் காவலன் கன்று பூம் கோவை ஆலும்
ஒருநல். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஒன்பதாம்பத்து முற்றிற்று.

---

## பத்தாம்பத்து முதல் திருமொழி—ஒருநல்சுற்றம்.

** ஒருநல்சுற்றம் எனக்குயிரொண்பொருள் * வருநல்தொல்கதி ஆகியமைந்தனை *
நெருநல்கண்டதுநீர்மலை * இன்றுபோய்க் கருநெல்சூழ் கண்ணமங்கையுட்காண்டுமே. 1

** பொன்னைமாமணியை அணியார்ந்ததோர்மின்னை * வேங்கடத்துச்சியிற்கண்டுபோய் *
என்னையாளுடையீசனை யெம்பிரான்றன்னை * யாம்சென்றுகாண்டும் தண்காவிலே. 2

வேலையாலிலைப் பள்ளிவிரும்பிய * பாலையார் அமுதத்தினைப்பைந்துழாய் *
மாலையாலியில் கண்டுமகிழ்ந்துபோய் * ஞாலமுன்னியைக்காண்டும் நாங்கூரிலே. 3

துளக்கமில்சுடரை * அவுணனுடல்பிளக்கும்மைந்தனைப் பேரில்வணங்கிப்போய் *
அளப்பிலாரமுதை அமரர்க்கருள்விளக்கினை * சென்றுவெள்ளறைக்காண்டுமே.

சுடலையில் சுடுநீறனமர்ந்ததோர் * நடலைதீர்த்தவனை நறையூர்க்கண்டு * என்
உடலையுள்புகுந்து உள்ளமுருக்கியுண் * விடலையைச்சென்றுகாண்டும் மெய்யத்துள்ளே. 5

வானையாரமுதம் தந்தவள்ளலை * தேனைநீள்வயல் சேறையிற்கண்டுபோய் *
ஆனைவாட்டியருளும் அமரர்தம்கோனை * யாம்குடந்தைச்சென்றுகாண்டுமே. 6

** கூந்தலார்மகிழ்கோவலனாய் * வெண்ணெய்மாந்தழுந்தையில் கண்டுமகிழ்ந்துபோய் *
பாந்தட்பாழியில் பள்ளிவிரும்பிய * வேந்தனைச்சென்றுகாண்டும் வெஃகாவுளே. 7

பத்தராவியைப் பான்மதியை * அணித்தொத்தை மாலிருஞ்சோலைத்தொழுதுபோய் *
முத்தினைமணியை மணிமாணிக்கவித்தினை * சென்றுவிண்ணகர்க்காண்டுமே. 8

கம்பமாகளிறஞ்சிக்கலங்க * ஓர் கொம்புகொண்ட குரைகழற்கூத்தனை *
கொம்புலாம்பொழில் கோட்டியூர்க்கண்டுபோய் * நம்பனைச்சென்றுகாண்டும் நாவாயுளே. 9

** பெற்றமாளியைப் பேரில்மணாளனை * கற்றநூல் கலிகன்றியுரைசெய்த *
சொல்திறமிவை சொல்லியதொண்டர்கட்கு * அற்றமில்லை அண்டமவர்க்காட்சியே. 10

அடிவரவு:—ஒரு பொன் வேலை துளக்கம் சுடலை வான் கூந்தல் பத்தர் கம்பம் பெற்றம் இரக்கம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

### பத்தாம்பத்து—இரண்டாந்திருமொழி—இரக்கமின்றியெங்கோன்.

** இரக்கமின்றியெங்கோன்செய்ததீமை யிம்மையேயெமக்கெய்திற்றுக்காணீர் *
பரக்கயாமின்றுரைத்தெனிராவணன்பட்டனன் இனியாவர்க்குரைக்கோம்? *
குரக்குநாயகர்காளிளங்கோவே கோலவல்விலிராமபிரானே! *
அரக்கராடழைப்பாரில்லை நாங்களஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. 1

பத்துநீண்முடியுமவற்றிரட்டிப் பாழித்தோளும்படைத்தவன்செல்வம் *
சித்தம்மங்கையர்பால்வைத்துக்கெட்டான் செய்வதொன்றறியாவடியோங்கள் *
ஒத்ததோளிரண்டுமொருமுடியும் ஒருவர்தந்திறத்தோமன்றிவாழ்ந்தோம் *
அத்தவெம்பெருமானெம்மைக்கொல்லேல் அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. 2

தண்டகாரணியம்புகுந்து அன்றுதையலைத்தகவிலியெங்கோமான் *
கொண்டுபோந்துகெட்டானெமக்கிங்கோர்குற்றமில்லை கொல்லேல்குலவேந்தே! *
பெண்டிராற்கெடுமிக்குடிதன்னைப் பேசுகின்றதென்தாசரதீ! * உன்
அண்டவாணருகப்பதேசெய்தாய் அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. 3

எஞ்சலில்இலங்கைக்கிறை யெங்கோன்தன்னைமுன்பணிந்தெங்கள்கண்முகப்பே *
நஞ்சுதானரக்கர்குடிக்கென்று நங்கையையவன்தம்பியேசொன்னான் *
விஞ்சைவானவர்வேண்டிற்றேபட்டோம் வேரிவார்பொழில்மாமயிலன்ன *
அஞ்சலோதியைக்கொண்டுநடமின் அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. 4

செம்பொன்நீண்முடியெங்களிராவணன் சீதையென்பதோர்தெய்வம்கொணர்ந்து *
வம்புலாங்கடிகாவிற்சிறையாவைத்ததே குற்றமாயிற்றுக்காணீர் *

கும்பனோடுநிகும்பனும்பட்டான் கூற்றம்மானிடமாய்வந்துதோன்றி *
அம்பினாலெம்மைக்கொன்றிடுகின்றது அஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 5

ஓதமாகடலைக்கடந்தேறி உயர்கொள்மாக்கடிகாவையிறுத்து *
காதல்மக்களுஞ்சுற்றமுங்கொன்று கடியிலங்கைமலங்கவெரித்து *
தூதுவந்தகுரங்குக்கே உங்கள்தோன்றல்தேவியைவிட்டுக்கொடாதே *
ஆதர்நின்றுபடுகின்றதந்தோ அஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 6

தாழமின்றிமுந்நீரையஞ்ஞான்று தகைந்ததேகண்டுவஞ்சிநுண்மருங்குல் *
மாழைமான்மடநோக்கியைவிட்டு வாழகில்லாமதியின்மனத்தானை *
ஏழையையிலங்கைக்கிறைதன்னை யெங்களையொழியக்கொலையவனை *
சூழுமாநினைமாமணிவண்ணா சொல்லினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 7

மனங்கொண்டேறும்மண்டோதரிமுதலா அங்கயற்கண்ணினார்களிருப்ப *
தனங்கொள்மென்முலைநோக்கமொழிந்து தஞ்சமேசிலதாபதரென்று *
புனங்கொள்மென்மயிலைச்சிறைவைத்த புன்மையாளன்நெஞ்சிற்புகவெய்த *
அனங்கனன்னதிண்டோளெம்பிராமற்கு அஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 8

புரங்கள்மூன்றுமோர்மாத்திரைப்போதில் பொங்கெரிக்கிரைகண்டவனம்பில் *
சரங்களேகொடிதாயடுகின்ற சாம்பவானுடன்நிற்கத்தொழுதோம் *
இரங்குநீயெமக்கெந்தைபிரானே இலங்குவெங்கதிரோன்சிறுவா *
குரங்குகட்கரசே! யெம்மைக்கொல்லேல் கூறினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 9

** அங்குவானவர்க்காகுலம்தீர அணியிலங்கையழித்தவன்றன்னை *
பொங்குமாவலவன்கலிகன்றி புகன்றபொங்கத்தங்கொண்டு * இவ்வுலகினில்
எங்கும்பாடிநின்றாடுமின்தொண்டீர் இம்மையேயிடரில்லை * இறந்தால்
தங்குமூரண்டமேகண்டுகொண்மின் சாற்றினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 10

அடிவரவு:—இரக்கம் பத்து தண்டக எஞ்சல் செம்பொன் ஓதம் தாழம் மனம் புரங்கள் அங்கு ஏத்து. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

---

### பத்தாம்பத்து—மூன்றாந்திருமொழி, ஏத்துகின்றோம்நாத்தழும்ப.

** ஏத்துகின்றோம்நாத்தழும்ப இராமன்திருநாமம் *
சோத்தநம்பி! சுக்கிரீவா உம்மைத்தொழுகின்றோம் *
வார்த்தைபேசீரெம்மை உங்கள்வானரம்கொல்லாமே *
கூத்தர்போலவாடுகின்றோம் குழமணிதூரமே. 1

எம்பிரானே! யென்னையாள்வாய் என்றென்றலற்றாதே *
அம்பின்வாய்ப்பட்டாற்றகில்லாது இந்திரசித்தழிந்தான் *
நம்பியநுமாசுக்கிரீவா அங்கதனேநளனே! *
கும்பகரணன்பட்டுப்போனான் குழமணிதூரமே. 2

ஞாலமாளுமுங்கள்கோமான் எங்களிராவணற்கு *
காலனாகிவந்தவா கண்டஞ்சிக்கருமுகில்போல் *
நீலன்வாழ்கசுடேணன்வாழ்க அங்கதன்வாழ்கவென்று *
கோலமாகவாடுகின்றோம் குழமணிதூரமே. 3

மணங்கள்நாறும்வார்குழலார் மாதர்களாதரத்தை *
புணர்ந்தசிந்தைப்புன்மையாளன் பொன்றவரிசிலையால் *
கணங்களுண்ணவாளியாண்ட காவலனுக்கிளையோன் *
குணங்கள்பாடியாடுகின்றோம் குழமணிதூரமே. 4

வென்றிதந்தோப்மானம்வேண்டோம் தானமெமக்காக *
இன்றுதம்மினெங்கள்வாணாள் எம்பெருமான்தமர்காள்! *
நின்றுகாணீர்கண்களார நீரெம்மைக்கொல்லாதே *
குன்றுபோலவாடுகின்றோம் குழமணிதூரமே. 5

கல்லின்முந்நீர்மாற்றிவந்து காவல்கடந்து * இலங்கை
அல்லல்செய்தானுங்கள்கோமான் எம்மையமர்க்களத்து *
வெல்லகில்லாதஞ்சினோங்காண் வெங்கதிரோன்சிறுவா! *
கொல்லவேண்டாவாடுகின்றோம் குழமணிதூரமே. 6

மாற்றமாவதித்தனையே வம்மினரக்கருள்ளீர்! *
சீற்றம்நும்மேல்தீரவேண்டில் சேவகம்பேசாதே *
ஆற்றல்சான்றதொல்பிறப்பில் அனுமனைவாழ்கவென்று *
கூற்றமன்னார்காணவாடீர் குழமணிதூரமே. 7

கவளயானைப்பாய்புரவித் தேரோடரக்கரெல்லாம்
துவள * வென்றவென்றியாளன் தன்தமர்கொல்லாமே *
தவளமாடநீடயோத்திக் காவலன்றன்சிறுவன் *
குவளைவண்ணன்காணவாடீர் குழமணிதூரமே. 8

ஏடொத்தேந்தும்நீளிலைவேல் எங்களிராவணனார்
ஓடிப்போனார் * நாங்களெய்த்தோம் உய்வதோர்காரணத்தால் *
சூடிப்போந்தோமுங்கள்கோமானாணை தொடரேன்மின் *
கூடிக்கூடியாடுகின்றோம் குழமணிதூரமே. 9

**வென்றதொல்சீர்த்தென்னிலங்கைவெஞ்சமத்து* அன்றரக்கர்
குன்றமன்னாராடியுய்ந்த குழமணிதூரத்தை *
கன்றிநெய்ந்நீர்நின்றவேற்கைக் கலியனொலிமாலை *
ஒன்றுமொன்றுமைந்துமூன்றும் பாடிநின்றாடுமினே. 10

-ஏத்துகின்றோம் எம்பிரானே ஞாலம் மணங்கள் வென்றி கல்லின் மாற்றம் கவளம் ஏடு வென்ற சர்தம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—நான்காந்திருமொழி—சந்தமலர்க்குழல்தாழ.

** சந்தமலர்க்குழல்தாழத் தானுகந்தோடித்தனியே
வந்து * என்முலைத்தடந்தன்னைவாங்கி நின்வாயில்மடுத்து *
நந்தன்பெறப்பெற்றநம்பீ நானுகந்துண்ணுமமுதே ! *
எந்தைபெருமானேயுண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. 1

வங்கமறிகடல்வண்ணா மாமுகிலேயொக்குநம்பீ ! *
செங்கணெடியதிருவே செங்கமலம்புரைவாயா ! *
கொங்கைசுரந்திடவுன்னைக் கூவியுங்காணாதிருந்தேன் *
எங்கிருந்தாயர்களோடும் என்விளையாடுகின்றாயே ? 2

திருவிற்பொலிந்தவெழிலார் ஆயர்தம்பிள்ளைகளோடு *
தெருவில்திளைக்கின்றநம்பீ செய்கின்றதீமைகள்கண்டிட்டு *
உருகியென்கொங்கையின்தீம்பால் ஓட்டந்துபாய்ந்திடுகின்ற *
மருவிக்குடங்காலிருந்து வாய்முலையுண்ணநீவாராய். 3

மக்கள்பெறாதவம்போலும் வையத்துவாழும்மடவார் *
மக்கள்பிறர்கண்ணுக்கொக்கும்முதல்வா மதக்களிறன்னாய் ! *
செக்கரிளம்பிறைதன்னைவாங்கி நின்கையில்தருவன் *
ஒக்கலைமேலிருந்தம்மம் உவந்தினிதுண்ணநீவாராய். 4

மைத்தகருங்குஞ்சிமைந்தா மாமருதூடுநடந்தாய் ! *
வித்தகனே! விரையாதே வெண்ணெய்விழுங்கும்விகிர்தா ! *
இத்தனைபோதன்றியென்றன் கொங்கைசுரந்திருக்ககில்லா *
உத்தமனேயம்மமுண்ணாய் உலகளந்தாயம்மமுண்ணாய். 5

பிள்ளைகள்செய்வனசெய்யாய் பேசிற்பெரிதும்வலியை *
கள்ளம்மனத்திலுடையை காணவேதீமைகள்செய்தி *
உள்ளமுருகியென்கொங்கை ஓட்டந்துபாய்ந்திடுகின்ற *
பள்ளிக்குறிப்புச்செய்யாதே பாலமுதுண்ணநீவாராய். 6

தன்மகனாகவன்பேய்ச்சி தான்முலையுண்ணக்கொடுக்க *
வன்மகனாயவளாவிவாங்கி முலையுண்டநம்பீ ! *
நன்மகளாய்மகளோடு நானிலமங்கைமணாளா ! *
என்மகனேயம்மமுண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. 7

உந்தமடிகள்முனிவர் உன்னைநானென்கையிற்கோலால் *
நொந்திடமோதவுங்கில்லேன் உங்கள்தமாநிரையெல்லாம் *
வந்துபுகுதரும்போது வானிடைத்தெய்வங்கள்காண *
அந்தியம்போதங்குநில்லேல் ஆழியங்கையனே! வாராய். 8

பெற்றத்தலைவனெங்கோமான் பேரருளாளன்மதலாய்! *
சுற்றக்குழாத்திளங்கோவே தோன்றியதொல்புகழாளா! *
கற்றினந்தோறுமறித்துக் கானந்திரிந்தகளிறே! *
எற்றுக்கென்னம்மமுண்ணுதே யெம்பெருமானிருந்தாயே? 9

** இம்மையிடர்கெடவேண்டி யேந்தெழில்தோட்கலிகன்றி *
செம்மைப்பனுவல்நூல்கொண்டு செங்கணெடியவன்றன்னை *
அம்மமுண்ணென்றுரைக்கின்ற பாடலிவையைந்துமைந்தும் *
மெய்ம்மைமனத்துவைத்தேத்த விண்ணவராகலுமாமே. 10

சந்தம் வங்கம் திருவில் மக்கள் மைத்த பிள்ளைகள் தன்மகன் உந்தம் பெற்றம் இம்மை பூங்கோதை. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—ஐந்தாந்திருமொழி—பூங்கோதையாய்ச்சி.

** பூங்கோதையாய்ச்சி கடைவெண்ணெய்புக்குண்ண *
ஆங்கவளார்த்துப் புடைக்கப்புடையுண்டு *
ஏங்கியிருந்து சிணுங்கிவிளையாடும் *
ஓங்கோதவண்ணனே சப்பாணி ஒளிமணிவண்ணனே சப்பாணி. 1

தாயர்மனங்கள்தடிப்ப * தயிர்நெய்யுண்
டேயெம்பிராக்கள்! இருநிலத்தெங்கள்தம் *
ஆயரழக! அடிகளரவிந்த
வாயவனே! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 2

தாமோருருட்டித் தயிர்நெய்விழுங்கிட்டு *
தாமோதவழ்வரென்று ஆய்ச்சியர்தாம்பினால் *
தாமோதரக்கையால் ஆர்க்கத்தழும்பிருந்த *
தாமோதரா! கொட்டாய்சப்பாணி தாமரைக்கண்ணனே! சப்பாணி. 3

பெற்றார்தளைகழலப் பேர்ந்தங்கயலிடத்து *
உற்றாரொருவருமின்றி உலகினில் *
மற்றாருமஞ்சப்போய் வஞ்சப்பெண்நஞ்சுண்ட *
கற்றாயனே! கொட்டாய்சப்பாணி கார்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 4

சோத்தெனநின்னைத் தொழுவன்வரந்தா *
பேய்ச்சிமுலையுண்டபிள்ளாய்! * பெரியன
ஆய்ச்சியரப்பம்தருவர் * அவர்க்காகச்
சாற்றியோராயிரம்சப்பாணி தடங்கைகளாற்கொட்டாய்சப்பாணி. 5

கேவலமன்றுன்வயிறு * வயிற்றுக்கு
நான் அவலப்பம்தருவன் * கருவிளைப்

பூவலர்நீண்முடி நந்தன்தன்போரேறே! *
கோவலனே! கொட்டாய்சப்பாணி குடமாடீ! கொட்டாய்சப்பாணி. 6

புள்ளினைவாய்பிளந்து பூங்குருந்தம்சாய்த்து *
துள்ளிவிளையாடித் தூங்குறிவெண்ணெயை *
அள்ளியகையால் அடியேன்முலைநெருடும் *
பிள்ளைப்பிரான்! கொட்டாய்சப்பாணி பேய்முலையுண்டானே! சப்பாணி. 7

யாயும்பிறரும் அறியாதயாமத்து *
மாயவலவைப் பெண்வந்துமுலைதர *
பேயென்றவளைப் பிடித்துயிரையுண்ட *
வாயவனே! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 8

கள்ளக்குழவியாய்க் காலாற்சகடத்தை *
தள்ளியுதைத்திட்டுத் தாயாய்வருவாளை *
மெள்ளத்தொடர்ந்து பிடித்தாருயிருண்ட *
வள்ளலே! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி. 9

** காரார்புயற்கைக் கலிகன்றிமங்கையர்கோன் *
பேராளன்நெஞ்சில் பிரியாதிடங்கொண்ட
சீராளா! * செந்தாமரைக்கண்ணா! தண்டுழாய் *
தாராளா! கொட்டாய்சப்பாணி தடமார்வா! கொட்டாய்சப்பாணி. 10

அடிவரவு:—பூங்கோதை தாயர் தாமோர் பெற்றார் சோத்தென கேவலம் புள் யாயும் கள்ளம் காரார் எங்கானும். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—ஆறுந்திருமொழி—எங்கானுமீதொப்பதோர்.

** எங்கானுமீதொப்பதோர்மாயமுண்டே நரநாரணனாயுலகத்தறநூல்*
சிங்காமைவிரித்தவனெம்பெருமான் அதுவன்றியுஞ்செஞ்சுடரும்நிலனும்*
பொங்கார்கடலும்பொருப்பும்நெருப்பும்நெருக்கிப்புகப் பொன்மிடறத்தனைபோது *
அங்காந்தவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (1)

குன்றொன்றுமத்தாவரவமளவிக் குரைமாகடலைக்கடைந்திட்டு* ஒருகால்
நின்றுண்டைகொண்டோட்டிவன்கூன்நிமிர நினைந்தபெருமான் அதுவன்றியும்முன் *
நன்றுண்டதொல்சீர்மகரக்கடலேழ் மலையேழுலகேழொழியாமைநம்பி *
அன்றுண்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 2

உளைந்திட்டெழுந்தமதுகைடவர்கள் உலப்பில்வலியாலவர்பால் * வயிரம்
விளைந்திட்டதென்றெண்ணிவிண்ணோர்பரவ அவர்நாளொழித்தபெருமான்முனநாள் *
வளைந்திட்டவில்லாளிவல்வாளெயிற்று மலைபோலவுணனுடல்வள்ளுகிரால் *
அளைந்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 3

தளர்ந்திட்டிமையோர்சரண்தாவெனத் தான்சரணாய்முரணாயவனை * உகிரால்
பிளந்திட்டமரர்க்கருள்செய்துகந்த பெருமான்திருமால்விரிநீருலகை *

வளர்ந்திட்டதொல்சீர்விறல்மாவலியை மண்கொள்ளவஞ்சித்தொருமாண்குறளாய் *
அளந்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 4

நீண்டான்குறளாய்நெடுவானளவும் அடியார்படுமாழ்துயராயவெல்லாம் *
தீண்டாமைநினைந்திமையோரளவும் செலவைத்தபிரான் அதுவன்றியும்முன் *
வேண்டாமைநமன்தமர்என்தமரை வினவப்பெறுவாரலரென்று * உலகேழ்
ஆண்டானவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 5

பழித்திட்டவின்பப்பயன்பற்றறுத்துப் பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம் *
ஒழித்திட்டவரைத்தனக்காக்கவல்ல பெருமான் திருமாலதுவன்றியும்முன் *
தெழித்திட்டெழுந்தேயெதிர்நின்றமன்னன் சினத்தோளவையாயிரமும்மழுவால் *
அழித்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 6

படைத்திட்டதிவ்வையமுய்யமுனநாள் பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம் *
துடைத்திட்டவரைத்தனக்காக்கவென்னத் தெளியாவரக்கர்திறல்போயவிய *
மிடைத்திட்டெழுந்தகுரங்கைப்படையா விலங்கல்புகப்பாய்ச்சிவிம்ம * கடலை
அடைத்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 7

நெறித்திட்டமென்கூழைநன்னேரிழையோடு உடனாயவில்லென்னவல்லேயதனை *
இறுத்திட்டவளின்பமன்போடணைந்திட்டு இளங்கொற்றவனாய்த்துளங்காதமுந்நீர் *
செறித்திட்டிலங்கைமலங்கவரக்கன் செழுநீண்முடிதோளொடுதாள்துணிய *
அறுத்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 8

சுரிந்திட்டசெங்கேழுளைப்பொங்கரிமாத் தொலையப்பிரியாதுசென்றெய்தி * எய்தா
திரிந்திட்டிடங்கொண்டடங்காததன்வாய் இருகூறுசெய்தபெருமான்முனநாள் *
வரிந்திட்டவில்லால்மரமேழுமெய்து மலைபோலுருவத்தொரிராக்கதிமூக்கு *
அரிந்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 9

** நின்றார்முகப்புச்சிரித்துமிழ்னியான் வயிற்றைநிறைப்பானுறிப்பால்தயிர்நெய் *
அன்றாய்ச்சியர்வெண்ணெய்விழுங்கி உரலோடாப்புண்டிருந்தபெருமானடிமேல் *
நன்றாயதொல்சீர்வயல்மங்கையர்கோன் கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார் *
என்றானுமெய்தாரிடர்இன்பமெய்தி இமையோர்க்குமப்பால்செலவெய்துவாரே. 10

அடிவரவு:—எங்கான் குன்றனை தளர் நீண்டான் பழி படை நெறி சுரி நின்றார் மானம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

### பத்தாம்பத்து—ஏழாந்திருமொழி, மானமுடைத்துங்கள்.

** மானமுடைத்துங்களாயர்குலமதனால் பிறர்மக்கள்தம்மை *
ஊனமுடையனசெய்யப்பெறுமென்று இரப்பனுரப்பகில்லேன் *
நானுமுரைத்திலேன்நந்தன்பணித்திலன் நங்கைகாள்நானென்செய்கேன் *
தானுமோர்கன்னியுங்கீழையகத்துத் தயிர்கடைகின்றான்போலும். 1

காலையெழுந்துகடைந்தவிம்மோர்விற்கப்போகின்றேன் கண்டேபோனேன் *
மாலைநறுங்குஞ்சிநந்தன்மகனல்லால் மற்றுவந்தாருமில்லை *
மேலையகத்துநங்காய்வந்துகாண்மின்கள் வெண்ணெயேயன்றிருந்த
பாலும்* பதின்குடங்கண்டிலேன் பாவியேனென்செய்கேனென்செய்கேனே. 2

தெள்ளியவாய்ச்சிறியானங்கைகாள் உறிமேலைத்தடாநிறைந்த *
வெள்ளிமலையிருந்தாலொத்தவெண்ணெயை வாரிவிழுங்கியிட்டு *
கள்வனுறங்குகின்றான்வந்துகாண்மின்கள் கையெல்லாம்நெய்வயிறு
பிள்ளைபரமன்று* இவ்வேழுலகுங்கொள்ளும் பேதையேனென்செய்கேனே.

மைந்நம்புவேற்கண்நல்லாள் முன்னம்பெற்றவளைவண்ணநன்மாமேனி *
தன்னம்பிநம்பியுமிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான் *
பொய்ந்நம்பிபுள்ளுவன்கள்வம்பொதியறை போகின்றவாதவழ்ந்திட்டு *
இந்நம்பிநம்பியா ஆய்ச்சியர்க்குய்வில்லை யென்செய்கேனென்செய்கேனே. 4

தந்தைபுகுந்திலன்நானிங்கிருந்திலேன் தோழிமாராருமில்லை *
சந்தமலர்க்குழலாள் தனியேவிளையாடுமிடங்குறுகி *
பந்துபறித்துத்துகில்பற்றிக்கீறிப் படிறன்படிறுசெய்யும் *
நந்தன்மதலைக்கிங்கென்கடவோம்நங்காய் என்செய்கேனென்செய்கேனே. 5

மண்மகள்கேள்வன்மலர்மங்கைநாயகன் நந்தன்பெற்றமதலை *
அண்ணலிலைக்குழலூதிநஞ்சேரிக்கே அல்லில்தான்வந்தபின்னை *
கண்மலர்சோர்ந்துமுலைவந்துவிம்மிக் கமலச்செவ்வாய்வெளுப்ப *
என்மகள்வண்ணமிருக்கின்றவாநங்காய் என்செய்கேனென்செய்கேனே? 6

ஆயிரங்கண்ணுடையிந்திரனுக்கென்று ஆயர்விழவெடுப்ப *
பாசனநல்லனபண்டிகளால் புகப்பெய்தவதனையெல்லாம் *
போயிருந்தங்கொருபூதவடிவுகொண்டு உன்மகனின்றுநங்காய்! *
மாயனதனையெல்லாம்முற்றும் வாரிவளைத்துண்டிருந்தான்போலும். 7

தோய்த்ததயிரும்நறுநெய்யும்பாலும் ஓரோகுடந்துற்றிடுமென்று *
ஆய்ச்சியர்கூடியழைக்கவும் நானிதற்கெள்கியிவனைநங்காய்! *
சோத்தம்பிரானிவைசெய்யப்பெறுயென்று இரப்பனுரப்பகில்லேன் *
பேய்ச்சிமுலையுண்டபின்னை யிப்பிள்ளையைப்பேசுவதஞ்சுவனே. 3

ஈடும்வலியுமுடைய இந்நம்பிபிறந்தவெழுதிங்களில் *
எடலர்கண்ணியினானைவளர்த்தி எமுனைநீராடப்போனேன் *
சேடன்திருமறுமார்பன் கிடந்துதிருவடியால் * மலைபோல்
ஓடுஞ்சகடத்தைச்சாடியபின்னை உரப்புவதஞ்சுவனே. 9

அஞ்சுவன்சொல்லியழைத்திடநங்கைகாள் ஆயிரநாழிநெய்யை *
பஞ்சியமெல்லடிப்பிள்ளைகளுண்கின்று பாகந்தான்வையார்களே *
கஞ்சன்கடியன்கறவெட்டுநாளில் என்கைவலத்தாதுமில்லை *
நெஞ்சத்திருப்பனசெய்துவைத்தாய்நம்பி என்செய்கேனென்செய்கேனே. 10

அங்ஙனுந்தீமைகள்செய்வர்களோநம்பி ஆயர்மடமக்களை *
பங்கயநீர்குடைந்தாடுகின்றார்கள் பின்னேசென்றொளித்திருந்து *
அங்கவர்பூந்துகில்வாரிக்கொண்டிட்டு அரவேரிடையாரிரப்ப *
மங்கைநல்லீர்வந்துகொண்மினென்று மரமேறியிருந்தாய்போலும். 11

அச்சந்தினைத்தனையில்லையிப்பிள்ளைக்கு ஆண்மையுஞ்சேவகமும் *
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக்கு உரைத்திலன்தானின்றுபோய் *
பச்சிலைப்பூங்கடம்பேறி விசைகொண்டுபாய்ந்துபுக்கு * ஆயிரவாய்
நச்சழற்பொய்கையில்நாகத்திேனாடு பிணங்கிநீவந்தாய்போலும். 12

தம்பரமல்லனவாண்மைகளைத் தனியேநின்றுதாம்செய்வரோ ?
எம்பெருமானுன்னைப்பெற்றவயிறுடையேன் இனியானென்செய்கேன் ?
அம்பரமேழுமதிருமிடிகுரல் அங்கனற்செங்கணுடை *
வம்பவிழ்கானத்துமால்விடையோடு பிணங்கிநீவந்தாய்போலும். 13

** அன்னநடைமடவாய்ச்சிவயிறடித்தஞ்ச அருவரைபோல் *
மன்னுகருங்களிற்றுருயிர்வவ்விய மைந்தனைமாகடல்சூழ் *
கன்னிநன்மாமதிள்மங்கையர்காவலன் காமருசீர்க்கலிகன்றி *
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க்கு ஏதுமிடரில்லையே. 14

அடிவரவு:—மானம், காலை, தெள்ளி, மை, தந்தை, மண், ஆயிரம், தோய்த்த, ஈடு, அஞ்சுவன் அங்ஙனம், அச்சம், தம்பரம், அன்ன, காதில்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—எட்டாந்திருமொழி—காதிற்கடிப்பிட்டு.

** காதிற்கடிப்பிட்டுக் கலிங்கமுடுத்து * தாதுநல்ல தண்ணந்துழாய்கொடணிந்து *
போதுமறித்துப் புறமேவந்துநின்றீர் * ஏதுக்கிதுவென் இதுவென்னிதுவென்னோ. 1

துவராடையுடுத்து ஒருசெண்டுசிலுப்பி * கவராகமுடித்துக் கலிக்கச்சுக்கட்டி *
சுவரார்கதவின்புறமே வந்துநின்றீர் * இவராரிதுவென் இதுவென்னிதுவென்னோ. 2

கருளக்கொடியொன்றுடையீர் தனிப்பாகீர் * உருளச்சகடமது உறக்கில்நிமிர்த்தீர் *
மருளைக்கொடுபாடிவந்து இல்லம்புகுந்தீர் * இருளத்திதுவென் இதுவென்னிதுவென்னோ. 3

நாமம்பலவுமுடை நாரணநம்பி * தாமத்துளபம் மிகநாறிடுகின்றீர் *
காமனெனப்பாடிவந்து இல்லம்புகுந்தீர் * ஏமத்திதுவென் இதுவென்னிதுவென்னோ. 4

சுற்றுங்குழல்தாழச் சுரிகையணைத்து * மற்றும்பல மாமணிபொன்கொடணிந்து *
முற்றம்புகுந்து முறுவல்செய்துநின்றீர் * எற்றுக்கிதுவென் இதுவென்னிதுவென்னோ. 5

ஆனாயரும் ஆனிரையுமங்கொழிய * கூனாயதோர் கொற்றவில்லொன்றுகையேந்தி *
போனாரிருந்தாரையும் பார்த்துப்புகுதீர் * ஏனோர்கள்முன்னென் இதுவென்னிதுவென்னோ. 6

மல்லேபொருததிரடோள் மணவாளீர் * அல்லேயறிந்தோம் நும்மனத்தின்கருத்தை *
சொல்லாதொழியீர் சொன்னபோதினால்வாரீர் * எல்லேயிதுவென் இதுவென்னிதுவென்னோ.

புக்காடரவம் பிடித்தாட்டும்புனிதீர் * இக்காலங்கள் யாமுமக்கேதொன்றுமல்லோம் *
தக்கார்பலர் தேவிமார்சாலவுடையீர் * எக்கேயிதுவென் இதுவென்னிதுவென்னோ. 8

ஆடியசைந்து ஆய்மடவாரொடுநீபோய் * கூடிக்குரவைபிணை கோமளப்பிள்ளாய் *
தேடித்திருமாமகள் மண்மகள்நிற்ப * ஏடியிதுவென் இதுவென்னிதுவென்னோ. 9

** அல்லிக்கமலக்கண்ணனை அங்கோராய்ச்சி * எல்லிப்பொழுதூடிய ஊடல்திறத்தை *
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை * சொல்லித்துதிப்பாரவர் துக்கமிலரே. 10

அடிவரவு:—காதில் துவர் கருள நாமம் சுற்றும் ஆனாயர் மல்லை புக்கு ஆடி அல்லி புள்ளுரு.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

**பத்தாம்பத்து—ஒன்பதாந்திருமொழி, புள்ளுருவாகிநள்ளிருள்வந்த.**

** புள்ளுருவாகிநள்ளிருள்வந்த பூதனைமாள * இலங்கை
ஒள்ளெரிமண்டியுண்ணப்பணித்த ஊக்கமதனைநினைந்தோ *
கள்ளவிழ்கோதைகாதலும் எங்கள்காரிகைமாதர்கருத்தும் *
பிள்ளைதன்கையிற்கிண்ணமேயொக்கப் பேசுவதெந்தைபிரானே. 1

மன்றின்மலிந்துகூத்துவந்தாடி மால்விடையேழுமடர்த்து * ஆயர்
அன்றுநடுங்கவாநிரைகாத்த ஆண்மைகொலோவறியேனான் *
நின்றபிரானேநீள்கடல்வண்ணா நீயிவள்தன்னைநின்கோயில் *
முன்றிலெழுந்தமுருங்கையில்தேனா முன்கைவளைகவர்ந்தாயே. 2

ஆர்மலியாழிசங்கொடுபற்றி ஆற்றலையாற்றல்மிகுத்து *
கார்முகில்வண்ணாகஞ்சனைமுன்னம் கடந்தநின்கடுந்திறல்தானோ *
நேரிழைமாதைநித்திலத்தொத்தை நெடுங்கடலமுதனையாளை *
ஆரெழில்வண்ணாஅங்கையில்வட்டாம் இவளெனக்கருதுகின்றாயே. 3

மல்கியதோளும்மானுரியதளும் உடையவர்தமக்குமோர்பாகம் *
நல்கியநலமோநரகனைத்தொலைத்த கரதலத்தமைதியின்கருத்தோ *
அல்லியங்கோதையணிநிறங்கொண்டுவந்து முன்னேநின்றுபோகாய் *
சொல்லியென்நம்பீயிவளைநீயுங்கள் தொண்டர்கைத்தண்டென்றவாறே. 4

செருவழியாதமன்னர்கள்மாளத் தேர்வலங்கொண்டவர்செல்லும் *
அருவழிவானமதர்படக்கண்ட ஆண்மைகொலோவறியேனான் *
திருமொழியெங்கள்தேமலர்க்கோதை சீர்மையைநினைந்திலையந்தோ *
பெருவழிநாவற்கனியினுமெளியள் இவளெனப்பேசுகின்றாயே. 5

அரக்கியராகம்புல்லெனவில்லால் அணிமதிளிலங்கையார்கோனை *
செருக்கழித்தமரர்பணியமுன்னின்ற சேவகமோசெய்ததின்று *
முருக்கிதழ்வாய்ச்சிமுன்கைவெண்சங்கங்கொண்டு முன்னேநின்றுபோகாய் *
எருக்கிலைக்காகவெறிமழுவோச்சல் என்செய்வதெந்தைபிரானே. 6

ஆழியந்திண்டேரரசர்வந்திறைஞ்ச அலைகடலுலகமுன்னாண்ட *
பாழியந்தோளோராயிரம்வீழப் படைமழுப்பற்றியவலியோ *
மாழைமென்னோக்கிமணிநிறங்கொண்டுவந்து முன்னேநின்றுபோகாய் *
கோழிவெண்முட்டைக்கென்செய்வதெந்தாய் குறுந்தடிநெடுங்கடல்வண்ணா. 7

பொருந்தலனாகம்புள்ளுவந்தேற வள்ளுகிரால் பிளந்து * அன்று
பெருந்தகைக்கிரங்கிவாலியைமுனிந்த பெருமைகொலோசெய்ததின்று *
பெருந்தடங்கண்ணிசுரும்புறுகோதை பெருமையைநினைந்திலைபேசில் *
கருங்கடல்வண்ணாகவுட்கொண்டநீராம் இவளெனக்கருதுகின்றாயே. 8

நீரழல்வானாய்நெடுநிலங்காலாய் நின்றநின்னீர்மையைநினைந்தோ *
சீர்கெழுகோதையென்னலதிலளென்று அன்னதோர்தேற்றன்மைதானோ *
பார்கெழுபவ்வத்தாரமுதனைய பாவையைப்பாவஞ்செய்தேனுக்கு *
ஆரழலோம்புமந்தணன்தோட்டமாக நின்மனத்துவைத்தாயே. 9

** வேட்டத்தைக்கருதாதடியிணைவணங்கி மெய்ம்மைநின்றெம்பெருமானை *
வாட்டிறல்தானைமங்கையர்தலைவன் மானவேற்கலியன்வாயொலிகள் *
தோட்டலர்பைந்தார்சுடர்முடியானைப் பழமொழியாற்பணிந்துரைத்த *
பாட்டிவைபாடப்பத்திமைபெருகிச் சித்தமுந்திருவொடுமிகுமே. 10

—புள்ளுரு மன்றில் ஆர்மலி மல்கிய செரு அரக்கியர் ஆழி பொருந்தலன் நீரழல் வேட்டத்தை திருத்தாய். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

**பத்தாம்பத்து பத்தாந்திருமொழி—திருத்தாய்செம்போத்தே.**

** திருத்தாய்செம்போத்தே * திருமாமகள்தன்கணவன் *
மருத்தார்தொல்புகழ் மாதவனைவர * திருத்தாய்செம்போத்தே. 1

கரையாய்காக்கைப்பிள்ளாய் * கருமாமுகில்போல்நிறத்தன் *
உரையார்தொல்புகழுத்தமனைவர * கரையாய்காக்கைப்பிள்ளாய். 2

கூவாய்பூங்குயிலே * குளிர்மாரிதடுத்துகந்த *
மாவாய்கீண்டமணிவண்ணனைவர * கூவாய்பூங்குயிலே. 3

கொட்டாய்பல்லிக்குட்டி குடமாடியுலகளந்த *
மட்டார்பூங்குழல்மாதவனைவர * கொட்டாய்பல்லிக்குட்டி. 4

** சொல்லாய்பைங்கிளியே சுடராழிவலனுயர்த்த *
மல்லார்தோள்வடவேங்கடவனைவர * சொல்லாய்பைங்கிளியே. 5

கோழிகூவென்னுமால் * தோழிநானென்செய்கேன் *
ஆழிவண்ணர்வரும்பொழுதாயிற்று * கோழிகூவென்னுமால். 6

காமற்கென்கடவேன் * கருமாமுகில்வண்ணற்கல்லால் *
பூமேலைங்கணைகோத்துப்புகுந்தெய்ய * காமற்கென்கடவேன். 7

** இங்கேபோதுங்கொலோ * இனவேல்நெடுங்கண்களிப்ப *
கொங்கார்சோலைக் குடந்தைக்கிடந்தமால் * இங்கேபோதுங்கொலோ. 8

இன்னாரென்றறியேன் * அன்னேயாழியொடும் *
பொன்னார்சார்ங்கமுடையவடிகளை * இன்னாரென்றறியேன். 9

** தொண்டீர்பாடுமினோ * சுரும்பார்பொழில்மங்கையர்கோன் *
ஒண்டார்வேற்கலியனொலிமாலைகள் * தொண்டீர்பாடுமினோ. 10

அடிவரவு:—திருத்தாய் கரையாய் கூவாய் கொட்டாய் சொல்லாய் கோழி காமற்கு இங்கே
இன்னார் தொண்டீர் குன்றமொன்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பத்தாம்பத்து முற்றிற்று.

---

## பெரியதிருமொழி—பதினோராம்பத்து.

** குன்றமொன்றெடுத்தேந்தி* மாமழை அன்றுகாத்தவம்மான் * அரக்கரை
வென்றவில்லியார் வீரமேகொலோ * தென்றல்வந்து தீவீசுமென்செய்கேன். 1

காரும்வார்பனிக் கடலுமன்னவன் * தாருமார்வமும் கண்டதண்டமோ *
சோரும்மாமுகில் துளியினூடுவந்து * ஈரவாடைதான் ஈருமென்னையே. 2

சங்குமாமையுந் தளருமேனிமேல் * திங்கள்வெங்கதிர் சீறுமென்செய்கேன் *
பொங்குவெண்டிரைப் புணரிவண்ணனார் * கொங்கலர்ந்ததார் கூவுமென்னையே. 3

அங்கோராய்க்குலத்துள் வளர்ந்துசென்று * அங்கோர்தாயுருவாகிவந்தவள் *
கொங்கைநஞ்சுண்ட கோயின்மைகொலோ * திங்கள்வெங்கதிர் சீறுகின்றதே. 4

அங்கோராளரியாய் அவுணனை * பங்கமா இருகூறுசெய்தவன் *
மங்குல்மாமதி வாங்கவேகொலோ * பொங்குமாகடல் புலம்புகின்றதே. 5

சென்றுவார்சிலைவளைத்து இலங்கையை * வென்றவில்லியார் வீரமேகொலோ*
மூன்றிற்பெண்ணைமேல் முளரிக்கூட்டகத்து * அன்றிலின்குரல் அடருமென்னையே. 6

பூவைவண்ணனார் புள்ளின்மேல்வர * மேவிநின்றுநான் கண்டதண்டமோ *
வீவிலங்கனை வில்லி அம்புகோத்து * ஆவியே யிலக்காகவெய்வதே. 7

மாலினந்துழாய் வருமென்னெஞ்சகம் * மாலினந்துழாய் வந்தென்னுட்புக *
கோலவாடையுங் கொண்டுவந்ததோர் * ஆலிவந்ததால் அரிதுகாவலே. 8

கெண்டையொண்கணுந்துயிலும் * என்னிறம்பண்டுபண்டுபோலொக்கும் * மிக்கசீர்த்
தொண்டரிட்ட பூந்துளவின்வாசமே * வண்டுகொண்டுவந்து ஊதுமாகிலே. 9

** அன்றுபாரதத்து ஐவர்தூதனாய் * சென்றமாயனைச் செங்கண்மாலினை *
மன்றிலார்புகழ் மங்கைவாட்கலி கன்றி* சொல்வல்லார்க்கு அல்லலில்லையே. 10

அடிவரவு:—குன்றம் காரும் சங்கு அங்கோராய் அங்கோராளரி சென்று பூவை மாலினம் கெண்டை அன்று குன்றமெடுத்து. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்

---

## பதினோராம்பத்து, இரண்டாந்திருமொழி—குன்றமெடுத்துமழைதடுத்து.

** குன்றமெடுத்துமழைதடுத்து இளையாரொடும் *
மன்றிற்குரவைபிணைந்தமால் என்னைமால்செய்தான் *
முன்றில்தனிநின்றபெண்ணைமேல் கிடந்தீர்கின்ற *
அன்றிலின்கூட்டைப் பிரிக்ககிற்பவரார்கொலோ. 1

பூங்குருந்தொசித்தானைகாய்ந்து அரிமாச்செகுத்து *
ஆங்குவேழத்தின்கொம்புகொண்டு வன்பேய்முலை
வாங்கியுண்ட * அவ்வாயன்நிற்க இவ்வாயன்வாய் *
ஏங்குவேய்ங்குழல் என்னோடாடுமிளமையே. 2

மல்லொடுகஞ்சனுந் துஞ்சவென்றமணிவண்ணன் *
அல்லிமலர்த்தண்டுழாய் நினைந்திருந்தேனையே *
எல்லியின்மாருதம் வந்தடுமதுவன்றியும் *
கொல்லைவல்லேற்றின்மணியுங் கோயின்மைசெய்யுமே. 3

பொருந்துமாமரம் ஏழுமெய்தபுனிதனார் *
திருந்துசேவடி யென்மனத்துநினைதொறும் *
கருந்தண்மாகடல் கங்குலார்க்குமதுவன்றியும் *
வருந்தவாடைவரும் இதற்கினியென்செய்கேன். 4

அன்னைமுனிவதும் அன்றிலின்குரலீர்வதும் *
மன்னுமறிகடலார்ப்பதும் வளைசோர்வதும் *
பொன்னங்கலையல்குல் அன்னமென்னடைப்பூங்குழல் *
பின்னைமணாளர் திறத்தமாயினபின்னையே. 5

ஆழியுஞ்சங்குமுடைய நங்களடிகள்தாம் *
பாழிமையானகனவின் நம்மைப்பகர்வித்தார் *
தோழியும்நானுமொழிய வையந்துயின்றது *
கோழியுங்கூகின்றதில்லை கூரிருளாயிற்றே. 6

காமன்றனக்குமுறையல்லேன் கடல்வண்ணனார் *
மாமணவாளர் எனக்குத்தானுமகன்சொல்லில் *
யாமங்கடோறெரிவீசும் என்னிளங்கொங்கைகள் *
மாமணிவண்ணர் திறத்தவாய்வளர்கின்றவே. 7

** மஞ்சுறுமாலிருஞ்சோலை நின்றமணாளனார் *
நெஞ்சம்நிறைகொண்டுபோயினார் நினைகின்றிலர் *
வெஞ்சுடர்போய்விடியாமல் எவ்விடம்புக்கதோ *
நஞ்சுடலந்துயின்றால் நமக்கினிநல்லதே. 8

காமன்கணைக்கோரிலக்கமாய் நலத்தின்மிகு *
பூமருகோல நம்பெண்மைசிந்தித்திராதுபோய் *
தூமலர்நீர்கொடு தோழிநாந்தொழுதேத்தினால் *
கார்முகில்வண்ணரைக் கண்களாற்காணலாங்கொலோ. 9

** வென்றிவிடையுடன் ஏழடர்த்தவடிகளை *
மன்றின்மலிபுகழ் மங்கைமன்கலிகன்றிசொல் *
ஒன்றுநின்றவொன்பதும் உரைப்பவர்தங்கள்மேல் *
என்றும்நில்லாவினை ஒன்றுஞ்சொல்லிலுலகிலே. 10

அடிவரவு:—குன்றம் பூ மல் பொருந்து அன்னை ஆழி காமன்றனக்கு மஞ்சுறு காமன்கணை வென்றி மன்னிலங்கு. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பதினோராம்பத்து மூன்றாந்திருமொழி—மன்னிலங்கு பாரதத்து.

** மன்னிலங்குபாரதத்துத் தேரூர்ந்து * மாவலியைப்
பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்துப் பொருகடல்சூழ் *
தென்னிலங்கையீடழித்த தேவற்கிதுகாணீர் *
என்னிலங்குசங்கோடு எழில்தோற்றிருந்தேனே. 1

இருந்தானென்னுள்ளத் திறைவன் * கறைசேர்
பருந்தாட்களிற்றுக்கு அருள்செய்தசெங்கண் *
பெருந்தோள்நெடுமாலைப் பேர்பாடியாட *
வருந்தாதென்கொங்கை ஒளிமன்னுமன்னே. 2

அன்னேயிவரையறிவன் * மறைநான்கும்
முன்னேயுரைத்த முனிவரிவர்வந்து *
பொன்னேய்வளைகவர்ந்து போகார்மனம்புகுந்து *
என்னேயிவரெண்ணுமெண்ணம்அறியோமே. 3

அறியோமேயென்று உரைக்கலாமேயெமக்கு *
வெறியார்பொழில்சூழ் வியன்குடந்தைமேவி *
சிறியானோர்பிள்ளையாய் மெள்ளநடந்திட்டு *
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தார்தம்மையே. 4

தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்கு *
தம்மையேயொக்க அருள்செய்வராதலால் *

தம்மையேநாளும் வணங்கித்தொழுதிறைஞ்சி *
தம்மையேபற்று மனத்தென்றும்வைத்தோமே. 5

வைத்தாரடியார் மனத்தினில்வைத்து * இன்பம்
உய்த்தாரொளிவிசும்பில் ஓரடிவைத்து * ஓரடிக்கும்
எய்த்தாதுமண்ணென்று இமையோர்தொழுதிறைஞ்சி *
கைத்தாமரை குவிக்குங் கண்ணனென்கண்ணனையே. 6

கண்ணன்மனத்துள்ளேநிற்கவும் * கைவளைகள்
என்னோகழன்ற இவையென்னமாயங்கள் *
பெண்ணானோம் பெண்மையோம்நிற்க * அவன்மேய
அண்ணல்மலையும் அரங்கமும்பாடோமே. 7

பாடோமேயெந்தைபெருமானைப் பாடிநின்
றாடோமே * ஆயிரம்பேரானைப் பேர்நினைந்து
சூடோமே * சூடுந்துழாயலங்கல் சூடிநாங்
கூடோமே * கூடக்குறிப்பாகில்நன்னெஞ்சே. 8

நன்னெஞ்சேநம்பெருமான் நாளுமினிதமரும் *
அன்னஞ்சேர்கானல் அணியாலிகைதொழுது *
முன்னஞ்சேர்வல்வினைகள்போக முகில்வண்ணன் *
பொன்னஞ்சேர்சேவடிமேல் போதணியப்பெற்றோமே. 9

** பெற்றாரார் ஆயிரம்பேரானை * பேர்பாடப்
பெற்றான் கலியனொலிசெய்தமிழ்மாலை *
கற்றாரோமுற்றுலகாள்வர் இவைகேட்க
லுற்றார்க்கு * உறுதுயரில்லையுலகத்தே. 10

மன்னிலங்கு இருந்தான் அன்னே அறியோமே தம்மை வைத்தார் கண்ணன்
பாடோமே நன்னெஞ்சே பெற்றார் நிலையிடம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

பதினோராம்பத்து—நான்காந்திருமொழி. நிலையிடமெங்குமின்றி.

** நிலையிடமெங்குமின்றிநெடுவெள்ளமும்பர் வளநாடுமூடவிமையோர் *
தலையிடமற்றெமக்கோர்சரணில்லையென்ன அரணாவனென்னுமருளால் *
அலைகடல்நீர்குழம்பவகடாடவோடி அகல்வானுரிஞ்சமுதுகில் *
மலைகளைமீதுகொண்டுவருமீனைமாலை மறவ திறைஞ்சென்மனனே. 1

செருமிகுவாளெயிற்றவரவொன்றுசுற்றித் திசைமண்ணும்விண்ணுமுடனே *
வெருவரவெள்ளைவெள்ளமுழுதுங்குழம்ப இமையோர்கணின்றுகடைய *
பருவரையொன்றுநின்றுமுதுகிற்பரந்து சுழலக்கிடந்துதுயிலும் *
அருவரையன்னதன்மையடலாமையான திருமால்நமக்கோரரணே. 2

தீதறுதிங்கள்பொங்குசுடரும்பரும்பர் உலகேழினோடுமுடனே *
மாதிரமண்சுமந்தவடகுன்றுநின்ற மலையாறுமேழுகடலும் *
பாதமர்சூழ்குளம்பினகமண்டலத்தின் ஒருபாலொடுங்கவளர்சேர் *
ஆதிமுனேனமாகியரணாயமூர்த்தியது நம்மையாளுமரசே. 3

தலையவிழ்கோதைமாலையிருபால்தயங்க எரிகான்றிரண்டுதறுகண் *
அளவெழவெம்மைமிக்கவரியாகியன்று பரியோன்சினங்களவிழ *
வளையுகிராளிமொய்ம்பின்மறவோனதாகம் மதியாதுசென்றொருகிரால் *
பிளவெழவிட்டகுட்டமதுவையமூடு பெருநீரின்மும்மைபெரிதே. 4

வெந்திறல்வாணன்வேள்வியிடமெய்தி அங்கோர்குறளாகிமெய்ம்மையுணர *
செந்தொழில்வேதநாவின்முனியாகி வையமடிமூன்றிரந்துபெறினும் *
மந்தரமீதுபோகிமதிநின்றிறைஞ்ச மலரோன்வணங்கவளர்சேர் *
அந்தரமேழினூடுசெலவுய்த்தபாதமது நம்மையாளுமரசே. 5

இருநிலமன்னர்தம்மையிருநாலுமெட்டும் ஒருநாலுமொன்றுமுடனே *
செருநுதலூடுபோகியவராவிமங்க மழுவாளில்வென்றதிறலோன் *
பெருநிலமங்கைமன்னர்மலர்மங்கைநாதர் புலமங்கைகேள்வர்புகழ்சேர் *
பெருநிலமுண்டுமிழ்ந்தபெருவாயராகியவர் நம்மையாள்வர்பெரிதே. 6

இலைமலிபள்ளியெய்தியிதுமாயமென்ன இனமாயமாண்பினெழில்சேர் *
அலைமலிவேற்கணாளையகல்விப்பதற்கு ஒருருவாயமானையமையா *
கொலைமலிவெய்துவித்தகொடியோனிலங்கை பொடியாகவென்றியமருள் *
சிலைமலிசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கள் திருமால்நமக்கோரரணே. 7

முன்னுலகங்களேழுமிருள்மண்டியுண்ண முதலோடுவீடுமறியாது *
என்னிதுவந்ததென்னவிமையோர்திசைப்ப எழில்வேதமின்றிமறைய *
பின்னையும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கி யிருள்தீர்ந்திவ்வையமகிழ *
அன்னமதாயிருந்தங்கறநூலுரைத்தவது நம்மையாளுமரசே. 8

துணைநிலைமற்றெமக்கோருளதென்றிராது தொழுமின்கள்தொண்டர் * தொலைய
உணமுலைமுன்கொடுத்தவுரவோளதாவியுகவுண்டு வெண்ணெய்மருவி *
பணைமுலையாயர்மாதருரலோடுகட்ட அதனோடுமோடிஅடல்சேர் *
இணைமருதிற்றுவீழநடைகற்றதெற்றல் வினைபற்றறுக்கும்விதியே. 9

கொலைகெழுசெம்முகத்தகளிறொன்றுகொன்று கொடியோனிலங்கைபொடியா *
சிலைகெழுசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கள் திருமாலைவேலைபுடைசூழ் *
கலிகெழுமாடவீதிவயல்மங்கைமன்னு கலிகன்றிசொன்னபனுவல் *
ஒலிகெழுபாடல்பாடியுழல்கின்றதொண்டரவர் ஆள்வரும்பருலகே. 10

அடிவரவு:—நிலை, செரு, தீதறு, தலை, வெந்திறல், இருநிலம், இலைமலி, முன், துணை கொலை, மான். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பதினோராம்பத்து—ஐந்தாந்திருமொழி, மானமருமென்னோக்கி

மானமருமென்னோக்கி வைதேவியின்துணையா *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தான்காணேடீ *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தபொன்னடிக்கள் *
வானவர்தம்சென்னி மலர்கண்டாய்சாழலே. 1

தந்தைதளைகழலத் தோன்றிப்போய் * ஆய்ப்பாடி
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்காணேடீ *
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்நான்முகற்குத்
தந்தைகாண் * எந்தைபெருமான்காண்சாழலே. 2

ஆழ்கடல்சூழ்வையகத்தார் ஏசப்போய் * ஆய்ப்பாடித்
தாழ்குழலார்வைத்த தயிருண்டான்காணேடீ *
தாழ்குழலார்வைத்த தயிருண்டபொன்வயிறு * இவ்
வேழுலகுமுண்டும் இடமுடைத்தால்சாழலே. 3

அறியாதார்க்கு ஆனாயனாகிப்போய் * ஆய்ப்பாடி
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தான்காணேடீ *
உறியார்நறுவெண்ணெய் உண்டுகந்தபொன்வயிற்றுக்கு *
எறிநீருலகனைத்தும் எய்தாதால்சாழலே. 4

வண்ணக்கருங்குழல் ஆய்ச்சியால்மொத்துண்டு *
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான்காணேடீ *
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும் *
எண்ணற்கரியன் இமையோர்க்கும்சாழலே. 5

கன்றப்பறைகறங்கக் கண்டவர்தம்கண்களிப்ப *
மன்றில்மரக்கால் கூத்தாடினான்காணேடீ *
மன்றில்மரக்கால் கூத்தாடினானாகிலும் *
என்றுமரியன் இமையோர்க்கும்சாழலே. 6

கோதைவேலைவர்க்காய் மண்ணகலம்கூறிடுவான் *
தூதனாய்மன்னவனால் சொல்லுண்டான்காணேடீ *
தூதனாய்மன்னவனால் சொல்லுண்டானாகிலும் *
ஓதநீர்வையகம் முன்னுண்டுமிழ்ந்தான்சாழலே. 7

பார்மன்னர்மங்கப் படைதொட்டுவெஞ்சமத்து *
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தான்காணேடீ *
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தானாகிலும் *
தார்மன்னர்தங்கள் தலைமேலான்சாழலே. 8

கண்டாரிரங்கக் கழியக்குறளுருவாய் *
வண்டாரான்வேள்வியில் மண்ணிரந்தான்காணேடீ *
வண்டாரான்வேள்வியில் மண்ணிரந்தானாகிலும் *
விண்டேழுலகுக்கும் மிக்கான்காண்சாழலே. 9

** கள்ளத்தால்மாவலியை மூவடிமண்கொண்டளந்தான் *
வெள்ளத்தான்வேங்கடத்தான் என்பரால்காணேடீ *
வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் * கலிகன்றி
உள்ளத்தினுள்ளே உளன்கண்டாய்சாழலே. 10

அடிவரவு:—மானமரும், தந்தை, ஆழ்கடல், அறியாதார், வண்ணக், கன்று, கோதை, பார் மன்னர், கண்டார், கள்ளம், மைந்நின்ற.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பதினோராம்பத்து, ஆறுந்திருமொழி, மைந்நின்ற கருங்கடல்வாய்.

** மைந்நின்றகருங்கடல்வாயுலகின்றி வானவரும்யாமுமெல்லாம் *
நெய்ந்நின்றசக்கரத்தன் திருவயிற்றில் நெடுங்காலம்கிடந்ததோரீர் *
எந்நன்றிசெய்தாரா ஏதிலோர்தெய்வத்தையேத்துகின்றீர் *
செய்ந்நன்றிகுன்றேன்மின் தொண்டர்காளண்டனையேயேத்தீர்களே. 1

நில்லாதபெருவெள்ளம் நெடுவிசும்பின்மீதோடிநிமிர்ந்தகாலம் *
மல்லாண்டதடக்கையால் பகிரண்டமகப்படுத்தகாலத்து * அன்று
எல்லாருமறியாரோ எம்பெருமானுண்டுமிழ்ந்தவெச்சில்தேவர் *
அல்லாதார்தாமுளரே அவனருளேயுலகாவதறியீர்களே. 2

நெற்றிமேற்கண்ணானும் நிறைமொழிவாய்நான்முகனும்நீண்டநால்வாய் *
ஒற்றைக்கைவெண்பகட்டின் ஒருவனையுமுள்ளிட்டவமரரோடும் *
வெற்றிப்போர்க்கடலரையன் விழுங்காமல்தான்விழுங்கியுய்யக்கொண்ட *
கொற்றப்போராழியான் குணம்பரவாச்சிறுதொண்டர்கொடியவாறே. 3

பனிப்பரவைத்திரைததும்பப் பாரெல்லாம்நெடுங்கடலேயானகாலம் *
இனிக்களைகணிவர்க்கில்லையென்று உலகமேழினையுமூழில்வாங்கி *
முனித்தலைவன்முழங்கொலிசேர் திருவயிற்றில்வைத்தும்மையுய்யக்கொண்ட *
கனிக்களவத்திருவுருவத்தொருவனையே கழல்தொழுமாகல்லீர்களே. 4

பாராரும்காணாமே பரவைமாநெடுங்கடலேயானகாலம் *
ஆரானுமவனுடையதிருவயிற்றில் நெடுங்காலம்கிடந்தது * உள்ளத்
தோராதவுணர்விலீருணருதிரேல் உலகளந்தவும்பர்கோமான் *
பேராளன்பேரான பேர்களாயிரங்களுமேபேசீர்களே. 5

பேயிருக்குநெடுவெள்ளம் பெருவிசும்பின்மீதோடிப்பெருகுகாலம் *
தாயிருக்கும்வண்ணமே உம்மைத்தன்வயிற்றிருத்தியுய்யக்கொண்டான் *

போயிருக்கமற்றிங்கோர் புதுத்தெய்வம்கொண்டாடும்தொண்டீர் *
பெற்றதாயிருக்கமணவெங்கீராட்டுதிரோ மாட்டாததகவற்றீரே. 6

மண்ணாடும்விண்ணாடும் வானவரும்தானவரும்மற்றுமெல்லாம் *
உண்ணாதபெருவெள்ளம் உண்ணாமல்தான்விழுங்கியுய்யக்கொண்ட *
கண்ணாளன்கண்ணமங்கைநகராளன் கழல்சூடியவனையுள்ளத்து *
எண்ணாதமானிடத்தை யெண்ணாதபோதெல்லாமினியவாறே. 7

மறங்கிளர்ந்தகருங்கடல்நீர் உரந்துரந்துபரந்தேறியண்டத்தப்பால் *
புறங்கிளர்ந்தகாலத்துப் பொன்னுலகமேழினையுமூழில்வாங்கி *
அறங்கிளர்ந்ததிருவயிற்றின் அகம்படியிலவைத்தும்மையுய்யக்கொண்ட *
நிறங்கிளர்ந்தகருஞ்சோதி நெடுந்தகையைநினையாதார்நீசர்தாமே. 8

அண்டத்தின்முகடழுந்த அலைமுந்நீர்த்திரைததும்பஆவாவென்று *
தொண்டர்க்குமமரர்க்கும்முனிவர்க்கும்தானருளி * உலகமேழும்
உண்டொத்ததிருவயிற்றின் அகம்படியில்வைத்தும்மையுய்யக்கொண்ட *
கொண்டற்கைம்மணிவண்ணன் தண்குடந்தைநகர்பாடியாடீர்களே. 9

** தேவரையுமசுரரையும் திசைகளையும்கடல்களையும்மற்றும்முற்றும் *
யாவரையுமொழியாமே யெம்பெருமானுண்டுமிழ்ந்ததறிந்துசொன்ன *
காவளரும்பொழில்மங்கைக் கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார் *
பூவளரும்திருமகளாலருள்பெற்றுப் பொன்னுலகிற்பொலிவர்தாமே. 10

-மை, நில்லாத, நெற்றி, பனி, பாராரும், பேய், மண், மறம், அண்டம், தேவரை, நீணகம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



**பதினோராம்பத்து—ஏழாந்திருமொழி—நீணகஞ்சுற்றி.**

** நீணகம்சுற்றி நெடுவரைநட்டு * ஆழ்கடலைப்
பேணான்கடைந்து அமுதம்கொண்டுகந்தபெம்மானை *
பூணாரமார்வனைப் புள்ளூரும்பொன்மலையை *
காணாதார்கண்ணென்றும் கண்ணல்லகண்டாமே. 1

நீள்வான்குறளுருவாய் நின்றிரந்துமாவலிமண் *
தாளாலளவிட்ட தக்கணைக்குமிக்கானை *
தோளாதமாமணியைத் தொண்டர்க்கினியானை *
கேளாச்செவிகள் செவியல்லகேட்டாமே. 2

தூயானைத் தூயமறையானை * தென்னாலி
மேயானை மேவாளுயிருண்டமுதுண்ட
வாயானை * மாலைவணங்கி அவன்பெருமை
பேசாதார் * பேச்சென்றும் பேச்சல்லகேட்டாமே. 3

கூடாவிரணியனைக் கூருகிரால்மார்பிடந்த *
ஓடாவடலரியை உம்பரார்கோமானை *
தோடார்நறுந்துழாய்மார்வனை * ஆர்வத்தால்
பாடாதார்பாட்டென்றும் பாட்டல்லகேட்டாமே. 4

மையார்கடலும் மணிவரையும்மாமுகிலும் *
கொய்யார்குவளையும் காயாவும்போன்றிருண்ட
மெய்யானை * மெய்யமலையானைச் சங்கேந்தும்
கையானை * கைதொழாக்கையல்லகண்டாமே. 5

கள்ளார்துழாயும் கணவலருங்கூவிளையும் *
முள்ளார்முளரியும் ஆம்பலுமுன்கண்டக்கால் *
புள்ளாயோரேனமாய்ப் புக்கிடந்தான்பொன்னடிக்கென்று *
உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக்கொள்ளோமே. 6

கனையார்கடலும் கருவிளையும்காயாவும்
அனையானை * அன்பினாலார்வத்தால் * என்றும்
சுனையார்மலரிட்டுத் தொண்டராய்நின்று *
நினையாதார்நெஞ்சென்றும் நெஞ்சல்லகண்டாமே. 7

வெறியார்கருங்கூந்தல் ஆய்ச்சியர்வைத்த *
உறியார்நறுவெண்ணெய் தானுகந்துண்ட
சிறியானை * செங்கணெடியானைச் சிந்தித்
தறியாதார் * என்றுமறியாதார்கண்டாமே. 8

** தேனொடுவண்டாலும் திருமாலிருஞ்சோலை *
தானிடமாக்கொண்டான் தடமலர்க்கண்ணிக்காய் *
ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானாரல்லாதார் *
மானிடவரல்லரென்று என்மனத்தேவைத்தேனே! 9

** மெய்ந்நின்றபாவமகல * திருமாலைக்
கைந்நின்றவாழியான் சூழும்கழல்சூடி *
கைந்நின்றவேற்கைக் கலியனொலிமாலை *
ஐயொன்றுமைந்தும் இவைபாடியாடுமினே. 10

அடிவரவு:—நீணகம், நீள்வான், தூயான், கூடா, மையார், கள்ளார், கனை, வெறி, தேன், மெய் மாற்றம். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

**பதினோராம்பத்து, எட்டாந்திருமொழி—மாற்றமுளவாகிலும்.**

** மாற்றமுள ஆகிலும்சொல்லுவன் * மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொலென்றின்னம் *
ஆற்றங்கரைவாழ்மரம்போல் அஞ்சுகின்றேன் *
நாற்றச்சுவை ஊறொலியாகியநம்பீ ?! 1

சேற்றமுள ஆகிலும்செப்புவன் * மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொலென்றஞ்சி *
காற்றத்திடைப்பட்ட கலவர்மனம்போல் *
ஆற்றத்துளங்காநிற்பன் ஆழிவலவா ! 2

தூங்கார்பிறவிக்கள் இன்னம்புகப்பெய்து *
வாங்காயென்றுசிந்தித்து நானதற்கஞ்சி *
பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல் *
தாங்காதுள்ளம்தள்ளும் என்தாமரைக்கண்ணா ! 3

உருவார்பிறவிக்கள் இன்னம்புகப்பெய்து *
திரிவாயென்றுசிந்தித்தி யென்றதற்கஞ்சி *
இருபாடெரிகொள்ளியின் உள்ளெறும்பேபோல் *
உருகாநிற்குமென்னுள்ளம் ஊழிமுதல்வா ! 4

கொள்ளக்குறையாத இடும்பைக்குழியில் *
தள்ளிப்புகப்பெய்திகொல் என்றதற்கஞ்சி *
வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே *
உள்ளம்துளங்காநிற்பன் ஊழிமுதல்வா ! 5

**படைநின்ற பைந்தாமரையோடு * அணிநீலம்
மடைநின்றலரும் வயலாலிமணாளா !*
இடையனெறிந்தமரமே ஒத்திராமே *
அடையவருளாய் எனக்குன்றனருளே. 6

**வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது * அடியேன்
நான்பின்னும் உன்சேவடியன்றிநயவேன் *
தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து * ஐவாய்ப்
பாம்பினணைப் பள்ளிகொண்டாய்பரஞ்சோதி ! 7

**அணியார்பொழில்சூழ் அரங்கநகரப்பா !*
துணியேனினி நின்னருளல்லதெனக்கு *
மணியே ! மணிமாணிக்கமே மதுசூதா !*
பணியாயெனக்குய்யும்வகை பரஞ்சோதி ! 8

**நந்தாநரகத்தழுந்தாவகை * நாளும்
எந்தாய் ! தொண்டரானவர்க்கு இன்னருள்செய்வாய் !*
சந்தோகா தலைவனே! தாமரைக்கண்ணா !*
அந்தோவடியேற்கு அருளாயுன்னருளே. 9

** குன்றமெடுத்து ஆநிரைகாத்தவன்றன்னை*
மன்றில்புகழ் மங்கைமன்கலிகன்றிசொல் *

ஒன்றுநின்றவொன்பதும் வல்லவர்தம்மேல் *
என்றும்வினையாயின சாரகில்லாவே. 10

அடிவரவு:—மாற்றம், சீற்றம், தூங்கார், உருவார், கொள்ள, படை, வேய்பின், அணியார், நந்தா, குன்றம், நிதியினை.

பெரியதிருமொழி முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# திருக்குறுந்தாண்டகம்.

** நிதியினைப்பவளத்தூணை நெறிமையால்நினையவல்லார் *
கதியினைக்கஞ்சன்மாளக் கண்டுமுன்னண்டமாளும் *
மதியினைமாலைவாழ்த்தி வணங்கியென்மனத்துவந்த *
விதியினைக்கண்டுகொண்ட தொண்டனேன்விடுகிலேனே. 1

காற்றினைப்புனலைத்தீயைக் கடிமதிளிலங்கைசெற்ற
ஏற்றினை * இமயமேய எழில்மணித்திரளை * இன்ப
வாற்றினையமுதந்தன்னை அவுணனாருயிரையுண்ட
கூற்றினை * குணங்கொண்டுள்ளம் கூறுநீகூறுமாறே. 2

பாயிரும்பரவைதன்னுள் பருவரைதிரித்து * வானோர்க்
காயிருந்தமுதங்கொண்ட அப்பனையெம்பிரானை *
வேயிருஞ்சோலைசூழ்ந்து விரிகதிரிரியநின்ற *
மாயிருஞ்சோலைமேய மைந்தனைவணங்கினேனே. 3

கேட்கயானுற்றதுண்டு கேழலாயுலகங்கொண்ட *
பூக்கெழுவண்ணனாரைப் போதரக்கனவிற்கண்டு *
வாக்கினாற்கருமந்தன்னால் மனத்தினாற்சிரத்தைதன்னால் *
வேட்கைமீதூரவாங்கி விழுங்கினேற்கினியவாறே. 4

இரும்பனன்றுண்டநீர்போல் எம்பெருமானுக்கு * என்றன்
அரும்பெறலன்புபுக்கிட்டு அடிமைபூண்டுய்ந்துபோனேன் *
வரும்புயல்வண்ணனாரை மருவியென்மனத்துவைத்து *
கரும்பினின்சாறுபோலப் பருகினேற்கினியவாறே. 5

மூவரில்முதல்வனாய ஒருவனையுலகங்கொண்ட *
கோவினைக்குடந்தைமேய குருமணித்திரளை * இன்பப்
பாவினைப்பச்சைத்தேனைப் பைம்பொன்னையமரர்சென்னிப்
பூவினை * புகழுந்தொண்டர் என்சொல்லிப்புகழ்வர்தாமே. 6

இம்மையைமறுமைதன்னை யெமக்குவீடாகிநின்ற *
மெய்ம்மையைவிரிந்தசோலை வியன்திருவரங்கமேய *
செம்மையைக்கருமைதன்னைத் திருமலையொருமையானை *
தன்மையைநினைவாரென்றன் தலைமிசைமன்னுவாரே. 7

வானிடைப்புயலைமாலை வரையிடைப்பிரசமீன்ற *
தேனிடைக்கரும்பின்சாற்றைத் திருவினைமருவிவாழார் *
மானிடப்பிறவியந்தோ மதிக்கிலர்கொள்க * தந்தம்
ஊனிடைக்குரம்பைவாழ்க்கைக்கு உறுதியேவேண்டினாரே. 8

உள்ளமோவொன்றினில்லாது ஓசையினெரிநின்றுண்ணும் *
கொள்ளிமேலெறும்புபோலக் குழையுமாலென்றனுள்ளம் *
தெள்ளியீர்தேவர்க்கெல்லாம் தேவராயுலகங்கொண்ட
ஒள்ளியீர் * உம்மையல்லால் எழுமையுந்துணையிலோமே. 9

சித்தமுஞ்செவ்வைநில்லாது என்செய்கேன்தீவினையேன் *
பத்திமைக்கன்புடையேனாவதே பணியாயெந்தாய் *
முத்தொளிமரதகமே முழங்கொளிமுகில்வண்ணா * என்
அத்தநின்னடிமையல்லால் யாதுமொன்றறிகிலேனே. 10

தொண்டெல்லாம்பரவிநின்னைத் தொழுதடிபணியுமாறு
கண்டு * தான்கவலைதீர்ப்பானாவதே பணியாயெந்தாய் *
அண்டமாயெண்டிசைக்கும் ஆதியாய்நீதியான *
பண்டமாம்பரமசோதி நின்னையேபரவுவேனே. 11

ஆவியையரங்கமாலை அழுக்குடம்பெச்சில்வாயால் *
தூய்மையில்தொண்டனேன்நான் சொல்லினேன்தொல்லைநாமம் *
பாவியேன்பிழைத்தவாறென்று அஞ்சினேற்கஞ்சலென்று *
காவிபோல்வண்ணர்வந்து என்கண்ணுளேதோன்றினாரே. 12

இரும்பனன்றுண்டநீரும் போதரும்கொள்க * என்றன்
அரும்பிணிபாவமெல்லாம் அகன்றனவென்னைவிட்டு *
சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே. 13

காவியைவென்றகண்ணார் கலவியேகருதி * நாளும்
பாவியேனாகவெண்ணி அதனுள்ளேபழுத்தொழிந்தேன் *
தூவிசேரன்னமன்னும் சூழ்புனற்குடந்தையானை *
பாவியேன்பாவியாது பாவியேனாயினேனே. 14

முன்பொலாவிராவணன்றன் முதுமதிளிலங்கைவேவித்து *
அன்பினாலனுமன்வந்து ஆங்கடியிணைபணியநின்றாற்கு *
என்பெலாமுருகியுக்கிட்டு என்னுடைநெஞ்சமென்னும் *
அன்பினால்ஞானநீர்கொண்டு ஆட்டுவனடியனேனே. 15

மாயமான்மாயச்செற்று மருதிறநடந்து * வையம்
தாயமாபரவைபொங்கத் தடவரைதிரித்து * வானோர்க்
கீயுமாலெம்பிரானாருக் கென்னுடைச்சொற்களென்னும் *
தூயமாமாலைகொண்டு சூட்டுவன்தொண்டனேனே. 16

பேசினார்பிறவிநீத்தார் பேருளான்பெருமைபேசி *
ஏசினாருய்ந்துபோனாரென்பது இவ்வுலகின்வண்ணம் *
பேசினேனேசமாட்டேன் பேதையேன்பிறவிநீத்தற்கு *
ஆசையோபெரிதுகொள்க அலைகடல்வண்ணர்பாலே. 17

இளைப்பினையியக்கம்நீக்கி யிருந்துமுன்னிமையைக்கூட்டி *
அளப்பிலைம்புலனடக்கி அன்பவர்கண்ணேவைத்து *
துளக்கமில்சிந்தைசெய்து தோன்றலும்சுடர்விட்டு * ஆங்கே
விளக்கினைவிதியிற்காண்பார் மெய்ம்மையேகாண்கிற்பாரே. 18

** பிண்டியார்மண்டையேந்திப் பிறர்மனைதிரிதந்துண்ணும் *
உண்டியான்சாபந்தீர்த்தவொருவனூர் * உலகமேத்தும்
கண்டியூரரங்கம்மெய்யம் கச்சிபேர்மல்லையென்று
மண்டினார் * உய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே. 19

** வானவர்தங்கள்கோனும் மலர்மிசையயனும் * நாளும்
தேமலர்தூவியேத்தும் சேவடிச்செங்கண்மாலை *
மானவேற்கலியன்சொன்ன வண்டமிழ்மாலைநாலைந்தும் *
ஊனமதின்றிவல்லார் ஒளிவிசும்பாள்வர்தாமே. 20

அடிவரவு:—நிதி, காற்று, பாயிரும், கேட்க, இரும்பு, மூவர், இம்மை, வான், உள்ளம், சித்தம், தொண்டு, ஆவியை, இரும்பு, காவி, முன், மாய, பேசி, இளைப்பு, பிண்டி, வானவர், மின். ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருக்குறுந்தாண்டகம் முற்றுப்பெற்றது.

---

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# திருநெடுந்தாண்டகம்.

---

** மின்னுருவாய்முன்னுருவில்வேதநான்காய் விளக்கொளியாய்முளைத்தெழுந்ததிங்கள்தானாய்*
பின்னுருவாய்முன்னுருவிற்பிணிமூப்பில்லாப் பிறப்பிலியாயிறப்பதற்கேயெண்ணாது * எண்
பொன்னுருவாய்மணியுருவிற்பூதமைந்தாய்ப் புனலுருவாயனலுருவில்திகழுஞ்சோதி * [ணும்
தன்னுருவாயென்னுருவில்நின்றவெந்தை தளிர்புரையும்திருவடியென்தலைமேலவே. 1

பாருருவிநீரெரிகால்விசும்புமாகிப் பல்வேறுசமயமுமாய்ப்பரந்துநின்ற *
ஏருருவில்மூவருமேயென்னநின்ற இமையவர்தம்திருவுருவேறெண்ணும்போது *

ஓருருவம்பொன்னுருவமொன்றுசெந்தீ ஒன்றுமாகடலுருவமொத்துநின்ற *
மூவுருவும்கண்டபோதொன்றாம்சோதி மூகிலுருவமெம்மடிகளுருவந்தானே. 2

திருவடிவிற்கருநெடுமால்சேயனென்றும் திரேதைக்கண்வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும் *
பெருவடிவிற்கடலமுதம்கொண்டகாலம் பெருமானைக்கருநீலவண்ணன்றன்னை *
ஒருவடிவத்தோருருவென்றுணரலாகா ஊழிதோறூழிநின்றேத்தலல்லால் *
கருவடிவிற்செங்கண்ணவண்ணன்றன்னைக் கட்டுரையேயாரொருவர்காண்கிற்பாரே. 3

இந்திரற்கும்பிரமற்கும்முதல்வன்றன்னை இருநிலங்கால்தீநீர்விண்பூதமைந்தாய் *
செந்திறத்ததமிழோசைவடசொல்லாகித் திசைநான்குமாய்த்திங்கள்ஞாயிறாகி *
அந்தரத்தில்தேவர்க்குமறியலாகாவந்தணனை அந்தணர்மாட்டந்திவைத்த
மந்திரத்தை * மந்திரத்தால்மறவாதென்றும்வாழுதியேல் வாழலாம்மடநெஞ்சமே. 4

ஒண்மிதியிற்புனலுருவியொருகால்நிற்ப ஒருகாலுங்காமருசீரவுணனுள்ளத்து *
எண்மதியுங்கடந்தண்டமீதுபோகி இருவிசும்பினூடுபோயெழுந்து * மேலைத்
தண்மதியுங்கதிரவனும்தவிரவோடித் தாரகையின்புறந்தடவியப்பால்மிக்கு *
மண்முழுதுமகப்படுத்துநின்றவெந்தை மலர்புரையும்திருவடியேவணங்கினேனே. 5

அலம்புரிந்தநெடுந்தடக்கையமரர்வேந்தன் அஞ்சிறைப்புள்தனிப்பாகனவுணர்க்கென்றும் *
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன் தானுகந்தவூரெல்லாம்தன்தாள்பாடி *
நிலம்பரந்துவருங்கலுழிப்பெண்ணையீர்த்த நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்தி *
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப் பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. 6

வற்புடையவரைநெடுந்தோள்மன்னர்மாள வடிவாயமழுவேந்தியுலகமாண்டு *
வெற்புடையநெடுங்கடலுள்தனிவேலுய்த்த வேள்முதலாவென்றானூர்விந்தைமேய *
கற்புடையமடக்கன்னிகாவல்பூண்ட கடிபொழில்சூழ்நெடுமறுகிற்கமலவேலி *
பொற்புடையமலையரையன்பணியநின்ற பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. 7

** நீரகத்தாய்நெடுவரையினுச்சிமேலாய் நிலாத்திங்கள்துண்டத்தாய்நிறைந்தகச்சி
யூரகத்தாய் * ஒண்துறைநீர்வெஃகாவுள்ளாய் உள்ளுவாருள்ளத்தாய் * உலகமேத்தும்
காரகத்தாய்கார்வானத்துள்ளாய்கள்வா காமருபூங்காவிரியின்தென்பால்மன்னு
பேரகத்தாய் * பேராதென்னெஞ்சினுள்ளாய் பெருமானுன்திருவடியேபேணினேனே. 8

வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர்மல்லையாய் மதிட்கச்சியூராய்பேராய் * [கொண்டான்
கொங்கத்தார்வளங்கொன்றையலங்கல்மார்வன் குலவரையன்மடப்பாவையிடப்பாற்
பங்கத்தாய் * பாற்கடலாய்பாரின்மேலாய் பனிவரையினுச்சியாய்பவளவண்ணா *
எங்குற்றாயெம்பெருமானுன்னைநாடி யேழையேனிங்ஙனமேயுழிதருகேனே. 9

பொன்னானாய்பொழிலேழுங்காவல்பூண்ட புகழானாயிகழ்வாயதொண்டனேன்நான் *
என்னானாயென்னானாயென்னலல்லால் என்னறிவனேழையேன் * உலகமேத்தும்
தென்னானாய்வடவானாய்குடபாலானாய் குணபாலமதயானாய் இமையோர்க்கென்றும்
முன்னானாய் * பின்னானார்வணங்கும்சோதி திருமூழிக்களத்தானாய்முதலானாயே. 10

பட்டுடுக்குமயர்த்திரங்கும்பாவைபேணாள் பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள் *
எட்டனைப்போதென்குடங்காலிருக்ககில்லாள் எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் *
மட்டுவிக்கிமணிவண்டுமுரலுங்கூந்தல் மடமானையிதுசெய்தார்தம்மை * மெய்யே
கட்டுவிச்சிசொல்லென்னச்சொன்னாள்நங்காய் கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாராரே. 11

நெஞ்சுருகிக்கண்பனிப்பநிற்கும்சோரும் நெடிதுயிர்க்குமுண்டறியாளுறக்கம்பேணாள் *
நஞ்சரவில்துயிலமர்ந்தநம்பீயென்னும் வம்பார்பூவயலாலிமைந்தாவென்னும் *
அஞ்சிறையபுட்கொடியேயாடும்பாடும் அணியரங்கமாடுதுமோதோழீயென்னும் *
என்சிறகின்கீழடங்காப்பெண்ணைப்பெற்றேன் இருநிலத்தோர்பழிபடைத்தேனேபாவமே. 12

** கல்லெடுத்துக்கல்மாரிகாத்தாயென்றும் காமருபூங்கச்சியூரகத்தாயென்றும் *
வில்லிறுத்துமெல்லியல்தோள்தோய்ந்தாயென்றும் வெஃகாவில்துயிலமர்ந்தவேந்தேயென்றும் *
மல்லடர்த்துமல்லரையன்றட்டாயென்றும் மாகீண்டகைத்தலத்தென்மைந்தாவென்றும் *
சொல்லெடுத்துத்தன்கிளியைச்சொல்லேயென்று துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே.

** முளைக்கதிரைக்குறுங்குடியுள்முகிலை மூவாமூவுலகுங்கடந்தப்பால்முதலாய்நின்ற *
அளப்பரியவாரமுதையரங்கமேயவந்தணனை அந்தணர்தம்சிந்தையானை *
விளக்கொளியைமரதகத்தைத்திருத்தண்காவில் வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு *
வளர்த்ததனால்பயன்பெற்றேன்வருகவென்று மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே. 14

** கல்லுயர்ந்தநெடுமதில்சூழ்கச்சிமேயகளிறென்றும் கடற்கிடந்தகனியேயென்றும் *
அல்லியம்பூமலர்ப்பொய்கைப்பழனவேலி அணியழுந்தூர்நின்றுகந்தவம்மானென்றும் *
சொல்லுயர்ந்தநெடுவீணைமுலைமேல்தாங்கித் தூமுறுவல்நகையிறையேதோன்றநக்கு *
மெல்விரல்கள்சிவப்பெய்தத்தடவியாங்கே மென்கிளிபோல்மிகமிழற்றுமென்பேதையே. 15

**கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றும் கடிபொழில்சூழ்கணபுரத்தென்கனியேயென்றும்
மன்றமரக்கூத்தாடிமகிழ்ந்தாயென்றும் வடதிருவேங்கடம்மேயமைந்தாவென்றும் *
வென்றசுரர்குலங்களைந்தவேந்தேயென்றும் விரிபொழில்சூழ்திருநறையூர்நின்றாயென்றும்
துன்றுகுழற்கருநிறத்தென்துணையேயென்றும் துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. 16

பொங்கார்மெல்லிளங்கொங்கைபொன்னேபூப்பப் பொருகயற்கண்ணீரரும்பப்போந்துநின்று *
செங்காலமடப்புறவம்பெடைக்குப்பேசும் சிறுகுரலுக்குடலுருகிச்சிந்தித்து * ஆங்கே
தண்காலும்தண்குடந்தைநகரும்பாடித் தண்கோவலூர்பாடியாடக்கேட்டு *
நங்காய்நங்குடிக்கிதுவோநன்மையென்ன நறையூரும்பாடுவாள்நவில்கின்றாளே. 17

கார்வண்ணம்திருமேனிகண்ணும்வாயும் கைத்தலமுமடியிணையும்கமலவண்ணம் *
பார்வண்ணமடமங்கைபத்தர் பித்தர்பனிமலர்மேற்பாவைக்குப்பாவம்செய்தேன் *
ஏர்வண்ணவென்பேதையென்சொல்கேளாள் எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் *
நீர்வண்ணன்நீர்மலைக்கேபோவேனென்னும் இதுவன்றோநிறைவழிந்தார்நிற்குமாறே. 18

முற்றாராவனமுலையாள்பாவை மாயன்மொய்யகலத்துள்ளிருப்பாளஃதும்கண்டும்
அற்றாள் * தன்னிறைவழிந்தாளாவிக்கின்றாள் அணியரங்கமாடுதுமோதோழீயென்னும் *

பெற்றேன்வாய்ச்சொல்லிறையும்பேசக்கேளாள் பேர்பாடித்தண்குடந்தைநகரும்பாடி *
பொற்றாமரைக்கயம்நீராடப்போனாள் பொருவற்றாளென்மகள்உம்பொன்னுமஃதே. 19

தேராளும்வாளரக்கன்செல்வம்மாளத் தென்னிலங்கைமுன்மலங்கச்செந்தீயொல்கி *
போராளனாயிரந்தோள்வாணன்மாளப் பொருகடலையரண்கடந்துபுக்குமிக்க
பாராளன் * பாரிடந்துபாரையுண்டுபாருமிழ்ந்துபாரளந்து பாரையாண்ட
பேராளன் * பேரோதும்பெண்ணைமண்மேல் பெருந்தவத்தளென்றல்லாற்பேசலாமே. 20

** மைவண்ணநறுங்குஞ்சிக்குழல்பின்தாழ மகரம்சேர்குழையிருபாடிலங்கியாட *
எய்வண்ணவெஞ்சிலையேதுணையா இங்கேயிருவராய்வந்தாரென்முன்னேநின்றார் *
கைவண்ணம்தாமரைவாய்கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே *
அவ்வண்ணத்தவர்நிலைமைகண்டும்தோழீ அவரைநாம்தேவரென்றஞ்சினோமே. 21

நைவளமொன்றாராயாநம்மைநோக்கா நாணினார்போலிறையேநயங்கள்பின்னும் *
செய்வளவிலென்மனமும்கண்ணுமோடி எம்பெருமான்திருவடிக்கீழணைய * இப்பால்
கைவளையும்மேகலையும்காணேன் கண்டேன்கனமகரக்குழையிரண்டும்நான்குதோளும் *
எவ்வளவுண்டெம்பெருமான்கோவிலென்றேற்கு இதுவன்றேவெழிலாலியென்றார்தாமே. 22

உள்ளூருஞ்சிந்தைநோயெனக்கேதந்து என்னொளிவளையும்மாநிறமும்கொண்டாரிங்கே *
தெள்ளூருமிளந்தெங்கின்தேறல்மாந்திச் சேலுகளும்திருவரங்கம்நம்மூரென்ன *
கள்ளூரும்பைந்துழாய்மாலையானைக் கனவிடத்தில்யான்காண்பன்கண்டபோது *
புள்ளூருங்கள்வாநீபோகேலென்பன் என்றாலுமிதுநமக்கோர்புலவிதானே. 23

இருகையிற்சங்கிவைநில்லாவெல்லேபாவம் இலங்கொலிநீர்ப்பெரும்பௌவம்மண்டியுண்ட *
பெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம் பெருந்தவத்தரருந்தவத்துமுனிவர்சூழ *
ஒருகையிற்சங்கொருகைமற்றாழியேந்தி உலகுண்டபெருவாயரிங்கேவந்து * என்
பொருகயற்கண்ணீரரும்பப்புலவிதந்து புனலரங்கமூரென்றுபோயினாரே. 24

மின்னிலங்குதிருவுருவும்பெரியதோளும் கரிமுனிந்தகைத்தலமும்கண்ணும்வாயும் *
தன்னலர்ந்தநறுந்துழாய்மலரின்கீழே தாழ்ந்திலங்குமகரஞ்சேர்குழையும்காட்டி *
என்னலனுமென்னிறையுமென்சிந்தையும் என்வளையுங்கொண்டென்னையாளுங்கொண்டு *
பொன்னலர்ந்தநறுஞ்செருந்திப்பொழிலினூடே புனலரங்கமூரென்றுபோயினாரே. 25

தேமருவுபொழிலிடத்துமலர்ந்தபோதைத் தேனதனைவாய்மடுத்துன்பெடையுநீயும் *
பூமருவியினிதமர்ந்துபொறியிலார்ந்த அறுகாலசிறுவண்டேதொழுதேனுன்னை *
ஆமருவிநிரைமேய்த்தவமரர்கோமான் அணியழுந்தூர்நின்றானுக்கின்றேசென்று *
நீமருவியஞ்சாதேநின்றோர்மாது நின்னயந்தாளென்றிறையேயியம்பிக்காணே. 26

** செங்காலமடநாராயின்றேசென்று திருக்கண்ணபுரம்புக்கென்செங்கண்மாலுக்கு *
என்காதலென்துணைவர்க்குரைத்தியாகில் இதுவொப்பதெமக்கின்பமில்லை * நாளும்
பைங்கானமீதெல்லாமுனதேயாகப் பழனமீன்கவர்ந்துண்ணத்தருவன் * தந்தால்
இங்கேவந்தினிதிருந்துன்பெடையும்நீயும் இருநிலத்திலினிதின்பமெய்தலாமே. 27

தென்னிலங்கையரண்சிதறியவுணன்மாளச் சென்றுலகமூன்றினையுந்திரிந்தோர்தேரால் *
மன்னிலங்குபாரதத்தைமாளவூர்ந்த வரையுருவின்மாகளிற்றைத்தோழீ * என்றன்
பொன்னிலங்குமுலைக்குவட்டில்பூட்டிக்கொண்டு போகாமைவல்லேனாய்ப்புலவியெய்தி *
என்னிலங்கமெல்லாம்வந்தின்பமெய்த எப்பொழுதும்நினைந்துருகியிருப்பன்நானே. 28

** அன்றாயர்குலமகளுக்கரையன்றன்னை அலைகடலைக்கடைந்தடைத்தவம்மான்றன்னை *
குன்றாதவலியரக்கர்கோனைமாளக் கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்துகுலங்களைந்து
வென்றானை * குன்றெடுத்ததோளினானை விரிதிரைநீர்விண்ணகரம்மருவிநாளும்
நின்றானை * தண்குடந்தைக்கிடந்தமாலை நெடியானையடிநாயேன்நினைந்திட்டேனே. 29

** மின்னுமாமழைதவழும்மேகவண்ணா விண்ணவர்தம்பெருமானேயருளாயென்று *
அன்னமாய்முனிவரோடமரரேத்த அருமறையைவெளிப்படுத்தவம்மான்றன்னை *
மன்னுமாமணிமாடமங்கைவேந்தன் மானவேற்பரகாலன்கலியன்சொன்ன *
பன்னியநூல்தமிழ்மாலைவல்லார் தொல்லைப்பழவினையைமுதலரியவல்லார்தாமே. 30

அடிவரவு:— மின் பார் திருவடி இந்திரன் ஒண்மிதி அலம் வற்பு நீர் வங்க பொன் பட்டு நெஞ்சு கல் முளை கல்லுயர் கன்று பொங்கார் கார்வண்ணம் முற்றா தேராளும் மைவண்ண நைவளம் உள்ளூரும் இருகை மின்னிலங்கு தேமருவு செங்கால தென்னிலங்கை அன்றாயர் மின்னுமா வையம்.

திருநெடுந்தாண்டகம் முற்றுப்பெற்றது.

---

## இரண்டாவதாயிரம்

முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| பெரியதிருமொழி | பாட்டு | .... | 1084 |
| திருக்குறுந்தாண்டகம் | ,, | .... | 20 |
| திருநெடுந்தாண்டகம் | ,, | ... | 30 |
| | | | 1134 |

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

ஆழ்வார் எம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்.

# மூன்றாவதாயிரம்—இயற்பா

பொய்கையாழ்வார் அருளிச்செய்த

## முதல் திருவந்தாதி

---

### தனியன்

கைதைசேர்பூம்பொழில்சூழ் கச்சிநகர்வந்துதித்த*பொய்கைப்பிரான்கவிஞர்போரேறு*—வையத்
தடியவர்கள்வாழவருந்தமிழ் நூற்றந்தாதி*படிவிளங்கச்செய்தான்பரிந்து.

---

*வையம்தகளியா வார்கடலேநெய்யாக*வெய்யகதிரோன்விளக்காக*—செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன்சொன்மாலை*இடராழிநீங்குகவேயென்று. 1

என்றுகடல்கடைந்தது எவ்வுலகம்நீரேற்றது*ஒன்றுமதனையுணரேன்நான்*-அன்ற
தடைத்துடைத்துக் கண்படுத்தவாழி* இதுநீபடைத்திடந்துண்டுமிழ்ந்தபார். 2

பாரளவுமோரடிவைத்து ஓரடியும்பாருடுத்த*நீரளவும்செல்லநிமிர்ந்ததே*-சூருருவின்
பேயளவுகண்ட பெருமானறிகிலேன்*நீயளவுகண்டநெறி. 3

நெறிவாசல்தானேயாய் நின்றானை*ஐந்துபொறிவாசல்போர்க்கதவம்சாத்தி, அறிவானாம்
ஆலமரநீழல் அறம்நால்வர்க்கன்றுரைத்த* ஆலமமர்கண்டத்தரன். 4

அரன்நாரணன்நாமம் ஆன்விடைபுள்ளூர்தி*உரைநூல் மறையுறையுங்கோயில்-வரைநீர்
கருமமழிப்பளிப்புக் கையதுவேல்நேமி*உருவமெரிகார்மேனியொன்று. 5

ஒன்றுமறந்தறியேன் ஓதநீர்வண்ணனைநான்*இன்றுமறப்பனோவேழைகாள்-*அன்று
கருவரங்கத்துட்கிடந்து கைதொழுதேன்கண்டேன்*திருவரங்கமேயான்திசை. 6

திசையும் திசையுறுதெய்வமும்*தெய்வத்திசையும்கருமங்களெல்லாம்*-அசைவில்சீர்
கண்ணன்நெடுமால் கடல்கடைந்த*காரோதவண்ணன்படைத்தமயக்கு. 7

மயங்கவலம்புரிவாய்வைத்து*வானத்தியங்குமெறிகதிரோன்றன்னை-*முயங்கமருள்
தேராழியால்மறைத்தது என்நீதிருமாலே*போராழிக்கையால்பொருது. 8

பொருகோட்டோரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு*அன்றுன்ஒருகோட்டின்மேல்கிடந்ததன்றே*
விரிதோட்ட,சேவடியைநீட்டித் திசைநடுங்கவிண் துளங்க*மாவடிவில்நீயளந்தமண். 9

மண்ணும்மலையும் மறிகடலும்மாருதமும்*விண்ணும்விழுங்கியதுமெய்யென்பர்*எண்ணி
லலகளவுகண்ட சீராழியாய்க்கு*அன்றிவ்வுலகளவுமுண்டோவுன்வாய். 10

வாயவனையல்லதுவாழ்த்தாது*கையுலகம்தாயவனையல்லதுதாந்தொழா*-பேய்முலைநஞ்
சூணாகவுண்டான் உருவொடுபேரல்லால்*காணாகண்கேளாசெவி. 11

செவிவாய்கண்மூக்கு உடலென்றைம்புலனும்*செந்தீபுவிகால்நீர்விண்பூதமைந்தும்*
அவியாதஞானமும்வேள்வியும் நல்லறமுமென்பரே*ஏனமாய்நின்றாற்கியல்வு. 12

இயல்வாக ஈன்துழாயானடிக்கேசெல்ல*முயல்வாரியலமரர்முன்னம்*-இயல்வாக
நீதியாலோதி நியமங்களால்பரவ*ஆதியாய்நின்றாரவர். 13

அவரவர்தாந்தாம் அறிந்தவாறேத்தி*இவரிவரெம்பெருமானென்று*-சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும்தொழுவர்*உலகளந்தமூர்த்தியுருவேமுதல். 14

முதலாவார்மூவரே அம்மூவருள்ளும்முதலாவான்*மூரிநீர்வண்ணன்*-முதலாய
நல்லானருளல்லால் நாமநீர்வையகத்து*பல்லாரருளும்பழுது. 15

பழுதேபலபகலும் போயினவென்று*அஞ்சியழுதேன் அரவணைமேற்கண்டுதொழுதேன்*
கடலோதம்காலலைப்பக் கண்வளரும்*செங்கணடலோதவண்ணரடி. 16

அடியும்படிகடப்பத் தோள்திசைமேற்செல்ல*முடியும்விசும்பளந்ததென்பர்*-வடியுகிரால்
ஈர்ந்தான் இரணியனதாகம்*இருஞ்சிறைப்புள்ளூர்ந்தானுலகளந்தநான்று. 17

நான்றமுலைத்தலைநஞ்சுண்டு*உறிவெண்ணெய்தோன்றவுண்டான் வென்றிசூழ்களிற்றையூன்றி*
பொருதுடைவுகண்டானும் புள்வாய்கீண்டானும்*மருதிடைபோய்மண்ணளந்தமால் 18

மாலுங்கருங்கடலே என்னோற்றாய்?*வையகமுண்டாலிலைத்துயின்றவாழியான்*-கோலக்
கருமேனிச் செங்கண்மால்கண்படையுள்*என்றும்திருமேனிநீதீண்டப்பெற்று. 19

பெற்றார்தளைகழலப் பேர்ந்தோர்குறளுருவாய்*செற்றார்படிகடந்தசெங்கண்மால்-*நற்று
மரைமலர்ச்சேவடியை வானவர்கைகூப்பி*நிரைமலர்கொண்டேத்துவரால்நின்று.

நின்றுநிலமங்கை நீரேற்றுமூவடியால்*சென்றுதிசையளந்தசெங்கண்மாற்கு-என்றும்
படையாழிபுள்ளூர்தி பாம்பணையான்பாதம்*அடையாழிநெஞ்சேயறி. 21

அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன்*பொறிகொள்சிறையுவணமூர்ந்தாய்*வெறிகமழும்
காம்பேய்மென்தோளி கடைவெண்ணெயுண்டாயை*தாம்பேகொண்டார்த்ததழும்பு

தழும்பிருந்தசார்ங்கநாண் தோய்ந்தவாமங்கை*தழும்பிருந்ததாள்சகடம்சாடி*-தழும்பிருந்த
பூங்கோதையாள்வெருவப் பொன்பெயரோன்மார்பிடந்த*வீங்கோதவண்ணர்விரல்.

விரலோடுவாய்தோய்ந்த வெண்ணெய்கண்டு*ஆய்ச்சியுரலோடுறப்பிணித்தநான்று-குரலோவா
தேங்கிநினைந்து அயலார்காணவிருந்திலையே?*ஓங்கோதவண்ணாவுரை. 24

உரைமேற்கொண்டு என்னுள்ளமோவாது*எப்போதும்வரைமேல் மரகதமேபோல*-திரைமேல்
கிடந்தானைக் கீண்டானைகேழலாய்*பூமியிடந்தானையேத்தியெழும். 25

எழுவார்விடைகொள்வார் ஈன்துழாயானை*வழுவாவகைநினைந்துவைகல் தொழுவார்*
வினைச்சுடரைநந்துவிக்கும் வேங்கடமே*வானோர்மனச்சுடரைத்தூண்டும்மலை. 26

மலையால்குடைகவித்து மாவாய்பிளந்து*சிலையால்மராமரமேழ்செற்று*—கொலையானைப்
போர்க்கோடொசித்தனவும்பூங்குருந்தஞ்சாய்த்தனவும்*கார்க்கோடுபற்றியான்கை.

கையவலம்புரியும்நேமியும்*கார்வண்ணத்தையமலர்மகள் நின்னாகத்தாள்*-செய்ய
மறையான்நின்னுந்தியான் மாமதிள்மூன்றெய்த* இறையான்நின்னாகத்திறை. 28

இறையும்நிலனும் இருவிசும்புங்காற்றும்*அறைபுனலுஞ்செந்தீயுமாவான்*பிறைமருப்பின்
பைங்கண்மால்யானை படுதுயரங்காத்தளித்த*செங்கண்மால்கண்டாய்தெளி. 29

தெளிதாகவுள்ளத்தைச்செந்நிறீஇ*ஞானத்தெளிதாக நன்குணர்வார்சிந்தை*எளிதாகத்
தாய்நாடுகன்றேபோல் தண்டுழாயானடிக்கே*போய்நாடிக்கொள்ளும்புரிந்து. 30

புரியொருகைபற்றி ஓர்பொன்னாழியேந்தி*அரியுருவுமாளுருவுமாகி*-எரியுருவ
வண்ணத்தான்மார்பிடந்த மாலடியையல்லால்*மற்றெண்ணத்தானாமோவிமை. 31

இமையாதகண்ணால் இருளகலநோக்கி*அமையாப்பொறிபுலன்களைந்தும்நமையாமல்*
ஆகத்தணைப்பார் அணைவரே*ஆயிரவாய்நாகத்தணையான்நகர். 32

நகரமருள்புரிந்து நான்முகற்குப்பூமேல்*பகரமறைபயந்தபண்பன்-பெயரினையே*
புந்தியால்சிந்தியாது ஓதியுருவெண்ணும்*அந்தியாலாம்பயனங்கென். 33

என்னொருவர்மெய்யென்பர் ஏழுலகுண்டு*ஆலிலையில்முன்னொருவனாயமுகில்வண்ணா!* நின்னுருகிப்
பேய்த்தாய்முலைதந்தாள் பேர்ந்திலளால்*பேரமர்க்கணாய்த்தாய்முலைதந்தவாறு.

ஆறியவன்பில் அடியார்தமார்வத்தால்*கூறியகுற்றமாக்கொள்ளல்நீ-தேறி*
நெடியோய்! அடியடைதற்கன்றே*ஈரைந்துமுடியான்படைத்தமுரண். 35

முரணைவலி தொலைதற்காமென்றே*முன்னம்தரணிதன தாகத்தானே*-இரணியனைப்
புண்ணிரந்தவள்ளுகிரார் பொன்னாழிக்கையால்*நீமண்ணிரந்துகொண்டவகை. 36

வகையறுநுண்கேள்விவாய்வார்கள்*நாளும்புகைவிளக்கும் பூம்புனலுமேந்தி*-திசைதிசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும்வேங்கடமே*வெண்சங்கமூதியவாய்மாலுகந்தவூர். 37

ஊரும்வரியரவம் ஒண்குறவர்மால்யானை*பேரவெறிந்தபெருமணியை*-காருடைய
மின்னென்று புற்றடையும்வேங்கடமே*மேலசுரர்எம்மென்னுமாலதிடம். 38

இடந்ததுபூமி யெடுத்ததுகுன்றம்*கடந்ததுகஞ்சனைமுன்னஞ்ச*-கிடந்ததுவும்
நீரோதமாகடலே நின்றதுவும் வேங்கடமே*பேரோதவண்ணர்பெரிது. 39

பெருவில்பகழிக் குறவர்கைச்செந்தீ*வெருவிப்புனந்துறந்தவேழம்*—இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சும்வேங்கடமே*மேலசுரர்கோன்வீழக்கண்டுகந்தான்குன்று.40

குன்றனையகுற்றஞ்செய்யினும் குணங்கொள்ளும்*இன்றுமுதலாகவென்னெஞ்சே*-என்றும்
புறனுரையேயாயினும் பொன்னாழிக்கையான்*திறனுரையேசிந்தித்திரு. 41

திருமகளும்மண்மகளும் ஆய்மகளும்சேர்ந்தால்*திருமகட்கேதீர்ந்தவாறென்கொல்*திருமகள்மேல்
பாலோதம்சிந்தப் படநாகணைக்கிடந்த*மாலோதவண்ணர்மனம். 42

மனமாசுதீரும் அருவினையுஞ்சாரா*தனமாயதானேகைகூடும்*-புனமேய
பூந்துழாயானடிக்கே போதொடுநீரேந்தி*தாந்தொழாநிற்பார்தமர். 43

தமருகந்ததெவ்வுருவம்அவ்வுருவம்தானே*தமருகந்ததெப்பேர்மற்றப்பேர்*-தமருகந்து
எவ்வண்ணம்சிந்தித்து இமையாதிருப்பரே*அவ்வண்ணமாழியானாம். 44

ஆமேயமரர்க்கு அறியவதுநிற்க*நாமேயறிகிற்போம்நன்னெஞ்சே*-பூமேய
மாதவத்தோன்தாள்பணிந்தவாளரக்கன்நீண்முடியை*பாதமத்தாலெண்ணினான்பண்பு.

பண்புரிந்தநான்மறையோன் சென்னிப்பலியேற்ற*வெண்புரிநூல்மார்பன்வினைதீர-புண்புரிந்த
வாகத்தான்தாள்பணிவார்கண்டீர்*அமரர்தம்போகத்தால்பூமியாள்வார். 46

வாரிசுருக்கி மதக்களிறைந்தினையும்*சேரிதிரியாமல்செந்நிறீஇ*-கூரிய
மெய்ஞ்ஞானத்தாலுணர்வார்காண்பரே*மேலொருநாள்கைந்நாகங்காத்தான்கழல்

கழலொன்றெடுத்து ஒருகைசுற்றியோர்கைமேல்*சுழலும்சுராசுரர்களஞ்ச*-அழலும்
செருவாழியேந்தினான் சேவடிக்கேசெல்ல*மருவாழிநெஞ்சேமகிழ். 48

மகிழலகொன்றேபோல் மாறும்பல்யாக்கை*நெகிழமுயல்கிற்பார்க்கல்லால்*முகிழ்விரிந்த
சோதிபோல்தோன்றும் சுடர்பொன்நெடுமுடி*எம்ஆதிகாண்பார்க்குமரிது. 49

அரியபுலனைந்தடக்கி ஆய்மலர்கொண்டு*ஆர்வம்புரியபரிசினால்புல்கில்*—பெரியனாய்
மாற்றாதுவீற்றிருந்த மாவலிபால்*வண்கைநீரேற்றானைக்காண்பதெளிது. 50

எளிதிலிரண்டடியுங்காண்பதற்கு-*என்னுள்ளம்தெளியத்தெளிந்தொழியும்செவ்வே*-களியில்
பொருந்தாதவனைப் பொரலுற்று*அரியாயிருந்தான்திருநாமமெண். 51

எண்மர்பதினொருவர்ஈராறுவரோரிருவர்*வண்ணமலரேந்திவைகலும்*-நண்ணி
ஒருமாலையால் பரவியோவாது*-எப்போதும்திருமாலைக்கைதொழுவர்சென்று. 52

சென்றால்குடையாம்இருந்தால்சிங்காசனமாம்*நின்றால்மரவடியாம்நீள்கடலுள்*என்றும்
புணையாமணிவிளக்காம் பூம்பட்டாம்புல்குமணையாம்*திருமாற்கரவு. 53

அரவமடல்வேழம்ஆன்குருந்தம்புள்வாய்*குரவைகுடமுலைமற்குன்றம்*கரவின்றி
விட்டிறுத்துமேய்த்தொசித்துக் கீண்டுகோத்தாடி*உண்டட்டெடுத்தசெங்கணவன்.

அவன்தமர்எவ்வினையராகிலும்*எங்கோனவன்தமரே யென்றொழிவதல்லால்*நமன்தமரா
லாராயப்பட்டு அறியார்கண்டீர்*அரவணைமேல்பேராயர்க்காட்பட்டார்பேர். 55

பேரேவரப்பிதற்றலல்லால் எம்பெம்மானை*ஆரேயறிவாரதுநிற்க*-நேரே
கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான்*கண்ணனடிக்கமலந்தன்னையயன். 56

அயனின்றவல்வினையை அஞ்சினேனஞ்சி*உயநின் திருவடியேசேர்வான்*-நயநின்ற
நன்மாலைகொண்டு நமோநாரணாவென்னும்*சொன்மாலைகற்றேன்தொழுது. 57

தொழுதுமலர்கொண்டு தூபம்கையேந்தி*எழுதுமெழுவாழிநெஞ்சே*-பழுதின்றி
மந்திரங்கள்கற்பனவும் மாலடியேகைதொழுவான்*அந்தரமொன்றில்லையடை. 58

அடைந்தவருவினையோடு அல்லல்நோய்பாவம்*மிடைந்தவைமீண்டொழியவேண்டில்*-நுடங்கிடையை
முன்னிலங்கைவைத்தான்முரணழிய*முன்னொருநாள்தன்விலங்கைவைத்தான்சரண்.

சரணாமறைபயந்த தாமரையானோடு*மரணாயமன்னுயிர்கட்கெல்லாம்*-அரணாய
பேராழிகொண்ட பிரானன்றிமற்றறியாது-*ஓராழிசூழ்ந்தவுலகு. 60

உலகும் உலகிறந்தவூழியும்*ஒண்கேழ்விலகுகருங்கடலும்வெற்பும்*-உலகினில்
செந்தீயும்மாருதமும்வானும்*திருமால்தன்புந்தியிலாயபுணர்ப்பு. 61

புணர்மருதினூடுபோய்ப்பூங்குருந்தம்சாய்த்து*மணமருவமால்விடையேழ்செற்று*கணம்வெருவ
ஏழுலகுந்தாயினவும் எண்டிசையும்போயினவும்*சூழரவப்பொங்கணையான்தோள்.

தோளவனையல்லால்தொழா,என்செவியிரண்டும்கேளவனதின்மொழியேகேட்டிருக்கும்*-நாநாளும்
கோணாகணையான் குரைகழலேகூறுவதே*நாணாமைநள்ளேன்நயம். 63

நயவேன்பிறர்பொருளை நள்ளேன்கீழாரோடு*உயவேனுயர்ந்தவரோடல்லால்*வியவேன்
திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்*வருமாறென்னென்மேல்வினை. 64

வினையாலடர்ப்படார் வெந்நரகில்சேரார்*தினையேனும்தீக்கதிக்கட்செல்லார்*நினைதற்
கரியானைச் சேயானை ஆயிரம்பேர்*செங்கட்கரியானைக்கைதொழுதக்கால். 65

காலையெழுந்து உலகம்கற்பனவும்*கற்றுணர்ந்தமேலைத்தலைமறையோர்வேட்பனவும்*வேலைக்கண்
ஓராழியானடியே ஓதுவதுமோர்ப்பனவும்*பேராழிகொண்டான்பெயர். 66

பெயருங்கருங்கடலேநோக்குமாறு*ஒண்பூவுயரும் கதிரவனேநோக்கும்*-உயிரும்
தருமனையேநோக்கும் ஒண்டாமரையாள்கேள்வன்*ஒருவனையேநோக்குமுணர்வு67

உணர்வாராருன்பெருமை ஊழிதோறூழி*உணர்வாராருன்னுருவந்தன்னை*உணர்வாரார்
விண்ணகத்தாய்மண்ணகத்தாய் வேங்கடத்தாய்*நால்வேதப்பண்ணகத்தாய்நீகிடந்தபால்.

பாலன்றனதுருவாய் ஏழுலகுண்டு*ஆலிலையின்மேலன்றுநீவளர்ந்தமெய்யென்பர்*-ஆலன்று
வேலைநீருள்ளதோ விண்ணதோமண்ணதோ*சோலைசூழ்குன்றெடுத்தாய்சொல்லு.

சொல்லுந்தனையும்தொழுமின் விழுமுடம்பு*செல்லுந்தனையும்திருமாலை*நல்லிதழ்த்
தாமத்தால்வேள்வியால் தந்திரத்தால்மந்திரத்தால்*நாமத்தாலேத்துதிரேல்நன்று.

நன்றுபிணிமூப்புக் கையகற்றிநான்கூழி*நின்றுநிலமுழுதுமாண்டாலும்*-என்றும்
விடலாழிநெஞ்சமே வேண்டினேன்கண்டாய்*அடலாழிகொண்டான்மாட்டன்பு.71

அன்பாழியானை அணுகென்னும்நாவவன்றன்*பண்பாழித்தோள்பரவியேத்தென்னும்*-முன்பூழி
காணானைக்காணென்னும்கண் செவிகேளென்னும்*பூணாரம்பூண்டான்புகழ். 72

புகழ்வாய்பழிப்பாய்நீ பூந்துழாயானை*இகழ்வாய்கருதுவாய்நெஞ்சே*-திகழ்நீர்க்
கடலும்மலையும் இருவிசும்புங்காற்றும்*உடலுமுயிருமேற்றான். 73

ஏற்றான்புள்ளூர்ந்தான் எயிலெரித்தான்மார்விடந்தான்*நீற்றான்நிழல்மணிவண்ணத்தான்*-கூற்றொருபால்
மங்கையான்பூமகளான் வார்சடையான்நீண்முடியான்*கங்கையான்நீள்கழலான்காப்பு

காப்புன்னையுன்னக்கழியும்*அருவினைகளாப்புன்னையுன்னவவிழ்ந்தொழியும்*-மூப்புன்னைச்
சிந்திப்பார்க்கில்லை திருமாலே*நின்னடியைவந்திப்பார்காண்பர்வழி. 75

வழிநின்று நின்னைத்தொழுவார்*வழுவாமொழிநின்றமூர்த்தியரேயாவர்-பழுதொன்றும்
வாராதவண்ணமே விண்கொடுக்கும்*மண்ணளந்தசீரான்திருவேங்கடம். 76

வேங்கடமும்விண்ணகரும்வெஃகாவும்* அஃகாதபூங்கிடங்கின்நீள்கோவல்பொன்னகரும்*-நான்கிடத்தும்,
நின்றானிருந்தான் கிடந்தான்நடந்தானே*என்றால்கெடுமாமிடர். 77

இடரார்படுவார் எழுநெஞ்சே*வேழம்தொடர்வான்கொடுமுதலைசூழ்ந்த*-படமுடைய
பைந்நாகப்பள்ளியான் பாதமேகைதொழுதும்*கொய்ந்நாகப்பூம்போதுகொண்டு. 78

கொண்டானையல்லால் கொடுத்தாரையார்பழிப்பார்*மண்டாவெனவிரந்துமாவலியை*-ஒண்டாரை
நீரங்கைதோய நிமிர்ந்திலையே*நீள்விசும்பிலாரங்கைதோயவடுத்து. 79

அடுத்தகடும்பகைஞற்கு ஆற்றேனென்றோடி*படுத்தபெரும்பாழிசூழ்ந்த விடத்தரவை*
வல்லாளன்கைக்கொடுத்த மாமேனிமாயவனுக்கு*அல்லாதுமாவரோஆள். 80

ஆளமர்வென்றி அடுகளத்துளந்நான்று*வாளமர்வேண்டிவரைநட்டு*-நீளரவைச்
சுற்றிக்கடைந்தான் பெயரன்றே*தொன்னரகைப்பற்றிக்கடத்தும்படை. 81

படையாரும்வாள்கண்ணார் பாரசிநாள்*பைம்பூம்தொடையலோடேந்தியதூபம்*- இடையிடையின்
மீன்மாய மாசூணும்வேங்கடமே*மேலொருநாள்மான்மாயவெய்தான்வரை. 82

வரைகுடைதோள்காம்பாக ஆநிரைகாத்து*ஆயர்நிரைவிடையேழ்செற்றவாறென்னே*-
உரவுடையநீராழியுள்கிடந்து நேராநிசாசரர்மேல்*பேராழிகொண்டபிரான். 83

பிரானுன்பெருமை பிறாரறிவார்*உராயுலகளந்தநான்று*-வராகத்
தெயிற்றளவு போதாவாறென்கொலோ*எந்தையடிக்களவுபோந்தபடி. 84

படிகண்டறிதியே பாம்பணையினான்*புட்கொடிகண்டறிதியேகூறாய்*-வடிவில்
பொறியைந்துமுள்ளடக்கிப் போதொடுநீரேந்தி*நெறிநின்றநெஞ்சமேநீ. 85

நீயும்திருமகளும்நின்றாயால்*குன்றெடுத்துப்பாயும் பனிமறுத்தபண்பாளா*-வாசல்
கடைகழியாவுள்புகாக் காமர்பூங்கோவல்*இடைகழியேபற்றியினி. 86

இனியார்புகுவார் எழுநரகவாசல்*முனியாதுமூரித்தாள்கோமின்*-கனிசாயக்
கன்றெறிந்ததோளான் கனைகழலேகாண்பதற்கு*நன்கறிந்தநாவலஞ்சூழ்நாடு. 87

நாடிலும் நின்னடியேநாடுவன்*நாடோறும்பாடிலும் நின்புகழேபாடுவன்*சூடிலும்
பொன்னாழியேந்தினான் பொன்னடியேசூடுவேற்கு*என்னாகிலென்னேயெனக்கு. 88

எனக்காவார்ஆரொருவரே*எம்பெருமான் தனக்காவான் தானேமற்றல்லால்*புனக்காயாம்
பூமேனிகாணப் பொதியவிழும்பூவைப்பூ*மாமேனிகாட்டும்வரம். 89

வரத்தால்வலிநினைந்து மாதவநின்பாதம்*சிரத்தால்வணங்கானாமென்றே*-உரத்தினால்
ஈரரியாய் நேர்வலியோனாயவிரணியனை*ஓரரியாய்நீயிடந்ததூன். 90

ஊனக்குரம்பையின் உள்புக்கிருள்நீக்கி*ஞானச்சுடர்கொளீஇநாடோறும்*-ஏனத்
துருவாயுலகிடந்த ஊழியான்பாதம்*மருவாதார்க்குண்டாமோவான். 91

வானாகித்தீயாய் மறிகடலாய்மாருதமாய்*தேனாகிப்பாலாம்திருமாலே*-ஆனாய்ச்சி
வெண்ணெய்விழுங்க நிறையுமே*முன்னொருநாள்மண்ணையுமிழ்ந்தவயிறு. 92

வயிறழலவாளுருவி வந்தானையஞ்ச*எயிறிலகவாய்மடித்ததென்நீ*-பொறியுகிரால்
பூவடிவையீடழித்த பொன்னாழிக்கையா*நின்சேவடிமேலீடழியச்செற்று. 93

செற்றெழுந்துதீவிழித்துச் சென்றவிந்தவேழுலகும்*மற்றிவையாவென்றுவாயங்காந்து*-முற்றும்
மறையவற்குக்காட்டிய மாயவனையல்லால்*இறையேனுமேத்தாதென்நா. 94

நாவாயிலுண்டே நமோநாரணாவென்று*ஓவாதுரைக்குமுரையுண்டே*-மூவாத
மாக்கதிக்கண் செல்லும்வகையுண்டே*என்னொருவர்தீக்கதிக்கண்செல்லும்திறம். 95

திறம்பாதென்னெஞ்சமே செங்கண்மால்கண்டாய்*அறம்பாவமென்றிரண்டுமாவான்*புறந்தானிம்
மண்தான் மறிகடல்தான்மாருதந்தான்*வான்தானேகண்டாய்கடைக்கட்பிடி. 96

பிடிசேர் களிறளித்தபேராளா*உன்றனடிசேர்ந்தருள்பெற்றுளன்றே*-பொடிசேர்
அனற்கங்கையேற்றான் அவிர்சடைமேல்பாய்ந்த*புனற்கங்கையென்னும்பேர்ப்பொன்.

பொன்திகழுமேனிப் புரிசடையம்புண்ணியனும்*நின்றுலகம்தாயநெடுமாலும்*-என்றும்
இருவரங்கத்தால் திரிவரேலும்*ஒருவனொருவனங்கத்தென்றுமுளன். 98

**உளன்கண்டாய்நன்னெஞ்சே உத்தமனென்றுமுளன்கண்டாய்*உள்ளுவாருள்ளத்துளன்
கண்டாய்*
வெள்ளத்தினுள்ளானும் வேங்கடத்துமேயானும்*உள்ளத்தினுள்ளானென்றோர்.

**ஓரடியும்சாடுதைத்த ஒண்மலர்ச்சேவடியும்*ஈரடியும்காணலாமென்னெஞ்சே*ஓரடியில்
தாயவனைக்கேசவனைத் தண்டுழாய்மாலைசேர்*மாயவனையேமனத்துவை. 100

முதல் திருவந்தாதி முற்றிற்று

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு :—

1. வைய மென்று பார் நெறி அர னென்றுந் திசை மயங்கவல்லம் பொரு மண்ணும் வாய் செவி.
2. செவி யிய லவரவர் முதல் பழு தடியும், நான்றமுலை மாலும் பெற்றார் நின் றறியும்.
3. அறியுந் தமும்பிரு விரலோடு உரை யெழு, மலையால் கையவலை மிறையுந் தெளிது புரி.
4. புரி யிமை நகர மென்னொரு ஆறிய, முரண் வகைய றாரு மிடந்த பெருவில் குன்றனை.
5. குன்று திருமகளும் மனமாசு தமருகந்து, ஆமே பண்புரி வாரிசுருக்கி, கழலொன்று மகிழலகு அரியபுல னெளிதில்.
6. எளி தெண்மர் சென்று லரவ மவன்றமர், பேரே அயனின்ற தொழுதுமல ரடைந்த சரண வுலகும்.
7. உலகும் புணர்மரு தோளவனை நயவேன், வினையாலடர் காலை பெய்து முணர்வாரார், பாலன் சொல்லுந்தனை நன்றுபிணி.
8. நன் றன்பாழி புகழ்வா யேற்றான், காப்புன்னை வழிநின்று வேங்கடமு மிடரார், கொண்டானை யடுத்த ஆளமர்வென்றி.
9. ஆள் படையாரும் வரைகுடை பிரானுன், படிகண்டு நீயு மினியார் நாடிலும், எனக்காவார் வரத்தால்வலி ஊனக்குரம்பை.
10. ஊன வாணுகி வயிறழல செற்றெழு, நாவாயில் திறம்பாது பிடி பொன் உள னேர் வை.

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

பூதத்தாழ்வார் அருளிச்செய்த

# இரண்டாந் திருவந்தாதி

---

## தனியன்

*என்பிறவி தீரவிறைஞ்சினே னின்னமுதா* அன்பே தகளியளித்தானை* நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேருங் கடன்மல்லைப் பூதத்தார் பொன்னங்கழல்.*

---

*அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக* இன்புருகு சிந்தை யிடுதிரியா*—நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு* ஞானத்தமிழ் புரிந்த நான். 1

ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன் றன்நாமங்கள்* தானத்தால் மற்றவன்பேர் சாற்றிறைல்*-வானத்
தணியமரர் ஆக்குவிக்குமஃதன்றே* நங்கள் பணியமரர் கோமான் பரிசு. 2

பரிசுநறுமலரால் பாற்கடலான் பாதம்* புரிவார் புகப்பெறுவர் போலாம்*-புரிவார்கள்
தொல்லமரர் கேள்வித் துலங்கொளிசேர் தோற்றத்து* நல்லமரர் கோமான் நகர். 3

நகரிழைத்து நித்திலத்து நாண்மலர் கொண்டு* ஆங்கே திகழுமணி வயிரம் சேர்த்து—* நிகரில்லாப்
பைங்கமல மேந்திப் பணிந்தேன் பனிமலராள்* அங்கம் வலங்கொண்டானடி. 4

அடிமூன்றி லிவ்வுலகம் அன்றளந்தாய் போலும்* அடிமூன்றிரந்தவனி கொண்டாய்*—படிநின்ற
நீரோத மேனி நெடுமாலே* நின்னடியை யாரோத வல்லாரறிந்து. 5

அறிந்தைந்து முள்ளடக்கி ஆய்மலர் கொண்டு* ஆர்வம் செறிந்த மனத்தராய்ச் செவ்வே*-
அறிந்தவன்றன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே* காரோத வண்ணன் கழல். 6

கழலெடுத்து வாய்மடித்துக் கண்சுழன்று* மாற்றார் அழலெடுத்த சிந்தையராயஞ்ச*-தழலெடுத்த
போராழி யேந்தினான் பொன்மலர்ச் சேவடியே* ஓராழி நெஞ்சே உகந்து. 7

உகந்துன்னை வாங்கி ஒளிநிறங்கொள் கொங்கை* அகங்குளிர வுண்ணென்றாளாவி—*உகந்து
முலையுண்பாய் போலே முனிந்துண்டாய்* நீயும் அலைபண்பாலானமையாலன்று. 8

அன்றது கண்டஞ்சாத ஆய்ச்சி யுனக்கிரங்கி* நின்று முலைதந்த விந்நீர்மைக்கு-* அன்று
வரன்முறையால் நீயளந்த மாகடல்சூழ் ஞாலம்* பெருமுறையாலெய்துமோ பேர்த்து. 9

பேர்த்தனை மாசகடம் பிள்ளையாய்* மண்ணிரந்து காத்தனை பல்லுயிரும் காவலனே—* ஏத்திய
நாவுடையேன் பூவுடையேன் நின்னுள்ளி நின்றமையால்* காவடியேன் பட்ட கடை. 10

கடைநின்றமரர் கழல்தொழுது* நாளும் இடைநின்ற வின்பத்தராவர்* புடைநின்ற
நீரோத மேனி நெடுமாலே* நின்னடியை யாரோத வல்லாரவர். 11

அவரிவரென்றில்லை அரவணையான் பாதம்* எவர்வணங்கி யேத்தாதாரெண்ணில்*-பவரும்
செழுங்கதிரோனொண்மலரோன் கண்ணுதலோனன்றே* தொழுந்தகையார் நாளும் தொடர்ந்து

தொடரெடுத்தமால்யானை சூழ்கயம் புக்கஞ்சி* படரெடுத்த பைங்கமலங் கொண்டு* அன்றிடரடுக்க
ஆழியான் பாதம் பணிந்தன்றே* வானவர்கோன் பாழிதானெய்திற்றுப் பண்டு. 13

பண்டிப் பெரும்பதியை யாக்கி* பழிபாவம் கொண்டிங்கு வாழ்வாரைக் கூறாதே*-எண்டிசையும்
பேர்த்தகரநான்குடையான் பேரோதிப் பேதைகாள்* தீர்த்தகரராமின் திரிந்து. 14

திரிந்தது வெஞ்சமத்துத் தேர்கடவி* அன்று பிரிந்தது சீதையை மான்பின் போய்*-புரிந்ததுவும்
கண்பள்ளிகொள்ள அழகியதே* நாகத்தின் தண்பள்ளிகொள்வான் றனக்கு. 15

தனக்கடிமைபட்டது தானறியானேலும்* மனத்தடைய வைப்ப தாம்மாலை* வனத்திடரை
ஏரியாம் வண்ணம் இயற்றுமிதுவல்லால்* மாரியார் பெய்கிற்பார் மற்று. 13

மற்றாரியலாவார் வானவர்கோன்மாமலரோன்*சுற்றும்வணங்குந்தொழிலானை*-ஒற்றைப்
பிறையிருந்த செஞ்சடையான்பின்சென்று*மாலைக்குறையிரந்துதான்முடித்தான்கொண்டு. 17

கொண்டதுலகம் குறளுருவாய்க்கோளரியாய்*ஒண்டிறலோன்மார்வத்துகிர்வைத்தது*-
உண்டதுவும்
தான்கடந்தவேழுலகே தாமரைக்கண்மாலொருநாள்*வான்கடந்தான்செய்தவழக்கு. 18

வழக்கன்றுகண்டாய் வலிசகடம்செற்றாய்*வழக்கென்றுநீமதிக்கவேண்டா*-குழக்கன்று
தீவிளவின்காய்க்கெறிந்த தீமைதிருமாலே*பார்விளங்கச்செய்தாய்பழி. 19

பழிபாவம்கையகற்றிப் பல்காலும்நின்னை*வழிவாழ்வார்வாழ்வராம்மாதோ;*—வழுவின்றி
நாரணன்றன்நாமங்கள் நன்குணர்ந்துநன்கேத்தும்*காரணங்கள்தாமுடையார்தாம்.

தாமுளரே தம்முள்ளமுள்ளுளதே*தாமரையின்பூவுளதே யேத்தும்பொழுதுண்டே*—வாமன்
திருமருவு தாள்மருவுசென்னியரே*செவ்வேஅருநரகம்சேர்வதரிது. 21

அரியதெளிதாகும் ஆற்றலால்மாற்றி*பெருகமுயல்வாரைப்பெற்றால்*-கரியதோர்
வெண்கோட்டுமால்யானை வென்றுமுடித்தன்றே*தண்கோட்டுமாமலரால்தாழ்ந்து.

தாழ்ந்துவரங்கொண்டு தக்கவகைகளால்*வாழ்ந்துகழிவாரைவாழ்விக்கும்*-தாழ்ந்த
விளங்கனிக்குக் கன்றெறிந்துவேற்றுருவாய்*ஞாலமளந்தடிக்கீழ்க்கொண்டவவன்.

அவன்கண்டாய்நன்னெஞ்சே ஆருளும்கேடும்*அவன்கண்டாயைம்புலனாய்நின்றான்*-
அவன்கண்டாய்
காற்றுத்தீநீர்வான் கருவரைமண்*காரோதச்சீற்றத்தீயாவானும்சென்று. 24

சென்றதிலங்கைமேல் செவ்வேதன்சீற்றத்தால்*கொன்றதிராவணனைக்கூறுங்கால்*நின்றதுவும்
வேயோங்குதண்சாரல் வேங்கடமே*விண்ணவர்தம்வாயோங்குதொல்புகழான்வந்து.

வந்தித்தவனை வழிநின்றவைம்பூதம்*ஐந்துமகத்தடக்கியார்வமாய்*-உந்திப்
படியமரர்வேலையான் பண்டமரர்க்கீந்த*படியமரர்வாழும்பதி. 26

பதியமைந்துநாடிப் பருத்தெழுந்தசிந்தை*மதியுரிஞ்சிவான்முகடுநோக்கி*-கதிமிகுத்தங்
கோல்தேடியோடும் கொழுந்ததேபோன்றதே*மால்தேடியோடும்மனம். 27

மனத்துள்ளான்வேங்கடத்தான்மாகடலான்*மற்றும்நினைப்பரியநீளரங்கத்துள்ளான்*-
எனைப்பலரும்
தேவாதிதேவன் எனப்படுவான்*முன்னொருநாள்மாவாய்பிளந்தமகன். 28

மகனாக்கொண்டெடுத்தாள் மாண்பாயகொங்கை*அகனாரவுண்பனென்றுண்டு*-மகனைத்தாய்
தேறாதவண்ணம் திருத்தினாய்*தென்னிலங்கைநீறாகவெய்தழித்தாய்நீ. 29

நீயன்றுலகளந்தாய் நீண்டதிருமாலே*நீயன்றுலகிடந்தாயென்பரால்*-நீயன்று
காரோதமுன்கடைந்து பின்னடைத்தாய்மாகடலை*பேரோதமேனிப்பிரான். 30

பிரானென்றுநாளும் பெரும்புலரியென்றும்*குரானற்செழும்போதுகொண்டு*-வராகத்
தணியுருவன்பாதம் பணியுமவர்கண்டீர்*மணியுருவம்காண்பார்மகிழ்ந்து. 31

மகிழ்ந்ததுசிந்தை திருமாலே*மற்றும்மகிழ்ந்தது உன்பாதமேபோற்றி*மகிழ்ந்த
தழலாழிசங்கம் அவைபாடியாடும்*தொழிலாகம்சூழ்ந்துதுணிந்து. 32

துணிந்ததுசிந்தை துழாயலங்கல்*அங்கமணிந்தவன்பேருள்ளத்துப்பல்கால்*பணிந்ததுவும்
வேய்பிறங்குசாரல்விறல்வேங்கடவனையே*வாய்திறங்கள்சொல்லும்வகை. 33

வகையாலவனி யிரந்தளந்தாய்பாதம்*புகையால்நறுமலரால்முன்னே*-மிகவாய்ந்த
அன்பாக்கியேத்தி அடிமைப்பட்டேனுனக்கு*என்பாக்கியத்தாலினி. 34

இனிதென்பர்காமம் அதனிலுமாற்ற*இனிதென்பர்தண்ணீருமெந்தாய்*— இனிதென்று
காமநீர்வேளாது நின்பெருமைவேட்பரேல்*சேமநீராகும்சிறிது.

சிறியார்பெருமை சிறிதின்கணெய்தும்*அறியாரும்தாமறியாராவர்*-அறியாமை
மண்கொண்டுமண்ணுண்டு மண்ணுமிழ்ந்தமாயனென்று*எண்கொண்டென்னெஞ்சேயிரு. 36

திருந்தண்கமலத்து இருமலரினுள்ளே * திருந்துதிசைமுகனைத்தந்தாய் *
பொருந்தியநின்பாதங்களேத்திப் பணியாவேல் * பல்பிறப்புமேதங்களெல்லாமெமக்கு. 37

நமக்கென்றிருநிதியம் ஏமாந்திராதே * தமக்கென்றும்சார்வமறிந்து * நமக்கென்றும்
மாதவனேயென்னும் மனம்படைத்து * மற்றவன்பேரோதுவதேநாவினாலோத்து. 38

ஓத்தின்பொருள்முடிவுமித்தனையே * உத்தமன்பேரேத்தும் திறமறிமினேழைகாள் *
ஓத்ததனைவல்லீரேல் நன்றதனைமாட்டீரேல்* மாதவன்பேர்சொல்லுவதேயோத்தின்சுருக்கு. 39

சுருக்காகவாங்கிச் சுலாவிநின்று * ஐயார்நெருக்காமுன் நீர்நினைமின்கண்டீர்*
திருப்பொலிந்தவாகத்தான் பாதமறிந்தும் * அறியாதபோகத்தாலில்லைபொருள். 40

பொருளாலமருலகம் புக்கியலலாகாது * அருளானறமருளுமன்றே *
அருளாலேமாமறையோர்க்கீந்த மணிவண்ணன்பாதமே* நீமறவேல்நெஞ்சேநினை. 41

நினைப்பன்திருமாலை நீண்டதோள்காண * நினைப்பார்பிறப்பொன்றும்நேரார் *
மனைப்பால்பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம்* துறந்தார்தொழுதாரத்தோள். 42

தோளிரண்டெட்டேழும் மூன்றும்முடியனைத்தும் * தாளிரண்டும்வீழச்சரந்துரந்தான் *
தாளிரண்டுமார்தொழுவார் பாதம் அவைதொழுவதன்றே * என்சீர்கெழுதோள்செய்யுஞ்சிறப்பு. 43

சிறந்தார்க்கெழுதுணையாம் செங்கண்மால்நாமம் * மறந்தாரைமானிடமாவையேன் *
அறந்தாங்குமாதவனேயென்னும் மனம்படைத்து * மற்றவன்பேரோதுவதேநாவினாலுள்ளு.

உளதென்றிறுமாவார் உண்டில்லையென்று * தளர்தலதனருகும்சாரார் *
அளவரியவேதத்தான்வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும்*பாதத்தான்பாதம்பயின்று. 45

பயின்றதரங்கம்திருக்கோட்டி * பன்னாள்பயின்றதுவும் வேங்கடமேபன்னாள் *
பயின்றதணிதிகழும்சோலை அணிநீர்மலையே * மணிதிகழும்வண்தடக்கைமால். 46

மாலையரியுருவன் பாதமலரணிந்து * காலைதொழுதெழுமின்கைகோலி *
ஞாலமளந்திடந்துண்டுமிழ்ந்த அண்ணலைமற்றல்லால் * உளங்கிடந்தவாற்றாலுணர்ந்து. 47

உணர்ந்தாய்மறைநான்கும் ஓதினாய்நீதி* மணந்தாய்மலர்மகள்தோள்மாலே *
மணந்தாய்போய்வேயிருஞ்சாரல் வியலிருஞாலஞ்சூழ் * மாயிருஞ்சோலைமலை. 48

மலையேழும் மாநிலங்களேழுமதிர * குலைசூழ்குரைகடல்களேழும் *
முலைசூழ்ந்தநஞ்சுரத்துப்பெண்ணை நவின்றுண்டநாவனென்று* அஞ்சாதென்னெஞ்சேயழை.

அழைப்பன்திருமாலை ஆங்கவர்கள்சொன்ன * பிழைப்பில்பெரும்பெயரேபேசி *
இழைப்பரியவாயவனேயாதவனே யென்றவனையார்முகப்பும் * மாயவனேயென்றுமதித்து.

மதிக்கண்டாய்நெஞ்சே மணிவண்ணன்பாதம் * மதிக்கண்டாய்மற்றவன்பேர்தன்னை *
மதிக்கண்டாய்பேராழிநின்று பெயர்ந்துகடல்கடைந்த * நீராழிவண்ணன்நிறம். 51

நிறங்கரியன்செய்ய நெடுமலராள்மார்வன் * அறப்பெரியனாரதறிவார் *
மறம்புரிந்தவாளரக்கன்போல்வானை வானவர்கோன்தானத்து*நீளிருக்கைக்குய்த்தான்நெறி. 52

நெறியார்குழல்கற்றை முன்னின்றுபின்தாழ்ந்து * அறியாதிளங்கிரியென்றெண்ணி* பிரியாது
பூங்கொடிகள்வைகும் பொருபுனல்குன்றென்னும் * வேங்கடமேயாம்விரும்பும்வெற்பு. 53

வெற்பென்றிருஞ்சோலை வேங்கடமென்றிவ்விரண்டும் * நிற்பென்றுநீமதிக்கும்நீர்மைபோல் *
நிற்பென்றுளங்கோயில்உள்ளம்வைத்துள்ளினேன்*வெள்ளத்திளங்கோயில்கைவிடேலென்று.

என்றுமறந்தறியேன் ஏழ்பிறப்புமெப்பொழுதும் * நின்றுநினைப்பொழியாநீர்மையால் *
வென்றியடலாழிகொண்ட அறிவனே * இன்பக்கடலாழிநீயருளிக்காண். 55

காணக்கழிகாதல் கைமிக்குக்காட்டினல் * நாணப்படுமென்றல்நாணுமே *
பேணிக்கருமாலைப்பொன்மேனி காட்டாமுன்காட்டும் * திருமாலைநங்கள்திரு. 56

திருமங்கைநின்றருளும் தெய்வம்நாவாழ்த்தும் * கருமங்கடைப்பிடிமின்கண்டீர் *
உரிமையாலேத்தினேம்பாதம் இருந்தடக்கையெந்தைபேர் * நாற்றிசையுங்கேட்டீரேநாம். 57

நாம்பெற்றநன்மையும் நாமங்கைநன்னெஞ்சத்து* ஓம்பியிருந்தெம்மையோதுவித்து*
வேம்பின்பொருள்நீர்மையாயினும் பொன்னாழிபாடென்று * அருள்நீர்மைதந்தவருள். 58

அருள்புரிந்தசிந்தையடியார்மேல்வைத்து*பொருள்தெரிந்துகாண்குற்றவப்போது*இருளிரிந்து
நோக்கினேன்நோக்கி நினைந்தேனதொண்கமலம் * ஓக்கினேனென்னையுமங்கோர்ந்து. 59

ஒருருவனல்லை ஒளியுருவம்நின்னுருவம் * ஈருருவனென்பரிருநிலத்தோர் *
ஒருருவமாதியாம்வண்ணம் அறிந்தாரவர்கண்டீர் * நீதியால்மண்காப்பார்நின்று. 60

நின்றதோர்பாதம் நிலம்புதைப்ப * நீண்டதோள்சென்றளந்ததென்பர் திசையெல்லாம் *
அன்றுகருமாணியாயிரந்த கள்வனே * உன்னைப்பிரமாணித்தார்பெற்றபேறு. 61

பேறொன்றுமுன்னறியேன் பெற்றறியேன்பேதைமையால்*மாறென்றுசொல்லிவணங்கினேன்
ஏறின்பெருத்தெருத்தங்கோடொசியப் பெண்ணசையின்பின்போய் * எருத்திறுத்தநல்லாயரேறு. 62

ஏறேழும் வென்றடர்த்தவெந்தை * எரியுருவத்தேறெறிபட்டவிடுசாபம் * பாறேறி
யுண்டதலைவாய்நிறையக் கோட்டங்கையொண்குருதி * கண்டபொருள்சொல்லில்கதை. 63

கதையும்பெரும்பொருளும்கண்ணா * நின்பேரே இதயமிருந்தவையேயேத்தில்*
கதையின் திருமொழியாய்நின்ற திருமாலே * உன்னைப்பருமொழியால்காணப்பணி. 64

பணிந்தேன் திருமேனி பைங்கமலம்கையால்* அணிந்தேனுன்சேவடிமேலன்பாய்*
துணிந்தேன்புரிந்தேத்தியுன்னைப் புகலிடம்பார்த்து * ஆங்கே யிருந்தேத்திவாழுமிது. 65

இதுகண்டாய்நன்னெஞ்சே யிப்பிறவியாவது * இதுகண்டாயெல்லாம்நாமுற்றது *
இதுகண்டாய்நாரணன்பேரோதி நரகத்தருகணையா * காரணமும்வல்லையேல்காண். 66

கண்டேன்திருமேனி யான்கனவில்*ஆங்கவன்கைக்கண்டேன் கனலுஞ்சுடராழி* கண்டேன்
உறுநோய்வினையிரண்டும் ஓட்டுவித்து * பின்னும்மறுநோய்செறுவான்வலி. 67

வலிமிக்கவாளெயிற்று வாளவுணர்மாள * வலிமிக்கவாள்வரைமத்தாக *
வலிமிக்கவாளைகஞ்சுற்றி மறுகக்கடல்கடைந்தான் * கோளரிகங்கொம்பொசித்தகோ. 68

கோவாகி மாநிலங்காத்து * நங்கண்முகப்பே மாவேகிச்செல்கின்றமன்னவரும் *
பூமேவும்செங்கமலநாபியான் சேவடிக்கேயேழ்பிறப்பும் * தண்கமலமேய்ந்தார்தமர். 69

தமருள்ளம்தஞ்சை தலையரங்கம்தண்கால் * தமருள்ளுந்தண்பொருப்புவேலை *
தமருள்ளும்மாமல்லைகோவல் மதிள்குடந்தையென்பரே * ஏவல்லவெந்தைக்கிடம். 70

இடங்கைவலம்புரிநின்றார்ப்ப * எரிகான்றடங்கார் ஒடுங்குவித்ததாழி *
விடங்காலும்தீவாயரவணைமேல் தோன்றல்திசையளப்பான் * பூவாரடிநிமிர்த்தபோது. 71

போதறிந்துவானரங்கள் பூஞ்சுனைபுக்கு * ஆங்கலர்ந்தபோதரிந்துகொண்டேத்தும்போது*
உள்ளம்போதுமணிவேங்கடவன் மலரடிக்கேசெல்ல * அணிவேங்கடவன்பேராய்ந்து. 72

ஆய்ந்துரைப்பனாயிரம்பேர் ஆதிநடுவந்திவாய் * வாய்ந்தமலர்தூவிவைகலும் *
ஏய்ந்தபிறைக்கோட்டுச்செங்கண் கரிவிடுத்தபெம்மான்* இறைக்காட்படத்துணிந்தயான். 73

யானேதவஞ்செய்தேன் ஏழ்பிறப்புமெப்பொழுதும் * யானேதவமுடையேனெம்பெருமான் *
யானேஇருந்தமிழ்நன்மாலை யிணையடிக்கேசொன்னேன் * பெருந்தமிழனல்லேன்பெரிது. 74

பெருகுமதவேழம் மாப்பிடிக்குமுன்னின்று * இருகணிளமூங்கில்வாங்கி *
அருகிருந்ததேன்கலந்துநீட்டும் திருவேங்கடங்கண்டீர்* வான்கலந்தவண்ணன்வரை. 75

வரைச்சந்தனக்குழம்பும வான்கலனும்பட்டும் * விரைப்பொலிந்தவெண்மல்லிகையும்
நிரைத்துக்கொண்டு * ஆதிக்கண்நின்ற அறிவனடியிணையே * ஓதிப்பணிவதுறும். 76

உறுங்கண்டாய்நன்னெஞ்சே உத்தமன்நற்பாதம் * உறுங்கண்டாயொண்கமலந்தன்னால் *
உறுங்கண்டாயேத்திப்பணிந்தவன்பேர் ஈரைஞ்ஞூறெப்பொழுதும்* சாத்தியுரைத்தல்தவம். 77

தவஞ்செய்து நான்முகனேபெற்றான் * தரணிநிவர்ந்தளப்ப நீட்டியபொற்பாதம் *
சிவந்ததன்கையனைத்துமாரக் கழுவினான் * கங்கைநீர்பெய்தனைத்துப்பேர்மொழிந்துபின். 78

பின்னின்று தாயிரப்பக்கேளான் * பெரும்பணைத்தோள்முன்னின்று தானிரப்பாள்மொய்மலராள் *
சொல்நின்றதோள்நலத்தான் நேரில்லாத்தோன்றல்* அவனளந்தநீணிலந்தானத்தனைக்கும்நேர்.

நேர்ந்தேனடிமை நினைந்தேனதொண்கமலம் * ஆர்ந்தேனுன்சேவடிமேலன்பாய் *
ஆர்ந்தவடிக்கோலம் கண்டவர்க்கென்கொலோ * முன்னைப்படிக்கோலம்கண்டபகல். 80

பகல்கண்டேன் நாரணனைக்கண்டேன் * கனவில்மிகக்கண்டேன் மீண்டவனைமெய்யே *
மிகக்கண்டேன், ஊன்திகழுநேமி ஒளிதிகழுஞ்சேவடியான் * வான்திகழுஞ்சோதிவடிவு. 81

வடிக்கோலவாள்நெடுங்கண் மாமலராள் * செவ்விப்படிக்கோலம் கண்டகலாள்பன்னாள் *
அடிக்கோலிஞாலத்தாள்பின்னும் நலம்புரிந்ததென்கொலோ * கோலத்தாலில்லைகுறை. 82

குறையாகவெஞ்சொற்கள் கூறினேன்கூறி * மறையாங்கெனவுரைத்தமாலை *
இறையேனுமீயுங்கொலென்றே யிருந்தேனெனைப்பகலும் * மாயன்கண்சென்றவரம். 83

வரங்கருதித்தன்னை வணங்காதவன்மை * உரங்கருதிமூர்க்கத்தவனை *
நரங்கலந்தசிங்கமாய்க்கீண்ட திருவனடியிணையே * அங்கண்மாஞாலத்தமுது. 84

அமுதென்றும்தேனென்றும் ஆழியானென்றும் * அமுதன்றுகொண்டுகந்தானென்றும் *
அமுதன்னசொன்மாலையேத்தித் தொழுதேன்சொலப்பட்ட* நன்மாலையேத்திநவின்று. 85

நவின்றுரைத்தநாவலர்கள் நாண்மலர்கொண்டு* ஆங்கேபயின்றதனால்பெற்றபயனென்கொல்*
பயின்றார்தம்மெய்த்தவத்தால் காண்பரிய மேகமணிவண்ணனை * யானெத்தவத்தால்காண்பன்கொலின்று. 86

இன்றாவறிகின்றேனல்லேன் * இருநிலத்தைச்சென்றாங்களந்ததிருவடியை * அன்று
அரங்கக்கோட்டியுள்கிடந்து கைதொழுதேன்கண்டேன் * திருக்கோட்டியெந்தைதிறம். 87

திறம்பிற்றினியறிந்தேன் தென்னரங்கத்தெந்தை * திறம்பாவழிசென்றார்க்கல்லால்*
திறம்பாச்செடிநரகைநீக்கித் தாம்செல்வதன்முன் * வானோர்கடிநகரவாசற்கதவு. 88

கதவிக்கதஞ்சிறந்த கஞ்சனைமுன்காய்ந்து * அதவிப்போர்யானையொசித்து * பதவியாய்ப்
பாணியால்நீரேற்றுப் பண்டொருகால்மாவலியை * மாணியாய்க்கொண்டிலையேமண். 89

மண்ணுலகமாளேனே வானவர்க்கும்வானவனாய் * விண்ணுலகம்தன்னகத்துமேவேனே *
நண்ணித்திருமாலைச் செங்கணெடியானை * எங்கள்பெருமானைக்கைதொழுதபின். 90

பின்னாலருநரகம் சேராமல்பேதுறுவீர் * முன்னால்வணங்கமுயல்மினோ *
பன்னூலளந்தானைக் கார்க்கடல்சூழ்ஞாலத்தை * எல்லாமளந்தானவன்சேவடி. 91

அடியால்முன்கஞ்சனைச்செற்று * அமரரேத்தும்படியான் கொடிமேல்புள்கொண்டான் *
நெடியான்றன்நாமமே யேத்துமின்களேத்தினால்* தாம்வேண்டும்காமமேகாட்டும்கடிது. 92

கடிதுகொடுநரகம் பிற்காலும்செய்கை * கொடிதென்றதுகூடாமுன்னம் * வடிசங்கம்
கொண்டானைக் கூந்தல்வாய்கீண்டானை * கொங்கைநஞ்சுண்டானையேத்துமினோவுற்று. 93

உற்றுவணங்கித்தொழுமின் * உலகேழும்முற்றும்விழுங்கும்முகில்வண்ணன் *
பற்றிப்பொருந்தாதான்மார்விடந்து பூம்பாடகத்துளிருந்தானை * ஏத்துமென்னெஞ்சு. 94

* என்னெஞ்சமேயான் என்சென்னியான் * தானவனைவன்னெஞ்சம்கீண்டமணிவண்ணன்*
முன்னம்சேயூழியான் ஊழிபெயர்த்தான் * உலகேத்துமாழியானத்தியூரான். 95

* அத்தியூரான் புள்ளையூர்வான் * அணிமணியின்துத்திசேர் நாகத்தின்மேல்துயில்வான் *
மூத்தீமறையாவான் மாகடல்நஞ்சுண்டான்றனக்கும் * இறையாவனெங்கள்பிரான். 96

எங்கள்பெருமான் இமையோர்தலைமகன்நீ * செங்கணெடுமால்திருமார்பா *
பொங்குபடமூக்கினாயிரவாய்ப் பாம்பணைமேல்சேர்ந்தாய் * குடமூக்கில்கோயிலாக்கொண்டு.

கொண்டுவளர்க்கக் குழவியாய்த்தான்வளர்ந்தது *உண்டதுலகேழுமுள்ளொடுங்க *
கொண்டுகுடமாடிக் கோவலனாய்மேவி * என்னெஞ்சமிடமாகக்கொண்டவிறை. 98

* இறையெம்பெருமானருளென்று * இமையோர்முறைநின்று மொய்மலர்கள்தூவ*
அறைகழலசேவடியான் செங்கணெடியான்*குறளுருவாய்மாவடிவின்மண்கொண்டான்மால்.

* மாலேநெடியோனேகண்ணனே*விண்ணவர்க்குமேலா வியன்துழாய்க்கண்ணியனே*
மேலால்விளவின்காய் கன்றினால்வீழ்த்தவனே * என்றனளவன்றால்யானுடையவன்பு. 100

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாந்திருவந்தாதி முற்றிற்று.

## இரண்டாந்திருவந்தாதி—அடிவரவு.

1. அன்பு ஞானத்தால் பரிசு நகரிழை, அடிமூன்றி லறிந்தைந்து கழலெடுத் துகந்து, அன்றது பேர்த்தனை கடைநின்றமரர்.
2. கடைநின் றவரிவர் தொடரெடு பண்டி, திரிந்தது தனக்கடி மற்றார் கொண்டது, வழக்கன் றுகண்டாய் பழிபாவம் தாமுளரே.

3. தாமுள ரரியது தாழ்ந்தவன்கண்டாய், சென்றது வந்தித்துப் பதியமை மனத்துவேம், மகளுக நீயன்றுலகு பிரானென்று.

*4. பிரானென்று மகிழ்ந்தது துணிந்தது வகையால, இனிதென்பர் சிறியார் இருந்தண் எமக்கென்று, ஒத்தின் சுருக்காகப பொருளாலமரு.

5. பொருளால் நினைப்பன் தோளிரண் சிறந்தார்க்கு, உளதென்று பயின்றது மாலையரி உணர்ந்தாய், மலையேழு மழைப்பன்திருமாலை மதிக்கண்டாய்.

6. மதி நிறங்கரியன் நெறியார் வெற்பென்றிரும், என்று மறந்தறி காணக்கழி திருமங்கை, நாம்பெற் றருள்புரி ஓருரு நின்றதோர்.

7. நின்றதோர் பேருரன் றேறேழும் கதையும், பணிந்தே னிதுகண்டாய் கண்டேன் வலிமிக்க, கோவாகித் தமருள்ளந்தஞ்சை யிடங்கை.

8. இடங்கை போதறிந் தாய்ந்துரை யானேதவம், பெருகுமத வரைச்சங் துறுங்கண்டாய் தவம்பெற்றுன், பின்னின்று நேர்ந்தேன் பகற்கண்டேன்.

9. பகல் வடிக்கோலக் குறையாக வரங்கருதி, அமுதென்றும் நவின்றுரை இன்ருவறி திறம்பிற்று, கதவிக்கத மண்ணுலகம் பின்னுலருநரகம்.

10. பின்னு லடியால்முன் கடிதுற்றுவணங்கி, என்னெஞ்ச மத்தியூ ரெங்கள்பெருமான், கொண்டுவளர்க்க இறை மாலன்பே.

---

### பேயாழ்வாரருளிச்செய்த

# மூன்றாந் திருவந்தாதி.

---

### தனியன்

*சீராரும்மாடத் திருக்கோவலூரதனுள், காரார் கருமுகிலைக் காணப்புக்கு—ஓராத்*
*திருக்கண்டே னென்றுரைத்த சீரான் கழலே, உரைக்கண்டாய் நெஞ்சே யுகந்து.*

---

*திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் * திகழுமருக்கனணிநிறமுங்கண்டேன் *
செருக்கிளரும்பொன்னாழிகண்டேன் புரிசங்கங்கைக்கண்டேன்* என்னாழிவண்ணன்பாலின்று. 1

இன்றேகழல்கண்டேன் ஏழ்பிறப்புமயானறுத்தேன் * பொன்தோய்வரைமார்பில்பூந்துழாய்*
அன்றுதிருக்கண்டுகொண்ட திருமாலே * உன்னைமருக்கண்டுகொண்டென்மனம். 2

மனத்துள்ளான் மாகடல்நீருள்ளான்* மலராள்தனத்துள்ளான் தண்டுழாய்மார்வன்*
சினத்துச்செருநர்உகச்செற்றுகந்த தேங்கோதவண்ணன் * வருநரகம்தீர்க்கும்மருந்து. 3

மருந்தும்பொருளும் அமுதமும்தானே * திருந்தியசெங்கண்மாலரங்கே *
பொருந்தியநின்றுலகமுண்டுமிழ்ந்து நீரேற்றுமூவடியால் * அன்றுலகம்தாயோனடி. 4

அடிவண்ணம்தாமரை அன்றுலகம்தாயோன் * படிவண்ணம்பார்க்கடல்நீர்வண்ணம் *
முடிவண்ணமோராழிவெய்யோன் ஒளியுமஃதன்றே * ஆராழிகொண்டாற்கழகு. 5

அழகன்றேயாழியாற்கு ஆழிநீர்வண்ணம் * அழகன்றேயண்டம்கடத்தல் *
அழகன்றேஅங்கைநீரேற்றாற்கு அலர்மேலோன்கால்கழுவ * கங்கைநீர்கான்றகழல். 6

கழல்தொழுதும்வாநெஞ்சே கார்க்கடல்நீர்வேலை * பொழிலளந்தபுள்ளூர்திச்செல்வன் *
எழிலளந்தங்கெண்ணற்கரியானை எப்பொருட்கும்சேயானை * நண்ணற்கரியானைநாம். 7

நாமம்பலசொல்லி நாராயணாவென்று * நாம்அங்கையால்தொழுதும்நன்னெஞ்சேவா *
மருவிமண்ணுலகமுண்டுமிழ்ந்த வண்டறையுந்தண்டுழாய் * கண்ணனையேகாண்கநங்கண். 8

கண்ணுங்கமலம் கமலமேகைத்தலமும் * மண்ணளந்தபாதமும்மற்றவையே *
எண்ணிற்கருமாமுகில்வண்ணன் கார்க்கடல்நீர்வண்ணன் * திருமாமணிவண்ணன்தேசு. 9

தேசுந்திறலும் திருவுமுருவமும் * மாசில்குடிபிறப்பும்மற்றவையும்—பேசில் *
வலம்புரிந்தவான்சங்கம் கொண்டான்பேரோத * நலம்புரிந்துசென்றடையும்நன்கு. 10

நன்கோதும் நால்வேதத்துள்ளான்*நறவிரியும்பொங்கோதருவிப்புனல்வண்ணன் * சங்கோதப்
பாற்கடலான் பாம்பணையின்மேலான் * பயின்றுரைப்பார் நூற்கடலான் நுண்ணறிவினான். 11

அறிவென்னுந்தாள்கொளுவி ஐம்புலனுந்தம்மில் * செறிவென்னுந்திண்கதவஞ்செம்மி *
மறையென்றும்நன்கோதி நன்குணர்வார்காண்பரே * நாடோறும்பைங்கோதவண்ணன்படி.

படிவட்டத்தாமரை பண்டுலகம்நீரேற்று * அடிவட்டத்தாலளப்பநீண்டமுடிவட்டம் *
ஆகாயமூடறுத்து அண்டம்போய்நீண்டதே * மாகாயமாய்நின்றமாற்கு. 13

மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு * நூற்பால்மனம்வைக்கநொய்விதாம் *
நாற்பாலவேதத்தான்வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும்*பாதத்தான்பாதம்பணிந்து. 14

பணிந்துயர்ந்தபௌவப் படுதிரைகள்மோத* பணிந்தபணமணிகளாலேயணிந்து*
அங்கனந்தணைக் கிடக்குமம்மான் * அடியேன்மனந்தனணைக்கிடக்கும்வந்து. 15

வந்துதைத்தவெண்டிரைகள் செம்பவளவெண்முத்தம் * அந்திவிளக்குமணிவிளக்காம் *
எந்தையொருவல்லித்தாமரையாள் ஒன்றியசீர்மார்பன் * திருவல்லிக்கேணியான்சென்று. 16

சென்றநாள்செல்லாத செங்கண்மாலெங்கள்மால் * என்றநாளெந்நாளும்நாளாகும் *
என்றுமிறவாதவெந்தை யிணையடிக்கேயாளாய் * மறவாதுவாழ்த்துகவென்வாய். 17

வாய்மொழிந்துவாமனனாய் மாவலிபால் * மூவடிமண்நீயளந்துகொண்டநெடுமாலே *
தாவியநின்னஞ்சாவிணையடிக்கே யேழ்பிறப்புமாளாகி* அஞ்சாதிருக்கவருள். 18

அருளாதொழியுமே ஆலிலைமேல் * அன்றுதெருளாதபிள்ளையாய்ச்சேர்ந்தான் *—இருளாத
சிந்தையராய்ச்சேவடிக்கே செம்மலர்தூய்க்கைதொழுது * முந்தையராய்நிற்பார்க்குமுன். 19

முன்னுலகம் உண்டுமிழ்ந்தாய்க்கு* அவ்வுலகமீரடியால் பின்னளந்துகோடல்பெரிதொன்றே*
என்னேதிருமாலே செங்கணெடியானே * எங்கள்பெருமானேநீயிதனைப்பேசு. 20

பேசுவார் எவ்வளவுபேசுவர் * அவ்வளவேவாசமலர்த்துழாய்மாலையான் *
தேசுடையசக்கரத்தான் சங்கினான்சார்ங்கத்தான் * பொங்கரவவக்கரனைக்கொன்றான்வடிவு.

வடிவார்முடிகோட்டி வானவர்கள் * நாளும்கடியார்மலர்தூவிக் காணும்படியானை *
செம்மையாலுள்ளுருகிச் செவ்வனேநெஞ்சமே * மெய்ம்மையேகாணவிரும்பு. 22

விரும்பிவிண்மண்ணளந்த அஞ்சிறையவண்டார் * சுரும்புதுளையில்சென்றூத *
அரும்பும்புனந்துழாய்மாலையான் பொன்னங்கழற்கே * மனந்துழாய்மாலாய்வரும். 23

வருங்காலிருநிலனும் மால்விசும்புங்காற்றும் * நெருங்குதீநீருருவுமானான் *
பொருந்தும்சுடராழியொன்றுடையான் சூழ்கழலே * நாளும்தொடராழிநெஞ்சேதொழுது.

தொழுதால்பழுதுண்டே தூநீருலகம் * முழுதுண்டுமொய்குழலாளாய்ச்சி *
விழுதுண்டவாயானை மால்விடையேழ்செற்றானை * வானவர்க்கும்சேயானைநெஞ்சேசிறந்து.

சிறந்தவென்சிந்தையும் செங்கணரவும் * நிறைந்தசீர்நீள்கச்சியுள்ளும் *
உறைந்ததுவும்வேங்கடமும்வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமே * தாங்கடவார்தண்டுழாயார்.

ஆரேதுயருழந்தார் துன்புற்றார்யாண்டையார் * காரேமலிந்தகருங்கடலை *
நேரேகடைந்தானைக் காரணனை * நீரணைமேல்பள்ளியடைந்தானைநாளுமடைந்து. 27

அடைந்ததரவணைமேல் ஐவர்க்காய் * அன்றுமிடைந்தது பாரதவெம்போர் *
உடைந்ததுவுமாய்ச்சிபால்மத்துக்கே அம்மனே * வாளெயிற்றுப்பேய்ச்சிபாலுண்டபிரான்.

பேய்ச்சிபாலுண்ட பெருமானைப்பேர்ந்தெடுத்து * ஆய்ச்சிமுலைகொடுத்தாளஞ்சாதே *
வாய்த்தவிருளார்திருமேனி யின்பவளச்செவ்வாய் * தெருளாமொழியானைச்சேர்ந்து. 29

சேர்ந்ததிருமால் கடல்குடந்தைவேங்கடம் * நேர்ந்தவென்சிந்தைநிறைவிசும்பும் *
வாய்ந்தமறைபாடகமனந்தன் வண்டுழாய்க்கண்ணி * இறைபாடியாயவிவை. 30

இவையவன்கோயில் இரணியனதாகம் * அவைசெய்தரியுருவமானான் *
செவிதெரியாநாகத்தான் நால்வேதத்துள்ளான் * நறவேற்றான்பாகத்தான்பாற்கடலுளான்.

பாற்கடலும்வேங்கடமும் பாம்பும்பனிவிசும்பும் * நூற்கடலும்நுண்ணூலதாமரைமேல் *
பாற்பட்டிருந்தார்மனமும் இடமாகக்கொண்டான் * குறுந்தொசித்தகோபாலகன். 32

பாலகனாய் ஆலிலைமேல்பைய * உலகெல்லாம்மேலொருநாள் உண்டவனேமெய்ம்மையே *
மாலவனேமந்தரத்தால் மாநீர்க்கடல்கடைந்து* வானமுதமந்தரத்தார்க்கீந்தாய்நீயன்று. 33

அன்றிவ்வுலகம் அளந்தவசவேகொல் * நின்றிருந்துவேளுக்கைநீணகர்வாய் *
அன்றுகிடந்தானைக் கேடில்சீரானை * முன்கஞ்சைக்கடந்தானைநெஞ்சமேகாண். 34

காண்காணெனவிரும்பும்கண்கள் * கதிரிலகுபூண்டாரகலத்தான்பொன்மேனி * பாண்கட்
டொழில்பாடி வண்டறையும்தொங்கலான் * செம்பொற்கழல்பாடியாம்தொழுதும்கை. 35

கையகனலாழி கார்க்கடல்வாய்வெண்சங்கம் * வெய்யகதைசார்ங்கம்வெஞ்சுடர்வாள் *
செய்யபடைபரவைபாழி பனிநீருலகம் * அடியளந்தமாயரவர்க்கு. 36

அவற்கடிமைபட்டேன் அகத்தான்புறத்தான்* உவர்க்குங்கருங்கடல்நீருள்ளான் *
துவர்க்கும்பவளவாய்ப்பூமகளும் பன்மணிப்பூணாரம் * திகழுந்திருமார்வன்தான். 37

தானேதனக்குவமன் தன்னுருவேயெவ்வுருவும் * தானேதவவுருவும்தாரகையும் *
தானேயெரிசுடரும்மால்வரையும் எண்டிசையும் * அண்டத்திருசுடருமாயவிறை. 38

இறையாய்நிலனாகி யெண்டிசையுந்தானாய் * மறையாய்மறைப்பொருளாய்வானாய் *
பிறைவாய்ந்தவெள்ளத்தருவி விளங்கொலிநீர்வேங்கடத்தான் * உள்ளத்தினுள்ளேயுளன். 39

உளன்கண்டாய்நன்னெஞ்சே உத்தமனென்றுமுளன் கண்டாய் * உள்ளுவாருள்ளத்
துளன்கண்டாய் * விண்ணெடுங்கக்கோடுயரும் வீங்கருவிவேங்கடத்தான் *
மண்ணெடுங்கத்தானளந்தமன். 40

மன்னுமணிமுடிநீண்டு அண்டம்போயெண்டிசையும் * துன்னுபொழிலனைத்துஞ்சூழ்கழலே *
மின்னையுடையாகக்கொண்டு அன்றுலகளந்தான் * குன்றம்குடையாகவாகாத்தகோ. 41

கோவலனாய் ஆநிரைகள்மேய்த்துக்குழலூதி * மாவலனாய்க்கீண்டமணிவண்ணன் *
மேவியரியுருவமாகி இரணியனதாகம் * தெரியுகிரால்கீண்டான்சினம். 42

சினமாமதகளிற்றின் திண்மருப்பைச்சாய்த்து * புனமேயபூமியதனை *
தனமாகப்பேரகலத்துள்ளொடுக்கும் பேராரமார்வனார் * ஓரகலத்துள்ளதுலகு. 43

உலகமுமூழியுமாழியும் * ஒண்கேழலர்கதிரும் செந்தீயுமாவான் *
பலகதிர்கள்பாரித்த பைம்பொன்முடியானடியிணைக்கே * பூரித்தென்னெஞ்சேபுரி. 44

புரிந்துமதவேழம் மாப்பிடியோடூடி * திரிந்துசினத்தால்பொருது * — விரிந்தசீர்
வெண்கோட்டுமுத்துதிர்க்கும் வேங்கடமே * மேலொருநாள்மண்கோட்டுக்கொண்டான்மலை.

மலைமுகடுமேல்வைத்து வாசுகியைச்சுற்றி * தலைமுகடுதானொருகைபற்றி *
அலைமுகட்டண்டம்போய்நீர்தெறிப்ப அன்றுகடல்கடைந்தான் * பிண்டமாய்நின்றபிரான்.

நின்றபெருமானே நீரேற்று * உலகெல்லாம்சென்றபெருமானேசெங்கண்ணா *
அன்றுதுரகவாய்கீண்ட துழாய்முடியாய் * நங்கள்நரகவாய்கீண்டாயும்நீ. 47

நீயன்றேநீரேற்று உலகமடியளந்தாய் * நீயன்றேநின்றுநிரைமேய்த்தாய் *
நீயன்றேமாவாயுரம்பிளந்து மாமருதினூடுபோய் * தேவாசுரம்பொருதாய்செற்று. 48

செற்றதுவும் சேராவிரணியனை * சென்றேற்றுப்பெற்றதுவும் மாநிலம்பின்னைக்காய் *
முற்றல்முரியேற்றின் முன்னின்றுமொய்ம்பொழித்தாய் * மூரிச்சுரியேறுசங்கினாய்சூழ்ந்

சூழ்ந்ததுழாயலங்கல் சோதிமணிமுடிமால் * தாழ்ந்தவருவித்தடவரைவாய் *
ஆழ்ந்தமணிநீர்ச்சுனைவளர்ந்த மாமுதலைகொன்றான் * அணிநீலவண்ணத்தவன். 50

அவனேயருவரையால் ஆநிரைகள்காத்தான் * அவனேயணிமருதம்சாய்த்தான் *
அவனேகலங்காப்பெருநகரம் காட்டுவான்கண்டீர் * இலங்காபுரமெரித்தானெய்து. 51

எய்தான்மராமரம் ஏழுமிராமனாய் * எய்தானம்மான்மறியையேந்திழைக்காய் *
எய்ததுவும்தென்னிலங்கைக்கோன்வீழச் சென்றுகுறளுருவாய் * முன்னிலம்கைக்கொண்
டான்முயன்று. 52

முயன்றுதொழுநெஞ்சே மூரிநீர்வேலை * இயன்றமரத்தாலிலையின்மேலால் *
பயின்றங்கோர்மண்ணலங்கொள்வெள்ளத்து மாயக்குழவியாய் * தண்ணலங்கல்மாலையான்தாள். 53

தாளால்சகடம் உதைத்துப்பகடுந்தி * கீளாமருதிடைபோய்க்கேழலாய் *
மீளாதுமண்ணகலம்கீண்டு அங்கோர்மாதுகந்தமார்வற்கு * பெண்ணகலம்காதல்பெரிது. 54

பெரியவரைமார்வில் பேராரம்பூண்டு * கரியமுகிலிடைமின்போல *
திரியுங்கால்பாணொடுங்கவண்டறையும் பங்கயமே * மற்றவன்றன்நீணெடுங்கண்காட்டும்நிறம்.

நிறம்வெளிதுசெய்து பசிதுகரிதென்று * இறையுருவம்யாமறியோமெண்ணில்*
நிறைவுடையநாமங்கைதானும் நலம்புகழவல்லளே * பூமங்கைகேள்வன்பொலிவு. 56

பொலிந்திருண்டகார்வானில் மின்னேபோல்தோன்றி * மலிந்துதிருவிருந்தமார்வன்*
பொலிந்தகருடன்மேல்கொண்ட கரியான்கழலே * தெருடன்மேல்கண்டாய்தெளி. 57

தெளிந்தசிலாதலத்தின் மேலிருந்தமந்தி * அளிந்தகடுவனையேநோக்கி *—விளங்கிய
வெண்மதியம்தாவென்னும் வேங்கடமே* மேலொருநாள்மண்மதியில்கொண்டுகந்தான்வாழ்வு.

வாழும்வகையறிந்தேன் மைபோல்நெடுவரைவாய் * தாழுமருவிபோல்தார்கிடப்ப *
சூழும்திருமாமணிவண்ணன் செங்கண்மால் * எங்கள்பெருமானடிசேரப்பெற்று. 59

பெற்றம்பிணைமருதம் பேய்முலைமாச்சகடம் * முற்றக்காத்தூடுபோயுண்டுதைத்து * கற்றுக்
குணிலை விளங்கனிக்குக்கொண்டெறிந்தான் * வெற்றிப்பணிலம்வாய்வைத்துகந்தான்பண்டு.

பண்டெல்லாம்வேங்கடம் பாற்கடல்வைகுந்தம் * கொண்டங்குறைவார்க்குக்கோயில்போல்*
வண்டுவளங்கிளரும்நீள்சோலை வண்பூங்கடிகை * இளங்குமரன்றன்விண்ணகர். 61

விண்ணகரம்வெஃகா விரிதிரைநீர்வேங்கடம் * மண்ணகரம்மாமாடவேளுக்கை *
மண்ணகத்ததென்குடந்தை தேனார்திருவரங்கம்தென்கோட்டி * தன்குடங்கைநீரேற்றான்தாழ்வு.

தாழ்சடையும்நீண்முடியும் ஒண்மழுவும்சக்கரமும் * சூழரவும்பொன்னாணும்தோன்றுமால் *
சூழும்திரண்டருவிபாயும் திருமலைமேலெந்தைக்கு * இரண்டுருவுமொன்றாயிசைந்து. 63

இசைந்தவரவமும் வெற்புங்கடலும் * பசைந்தங்கமுதுபடுப்ப *
அசைந்துகடைந்தவருத்தமோ கச்சிவெஃகாவில் * கிடந்திருந்துநின்றதுவுமங்கு. 64

அங்கற்கிடரின்றி அந்திப்பொழுதத்து * மங்கவிரணியனதாகத்தை *
பொங்கியரியுருவமாய்ப்பிளந்த அம்மானவனே*கரியுருவம்கொம்பொசித்தான்காய்ந்து. 65

காய்ந்திருளைமாற்றிக் கதிரிலகுமாமணிகள் * ஏய்ந்தபணக்கதிர்மேல்வெவ்வுயிர்ப்ப*
வாய்ந்தமதுகைடபரும் வயிறுருகிமாண்டார் * அதுகேடவர்க்கிறுதியாங்கு. 66

ஆங்குமலரும் குவியுமாலுந்திவாய் * ஓங்குகமலத்தினொண்போது *
ஆங்கைத்திகிரிசுடரென்றும் வெண்சங்கம் * வானில்பகருமதியென்றும்பார்த்து. 67

பார்த்தகடுவன் சுனைநீர்நிழற்கண்டு * பேர்த்தோர்கடுவனெனப்பேர்ந்து *—கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும்வேங்கடமே * மேனான்விளங்கனிக்குக்கன்றெறிந்தான்வெற்பு. 68

வெற்பென்று வேங்கடம்பாடும்*வியன்துழாய்கற்பென்றுசூடும்கருங்குழல்மேல் *
மற்பொன்றநீண்டதோள்மால்கிடந்த நீள்கடல்நீராடுவான் * பூண்டநாளெல்லாம்புகும். 69

புகுமதத்தால் வாய்பூசிக்கீழ்தாழ்ந்து * அருவியுகுமதத்தால் கால்கழுவிக்கையால்*
மிகுமதத்தேன்விண்டமலர்கொண்டு விறல்வேங்கடவனையே * கண்டுவணங்கும்களிறு. 70

களிறுமுகில்குத்தக் கையெடுத்தோடி * ஒளிறுமருப்பொசிகையாளி—பிளிறிவிழ *
கொன்றுநின்றதிரும் வேங்கடமே * மேனாள்குழக்கன்றுகொண்டெறிந்தான்குன்று. 71

குன்றொன்றினாய குறமகளிர்கோல்வளைக்கை * சென்றுவிளையாடும்தீங்கழைபோய்*
வென்றுவிளங்குமதிகோள்விடுக்கும் வேங்கடமே * மேலையிளங்குமரர்கோமானிடம். 72

இடம்வலமேழ்பூண்ட இரவித்தேரோட்டி * வடமுகவேங்கடத்துமன்னும்*
குடநயந்தகூத்தனாய்நின்றான் குரைகழலேகூறுவதே * நாத்தன்னாலுள்ளநலம். 73

நலமேவலிதுகொல் நஞ்சூட்டுவன்பேய் * நிலமேபுரண்டுபோய்வீழ *—சலமேதான் *
வெங்கொங்கையுண்டானை மீட்டாய்ச்சியூட்டுவான்*தன்கொங்கைவாய்வைத்தான்சார்ந்து. 74

சார்ந்தகடுதேய்ப்பத் தடாவியகோட்டுச்சிவாய்* ஊர்ந்தியங்கும்வெண்மதியினொண்முயலை*
சேர்ந்துசினவேங்கைபார்க்கும் திருமலையே* ஆயன்புனவேங்கைநாறும்பொருப்பு. 75

பொருப்பிடையேநின்றும் புனல்குளித்தும்* ஐந்துநெருப்பிடையே நிற்கவும்நீர்வேண்டா*
விருப்புடையவெஃகாவேசேர்ந்தானை மெய்ம்மலர்தூய்க்கைதொழுதால்*
அஃகாவே தீவினைகளாய்ந்து. 76

ஆய்ந்தவருமறையோன் நான்முகத்தோன்நன்குறங்கில்* வாய்ந்தகுழவியாய்வாளரக்கன் *
ஏய்ந்தமுடிப்போது மூன்றேழென்றெண்ணினான்* ஆர்ந்தவடிப்போதுநங்கட்கரண். 77

அரணாம்நமக்கென்றும் ஆழிவலவன் * முரணாள்வலஞ்சுழிந்தமொய்ம்பன்*
சரணாமேலேதுகதியேதுநிலை யேதுபிறப்பென்னாதே * ஓதுகதிமாயனையேயோர்த்து. 78

ஓர்த்தமனத்தராய் ஐந்தடக்கியாராய்ந்து* பேர்த்தால்பிறப்பேழும்பேர்க்கலாம்*
கார்த்தவிரையார்நறுந்துழாய் வீங்கோதமேனி* நிரையாரமார்வனையேநின்று. 79

நின்றெதிராய நிரைமணித்தேர்வாணன்தோள்* ஒன்றியவீரைஞ்ஞூறுடன்துணிய*
வென்றிலங்குமார்படுவான்நேமி அரவணையான்சேவடிக்கே * நேர்படுவான்தான்முயலும்
நெஞ்சு. 80

நெஞ்சால்நினைப்பரியனேலும் * நிலைப்பெற்றென்னெஞ்சமேபேசாய் நினைக்குங்கால்*
நெஞ்சத்துப்பேராதுநிற்கும் பெருமானையென்கொலோ* ஓராதுநிற்பதுணர்வு. 81

உணரிலுணர்வரியன் உள்ளம்புகுந்து* புணரிலும்காண்பரியனுண்மை * இணரணையக்
கொங்கணைந்துவண்டறையும் தண்டுழாய்க்கோமானை* எங்கணைந்துகாண்டுமினி. 82

இனியவன்மாயன் எனவுரைப்பரேலும் * இனியவன்காண்பரியனேலும்*
இனியவன்கள்ளத்தால்மண்கொண்டு விண்கடந்தபைங்கழலான்*உள்ளத்தினுள்ளேயுளன். 83

உளனாய நான்மறையினுட்பொருளை * உள்ளத்துளனாகத் தேர்ந்துணர்வரேலும்*
உளனாயவண்டாமரைநெடுங்கண் மாயவனையாவரே* கண்டாருகப்பர்கவி. 84

கவியினார்கைபுனைந்து கண்ணார்கழல்போய்* செவியினார்கேள்வியராய்ச்சேர்ந்தார்*
புவியினார்போற்றியுரைக்கப் பொலியுமே * பின்னைக்காயேற்றுயிரையட்டானெழில். 85

எழில்கொண்ட மின்னுக்கொடியெடுத்து*வேகத்தொழில்கொண்டுதான்முழங்கித்தோன்றும்*
எழில்கொண்டநீர்மேகமன்ன நெடுமால்நிறம்போல* கார்வானம்காட்டும்கலந்து. 86

கலந்துமணியிமைக்கும்கண்ணா * நின்மேனிமலர்ந்து மரதகமேகாட்டும்*
நலந்திகழும்கொந்தின்வாய்வண்டறையும் தண்டுழாய்க்கோமானை* அந்திவான்காட்டுமது. 87

அதுநன்றிதுதீதென்று ஐயப்படாதே* மதுநின்றதண்டுழாய்மார்வன் *
பொதுநின்றபொன்னங்கழலேதொழுமின்* முழுவினைகள்முன்னங்கழலும்முடிந்து. 88

முடிந்தபொழுதில்குறவாணர் * ஏனம்படிந்துழுசால் பைந்தினைகள்வித்த*
தடிந்தெழுந்தவேய்ங்கழைபோய் விண்திறக்கும்வேங்கடமே *
மேலொருநாள்தீங்குழல்வாய்வைத்தான்சிலம்பு. 89

சிலம்புஞ்செறிகழலும் சென்றிசைப்ப * விண்ணாறலம்பியசேவடிபோய்* அண்டம்
புலம்பியதோளெண்டிசையுஞ்சூழ இடம்போதாதென்கொலோ* வண்டுழாய்மாலளந்தமண்.

மண்ணுண்டும் பேய்ச்சிமுலையுண்டுமாற்றாதாய் * வெண்ணெய்விழுங்கவெகுண்டு*
ஆய்ச்சிகண்ணிக்கயிற்றினால்கட்டத் தான்கட்டுண்டிருந்தான் * வயிற்றினோடாற்றாமகன். 91

மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன்* மகனாமவன்மகன்றன்காதல்மகனை*
சிறைசெய்தவாணன்தோள் செற்றான்கழலே* நிறைசெய்தென்னெஞ்சேநினை. 92

நினைத்துலகிலார்தெளிவார் நீண்டதிருமால்* அனைத்துலகுமுள்ளொடுக்கியால்மேல்*
கனைத்துலவுவெள்ளத்தோர்பிள்ளையாய் மெள்ளத்துயின்றானை* உள்ளத்தேவைநெஞ்சே
யுய்த்து. 93

உய்த்துணர்வென்னும் ஒளிகொள்விளக்கேற்றி * வைத்தவனைநாடிவலைப்படுத்தேன் *
மெத்தெனவேநின்றானிருந்தான் கிடந்தானென்னெஞ்சத்து*பொன்றாமைமாயன்புகுந்து. 94

புகுந்திலங்கும் அந்திப்பொழுதத்து* அரியாயிகந்தவிரணியனதாகம் *
சுகிர்ந்தெங்குஞ்சிந்தப்பிளந்த திருமால்திருவடியே * வந்தித்தென்னெஞ்சமேவாழ்த்து. 95

வாழ்த்தியவாயராய் வானோர்மணிமகுடம்* தாழ்த்திவணங்கத்தழும்பாமே*
கேழ்த்தவடித்தாமரை மலர்மேல்மங்கைமணாளன் * அடித்தாமரையாமலர். 96

அலரெடுத்தவுந்தியான் ஆங்கெழிலாய * மலரெடுத்தமாமேனிமாயன் *
அலரெடுத்தவண்ணத்தான்மாமலரான் வார்சடையானென்று* இவர்கட்கெண்ணத்தானாமோ
விமை. 97

இமஞ்சூழ்மலையும் இருவிசும்புங்காற்றும் * அமஞ்சூழ்ந்தறவிளங்கித்தோன்றும் *
நமஞ்சூழ்நரகத்து நம்மைநணுகாமல்காப்பான் * துரகத்தைவாய்பிளந்தான்தொட்டு. 98

** தொட்டபடையெட்டும் தோலாதவென்றியான் * அட்டபுயகரத்தானந்நான்று *
குட்டத்துக்கோள்முதலைதுஞ்சக் குறித்தெறிந்தசக்கரத்தான் * தாள்முதலேநங்கட்குச்சார்வு.

** சார்வுநமக்கென்றுஞ்சக்கரத்தான் *தண்டுழாய்த்தார்வாழ் வரைமார்பன்தான்முயங்கும் *
காரார்ந்தவானமருமின்னிமைக்கும் வண்டாமரைநெடுங்கண்*தேனமரும்பூமேல்திரு. 100

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றாந்திருவந்தாதி முற்றுப்பெற்றது.

---

## மூன்றாந்திருவந்தாதி—அடிவரவு.

1. திரு வின்றே மனம் மருந்து மடிவண்ணம், அழகன் கழல்தொழு நாமங் கண்ணும்,
தேசுந்திறலு நன்கோது.

2. நன்கறிவென்னும் படிவட்ட மாற்பால், பணிந்துயர் வந்துதை சென்றநாள் வாய்மொழி,
அருளாதொழியும் முன்னுலகம் பேசுவார்.

3. பேசுவார் வடிவார் விரும்பி வருங்கால், தொழுதால் சிறந்தவென் ஆரே அடைந்தது.
   பேய்ச்சிபால் சேர்ந்ததிருமா லிவையவன்.

4. இவை பாற்கடலும் பாலக னன்றிவ்வுலகம், காண்காண் கையகன லவற்கடிமை
   தானுவமன், இறையா யுளன்விண் மன்னுமணிமுடி.

5. மன்னு கோவலனுய் சினமா வுலகமும், புரிந்துமத மலைமுகடு நின்றபெருமானே,
   நீயன்றே செற்றதுவும் சூழ்ந்ததுழா யவனே.

6. அவனே யெய்தான் முயன்று தாளாற்சகடம், பெரியவரை நிறம்வெளிது பொலிந்
   திருண் தெளிந்த, வாழும்வகை பெற்றம்பிணைமருதம் பண்டெல்லாம்.

7. பண்டு விண்ணகரம் தாழ்சடை யிசைந்த, அங்கற்கிடர் காய்ந்திருளை ஆங்குமலர்
   பார்த்த, வெற்பென்றுபாடும் புகுமதக் களிறு.

8. களிறு குன்றென்றின் இடம்வலம் நலமே, சார்ந்தகடு பொருப்பிடை ஆய்ந்தவரு
   அரணும், ஓர்த்தமன நின்றெதிர் நெஞ்சால்நினைப்பரி.

9. நெஞ்சாலுணரில் இனியவ னுளனுய கவிபின ரெழில்கொண்டு கலந்துமணி யதுநன்று,
   முடிந்தபொழுதிற் சிலம்பும் மண்ணுண்டும்.

10. மண்ணுண்டும் மகனொருவர் நினைத்துலகி லுய்த்துணர்வு, புகுந்திலங்கு வாழ்த்தியவாய்
    அலரெடுத் திமஞ்சூழ், தொட்டபடையெட்டும் சார்வு திருக்கண்டேன்.

---

திருமழிசைப்பிரானருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி.

———o———

## தனியன்

நாராயணன்படைத்தான்நான்முகனை, நான்முகனுக்கோர் சிவன்பிறந்தானென்னுஞ்சொல்
சீரார்மொழிசெப்பி வாழலாம்நெஞ்சமே! மொய்பூமழிசைப்பானடியே வாழ்த்து.

---

*நான்முகனை நாராயணன்படைத்தான்* நான்முகனும்தான்முகமாய்ச்சங்கரனைத்தான்படைத்தான்*
யான்முகமாயந்தாதிமேலிட்டு அறிவித்தேனாழ்பொருளை* சிந்தாமல்கொண்மினீர்தேர்ந்து. 1

தேருங்கால்தேவன் ஒருவனேயென்றுரைப்பர் *ஆருமறியாரவன்பெருமை *
ஓரும்பொருள்முடிவுமித்தனையே எத்தவஞ்செய்தார்க்கும் * அருள்முடிவதாழியான்பால். 2

பாலிற்கிடந்ததுவும் பண்டரங்கம்மேயதுவும்* ஆலில்துயின்றதுவுமாரறிவார்? *
ஞாலத்தொருபொருளை வானவர்தம்மெய்ப்பொருளை * அப்பிலருபொருளையானறிந்தவாறு. 3

ஆறுசடைக்கரந்தான் அண்டர்கோன்தன்னோடும்* கூறுடையனென்பதுவும்கொள்கைத்தே*
வேறொருவரில்லாமைநின்றானை எம்மானை * எப்பொருட்கும்சொல்லானைச்சொன்னேன்
தொகுத்து. 4

தொகுத்தவரத்தனாய்த் தோலாதான்மார்வம் * வகிர்த்தவளையுகிர்த்தோள்மாலே! *
உகத்திலொருநான்றுநீயுயர்த்தி உள்வாங்கிநீயே * அருநான்குமானாயறி. 5

அறியார்சமணர் அயர்த்தார்பவுத்தர் * சிறியார்சிவப்பட்டார்செப்பில் *
வெறியாயமாயவனைமாலவனை மாதவனையேத்தாதார் * ஈனவரேயாதலாலின்று. 6

இன்றாக நாளையேயாக * இனிச்சிறிதுநின்றாக நின்னருளென்பாலதே *
நன்றாகநானுன்னை யன்றியிலேன்கண்டாய் * நாரணனேநீயென்னையன்றியிலை. 7

இலைதுணைமற்றென்னெஞ்சே ஈசனைவென்ற * சிலைகொண்டசெங்கண்மால்சேரா *
குலைகொண்டவீரைந்தலையான் இலங்கையையீடழித்த * கூரம்பனல்லால்குறை. 8

குறைகொண்டுநான்முகன் குண்டிகைநீர்ப்பெய்து* மறைகொண்டமந்திரத்தால்வாழ்த்தி*
கறைகொண்டகண்டத்தான்சென்னிமேல் ஏறக்கழுவினான் *அண்டத்தான்சேவடியையாங்கு.

ஆங்காரவாரமதுகேட்டு * அழலுமிழும்பூங்காரரவணையான்பொன்மேனி *
யாங்காணவல்லமேயல்லமே மாமலரான்வார்சடையான் * வல்லரேயல்லரேவாழ்த்து. 10

வாழ்த்துகவாய் காண்ககண்கேட்கசெவி * மகுடம்தாழ்த்திவணங்குமின்கள்தண்மலரால் *
சூழ்த்ததுழாய்மன்னுநீண்முடி யென்தொல்லைமால்தன்னை * வழாவண்கைகூப்பிமதித்து. 11

மதித்தாய்போய்நான்கின் மதியார்போய்வீழ * மதித்தாய்மதிகோள்விடுத்தாய் *
மதித்தாய்மடுக்கிடந்த மாமுதலைகோள்விடுப்பான் * ஆழிவிடற்கிரண்டும்போயிரண்டின்வீடு.

வீடாக்கும்பெற்றியறியாது * மெய்வருத்திக்கூடாக்கி நின்றுண்டுகொண்டுழல்வீர் *
வீடாக்கும்மெய்ப்பொருள்தான் வேதமுதற்பொருள்தான் * விண்ணவர்க்குநற்பொருள்தான்
நாராயணன். 13

நாராயணன் என்னையாளி * நரகத்துச்சேராமல் காக்கும்திருமால்*
தன்பேரானபேசப்பெறாத பிணச்சமயர்பேசக்கேட்டு * ஆசைப்பட்டாழ்வார்பலர். 14

பலதேவரேத்தப் படிகடந்தான்பாதம் * மலரேறவிட்டிறைஞ்சி வாழ்த்தவலராகில் *
மாற்கண்டன்கண்டவகையே வருங்கண்டீர் * நீற்கண்டன்கண்டநிலை. 15

நிலைமன்னுமென்னெஞ்சம் அந்நான்று * தேவர்தலைமன்னர் தாமேமாற்றாக * பலமன்னர்
போர்மாள வெங்கதிரோன்மாயப்பொழில்மறைய * தேராழியால்மறைத்தாரால். 16

ஆலநிழற்கீழறநெறியை * நால்வர்க்கு மேலையுகத்துரைத்தான்மெய்த்தவத்தோன் *
ஞாலமளந்தானை ஆழிக்கிடந்தானை * ஆல்மேல்வளர்ந்தானைத்தான்வணங்குமாறு. 17

மாறாயதானவனை வள்ளுகிரால் * மார்விரண்டுகூறாகக் கீறியகோளரியை *
வேறாகவேத்தியிருப்பாரை வெல்லுமே * மற்றவரைச்சாத்தியிருப்பார்தவம். 18

தவம்செய்து நான்முகனால்பெற்றவரத்தை * அவம்செய்தவாழியாயன்றே *
உவந்தெம்மைக்காப்பாய்நீ காப்பதனையாவாய்நீ * வைகுந்தமீப்பாயுமெவ்வுயிர்க்கும்நீ. 19

நீயேயுலகெல்லாம் நின்னருளேநிற்பனவும் * நீயேதவத்தேவதேவனும் *
நீயேயெரிசுடரும்மால்வரையும் எண்டிசையும் * அண்டத்திருசுடருமாயவிவை. 20

இவையாபிலவாய் திறந்தெரிகான்ற * இவையாவெரிவட்டக்கண்கள் *
இவையாவெரிபொங்கிக்காட்டும் இமையோர்பெருமான் * அரிபொங்கிக்காட்டுமழகு. 21

அழகியான்தானே அரியுருவன்தானே * பழகியான்தாளேபணிமின் *
குழவியாய்த்தானேழுலகுக்கும் தன்மைக்கும்தன்மையனே * மீனாயுயிரளிக்கும்வித்து. 22

வித்துமிடவேண்டுங்கொலோ விடையடர்த்த * பத்தியுழவன்பழம்புனத்து *
மொய்த்தெழுந்தகார்மேகமன்ன கருமால்திருமேனி * நீர்வானம்காட்டும்நிகழ்ந்து. 23

நிகழ்ந்தாய்பால்பொன்பசுப்புக் கார்வண்ணம்நான்கும்* இகழ்ந்தாயிருவரையும்வீய*
புகழ்ந்தாய்சினப்போர்ச்சுவேதனைச் சேனாபதியாய் * மனப்போர்முடிக்கும்வகை. 24

வகையால்மதியாது மண்கொண்டாய் * மற்றும்வகையால்வருவதொன்றுண்டே *
வகையால்வயிரம்குழைத்துண்ணும் மாவலிதானென்னும் * வயிரவழக்கொழித்தாய்மற்று. 25

மற்றுத்தொழுவார் ஒருவரையும்யானின்மை*கற்றைச்சடையான்கரிக்கண்டாய் *
எற்றைக்கும்கண்டுகொள்கண்டாய் கடல்வண்ணா * யானுன்னைக்கண்டுகொள்கிற்குமாறு. 26

மாறுன்புகுந்தமடநெஞ்சம் * மற்றதுவும்பேறாகக் கொள்வனோபேதைகாள் *
நீறாடிதான்காணமாட்டாத தாரகலசேவடியை * யான்காணவல்லேற்கிது. 27

இதுவிலங்கையீடழியக் கட்டியசேது * இதுவிலங்குவாலியைவீழ்த்தது *
இதுவிலங்கைதானொடுங்கவில்நுடங்கத் தண்டாரிராவணனை* ஊனொடுங்கவெய்தானுகப்பு. 28

உகப்புருவன்தானே ஒளியுருவன்தானே * மகப்புருவன்தானேமதிக்கில் *
மிகப்புருவமொன்றுக்கொன்று ஓசனையான்வீழ * ஒருகணையாலன்றிக்கொண்டெய்தானவன்.

அவனென்னையாளி அரங்கத்தரங்கில் * அவனென்னையெய்தாமல்காப்பான் *
அவனென்னதுள்ளத்து நின்றானிருந்தான்கிடக்குமே * வெள்ளத்தரவணையின்மேல். 30

மேல்நான்முகன் அரனையிட்டவிடுசாபம் * தான்நாரணனொழித்தான்தாரகையுள் *
வானோர்பெருமானை யேத்தாதபேய்காள் * பிறக்கும்கருமாயம்பேசில்கதை. 31

கதைப்பொருள்தான் கண்ணன்திருவயிற்றினுள்ள * உதைப்பளவுபோதுபோக்கின்றி *
வதைப்பொருள்தான்வாய்ந்தகுணத்துப் படாததடைமினோ * ஆய்ந்தகுணத்தானடி. 32

அடிச்சகடம்சாடி அரவாட்டி * யானைபிடித்தொசித்துப் பேய்முலைநஞ்சுண்டு *
வடிப்பவளவாய்ப்பின்னைதோளிக்கா வல்லேற்றெருத்திறுத்து * கோப்பின்னுமானான்குறிப்பு.

குறிப்பெனக்குக் கோட்டியூர்மேயானையேத்த* குறிப்பெனக்குநன்மைபயக்க *வெறுப்பனோ
வேங்கடத்துமேயானை மெய்வினைநோயெய்தாமல்* தான்கடத்தும்தன்மையான்தாள். 34

தாளாலுலகம் அளந்தவசவேகொல் * வாளாகிடந்தருளும்வாய்திறவான் *
நீளோதம்வந்தலைக்கும்மாமயிலை மாவல்லிக்கேணியான் * ஐந்தலைவாய்நாகத்தணை. 35

நாகத்தணைக்குடந்தை வெஃகாத்திருவெவ்வுள் * நாகத்தணையரங்கம்பேரன்பில் *
நாகத்தணைப்பாற்கடல்கிடக்கும் ஆதிநெடுமால் * அணைப்பார்கருத்தனாவான். 36

வானுலவுதீவளி மாகடல்மாபொருப்பு * தானுலவுவெங்கதிரும்தண்மதியும் *
மேனிலவுகொண்டல்பெயரும் திசையெட்டுஞ்சூழ்ச்சியும் * அண்டந்திருமாலகைப்பு. 37

அகைப்பில்மனிசரை ஆறுசமயம்புகைத்தான் * பொருகடல்நீர்வண்ணன் *
உகைக்குமேல்எத்தேவர்வாலாட்டும் எவ்வாறுசெய்கையும் * அப்போதொழியுமழைப்பு. 38

அழைப்பன் திருவேங்கடத்தானைக்காண * இழைப்பன்திருக்கூடல்கூட *
மழைப்பேரருவி மணிவரன்றிவந்திழிய * யானைவெருவியரவொடுங்கும்வெற்பு. 39

வெற்பென்று வேங்கடம்பாடினேன் * வீடாக்கிநிற்கின்றேன் நின்றுநினைக்கின்றேன் *
கற்கின்றநூல்வலையில்பட்டிருந்த நூலாட்டிகேள்வனார்* கால்வலையில்பட்டிருந்தேன்காண். 40

காணலுறுகின்றேன் கல்லருவிமுத்துதிர * ஓணவிழவிலொலியதிர *
பேணிவருவேங்கடவா என்னுள்ளம்புகுந்தாய் * திருவேங்கடமதனைச்சென்று. 41

சென்றுவணங்குமினோ சேணுயர்வேங்கடத்தை * நின்றுவினைகெடுக்கும்நீர்மையால் *
என்றும்கடிக்கமலநான்முகனும் கண்மூன்றத்தானும் * அடிக்கமலமிட்டேத்துமங்கு. 42

மங்குல்தோய்சென்னி வடவேங்கடத்தானை * கங்குல்புகுந்தார்கள்காப்பணிவான் *
திங்கள்சடையேறவைத்தானும் தாமரைமேலானும்* குடையேறத்தாம்குவித்துக்கொண்டு. 43

கொண்டுகுடங்கால்மேல் வைத்தகுழவியாய் * தண்டவரக்கன்தலைதாளால்—பண்டெண்ணி*
போம்குமரன்நிற்கும் பொழில்வேங்கடமலைக்கே * போம்குமரருள்ளீர்புரிந்து. 44

புரிந்துமலரிட்டுப் புண்டரீகப்பாதம் * பரிந்துபடுகாடுநிற்ப * தெரிந்தெங்கும்
தானோங்கிநிற்கின்றான் தண்ணருவிவேங்கடமே * வானோர்க்கும்மண்ணோர்க்கும்வைப்பு. 45

வைப்பன்மணிவிளக்கா மாமதியை * மாலுக்கென்றெப்பொழுதும் கைநீட்டும்யானையை *
எப்பாடும்வேடுவளைக்கக் குறவர்வில்லெடுக்கும்வேங்கடமே* நாடுவளைத்தாடுதுமேல்நன்று. 46

நன்மணிவண்ணனூர் ஆளியும்கோளரியும் * பொன்மணியும்முத்தமும்பூமரமும் *
பன்மணிநீரோடுபொருதுருளும் கானமும்வானரமும் * வேடுமுடைவேங்கடம். 47

வேங்கடமே விண்ணோர்தொழுவதுவும் * மெய்ம்மையால்வேங்கடமே மெய்வினைநோய்தீர்ப்பதுவும் *
வேங்கடமேதானவரைவீழத் தன்னாழிப்படைதொட்டு* வானவரைக்காப்பான்மலை. 48

மலையாமைமேல்வைத்து வாசுகியைச்சுற்றி * தலையாமைதாளொருகைபற்றி *
அலையாமல்பீறக்கடைந்த பெருமான்திருநாமம் * கூறுவதேயாவர்க்கும்கூற்று. 49

கூற்றமும்சாரா கொடுவினையும்சாரா * தீமாற்றமும்சாராவகையறிந்தேன் *
ஆற்றங்கரைகிடக்கும் கண்ணன்கடல்கிடக்கும் * மாயனுரைகிடக்குமுள்ளத்தெனக்கு. 50

எனக்காவார் ஆரொருவரே * எம்பெருமான்தனக்காவான் தானேமற்றல்லால் *
புனக்காயாவண்ணனே உன்னைப்பிறரறியார் * என்மதிக்குவிண்ணெல்லாமுண்டோவிலை. 51

விலைக்காட்படுவர் விசாதியேற்றுண்பர் * தலைக்காட்பலிதிரிவர்தக்கோர் *
முலைக்கால்விடமுண்டவேந்தனையே வேறுவேத்தாதார் * கடமுண்டார்கல்லாதவர். 52

கல்லாதவரிலங்கைகட்டழித்த * காகுத்தனல்லால் ஒருதெய்வம்யானிலேன் *
பொல்லாததேவரைத் தேவரல்லாரை * திருவில்லாத்தேவரைத்தேறேல்மின்தேவு. 53

தேவராய்நிற்குமத்தேவும் * அத்தேவரில்மூவராய்நிற்கும்முதுபுணர்ப்பும் *
யாவராய்நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்றோராதார் * கற்கின்றதெல்லாம்கடை. 54

கடைநின்றமரர் கழல்தொழுது * நாளுமிடைநின்றவின்பத்தராவர் *
புடைநின்றநீரோதமேனி நெடுமாலே * நின்னடியையாரோதவல்லாரவர். 55

அவரிவரென்றில்லை அனங்கவேள்தாதைக்கு * எவருமெதிரில்லைகண்டீர் *
உவரிக்கடல்நஞ்சமுண்டான் கடனென்று * வாணற்குடனின்றுதோற்றானொருங்கு. 56

ஒருங்கிருந்தநல்வினையும் தீவினையுமாவான்* பெருங்குருந்தஞ்சாய்த்தவனேபேசில்* மருங்கிருந்த
வானவர்தாம்தானவர்தாம் தாரகைதான் * என்னெஞ்சமானவர்தாமல்லாததென். 57

என்னெஞ்சமேயான் இருள்நீக்கியெம்பிரான் * மன்னஞ்சமுன்னொருநாள்மண்ணளந்தான்
என்னெஞ்சமேயானை யில்லாவிடையேற்றான் * வெவ்வினைதீர்த்தாயானுக்காக்கினேனன்பு. 58

அன்பாவாய் ஆரமுதமாவாய்* அடியேனுக்கின்பாவாய் எல்லாமும்நீயாவாய்*
பொன்பாவைகேள்வா கிளரொளியென்கேசவனே* கேடின்றியாள்வாய்க்கடியேனானேன். 59

ஆள்பார்த்துழிதருவாய் கண்டுகொளென்றும் * நின்தாள்பார்த்துழிதருவேன்தன்மையை *
கேட்பார்க்கரும்பொருளாய்நின்ற அரங்கனே * உன்னைவிரும்புவதேவிள்ளேன்மனம். 60

மனக்கேதம்சாரா மதுசூதன்றன்னை * தனக்கேதான்தஞ்சமாக்கொள்ளில் *
எனக்கேதான் இன்றொன்றிநின்றுலகை யேழாணையோட்டினான் * சென்றொன்றிநின்றதிரு. 61

திருநின்றபக்கம் திறவிதென்றோரார் * கருநின்றகல்லார்க்குரைப்பர் *
திருவிருந்தமார்வன் சிரீதரன்றன்வண்டுலவுதண்டுழாய் * தார்தன்னைச்சூடித்தரித்து. 62

தரித்திருந்தேனாகவே தாராகணப்போர் * விரித்துரைத்தவெந்நாகத்துன்னை *
தெரித்தெழுதிவாசித்துங்கேட்டும் வணங்கிவழிபட்டும் * பூசித்தும்போக்கினேன்போது. 63

போதான இட்டிறைஞ்சியேத்துமினோ * பொன்மகரக்காதானை ஆதிப்பெருமானை *
நாதானைநல்லானைநாரணனை நம்மேழ்பிறப்பறுக்குஞ்சொல்லானை * சொல்லுவதேசூது. 64

சூதாவது என்னெஞ்சத்தெண்ணினேன் * சொன்மாலைமாதாயமாலவனைமாதவனை *
யாதானும்வல்லவா சிந்தித்திருப்பேற்கு * வைகுந்தத்தில்லையோசொல்லீரிடம். 65

இடமாவது என்னெஞ்சமின்றெல்லாம் * பண்டுபடநாகணைநெடியமாற்கு *
திடமாகவையேன் மதிசூடிதன்னோடு அயனைநான் * வையேனாட்செய்யேன்வலம். 66

வல்மாக மாட்டாமைதானாக * வைகல்குலமாக குற்றந்தானாக *
நலமாகநாரணனைநாபதியை ஞானப்பெருமானை * சீரணையேயத்தந்திறம். 67

திறமபேன்மின்கண்டீர் திருவடிதன்னாமம் * மறந்தும்புறந்தொழாமாந்தர் * இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்களென்றான் * நமனுந்தன் தூதுவரைக்கூவிச்செவிக்கு. 68

செவிக்கின்பமாவதுவும் செங்கண்மால்நாமம் * புவிக்கும்புவியதுவேகண்டீர் * கவிக்கு
நிறைபொருளாய்நின்றானை நேர்பட்டேன் * பார்க்கில்மறைபொருளுமத்தனையேதான். 69

தானொருவனாகித் தரணியிடந்தெடுத்து * ஏனொருவனாயெயிற்றில்தாங்கியதும் *
யானொருவனின்றுவறிகின்றேனல்லேன் * இருநிலத்தைச்சென்றாங்கடிப்படுத்தசேய். 70

சேயனணியன் சிறியன்மிகப்பெரியன் * ஆயன்துவரைக்கோனாய்நின்றமாயன் *
அன்றோதிய வாக்கதனைக்கல்லார் * உலகத்திலேதிலராம்மெய்ஞ்ஞானமில். 71

இல்லறமில்லேல் துறவறமில்லென்னும் * சொல்லறமல்லனவும்சொல்லல்ல *
நல்லறமாவனவும் நால்வேதமாத்தவமும் * நாரணனேயாவதீதன்றென்பாரார். 72

ஆரேயறிவார் அனைத்துலகுமுண்டுமிழ்ந்த * பேராழியான்தன்பெருமையை *
கார்செறிந்தகண்டத்தான் எண்கண்ணான்காணான் * அவன்வைத்தபண்டைத்தானத்தின்பதி.

பதிப்பகைஞற்காற்றாது பாய்திரைநீர்ப்பாழி * மதித்தடைந்தவாளரவந்தன்னை *
மதித்தவன்றன்வல்லாகத்தேற்றிய மாமேனிமாயவனை * அல்லாதொன்றேத்தாதென்நா. 74

நாக்கொண்டு மானிடம்பாடேன்* நலமாகத்தீக்கொண்ட செஞ்சடையான்சென்று *
என்றும்பூக்கொண்டு வல்லவாறேத்தமகிழாத * வைகுந்தச்செல்வனார்சேவடிமேல்பாட்டு. 75

பாட்டுமுறையும் படுகதையும்பல்பொருளும் * ஈட்டியதீயுமிருவிசும்பும் *
கேட்டமனுவும் சுருதிமறைநான்கும் * மாயன்தனமாயையில்பட்டதற்பு. 76

தற்பென்னைத் தானறியானேலும் * தடங்கடலைக்கற்கொண்டுதூர்த்தகடல்வண்ணன் *
எற்கொண்டவெவ்வினையும்நீங்க விலங்காமனம்வைத்தான் * எவ்வினையும்மாயுமால்கண்டு. 77

கண்டுவணங்கினார்க்கு என்னாங்கொல் * காமனுடல்கொண்டதவத்தாற்குஉமையுணர்த்த *
வண்டலம்பும்தாரலங்கல்நீண்முடியான் தன்பெயரேகேட்டிருந்து *
அங்காரலங்கலானமையா லாய்ந்து. 78

ஆய்ந்துகொண்டு ஆதிப்பெருமானை * அன்பினால்வாய்ந்தமனத்து இருத்தவல்லார்கள் *
ஏய்ந்ததம்மெய்குந்தமாக விரும்புவரே * தாமும்தம்வைகுந்தம்காண்பார்விரைந்து. 79

விரைந்தடைமின்மேலொருநாள் வெள்ளம்பரக்க * கரந்துலகம்காத்தளித்தகண்ணன் *
பரந்துலகம் பாடினவாடினகேட்டு * படுநரகம்வீடினவாசற்கதவு. 80

கதவுமனமென்றும் காணலாமென்றும் * குதையும்வினையாவிதீர்ந்தேன் *
விதையாகநற்றமிழைவித்தி யென்னுள்ளத்தைநீவிளைத்தாய் * கற்றமொழியாகிக்கலந்து. 81

கலந்தானென்னுள்ளத்துக் காமவேள்தாதை * நலந்தானுமீதொப்பதுண்டே *
அலர்ந்தலர்களிட்டேத்துமீசனும் நான்முகனுமென்றிவர்கள்* விட்டேத்தமாட்டாதவேந்து. 82

வேந்தராய்விண்ணவராய் விண்ணாகித்தண்ணளியாய்* மாந்தராய்மாதாய்மற்றெல்லாமாய் *
சார்ந்தவர்க்குத்தன்னாற்றான்நேமியான் மால்வண்ணன்தான்கொடுக்கும்*
பின்னால்தான்செய்யும்பிதிர். 83

பிதிருமனமிலேன் பிஞ்ஞகன்றன்னோடெதிர்வன் * அவனெனக்குநேரான் *
அதிரும்கழற்காலமன்னனையே கண்ணனையே* நாளும்தொழக்காதல்பூண்டேன்தொழில். 84

தொழிலெனக்குத் தொல்லைமால்தன்னாமமேத்த * பொழுதெனக்குமற்றதுவேபோதும்*
கழிசினத்தவல்லாளன்வானரக்கோன் வாலிமதனழித்த*வில்லாளன்நெஞ்சத்துளன். 85

உளன்கண்டாய்நன்னெஞ்சே உத்தமனென்றுமுளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்துளன்கண்டாய்*
தன்னொப்பான்தானாய் உளன்காண்தமியேற்கு * என்னொப்பார்க்கீசனிமை. 86

இமயப்பெருமலைபோல் இந்திரனார்க்கிட்ட * சமயவிருந்துண்டார்காப்பார் *
சமயங்கள்கண்டானவைகாப்பான் கார்க்கண்டன்நான்முகனோடு* உண்டானுலகோடுயிர்.87

உயிர்கொண்டுடலொழிய ஓடும்போதோடி * அயர்வென்றதீர்ப்பான்பேர்பாடி *
செயல்தீரச்சிந்தித்து வாழ்வாரேவாழ்வார் * சிறுசமயப்பந்தனையார்வாழ்வேல்பழுது. 88

பழுதாகாதொன்றறிந்தேன் பாற்கடலான்பாதம்* வழுவாவகைநினைந்துவைகல் தொழுவாரை*

கண்டிறைஞ்சிவாழ்வார் கலந்தவினைகெடுத்து* விண்டிறந்துவீற்றிருப்பார்மிக்கு * 89

வீற்றிருந்து விண்ணாளவேண்டுவார் * வேங்கடத்தான்பால்திருந்தவைத்தாரேபன்மலர்கள் *
மேல்திருந்தவாழ்வார் வருமதிபார்த்தன்பினராய்* மற்றவர்க்கேதாழ்வாயிருப்பார்தமர். 90

தமராவார்யாவர்க்கும் தாமரைமேலாற்கும் * அமரர்க்குமாடரவார்த்தாற்கும் *
அமரர்கள்தாள்தாமரைமலர்களிட்டிறைஞ்சி* மால்வண்ணன்தாள்தாமரையடைவோமென்று.

என்றுமறந்தறியேன் என்னெஞ்சத்தேவைத்து * நின்றுமிருந்தும்நெடுமாலை *
என்றும்திருவிருந்தமார்பன் சிரீதரனுக்காளாய் * கருவிருந்தநாள்முதலாக்காப்பு. 92

காப்புமறந்தறியேன் கண்ணனேயென்றிருப்பன்* ஆப்பங்கொழியவும்பல்லுயிர்க்கும் *
ஆக்கைகொடுத்தளித்த கோனேகுணப்பரனே*உன்னைவிடத்துணியார்மெய்தெளிந்தார்தாம் 93

மெய்தெளிந்தாரென்செய்யார் வேறானாரீருக * கைதெளிந்துகாட்டிக்களப்படுத்து *
பைதெளிந்தபாம்பினணையாய் அருளாயடியேற்கு* வேம்புங்கறியாகுமேன்று. 94

*என்றேனடிமை யிழிந்தேன்பிறப்பிடும்பை * ஆன்றேனமரர்க்கமரானை *
ஆன்றேன்கடனாடும்மண்ணாடுங் கைவிட்டு * மேலையிடநாடுகாணவினி. 96

*இனியறிந்தேன் ஈசற்கும்நான்முகற்குந்தெய்வம் * இனியறிந்தேனெம்பெருமானுன்னை *
இனியறிந்தேன்காரணன்நீகற்றவைநீ கற்பவைநீ * நற்கிரிசைநாரணன்நீநன்கறிந்தேன்நான்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்.

நான்முகன் திருவந்தாதிமுற்றிற்று.

---

அடிவரவு—

1. நான் தேருங்கால் பாலில் வாழுஞ்சடை, தொகுத்த வறியா ரின்று விலைதுணை, குறைகொண் டாங்கரவார் வாழ்த்துகவாய்.
2. வாழ்த்துக மதித்தாய் வீடாக்கு நாராயணன், பலதேவர் நிலைமன்னு மாலதிழல் மாறிய, தவநான்முகனால் நீயே இவையா.
3. இவையா அழகியான் வித்தும் நிகழ்ந்தாய், வகையால்மதியாது மற்றுத்தொழு மதல் தான், இதுவிலங் குகப்புரு அவனென்னை மேல்நான்.
4. மேல்நான் கதைப்பொரு ஏடிச்சகடம் குறிப்பென, தாளுலக நாகத்து வானுல வகைப்பில், அழைப்பன்திருவேம் வெற்பென்றேன் காணல்.
5. காணலுறு சென்றுவண மங்குல்தோய் கொண்டுகுடம், புரிந்துமலர் வைப்பன் நன்மணி வேங்கடமே, மலையாமை கூற்றமும் எனக்காவார்வண்ணனே.
6. எனக்கு விலைக்காட் கல்லாத தேவராய், கடைநின் றவரிவர் ஒருங்கிருந் தென்னெஞ்சி ருள், அன்பாவா யாள்பார்த்துழி மனக்கேதம்.
7. மனத் திருநின்ற தரித்திருந்தேன் போதான, சூ திடமாவது வலமாகத் திறம்பேல், செவிக்கின்பம் தானொருவனுகிச் சேயன்.
8. சேய னில்லற மாரேயறிவார், பதிப்பகை நாக்கொண்டு பாட்டும் தற்பென்னை, கண்டு வணங் காய்ந்துகொண்டு விரைந்தடைமின் கதவுமனம்.
9. கதவு கலந்தான் வேந்தராய் பிதிரும், தொழிலெனக் குளன்தன் இமய உயிர்கொண்டு, பழுதாகாதொன்று வீற்றிருந்து தமராவார்.
10. தம ரென்றுமறந்தறி காப்புமறந்தறி, மெய்தெளிந் தேன்றே னினியறி நான்முகன்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வார் அருளிச்செய்த

# திருவிருத்தம்.

### தனியன்.

கருவிருத்தக் குழிநீத்தபின் காமக் கடுங்குழிவீழ்ந்து
ஒருவிருத்தம் புக்குழலுறுவீர்!, உயிரின் பொருள்கட்
கொருவிருத்தம் புகுதாமல் குருகையர்கோனுரைத்த
திருவிருத்தத் தோரடிகற்றிரீர் திருநாட்டகத்தே.

---

** பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்*
இந்நின்றநீர்மையினியாமுறாமை * உயிரளிப்பான்
எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தா யிமையோர்தலைவா!
மெய்ந்நின்றுகேட்டருளாய் * அடியேன்செய்யும்விண்ணப்பமே. 1

செழுநீர்த்தடத்துக் கயல்மிளிர்ந்தாலொப்ப * சேயரிக்கண்
அழுநீர்துளும்பவலமருகின்றன * வாழியரோ
முழுநீர்முகில்வண்ணன் கண்ணன்விண்ணாட்டவர்மூதுவராம்
தொழுநீரிணையடிக்கே * அன்புசூட்டியசூழ்குழற்கே. 2

குழற்கோவலர் மடப்பாவையும்மண்மகளுந்திருவும் *
நிழற்போல்வனர் கண்டுநிற்குங்கொல்மீளுங்கொல் ?* தண்ணந்துழாய்
அழற்போலடுஞ்சக்கரத்தண்ணல் விண்ணோர்தொழக்கடவும்
தழற்போற்சினத்த * அப்புள்ளின்பின்போன தனிநெஞ்சமே. 3

தனிநெஞ்சம்முன்னவர் புள்ளேகவர்ந்தது * தண்ணந்துழாய்க்
கினிநெஞ்சமிங்குக் கவர்வதுயாமிலம் * நீநடுவே
முனிவஞ்சப்பேய்ச்சிமுலைசுவைத்தான்முடிசூடுதுழாய்ப்
பனிநஞ்சமாருதமே * எம்மதாவிபனிப்பியல்வே. 4

பனிப்பியல்வாக உடையதண்வாடை * இக்காலமிவ்வூர்ப்
பனிப்பியல்வெல்லாந் தவிர்ந்தெரிவீசும் * அந்தண்ணந்துழாய்ப்
பனிப்புயல்சோருந் தடங்கண்ணிமாமைத்திறத்துக்கொலாம்
பனிப்புயல்வண்ணன் * செங்கோலொருநான்றுதடாவியதே. 5

தடாவியவம்பும் முரிந்தசிலைகளும்போகவிட்டு *
கடாயினகொண்டொல்கும் வல்லியீதேனும் * அசுரர்மங்கக்
கடாவியவேகப் பறவையின்பாகன்மதனசெங்கோல்
நடாவியகூற்றங்கண்டீர் * உயிர்காமின்கள்ஞாலத்துள்ளே. 6

ஞாலம்பனிப்பச்செறித்து * நன்னீரிட்டுக்கால்சிதைந்து
நீலவல்லேறுபொராநின்றவானமிது * திருமால்
கோலஞ்சுமந்துபிரிந்தார்கொடுமைகுழறு தண்பூங்
காலங்கொலோவறியேன் * வினையாட்டியேன்காண்கின்றவே. 7

காண்கின்றனகளும் கேட்கின்றனகளுங்காணில் * இந்நாள்
பாண்குன்றநாடர்பயில்கின்றன * இதெல்லாமறிந்தோம்
மாண்குன்றமேந்திதண்மாமலைவேங்கடத்தும்பர்நம்பும்
சேண்குன்றஞ்சென்று * பொருள்படைப்பான்கற்றதிண்ணனவே. 8

திண்பூஞ்சுடர்நுதி நேமியஞ்செல்வர் * விண்ணாடனைய
வண்பூமணிவல்லி யாரேபிரிபவர்தாம் * இவையோ
கண்பூங்கமலங்கருஞ்சுடராடிவெண்முத்தரும்பி
வண்பூங்குவளை * மடமான்விழிக்கின்றமாயிதழே. 9

மாயோன் வடதிருவேங்கடநாட * வல்லிக்கொடிகாள்
நோயோவுரைக்கிலும் கேட்கின்றிலீருறையீர் * நுமது
வாயோவதுவன்றிவல்வினையேனுங்கிளியுமெள்கும்
ஆயோ அடுந்தொண்டையோ * அறையோவிதறிவரிதே. 10

அரியனயாமின்றுகாண்கின்றன * கண்ணன்விண்ணனையாய்
பெரியனகாதம் பொருட்கோபிரிவென * ஞாலமெய்தற்
குரியனவொண்முத்தும்பைம்பொன்னுமேந்தியோரோகுடங்கைப்
பெரியனகெண்டைக்குலம் * இவையோவந்துபேர்கின்றவே. 11

பேர்கின்றதுமணிமாமை பிறங்கியள்ளல்பயலை *
ஊர்கின்றதுகங்குலூழிகளே * இதெல்லாமினவே
ஈர்கின்றசக்கரத்தெம்பெருமான்கண்ணன்தண்ணந்துழாய்
சார்கின்றநன்னெஞ்சினார் * தந்துபோனதனிவளமே. 12

தனிவளர்செங்கோல்நடாவு * தழல்வாயரசவியப்
பனிவளர்செங்கோலிருள்வீற்றிருந்தது * பார்முழுதும்
துனிவளர்காதல்துழாயைத்துழாவுதண்வாடைதடிந்து
இனிவளைகாப்பவரார் * எனையூழிகளீர்வனவே. 13

ஈர்வனவேலுமஞ்சேலும் * உயிர்மேல்மிளிர்ந்திவையோ
பேர்வனவோவல்ல தெய்வநல்வேட்கை * பேரொளியே
சோர்வனநீலச்சுடர்விடுமேனியம்மான் விசும்பூர்
தேர்வன * தெய்வமன்னீரகண்ணோவிச்செழுங்கயலே. 14

கயலோநுமகண்களென்று களிறுவினவிநிற்றீர் *
அயலோரறியிலுமீதென்னவார்த்தை * கடல்கவர்ந்த
புயலோடுலாங்கொண்டல்வண்ணன் புனவேங்கடத்தெம்மொடும்
பயலோவிலீர் * கொலைகாக்கின்றநாளும்பலபலவே. 15

பலபலவூழிகளாயிடும் * அன்றியோர் நாழிகையைப்
பலபலகூறிட்ட கூறாயிடும் * கண்ணன்விண்ணனையாய்
பலபலநாளன்பர்கூடிலும்நீங்கிலும்யாமெலிதும்
பலபலசூழலுடைத்து * அம்மவாழியிப்பாயிருளே. 16

இருள்விரிந்தாலன்ன மாநீர்த்திரைகொண்டுவாழியரோ *
இருள்பிரிந்தாரன்பர்தேர்வழிதூரல் * அரவணைமேல்
இருள்விரிநீலக்கருநாயிறுசுடர்கால்வதுபோல்
இருள்விரிசோதி * பெருமானுறையுமெறிகடலே. 17

கடல்கொண்டெழுந்ததுவானம் * அவ்வானத்தையன்றிச்சென்று
கடல்கொண்டெழுந்தவதனாலிது * கண்ணன்மண்ணும்விண்ணும்
கடல்கொண்டெழுந்தவக்காலங்கொலோபுயற்காலங்கொலோ
கடல்கொண்டகண்ணீர் * அருவிசெய்யாநிற்குங்காரிகையே. 18

காரிகையார் நிறைகாப்பவர்யாரென்று * கார்கொண்டின்னே
மாரிகையேறி அறையிடுங்காலத்தும் * வாழியரோ
சாரிகைப்புள்ளரந்தண்ணந்துழாயிறைகூயருளார்
சேரிகையேறும் * பழியாய்விளைந்ததென்சின்மொழிக்கே. 19

சின்மொழிநோயோ கழிபெருந்தெய்வம் * இந்நோயினதென்
றின்மொழிகேட்கு மிளந்தெய்வமன்றிது * வேலநில்நீ
என்மொழிகேண்மினென்னம்மனைமீர் உலகேழுமுண்டான்
சொன்மொழி * மாலையந்தண்ணந்துழாய்கொண்டுசூட்டுமினே. 20

சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி * விண்ணோர்கள்நன்னீ
ராட்டி அந்தூபந்தராநிற்கவேயங்கு * ஓர்மாயையினால்
ஈட்டியவெண்ணெய்தொடுவுண்ணப்போந்திமிலேற்றுவன்கூன்
கோட்டிடையாடினைகூத்து * அடலாயர்தங்கொம்பினுக்கே. 21

கொம்பார்தழைகை சிறுநாணெறிவிலம் * வேட்டைகொண்டாட்டு
அம்பார்களிறு வினவுவதையர் * புள்ளூருங்கள்வர்
தம்பாரகத்தென்றுமாடாதன தம்மிற்கூடாதன
வம்பார்வினாச்சொல்லவோ * எம்மைவைத்ததிவ்வான்புனத்தே. 22

புனமோபுனத்தயலே வழிபோகுமருவினையேன் *
மனமோமகளிர் நுங்காவல்சொல்லீர் * புண்டரீகத்தங்கேழ்
வனமோரனையகண்ணான்கண்ணன்வானாடமரும் தெய்வத்
தினமோரனையீர்களாய் * இவையோநும்மியல்வுகளே. 23

இயல்வாயின வஞ்சநோய்கொண்டுலாவும் * ஓரோகுடங்கைக்
கயல்பாய்வன பெருநீர்க்கண்கள்தம்மொடும் * குன்றமொன்றால்
புயல்வாயினநிரைகாத்தபுள்ளூர்திகள்ளூருந்துழாய்க்
கொயல்வாய்மலர்மேல் * மனத்தொடென்னாங்கொலெங்கோல்வளைக்கே. 24

எங்கோல்வளைமுதலாக் கண்ணன்மண்ணும்விண்ணுமளிக்கும் *
செங்கோல்வளைவுவிளைவிக்குமால் * திறல்சேரமரர்
தங்கோனுடையதங்கோன்உம்பரெல்லாயவர்க்குந்தங்கோன்
நங்கோனுகக்குந்துழாய் * என்செய்யாதினிநானிலத்தே. 25

நானிலம்வாய்க்கொண்டு நன்னீரறமென்றுகோதுகொண்ட *
வேனிலஞ்செல்வன்சுவைத்துமிழ்பாலை * கடந்தபொன்னே
கானிலந்தோய்ந்துவிண்ணோர்தொழுங்கண்ணன்வெஃகாவுது, அம்பூந்
தேனிளஞ்சோலையப்பாலது * எப்பாலைக்குஞ்சேமத்ததே. 26

சேமஞ்செங்கோனருளே * செறுவாரும்நட்பாகுவரென்று
ஏமம்பெறவையஞ்சொல்லும்மெய்யே * பண்டெல்லாமறைகூய்
யாமங்கடோறெரிவீசுநங்கண்ணனந்தண்ணந்துழாய்த்
தாமம்புனைய * அவ்வாடையீதோவந்துதண்ணென்றதே. 27

தண்ணந்துழாய் வளைகொள்வதுயாமிழப்போம் * நடுவே
வண்ணந்துழாவியோர்வாடையுலாவும் * வள்வாயலகால்
புண்ணந்துழாமேபொருநீர்த்திருவரங்காவருளாய்
எண்ணந்துழாவுமிடத்து * உளவோபண்டுமின்னன்னவே. 28

இன்னன்னதூதெம்மை ஆளற்றப்பட்டிரந்தாளிவளென்று *
அன்னன்னசொல்லாப்பெடையொடும்போய்வரும் * நீலமுண்ட
மின்னன்னமேனிப்பெருமானுலகிற்பெண்தூதுசெல்லா
அன்னன்னநீர்மைகொலோ * குடிச்சீர்மையிலன்னங்களே. 29

அன்னஞ்செல்வீரும் வண்டானஞ்செல்வீருந்தொழுதிரந்தேன் *
முன்னஞ்செல்வீர்கள் மறவேன்மினோ * கண்ணன்வைகுந்தனோ
டென்னெஞ்சினாரைக்கண்டாலென்னைச்சொல்லி அவரிடைநீர்
இன்னஞ்செல்லீரோ * இதுவோ தகவென்றிசைமின்களே. 30

இசைமின்கள்தூதென்று இசைத்தாலிசையிலம் * என்தலைமேல்
அசைமின்களென்றாலசையுங்கொலாம் * அம்பொன்மாமணிகள்
திசைமின்மிளிருந் திருவேங்கடத்துவன்தாட்சிமயம்
மிசை, மின்மிளிரியபோவான் வழிக்கொண்டமேகங்களே. 31

மேகங்களோவுரையீர் * திருமால்திருமேனியொக்கும்
யோகங்களுங்களுக்கெவ்வாறுபெற்றீர் * உயிரளிப்பான்
மாகங்களெல்லாந்திரிந்துநன்னீர்கள்சுமந்து நுந்தம்
ஆகங்கள்நோவ * வருத்துந்தவமா மருள்பெற்றதே. 32

அருளார்திருச்சக்கரத்தால் அகல்விசும்பும்நிலனும் *
இருளார்வினைகெடச் செங்கோல்நடாவுதிர் * ஈங்கோர்பெண்பால்
பொருளோவெனுமிகழ்வோ இவற்றின்புறத்தாளென்றெண்ணோ
தெருளோம் அரவணையீர் * இவள்மாமைசிதைக்கின்றதே. 33

சிதைக்கின்றதாழியென்று ஆழியைச்சீறி * தன்சீறடியால்
உதைக்கின்றநாயகந்தன்னொடுமாலே * உனதுதண்டார்
ததைக்கின்றதண்ணந்துழா யணிவானதுவேமனமாய்ப்
பதைக்கின்றமாதின்திறத்து * அறியேன்செயற்பாலதுவே. 34

பால்வாய்ப்பிறைப்பிள்ளை ஒக்கலைக்கொண்டுபகலிழந்த *
மேல்பால்திசைப்பெண்புலம்புறுமாலை * உலகளந்த
மால்பால்துழாய்க்குமனமுடையார்க்குநல்கிற்றையெல்லாம்
சோல்வான்புகுந்து * இதுவோர்பனிவாடைதுழாகின்றதே. 35

துழாநெடுஞ்சூழிருளென்று * தந்தண்டாரதுபெயரா
எழாநெடுவூழியெழுந்தவிக்காலத்தும் * ஈங்கிவளோ
வழாநெடுந்துன்பத்தளென்றிரங்காரம்மனோ இலங்கைக்
குழாநெடுமாடம் * இடித்தபிரானார்கொடுமைகளே. 36

கொடுங்கால்சிலையர்நிரைகோளுழவர் * கொலையில்வெய்ய
கடுங்காலிளைஞர்துடிபடுங்கவ்வைத்து * அருவினையேன்
நெடுங்காலமுங்கண்ணன்நீண்மலர்ப்பாதம்பரவிப்பெற்ற
தொடுங்காலொசியுமிடை * இளமான்சென்றசூழ்கடமே. 37

கடமாயினகள்கழித்துத் தம்கால்வன்மையால் * பலநாள்
தடமாயினபுக்கு நீர்நிலைநின்றதவமிதுகொல் *
குடமாடியிம்மண்ணும்விண்ணுங்குலுங்கவுலகளந்து
நடமாடியபெருமான் * உருவொத்தனநீலங்களே. 38

நீலத்தடவரைமேல் புண்டரீகநெடுந்தடங்கள்
போல * பொலிந்தெமக்கெல்லாவிடத்தவும் * பொங்குமுந்நீர்
ஞாலப்பிரான்விசும்புக்கும்பிரான் மற்றும்நல்லோர்பிரான்
கோலங்கரியபிரான் * எம்பிரான்கண்ணின் கோலங்களே. 39

கோலப்பகற்களிறு ஒன்றுகற்புய்ய * குழாம்விரிந்த
நீலக்கங்குற் களிறெல்லாம்நிறைந்தன * நேரிழையீர்
ஞாலப்பொன்மாதின்மணாளன் துழாய்நங்கள்சூழ்குழற்கே
ஏலப்புனைந்தென்னைமார் * எம்மைநோக்குவதென்றுகொலோ. 40

என்றும்புன்வாடை யிதுகண்டறிதும் * இவ்வாறுவெம்மை
ஒன்றுமுருவுஞ் சுவடுந்தெரியிலம் * ஓங்கசுரர்
பொன்றும்வகை புள்ளையூர்வானருளருளாதவிந்நாள்
மன்றில்நிறைபழிதூற்றி * நின்றென்னை வன்காற்றடுமே. 41

வன்காற்றறைய ஒருங்கேமறிந்துகிடந்தலர்ந்த *
மென்கால்கமலத்தடம்போற்பொலிந்தன * மண்ணும்விண்ணும்
என்காற்களவின்மைகாண்மினென்பானொத்துவான்நிமிர்ந்த
தன்காற்பணிந்தவென்பால் * எம்பிரானதடங்கண்களே. 42

கண்ணுஞ்செந்தாமரை கையுமவையடியோவவையே *
வண்ணங்கரியதோர்மால்வரைபோன்று * மதிவிகற்பால்
விண்ணுங்கடந்தும்பரப்பால்மிக்குமற்றெப்பால்யவர்க்கும்
எண்ணுமிடத்ததுவோ * எம்பிரானதெழில்நிறமே. 43

நிறமுயர்கோலமும் பேருமுருவுமிவையிவையென்று *
அறமுயல்ஞானச்சமயிகள்பேசிலும் * அங்கங்கெல்லாம்
உறவுயர்ஞானச்சுடர்விளக்காய்நின்றதன்றியொன்றும்
பெறமுயன்றாரில்லையால் * எம்பிரானபெருமையையே. 44

பெருங்கேழலார் தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம் * நம்மேல்
ஒருங்கேபிறழவைத்தார் இவ்வகாலம் * ஒருவர்நம்போல்
வருங்கேழ்பவருளரே தொல்லைவாழியம்சூழ்பிறப்பு
மருங்கேவரப்பெறுமே * சொல்லுவாழி மடநெஞ்சமே. 45

மடநெஞ்சமென்றுந் தமதென்றும் * ஓர்கருமங்கருதி
விடநெஞ்சையுற்றார் விடவோவமையும் * அப்பொன்பெயரோன்
தடநெஞ்சங்கீண்ட பிரானார்தமதடிக்கீழ்விடப போய்த்
திடநெஞ்சமாய் * எம்மைநீத்தின்றுதாறும்திரிகின்றதே. 46

திரிகின்றதுவடமாருதம் திங்கள்வெந்தீமுகந்து *
சொரிகின்றது வதுவுமது * கண்ணன்விண்ணூர்தொழவே
சரிகின்றதுசங்கம் தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை
விரிகின்றதுமுழுமெய்யும் * என்னுங்கொலென்மெல்லியற்கே. 47

மெல்லியலாக்கைக்கிருமி * குருவில்மிளிர்தந்தாங்கே
செல்லியசெல்கைத்து உலகையென்காணும் * என்னாலுந்தன்னைச்
சொல்லியசூழற் றிருமாலவன்கவியாதுகற்றேன்
பல்லியின்சொல்லுஞ்சொல்லா * கொள்வதோவுண்டுபண்டுபண்டே. 48

பண்டும்பலபல வீங்கிருள்காண்டும் * இப்பாயிருள்போற்
கண்டுமறிவதுங்கேட்பதும்யாமிலம் * காளவண்ண
வண்டுண்துழாய்ப்பெருமான் மதுசூதனன்தாமோதரன்
உண்டுமுமிழ்ந்துங்கடாய * மண்ணேரன்னவொண்ணுதலே. 49

ஒண்ணுதல்மாமையொளிபயவாமை * விரைந்துநந்தேர்
நண்ணுதல்வேண்டும்வலவகடாகின்று * தேன்நவின்ற
விண்முதல்நாயகன்நீண்முடிவெண்முத்தவாசிகைத்தாய்
மண்முதல்சேர்வுற்று * அருவிசெய்யாநிற்கும்மாமலைக்கே. 50

மலைகொண்டுமத்தா அரவாற்சுழற்றியமாயப்பிரான் *
அலைகண்டுகொண்டவமுதங்கொள்ளாதுகடல் * பரதர்
விலைகொண்டுதந்தசங்கமிவைவேரித்துழாய்துணையாத்
துலைகொண்டுதாயங்கிளர்ந்து * கொள்வானொத்தழைக்கின்றதே. 51

அழைக்குங்கருங்கடல் வெண்டிரைக்கைக்கொண்டுபோய் * அலர்வாய்
மழைக்கண்மடந்தையரவணையேற * மண்மாதர்விண்வாய்
அழைத்துப்புலம்பிமுலைமலைமேனின்றுமாறுகளாய்
மழைக்கண்ணநீர் * திருமால்கொடியானென்றுவார்கின்றதே. 52

வாராயினமுலையாளிவள் வானோர்தலைமகனும் *
சீராயினதெய்வநன்னோயிது * தெய்வத்தண்ணந்துழாய்த்
தாராயினுந்தழையாயினுந் தண்கொம்பதாயினும் கீழ்
வேராயினும் * நின்றமண்ணாயினுங்கொண்டுவீசுமினே. 53

வீசுஞ்சிறகாற்பறத்திர் * விண்ணாடுநுங்கட்கெளிது
பேசும்படியன்னபேசியும்போவது * நெய்தொடுவுண்
டேசும்படியன்னசெய்யுமெம்மீசர்விண்ணோர்பிரானார்
மாசின்மலரடிக்கீழ் * எம்மைச்சேர்விக்கும்வண்டுகளே. 54

வண்டுகளோவம்மின் நீர்ப்பூநிலப்பூமரத்திலொண்பூ *
உண்டுகளித்துழல்வீர்க் கொன்றுரைக்கியம் * ஏனமொன்றாய்
மண்டுகளாடிவைகுந்தமன்னாள்குழல்வாய்விரைபோல்
விண்டுகள்வாரும் * மலருளவோநும்வியலிடத்தே. 55

வியலிடமுண்டபிரானார் விடுத்ததிருவருளால் *
உயலிடம்பெற்றுய்ந்த மஞ்சலந்தோழி * ஓர்தண்தென்றல்வந்
தயலிடையாருமறிந்தில ரம்பூந்துழாயினின்தேன்
புயலுடைநீர்மையினால் * தடவிற்றென்புலன்கலனே. 56

புலக்குண்டலப் புண்டரீகத்தபோர்க்கெண்டை * வல்லியொன்றால்
விலக்குண்டுலாகின்று வேல்விழிக்கின்றன * கண்ணன்கையால்
மலக்குண்டமுதஞ்சுரந்த மறிகடல்போன்றவற்றால்
கலக்குண்டநான்றுகண்டார் * எம்மையாருங்கழறலரே. 57

கழறலமொன்றே நிலமுழுதாயிற்று * ஒருகழல்போய்
நிழல்தர எல்லாவிசும்பும்நிறைந்தது * நீண்டவண்டத்
துழறலர்ஞானச்சுடர்விளக்கா யுயர்ந்தோரையில்லா
அழறலர்தாமரைக்கண்ணன் * என்னோவிங்களக்கின்றதே. 58

அளப்பருந்தன்மைய ஊழியங்கங்குல் * அந்தண்ணந்துழாய்க்கு
உளப்பெருங்காதலின் நீளியவாயுள * ஓங்குமுந்நீர்
வளப்பெருநாடன்மதுசூதனனென்னும்வல்வினையேன்
தளப்பெருநீண்முறுவல் * செய்யவாயதடமுலையே. 59

முலையோ முழுமுற்றும்போந்தில * மொய்பூங்குழல்குறிய
கலையோவரையில்லை நாவோகுழறும் * கடல்மண்ணெல்லாம்

விலையோவெனமிளிருங்கணிவள்பரமே பெருமான்
மலையோ * திருவேங்கடமென்று கற்கின்றவாசகமே. 60

வாசகஞ்செய்வது நம்பரமே * தொல்லைவானவர்தம்
நாயகன் நாயகரெல்லாந் தொழுமவன் * ஞாலம்முற்றும்
வேயகமாயினுஞ்சோராவகை யிரண்டேயடியால்
தாயவன் * ஆய்க்குலமாய்வந்துதோன்றிற்று நம்மிறையே. 61

இறையோவிரக்கினும் ஈங்கோர்பெண்பாலெனவுமிரங்காது *
அறையோவெனநின்றதிருங்கருங்கடல் * ஈங்கிவள்தன்
நிறையோவினியுன்திருவருளாலன்றிக் காப்பரிதால்
முறையோ* அரவணைமேற்பள்ளிகொண்ட முகில்வண்ணனே. 62

வண்ணஞ்சிவந்துள வானாடமருங்குளிர்விழிய *
தண்மென்கமலத்தடம்போற் பொலிந்தன * தாமிவையோ
கண்ணன்திருமால் திருமுகந்தன்னொடுங்காதல்செய்தேற்கு
எண்ணம்புகுந்து * அடியேனொடிக்கால மிருக்கின்றவே. 63

இருக்கார்மொழியால் நெறியிழுக்காமை * உலகளந்த
திருத்தாளிணை நிலத்தேவர்வணங்குவர் * யாமுமவா
ஒருக்காவினையொடு மெம்மொடும்நொந்து கனியின்மையில்
கருக்காய்கடிப்பவர்போல் * திருநாமச்சொல்கற்றனமே. 64

கற்றுப்பிணைமலர் கண்ணின்குலம்வென்று * ஓரோகருமம்
முற்றுப்பயின்று செவியொடுசாவி * உலகமெல்லாம்
முற்றும்விழுங்கியுமிழ்ந்தபிரானார்திருவடிக்கீழ்
உற்றுமுறுதும் * மிளிர்ந்தகண்ணாயெம்மையுண்கின்றவே. 65

உண்ணாதுறங்காது உணர்வுறுமெத்தனையோகியர்க்கும் *
எண்ணாய்மிளிருமியல்வினவாம் * எரிநீர்வளிவான்
மண்ணாகியவெம்பெருமான்றனது வைகுந்தமன்னாள்
கண்ணாயருவினையேன் * உயிராயினகாவிகளே. 66

காவியுநீலமும் வேலுங்கயலும்பலபலவென்று *
ஆவியின்தன்மையளவல்லபாரிப்பு * அசுரைச்செற்ற
மாவியம்புள்வல்லமாதவன்கோவிந்தன்வேங்கடஞ்சேர்
தூவியம்பேடையன்னாள் * கண்களாயதுணைமலரே. 67

மலர்ந்தேயொழிந்தில மாலையும் மாலைப்பொன்வாசிகையும் *
புலந்தோய்தழைப்பந்தர் தண்டுறநாற்றி * பொருகடல்சூழ்
நிலந்தாவியவெம்பெருமான்தனதுவைகுந்தமன்னாய்
கலந்தார்வரவெதிர்கொண்டு * வன்கொன்றைகள்கார்த்தனவே. 68

காரேற்றிருள்செகிலேற்றின் சுடருக்குளைந்து * வெல்வான்
போரேற்றெதிர்ந்ததுபுன்தலைமாலை * புவனியெல்லாம்
நீரேற்றளந்தநெடியபிரானருளாவிடுமே
வாரேற்றிளமுலையாய் * வருந்தேலுன்வளைத்திறமே. 69

வளைவாய்த்திருச்சக்கரத்து எங்கள்வானவனார்முடிமேல் *
தளைவாய்நறுங்கண்ணித் தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை *
விளைவான்மிகவந்துநாள்திங்களாண்டூழிநிற்க எம்மை
யுளைவான்புகுந்து * இதுவோர்கங்கு லாயிரமூழிகளே. 70

ஊழிகளாய் உலகேழுமுண்டானென்றிலம் * பழங்கண்
டாழி களாம்பழவண்ணமென்றேற்கு * அஃதேகொண்டன்னை
நாழிவளோவென்னும் ஞாலமுண்டான்வண்ணஞ்சொல்லிற்றென்னும்
தோழிகளோ வுரையீர் * எம்மையம்மனைசூழ்கின்றவே. 71

சூழ்கின்றகங்குல் சுருங்காவிருளின்கருந்திணிம்பை *
போழ்கின்றதிங்களம்பிள்ளையும்போழ்க * துழாய்மலர்க்கே
தாழ்கின்றநெஞ்சத்தொருதமியாட்டியேன்மாமைக்கின்று
வாழ்கின்றவாறிதுவோ * வந்துதோன்றிற்றுவாலியதே. 72

வால்வெண்ணிலவு உலகாரச்சுரக்கும்வெண்திங்களென்னும் *
பால்விண்சுரவி சுரமுதிர்மாலை * பரிதிவட்டம்
போலுஞ்சுடரடலாழிப்பிரான்பொழிலேழளிக்கும்
சால்பின்தகைமைகொலாம் * தமியாட்டிதளர்ந்ததுவே. 73

தளர்ந்தும்முறிந்தும் வருதிரைப்பாயல் * திருநெடுங்கண்
வளர்ந்துமறிவுற்றும் வையம்விழுங்கியும் * மால்வரையைக்
கிளர்ந்துமறிதரக்கீண்டெடுத்தான்முடிசூடுதுழாய்
அளைந்துண்சிறுபசுந்தென்றல் * அந்தோ வந்துலாகின்றதே. 74

உலாகின்றகெண்டையொளியம்பு * எம்மாவியையூடுருவக்
குலாகின்ற வெஞ்சிலைவாள்முகத்தீர் * குனிசங்கிடறிப்
புலாகின்றவேலைப்புணரியம்பள்ளியம்மான் அடியார்
நிலாகின்றவைகுந்தமோ * வையமோ நும்நிலையிடமே. 75

இடம்போய்விரிந்து இவ்வுலகளந்தான் எழிலார்தண்டுழாய் *
வடம்போதினையும் மடநெஞ்சமே * நங்கள்வெள்வளைக்கே
விடம்போல்விரிதலிதுவியப்பே வியன்தாமரையின்
தடம்போதொடுங்க * மெல்லாம்பலலர்விக்கும்வெண்திங்களே. 76

திங்களம்பிள்ளைபுலம்பத் தன்செங்கோலரசுபட்ட *
செங்களம்பற்றிநின் றெள்குபுன்மாலை * தென்பாலிலங்கை
வெங்களஞ்செய்தநம்விண்ணோர்பிரானார்துழாய்துணையா
நங்களைமாமைகொள்வான் * வந்துதோன்றிநலிகின்றதே. 77

நலியும்நரகனைவீட்டிற்றும் * வாணன்திண்டோள்துணித்த
வலியும்பெருமையும் யாம்சொல்லும்நீர்த்தல்ல * மைவரைபோற்
பொலியுமுருவிற்பிரானார்புனைபூந்துழாய்மலர்க்கே
மெலியுமடநெஞ்சினார் * தந்துபோயினவேதனையே. 78

வேதனை வெண்புரிநூலனை * விண்ணோர்பரவநின்ற
நாதனை ஞாலம்விழுங்குமநாதனை * ஞாலந்தத்தும்
பாதனைப்பாற்கடற்பாம்பணைமேற்பள்ளிகொண்டருளும்
சீதனையேதொழுவார் * விண்ணுளாரிலுஞ்சீரியரே. 89

சீரரசாண்டு தன்செங்கோல்சிலநாள்செலீஇக்கழிந்த *
பாரரசொத்துமறைந்ததுநாயிறு * பாரளந்த
பேரரசே எம்விசும்பரசே எம்மைநீத்துவஞ்சித்
தோரரசேயருளாய் * இருளாய்வந்துறுகின்றதே. 80

உறுகின்றகன்மங்கள் மேலனவோர்ப்பிலராய் * இவளைப்
பெறுகின்றதாயர் மெய்ந்நொந்துபெறார்கொல் * துழாய்குழல்வாய்த்
துறுகின்றிலர்தொல்லைவேங்கடமாட்டவுஞ்சூழ்கின்றிலர்
இறுகின்றதாலிவளாகம் * மெல்லாவியெரிகொள்ளவே. 81

எரிகொள்செந்நாயிறு இரண்டுடனேயுதயம்மலைவாய் *
விரிகின்றவண்ணத்தவெம்பெருமான்கண்கள் * மீண்டவற்றுள்
எரிகொள்செந்தீவீழசுரரைப்போலவெம்போலியர்க்கும்
விரிவசொல்லீரிதுவோ * வையமுற்றும்விளரியதே. 82

விளரிக்குரலன்றில் மென்பெடை மேகின்றமுன்றிற்பெண்ணை *
முளரிக்குரம்பையிதுவிதுவாக * முகில்வண்ணன்பேர்
கிளரிக்கிளரிப்பிதற்றுமெல்லாவியும்நைவுமெல்லாம்
தளரிற்கொலோவறியேன் * உய்யலாவதித்தையலுக்கே. 83

தையனல்லார்கள் குழாங்கள்குழியகுழுவினுள்ளும் *
ஐயநல்லார்கள் குழியவிழவினும் * அங்கங்கெல்லாம்
கையபொன்னாழிவெண்சங்கொடுங்காண்பானவாவுவன்னான்
மையவண்ணாமணியே * முத்தமே யென்றன்மாணிக்கமே. 84

மாணிக்கங்கொண்டு குரங்கெறிவொத்திருளோடுமுட்டி *
ஆணிப்பொன்னன்ன சுடர்படுமாலை * உலகளந்த
மாணிக்கமே யென்மரதகமே மற்றொப்பாரையில்லா
ஆணிப்பொன்னே * அடியேனடியாவியடைக்கலமே. 85

அடைக்கலத்தோங்குகமலத்து அலரயன்சென்னியென்னும் *
முடைக்கலத்தூண்முன்னரனுக்கு நீக்கியை * ஆழிசங்கம்

படைக்கலமேந்தியை வெண்ணெய்க்கன்றுய்ச்சிவன்தாம்புகளால்
புடைக்கலந்தானையெம்மானை * என்சொல்லிப்புலம்புவனே. 86

புலம்புங்கனகுரல் போழ்வாயவன்றிலும் * பூங்கழிபாய்ந்து
அலம்புங்கனகுரல் சூழ்திரையாழியும் * ஆங்கவைநின்
வலம்புள்ளதுநலம்பாடுமிதுகுற்றமாக வையம்
சிலம்பும்படிசெய்வதே * திருமால்இத்திருவினையே. 87

திருமாலுருவொக்கும்மேரு * அம்மேருவிற்செஞ்சுடரோன்
திருமால்திருக்கைத்திருச்சக்கரமொக்கும் * அன்னகண்டும்
திருமாலுருவோடவன்சின்னமேபிதற்றுநிற்பதோர்
திருமால்தலைக்கொண்டநங்கட்கு * எங்கேவருந்தீவினையே. 88

தீவினைக்கருநஞ்சை நல்வினைக்கின்னமுதத்தினை *
பூவினைமேவியதேவிமணாளனை * புன்மையெள்கா
தாவினைமேய்க்கும்வல்லாயனை அன்றுலகீரடியால்
தாவினவேற்றையெம்மானை * எஞ்ஞான்றுதலைப்பெய்வனே. 89

தலைப்பெய்தியானுன் திருவடிசூடுந்தகைமையினல் *
நிலைப்பெய்தவாக்கைக்கு நோற்றவிம்மாயமும் * மாயஞ்செவ்வே
நிலைப்பெய்திலாத நிலைமையுங்காண்டோறசுரர்குழாம்
தொலைப்பெய்தநேமியெந்தாய் * தொல்லையூழிசுருங்கலதே. 90

சுருங்குறிவெண்ணெய் தொடுவுண்டகள்வனை * வையம்முற்றும்
ஒருங்குறவுண்டபெருவயிற்றாளனை * மாவலிமாட்
டிருங்குறளாகியிசையவோர்மூவடிவேண்டிச்சென்ற
பெருங்கிறியானையல்லால் * அடியேனெஞ்சம்பேணலதே. 91

பேணலமில்லாவரக்கர் முந்நீரபெரும்பதிவாய் *
நீணகர்நீளெரிவைத்தருளாயென்று * நின்னைவிண்ணோர்
தாணிலந்தோய்ந்துதொழுவர்நின்மூர்த்திபல்கூற்றிலொன்று
காணலுமாங்கொலென்றே * வைகல்மாலையுங்காலையுமே. 92

காலைவெய்யோற்குமுன் ஓட்டுக்கொடுத்தகங்குற்குறும்பர் *
மாலைவெய்யோன்பட வையகம்பாவுவர் * அன்னகண்டும்
காலைநன்ஞானத்துறைபடிந்தாடிக்கண்போதுசெய்து
மாலைநன்னாவிற்கொள்ளார் * நினையாரவன்மைப்படியே. 93

மைப்படிமேனியும் செந்தாமரைக்கண்ணும்வைதிகரே *
மெய்ப்படியானுன்திருவடிசூடுந்தகைமையினார் *
எப்படியூராமிலைக்கக்குருட்டாமிலைக்குமென்னும்
அப்படியானும்சொன்னேன் * அடியேன்மற்றியாதென்பனே. 94

யாதானும் ஓராக்கையிற்புக்கு * அங்காப்புண்டுமாப்பவிழ்ந்தும்
மூதாவியிற்றடுமாறுமுயிர்முன்னமே * அதனால்
யாதானும்பற்றிநீங்கும்விரதத்தைநல்வீடுசெய்யும்
மாதாவினைப்பிதுவை * திருமாலைவணங்குவனே. 95

வணங்குந்துறைகள்பலபலவாக்கி * மதிவிகற்பால்
பிணங்குஞ்சமயம்பலபலவாக்கி * அவையவைதோ
றணங்கும்பலபலவாக்கி நின்மூர்த்திபரப்பிவைத்தாய்
இணங்குநின்னோரையில்லாய் * நின்கண்வேட்கையெழுவிப்பனே. 96

எழுவதும்மீண்டே படுவதும்பட்டு * எனையூழிகள்போய்க்
கழிவதுங்கண்டுகண்டெள்கலல்லால் * இமையோர்கள்குழாம்
தொழுவதுஞ்சூழ்வதுஞ்செய்தொல்லைமாலைக்கண்ணாரக்கண்டு
கழிவதோர்காதலுற்றார்க்கும் * உண்டோகண்கள்துஞ்சுதலே. 97

துஞ்சாமுனிவரும் அல்லாதவருந்தொடரநின்ற *
எஞ்சாப்பிறவியிடர்கடிவான் * இமையோர்தமக்கும்
தன்சார்விலாததனிப்பெருமூர்த்திதன்மாயம்செவ்வே
நெஞ்சால்நினைப்பரிதால் * வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே. 98

** ஈனச்சொல்லாயினுமாக * எறிதிரைவையம்முற்றும்
ஏனத்துருவாயிடந்தபிரான் * இருங்கற்பகஞ்சேர்
வானத்தவர்க்குமல்லாதவர்க்கும்மற்றெல்லாயவர்க்கும்
ஞானப்பிரானையல்லாலில்லை * நான்கண்டநல்லதுவே. 99

** நல்லார்நவில்குருகூர்நகரான் * திருமால்திருப்பேர்
வல்லாரடிக்கண்ணிசூடிய * மாறன்விண்ணப்பஞ்செய்த
சொல்லார்தொடையலிந்நூறும்வல்லார் அழுந்தார்பிறப்பாம்
பொல்லாவருவினை * மாயவன்சேற்றள்ளற்பொய்ந்நிலத்தே. 100

## திருவிருத்தம் முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.

1. பொய்ச் செழு குழல் தனி பனித் தடா ஞாலம், காண்கின்ற திண்பூம் மாயோன் அரியன.
2. அரியன பேர்கின் தனிவள ரீர்வன, கயலோ பல விருள் கடல் காரி சின் சூட்டு.
3. சூட்டுக் கொம்பார் புனமோ இயல்வாய், எங்கோல் நானிலம் சேமம் தண் இன் அன்னம்.

4. அன்ன மிசை மேகம் அருளார் சிதைப் பால், துழா கொடும் கடமா நீலக் கோல மென்றும்.

5. என்றும் வன்கரற் கண்ணும் நிறம் பெரும், மடம் திரி மெல்லியல் பண்டு மொண்ணுதல் மலை.

6. மலை யழை வாராய் வீசும் வண் வியல், புலக்குண் கழறல மளப்பரும் முலையோ.

7. முலையோ வாசக மிறையோ வண்ணம், இருக்கார் கற்றுப்பிணை யுண்ணது.

8. உண்ணுக் காவி மலர்ந்தே காரே, வளைவா யூழிகள் சூழ்கின்ற வால்வெண்.

9. வால்வெண் தளர்ந்து முலாகின் றிடம்போய், திங்களம் நலியும் வேதனை சீரரசு.

10. சீரர சுறுகின் றெரிகொள் விளரி, தையல் மாணிக் கடைக்கலம் புலம்பும்.

11. புலம்பும் திருமால் தீவினை தலைப்பெய், சுருங்குறி பேணலம் காலைவெய்யோன் மை.

12. மைப்படி யாதான் வணங்கு மெழுவதும், துஞ்சா வீன நல்லார் செக்கர்.

---

ஸ்ரீ:

## நம்மாழ்வார் அருளிச்செய்த

# திருவாசிரியம்.

---

### தனியன்

காசினியோர் தாம்வாழக் கலியுகத்தே வந்துதித்து
ஆசிரியப் பாவதனா லருமறைநூல் விரித்தானைத்
தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத் தாரானை
மாசடையா மனத்துவைத்து மறவாமல் வாழ்த்துதுமே.

---

* செக்கர்மா முகிலுடுத்துமிக்கசெஞ்சுடர்ப்பரிதிசூடி * அஞ்சுடர்மதியம்பூண்டு *
பலசுடர்புனைந்துபவளச்செவ்வாய் * திகழ்பசுஞ்சோதிமரதகக்குன்றம் *
கடலோன்கைமிசைக் கண்வளர்வதுபோல் * பீதகவாடைமுடிபூண்முதலா *
மேதகுபல்கலனணிந்து * சோதிவாயவும்கண்ணவும்சிவப்ப *
மீதிட்டுப்பச்சைமேனிமிகப்பகைப்ப * நச்சுவினைக்கவர்தலையரவினமளியேறி *
எறிகடல்நடுவுளறிதுயிலமர்ந்து * சிவனயனிந்திரனிவர்முதலனைத்தோர் *
தெய்வக்குழாங்கள்கைதொழக்கிடந்த * தாமரையுந்தித்தனிப்பெருநாயக *
மூவுலகளந்தசேவடியோயே. 1

உலகுபடைத்துண்டவெந்தை * அறைகழல்சுடர்ப்பூந்தாமரைசூடுதற்கு *
அவாவாருயிருருகியுக்க * நேரியகாதலன்பிலின்பீன்தேறல் *
அமுதவெள்ளத்தானாம்சிறப்புவிட்டு * ஒருபொருட்கசைவோரசைக *
திருவொடுமருவியவியற்கை * மாயாப்பெருவிறலுலகம்
மூன்றினொடுநல்வீடுபெறினும் * கொள்வதெண்ணுமோதெள்ளியோர்குறிப்பே. 2

குறிப்பில்கொண்டுநெறிப்பட * உலகம்மூன்றுடன்வணங்குதோன்றுபுகழ், ஆணை *
மெய்பெறநடாயதெய்வம்மூவரில்முதல்வனாகி * சுடர்விளங்ககலத்து *
வரைபுரைதிரைபொருபெருவரைவெருவர * உருமுரலொலிமலிநளிர்கடற்படவர
வரசுஉடல்தடவரைசுழற்றிய * தனிமாத்தெய்வத்தடியவர்க்கினிநாமாளாகவே
யிசையுங்கொல் * ஊழிதோறூழியோவாதே. 3

ஊழிதோறூழியோவாது * வாழியவென்றுயான்தொழவிசையுங்கொல் *
யாவகையுலகமும்யாவருமில்லா * மேல்வரும்பெரும்பாழ்காலத்து * இரும்பொருட்
கெல்லாமரும்பெறல்தனிவித்து * ஒருதானாகித்தெய்வநான்முகக்கொழுமுளையீன்று *
முக்கணீசனொடுதேவுபலநுதலி * மூவுலகம்விளைத்தவுந்தி *
மாயக்கடவுள்மாமுதலடியே. 4

மாமுதலடிப்போதொன்றுகவிழ்த்தலர்த்தி * மண்முழுதுமகப்படுத்து *
ஒண்சுடரடிப்போதொன்றுவிண்செலீஇ * நான்முகப்புத்தேள்நாடுவியந்துவப்ப *
வானவர்முறைமுறைவழிபடநிறீஇ * தாமரைக்காடுமலர்க்கண்ணொடுகனிவாயுடையது
மாய் * இருநாயிறாயிரம்மலர்ந்தன்ன * கற்பகக்காவுபற்பலவன்ன *
முடிதோளாயிரம்தழைத்த * நெடியோய்க்கல்லதுமடியதோவுலகே. 5

ஓஓஉலகினதியல்வே * ஈன்றோளிருக்கமணைநீராட்டி * படைத்திடந்துண்டுமிழ்ந்
தளந்து * தேர்ந்துலகளிக்கும்முதற்பெரும்கடவுள்நிற்ப * புடைப்பலதானறி
தெய்வம்பேணுதல் * தனாதுபுல்லறிவாண்மைபொருந்தக்காட்டி *
கொல்வனமுதலாவல்லனமுயலும் * இனையசெய்கையின்புதுன்பளி *
தொன்மாமாயப்பிறவியுள்நீங்கா * பன்மாமாயத்தழுந்துமாநளிர்ந்தே. 6

** நளிர்மதிச்சடையனும்நான்முகக்கடவுளும் * தளிரொளியிமையவர்தலைவனுமுதலா *
யாவகையுலகமும்யாவருமகப்பட * நிலநீர்தீகால்சுடரிருவிசும்பும் *
மலர்சுடர்பிறவும்சிறிதுடன்மயங்க * ஒருபொருள்புறப்பாடின்றிமுழுவது
மகப்படக்கரந்து * ஓராலிலைச்சேர்ந்தவெம்பெருமாமாயனையல்லது *
ஒருமாதெய்வம்மற்றுடையமோயாமே.

அடிவரவு:—செக்க ருலகு குறிப பூழி மாமுத லோவோவுலகு நளிர் முயற்றி.

திருவாசிரியம் முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருவந்தாதி.

## தனியன்

முந்துற்றநெஞ்சேமுயற்றிதரித்துரைத்து வந்தித்துவாயாரவாழ்த்திச்—சந்த
முருகூருஞ்சோலைசூழ்மொய்பூம்பொருநல் குருகூரன்மாறன்பேர்கூறு.

---

* முயற்றிசுமந்தெழுந்து முந்துற்றநெஞ்சே * இயற்றுவாயெம்மொடுநீகூடி *
நயப்புடையநாவீன்தொடைகிளவி உள்பொதிவோம் * நற்பூவைப்பூவின்றவண்ணன்புகழ். 1

புகழ்வோம்பழிப்போம் புகழோம்பழியோம் * இகழ்வோம்மதிப்போம்மதியோமிகழோம் *
மற்றெங்கள்மால்செங்கண்மால் சீறல்நீதீவினையோம் * எங்கள்மால்கண்டாயிவை. 2

இவையன்றேநல்ல இவையன்றேதீய * இவையென்றிவையறிவனேலும் *
இவையெல்லாமென்னாலடைப்புநீக்கு ஒண்ணாதிறையவனே * என்னால்செயற்பாலதென். 3

என்னின்மிகுபுகழார்யாவரே * பின்னையும்மற்றெண்ணில் மிகுபுகழேன்யானல்லால் *
என்னகருஞ்சோதிக்கண்ணன்கடல்புரையும்*சீலப்பெருஞ்சோதிக்கென்னெஞ்சாள்பெற்று. 4

பெற்றதாய்நீயே பிறப்பித்ததந்தைநீ * மற்றையாராவாரும்நீபேசில் *
எற்றேயோமாயமாமாயவளை மாயமுலைவாய்வைத்த * நீயம்மாகாட்டும்நெறி. 5

நெறிகாட்டிநீக்குதியோநின்பால் * கருமாமுறிமேனிகாட்டுதியோ * மேனாள் [யாம்.
அறியோமை என்செய்வானெண்ணினாய்கண்ணனே * ஈதுரையாயென்செய்தாலென்படோம்

பாமேயருவினையோம்சேயோம் * என்னெஞ்சினார்தாமே அணுக்கராய்ச்சார்ந்தொழிந்தார் *
பூமேயசெம்மாதை நின்மார்பில்சேர்வித்து * பாரிடந்தவம்மாநின்பாதத்தருகு. 7

அருகும்சுவடும்தெரிவுணரோம் * அன்பேபெருகும்மிக இதுவென்பேசீர் *
பருகலாம்பண்புடையீர்பாரளந்தீர் பாவியேம்கண்காண்பரிய*நுண்புடையீர்நும்மைநமக்கு. 8

நுமக்கடியோமென்றென்று நொந்துரைத்தென் * மாலார்தமக்கவர்தாம் சார்வரியரானால் *
எமக்கினியாதானும் ஆகிடுகாண்நெஞ்சே * அவர்திறத்தேயாதானும்சிந்தித்திரு. 9

இருநால்வர் ஈரைந்தின்மேலொருவர் * எட்டோடொருநால்வர் ஓரிருவரல்லால் *
திருமாற்குயாமார்வணக்கமார் ஏபாவம்நன்னெஞ்சே * நாமாமிகவுடையோம்நாழ். 10

நாழாலமர்முயன்ற வல்லரக்கனின்னுயிரை * வாழாவகைவலிதல்நின்வலியே *
ஆழாதபாருநீவானுநீ காலுநீதீயுநீ * நீருநீயாய்நின்றநீ. 11

நீயன்றேயாழ்துயரில் வீழ்விப்பான்நின்றுழன்றாய்* போயொன்றுசொல்லியென்போநெஞ்சே
நீயென்றும்காழ்த்துபதேசந்தரினும் கைக்கொள்ளாய் * கண்ணன்தாள்வாழ்த்துவதே
கண்டாய்வழக்கு. 12

வழக்கொடுமாறுகொளன்று அடியார்வேண்ட * இழக்கவுங்காண்டுமிறைவ இழப்புண்டே *
எம்மாட்கொண்டாகிலும் யான்வேண்டவென்கண்கள்* தம்மாற்காட்டுன்மேனிச்சாய். 13

சாயால்கரியானை உள்ளறியாராய்நெஞ்சே * பேயார்முலைகொடுத்தார்பேயராய் *
நீயார்போய்த்தேம்பூண்சுவைத்து ஊனறிந்தறிந்தும் * தீவினையாம்பாம்பார்வாய்க்கைநீட்டல்
பார்த்தி. 14

பார்த்தோர் எதிரிதாநெஞ்சே * படுதுயரம்பேர்த்தோதப் பீடழிவாம்பேச்சில்லை*
ஆர்த்தோதம்தம்மேனி தாள்தடவத்தாம்கிடந்து * தம்முடையசெம்மேனிக்கண்வளர்வார்சீர்.15

சீரால்பிறந்து சிறப்பால்வளராது * பேர்வாமனாகாக்கால் பேராளா *
மார்பாரப்புல்கிநீயுண்டுமிழ்ந்த பூமிநீரேற்பரிதே * சொல்லுநீயாமறியச்சூழ்ந்து. 16

சூழ்ந்தடியார்வேண்டினக்கால்தோன்றுதுவிட்டாலும்வாழ்ந்திடுவர்பின்னும்தம்வாய்திறவார்*
சூழ்ந்தெங்கும்வாள்வரைகள்போலரக்கன் வன்தலைகள்தாமிடிய * தாள்வரை வில்லேந்தினார்
தாம். 17

தாம்பாலாப்புண்டாலும் அத்தழும்புதானிளக * பாம்பாலாப்புண்டுபாடுற்றாலும் *
சோம்பாதுஇப்பல்லுருவையெல்லாம் படர்வித்தவித்தா * உன்தொல்லுருவையாரறிவார்
சொல்லு. 18

சொல்லில்குறையில்லை சூதறியாநெஞ்சமே * எல்லிப்பகலென்னாதெப்போதும் *
தொல்லைக்கண்மாத்தானைக்கெல்லாம் ஓரைவரையேமாறாக * காத்தானைக்காண்டுநீகாண். 19

காணப்புகிலறிவு கைக்கொண்டநன்னெஞ்சம் * நாணப்படுமன்றே நாம்பேசில் *
மாணியுருவாகிக்கொண்டு உலகம் நீரேற்றசீரான் * திருவாகம் தீண்டிற்றுச்சென்று. 20

சென்றங்குவெந்நரகில் சேராமல்காப்பதற்கு * இன்றிங்கென்னெஞ்சாவிடுக்குண்ட *
அன்றங்குப்பாருருவும்பார்வளைத்த நீருருவும்கண்புதைய *காருருவன்தான்நிமிர்த்தகால். 21

காலேபொதத்திரிந்து கத்துவராம்இனநாள் * மாலார்குடிபுகுந்தாரென்மனத்தே *
மேலால்தருக்குமிடம்பாட்டினொடும் வல்வினையார்தாம்* வீற்றிருக்குமிடம்காணாநினைத்து. 22

இளைப்பாயிளையாப்பாய் நெஞ்சமேசொன்னேன் * இளைக்கநமன்தமர்கள்பற்றி இளைப்பெய்த*
நாய்தந்துமோதாமல் நல்குவான்நல்காப்பான் * தாய்தந்தையெவ்வுயிர்க்கும்தான். 23

தானேதனித்தோன்றல் தன்னளப்பொன்றில்லாதான்* தானேபிறர்கட்கும்தற்றோன்றல் *
தானேஇளைக்கில்பார்கீழ்மேலாம் ஈண்டமைப்பானால்* அளக்கிற்பார்பாரின்மேலார். 24

ஆரானுமாதானும்செய்ய * அகலிடத்தையாராய்ந்து அதுதிருத்தலாவதே *
சீரார்மனத்தலை வன்துன்பத்தைமாற்றினேன் * வானோரினத்தலைவன்கண்ணனால்யான். 25

யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம் * வல்வினையைக்கானும்மலையும்புகக்கடிவான் *
தானோரிருளன்னமாமேனி யெம்மிறையார்தந்த * அருளென்னுந்தண்டாலடித்து. 26

அடியால் படிகடந்தமுத்தோ * அதன்றேல்முடியால் விசும்பளந்தமுத்தோ *
நெடியாய்செறிகழல்கொள்தாள்நிமிர்த்துச் சென்றுலகமெல்லாம்* அறிகிலமால்நீயளந்தவன்று.

அன்றேநம்கண்காணும் ஆழியான்காருருவம் * இன்றேநாம்காணாதிருப்பதுவும் *
என்றேனும்கட்கண்ணால் காணாதவவ்வுருவை * நெஞ்சென்னுமுட்கண்ணேல்காணுமுணர்ந்து.

உணரவொருவர்க்கு எளியனேசெவ்வே * இணரும் துழாயலங்கலெந்தை *
உணரத்தனக்கெளியரெவ்வளவர் அவ்வளவனானால்* எனக்கெளியனெம்பெருமானிங்கு. 29

இங்கில்லைபண்டுபோல் வீற்றிருத்தல் * என்னுடையசெங்கண்மால் சீர்க்கும்சிறிதுள்ளம் *
அங்கேமடியடக்கிநிற்பதனில் வல்வினையார்தாம் * ஈண்டடியெடுப்பதன்றோவழகு. 30

அழகுமறிவோமாய் வல்வினையைத்தீர்ப்பான் * நிழலுமடிதாறுமானோம் *
சுழலக்குடங்கள் தலைமீதெடுத்துக்கொண்டாடி * அன்றத்தடங்கடலை மேயார்தமக்கு. 31

தமக்கடிமைவேண்டுவார் தாமோதரனார்தமக்கு * அடிமைசெய்யென்றால்செய்யாது *
எமக்கென்றுதாம்செய்யும்தீவினைக்கே தாழ்வுறுவர்நெஞ்சினார்*யாம்செய்வதிவ்விடத்திங்கியாது.

யாதானுமொன்றறியில் தன்னுகக்கிலென்கொலோ * யாதானும்நேர்ந்தணுகாவாறுதான் *
யாதானும்தேறுமாசெய்யா அசுரர்களை * நேமியால்பாறுபாறாக்கினான்பால். 33

பாலாழி நீகிடக்கும்பண்பை * யாம்கேட்டேயும் காலாழும்நெஞ்சழியும்கண் சுழலும் *
நீலாழிச்சோதியாயாதியாய் தொல்வினையெம்பால்கடியும் * நீதியாய்நிற்சார்ந்துநின்று. 34

நின்றுமிருந்தும் கிடந்தும்திரிதந்தும் * ஒன்றுமோவாற்றானென்னெஞ்சகலான் * அன்றங்கை
வன்புடையால்பொன்பெயரோன் வாய்தகர்த்துமார்விடந்தான் *அன்புடையானன்றேயவன்.

அவனாமிவனாமுவனாம் * மற்றும்பரவனாம் அவனென்றிராதே *
அவனாமவனேயெனத்தெளிந்து கண்ணனுக்கேதீர்ந்தால் * அவனேயெவனேலுமாம். 36

ஆமாறறிவுடையார் ஆவதரிதன்றே * நாமேயதுவுடையோம்நன்னெஞ்சே *
பூமேய்மதுகரமே தண்டுழாய்மாலாரை * வாழ்த்தாம்அதுகரமேஅன்பாலமை. 37

அமைக்கும்பொழுதுண்டே ஆராயில்நெஞ்சே * இமைக்கும்பொழுதுமிடைச்சி
குமைத்திறங்கள் * ஏசியேயாயினும் ஈன்துழாய்மாயனையே * பேசியேபோக்காய்பிழை. 38

பிழைக்கமுயன்றோமோ நெஞ்சமேபேசாய் * தழைக்குந்துழாய்மார்வன்தன்னை *
அழைத்தொருகால்போயுபகாரம் பொலியக்கொள்ளாது * அவன்புகழேவாயுபகாரங்
கொண்டவாய்ப்பு. 39

வாய்ப்போவிதுவொப்ப மற்றில்லைவா நெஞ்சே * போய்ப்போஒய்வெந்நரகில்பூவியேல் *
தீப்பாலபேய்த்தாயுயிர்கலாய்ப் பாலுண்டு * அவளுயிரைமாய்த்தானைவாழ்த்தேவலி. 40

வலியமெனநினைந்து வந்தெதிர்ந்தமல்லர் * வலியமுடியிடியவாங்கி *
வலியநின்பொன்னாழிக்கையால் புடைத்திடுதிகீளாதே * பன்னாளும்நிற்குமிப்பார். 41

பாருண்டான்பாருமிழ்ந்தான் பாரிடந்தான் பாரளந்தான் *பாரிடமுன்படைத்தானென்பரால்*
பாரிடமாவானும் தானானாலாரிடமே * மற்றொருவர்க்காவான்புகாவாலவை. 42

அவயமெனநினைந்து வந்தசுரர்பாலே * நவையைநளிர்விப்பான்தன்னை *
கவையில்மனத்துயரவைத்திருந்து வாழ்த்தாதார்க்குண்டோ* மனத்துயரைமாய்க்கும்வகை. 43

வகைசேர்ந்தநன்னெஞ்சும் நாவுடையவாயும் * மிகவாய்ந்துவீழாவெனினும் *
மிகவாய்ந்துமாலைத்தாம் வாழ்த்தாதிருப்பரிதுவன்றே * மேலைத்தாம்செய்யும்வினை. 44

வினையார்தரமுயலும் வெம்மையையஞ்சி * தினையாஞ்சிறிதளவும்செல்லநினையாது *
வாசகத்தாலேத்தினேன் வானோர்தொழுதிறைஞ்சும் * நாயகத்தான்பொன்னடிக்கள்நான். 45

நான்கூறுங் கூற்றாவதித்தனையே * நாணாளும் தேங்கோதநீருருவன்செங்கண்மால் *
நீங்காதமாகதியாம், வெந்நரகில் சேராமற்காப்பதற்கு * நீகதியாம்நெஞ்சேநினை. 46

நினைத்திறைஞ்சிமானிடவர் ஒன்றிரப்பரென்றே * நினைத்திடவும்வேண்டாநீநேரே *
நினைத்திறைஞ்சவெவ்வளவர் எவ்விடத்தோர்மாலே* அதுதானுமெவ்வளவுமுண்டோவெமக்கு.

எமக்கியாம்விண்ணாட்டுக்கு உச்சமதாம்வீட்டை * அமைத்திருந்தோமஃதன்றேயாமாறு *
அமைப்பொலிந்தமென்தோளிகாரணமா வெங்கோட்டேறேழுடனே * கொன்றானையே
மனத்துக்கொண்டு. 48

கொண்டல்தான்மால்வரைதான் மாகடல்தான்கூரிருள்தான் * வண்டறாப்பூவைதான்
மற்றுத்தான் * கண்டநாள் காருருவங்காண்டோறும் நெஞ்சோடும் * கண்ணனார்
பேருருவென்றெம்மைப்பிரிந்து. 49

பிரிந்தொன்றுநோக்காது தம்முடையபின்னே * திரிந்துழலும்சிந்தனையார்தம்மை *
புரிந்தொருகால் ஆவாவெனவிரங்கார் அந்தோவலிதேகொல் * மாவாய்பிளந்தார்மனம். 50

மனமாளுமோரைவர் வன்குறும்பர்தம்மை * சினமாள்வித்தோரிடத்தேசேர்த்து *
புனமேயதண்டுழாயானடியைத் தான்காணுமஃதன்றே * வண்டுழாஞ்சீரார்க்குமாண்பு. 51

மாண்பாவித்தஞ்ஞான்று மண்ணிரந்தான்*மாயவள்நஞ்சு ஊண்பாவித்துண்டானதோருருவம்*
காண்பான்நங்கண்ணவா மற்றொன்றுகாணாறு * சீர்பரவாதுண்ணவாய்தானுறுமோ
வொன்று. 52

ஒன்றுண்டுசெங்கண்மால் யானுரைப்பது * உன்னடியார்க்கு என்செய்வனென்றேயிருத்திநீ*
நின்புகழில்வைகும் தஞ்சிந்தையிலும்மற்றினிதோ * நீயவர்க்குவைகுந்தமென்றருளும்வான். 53

வானோமறிகடலோ மாருதமோ தீயகமோ * கானோவொருங்கிற்றுக் கண்டிலமால் * ஆனீன்ற
கன்றுயரத்தாமெறிந்து காயுதிர்த்தார்தாள்பணிந்தோம் * வன்துயரையாவாமருங்கு. 54

மருங்கோதமோதும் மணிநாகணையார் * மருங்கேவரவரியரேலும் *
ஒருங்கேயெமக்கவரைக்காணலாம் எப்பொழுதுமுள்ளால் * மனக்கவலைதீர்ப்பார்வரவு. 55

வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால் * எல்லே ஒருவாறொருவன்புகாவாறு *
உருமாறுமாயவர்தாஞ்சேயவர்தாம் அன்றுலகந்தாயவர்தாம் * மாயவர்தாங்காட்டும்வழி. 56

வழித்தங்குவல்வினையை மாற்றானோநெஞ்சே * தழீஇக்கொண்டுபோரவுணன்றன்னை *
சுழித்தெங்கும் தாழ்விடங்கள்பற்றிப் புலால்வெள்ளந்தானுகள* வாழ்வடங்கமார்விடந்தமால்.

மாலேபடிச்சோதி மாற்றேல் * இனியுனது பாலேபோற்சீரிற்பழுத்தொழிந்தேன் *
மேலால்பிறப்பின்மைபெற்று அடிக்கீழ்க்குற்றேவலன்று * மறப்பின்மையான்வேண்டும்மாடு.

மாடேவரப்பெறுவராமென்றே * வல்வினையார் காடானுமாதானுங்கைக்கொள்ளார் *
ஊடேபோய்ப்பேரோதஞ்சிந்து திரைக்கண்வளரும் * பேராளன்பேரோதச்சிந்திக்கப்பேர்ந்து.

பேர்ந்தொன்றுநோக்காது பின்னிற்பாய்நில்லாப்பாய்*ஈன்துழாய்மாயனையேயென்னெஞ்சே
பேர்ந்தெங்கும்தொல்லைமாவெந்நரகில் சேராமற்காப்பதற்கு * இல்லைகாண்மற்றோரிறை. 60

இறைமுறையான்சேவடிமேல் மண்ணளந்தவந்நாள் * மறைமுறையால்வானாடர்கூடி *
முறைமுறையின்தாதிலகு பூத்தெளித்தாலொவ்வாதே * தாழ்விசும்பின்மீதிலகித்
தான்கிடக்கும்மீன். 61

மீனென்னுங்கம்பின் வெறியென்னும்வெள்ளிவேய் * வானென்னுங்கேடிலாவான்குடைக்கு
தானோர்மணிக்காம்புபோல்நிமிர்ந்து மண்ணளந்தான்* நங்கள்பிணிக்காம்பெருமருந்துபின். 62

பின்துரக்கும்காற்றிழந்த சூல்கொண்டல்பேர்ந்தும்போய் * வன்திரைக்கண்வந்தணைந்த
வாய்மைத்தே * அன்றுதிருச்செய்யநேமியான் தீயரக்கிமூக்கும்* பருச்செவியுமீர்ந்தபரன். 63

பரனாமவனாதல் பாவிப்பராகில் * உரனாலொருமூன்றுபோதும் * மரமேழன்
றெய்தானைப் புள்ளின்வாய்கீண்டானையே * அமரர்கைதான்தொழாவேகலந்து. 64

கலந்துநலியுங் கடுந்துயரைநெஞ்சே * மலங்கவடித்துமடிப்பான் * விலங்கல்போல்
தொன்மாலைக்கேசவனை நாரணனைமாதவனை * சொன்மாலையெப்பொழுதுஞ்சூட்டு. 65

சூட்டாயநேமியான் தொல்லரக்கனின்னுயிரை * மாட்டேதுயரிழைத்தமாயவனை *
ஈட்டவெறிகொண்ட தண்டுழாய்வேதியனை * நெஞ்சேயறிகண்டாய்சொன்னேனது. 66

அதுவோநன்றென்று அங்கமருலகோவேண்டில் * அதுவோர்பொருளில்லையன்றே*
அதுவொழிந்துமண்ணின்றாள்வேனெனிலும்கூடும்மடநெஞ்சே * கண்ணன்தாள்வாழ்த்து
வதேகல். 67

கல்லுங்கனைகடலும் வைகுந்தவானாடும் * புல்லென்றொழிந்தனகொல்ஏபாவம்*
வெல்லநெடியான்நிறங்கரியான் உள்புகுந்துநீங்கான் * அடியேனதுள்ளத்தகம். 68

அகஞ்சிவந்தகண்ணினராய் வல்வினையராவார் * முகஞ்சிதைவராமன்றேமுக்கி *
மிகுந்திருமால்சீர்க்கடலையுள்பொதிந்தசிந்தனையேன்றன்னை* ஆர்க்கடலாஞ்செவ்வேயடர்த்து.

அடர்பொன்முடியானை ஆயிரம்பேரானை * சுடர்கொள்சுடராழியானை *
இடர்கடியும்மாதாபிதுவாக வைத்தேனெனதுள்ளே * யாதாகில்யாதேயினி. 70

இனிநின்றுநின்பெருமை யானுரைப்பதென்னே * தனிநின்றசார்விலாமூர்த்தி *
பனிநீர் அகத்துலவு செஞ்சடையானாகத்தான் * நான்குமுகத்தான்நின்னுந்திமுதல். 71

முதலாந்திருவுருவம்மூன்றென்பர் * ஒன்றேமுதலாகும் மூன்றுக்குமென்பர் *
முதல்வாநிகரிலகுகாருருவா நின்னகத்ததன்றே * புகரிலகுதாமரையின்பூ. 72

பூவையுங்காயாவும் நீலமும்பூக்கின்ற * காவிமலரென்றுங்காண்டோறும் *
பாவியேன்மெல்லாவி மெய்மிகவேபூரிக்கும் * அவ்வவையெல்லாம்பிரானுருவேயென்று. 73

என்றுமொருநாள் ஒழியாமையானிரந்தால் * ஒன்றுமிரங்காருருக்காட்டார் *
குன்றுகுடையாக ஆகாத்தகோவலனார் * நெஞ்சேபுடைதான்பெரிதேபுவி. 74

புவியுமிருவிசும்பும் நின்னகத்த * நீயென்செவியின்வழிபுகுந்தென்னுள்ளாய் *
அவிவின்றியான்பெரியன்நீபெரியை யென்பதனையாரறிவார் * ஊன்பருகுநேமியாயுள்ளு. 75

உள்ளிலுமுள்ளந்தடிக்கும் வினைப்படலம்* விள்ளவிழித்துன்னைமெய்யுற்றால் *
உள்ளவுலகளவும்யானும் உளனாவனென்கொலோ * உலகளந்தமூர்த்தியுரை. 76

உரைக்கிலோர்சுற்றத்தார் உற்றாரென்றாரே * இரைக்குங்கடற்கிடந்தவெந்தாய் *
உரைப்பெல்லாம்நின்னன்றி மற்றிலேன்கண்டாய்* எனதுயிர்க்கோர்சொன்னன்றியாகுந்துணை

துணைநாள்பெருங்கிளையும் தொல்குலமும் * சுற்றத்திணைநாளும் இன்புடைத்தாமேலும் *
கணைநாணில்லோவாத்தொழிற்சார்ங்கன் தொல்சீரைநன்னெஞ்சே * ஓவாதவூணாகவுண். 78

உண்ணாட்டுத்தேசன்றே ஊழ்வினையையஞ்சுமே * விண்ணாட்டையொன்றாகமெச்சுமே *
மண்ணாட்டிலாராகி யெவ்விழிவிற்றானாலும் * ஆழியங்கைப்பேராயற்காளாம்பிறப்பு. 79

பிறப்பிறப்புமூப்புப் பிணிதுறந்து * பின்னுமிறக்கவும் இன்புடைத்தாமேலும் *
மறப்பெல்லாமேதமேயென்றல்லால் எண்ணுவனே * மண்ணளந்தான்பாதமேயேத்தாப்பகல்.

பகலிராவென்பதுவும்பாவியாது * எம்மைஇகல்செய்து இருபொழுதுமாள்வர் *
தகவாத்தொழும்பரிவர்சீர்க்கும் துணையிலரென்றோரார் * செழும்பரவைமேயார்தெரிந்து. 81

தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன்*வாளாவிருந்தொழிந்தேன்கீழ்நாள்களெல்லாம்
கரந்துருவினம்மானை அந்நான்றுபின்றொடர்ந்த* ஆழியங்கையம்மானையேத்தாதயர்த்து. 82

அயர்ப்பாயயராப்பாய் நெஞ்சமேசொன்னேன் * உயப்போம்நெறியிதுவேகண்டாய் *
செயற்பாலவல்லவேசெய்கிறுதி நெஞ்சமேயஞ்சினேன்* மல்லர்நாள்வவ்வினனைவாழ்த்து. 83

வாழ்த்தியவனடியைப் பூப்புனைந்து * நின்தலையைத்தாழ்த்து இருகைகூப்பென்றால்கூப்பாத
பாழ்த்தவிதி * எங்குற்றாயென்றவனை யேத்தாதென்னெஞ்சமே* தங்கத்தானாமேலுந்தங்கு. 84

தங்காமுயற்றியவாய்த் தாழ்விசும்பின்மீதுபாய்ந்து*எங்கேபுக்கெத்தவஞ்செய்திட்டனகொல்*
பொங்கோதத்தண்ணம்பால் வேலைவாய்க்கண்வளரும் * என்னுடையகண்ணன்பால்
நன்னிறங்கொள்கார். 85

** கார்கலந்தமேனியான் கைகலந்தவாழியான்* பார்கலந்தவல்வயிற்றான்பாம்பணையான் *
சீர்கலந்தசொல்நினைந்துபோக்காரேல் சூழ்வினையினாழ்துயரை * என்னினைந்துபோக்குவ
ரிப்போது. 86

** இப்போதுமின்னும் இனிச்சிறிதுநின்றாலும் * எப்போதுமீதேசொல்லென்னெஞ்சே *
எப்போதுங்கைகழலாநேமியான் நம்மேல்வினைகடிவான் * மொய்கழலேயேத்தமுயல். 87

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியதிருவந்தாதி முற்றிற்று.

---

அடிவரவு.

1. முயற்றி புகழ்வோம் இவையன்றே யென்னில், பெற்றதாய் நெறிகாட்டி யாமே யருகும், நுமக்கடி யிருநால் நாழால் நீயன்றே.

2. நீயன்றே வழக்கொடு சாயால் பார்த்தோர், சீரால் சூழ்ந்தடி தாம்பால் சொல்லில், காணப்புகில் சென்றங்கு காலே யிளைப்பாய்.

3. இனி தான்தோன்றல் ஆரானும் யானும், அடியா லன்றே உரை விங்கில்லை, அழகும் தமக்கடி யாதானுமொன் பாலாழி.

4. பாலாழி நின்று மவனு மாமாறு, அமைக்கும் பிழைக்க வாய்ப்போ வலியம், பாருண்டா னவயம் வகைசேர் வினையார்.

5. வினை நான்கூறும் நினைத்திறை யெமக்கியாம், கொண்டல் பிரிந்தொன்று மனமாளு மாண்பாவி, ஒன்றுண்டு வாழே மருங்கோ வரவாறு.

6. வரவு வழித்தங்கு மாலே மாடே, பேர்ந்தொன் றிறைமுறை மீன் பின்துரக்கும், பரனும் கலந்து சூட்டாய வதுவோ.

7. அதுவோ கல்லு மகஞ்சிவந் தடர்பொன், இனிநின்று முதலாம் பூவையு மென்றும், புவியு முள்ளிலு முரைக்கிலோர் துணைநாள்.

8. துணை யுண்ணுட்டுப் பிறப்பிறப் பகலிரா, தெரிந்துண ரயர்ப்பாய் வாழ்த்தியவன் தங்கா, கார்கலந்த விப்போதுமின்னும் முயற்றி.

---

ஸ்ரீ

திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவெழுகூற்றிருக்கை.

## தனியன்

வாழிபரகாலன் வாழிகலிகன்றி வாழிகுறையலூர்வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனைவாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன் தூயோன்சுடர்மானவேல்.

---

** ஒருபேருந்தியிருமலர்த்தவிசில் * ஒருமுறையயனையீன்றனை *
ஒருமுறைஇருசுடர்மீதினிலியங்கா * மும்மதிளிலங்கைஇருகால்வளைய *
ஒருசிலையொன்றியவீரெயிற்றழல்வாய்வாளியின் அட்டனை *
மூவடிநானிலம்வேண்டி * முப்புரிநூலொடுமானுரியிலங்குமார்வினின் *
இருபிறப்பொருமாணாகி * ஒருமுறையீரடி மூவுலகளந்தனை *
நாற்றிசைநடுங்கவஞ்சிறைப்பறவையேறி * நால்வாய்மும்மதத்திருசெவி
ஒருதனிவேழத்தரந்தையை * ஒருநாளிருநீர்மடுவுள்தீர்த்தனை *
முத்தீநான்மறைஐவகைவேள்வி * அறுதொழிலந்தணர்வணங்குந்தன்மையை *
ஐம்புலன்அகத்தினுள்செறுத்து * நான்குடனடக்கிமுக்குணத்திரண்டவையகற்றி *
ஒன்றினில்ஒன்றிநின்று * ஆங்கிருபிறப்பறுப்போர்அறியுந்தன்மையை *
முக்கண்நாற்றோள்ஐவாயரவோடு * ஆறுபொதிசடையோன்
அறிவருந்தன்மைப்பெருமையுள்நின்றனை *
ஏழுலகெயிற்றினிற்கொண்டனை * கூறிய அறுசுவைப்பயனுமாயினை *
சுடர்விடும்ஐம்படைஅங்கையுளமர்ந்தனை * சுந்தரநாற்றோள்முந்நீர்வண்ண *
நின்னீரடியொன்றியமனத்தால் * ஒருமதிமுகத்துமங்கையரிருவருமலரன *
அங்கையின்முப்பொழுதும்வருடஅறிதுயிலமர்ந்தனை *
நெறிமுறைநால்வகைவருணமுமாயினை * மேதகுமைம்பெரும்பூதமும்நீயே *

அறுபதமுரலுங்கூந்தல்காரணம் * ஏழ்விடையடங்கச்செற்றனை *
அறுவகைச்சமயமுமறிவருநிலையினை * ஐம்பாலோதியையாகத்திருத்தினை *
அறமுதல்நான்கவையாய்மூர்த்திமூன்றாய் *
இருவகைப்பயனாயொன்றாய்விரிந்துநின்றனை.
குன்றாமதுமலர்ச்சோலைவண்கொடிப்படப்பை *
வருபுனல்பொன்னிமாமணியலைக்கும் * செந்நெலொண்கழனித்திகழ்வனமுடுத்த *
கற்போர்புரிசெய்கனகமாளிகை * நிமிர்கொடிவிசும்பில்இளம்பிறைதுவக்கும் *
** செல்வம்மல்குதென்திருக்குடந்தை * அந்தணர்மந்திரமொழியுடன்வணங்க *
ஆடரவமளியிலறிதுயிலமர்ந்தபரம *
நின்னடியிணைபணிவன்வருமிடரகலமாற்றோவினையே.

(தனிப்பாடல்.)

இடங்கொண்டநெஞ்சத்திணங்கிக்கிடப்பன * என்றும்பொன்னித்
தடங்கொண்டதாமரைசூழும்மலர்ந்ததண்பூங்குடந்தை *
விடங்கொண்டவெண்பல்கருந்துத்திசெங்கண்தழலுமிழ்வாய் *
படங்கொண்டபாம்பணைப்பள்ளிகொண்டான்திருப்பாதங்களே.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவெழுகூற்றிருக்கை முற்றிற்று.

---

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# சிறிய திருமடல்.

---

## தனியன்

ர்ளிச்செழுமலரோர்தாரான்முளைமதியம் கொள்ளிக்கென்னுள்ளங்கொதியாமே—வள்ளல்
வாளன்சீர்க்கலியன்கார்க்கலியைவெட்டி மருவாளன்தந்தான்மடல்.

---

**காரார்வரைக்கொங்கைகண்ணார்கடலுடுக்கை * சீரார்சுடர்சுட்டிசெங்கலுழிப்பேராற்றுப்
பேராரமார்பிற்பெருமாமழைக்கூந்தல் * நீராரவேலிநிலமங்கையென்னும் * இப்
பாரோர்சொலப்பட்டமூன்றன்றே* அம்மூன்றும்ஆராயில்தானே அறம்பொருளின்பமென்று-
ஆராரிவற்றினிடையதனையெய்துவார் * சீராரிருகலையுமெய்துவர் * சிக்கனமற்று
ஆராலுமுண்டென்பாரென்பதுதானதுவும் * ஓராமையன்றேஉலகத்தார்சொல்லுஞ்சொல் *
ஓராமையாமாறதுவுரைக்கேன்கேளாமே * காரார்புரவியேழ்பூண்டதனியாழி *
தேரார்நிறைகதிரோன்மண்டலத்தைக்கீண்டுபுக்கு * ஆராவமுதமங்கெய்தி * அதில்நின்றும்
வாராதொழிவதொன்றுண்டே * அதுநிற்கஏரார்முயல்விட்டுக்காக்கைப்பின்போவதே *

ஏராரிளமுலையீர்என்றனக்குற்றதுதான் * காரார்குழலெடுத்துக்கட்டி * கதிர்முலையை
வாராரவீக்கிமணிமேகலைதிருத்தி * ஆராரயில்வேற்கணஞ்சனத்தின்நீறணிந்து * [வன் *
சீரார்செழும்பந்துகொண்டடியாநின்றேன்நான் * நீரார்கமலம்போற்செங்கண்மாலென்றொரு
பாரோர்களெல்லாம்மகிழப்பறைகறங்க * சீரார்குடமிரண்டேந்தி * செழுந்தெருவே
ஆராரெனச்சொல்லியாடுமதுகண்டு * ஏராரிளமுலையாரென்னையருமெல்லாரும் *
வாராயோவென்றார்க்குச்சென்றேனென்வல்வினையால் * காரார்மணிநிறமுங்கைவளையுங்
[காணேன்நான் *
ஆரானுஞ்சொல்லிற்றுங்கொள்ளேன்* அறிவழிந்துதீராவுடம்பொடுபேதுறுவேன்கண்டிரங்கி*
ஏரார்கிளிக்கிளவியெம்மனைதான்வந்தென்னை* சீரார்செழும்புழுதிக்காப்பிட்டு* செங்குறிஞ்சித்
தாரார்நறுமாலைச்சாத்தற்கு * தான்பின்னும்நேராதனவொன்றுநேர்ந்தாள் * அதனாலும்
தீராதென்சிந்தைநோய்தீராதென்பேதுறவு * வாராதுமாமைஅதுகண்டுமற்றாங்கே *
ஆரானுமூதறியுமம்மனைமார்சொல்லுவார் * பாரோர்சொலப்படும்கட்டுப்படுத்திரேல் *
ஆரானும்மெய்ப்படுவனென்றார்* அதுகேட்டுக்காரார்குழற்கொண்டைக்கட்டுவிச்சிகட்டேறி *
சீரார்சுளகில்சிலநெல்பிடித்தெறியா * வேராவிதிர்விதிராமெய்சிலிராக் கைமோவா *
பேராயிரமுடையானென்றாள் * பேர்த்தேயும்காரார்திருமேனிகாட்டினாள் * கையதுவும்
சீரார்வலம்புரியேயென்றாள் * திருத்துழாய்த்தாரார்நறுமாலைகட்டுரைத்தாள்கட்டுரையா *
நீரேதுமஞ்சேன்மின்நும்மகளைநோய்செய்தான் * ஆரானுமல்லனறிந்தேனவனைநான் *
கூரார்வேற்கண்ணீருமக்கறியக்கூறுகேனே.
ஆராலிவ்வையமடியளப்புண்டதுதான் * ஆராலிலங்கைபொடிபொடியாவீழ்ந்தது * மற்
றாராலேகன்மாரிகாத்ததுதான் * ஆழிநீர்ஆரால்கடைந்திடப்பட்டது * அவன்காண்மின்
ஊராநிரைமேய்த்துலகெல்லாமுண்டுமிழ்ந்தும் * ஆராததன்மையனாயாங்கொருநாளாய்ப்பாடி*
சீரார்கலையல்குல்சீரடிச்செந்துவர்வாய் * வாரார்வனமுலையாள்மத்தாரப்பற்றிக்கொண்டு *
ஏராரிடைநோவத்தனையோர்போதுமாய் * சீரார்தயிர்கடைந்துவெண்ணெய்திரண்டதனை *
வேரார்நுதல்மடவாள்வேறோர்கலத்திட்டு * நாராருறியேற்றிநன்கமையவைத்ததனை *
போரார்வேற்கண்மடவாள்போந்தனையும்பொய்யுறக்கம் * ஓராதவன்போலுறங்கியறிவுற்று*
தாரார்தடந்தோள்களுள்ளளவுங்கைநீட்டி * ஆராதவெண்ணெய்விழுங்கி * அருகிருந்த
மோரார்குடமுருட்டிமுன்கிடந்ததானத்தே * ஓராதவன்போல்கிடந்தானைக்கண்டவளும் *
வாராத்தான்வைத்ததுகாணாள் * வயிறடித்திங்குஆரார்புகுதுவார்ஐயரிவரல்லால் *
நீராமிதுசெய்தீரென்றோர்நெடுங்கயிற்றால் * ஊரார்களெல்லாருங்காணவுரலோடே *
தீராவெகுளியளாய்ச்சிக்கனஆர்த்தடிப்ப * ஆராவயிற்றினோடாற்றாதான்.* அன்றியும்
நீரார்நெடுங்கயத்தைச்சென்றலைக்கநின்றுரப்பி *
ஓராயிரம்பணவெங்கோவியனாகத்தை * வாராயெனக்கென்றுமற்றதன்மத்தகத்து *
சீரார்திருவடியால்பாய்ந்தான் * தன்சீதைக்குநேராவனென்றோர்நிசாசரிதான்வந்தாளை *
கூரார்ந்தவாளால்கொடிமூக்குங் காதிரண்டும் * ஈராவிடுத்தவட்குமூத்தோனை * வெந்நரகம்
சேராவகையேசிலைகுனித்தான் * செந்துவர்வாய்வாரார்வனமுலையாள்வைதேவிகாரணமா *
ஏரார்தடந்தோளிராவணனை * ஈரைந்துசீரார்சிரமறுத்துச் செற்றுகந்தசெங்கண்மால்.
போரார்நெடுவேலோன்பொன்பெயரோனாகத்தை * கூரார்ந்தவள்ளுகிராற்கீண்டு * குடல்
சீரார்திருமார்பின்மேற்கட்டி*செங்குருதிசோராக்கிடந்தானைக்குங்குமத்தோள்கொட்டி*[மாலை

ஆராவெழுந்தானரியுருவாய் * அன்றியும்பேர்வாமனாகியகாலத்து * மூவடிமண்
தாராயெனக்கென்றுவேண்டிச்சலத்தினால் * நீரேற்றுலகெல்லாம்நின்றளந்தான்மாவலியை *
ஆராதபோரிலசுரர்களுந்தானுமாய் * காரார்வரைநட்டுநாகங்கயிறாக *
பேராமல்தாங்கிக்கடைந்தான் * திருத்துழாய்த்தாரார்ந்தமார்வன்தடமால்வரைபோலும் *
போரானைபொய்கைவாய்க்கோட்பட்டுநின்றலறி * நீரார்மலர்க்கமலங்கொண்டோர்நெடுங்
நாராயணா ஓ மணிவண்ணா நாகணையாய்* வாராய்என்னாரிடரைநீக்காய் * [கையால் *
எனவெகுண்டுதீராதசீற்றத்தாற்சென்றிரண்டுகூறாக *
ஈராவதனையிடர்கடிந்தானெம்பெருமான் * பேராயிரமுடையான்பேய்ப்பெண்டீர்நும்மகளை *
தீராநோய்செய்தானெனவுரைத்தாள்.* சிக்கனமற்றாரானுமல்லாமைகேட்டெங்களம்மனையும் *
போரார்வேற்கண்ணீரவனாகில்பூந்துழாய் * தாராதொழியுமேதன்னடிச்சியல்லளே * மற்று
ஆரானுமல்லனேயென்றொழிந்தாள்* நானவனைக்காரார்திருமேனிகண்டதுவேகாரணமா *
பேராப்பிதற்றாத்திரிதருவன் * பின்னையும் ஈராப்புகுதலுமிவ்வுடலைத்தண்வாடை *
சோராமறுக்கும்வகையறியேன் * சூழ்குழலார் ஆரானுமேசுவரென்னுமதன்பழியை *
வாராமல்காப்பதற்குவாளாவிருந்தொழிந்தேன் * வாராய்மடநெஞ்சேவந்து * மணிவண்ணன்
சீரார்திருத்துழாய்மாலைநமக்கருளி * தாரான்தருமென்றிரண்டத்திலொன்றதனை *
ஆரானுமொன்னாதார் கேளாமேசொன்னக்கால் * ஆராயுமேலும்பணிகேட்டதன்றெனிலும் *
போராதொழியாதேபோந்திடுநீயென்றேற்கு * காரார்கடல்வண்ணன்பின்போனநெஞ்சமும் *
வாராதேயென்னைமறந்ததுதான்* வல்வினையேன் ஊராருகப்பதேயாயினேன்* மற்றெனக்கிங்
காராய்வாரில்லை அழல்வாய்மெழுகுபோல் *
நீராயுருகுமென்னாவி * நெடுங்கண்கள் ஊராருறங்கிலுந்தானுறங்கா * உத்தமன்றன்
பேராயினவேபிதற்றுவன் * பின்னையுங்காரார்கடல்போலுங்காமத்தராயினார் *
ஆரேபொல்லாமையறிவார்அதுநிற்க * ஆரானுமாதானுமல்லளவள்காணீர் *
வாரார்வனமுலைவாசவதத்தையென்று * ஆரானுஞ்சொல்லப்படுவாள் * அவளுந்தன்
பேராயமெல்லாமொழியப்பெருந்தெருவே * தாரார்தடந்தோள்தளைக்காலன்பின்போனாள் *
ஊராரிகழ்ந்திடப்பட்டாளே * மற்றெனக்கிங்கு ஆரானுங்கற்பிப்பார்நாயகரே*
நானவனைக்காரார் திருமேனிகாணுமளவும்போய் *
சீரார்திருவேங்கடமேதிருக்கோவலூரே * மதிட்கச்சியூரகமேபேரகமே *
பேராமருதிறுத்தான்வெள்ளறையேவெஃகாவே * பேராலிதண்கால்நறையூர்திருப்புலியூர் *
*ஆரமஞ்சூழ்ந்தவரங்கம் * கணமங்கைகாரார்மணிநிறக்கண்ணனூர்விண்ணகரம் *
சீரார்கணபுரஞ்சேறைதிருவழுந்தூர் * காரார்குடந்தைகடிகைகடன்மல்லை *
ஏரார்பொழில்சூழிடவெந்தைநீர்மலை * சீராரும்மாலிருஞ்சோலைதிருமோகூர் *
பாரோர்புகழும்வதரிவடமதுரை * ஊராயவெல்லாமொழியாமேநானவனை *
ஓரானைகொம்பொசித்தோரானைகோள்விடுத்தசீரானை * செங்கணெடியானைத்தேன்துழாய்த்
தாரானை* தாமரைபோற்கண்ணனை* எண்ணருஞ்சீர்ப்பேராயிரமும்பிதற்றி* பெருந்தெருவே
ஊராரிகழிலுமூராதொழியேன்நான் * வாரார்பூம்பெண்ணைமடல்.

## தனிப்பாடல்.

ஊராதொழியேனுலகறியவொண்ணுதலீர் * சீரார்முலைத்தடங்கள்சேரளவும்—பாரெல்லாம்
அன்றோங்கிநின்றளந்தான் நின்றதிருநறையூர் * மன்றோங்க வூர்வன்மடல்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

சிறியதிருமடல் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமடல்.

**தனியன்.**

*பொன்னுலகில்வானவரும்பூமகளும்போற்றிசெய்யும்—நன்னுதலீர்நம்பிநறையூரர் *
மன்னுலகில் என்னிலைமைகண்டுமிரங்காரேயாமாகில் * மன்னுமடலூர்வன்வந்து.*

---

*மன்னியபல்பொறிசேராயிரவாய்வாளரவின் * சென்னிமணிக்குடுமித்தெய்வச்சுடர்நடுவுள் *
மன்னியநாகத்தணைமேலோர்மாமலைபோல் * மின்னுமணிமகரகுண்டலங்கள்வில்வீச *
துன்னியதாரகையின்பேரொளிசேராகாசம் * என்னும்விதானத்தின்கீழால் * இருசுடரை
மன்னும்விளக்காகவேற்றி * மறிகடலும்பன்னுதிரைக்கவரிவீச * நிலமங்கை
தன்னைமுனநாளளவிட்டதாமரைபோல் * மன்னியசேவடியைவானியங்குதாரகைமீன் *
என்னும்மலர்ப்பிணையலேய்ந்த * மழைக்கூந்தல் தென்னனுயர்பொருப்புந்தெய்வவடமலையும் *
என்னுமிவையேமுலையாவடிவமைந்த * அன்னநடையவணங்கே * அடியிணையைத்
தன்னுடையவங்கைகளால்தான்தடவத்தான்கிடந்து * ஓருன்னியயோகத்துறக்கந்
தலைக்கொண்ட
பின்னை * தன்னாபிவலயத்துப்பேரொளிசேர் * மன்னியதாமரைமாமலர்பூத்து * அம்மலர்மேல்
முன்னந்திசைமுகனைத்தான்படைக்க * மற்றவனும்முன்னம்படைத்தனன்நான்மறைகள்.
அம்மறைதான்—மன்னுமறம்பொருளின்பம்வீடென்றுலகில் * [தோர்*
நன்னெறிமேம்பட்டனநான்கன்றே*நான்கினிலும்பின்னையதுபின்னைப்பெயர்தருமென்ப
தொன்னெறியைவேண்டுவார்வீழ்கனியுமூழிலையும்*என்னுமிவையேநுகர்ந்துடலம்தாம்வருந்தி*
துன்னுமிலைக்குரம்பைத்துஞ்சியும் * வெஞ்சுடரோன்மன்னுமழல்நுகர்ந்தும்வண்தடத்தினுட்
[கிடந்தும் *
இன்னதோர்தன்மையராயீங்குடலம்விட்டெழுந்து * தொன்னெறிக்கட்சென்றாரெனப்படுஞ்
[சொல்லல்லால் *
இன்னதோர்காலத்தினையாரிதுபெற்றார் * என்னவுங்கேட்டறிவதில்லை.
உளதென்னில்மன்னுங்கடுங்கதிரோன்மண்டலத்தின் நன்னடுவுள் * [சொல்லாதே *
அன்னதோரில்லியினூடுபோய் * வீடென்னும்தொன்னெறிக்கட்சென்றாரைச்சொல்லுமின்கள்
அன்னதேபேசுமறிவில்சிறுமனத்து * ஆங்குஅன்னவரைக்கற்பிப்போமியாமே * அதுநிற்க.
முன்னநான்சொன்ன அறத்தின்வழிமுயன்ற * அன்னவர்தாங்கண்டீர்களாயிரக்கண்
[வானவர்கோன் *
பொன்னகரம்புக்கமரர்போற்றிசெப்ப * பொங்கொளிசேர்கொன்னவிலுங்கோளரிமாத்
[தான்சுமந்தகோலஞ்சேர் *
மன்னியசிங்காசனத்தின்மேல் * வாணெடுங்கண்கன்னியராலிட்டகவரிப்பொதியவிழ்ந்தாங்கு*
இன்னிளம்பூந்தென்றலியங்க * மருங்கிருந்தமின்னனையநுண்மருங்குல்மெல்லியலார்
[வெண்முறுவல் *
முன்னம்முகிழ்த்தமுகிழ்நிலாவந்தரும்ப * அன்னவர்தம்மானோக்கமுண்டாங்கணிமலர்சேர் *
பொன்னியல்கற்பகத்தின்காடுடுத்தமாடெல்லாம் * மன்னியமந்தாரம்பூத்தமதுத்திவலை **

இன்னிசைவண்டமருஞ்சோலைவாய்மாலைசேர் * மன்னியமாமயில்போல்கூந்தல் * மழைத்
[தடங்கண்*
மின்னிடையாரோடும்விளையாடிவேண்டிடத்து * மன்னுமணித்தலத்துமாணிக்கமஞ்சரியின் *
மின்னிஞெளிசேர்பளிங்குவிளிம்படுத்த* மன்னும்பவளக்கால்செம்பொன்செய்மண்டபத்துள்*
அன்னநடையவரம்பையர்தங்கைவளர்த்த * இன்னிசையாழ்பாடல்கேட்டின்புற்று * இரு
[விசும்பில்
மன்னுமழைதவழும்வாணிலாநீண்மதிதோய் * மின்னிஞெளிசேர்விசும்பூரும்மாளிகைமேல் *
மன்னுமணிவிளக்கைமாட்டி * மழைக்கண்ணார்பன்னுவிசித்திரமாப்பாப்படுத்தபள்ளிமேல் *
துன்னியசாலேகஞ்சூழ்கதவந்தாள்திறப்ப * அன்னமுழக்கநெரிந்துக்கவாணீலச் *
சின்னநறுந்தாதுசூடி * ஓர்மந்தாரம்துன்னுநறுமலரால்தோள்கொட்டி * கற்பகத்தின்
மன்னுமலர்வாய்மணிவண்டுபின்தொடர * இன்னிளம்பூந்தென்றல்புகுந்தீங்கிளமுலைமேல் *
நன்னறுஞ்சந்தனச்சேறுபுலர்த்த * தாங்கருஞ்சீர்மின்னிடைமேல்கைவைத்திருந்தேந்
[திளமுலைமேல் *
பொன்னரும்பாரம்புலம்ப * அகங்குழைந்தாங்கு இன்னவுருவினிமையாத்தடங்கண்ணார்*
அன்னவர்தம்மானோக்கமுண்டாங்கணிமுறுவல் * இன்னமுதம்மாந்தியிருப்பர் * இதுவன்றே
அன்னவறத்தின்பயனாவது * ஒண்பொருளும் அன்னதிறத்ததேயாதலால் * காமத்தின்
மன்னும்வழிமுறையேநிற்றுநாம்* மானோக்கினன்னநடையாரலரேசஆடவர்மேல் *
மன்னுமடலூராரென்பதோர்வாசகமும் * தென்னுரையிற்கேட்டறிவதுண்டு *
அதனையாந்தெளியோம் மன்னும்வடநெறியேவேண்டினோம்* வேண்டாதார்
தென்னன்பொதியில்செழுஞ்சந்தனக்குழம்பின் * அன்னதோர்தன்மையறியாதார் *
ஆயன்வேய் இன்னிசையோசைக்கிரங்காதார்* மால்விடையின்
மன்னுமணிபுலம்பவாடாதார்* பெண்ணைமேல்பின்னுமவ்வன்றில்பெடைவாய்ச்சிறுகுரலுக்கு*
உன்னியுடலுருகிநையாதார் * உம்பர்வாய்த்துன்னுமதியுகுத்ததூநிலாநீணெருப்பில் *
தம்முடலம்வேவத்தளராதார் * காமவேள்மன்னுஞ்சிலைவாய்மலர்வாளிகோத்தெய்ய *
பொன்னெடுவீதிபுகாதார் * தம்பூவணைமேல்சின்னமலர்க்குழலுமல்குலுமென்முலையும் *
இன்னிளவாடைதடவத்தாங்கண்டுயிலும் * பொன்னனையார்பின்னுந்திருவுறுக *
போர்வேந்தன்தன்னுடையதாதைபணியாலரசொழிந்து *
பொன்னகரம்பின்னேபுலம்பவலங்கொண்டு * மன்னும்வளநாடுகைவிட்டு * மாதிரங்கள்
மின்னுருவில்விண்டேர்திரிந்துவெளிப்பட்டு*கன்னிரைந்துதீய்ந்துகழையுடைந்துகால்சுழன்று*
பின்னுந்திரைவயிற்றுப்பேயேதிரிந்துலவா * கொன்னவிலும்வெங்கானத்தூடு * கொடுங்கதி
[ரோன்
துன்னுவெயில்வறுத்தவெம்பரல்மேல்பஞ்சடியால் * மன்னனிராமன்பின்வைதேவியென்று
[ரைக்கும் *
அன்னநடையவணங்குநடந்திலளே* பின்னுங்கருநெடுங்கண்செவ்வாய்ப்பிணைநோக்கின் *
மின்னனையநுண்மருங்குல்வேகவதியென்றுரைக்கும் கன்னி*தன்னின்னுயிராங்காதலனைக்
தன்னுடையமுன்தோன்றல்கொண்டேகத்தான்சென்று * அங்கு [காணாது *
அன்னவனைநோக்காதழித்துரப்பி*
வாளமருள்கன்னவில்தோள்காளையைக்கைப்பிடித்து மீண்டும்போய்*
பொன்னவிலுமாகம்புணர்ந்திலளே.
பூங்கங்கைமுன்னம்புனல்பரக்கும்நன்னாடன்மின்னாடும் *

கொன்னவிலும்நீள்வேல்குருக்கள்குலமதலை* தன்னிகரொன்றில்லாதவென்றித்தனஞ்சயனை *
பன்னகராயன்மடப்பாவை* பாவைதன்மன்னியநாணச்சம்மடமென்றிவையகல*
தன்னுடையகொங்கைமுகநெரிய* தானவன்றன்பொன்வரையாகந்தழீஇக்கொண்டுபோய்*
தனது நன்னகரம்புக்குநயந்தினிதுவாழ்ந்ததுவும்* முன்னுரையிற்கேட்டறிவதில்லையே.
சூழ்கடலுள்பொன்னகரஞ்செற்றபுரந்தரனோடேரொக்கும் *
மன்னவன்வாணனவுணர்க்குவாள்வேந்தன் * தன்னுடையபாவையுலகத்துத்தன்னொக்கும் *
கன்னியரையில்லாதகாட்சியாள்* தன்னுடையவின்னுயிர்த்தோழியாலெம்பெருமானீன்துழாய்*
மன்னுமணிவரைத்தோள்மாயவன் * பாவியேனென்னையிதுவிளைத்தவீரிரண்டுமால்வரைத்
[தோள் *
மன்னவன்றன்காதலனைமாயத்தாற்கொண்டுபோய் * கன்னிதன்பால்வைக்கமற்றவனோ
[டெத்தனையோர் *
மன்னியபேரின்பமெய்தினாள்*மற்றிவைதானென்னாலேகேட்டீரேஏழைகாளென்னுரைக்கேன்*
மன்னுமலையரையன்பொற்பாவை * வாணிலாமின்னுமணிமுறுவல்செவ்வாயுமையென்னும் *
அன்னநடையவணங்குநுடங்கிடைசேர் * பொன்னுடம்புவாடப்புலனைந்தும்நொந்தகல *
தன்னுடையகூழைச்சடாபாரந்தான்தரித்து * ஆங்கன்னவருந்தவத்தினூடுபோய் *
[ஆயிரந்தோள்
மன்னுகரதலங்கள்மட்டித்து * மாதிரங்கள்மின்னியெரிவீசமேலெடுத்தசூழ்கழற்கால் *
பொன்னுலகமேழுங்கடந்தும்பர்மேற்சிலும்ப * மன்னுகுலவரையும்மாருதமுந்தாரகையும் *
தன்னினுடனேசுழலச்சுழன்றாடும் * கொன்னவிலும்மூவிலைவேற்கூத்தன்பொடியாடி *
அன்னவன்றன்பொன்னகலஞ்சென்றாங்கணைந்திலளே * பன்னியுரைக்குங்காற்பாரதமாம்.
பாவியேற்கென்னுறுநோயானுரைப்பக்கேண்மின்* இரும்பொழில்சூழ்
மன்னுமறையோர்திருநறையூர்மாமலைபோல்* பொன்னியலுமாடக்கவாடங்கடந்துபுக்கு*
என்னுடையகண்களிப்பநோக்கினேன் * நோக்குதலும்மன்னன்திருமார்பும்வாயுமடியிணையும் *
பன்னுகரதலமும்கண்களும்*பங்கயத்தின்பொன்னியல்காடோர்மணிவரைமேல்பூத்ததுபோல்*
மின்னியொளிபடைப்பவீணாணும்தோள்வளையும் * மன்னியகுண்டலமுமாரமும்நீண்முடியும்*
துன்னுவெயில்விரித்தசூளாமணியிமைப்ப* மன்னுமரதகக்குன்றின்மருங்கே* ஓர்
இன்னிளவஞ்சிக்கொடியொன்றுநின்றதுதான்* அன்னமாய்மானாயணிமயிலாயாங்கிடையே *
மின்னாயிளவேயிரண்டாயிணைச்செப்பாய்* முன்னாயதொண்டையாய்க்கெண்டைக்குல
அன்னதிருவுருவம்நின்றதறியாதே* என்னுடையநெஞ்சுமறிவுமினவளையும் * [மிரண்டாய்*
பொன்னியலும்மேகலையுமாங்கொழியப்போந்தேற்கு* மன்னுமறிகடலுமார்க்கும் * மதியுகுத்த
இன்னிலாவின்கதிருமென்றனக்கேவெய்தாகும்*தன்னுடையதன்மைதவிரத்தானென்கொலோ.
தென்னன்பொதியில்செழுஞ்சந்தின்தாதளைந்து * மன்னிவ்வுலகைமனங்களிப்பவந்தியங்கும் *
இன்னிளம்பூந்தென்றலும்வீசுமெரியெனக்கே * முன்னியபெண்ணைமேல்முள்முளரிக்
[கூட்டகத்து *
பின்னுமவ்வன்றில்பெடைவாய்ச்சிறுகுரலும் * என்னுடையநெஞ்சுக்கோரீர்வாளாமென்
[செய்கேன்
கன்னவில்தோள்காமன்கருப்புச்சிலைவளைய * கொன்னவிலும்பூங்கணைகள்கோத்துப்பொத
[வணைந்து *
தன்னுடையதோள்கழியவாங்கி*தமியேன்மேல்என்னுடையநெஞ்சேயிலக்காகவெய்கின்றான்*
பின்னிதனைக்காப்பீர்தானில்லையே. பேதையேன்கன்னவிலும்காட்டகத்தோர்வல்லிக்கடி
நன்னறுவாசமற்றாரானுமெய்தாமே*மன்னும்வறுநிலத்துவாளாங்குகுத்ததுபோல் * [மலரின்

ஸ்ரீ:

நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி.

## தனியன்கள்.

பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம் ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம்
ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமம் நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்.

திருவழுதிநாடென்றுந்தென்குருகூரென்றும் மருவினியவண்பொருநலென்றும்- அருமறைகள்
அந்தாதிசெய்தா னடியிணையே யெப்பொழுதும் சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.

மனத்தாலும்வாயாலும் வண்குருகூர்பேணும் இனத்தாரையல்லாதிறைஞ்சேன்-தனத்தாலும்
ஏதுங்குறைவிலேன் எந்தைசடகோபன் பாதங்கள் யாமுடைய பற்று.

ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமானுசமுனிதன் வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன்
ஆய்ந்தபெருஞ் சீரார்சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும் பேராதவுள்ளம்பெற.

வான்திகழுஞ்சோலை மதிளரங்கர்வண்புகழ்மேல் ஆன்றதமிழ்மறைகளாயிரமும்—ஈன்ற
முதற்றாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த இதத்தாயிராமானுசன்.

மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் தக்கநெறியுந் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும்வாழ்வினையு மோதுங்குருகையர்கோன் யாழினிசைவேதத்தியல்.

தனியன்கள் முற்றிற்று.

---

## முதற்பத்து—முதல்திருவாய்மொழி—உயர்வற

** உயர்வறவுயர்நலம் உடையவன்யவனவன்* மயர்வறமதிநலம் அருளினன்யவனவன்
அயர்வறுமமரர்கள் அதிபதியவனவன்* துயரறுசுடரடி தொழுதெழென்மனனே. 1

மனனகமலமற மலர்மிசையெழுதரும்* மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன்*
இனனுணர்முழுநலம் எதிர்நிகழ்கழிவினும்* இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே. 2

இலனதுவுடையனிது எனநினைவரியவன்* நிலனிடைவிசும்பிடை உருவினனருவினன்*
புலனொடுபுலனலன் ஒழிவிலன்பரந்த* அந்நலனுடையொருவனை நணுகினம்நாமே. 3

நாமவனிவனுவன் அவளிவளுவளெவள்* தாமவரிவருவர் அதுவிதுவுதுவெது*
வீமவையிவையுவை அவைநலந்தீங்கவை* ஆமவையாயவை ஆய்நின்றவவரே. 4

அவரவர்தமதமது அறிவறிவகைவகை* அவரவரிறையவர் எனவடியடைவர்கள்*
அவரவரிறையவர் குறைவிலரிறையவர்* அவரவர்விதிவழி அடையநின்றனரே. 5

நின்றனரிருந்தனர் கிடந்தனர்திரிந்தனர்* நின்றிலரிருந்திலர் கிடந்திலர்திரிந்திலர்*
என்றுமொரியல்வினர் எனநினைவரியவர்* என்றுமொரியல்வொடு நின்றவெந்திடரே. 6

திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை* படர்பொருள்முழுவதுமாய் அவையவைதொறும்*
உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும்பரந்துளன்* சுடர்மிகுசுருதியுள் இவையுண்டசுரனே. 7

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும்* வரன்முதலாயவை முழுதுண்டபரபரன்*
புரமொருமூன்றெரித்துஅமரர்க்குமறிவியந்து* அரனயனென உலகழித்தமைத்துளனே. 8

உளனெனிலுளன் அவனுருவமிவ்வுருவுகள் * உளனலனெனில் அவனருவமிவ்வருவுகள்*
உளனெனவிலனென இவைகுணமுடைமையின்* உளனிருதகைமையொடுஒழிவிலன்பரந்தே.9

பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன்* பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவற*
கரந்தசிலிடந்தொறும்இடந்திகழ்பொருடொறும்*கரந்தெங்கும்பரந்துளன்இவையுண்டகரனே.

** கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை* வரனவில்திறல்வலி அளிபொறையாய்நின்ற *
பரனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொல்* நிரனிறையாயிரத்து இவைபத்தும்வீடே. 11

அடிவரவு—உயர் மன னிலன் நாம் அவரவர் நின்றனர், திட சுரரறி உளன் பரந்த கர வீடு.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்.

---

## இரண்டாந் திருவாய்மொழி—வீடுமின்முற்றவும்

** வீடுமின்முற்றவும் * வீடுசெய்து * உம்முயிர்
வீடுடையானிடை * வீடுசெய்ம்மினே. 1

மின்னின்னிலையில * மன்னுயிராக்கைகள் *
என்னுமிடத்து * இறையுன்னுமினீரே. 2

நீர்நுமதென்றிவை * வேர்முதல்மாய்த்து * இறை
சேர்மினுயிர்க்கு * அதனேர்நிறையில்லே. 3

இல்லதுமுள்ளதும் * அல்லதவனுரு *
எல்லையிலந்நலம் * புல்குபற்றற்றே. 4

அற்றதுபற்றெனில் * உற்றதுவீடுயிர் *
செற்றதுமன்னுறில் * அற்றிறைபற்றே. 5

பற்றிலனீசனும் * முற்றவும்நின்றனன் *
பற்றிலையாய் * அவன்முற்றிலடங்கே. 6

அடங்கெழில்சம்பத்து * அடங்கக்கண்டு * ஈசன்
அடங்கெழிலஃதென்று * அடங்குகவுள்ளே. 7

உள்ளமுரைசெயல் * உள்ளவிம்மூன்றையும் *
உள்ளிக்கெடுத்து * இறையுள்ளிலொடுங்கே. 8

ஒடுங்கவவன்கண் * ஒடுங்கலுமெல்லாம் *
விடும்பின்னுமாக்கை * விடும்பொழுதெண்ணே. 9

எண்பெருக்கந்நலத்து * ஒண்பொருளீறில *
வண்புகழ்நாரணன் * திண்கழல்சேரே. 10

** சேர்த்தடத் தென்குருகூர்ச்சடகோபன்சொல் *
சீர்த்தொடையாயிரத்து * ஓர்த்தவிப்பத்தே. 11

அடிவரவு—வீடுமின் மின் நீ றில்ல தற்ற பற்று, அடங் குள்ள மொடுங்க எண்பெரு சேர் பத்து. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## முதற்பத்து மூன்றாந்திருவாய்மொழி—பத்துடையடியவர்.

** பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன் * மலர்மகள்விரும்பும் நமரும்பெறலடிகள் *
மத்துறுகடைவெண்ணெய்களவினில் உரவிடையாப்புண்டு *
எத்திறமுரலினோடு இணைந்திருந்தேங்கியவெளிவே. 1

எளிவருமியல்வினன் நிலைவரம்பிலபலபிறப்பாய் *
ஒளிவருமுழுநலம் முதலிலகேடிலவீடாம் *
தெளிதருநிலைமையதொழிவிலன் முழுவதுமிறையோன் *
அளிவருமருளினோடு அகத்தனன்புறத்தனனமைந்தே. 2

அமைவுடையறநெறி முழுவதுமுயர்வறவுயர்ந்து *
அமைவுடைமுதல்கெடல் ஒடிவிடையறநிலமதுவாம் *
அமைவுடையமரரும் யாவையும்யாவரும்தானும் *
அமைவுடைநாரணன்மாயையை அறிபவர்யாரே. 3

யாருமோர்நிலைமையனென அறிவரியவெம்பெருமான் *
யாருமோர்நிலைமையனென அறிவெளியவெம்பெருமான் *
பேருமோராயிரம் பிறபலவுடையவெம்பெருமான் *
பேருமோருருவமும் உளதில்லையிலதில்லைபிணக்கே. 4

பிணக்கறவறுவகைச்சமயமும் நெறியுள்ளியுரைத்த *
கணக்கறுநலத்தனன் அந்தமிலாதியம்பகவன் *
வணக்குடைத்தவநெறி வழிநின்றுபுறநெறிகளைகட்டு *
உணக்குமின்பசையற அவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே. 5

உணர்ந்துணர்ந்திழிந்தகன்று உயர்ந்துருவியந்தவிந்நிலைமை *
உணர்ந்துணர்ந்துணரிலும் இறைநிலையுணர்வரிதுயிர்காள் *
உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து அரியயனரனென்னுமிவரை *
உணர்ந்துணர்ந்துரைத்துரைத்து இறைஞ்சுமின்மனப்பட்டதொன்றே. 6

ஒன்றெனப்பலவென அறிவரும்வடிவினுள்நின்ற *
நன்றெழில்நாரணன் நான்முகனரனென்னுமிவரை *
ஒன்றநும்மனத்துவைத்து உள்ளிநும்மிருபசையறுத்து *
நன்றெனநலஞ்செய்வது அவனிடைநம்முடைநாளே. 7

நாளுநின்றடுநமபழமை அங்கொடுவினையுடனே
மாளும் * ஓர்குறைவில்லை மனனகமலமறக்கழுவி *
நாளுநந்திருவுடையடிகள்தம் நலங்கழல்வணங்கி *
மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே. 8

வலத்தனன்திரிபுரமெரித்தவன் இடம்பெறத்துந்தித்
தலத்து * எழுதிசைமுகன்படைத்த நல்லுலகமும்தானும் *
புலப்படப்பின்னும்தன்னுலகத்தில் அகத்தனன்தானே *
சொலப்புகில்இவைபின்னும்வயிற்றுள இவையவன்துயக்கே. 9

துயக்கறுமதியில்நன்ஞானத்துள் அமரரைத்துயக்கும் *
மயக்குடைமாயைகள் வானிலும்பெரியனவல்லன் *
புயற்கருநிறத்தனன் பெருநிலங்கடந்தநல்லடிப்போது *
அயர்ப்பிலன்அலற்றுவன் தழுவுவன்வணங்குவனமர்ந்தே. 10

** அமரர்கள்தொழுதெழ அலைகடல்கடைந்தவன்தன்னை *
அமர்பொழில்வளங்குருகூர்ச் சடகோபன்குற்றேவல்கள் *
அமர்சுவையாயிரத்து அவற்றினுள்இவைபத்தும்வல்லார் *
அமரரோடுயர்வில்சென்று அறுவர்தம்பிறவியஞ்சிறையே. 11

பத்துடை யெளிவரு மமைவுடை யாருமோர், பிணக்கற வுணர்ந்துணர்ந் தொன்
றென நாளுநின், வலத்தனன் துயக்கறு அமரர்க ளஞ்சிறை.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## முதற்பத்து நான்காந் திருவாய்மொழி—அஞ்சிறையமடநாராய்.

** அஞ்சிறையமடநாராய் அளியத்தாய் * நீயும்நின்
அஞ்சிறையசேவலுமாய் ஆவாவென்றெனக்கருளி *
வெஞ்சிறைப்புள்ளுயர்த்தாற்கு என்விடுதூதாய்ச்சென்றக்கால் *
வன்சிறையிலவன்வைக்கில் வைப்புண்டாலென்செய்யுமோ. 1

என்செய்யதாமரைக்கண் பெருமானார்க்கென்தூதாய் *
என்செய்யுமுரைத்தக்கால் இனக்குயில்காள்நீரலிரே *
முன்செய்தமுழுவினையால் திருவடிக்கீழ்க்குற்றேவல் *
முன்செய்யமுயலாதேன் அகல்வதுவோவிதியினமே. 2

விதியினால்பெடைமணக்கும் மென்னடையவன்னங்காள் *
மதியினால்குறள்மாணாய் உலகிரந்தகள்வர்க்கு *
மதியிலேன்வல்வினையே மாளாதோவென்று * ஒருத்தி
மதியெல்லாமுள்கலங்கி மயங்குமாலென்னீரே. 3

என்நீர்மைகண்டிரங்கி இதுதகாதென்னாத *
என்னீலமுகில்வண்ணர்க்கு என்சொல்லியான்சொல்லுகேனோ *

நன்னீர்மையினியவர்கண் தங்காதென்றொருவாய்ச்சொல் *
நன்னீலமகன்றில்காள் நல்குதிரோநல்கீரோ. 4

நல்கித்தான்காத்தளிக்கும் பொழிலேழும்வினையேற்கே *
நல்கத்தானாகாதோ நாரணனைக்கண்டக்கால் *
மல்குநீர்ப்புனற்படப்பை இரைதேர்வண்சிறுகுருகே *
மல்குநீர்க்கண்ணேற்கு ஓர்வாசகங்கொண்டருளாயே. 5

அருளாதநீரருளி அவராவிதுவராமுன் *
அருளாழிப்புள்கடவீர் அவர்வீதியொருநாளென்று *
அருளாழியம்மானைக் கண்டக்காலிதுசொல்லி
யருள் * ஆழிவரிவண்டே யாமுமென்பிழைத்தோமே. 6

என்பிழைகோப்பதுபோலப் பனிவாடையீர்கின்ற *
என்பிழையேநினைந்தருளி அருளாததிருமாலார்க்கு *
என்பிழைத்தான்திருவடியின் தகவினுக்கென்றொருவாய்சொல் *
என்பிழைக்குமிளங்கிளியே யான்வளர்த்தநீயலையே. 7

நீயலையேசிறுபூவாய் நெடுமாலார்க்கென்தூதாய் *
நோயெனதுநுவலென்ன நுவலாதேயிருந்தொழிந்தாய் *
சாயலொடுமணிமாமை தளர்ந்தேன்நான் * இனியுனது
வாயலகிலின்னடிசில் வைப்பாரைநாடாயே. 8

நாடாதமலர்நாடி நாடோறும்நாரணன்தன் *
வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று *
வீடாடிவீற்றிருத்தல் வினையற்றதென்செய்வதோ *
ஊடாடுபனிவாடாய் உரைத்தீராயெனதுடலே. 9

உடலாழிப்பிறப்புவீடு உயிர்முதலாமுற்றுமாய் *
கடலாழிநீர்தோற்றி அதனுள்ளேகண்வளரும் *
அடலாழியம்மானைக் கண்டக்காலிதுசொல்லி *
விடலாழிமடநெஞ்சே வினையோமொன்றாமளவே. 10

** அளவியன்றவேழுலகத்தவர் பெருமான்கண்ணனை *
வளவயல்சூழ்வண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த *
அளவியன்றவந்தாதி ஆயிரத்துளிப்பத்தின் *
வளவுரையால்பெறலாகும் வானோங்குபெருவளமே. 11

அஞ்சிறை யென்செய்ய விதியினா லென்னீர்மை, நல்கி யருளாத என்பிழை நீயலை,
நாடாத வுடலாழி யளவியன் வளவேழ்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து ஐந்தாந் திருவாய்மொழி—வளவேழுலகு.

** வளவேழுலகின்முதலாய வானோரிறையையருவினையேன் *
களவேழ்வெண்ணெய்தொடுவுண்ட கள்வாவென்பன்பின்னையும்*
தளவேழ்முறுவல்பின்னைக்காய் வல்லானாயர்தலைவனாய் *
இளவேறேழுந்தழுவிய எந்தாயென்பன்நினைந்துநைந்தே. 1

நினைந்துநைந்துள்கரைந்துருகி இமையோர்பலரும்முனிவரும் *
புனைந்தகண்ணிநீர்சாந்தம் புகையோடேந்திவணங்கினால் *
நினைந்தவெல்லாப்பொருள்கட்கும் வித்தாய்முதலில்சிதையாமே *
மனஞ்செய்ஞானத்துன்பெருமை மாசூணாதோமாயோனே. 2

மாயோனிகளாய்நடைகற்ற வானோர்பலரும்முனிவரும் *
நீயோனிகளைப்படையென்று நிறைநான்முகனைப்படைத்தவன் *
சேயோனெல்லாவறிவுக்கும் திசைகளெல்லாந்திருவடியால்
தாயோன்*எல்லாவெவ்வுயிர்க்குந்தாயோன் தானோருருவனே. 3

தானோருருவேதனிவித்தாய்த் தன்னில்மூவர்முதலாய *
வானோர்பலரும்முனிவரும் மற்றும்மற்றும்முற்றுமாய் *
தானோர்பெருநீர்தன்னுள்ளேதோற்றி அதனுள்கண்வளரும் *
வானோர்பெருமான்மாமாயன் வைகுந்தனெம்பெருமானே. 4

மானேய்நோக்கிமடவாளை மார்பில்கொண்டாய்மாதவா *
கூனேசிதையவுண்டைவில் நிறத்தில்தெறித்தாய்கோவிந்தா *
வானார்சோதிமணிவண்ணா மதுசூதாநீயருளாய் * உன்
தேனேமலருந்திருப்பாதம் சேருமாறுவினையேனே. 5

வினையேன்வினைதீர்மருந்தானாய் விண்ணோர்தலைவாகேசவா *
மனைசேராயர்குலமுதலே மாமாயனேமாதவா *
சினையேய்தழையமராமரங்கள் ஏழுமெய்தாய்சிரீதரா *
இனையாயினையபெயரினாய் என்றுநைவனடியேனே. 6

அடியேன்சிறியஞானத்தன் அறிதலார்க்குமரியானை *
கடிசேர்தண்ணந்துழாய்க் கண்ணிபுனைந்தான்தன்னைக்கண்ணனை *
செடியாராக்கையடியாரைச் சேர்தல்தீர்க்குந்திருமாலை *
அடியேன்காண்பானலற்றுவன் இதனில்மிக்கோரயர்வுண்டே. 7

உண்டாயுலகேழ்முன்னமே உமிழ்ந்துமாயையால்புக்கு *
உண்டாய்வெண்ணெய்சிறுமனிசர் உவலையாக்கைநிலையெய்தி *
மண்டான்சோர்ந்ததுண்டேலும் மனிசர்க்காகும்பீர் * சிறிதும்
அண்டாவண்ணம்மண்கரைய நெய்யூண்மருந்தோமாயோனே. 8

மாயோம்தீயவலவலைப் பெருமாவஞ்சப்பேய்வீய *
தூயகுழவியாய்விடப்பாலமுதா அமுதுசெய்திட்ட

மாயன்* வானோர்தனித்தலைவன்மலராள்மைந்தன் எவ்வுயிர்க்கும்
தாயோன்* தம்மானென்னம்மான் அம்மாமூர்த்தியைச்சார்ந்தே. 9

சார்ந்தவிருவல்வினைகளும்சரித்து மாயப்பற்றறுத்து *
தீர்ந்துதன்பால்மனம்வைக்கத்திருத்தி வீடுதிருத்துவான் *
ஆர்ந்தஞானச்சுடராகி அகலம்கீழ்மேலளவிறந்து *
நேர்ந்தவுருவாயருவாகும் இவற்றினுயிராம்நெடுமாலே. 10

** மாலேமாயப்பெருமானே மாமாயனேயென்றென்று *
மாலேயேறிமாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன் *
பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரத்தின்*
பாலேபட்டவிவைபத்தும் வல்லார்க்கில்லைபரிவதே. 11

அடிவரவு—வளவேழ் நினைந்து மாயோனி தானோர், மானேய் வினையே னடியே னுண்டாய்,
மாயோம் சார்ந்த மாலே பரிவது.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்.

---

## முதற்பத்து ஆறாந் திருவாய்மொழி—பரிவதிலீசனை.

** பரிவதிலீசனைப்பாடி * விரிவதுமேவலுறுவீர் *
பிரிவகையின்றிநன்னீர்தூய் * புரிவதுவும்புகைபூவே. 1

மதுவார்தண்ணந்துழாயான் * முதுவேதமுதல்வனுக்கு *
எதுவேதென்பணியென்னாததுவேஆட்செய்யுமீடே. 2

ஈடுமெடுப்புமிலீசன் * மாடுவிடாதென்மனனே *
பாடுமென்னாவவன்பாடல் * ஆடுமெனங்கமணங்கே. 3

அணங்கெனவாடுமெனங்கம் * வணங்கிவழிபடுமீசன் *
பிணங்கியமரர்பிதற்றும் * குணங்கெழுகொள்கையினானே. 4

கொள்கைகொளாமையிலாதான் * எள்கலிராகமிலாதான் *
விள்கைவிள்ளாமைவிரும்பி * உள்கலந்தார்க்கோரமுதே. 5

அமுதமமரர்கட்கீந்த * நிமிர்சுடராழிநெடுமால் *
அமுதிலுமாற்றவினியன் * நிமிர்திரைநீள்கடலானே. 6

நீள்கடல்சூழிலங்கைக்கோன் * தோள்கள்தலைதுணிசெய்தான் *
தாள்கள்தலையில்வணங்கி * நாள்கடலைக்கழிமினே. 7

கழிமின்தொண்டர்கள்கழித்து * தொழுமினவனைத்தொழுதால் *
வழிநின்றவல்வினைமாள்வித்து * அழிவின்றியாக்கந்தருமே. 8

தருமவரும்பயனாய * திருமகளார்தனிக்கேள்வன் *
பெருமையுடையபிரானார் * இருமைவினைக்கடிவாரே. 9

கடிவார்தீயவினைகள் * நொடியாருமளவைக்கண் *
கொடியாவடுபுள்ளுயர்த்த * வடிவார்மாதவனாரே. 10

** மாதவன்பால்சடகோபன் * தீதவமின்றியுரைத்த *
ஏதமிலாயிரத்திப்பத்து * ஓதவல்லார்பிறவாரே. 11

பரவு—பரிவது மதுவா ரீடு மணங்கென, கொள்கை யமுதம் நீள்கடல் கழிமின், தரும
கடிவார் மாதவன் பிறவி. ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## முதற்பத்து ஏழாந்திருவாய்மொழி—பிறவித்துயரற.

** பிறவித்துயரற ஞானத்துள்நின்று * துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார் *
அறவனை ஆழிப்படையந்தணனை * மறவியையின்றி மனத்துவைப்பாரே. 1

வைப்பாம்மருந்தாம் அடியரை * வல்வினைத்துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கொடானவன் *
எப்பால்யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து * அப்பாலவன் எங்களாயர்கொழுந்தே. 2

ஆயர்கொழுந்தாய் அவரால்புடையுண்ணும் * மாயப்பிரானை என்மாணிக்கச்சோதியை *
தூயவமுதைப் பருகிப்பருகி * என் மாயப்பிறவி மயர்வறுத்தேனே. 3

மயர்வறவென்மனத்தே மன்னினான்தன்னை * உயர்வினையேதரும் ஒண்சுடர்க்கற்றையை *
அயர்விலமரர்கள் ஆதிக்கொழுந்தை * என் இசைவினை என்சொல்லியான்விடுவேனோ. 4

விடுவேனோவென்விளக்கை என்னாவியை * நடுவேவந்து உய்யக்கொள்கின்றநாதனை *
தொடுவேசெய்து இளவாய்ச்சியர்கண்ணினுள் * விடவேசெய்து விழிக்கும்பிரானையே. 5

பிரான் பெருநிலங்கீண்டவன் * பின்னும் விராய்மலர்த்துழாய் வேய்ந்தமுடியன் *
மராமரமெய்தமாயவன் * என்னுள்ளிரானெனில் பின்னையானொட்டுவேனோ. 6

யானொட்டியென்னுள் இருத்துவமென்றிலன் * தானொட்டிவந்து என்தனிநெஞ்சைவஞ்சித்து *
ஊனொட்டிநின்று என்னுயிரில்கலந்து * இயல்வானொட்டுமோ இனியென்னைநெகிழ்க்கவே. 7

என்னைநெகிழ்க்கிலும் என்னுடைநன்னெஞ்சந்தன்னை * அகல்விக்கத் தானுங்கில்லானினி *
பின்னைநெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை * முன்னையமரர் முழுமுதலானே. 8

அமரர்முழுமுதல் ஆகியவாதியை * அமரர்க்கமுதீந்த ஆயர்கொழுந்தை *
அமரவழும்பத் துழாவியென்னாவி * அமரத்தழுவிற்று இனியகலுமோ. 9

அகலிலகலும் அணுகிலணுகும் * புகலுமரியன் பொருவல்லனெம்மான் *
நிகரிலவன்புகழ் பாடியிளைப்பிலம் * பகலுமிரவும் படிந்துகுடைந்தே. 10

** குடைந்துவண்டுண்ணும் துழாய்முடியானை * அடைந்ததென்குருகூர்ச் சடகோபன் *
மிடைந்தசொல்தொடை ஆயிரத்திப்பத்து * உடைந்துநோய்களை ஓடுவிக்குமே. 11

அடிவரவு—பிறவி வைப்பா மாயர் மயர்வற, விடுவேனோ பிரான் யானொட்டி யென்னை, அமர
ரகலில் குடைந்துவண் டோடும். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து எட்டாந் திருவாய்மொழி—ஓடும்புள்ளேறி.

** ஓடும்புள்ளேறி * சூடுந்தண்டுழாய் *
நீடுநின்றவை * ஆடுமம்மானே. 1

அம்மானாய்ப்பின்னும் * எம்மாண்புமானான் *
வெம்மாவாய்கீண்ட * செம்மாகண்ணனே. 2

கண்ணாவானென்றும் * மண்ணோர்விண்ணோர்க்கு *
தண்ணார்வேங்கட * விண்ணோர்வெற்பனே. 3

வெற்பையொன்றெடுத்து * ஒற்கமின்றியே *
நிற்குமம்மான்சீர் * கற்பன்வைகலே. 4

வைகலும்வெண்ணெய் * கைகலந்துண்டான் *
பொய்கலவாது * என் மெய்கலந்தானே. 5

கலந்தென்னாவி * நலங்கொள்நாதன் *
புலன்கொள்மாணாய் * நிலங்கொண்டானே. 6

கொண்டானேழ்விடை * உண்டானேழ்வையம் *
தண்டாமஞ்செய்து * என்னெண்தானானே. 7

ஆனானானயன் * மீனோடேனமும் *
தானானானென்னில் * தானாய சங்கே. 8

சங்குசக்கரம் * அங்கையில்கொண்டான் *
எங்குந்தானாய * நங்கள்நாதனே. 9

நாதன்ஞாலங்கொள் * பாதனென்னம்மான் *
ஓதம்போல்கிளர் * வேதநீரனே. 10

** நீர்புரைவண்ணன் * சீர்சடகோபன் *
நேர்தலாயிரத்து * ஓர்தலிவையே. 11

அடிவரவு—ஓடு மம்மானாய் கண்ணாவான் வெற்பை, வைகலுங் கலந்து கொண்டானானான், சங்கு நாதன் நீர்புரை யிவையும். ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## முதற்பத்து ஒன்பதாந்திருவாய்மொழி—இவையுமவையும்.

** இவையுமவையுமுவையும் இவருமவருமுவரும் *
எவையும்யவரும்தன்னுள்ளே ஆகியுமாக்கியுங்காக்கும் *
அவையுள்தனிமுதலெம்மான் கண்ணபிரானென்னமுதம் *
சுவையன்திருவின்மணாளன் என்னுடைச்சூழலுளானே. 1

சூழல்பலபலவல்லான் தொல்லையங்காலத்துலகை *
கேழலொன்றாகியிடந்த கேசவனென்னுடையம்மான் *
வேழமருப்பையொசித்தான் விண்ணவர்க்கெண்ணலரியான் *
ஆழநெடுங்கடல்சேர்ந்தான் அவனென்னருகலிலானே. 2

அருகலிலாயபெருஞ்சீர் அமரர்களாதிமுதல்வன் *
கருகியநீலநன்மேனிவண்ணன் செந்தாமரைக்கண்ணன் *
பொருசிறைப்புள்ளுவந்தேறும் பூமகளார்தனிக்கேள்வன் *
ஒருகதியின்சுவைதந்திட்டு ஒழிவிலனென்னோடுடனே. 3

உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகளாயர்
மடமகள் * என்றிவர்மூவராளும் உலகமும்மூன்றே *
உடனவையொக்கவிழுங்கி ஆலிலைச்சேர்ந்தவனெம்மான் *
கடல்மலிமாயப்பெருமான் கண்ணனென்னொக்கலையானே. 4

ஒக்கலைவைத்துமுலைப்பாலுண்ணென்று தந்திடவாங்கி *
செக்கஞ்செகவன்றவள்பால் உயிர்செகவுண்டபெருமான் *
நக்கபிரானோடு அயனுமிந்திரனும்முதலாக *
ஒக்கவும்தோற்றியவீசன் மாயனென்னெஞ்சினுள்ளானே. 5

மாயனென்னெஞ்சினுள்ளான் மற்றும்யவர்க்குமஃதே *
காயமும்சீவனும்தானே காலுமெரியுமவனே *
சேயனணியன்யவர்க்கும் சிந்தைக்கும்கோசரமல்லன் *
தூயன்துயக்கன்மயக்கன் என்னுடைத்தோளிணையானே. 6

தோளிணைமேலும்நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் *
தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் *
கேளிணையொன்றுமிலாதான் கிளரும்சுடரொளிமூர்த்தி *
நாளணைந்தொன்றுமகலான் என்னுடை நாவினுள்ளானே. 7

நாவினுள்நின்றுமலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம் *
ஆவியுமாக்கையும்தானே அழிப்போடளிப்பவன்தானே *
பூவியல்நால்தடந்தோளன் பொருபடையாழிசங்கேந்தும் *
காவிநன்மேனிக்கமலக்கண்ணன் என்கண்ணினுள்ளானே. 8

கமலக்கண்ணனென்கண்ணினுள்ளான் காண்பனவன்கண்களாலே *
அமலங்களாகவிழிக்கும் ஐம்புலனுமவன்மூர்த்தி *
கமலத்தயன்நம்பிதன்னைக் கண்ணுதலானொடும்தோற்றி *
அமலத்தெய்வத்தோடுலகமாக்கி என்னெற்றியுளானே. 9

நெற்றியுள்நின்றென்னையாளும நிரைமலர்ப்பாதங்கள்சூடி *
கற்றைத்துழாய்முடிக்கோலக் கண்ணபிரானைத்தொழுவார் *
ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும் *
மற்றையமரருமெல்லாம் வந்தெனதுச்சியுளானே. 10

** உச்சியுள்ளேநிற்கும்தேவதேவற்குக் கண்ணபிராற்கு *
இச்சையுள்செல்லவுணர்த்தி வண்குருகூர்ச்சடகோபன் *

இச்சொன்னவாயிரத்துள் இவையுமோர்பத்தெம்பிராற்கு *
நிச்சலும்விண்ணப்பஞ்செய்ய நீள்கழல்சென்னிபொருமே. 11

அடிவரவு—இவையும் சூழ வருகலி லுடனமர், ஒக்கலை மாயனென் தோளிணை நாவினுள, கமல நெற்றியு ளுச்சியுள் பொருமா.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## முதற்பத்து பத்தாந் திருவாய்மொழி—பொருமாநீள்படை.

** பொருமாநீள்படை ஆழிசங்கத்தொடு * திருமாநீள்கழல் ஏழுலகுந்தொழ *
ஒருமாணிக்குறளாகிநிமிர்ந்த * அக் கருமாணிக்கம் என்கண்ணுளதாகுமே. 1

கண்ணுள்ளேநிற்கும் காதன்மையால்தொழில் * எண்ணிலும்வரும் என்னினிவேண்டுவம் *
மண்ணும்நீரும் எரியுநல்வாயுவும் * விண்ணுமாய்விரியும் எம்பிரானையே. 2

எம்பிரானை எந்தைதந்தைதந்தைக்கும் தம்பிரானை * தண்டாமரைக்கண்ணனை *
கொம்பராவு நுண்ணேரிடைமார்வனை * எம்பிரானைத்தொழாய் மடநெஞ்சமே. 3

நெஞ்சமேநல்லைநல்லை உன்னைப்பெற்றாலென்செய்யோம் * இனியென்னகுறைவினம் *
மைந்தனை மலராள்மணவாளனை * துஞ்சும்போதும் விடாதுதொடர்கண்டாய். 4

கண்டாயேநெஞ்சே கருமங்கள்வாய்க்கின்று * ஓர் எண்டானுமின்றியே வந்தியலுமாறு *
உண்டானை உலகேழுமோர்மூவடிகொண்டானை * கண்டுகொண்டனைநீயுமே. 5

நீயும்நானும் இந்நேர்நிற்கில்* மேல்மற்றோர் நோயுஞ்சார்கொடான் நெஞ்சமேசொன்னேன்*
தாயும்தந்தையுமாய் இவ்வுலகினில் * வாயுமீசன் மணிவண்ணனெந்தையே. 6

எந்தையேயென்றும் எம்பெருமானென்றும்* சிந்தையுள்வைப்பன் சொல்லுவன்பாவியேன் *
எந்தையெம்பெருமானென்று வானவர்சிந்தையுள்வைத்து * சொல்லும்செல்வனையே. 7

செல்வநாரணனென்ற சொல்கேட்டலும் * மல்குங்கண்பனி நாடுவன்மாயமே *
அல்லுநன்பகலும் இடைவீடின்றி * நல்கியென்னைவிடான் நம்பிநம்பியே. 8

** நம்பியைத்தென்குறுங்குடிநின்ற * அச்செம்பொனேதிகழும் திருமூர்த்தியை *
உம்பர்வானவர் ஆதியஞ்சோதியை * எம்பிரானையென்சொல்லிமறப்பனோ. 9

மறப்பும்ஞானமும் நானொன்றுணர்ந்திலன் * மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடு *
மறப்பறவென்னுள்ளே மன்னினான்தன்னை * மறப்பனோவினி யானென்மணியையே. 10

** மணியைவானவர்கண்ணனைத் தன்னதோரணியை * தென்குருகூர்ச்சடகோபன் * சொல்
பணிசெயாயிரத்துள் இவைபத்துடன் * தணிவிலர்கற்பரேல் கல்விவாயுமே. 11

அடிவரவு—பொருமா கண்ணுள் எம்பிரானை நெஞ்சமே, கண்டாயே நீயு மெந்தையே செல்வன், நம்பியை மறப்பும் மணியை வாயும்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நினைக்கிலேன்தெய்வங்காள் நெடுங்கணிளமானினிப்போய் *
அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை *
தினைத்தனையும்விடாள் அவன்சேர்திருக்கோளூர்க்கே * 10
மனைக்குவான்பழியும்நினையாள் செல்லவைத்தனளே.

** வைத்தமாநிதியாம் மதுசூதனையேயலற்றி *
கொத்தலர்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பத்துநூற்றுளிப்பத்து அவன்சேர்திருக்கோளூர்க்கே * 11
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே.

—உண்ணுமோறும் பூவை கொல்லை, மேவிநைந் தின்று மல்குநீ ரொசிந்த, காரியம் நினைக்கிலேன் வைத்தமாநிதி பொன்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறும்பத்து—எட்டாந்திருவாய்மொழி—பொன்னுலகாளீரோ.

** பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ *
நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன்நாணிரந்தேன் *
முன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ணன்கண்ணன்
என்னலம்கொண்டபிரான்தனக்கு என்னிலைமையுரைத்தே. 1

மையமர்வாள்நெடுங்கண் மங்கைமார்முன்பென்கையிருந்து *
நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ *
கையமர்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
மெய்யமர்காதல்சொல்லிக் கிளிகாள்விரைந்தோடிவந்தே. 2

ஓடிவந்தென்குழல்மேல் ஒளிமாமலரூதீரோ *
கூடியவண்டினங்காள் குருநாடுடையைவர்கட்காய் *
ஆடியமாநெடுந்தேர்ப் படை நீறெழச்செற்றபிரான் *
சூடியதண்துளவமுண்ட தூமதுவாய்கள்கொண்டே. 3

தூமதுவாய்கள்கொண்டுவந்து என்முல்லைகள்மேல்தும்பிகாள் *
பூமதுவுண்ணச்செல்லில் வினையேனைப்பொய்செய்தகன்ற *
மாமதுவார்தண்துழாய்முடி வானவர்கோனைக்கண்டு *
யாமிதுவோதக்கவாறு என்னவேண்டுங்கண்டீர்நுங்கட்கே. 4

நுங்கட்குயானுரைக்கேன்வம்மின் யான்வளர்த்தகிளிகாள் *
வெங்கண்புள்ளூர்ந்துவந்து வினையேனைநெஞ்சங்கவர்ந்த *
செங்கண்கருமுகிலைச் செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை *
எங்குச்சென்றாகிலும்கண்டு இதுவோதக்கவாறென்மினே. 5

என்மின்னுநூல்மார்வன் என்கரும்பெருமானென்கண்ணன் *
தன்மன்னுநீள்கழல்மேல்தண்துழாய் நமக்கன்றிநல்கான் *
கன்மின்களென்றும்மையான் கற்பியாவைத்தமாற்றம்சொல்லி *
சென்மின்கள்தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே. 6

பூவைகள்போல்நிறத்தன் புண்டரீகங்கள்போலும்கண்ணன் *
யாவையும்யாவருமாய் நின்றமாயனென்னாழிப்பிரான் *
மாவைவல்வாய்பிளந்த மதுசூதற்கென்மாற்றம்சொல்லி *
பாவைகள்தீர்க்கிற்றிரே வினையாட்டியேன்பாசறவே.

பாசறவெய்தியின்னே வினையேனெனையூழிநைவேன் *
ஆசறுதூவிவெள்ளைக்குருகே அருள்செய்தொருநாள் *
மாசறுநீலச்சுடர்முடி வானவர்கோனைக்கண்டு *
ஏசறும்நும்மையல்லால் மறுநோக்கிலள்பேர்த்துமற்றே. 8

பேர்த்துமற்றோர்களைகண் வினையாட்டியேன்நானொன்றிலேன் *
நீர்த்திரைமேலுலவி இரைதேரும்புதாவினங்காள் *
கார்த்திரள்மாமுகில்போல் கண்ணன்விண்ணவர்கோனைக்கண்டு*
வார்த்தைகள்கொண்டருளியுரையீர் வைகல்வந்திருந்தே. 9

வந்திருந்தும்முடைய மணிச்சேவலும்நீருமெல்லாம் *
அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையுமன்னங்காள்
என்திருமார்வற்கென்னை இன்னவாறிவள்காண்மினென்று *
மந்திரத்தொன்றுணர்த்தியுரையீர் மறுமாற்றங்களே. 10

** மாற்றங்களாய்ந்துகொண்டு மதுசூதபிரானடிமேல் *
நாற்றங்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன*
தோற்றங்களாயிரத்துள் இவையுமொருபத்தும்வல்லார் *
ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர்நீராயே. 11

அடிவரவு:—பொன்னுல மையம் ரோடித் தூமது, நுங்கட் கென்மின் பூவைகள் பாசற, பேர்த்து வந்திரு மாற்றங்கள் நீர்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஆறாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழி—நீராய் நிலனாய்.

** நீராய்நிலனாய்த் தீயாய்க்காலாய்நெடுவானாய் *
சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய் *
கூராராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால்வாராய் *
ஒருநாள் மண்ணும்விண்ணும்மகிழவே. 1

மண்ணும்விண்ணும்மகிழக் குறளாய்வலங்காட்டி *
மண்ணும்விண்ணும்கொண்ட மாயவம்மானே *
நண்ணியுனைநான் கண்டுகந்துகூத்தாட *
நண்ணியொருநாள் ஞாலத்தூடேநடவாயே. 2

ஞாலத்தூடேநடந்துநின்றும் கிடந்திருந்தும் *
சாலப்பலநாள் உகந்தோறுயிர்கள்காப்பானே *
கோலத்திருமாமகளோடு உன்னைக்கூடாதே *
சாலப்பலநாள் அடியேனின்னும்தளர்வேனோ. 3

தளர்ந்தும்முறிந்தும் சகடவசுரருடல்வேறு *
பிளந்துவீயத் திருக்காலாண்டபெருமானே *
கிளர்ந்துபிரமன்சிவன் இந்திரன்விண்ணவர்சூழ *
விளங்கவொருநாள் காணவாராய்விண்மீதே. 4

விண்மீதிருப்பாய்மலைமேல்நிற்பாய் கடல்சேர்ப்பாய் *
மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும்மறைந்துறைவாய் *
எண்மீதியன்றபுறவண்டத்தாய் எனதாவி *
உண்மீதாடி உருக்காட்டாதேயொளிப்பாயோ. 5

பாயோரடிவைத்ததன்கீழ்ப் பரவைநிலமெல்லாம்
தாய் * ஓரடியால் எல்லாவுலகும்தடவந்த
மாயோன் * உன்னைக்காண்பான் வருந்தியெனைநாளும் *
தீயோடுடன்சேர்மெழுகாய் உலகில்திரிவேனோ. 6

உலகில்திரியும்கருமகதியாய் உலகமாய் *
உலகுக்கேயோருயிருமானாய் புறவண்டத்து *
அலகில்பொலிந்த திசைபத்தாயவருவேயோ *
அலகில்பொலிந்த அறிவிலேனுக்கருளாயே. 7

அறிவிலேனுக்கருளாய் அறிவாருயிரானாய் *
வெறிகொள்சோதிமூர்த்தி அடியேன்நெடுமாலே *
கிறிசெய்தென்னைப்புறத்திட்டு இன்னம்கெடுப்பாயோ *
பிறிதொன்றறியாவடியேன் ஆவிதிகைக்கவே. 8

ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும்சிற்றின்பம் *
பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ *
தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே *
கூவிக்கொள்ளும்காலம் இன்னம்குறுகாதோ. 9

குறுகாநீளா இறுதிகூடாவெனையூழி *
சிறுகாபெருகா அளவிலின்பம்சேர்ந்தாலும் *
மறுகாலின்றிமாயோன் உனக்கேயாளாகும் *
சிறுகாலத்தையுறுமோ அந்தோதெரியிலே. 10

**தெரிதல்நினைதல் எண்ணலாகாத்திருமாலுக்கு *
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *
தெரியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும் *
உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கே. 11

—நீராய் மண்ணும் ஞாலத் தளர்ந்தும், விண்மீ பாயோ ருலகி லறிவிலேன், ஆவி குறுகாத் தெரித லுலகம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து—பத்தாந்திருவாய்மொழி, உலகமுண்டபெருவாயா.

** உலகமுண்டபெருவாயா உலப்பில்கீர்த்தியம்மானே *
நிலவும்சுடர்சூழொளிமூர்த்தி நெடியாயடியேனாருயிரே *
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே *
குலதொல்லடியேனுனபாதம் கூடுமாறுகூறாயே. 1

கூறாய்நீறாய்நிலனாகிக் கொடுவல்லசுரர்குலமெல்லாம் *
சீறாவெறியும்திருநேமிவலவா தெய்வக்கோமானே *
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலரும் திருவேங்கடத்தானே *
ஆறாவன்பிலடியேன் உன்னடிசேர்வண்ணமருளாயே. 2

வண்ணமருள்கொளணிமேகவண்ணா மாயவம்மானே *
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே இமையோரதிபதியே *
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தானே *
அண்ணலேயுன்னடிசேர அடியேற்காவாவென்னாயே. 3

ஆவாவென்னாதுலகத்தையலைக்கும் அசுரர்வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா திருமாமகள்கேள்வா
தேவா * சுரர்கள்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே *
பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராயே. 4

புணராநின்றமரமேழ் அன்றெய்தவொருவில்வலவாவோ *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ *
திணரார்மேகமெனக்களிறுசேரும் திருவேங்கடத்தானே *
திணரார்சார்ங்கத்துனபாதம் சேர்வதடியேனெந்நாளே. 5

எந்நாளேநாம்மண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பதற்கென்று *
எந்நாளும்நின்றிமையோர்களேத்தி இறைஞ்சியினமினமாய் *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும் திருவேங்கடத்தானே *
மெய்ந்நானெய்தியெந்நாள் உன்னடிக்கணடியேன்மேவுவதே. 6

அடியேன்மேவியமர்கின்றவமுதே இமையோரதிபதியே *
கொடியாவடுபுள்ளுடையானே கோலக்கனிவாய்ப்பெருமானே *
செடியார்வினைகள்தீர்மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே *
நொடியார்பொழுதுமுனபாதம் காணநோலாதாற்றேனே. 7

நோலாதாற்றேனுனபாதம் காணவென்றுநுண்ணுணர்வின் *
நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனுமிந்திரனும் *
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே *
மாலாய்மயக்கியடியேன்பால் வந்தாய்போலேவாராயே. 8

வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே *
செந்தாமரைக்கண்செங்கனிவாய் நால்தோளமுதேயெனதுயிரே *

சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே *
அந்தோவடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே. 9

** அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா *
நிகரில்புகழாயுலகம்மூன்றுடையாய் என்னையாள்வானே *
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே *
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே. 10

** அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்வாழ்மினென்றென்றருள்கொடுக்கும் *
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும் *
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே. 11

உலகம் கூறாய் வண்ணமருளாவா, புணரா யெந்நாளடியேன் நோலாது, வந்தா யகலகில் அடிக்கீழ் உண்ணிலா.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—முதல்திருவாய்மொழி—உண்ணிலாவிய.

** உண்ணிலாவியவைவரால்குமைதீற்றி என்னையுன்பாதபங்கயம் *
நண்ணிலாவகையே நலிவானின்னமெண்ணுகின்றாய் *
எண்ணிலாப்பெருமாயனேயிமையோர்களேத்தும் உலகம்மூன்றுடை *
அண்ணலேயமுதேயப்பனே என்னையாள்வானே. 1

என்னையாளும்வன்கோவோரைந்திவைபெய்து இராப்பகல்மோதுவித்திட்டு *
உன்னைநானணுகாவகை செய்துபோதிகண்டாய் *
கன்னலேயமுதேகார்முகில்வண்ணனே கடல்ஞாலம்காக்கின்ற *
மின்னுநேமியினாய் வினையேனுடையவேதியனே. 2

வேதியாநிற்குமைவரால் வினையேனைமோதுவித்து * உன்திருவடிச்
சாதியாவகை நீதடுத்தென்பெறுதியந்தோ *
ஆதியாகியகலிடம்படைத்து உண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட *
சோதிநீண்முடியாய் தொண்டனேன்மதுசூதனனே. 3

சூதுநானறியாவகை சுழற்றியோரைவரைக்காட்டி *உன்னடிப்
போதுநானணுகாவகை செய்துபோதிகண்டாய் *
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலொடுக்கி ஓராலினீளிலை*
மீதுசேர்குழவி வினையேன்வினைதீர்மருந்தே. 4

தீர்மருந்தின்றியைந்துநோயடும் செக்கிலிட்டுத்திரிக்குமைவரை *
நேர்மருங்குடைத்தாவடைத்து நெகிழ்ப்பானொக்கின்றாய் *

ஆர்மருந்தினியாகுவார் அடலாழியேந்தியசுரர்வன்குலம் *
வேர்மருங்கறுத்தாய் விண்ணுளார்பெருமானேயோ. 5

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையும் செறுமைம்புலனிவை
மண்ணுளென்னைப்பெற்றால் என்செய்யா மற்றுநீயும்விட்டால் *
பண்ணுளாய்கவிதன்னுளாய் பத்தியினுள்ளாய்பரமீசனே * வந்தென்
கண்ணுளாய்நெஞ்சுளாய் சொல்லுளாயொன்றுசொல்லாயே. 6

ஒன்றுசொல்லியொருத்தினில்நிற்கிலாத ஓரைவர்வன்கயவரை *
என்றுயான்வெல்கிற்பன் உன்திருவருளில்லையேல் *
அன்றுதேவரசுரர்வாங்க அலைகடலரவமளாவி * ஓர்
குன்றம்வைத்தவெந்தாய் கொடியேன்பருகின்னமுதே. 7

இன்னமுதெனத்தோன்றி ஓரைவர்யாவரையும்மயக்க * நீவைத்த
முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து * என்னையுன்
சின்னமும்திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக்கைதொழவேயருளெனக்கு *
என்னம்மாஎன்கண்ணா இமையோர்தம்குலமுதலே. 8

குலமுதலடுந்தீவினைக் கொடுவன்குழியினில்வீழ்க்குமைவரை *
வலமுதல்கெடுக்கும் வலமேதந்தருள்கண்டாய் *
நிலமுதலினியெவ்வுலகுக்கும் நிற்பனசெல்வனவென * பொருள்
பலமுதல்படைத்தாய் என்கண்ணாவென்பரஞ்சுடரே. 9

என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றி உன்னிணைத்தாமரைகட்கு *
அன்புருகிநிற்குமதுநிற்கச் சுமடுதந்தாய் *
வன்பரங்களெடுத்தைவர்திசைதிசை வலித்தெற்றுகின்றனர் *
முன்பரவைகடைந்து அமுதம்கொண்டமூர்த்தியோ. 10

** கொண்டமூர்த்தியோர்மூவராய்க் குணங்கள்படைத்தளித்துக்கெடுக்கும் *
புண்டரீகக்கொப்பூழ்ப் புனற்பள்ளியப்பனுக்கே * [பத்தும்
தொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன் சொல்லாயிரத்துளிப்
கண்டுபாடவல்லார் வினைபோம்கங்குலும்பகலே. 11

அடிவரவு:—உள் என்னை வேதி சூது, நீர்மரு விண்ணுளா ரொன் றின்னமுது, குலமுத லென்பரம் கொண்டமூர் கங்குல்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—இரண்டாந்திருவாய்மொழி—கங்குலும் பகலும்.

** கங்குலும்பகலும்கண்துயிலறியாள் கண்ணநீர்கைகளாலிறைக்கும் *
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும் தாமரைக்கண்ணென்றேதளரும் *
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னும் இருநிலம்கைதுழாவிருக்கும் *
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்கின்றாயே. 1

என்செய்கின்றாயென்தாமரைக்கண்ணாவென்னும் கண்ணீர்மல்கவிருக்கும் *
என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும் வெவ்வுயிர்த்துயிர்த்துருகும் *
முன்செய்தவினையேமுகப்படாயென்னும் முகில்வண்ணாதகுவதோவென்னும் *
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய் என்கொலோமுடிகின்றதிவட்கே. 2

வட்கிலளிறையும்மணிவண்ணாவென்னும் வானமேநோக்கும்மையாக்கும் *
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட ஒருவனேயென்னுமுள்ளுருகும் *
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய் காகுத்தாகண்ணனேயென்னும் *
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்திட்டாயே. 3

இட்டகாலிட்டகையளாயிருக்கும் எழுந்துலாமயங்குங்கைகூப்பும் *
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்கும் கடல்வண்ணாகடியைகாணென்னும் *
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும் வந்திடாயென்றென்றேமயங்கும் *
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்சிந்தித்தாயே. 4

சிந்திக்கும்திசைக்கும்தேறும்கைகூப்பும் திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்கும் * ஆங்கேமழைக்கண்ணீர்மல்க வந்திடாயென்றென்றேமயங்கும் *
அந்திப்போதவுணனுடலிடந்தானே அலைகடல்கடைந்தவாரமுதே *
சந்தித்துன்சரணம்சார்வதேவலித்ததையலைமையல்செய்தானே. 5

மையல்செய்தென்னைமனம்கவர்ந்தானேயென்னும் மாமாயனேயென்னும் *
செய்யவாய்மணியேயென்னும் தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னும் *
வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும் *
பைகொள்பாம்பணையாயிவள்திறத்தருளாய் பாவியேன்செயற்பாலதுவே. 6

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய் பற்றிலார்பற்றநின்றானே *
காலசக்கரத்தாய்கடலிடங்கொண்ட கடல்வண்ணாகண்ணனேயென்னும் *
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னும் என்தீர்த்தனேயென்னும் *
கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்கும் என்னுடைக்கோமளக்கொழுந்தே. 7

கொழுந்துவானவர்கட்கென்னும் குன்றேந்திக்கோநிரைகாத்தவனென்னும் *
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்கும் அஞ்சனவண்ணனேயென்னும் *
எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும் எங்ஙனேநோக்குகேனென்னும் *
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாய் என்செய்கேனென்திருமகட்கே. 8

** என்திருமகள்சேர்மார்பனேயென்னும் என்னுடையாவியேயென்னும் *
நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்ட நிலமகள்கேள்வனேயென்னும் *
அன்றுருவேழுந்தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனேயென்னும் *
தென்திருவரங்கம்கோயில்கொண்டானே தெளிகிலேன்முடிவிவள்தனக்கே. 9

முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும் மூவுலகாளியேயென்னும் *
கடிகமழ்கொன்றைச்சடையனேயென்னும் நான்முகக்கடவுளேயென்னும் *

வடிவுடைவானோர்தலைவனேயென்னும் வண்திருவரங்கனேயென்னும் *
அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே. 10

** முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன் மொய்புனற்பொருநல் *
துகில்வண்ணத்தூநீர்சேர்ப்பன் வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன் *
முகில்வண்ணனடிமேல்சொன்னசொல்மாலை ஆயிரத்திப்பத்தும்வல்லார் *
முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே. 11

அடிவரவு:—கங்கு லென்செய்கின் வட்கில ளிட்டகால், சிந்திக்கு மையல் பாலதுன் கொழுந்து, என்திரு முடிவிவள் முகில்வண் வெள்ளை.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி—வெள்ளைச்சுரிசங்கு.

** வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே *
புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர் என்சொல்லிச்சொல்லுகேனன்னைமீர்காள் *
வெள்ளச்சுகமவன்வீற்றிருந்த வேதவொலியும்விழாவொலியும் *
பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறாத் திருப்பேரெயில்சேர்வன்நானே. 1

நாணக்கருங்குழல்தோழிமீர்காள் அன்னையர்காளயற்சேரியீர்காள் *
நானித்தனிநெஞ்சம்காக்கமாட்டேன் என்வசமன்றிதிராப்பகல்போய் *
தேன்மொய்த்தபூம்பொழில்தண்பணைசூழ் தென்திருப்பேரெயில்வீற்றிருந்த *
வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன் செங்கனிவாயின்திறத்ததுவே. 2

செங்கனிவாயின்திறத்ததாயும் செஞ்சுடர்நீள்முடித்தாழ்ந்ததாயும் *
சங்கொடுசக்கரம்கண்டுகந்தும் தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும் *
திங்களும்நாளும்விழாவருத தென்திருப்பேரெயில்வீற்றிருந்த *
நங்கள்பிரானுக்கென்னெஞ்சம்தோழீ நாணும்நிறையுமிழந்ததுவே. 3

இழந்தவெம்மாமைதிறத்துப்போன என்னெஞ்சினாருமங்கேயொழிந்தார் *
உழந்தினியாரைக்கொண்டென்னுசாகோ ஓதக்கடலொலிபோல * எங்கும்
எழுந்தநல்வேதத்தொலிநின்றோங்கு தென்திருப்பேரெயில்வீற்றிருந்த *
முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தேன் அன்னையர்காளென்னையென்முனிந்தே.

முனிந்துசகடமுதைத்து மாயப்பேய்முலையுண்டுமருதிடைபோய் *
கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்த கண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன் *
முனிந்தினியென்செய்தீர் அன்னைமீர்காள் முன்னியவன்வந்துவீற்றிருந்த *
கனிந்தபொழில்திருப்பேரெயிற்கே காலம்பெறவென்னைக்காட்டுமினே. 5

காலம்பெறவென்னைக்காட்டுமின்கள் காதல்கடலின்மிகப்பெரிதால் *
நீலமுகில்வண்ணத்தெம்பெருமான் நிற்குமுன்னேவந்தென்கைக்குமெய்தான் *

ஞாலத்தவன்வந்துவீற்றிருந்த நான்மறையாளரும்வேள்வியோவா *
கோலச்செந்நெற்கள்கவரிவீசும் கூடுபுனல்திருப்பேரெயிற்கே. 6

பேரெயில்சூழ்கடல்தென்னிலங்கை செற்றபிரான்வந்துவீற்றிருந்த *
பேரெயிற்கேபுக்கென்னெஞ்சம்நாடிப் பேர்த்துவரவெங்குங்காணமாட்டேன் *
ஆரையினியிங்குடையம்தோழீ என்னெஞ்சம்கூவவல்லாருமில்லை *
ஆரையினிக்கொண்டென்சாதிக்கின்றது என்னெஞ்சம்கண்டதுவேகண்டேனே 7

கண்டதுவேகொண்டெல்லாரும்கூடிக் கார்க்கடல்வண்ணனோடென்திறத்துக்
கொண்டு * அலர்தூற்றிற்றதுமுதலாக் கொண்டவென்காதலுரைக்கில்தோழீ *
மண்டிணிஞாலமுமேழ்கடலும் நீள்விசும்பும்கழியப்பெரிதால் *
தெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்த தென்திருப்பேரெயில்சேர்வன்சென்றே. 8

சேர்வன்சென்றென்னுடைத்தோழிமீர்காள் அன்னையர்காளென்னைத்தேற்ற
நீர்களுரைக்கின்றதென்னிதற்கு நெஞ்சும்நிறைவுமெனக்கிங்கில்லை * [வேண்டா*
கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்ட கண்ணபிரான்வந்துவீற்றிருந்த *
ஏர்வளவொண்கழனிப்பழனத் தென்திருப்பேரெயின்மாநகரே. 9

நகரமும்நாடும்பிறவும்தேர்வேன் நாணெனக்கில்லையென்தோழிமீர்காள் *
சிகரமணிநெடுமாடநீடு தென்திருப்பேரெயில்வீற்றிருந்த *
மகரநெடுங்குழைக்காதன்மாயன் நூற்றுவரையன்றுமங்கநூற்ற *
நிகரில்முகில்வண்ணன்நேமியான் என்னெஞ்சம்கவர்ந்தெனையூழியானே. 10

** ஊழிதோறூழியுருவும்பேரும் செய்கையும்வேறவன்வையம்காக்கும் *
ஆழிநீர்வண்ணனையச்சுதனை அணிகுருகூர்ச் சடகோபன்சொன்ன *
கேழிலந்தாதியோராயிரத்துள் இவை திருப்பேரெயில்மேயபத்தும் *
ஆழியங்கையனையேத்தவல்லாரவர் அடிமைத்திறத்தாழியாரே. 11

அடிவரவு:—வெள்ளை நானக்கரும் செங்கனி யிழந்தவெம். முனிந்து காலம்பெறப் பேரெயில் கண்டது, சேர்வன் நகரமும் ஊழிதோருழி.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து நான்காந்திருவாய்மொழி—ஆழியெழ.

** ஆழியெழச் சங்கும்வில்லுமெழ * திசைவாழியெழத் தண்டும்வாளுமெழ * அண்டம் மோழையெழ முடிபாதமெழ * அப்பனூழியெழ உலகம்கொண்டவாறே. 1

ஆறுமலைக்கு எதிர்ந்தோடுமொலி * அரவூறுசுலாய் மலைதேய்க்குமொலி * கடல் மாறுசுழன்று அழைக்கின்றவொலி * அப்பன்சாறுபட அமுதம்கொண்டநான்றே. 2

நான்றிலவேழ்மண்ணும் தானத்தவே * பின்னும்நான்றிலவேழ் மலைதானத்தவே * பின்னும் நான்றிலவேழ் கடல்தானத்தவே * அப்பனூன்றியிடந்து எயிற்றில்கொண்டநாளே. 3

நாளுமெழ நிலநீருமெழ * விண்ணும்கோளுமெழு எரிகாலுமெழ * மலை
தாளுமெழச் சுடர்தானுமெழ * அப்பனூளியெழ உலகமுண்டவூணே. 4

ஊணுடைமல்லர் ததர்ந்தவொலி * மன்னராணுடைச்சேனை நடுங்குமொலி * விண்ணுள்
ஏணுடைத்தேவர் வெளிப்பட்டவொலி * அப்பன்காணுடைப்பாரதம் கையறைபோழ்தே. 5

போழ்துமெலிந்த புன்செக்கரில் * வான்திசைசூழுமெழுந்து உதிரப்புனலா * மலை
கீழ்துபிளந்த சிங்கமொத்ததால் * அப்பனூழ்துயர்செய்து அசுரைக்கொல்லுமாறே. 6

மாறுநிரைத்து இரைக்கும்சரங்கள் * இனநூறுபிணம் மலைபோல்புரள * கடல்
ஆறுமடுத்து உதிரப்புனலா * அப்பன்நீறுபட இலங்கைசெற்றநேரே. 7

நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான் * பின்னும்நேர்சரிந்தான் எரியுமனலோன் * பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்திகண்டீர் * அப்பன்நேர்சரிவாணன் திண்டோள்கொண்டவன்றே

அன்றுமண்ணீரெரிகால் விண்மலைமுதல் * அன்றுசுடர் இரண்டுபிறவும் * பின்னும்
அன்று மழையுயிர்தேவும்மற்றும் * அப்பனன்றுமுதல் உலகம்செய்ததுமே. 9

மேய்நிரைகீழ்புக மாபுரள * சுனைவாய்நிறைநீர் பிளிறிச்சொரிய * இன
ஆநிரைபாடி அங்கேயொடுங்க * அப்பன்தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே. 10

** குன்றமெடுத்தபிரான் அடியாரொடும் * ஒன்றிநின்ற சடகோபனுரைசெயல் *
நன்றிபுனைந்த ஓராயிரத்துள்ளிவை * வென்றிதருமபத்தும் மேவிக்கற்பார்க்கே. 11

அடிவரவு:—ஆழி ஆறுமலை நான்றில நாளும், ஊணுடை போழ்து மாறுநிரை நேர், அன்றுமண் மேய்நிரை குன்றம் கற்பார்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—ஐந்தாந்திருவாய்மொழி—கற்பாரிராமபிரானை.

** கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ *
புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே *
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும் *
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே. 1

நாட்டில்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ *
நாட்டில்பிறந்து படாதனபட்டுமனிசர்க்கா *
நாட்டைநலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு *
நாட்டையளித்துய்யச்செய்து நடந்தமைகேட்டுமே. 2

கேட்பார்கள்கேசவன்கீர்த்தியல்லால் மற்றும்கேட்பரோ *
கேட்பார்செவிசுடு கீழ்மைவசவுகளேவையும் *
சேட்பால்பழம்பகைவன் சிசுபாலன் * திருவடி
தாட்பாலடைந்த தன்மையறிவாரையறிந்துமே. 3

தன்மையறிபவர்தாம் அவற்காளன்றியாவரோ*
பன்மைப்படர்பொருள் ஆதுமில்பாழ்நெடுங்காலத்து*
நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணித்தன்னுள்ளே*
தொன்மைமயக்கியதோற்றிய சூழல்கள்சிந்தித்தே. 4

சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ*
ஆழப்பெரும்புனல்தன்னுள் அழுந்தியஞாலத்தை*
தாழப்படாமல் தன்பாலொருகோட்டிடைத்தான்கொண்ட*
கேழல்திருவுருவாயிற்றுக் கேட்டுமுணர்ந்துமே. 5

கேட்டுமுணர்ந்தவர் கேசவற்காளன்றியாவரோ*
வாட்டமிலாவண்கை மாவலிவாதிக்கவாதிப்புண்டு*
ஈட்டங்கொள்தேவர்கள் சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய*
கோட்டங்கைவாமனனாய்ச் செய்தகூத்துக்கள்கண்டுமே. 6

கண்டும்தெளிந்தும்கற்றார் கண்ணற்காளன்றியாவரோ*
வண்டுண்மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்குவாழுநாள்*
இண்டைச்சடைமுடி யீசனுடன்கொண்டுஉசாச்செல்ல*
கொண்டங்குத்தன்னொடும்கொண்டு உடன்சென்றதுணர்ந்துமே. 7

செல்லவுணர்ந்தவர் செல்வன்றன்சீரன்றிக்கற்பரோ*
எல்லையிலாதபெருந்தவத்தால் பல்செய்மிறை*
அல்லலமரரைச்செய்யும் இரணியனாகத்தை*
மல்லலரியுருவாய்ச் செய்தமாயமறிந்துமே. 8

மாயமறிபவர் மாயவற்காளன்றியாவரோ*
தாயம்செறுமொருநூற்றுவர்மங்க ஓரைவர்க்காய்*
தேசமறியவோர்சாரதியாய்ச்சென்று சேனையை
நாசம்செய்திட்டு* நடந்தநல்வார்த்தையறிந்துமே. 9

*வார்த்தையறிபவர் மாயவற்காளன்றியாவரோ*
போர்த்தபிறப்பொடுநோயொடுமூப்பொடு இறப்பிவை
பேர்த்து*பெருந்துன்பம்வேரறநீக்கித் தன்தாளின்கீழ்ச்
சேர்த்து*அவன்செய்யும்சேமத்தையெண்ணித் தெளிவுற்றே. 10

*தெளிவுற்றுவீவின்றிநின்றவர்க்கு இன்பக்கதிசெய்யும்*
தெளிவுற்றகண்ணனைத் தென்குருகூர்ச்சடகோபன்சொல்*
தெளிவுற்றவாயிரத்துள் இவைபத்தும்வல்லாரவர்*
தெளிவுற்றசிந்தையர் பாமருமூவுலகத்துள்ளே. 11

அடிவரவு :—கற்பார் நாட்டில் கேட்பார் தன்மை, சூழல் கேட்டும் கண்டும் செல்ல, மாயமறி வார்த்தை தெளிவு பாமரு.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—ஆறாந்திருவாய்மொழி—பாமருமூவுலகும்

*பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ*
பாமருமூவுலகுமளந்த பற்பபாதாவோ*
தாமரைக்கண்ணாவோ தனியேன்தனியாளாவோ*
தாமரைக்கையாவோ உன்னையென்றுகொல்சேர்வதுவே. 1

என்றுகொல்சேர்வதந்தோ அரன்நான்முகனேத்தும்*செய்ய
நின்திருப்பாதத்தையான் நிலம்நீரெரிகால்*விண்ணுயிர்

என்றிவைதாம் முதலா முற்றுமாய்நின்றவெந்தாயோ*
குன்றெடுத்தாநிரைமேய்த்து அவைகாத்தவெங்கூத்தாவோ. 2

காத்தவெங்கூத்தாவோ மலையேந்திக்கன்மாரிதன்னை*
பூத்தண்டுழாய்முடியாய் புனைகொன்றையஞ்செஞ்சடையாய்*
வாய்த்தவென்நான்முகனே வந்தென்னாருயிர்நீயானால்*
ஏத்தருங்கீர்த்தியினாய் உன்னையெங்குத்தலைப்பெய்வனே. 3

எங்குத்தலைப்பெய்வன்நான் எழில்மூவுலகும்நீயே*
அங்குயர்முக்கட்பிரான் பிரமபெருமானவன்நீ*
வெங்கதிர்வச்சிரக்கை யிந்திரன்முதலாத்தெய்வம்நீ*
கொங்கலர்தண்ணந்துழாய்முடி யென்னுடைக்கோவலனே. 4

என்னுடைக்கோவலனே யென்பொல்லாக்கருமாணிக்கமே*
உன்னுடையுந்திமலர் உலகமவைமூன்றும்பரந்து*
உன்னுடைச்சோதிவெள்ளத்தகம்பால் உன்னைக்கண்டுகொண்டிட்டு*
என்னுடையாருயிரார் எங்ஙனேகொல்வந்தெய்துவரே. 5

வந்தெய்துமாறறியேன் மல்குநீலச்சுடர்தழைப்ப*
செஞ்சுடர்ச்சோதிகள்பூத்து ஒருமாணிக்கம்சேர்வதுபோல்*
அந்தரமேல்செம்பட்டோடு அடியுந்திகைமார்வுகண்வாய்*
செஞ்சுடர்ச்சோதிவிடவுறை யென்திருமார்பனையே. 6

என்திருமார்பன்றன்னை யென்மலைமகள்கூறன்றன்னை*
என்றுமென்நாமகளை அகம்பால்கொண்டநான்முகனை*
நின்றசசீபதியை நிலங்கீண்டெயில்மூன்றெரித்த*
வென்றுபுலம்துரந்த விசும்பாளியைக்காணேனே. 7

ஆளியைக்காண்பரியாய் அரிகாண்நரியாய்*அரக்கர்
ஊளையிட்டன்றிலங்கைகடந்து பிலம்புக்கொளிப்ப*
மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக்கொன்று*பின்னும்
ஆளுயர்குன்றங்கள்செய்து அடர்த்தானையும்காண்டுங்கொலோ. 8

காண்டுங்கொலோநெஞ்சமே கடியவினையேமுயலும்*
ஆண்திறல்மீளிமொய்ம்பின் அரக்கன்குலத்தைத்தடிந்து*
மீண்டுமவன்தம்பிக்கே விரிநீரிலங்கையருளி*
ஆண்டுதன்சோதிபுக்க அமரரியேற்றினையே. 9

ஏற்றரும்வைகுந்தத்தை அருளும்நமக்கு*ஆயர்குலத்து
ஈற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்கு மாயங்களேயியற்றி*
கூற்றியல்கஞ்சனைக்கொன்று ஐவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்து*
ஆற்றல்மிக்கான் பெரியபரஞ்சோதிபுக்கவரியே. 10

*புக்கவரியுருவாய் அவுணனுடல்கீண்டுகந்த*
சக்கரச்செல்வன்றன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன*
மிக்கவோராயிரத்துள் இவைபத்தும்வல்லாரவரை*
தொக்குப்பல்லாண்டிசைத்துக் கவரிசெய்வரேழையரே. 11

அடிவரவு :—பாமரு வென்றுகொல் காத்தவெ மெங்கு, என்னுடை வந்தெய் தென்திரு வாளியை, காண்டுங்கொ லேற்றரும் புக்கவரி யேழையர்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—ஏழாந்திருவாய்மொழி—ஏழையராவி

*ஏழையராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோவறியேன்*
ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள்கொலோவறியேன்*
சூழவும்தாமரைநாண்மலர்போல் வந்துதோன்றும்கண்டீர்*
தோழியர்காளன்னைமீர் என்செய்கேன்துயராட்டியேனே. 1

ஆட்டியும்தூற்றியும்நின்று அன்னைமீரென்னைநீர்நலிந்தென்*
மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோகொழுந்தோவறியேன்*
ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கெனதாவியுள்ளே*
மாட்டியவல்விளக்கின் சுடராய்நிற்கும்வாலியதே. 2

வாலியதோர்கனிகொல் வினையாட்டியேன்வல்வினைகொல்*
கோலம்திரள்பவளக் கொழுந்துண்டங்கொலோவறியேன்*
நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான்தொண்டைவாய்*
ஏலும்திசையுளெல்லாம் வந்துதோன்றுமென்னின்னுயிர்க்கே. 3

இன்னுயிர்க்கேழையர்மேல் வளையுமிணைநீலவிற்கொல்*
மன்னியசீர்மதனன் கருப்புச்சிலைகொல்*மதனன்
தன்னுயிர்த்தாதை கண்ணபெருமான்புருவமவையே*
என்னுயிர்மேலனவாய் அடுகின்றனவென்றுநின்றே. 4

என்றுநின்றேதிகழும் செய்யவீன்சுடர்வெண்மின்னுக்கொல்*
அன்றியென்னாவியடும் அணிமுத்தங்கொலோவறியேன்*
குன்றமெடுத்தபிரான் முறுவலெனதாவியடும்*
ஒன்றுமறிகின்றிலேன் அன்னைமீரெனக்குய்விடமே. 5

உய்விடமேழையர்க்கும் அசுரர்க்குமரக்கர்கட்கும்*
எவ்விடமென்றிலங்கி மகரம்தழைக்கும்தளிர்கொல்*
பைவிடப்பாம்பணையான் திருக்குண்டலக்காதுகளே*
கைவிடலொன்றுமின்றி அடுகின்றனகாண்மின்களே. 6

காண்மின்களன்னையர்காளென்று காட்டும்வகையறியேன்*
நாள்மன்னுவெண்திங்கள்கொல் நயந்தார்கட்குநச்சிலைகொல்*
சேண்மன்னுநால்தடந்தோள் பெருமான்றன்திருநுதலே*
கோள்மன்னியாவியடும் கொடியேனுயிர்கோளிழைத்தே. 7

கோளிழைத்தாமரையும் கொடியும்பவளமும்வில்லும்*
கோளிழைத்தண்முத்தமும் தளிரும்குளிர்வான்பிறையும்*
கோளிழையாவுடைய கொழுஞ்சோதிவட்டங்கொல்*கண்ணன்
கோளிழைவாண்முகமாய்க் கொடியேனுயிர்கொள்கின்றதே. 8

கொள்கின்றகோளிருளைச் சுகிர்ந்திட்டகொழுஞ்சுருளின்*
உள்கொண்டநீலநன்னூல்தழைகொல் அன்றுமாயன்குழல்*
விள்கின்றபூந்தண்துழாய் விரைநாறவந்தென்னுயிரை*
கள்கின்றவாறறியீர் அன்னைமீர்கழறுநிற்றிரே. 9

நிற்றிமுற்றத்துளென்று நெரித்தகையராய்*என்னைநீர்
சுற்றியும்சூழ்ந்தும்வைதிர் சுடர்ச்சோதிமணிநிறமாய்*
முற்றவிம்மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கே*
ஒற்றுமைக்கொண்டதுள்ளம் அன்னைமீர்நசையென்நுங்கட்கே. 10

*கட்கரியபிரமன்சிவன் இந்திரனென்றிவர்க்கும்*
கட்கரியகண்ணனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன*
உட்குடையாயிரத்துள் இவையுமொருபத்தும்வல்லார்*
உட்குடைவானவரோடு உடனாயென்றும்மாயாரே. 11

அடிவரவு:—ஏழைய ராட்டியும் வாலிய தின்னுயிர், என்றுநின் றுய்விடம் காண்மின் கோளிழை, கொள்கின்ற நிற்றி கட்கரி மாயா.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—எட்டாந்திருவாய்மொழி—மாயாவாமனனே

*மாயாவாமனனே மதுசூதாநீயருளாய்*
தீயாய்நீராய்நிலனாய் விசும்பாய்க்காலாய்*
தாயாய்த்தந்தையாய் மக்களாய்மற்றுமாய்முற்றுமாய்*
நீயாய்நீநின்றவாறு இவையென்னநியாயங்களே. 1

அங்கண்மலர்த்தண்டுழாய்முடி அச்சுதனேயருளாய்*
திங்களும்ஞாயிறுமாய்ச் செழும்பல்சுடராயிருளாய்*
பொங்குபொழிமழையாய்ப் புகழாய்ப்பழியாய்ப்பின்னும்நீ*
வெங்கண்வெங்கூற்றமுமாய் இவையென்னவிசித்திரமே. 2

சித்திரத்தேர்வலவா திருச்சக்கரத்தாயருளாய்*
எத்தனையோருகமும் அவையாயவற்றுள்ளியலும்*
ஒத்தவொண்பல்பொருள்கள் உலப்பிலனவாய்வியவாய்*
வித்தகத்தாய்நிற்றிநீ யிவையென்னவிடமங்களே. 3

கள்ளவிழ்தாமரைக்கண் கண்ணனேயெனக்கொன்றருளாய்*
உள்ளதுமில்லதுமாய் உலப்பில்லனவாய்வியவாய்*
வெள்ளத்தடங்கடலுள் விடநாகணைமேல்மருவி*
உள்ளப்பல்யோகுசெய்தி யிவையென்னவுபாயங்களே. 4

பாசங்கள்நீக்கியென்னை உனக்கேயறக்கொண்டிட்டுநீ*
வாசமலர்த்தண்டுழாய்முடி மாயவனேயருளாய்*
காயமும்சீவனுமாய்க் கழிவாய்ப்பிறப்பாய்ப்பின்னும்நீ*
மாயங்கள்செய்துவைத்தி யிவையென்னமயக்குக்களே. 5

மயக்காவாமனனே மதியாம்வண்ணமொன்றருளாய்*
அயர்ப்பாய்த்தேற்றமுமாய் அழலாய்க்குளிராய்வியவாய்*
வியப்பாய்வென்றிகளாய் வினையாய்ப்பயனாய்ப்பின்னும்நீ*
துயக்காநீநின்றவாறு இவையென்னதுயரங்களே. 6

துயரங்கள்செய்யுங்கண்ணா சுடர்நீண்முடியாயருளாய்*
துயரம்செய்மானங்களாய் மதனாகியுகவைகளாய்*
துயரம்செய்காமங்களாய்த் துலையாய்நிலையாய்நடையாய்*
துயரங்கள்செய்துவைத்தி யிவையென்னசுண்டாயங்களே. 7

என்னசுண்டாயங்களால் நின்றிட்டாயென்னையாளும்கண்ணா*
இன்னதோர்தன்மையையென்றுன்னை யாவர்க்கும்தேற்றரியை*
முன்னியமூவுலகும் அவையாயவற்றைப்படைத்து*
பின்னுமுள்ளாய்புறத்தாய் இவையென்னவியற்கைகளே. 8

என்னவியற்கைகளால் எங்ஙனேநின்றிட்டாயென்கண்ணா*
துன்னுகரசரணம்முதலாக எல்லாவுறுப்பும்*
உன்னுசுவையொளி ஊறொலிநாற்றமுற்றும்நீயே*
உன்னையுணரவுறில் உலப்பில்லைநுணுக்கங்களே. 9

இல்லைநுணுக்கங்களே யிதனில்பிறிதென்னும்வண்ணம்*
தொல்லைநன்னூலில்சொன்ன உருவுமருவும்நீயே*
அல்லித்துழாயலங்கல் அணிமார்பவென்னச்சுதனே*
வல்லதோர்வண்ணம்சொன்னால் அதுவேயுனக்காம்வண்ணமே. 10

ஆம்வண்ணமின்னதொன்றென்று அறிவதரியவரியை*
ஆம்வண்ணத்தால் குருகூர்ச்சடகோபனறிந்துரைத்த*
ஆம்வண்ணவொண்டமிழ்கள் இவையாயிரத்துளிப்பத்தும்*
ஆம்வண்ணத்தாலுரைப்பார் அமைந்தார்தமக்கென்றைக்குமே. 11

அடிவரவு :— மாயா வங்கண் சித்திரக் கள்ளவிழ், பாசங்கள் மயக்காத் துயரங்க ளொன்ன சுண், என்னவிய றில்லை யாம்வண்ண மென்றை.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழி—என்றைக்குமென்னை

*என்றைக்குமென்னை உய்யக்கொண்டுபோகிய*
அன்றைக்கன்றென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை*
இன்தமிழ்பாடியவீசனை ஆதியாய்
நின்றவென்சோதியை* என்சொல்லிநிற்பனோ. 1

என்சொல்லிநிற்பன் என்னின்னுயிரின்றொன்றாய்*
என்சொல்லால்யான்சொன்ன இன்கவியென்பித்து*
தன்சொல்லால்தான்தன்னைக் கீர்த்தித்தமாயன்*என்
முன்சொல்லும் மூவுருவாம்முதல்வனே. 2

ஆம்முதல்வனிவனென்று தற்றேற்றி*என்
நாமுதல்வந்துபுகுந்து நல்லின்கவி*
தூமுதல்பத்தர்க்குத் தான்தன்னைச்சொன்ன*என்
வாய்முதலப்பனை யென்றுமறப்பனோ. 3

அப்பனையென்றுமறப்பன் என்னாகியே*
தப்புதலின்றித் தனைக்கவிதான்சொல்லி*
ஒப்பிலாத்தீவினையேனை உய்யக்கொண்டு*
செப்பமேசெய்து திரிகின்றசீர்கண்டே. 4

சீர்கண்டுகொண்டு திருந்துநல்லின்கவி*
நேர்படயான்சொல்லும் நீர்மையிலாமையில்*
ஏர்விலாவென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை*
பார்பரவின்கவி பாடும்பரமரே. 5

இன்கவிபாடும் பரமகவிகளால்*
தன்கவிதான்தன்னைப் பாடுவியாது*இன்று
நன்குவந்தென்னுடனாக்கி யென்னால்தன்னை*
வன்கவிபாடும் என்வைகுந்தநாதனே. 6

வைகுந்தநாதன் எனவல்வினைமாய்ந்தற*
செய்குந்தன்றன்னை யென்னாக்கியென்னால்தன்னை*
வைகுந்தனைகப் புகழவண்டீங்கவி*
செய்குந்தன்றன்னை யெந்நாள்சிந்தித்தார்வனே. 7

ஆர்வனோவாழியங்கை யெம்பிரான் புகழ்*
பார்விண்ணீர்முற்றும் கலந்துபருகிலும்*
ஏர்விலாவென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை*
சீர்பெறவின்கவி சொன்னதிறத்துக்கே. 8

திறத்துக்கேதுப்பரவாம் திருமாலின்சீர்*
இறப்பெதிர்காலம் பருகிலுமார்வனோ*
மறப்பிலாவென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை*
உறப்பலவின்கவி சொன்னவுதவிக்கே. 9

உதவிக்கைம்மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில்*
அதுவுமற்றாங்கவன்றன்னது என்னால்தன்னை*
பதவியவின்கவி பாடியவப்பனுக்கு*
எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே. 10

*இங்குமங்கும் திருமாலன்றியின்மைகண்டு*
அங்ஙனேவண்குருகூர்ச் சடகோபன்*
இங்ஙனேசொன்ன ஓராயிரத்திப்பத்தும்*
எங்ஙனேசொல்லிலும் இன்பம்பயக்குமே. 11

அடிவரவு :—என்றைக் கென்சொல்லி யாமுத லப்பனை, சீர்கண் டின்கவி வைகுந்த வார் வனோ, திறத்துக் குதவி யிங்கு மின்பம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஏழாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—இன்பம்பயக்க

*இன்பம்பயக்கவெழில்மலர்மாதரும்தானும் இவ்வேழுலகை*
இன்பம்பயக்கவினிதுடன்வீற்றிருந்து ஆள்கின்றவெங்கள்பிரான்*
அன்புற்றமர்ந்துறைகின்ற அணிபொழில்சூழ்திருவாறன்விளை*
அன்புற்றமர்ந்துவலம்செய்து கைதொழும்நாள்களுமாகுங்கொலோ. 1

ஆகுங்கொல்ஐயமொன்றின்றி அகலிடமுற்றவுமீரடியே*
ஆகும்பரிசுநிமிர்ந்த திருக்குறளப்பனமர்ந்துறையும்*
மாகம்திகழ்கொடிமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை*
மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலோ. 2

கூடுங்கொல்வைகலும் கோவிந்தனைமதுசூதனைக்கோளரியை*
ஆடும்பறவைமிசைக்கண்டு கைதொழுதன்றியவனுறையும்*
பாடும்பெரும்புகழ்நான்மறை வேள்வியைந்தாறங்கம்பன்னினர்வாழ்*
நீடுபொழில்திருவாறன்விளைதொழ வாய்க்குங்கொல்நிச்சலுமே. 3

வாய்க்குங்கொல்நிச்சலும் எப்பொழுதும்மனத்தீங்குநினைக்கப்பெற*
வாய்க்கும்கரும்பும்பெருஞ்செந்நெலும் வயல்சூழ்திருவாறன்விளை*
வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன் வடமதுரைப்பிறந்த*
வாய்க்கும்மணிநிறக்கண்ணபிரான்றன் மலரடிப்போதுகளே. 4

மலரடிப்போதுகளென்னெஞ்சத்தெப்பொழுதும் இருத்திவணங்க*
பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பனமர்ந்துறையும்*
மலரில்மணிநெடுமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை*
உலகமலிபுகழ்பாட நம்மேல்வினையொன்றுநில்லாகெடுமே. 5

ஒன்றுநில்லாகெடும்முற்றவும்தீவினை உள்ளித்தொழுமின்தொண்டீர்*
அன்றங்கமர்வென்றுருப்பிணிநங்கை அணிநெடுந்தோள்புணர்ந்தான்*
என்றுமெப்போதுமென்னெஞ்சம்துதிப்ப உள்ளேயிருக்கின்றபிரான்*
நின்றவணிதிருவாறன்விளையென்னும் நீணகரமதுவே. 6

நீணகரமதுவேமலர்ச்சோலைகள்சூழ் திருவாறன்விளை*
நீணகரத்துறைகின்றபிரான் நெடுமால்கண்ணன்விண்ணவர்கோன்*
வாணபுரம்புக்குமுக்கட்பிரானைத்தொலைய வெம்போர்கள்செய்து*
வாணனையாயிரந்தோள்துணித்தான் சரணன்றிமற்றொன்றிலமே. 7

அன்றிமற்றொன்றிலம்நின்சரணேயென்று அகலிரும்பொய்கையின்வாய்*
நின்றுதன்நீள்கழலேத்திய ஆனையின்நெஞ்சிடர்தீர்த்தபிரான்*
சென்றங்கினிதுறைகின்ற செழும்பொழில்சூழ்திருவாறன்விளை*
ஒன்றிவலஞ்செய்யவொன்றுமோ தீவினையுள்ளத்தின்சார்வல்லவே. 8

தீவினையுள்ளத்தின்சார்வல்லவாகித் தெளிவிசும்பேறலுற்றால்*
நாவினுள்ளுமுள்ளத்துள்ளும் அமைந்ததொழிலினுள்ளும்நவின்று*
யாவரும்வந்துவணங்கும்பொழில் திருவாறன்விளையதனை*
மேவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொலென்னும் என்சிந்தனையே. 9

சிந்தைமற்றொன்றின்திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்*
சிந்தையினால்செய்வதானறியாதன மாயங்களொன்றுமில்லை*
சிந்தையினால்சொல்லினால்செய்கையால் நிலத்தேவர்குழுவணங்கும்*
சிந்தைமகிழ்திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்றபின்னே. 10

*தீர்த்தனுக்கற்றபின் மற்றோர்சரணில்லையென்றெண்ணி* தீர்த்தனுக்கே
தீர்த்தமனத்தனனாகிச் செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன*
தீர்த்தங்களாயிரத்துள் இவைபத்தும்வல்லார்களை*தேவர்வைகல்
தீர்த்தங்களேயென்றுபூசித்துநல்கியுரைப்பர் தம்தேவியர்க்கே. 11

அடிவரவு :—இன்ப மாகுங்கொல் கூடுங்கொல் வாய்க்குங்கொல். மலரடி ஒன்றுநில் நீணகர மன்றி, தீவினை சிந்தை தீர்த்தன் தேவிமார்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்து முற்றிற்று.

---

# எட்டாம்பத்து

## முதல் திருவாய்மொழி—தேவிமாராவார்

*தேவிமாராவார்திருமகள்பூமி ஏவமற்றமரராட்செய்வார்*
மேவியவுலகம்மூன்றவையாட்சி வேண்டுவேண்டுருவம்நின்னுருவம்*
பாவியேன்றன்னையடுகின்றகமலக்கண்ணதோர் பவளவாய்மணியே*
ஆவியேயமுதேயலைகடல்கடைந்தவப்பனே காணுமாறருளாய். 1

காணுமாறருளாயென்றென்றேகலங்கிக் கண்ணநீரலமர*வினையேன்
பேணுமாறெல்லாம்பேணி நின்பெயரேபிதற்றுமாறருளெனக்கந்தோ*

காணுமாறருளாய்காகுத்தாகண்ணா தொண்டனேன்கற்பகக்கனியே*
பேணுவாரமுதேபெரியதண் புனல்சூழ் பெருநிலமெடுத்தபேராளா. 2

எடுத்தபேராளன்நந்தகோபன்றன் இன்னுயிர்ச்சிறுவனே*அசோதைக்
கடுத்தபேரின்பக்குலவிளங்களிறே அடியனேன்பெரியவம்மானே*
கடுத்தபோரவுணனுடலிருபிளவாக் கையுகிராண்டவெங்கடலே*
அடுத்ததோருருவாயின்றுநீவாராய் எங்ஙனம்தேறுவருமரே. 3

உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி உன்றனக்கன்பரானார்அவர்*
உகந்தமர்ந்தசெய்கையுன்மாயை அறிவொன்றும்சங்கிப்பன்வினையேன்*
அமரதுபண்ணியகலிடம்புடைசூழ் அடுபடையவித்தவம்மானே*
அமரர்தமமுதேயசுரர்கள்நஞ்சே யென்னுடையாருயிரேயோ. 4

ஆருயிரேயோவகலிடமுழுதும் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த*
பேருயிரேயோபெரியநீர்படைத்து அங்குறைந்ததுகடைந்தடைத்துடைத்த*
சீரியரேயோமனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்கும்தேவாவோ*
ஓருயிரேயோவுலகங்கட்கெல்லாம் உன்னைநானெங்குவந்துறுகோ. 5

எங்குவந்துறுகோவென்னையாள்வானே யேழுலகங்களும்நீயே*
அங்கவர்க்கமைத்ததெய்வமும்நீயே அவற்றவைகருமமும்நீயே*
பொங்கியபுறம்பால்பொருளுளவேலும் அவையுமோநீயின்னேயானால்*
மங்கியவருவாம்நேர்ப்பமும்நீயே வான்புலனிறந்ததும்நீயே. 6

இறந்ததும்நீயேயெதிர்ந்ததும்நீயே நிகழ்வதோநீயின்னேயானால்*
சிறந்தநின்தன்மையதுவிதுவுதுவென்று அறிவொன்றும்சங்கிப்பன்வினையேன்*
கறந்தபால்நெய்யேநெய்யினின்சுவையே கடலினுளமுதமே*அமுதில்
பிறந்தவின்சுவையேசுவையதுபயனே பின்னைதோள்மணந்தபேராயா. 7

மணந்தபேராயாமாயத்தால்முழுதும் வல்வினையேனையீர்கின்ற*
குணங்களையுடையாயசுரர்வன்கையர்கூற்றமே கொடியபுள்ளுயர்த்தாய்*
பணங்களாயிரமுமுடையபைந்நாகப்பள்ளியாய் பாற்கடல்சேர்ப்பா*
வணங்குமாறறியேன்மனமும்வாசகமும் செய்கையும்யானுநீதானே. 8

யானுநீதானேயாவதோமெய்யே அருநரகவையும்நீயானால்*
வானுயரின்பமெய்திலென் மற்றைநரகமேயெய்திலென்னெனிலும்*
யானுநீதானாய்த்தெளிதொறும்நன்றுமஞ்சுவன் நரகம்நானடைதல்*
வானுயரின்பம்மன்னிவீற்றிருந்தாய் அருளுநின்தாள்களையெனக்கே. 9

தாள்களையெனக்கேதலைத்தலைச்சிறப்பத்தந்த பேருதவிக்கைம்மாறு*
தோள்களையாரத்தழுவி யென்னுயிரையறவிலைசெய்தனன்சோதீ*
தோள்களாயிரத்தாய்முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய்*
தாள்களாயிரத்தாய்பேர்களாயிரத்தாய் தமியனேன்பெரியவப்பனே. 10

*பெரியவப்பனைப்பிரமனப்பனை உருத்திரனப்பனை*முனிவர்க்
குரியவப்பனையமரரப்பனை உலகுக்கோர்தனியப்பன்றன்னை*
பெரியவண்குருகூர்வண்சடகோபன் பேணினவாயிரத்துள்ளும்*
உரியசொல்மாலையிவையும்பத்திவற்றால் உய்யலாம்தொண்டீர்நங்கட்கே. 11

அடிவரவு :—தேவிமார் காணுமா றெடுத்தபே ருமருக, ஆருயி ரெங்குவந் திறந்ததும் மணந்த, யானுநீ தாள்களைப் பெரியவ நங்கள்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—இரண்டாந் திருவாய்மொழி—நங்கள்வரிவளை

*நங்கள்வரிவளையாயங்காளோ நம்முடையேதலர்முன்புநாணி*
நுங்கட்கியானொன்றுரைக்குமாற்றம் நோக்குகின்றேனெங்கும்காணமாட்டேன்*
சங்கம்சரிந்தனசாயிழந்தேன் தடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன்*
வெங்கண்பறவையின்பாகனெங்கோன் வேங்கடவாணனைவேண்டிச்சென்றே.

வேண்டிச்சென்றொன்றுபெறுகிற்பாரில் என்னுடைத்தோழியர்நுங்கட்கேலும்
ஈண்டிதுரைக்கும்படியையந்தோ காண்கின்றிலேனிடராட்டியேன்நான்*
காண்டகுதாமரைக்கண்ணன்கள்வன் விண்ணவர்கோன்நங்கள்கோனைக்கண்டால்*
ஈண்டியசங்கும்நிறைவும்கொள்வான் எத்தனைகாலமிளைக்கின்றேனே.

காலமிளைக்கிலல்லால் வினையேன்நானிளைக்கின்றிலன்கண்டுகொண்மின்*
ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீரினிநாணித்தானென்*
நீலமலர்நெடுஞ்சோதிசூழ்ந்த நீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்ட*
கோலவளையொடுமாமைகொள்வான் எத்தனைகாலமுங்கூடச்சென்றே. 3

கூடச்சென்றேனினியென்கொடுக்கேன் கோல்வளைநெஞ்சத்தொடக்கமெல்லாம்*
பாடற்றொழியவிழந்துவைகல் பல்வளையார்முன்பரிசழிந்தேன்*
மாடக்கொடிமதிள்தென்குளந்தை வண்குடபால்நின்றமாயக்கூத்தன்*
ஆடல்பறவையுயர்த்தவெல்போர் ஆழிவலவனையாதரித்தே. 4

ஆழிவலவனையாதரிப்பும் ஆங்கவன்நம்மில்வரவுமெல்லாம்*
தோழியர்காள்நம்முடையமேதான் சொல்லுவதோவிங்கரியதுதான்*
ஊழிதோறூழியொருவனாக நன்குணர்வார்க்குமுணரலாகா*
சூழலுடையசுடர்கொளாதித் தொல்லையஞ்சோதிநினைக்குங்காலே. 5

தொல்லையஞ்சோதிநினைக்குங்கால் என்சொல்லளவன்றிமையோர்தமக்கும்*
எல்லையிலாதன கூழ்ப்புச்செய்யும் அத்திறம்நிற்கவெம்மாமைகொண்டான்*
அல்லிமலர்த்தண்டுழாயும்தாரான் ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்*
வல்லிவளவயல்சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமாலே. 6

மாலரிகேசவன்நாரணன் சீமாதவன்கோவிந்தன்வைகுந்தனென்றென்று*
ஓலமிடவென்னைப்பண்ணிவிட்டிட்டு ஒன்றுமுருவும்சுவடும்காட்டான்*
ஏலமலர்க்குழலன்னமீர்காள் என்னுடைத்தோழியர்காளென்செய்கேன்*
காலம்பலசென்றும்காண்பதாணை உங்களோடெங்களிடையில்லையே. 7

இடையில்லையான்வளர்த்தகிளிகாள் பூவைகள்காள்குயில்காள்மயில்காள்*
உடையநம்மாமையுஞ்சங்கும்நெஞ்சும் ஒன்றுமொழியவொட்டாதுகொண்டான்
அடையும்வைகுந்தமும்பாற்கடலும் அஞ்சனவெற்புமவைநணிய*
கடையறப்பாசங்கள்விட்டபின்னையன்றி அவனவைகாண்கொடானே. 8

காண்கொடுப்பானல்லனார்க்கும்தன்னைக் கைசெயப்பாலதோர்மாயந்தன்னால்*
மாண்குறள்கோலவடிவுகாட்டி மண்ணும்விண்ணும்நிறையமலர்ந்த*
சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்த தேவபிராற்கென்நிறைவினோடு*
நாண்கொடுத்தேனினியென்கொடுக்கேன் என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள். 9

என்னுடைநன்னுதனங்கைமீர்காள் யானினிச்செய்வதென்னென்னை*
நின்னிடையேனல்லேனென்றுநீங்கி நேமியும்சங்குமிருகைக்கொண்டு*
பன்னெடுஞ்சூழ்சுடர்ஞாயிற்றோடு பான்மதியேந்தியோர்கோலநீல*
நன்னெடுங்குன்றம்வருவதொப்பான் நாண்மலர்ப்பாதமடைந்ததுவே. 10

*பாதமடைவதன்பாசத்தாலே மற்றவன்பாசங்கள்முற்றவிட்டு*
கோதில்புகழ்க்கண்ணன்றன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன*
தீதிலந்தாதியோராயிரத்துள் இவையுமோர்பத்திசையோடும்வல்லார்*
ஆதுமோர்தீதிலராகி யிங்குமங்குமெல்லாமமைவார்கள்தாமே. 11

அடிவரவு :—நங்கள் வேண்டிக் காலங் கூட, ஆழிவல தொல்லையம் மாலரி யிடையில், காண் கொடு வென்னுடைப் பாதமடை யங்கும்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி—அங்குமிங்கும்

அங்குமிங்கும் வானவர்தானவர்யாவரும்*
எங்குமினையையென்றுன்னை அறியகிலாதலற்றி*
அங்கம்சேரும் பூமகள்மண்மகளாய்மகள்*
சங்குசக்கரக்கையவனென்பர் சரணமே. 1

சரணமாகிய நான்மறைநூல்களும்சாராதே*
மரணம்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம்*
கரணப்பல்படை பற்றறவோடும்கனலாழி*
அரணத்திண்படை யேந்தியஈசற்காளாயே. 2

ஆளுமாளார் ஆழியும்சங்கும்சுமப்பார்தாம்*
வாளும்வில்லுங்கொண்டு பின்செல்வார்மற்றில்லை*
தாளும்தோளும் கைகளையாரத்தொழக்காணேன்*
நாளும்நாளும்நாடுவன் அடியேன்ஞாலத்தே. 3

ஞாலம்போனகம்பற்றி ஓர்முற்றாவுருவாகி*
ஆலம்பேரிலை அன்னவசஞ்செய்யுமம்மானே*
காலம்பேர்வதோர் காரிருளூழியொத்துளதால்*உன்
கோலங்காரெழில் காணலுற்றாழும்கொடியேற்கே. 4

கொடியார்மாடக் கோளூரகத்தும்புளிங்குடியும்*
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்ததுதான்*
அடியாரல்லல்தவிர்த்தவசவோ அன்றேலிப்
படிதான்*நீண்டுதாவியவசவோ பணியாயே. 5

பணியாவமரர் பணிவும்பண்பும்தாமேயாம்*
அணியாராழியும் சங்கமுமேந்துமவர்காண்மின்*
தணியாவெந்நோய் உலகில்தவிர்ப்பான்*திருநீல
மணியார்மேனியோடு என்மனம்சூழவருவாரே. 6

வருவார்செல்வார் வண்பரிசாரத்திருந்த*என்
திருவாழ்மார்வற்கு என்திறம்சொல்லார்செய்வதென்*
உருவார்சக்கரம் சங்குசுமந்திங்கும்மோடு*
ஒருபாடுழல்வான் ஓரடியானுமுளனென்றே. 7

என்றேயென்னை உன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ்*
நின்றேயாட்செய்ய நீகொண்டருளநினைப்பதுதான்*
குன்றேழ்பாரேழ் சூழ்கடல்ஞாலம்முழுவேழும்*
நின்றேதாவிய நீள்கழலாழித்திருமாலே. 8

திருமால்நான்முகன் செஞ்சடையானென்றிவர்கள்*எம்
பெருமான்தன்மையை யாரறிகிற்பார்பேசியென்*
ஒருமாமுதல்வா ஊழிப்பிரானென்னையாளுடை*
கருமாமேனியனென்பன் என்காதல்கலக்கவே. 9

கலக்கமில்லா நல்தவமுனிவர்கரைகண்டோர்*
துளக்கமில்லா வானவரெல்லாம்தொழுவார்கள்*
மலக்கமெய்த மாகடல்தன்னைக்கடைந்தானை*
உலக்கநாம்புகழ்கிற்பது என்செய்வதுரையீரே. 10

*உரையாவெந்நோய்தவிர அருள்நீண்முடியானை*
வரையார்மாட மன்னுகுருகூர்ச்சடகோபன்*
உரையேய்சொல்தொடை ஓராயிரத்துளிப்பத்தும்*
நிரையேவல்லார் நீடுலகத்துப்பிறவாரே. 11

அடிவரவு :—அங்கும் சரண மாளும் ஞாலம், கொடியார் பணியா வருவா ரென்றே, திருமால் கலக்க முரையா வார்கடா.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—நான்காந்திருவாய்மொழி—வார்கடாவருவி

*வார்கடாவருவியானைமாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி*
ஊர்கொள்திண்பாகனுயிர்செகுத்து அரங்கின்மல்லரைக்கொன்றுசூழ்பரண்மேல்*
போர்கடாவரசர்புறக்கிட மாடமீமிசைக்கஞ்சனைத்தகர்த்த*
சீர்கொள்சிற்றாயன்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெங்கள்செல்சார்வே. 1

எங்கள்செல்சார்வுயாமுடையமுதம் இமையவரப்பனென்னப்பன்*
பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும் பொருந்துமூவுருவனெம்மருவன்*
செங்கயலுகளும்தேம்பணைபுடைசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்று
றங்கமர்கின்ற*ஆதியானல்லால் யாவர்மற்றென்னமர்துணையே. 2

என்னமர்பெருமானிமையவர்பெருமான் இருநிலமிடந்தவெம்பெருமான்*
முன்னைவல்வினைகள்முழுதுடன்மாள என்னையாள்கின்றவெம்பெருமான்*
தென்திசைக்கணிகொள்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரைமீபால்
நின்றவெம்பெருமான்*அடியல்லால்சரண்நினைப்பிலும் பிறிதில்லையெனக்கே. 3

பிறிதில்லையெனக்குப்பெரியமூவுலகும்நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த*
குறியமாணெம்மான்குரைகடல்கடைந்த கோலமாணிக்கமென்னம்மான்*
செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்று
றறிய*மெய்ம்மையேநின்றவெம்பெருமான் அடியிணையல்லதோரரணே. 4

அல்லதோரரணுமவனில்வேறில்லை அதுபொருளாகிலும்*அவனை
யல்லதென்னுவியமர்ந்தணைகில்லாது ஆதலாலவனுறைகின்ற*
நல்லநான்மறையோர்வேள்வியுள்மடுத்த நறும்புகைவிசும்பொளிமறைக்கும்*
நல்லநீள்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்குநல்லரணே. 5

எனக்குநல்லரணையெனதாருயிரை யிமையவர்தந்தைதாய்தன்னை*
தனக்கும்தன்தன்மையறிவரியானைத் தடங்கடல்பள்ளியம்மானை*
மனக்கொள்சீர்மூவாயிரவர் வண்சிவனுமயனும்தானுமொப்பார்வாழ்*
கனக்கொள்திண்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள்கண்டேனே.

திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள்கண்ட அத்திருவடியென்றும்*
திருச்செய்யகமலக்கண்ணும்செவ்வாயும் செவ்வடியும்செய்யகையும்*
திருச்செய்யகமலவுந்தியும்செய்யகமலைமார்பும் செய்யவுடையும்*
திருச்செய்யமுடியுமாரமும்படையும் திகழவென்சிந்தையுளானே. 7

திகழவென்சிந்தையுளிருந்தானைச் செழுநிலத்தேவர்நான்மறையோர்*
திசைகைகூப்பியேத்தும் திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாற்றங்கரையானை*
புகர்கொள்வானவர்கள்புகலிடந்தன்னை அசுரர்வன்கையர்வெங்கூற்றை*
புகழுமாறறியேன்பொருந்துமூவுலகும் படைப்பொடுகெடுப்புக்காப்பவனே. 8

படைப்பொடுகெடுப்புக்காப்பவன் பிரமபரம்பரன்சிவப்பிரானவனே*
இடைப்புக்கோருருவுமொழிவில்லையவனே புகழ்வில்லையாவையும்தானே*
கொடைப்பெரும்புகழாரினையர்தன்னானார் கூரியவிச்சையோடொழுக்கம்*
நடைப்பலியியற்கைத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறமர்ந்தநாதனே. 9

அமர்ந்தநாதனையவரவராகி அவர்க்கருளருளுமம்மானை*
அமர்ந்ததண்பழனத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை*
அமர்ந்தசீர்மூவாயிரவர்வேதியர்கள் தம்பதிஅவனிதேவர்வாழ்வு*
அமர்ந்தமாயோனைமுக்கணம்மானை நான்முகனையமர்ந்தேனே. .0

*தேனைநன்பாலைக்கன்னலையமுதைத் திருந்துலகுண்டவம்மானை*
வானநான்முகனைமலர்ந்ததண்கொப்பூழ் மலர்மிசைப்படைத்தமாயோனை*
கோனைவண்குருகூர்வண்சடகோபன் சொன்னவாயிரத்துளிப்பத்தும்*
வானின்மீதேற்றியருள்செய்துமுடிக்கும் பிறவிமாமாயக்கூத்தினையே. 11

அடிவரவு :—வார்கடா வெங்கள்செல் என்னமர் பிறிது, அல்லிதா ரெனக்குநல் திருச்செங் திகழ, படைப்பொ டமர்ந்த தேனைநன் மாய.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—ஐந்தாந் திருவாய்மொழி—மாயக்கூத்தா

*மாயக்கூத்தாவாமனா வினையேன்கண்ணாகண்கைகால்*
தூயசெய்யமலர்களா சோதிச்செவ்வாய்முகிழதா*
சாயல்சாமத்திருமேனி தண்பாசடையாதாமரைநீள்*
வாசத்தடம்போல்வருவானே ஒருநாள்காணவாராயே. 1

காணவாராயென்றென்று கண்ணும்வாயும்துவர்ந்து* அடியேன்
நாணிநன்னாட்டலமந்தால் இரங்கியொருநாள்நீயந்தோ*
காணவாராய்கருநாயிறுதிக்கும் கருமாமாணிக்கம்*
நாணன்மலைபோல்சுடர்ச்சோதி முடிசேர்சென்னியம்மானே. 2

முடிசேர்சென்னியம்மா நின்மொய்பூந்தாமத்தண்டுழாய்*
கடிசேர்கண்ணிப்பெருமானே என்றென்றேங்கியழுதக்கால்*
படிசேர்மகரக்குழைகளும் பவளவாயும்நால்தோளும்*
துடிசேரிடையுமமைந்ததோர் தூநீர்முகில்போல்தோன்றாயே. 3

தூநீர்முகில்போல்தோன்றும் நின்சுடர்கொள்வடிவுங்கனிவாயும்*
தேநீர்க்கமலக்கண்களும் வந்தென்சிந்தைநிறைந்தவா*
மாநீர்வெள்ளிமலைதன்மேல் வண்கார்நீலமுகில்போல*
தூநீர்க்கடலுள் துயில்வானே எந்தாய்சொல்லமாட்டேனே. 4

சொல்லமாட்டேனடியேன் உன்துளங்குசோதித்திருப்பாதம்*
எல்லையில்சீரிளநாயிறு இரண்டுபோலென்னுள்ளவா*
அல்லலென்னுமிருள்சேர்தற்கு உபாயமென்னே ஆழிசூழ்*
மல்லைஞாலமுழுதுண்ட மாநீர்க்கொண்டல்வண்ணனே. 5

கொண்டல்வண்ணா குடக்கூத்தா வினையேன் கண்ணா கண்ணா*என்
அண்டவாணாவென்றென்னை ஆளக்கூப்பிட்டழைத்தக்கால்*
விண்டன்மேல்தான் மண்மேல்தான் விரிநீர்க்கடல்தான் மற்றுத்தான்*
தொண்டனேனுன்கழல்காண ஒருநாள்வந்துதோன்றாயே. 6

வந்துதோன்றாயன்றேல் உன்வையந்தாயமலரடிக்கீழ்*
முந்திவந்துயானிற்ப முகப்பேகூவிப்பணிகொள்ளாய்*
செந்தண்கமலக்கண்கைகால் சிவந்தவாயோர்கருநாயிறு*
அந்தமில்லாக்கதிர்பரப்பி அலர்ந்ததொக்குமம்மானே. 7

ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்துநாணளும்*
தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறுந்தொலைவன்நான்*
தக்கவைவர்தமக்காயன்று ஈரைம்பதின்மர்தாள்சாய*
புக்கநல்தேர்த்தனிப்பாகா வாராயிதுவோபொருத்தமே. 8

இதுவோபொருத்தமின்னுழிப்படையாய் ஏறுமிருஞ்சிறைப்புள்*
அதுவேகொடியாவுயர்த்தானே என்றென்றேங்கியழுதக்கால்*
எதுவேயாகக்கருதுங்கொல் இம்மாஞாலம்பொறைதீர்ப்பான்*
மதுவார்சோலை உத்தரமதுரைப்பிறந்தமாயனே. 9

பிறந்தமாயாபாரதம்பொருதமாயா நீயின்னே*
சிறந்தகால்தீநீர்வான் மண்பிறவுமாயபெருமானே*
கறந்தபாலுள்நெய்யேபோல் இவற்றுளெங்கும்கண்டுகோள்*
இறந்துநின்றபெருமாயா உன்னையெங்கேகாண்கேனே. 10

*எங்கேகாண்கேன்ஈன்துழாயம்மான்தன்னை யானென்றென்று*
அங்கேதாழ்ந்தசொற்களால் அந்தண்குருகூர்ச்சடகோபன்*
செங்கேழ்சொன்னவாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள்*
இங்கேகாணவிப்பிறப்பேமகிழ்வர் எல்லியுங்காலையே. 11

அடிவரவு :—மாயக் காண முடிசேர் தூநீர், சொல்லமாட் கொண்டல் வந்துதோன் றுக்கும், இதுவோ பிறந்த எங்கே எல்லியும்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—ஆறாந் திருவாய்மொழி—எல்லியுங்காலையும்

*எல்லியுங்காலையும் தன்னைநினைந்தெழ*
நல்லவருள்கள் நமக்கேதந்தருள்செய்வான்*
அல்லியந்தண்ணந்துழாய்முடி அப்பனூர்*
செல்வர்கள்வாழும் திருக்கடித்தானமே. 1

திருக்கடித்தானமும் என்னுடைச்சிந்தையும்*
ஒருக்கடுத்துள்ளே உறையும்பிரான்கண்டீர்*
செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை*
உருக்கெட வாளிபொழிந்தவொருவனே. 2

ஒருவரிருவரோர் மூவரெனநின்று*
உருவுகரந்து உள்ளுந்தோறுந்தித்திப்பான்*
திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை*
மருவியுறைகின்ற மாயப்பிரானே. 3

மாயப்பிரான் எனவல்வினைமாய்ந்தற*
நேசத்தினல் நெஞ்சநாடுகுடிகொண்டான்*
தேசத்தமரர் திருக்கடித்தானத்தை*
வாசப்பொழில்மன்னு கோயில்கொண்டானே. 4

கோயில்கொண்டான் தன்திருக்கடித்தானத்தை*
கோயில்கொண்டான் அதனேடுமென்னெஞ்சகம்*
கோயில்கொள் தெய்வமெல்லாந்தொழ*வைகுந்தம்
கோயில்கொண்ட குடக்கூத்தவம்மானே. 5

கூத்தவம்மான் கொடியேனிடர்முற்றவும்*
மாய்த்தவம்மான் மதுசூதவம்மானுறை*
பூத்தபொழில் தண்திருக்கடித்தானத்தை*
ஏத்தநில்லா குறிக்கொண்மினிடரே. 6

கொண்மினிடர்கெட உள்ளத்துக்கோவிந்தன்*
மண்விண்முழுதும் அளந்தவொண்டாமரை*
மண்ணவர்தாந்தொழ வானவர்தாம்வந்து*
நண்ணுதிருக்கடித்தானநகரே. 7

தானநகர்கள் தலைச்சிறந்தெங்கெங்கும்*
வானிந்நிலங்கடல் முற்றுமெம்மாயற்கே*
ஆனவிடத்துமென்னெஞ்சும் திருக்கடித்
தானநகரும்*தனதாயப்பதியே. 8

தாயப்பதிகள் தலைச்சிறந்தெங்கெங்கும்*
மாயத்தினல்மன்னி வீற்றிருந்தானுறை*
தேசத்தமரர் திருக்கடித்தானத்துள்*
ஆயர்க்கதிபதி அற்புதன்தானே. 9

அற்புதன்நாராயணன் அரிவாமனன்*
நிற்பதும்மேவி யிருப்பதென்னெஞ்சகம்*
நற்புகழ்வேதியர் நான்மறைநின்றதிர்*
கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே. 10

சோலைத்திருக்கடித்தானத்துறை திருமாலை*
மதிட்குருகூர்ச் சடகோபன்சொல்*
பாலோடமுதன்ன ஆயிரத்திப்பத்தும்*
மேலைவைகுந்தத்து இருத்தும்வியந்தே. 11

அடிவரவு :—எல்லி திருக்கடி யொருவர் மாய, கோயில் கூத்த கொண்மின் தான, தாய வற்புதன் சோலை யிருத்தும்.

ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஏழாந்திருவாய்மொழி—இருத்தும்வியந்து

*இருத்தும்வியந்தென்னைத் தன்பொன்னடிக்கீழென்று*
அருத்தித்தெனைத்தோர் பலநாளழைத்தேற்கு*
பொருத்தமுடை வாமனன்தான்புகுந்து*என்தன்
கருத்தையுறவீற்றிருந்தான் கண்டுகொண்டே. 1

இருந்தான்கண்டுகொண்டு எனதேழைநெஞ்சாளும்*
திருந்தாதவோரைவரைத் தேய்ந்தறமன்னி*
பெருந்தாட்களிற்றுக்கு அருள்செய்தபெருமான்*
தருந்தானருள்தான் இனியானறியேனே. 2

அருள்தானினியானறியேன் அவனென்னுள்*
இருள்தானறவீற்றிருந்தான் இதுவல்லால்*
பொருள்தானெனில் மூவுலகும்பொருளல்ல*
மருள்தானீதோ மாயமயக்குமயக்கே. 3

மாயமயக்குமயக்கான் என்னைவஞ்சித்து*
ஆயனமரர்க்கரியேறு எனதம்மான்*
தூயசுடர்ச்சோதி தனதென்னுள்வைத்தான்*
தேசந்திகழும் தன்திருவருள்செய்தே. 4

திகழுந்தன்திருவருள்செய்து உலகத்தார்
புகழும்புகழ்தானதுகாட்டித்தந்து*என்னுள்
திகழும்மணிக்குன்றமொன்றே ஒத்துநின்றான்*
புகழும்புகழ் மற்றெனக்குமோர்பொருளே. 5

பொருள்மற்றெனக்குமோர்பொருள் தன்னில்சீர்க்கத்
தருமேல்*பின்னையார்க்கவன் தன்னைக்கொடுக்கும்*
கருமாணிக்கக்குன்றத்துத் தாமரைபோல்*
திருமார்வுகால்கண்கை செவ்வாயுந்தியானே. 6

செவ்வாயுந்தி வெண்பல்சுடர்க்குழை தம்மோடு*
எவ்வாய்ச்சுடரும் தம்மில்முன்வளாய்க்கொள்ள*
செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த*
அவ்வாயன்றி யானறியேன்மற்றருளே. 7

அறியேன்மற்றருள் என்னையாளும்பிரானார்*
வெறிதேயருள்செய்வர் செய்வார்கட்குகந்து*
சிறியேனுடைச் சிந்தையுள்மூவுலகும்*தன்
நெறியாவயிற்றில் கொண்டுநின்றொழிந்தாரே. 8

வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரும்யவரும்*
வயிற்றில்கொண்டு நின்றொருமூவுலகும்*தன்
வயிற்றில்கொண்டு நின்றவண்ணம்நின்றமாலை*
வயிற்றில்கொண்டு மன்னவைத்தேன்மதியாலே. 9

வைத்தேன்மதியால் எனதுள்ளத்தகத்தே*
எய்த்தேயொழிவேனல்லேன் என்றுமெப்போதும்*
மொய்த்தேய்திரைமோது தண்பாற்கடலுளால்*
பைத்தேய் சுடர்ப்பாம்பணைநம்பரனையே, 10

*சுடர்ப்பாம்பணைநம்பரனைத் திருமாலை*
அடிச்சேர்வகை வண்குருகூர்ச்சடகோபன்*
முடிப்பான்சொன்னவாயிரத்து இப்பத்தும்சன்மம்
விட*தேய்ந்தறநோக்கும் தன் கண்கள்சிவந்தே. 11

அடிவரவு :—இருத்து மிருந்தான்கண் டருள்தான் மாயமய, திகழும பொருள்மற்று செவ்வா யறியேன், வயிற்றில் வைத்தேன் சுடர்ப்பாம் கண்கள்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—எட்டாந்திருவாய்மொழி—கண்கள்சிவந்து

*கண்கள்சிவந்துபெரியவாய் வாயுஞ்சிவந்துகனிந்து*உள்ளே
வெண்பலிலகுசுடரிலகு விலகுமகரகுண்டலத்தன்*
கொண்டல்வண்ணன்சுடர்முடியன் நான்குதோளன்குனிசார்ங்கன்*
ஒண்சங்கதைவாளாழியானொருவன் அடியேனுள்ளானே. 1

அடியேனுள்ளானுடலுள்ளான் அண்டத்தகத்தான்புறத்துள்ளான்*
படியேயிதுவென்றுரைக்கலாம்படியனல்லன் பரம்பரன்*
கடிசேர்நாற்றத்துள்ளாலை இன்பத்துன்பக்கழிநேர்மை*
ஒடியாவின்பப்பெருமையோன் உணர்விலும்பரொருவனே. 2

உணர்விலும்பரொருவனை அவனதருளாலுறல்பொருட்டு*என்
உணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்னருளே*
உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும்பழுதேயாம்*
உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானுந்தானாயொழிந்தானே. 3

யானுந்தானாயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனை*
தானும்சிவனும்பிரமனுமாகிப் பணைத்ததனிமுதலை*
தேனும்பாலுங்கன்னலும் அமுதுமாகித்தித்தித்து*என்
ஊனிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றையுணர்ந்தேனே. 4

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு அதனுண்ணேர்மையதுவிதுவென்று*
ஒன்றுமொருவர்க்குணரலாகாது உணர்ந்துமேலுங்காண்பரிது*
சென்றுசென்றுபரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று*
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானங்கடந்ததே. 5

நன்றாய்ஞானங்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து*
ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பாழ் உலப்பிலதனையுணர்ந்துணர்ந்து*
சென்றாங்கின்பத்துன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால்*
அன்றேயப்போதேவீடு அதுவேவீடுவீடாமே. 6

அதுவேவீடுவீடுபேற் றின்பந்தானுமதுதேறி*
எதுவேதானும்பற்றின்றி ஆதுமிலிகளாகிற்கில்*
அதுவேவீடுவீடுபேற் றின்பந்தானுமதுதேறாது*
எதுவேவீடேதின்பமென்று எய்த்தாரெய்த்தாரெய்த்தாரே. 7

எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று இல்லத்தாரும்புறத்தாரும்
மொய்த்து*ஆங்கலறிமுயங்கத் தாம்போகும்போது*உன்மத்தர்போல்
பித்தேயேறியனுராகம்பொழியும்போது எம்பெம்மானோ
டொத்தேசென்று*அங்குள்ளங்கூடக்கூடிற்றாகில் நல்லுறைப்பே. 8

கூடிற்று கில்நல் லுறைப்பு கூடாமையைக்கூடினல்*
ஆடல்பறவையுயர்கொடி எம்மாயனுவததுவதுவே*
வீடைப்பண்ணியொருபரிசே எதிர்வும்நிகழ்வுங்கழிவுமாய்*
ஓடித்திரியும்யோகிகளும் உளரும்இல்லையல்லரே. 9

உளருமில்லையல்லராய் உளராயில்லையாகியே*
உளரெம்மொருவரவர்வந்து என்னுள்ளத்துள்ளேயுறைகின்றார்*
வளரும்பிறையும்தேய்பிறையும்போல அசைவுமாக்கமும்*
வளருஞ்சுடருமிருளும்போல் தெருளும்மருளும்மாய்த்தோமே. 10

*தெருளும்மருளும்மாய்த்துத் தன்திருந்துசெம்பொற்கழலடிக்கீழ்*
அருளியிருத்துமம்மானும் அயனுஞ்சிவனும்*திருமாலால்
அருளப்பட்டசடகோபன் ஓராயிரத்துளிப்பத்தால்*
அருளியடிக்கீழிருத்தும் நம்மண்ணல்கருமாணிக்கமே. 11

அடிவரவு :—கண்க ளடியே னுணர்வில் யானும், நின்றவொன் நன்றாய் அதுவே யெய்த்தார். கூடிற் றுளரும் தெருளும் கருமா,

ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழி—கருமாணிக்கமலை

*கருமாணிக்கமலைமேல் மணித்தடந்தாமரைக்காடுகள்போல்*
திருமார்புவாய்கண்கை உந்திகாலுடையாடைகள்செய்யபிரான்*
திருமாலெம்மான்செழுநீர்வயல் குட்டநாட்டுத்திருப்புலியூர்*
அருமாயன்பேரன்றிப்பேச்சிலள் அன்னைமீர்தற்கென்செய்கேனே. 1

அன்னைமீர்தற்கென்செய்கேன் அணிமேருவின்மீதுலவும்*
துன்னுசூழ்சுடர்நாயிறும் அன்றியும்பல்சுடர்களும்போல்*
மின்னுநீண்முடியாரம் பல்கலன்தானுடையெம்பெருமான்*
புன்னையம்பொழில்சூழ் திருப்புலியூர்புகழுமிவளே. 2

புகழுமிவள்நின்றிராப்பகல் பொருநீர்க்கடல்தீப்பட்டெங்கும்*
திகழுமெரியொடுசெல்வதொப்பச் செழுங்கதிராழிமுதல்*
புகழும்பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான்*
திகழுமணிநெடுமாடநீடு திருப்புலியூர்வளமே. 3

ஊர்வளங்கிளர்சோலையும் கரும்பும்பெருஞ்செந்நெலுஞ்சூழ்ந்து*
ஏர்வளங்கிளர் தண்பணைக் குட்டநாட்டுத்திருப்புலியூர்*
சீர்வளங்கிளர்மூவுலகுண்டுமிழ் தேவபிரான்*
பேர்வளங்கிளர்ந்தன்றிப்பேச்சிலள் இன்றிப்புனையிழையே. 4

புனையிழைகளணிவும் ஆடையுடையும்புதுக்கணிப்பும்*
நினையும்நீர்மையதன்று இவட்கிதுநின்றுநினைக்கப்புக்கால்*
சுனையினுள் தடந்தாமரைமலரும் தண்திருப்புலியூர்*
முனைவன்மூவுலகாளி அப்பன்திருவருள்மூழ்கினளே. 5

திருவருள்மூழ்கிவைகலும் செழுநீர்நிறக்கண்ணபிரான்*
திருவருள்களுஞ்சேர்ந்தமைக்கு அடையாளந்திருந்தவுள*
திருவருளருளால் அவன்சென்றுசேர் தண்திருப்புலியூர்*
திருவருட்கமுகொண்பழத்தது மெல்லியல்செவ்விதழே. 6

மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்க வீங்கிளந்தாள்கமுகின்*
மல்லிலைமடல்வாழை யீன்கனிசூழ்ந்துமணங்கமழ்ந்து*
புல்லிலைத்தெங்கினூடு காலுலவுந்தண்திருப்புலியூர்*
மல்லலஞ்செல்வக்கண்ணன் தாளடைந்தாள் இம்மடவரலே. 7

மடவரலன்னைமீர்கட்கு என்சொல்லிச்சொல்லுகேன்*மல்லைச்செல்வ
வடமொழிமறைவாணர் வேள்வியுள்நெய்யழல்வான்புகைபோய்*
திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்கும் தண்திருப்புலியூர்*
படவரவணையான்றன்நாமமல்லால் பரவாளிவளே. 8

பரவாளிவள்நின்றிராப்பகல் பனிநீர்நிறக்கண்ணபிரான்*
விரவாரிசைமறைவேதியரொலி வேலையினின்றொலிப்ப*
கரவார்தடந்தொறும்தாமரைக்கயம் தீவிகைநின்றலரும்*
புரவார்கழனிகள்சூழ் திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே. 9

அன்றிமற்றோருபாயமென்? இவளந்தண்டுழாய்கமழ்தல்*
குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி*
தென்திசைத்திலதம்புரை குட்டநாட்டுத்திருப்புலியூர்*
நின்றமாயப்பிரான்திருவருளாம் இவள்நேர்பட்டதே. 10

*நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்றன்னடிமை*
நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன்*சொல்
நேர்பட்டதமிழ்மாலை ஆயிரத்துள்ளிவைபத்தும்
நேர்பட்டாரவர்*நேர்பட்டார் நெடுமாற்கடிமைசெய்யவே. 11

அடிவரவு :—கருமாணி அன்னைமீர் புகழு மூர்வளம், புனையிழை திருவருள் மெல்லிலை மடவரல், பரவா ளன்றி நேர்பட்ட நெடுமால்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## எட்டாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—நெடுமாற்கடிமை

*நெடுமாற்கடிமைசெய்வேன்போல் அவனைக்கருதவஞ்சித்து*
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும்தவிர்ந்தசதிர்நினைந்தால்*
கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால்*
விடுமாறென்பதென்னந்தோ வியன்மூவுலகுபெறினுமே. 1

வியன்மூவுலகுபெறினும்போய்த் தானேதானேயானாலும்*
புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ்*
சயமேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி*இம்மையே
பயனேயின்பம்யான்பெற்றது உறுமோபாவியேனுக்கே. 2

உறுமோபாவியேனுக்கு இவ்வுலகமூன்றுமுடன்நிறைய*
சிறுமாமேனிநிமிர்த்த என்செந்தாமரைக்கண்திருக்குறளன்*
நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார்*
சிறுமாமனிசராயென்னையாண்டார் இங்கேதிரியவே 3

இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென் இருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த*
செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கணென்னம்மான்*
பொங்கேழ்புகழ்கள்வாயவாய்ப் புலன்கொள்வடிவென்மனத்ததாய்*
அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடவருளிலே. 4

வழிபட்டோடவருள்பெற்று மாயன்கோலமலரடிக்கீழ்*
சுழிபட்டோடும்சுடர்ச்சோதிவெள்ளத்து இன்புற்றிருந்தாலும்*
இழிபட்டோடுமுடலினிற்பிறந்து தன்சீர்யான்கற்று*
மொழிபட்டோடும்கவியமுதம் நுகர்ச்சியுறுமோமுழுதுமே. 5

நுகர்ச்சியுறுமோமூவுலகின் வீடுபேறுதன்கேழில்*
புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கையென்னம்மான்*
நிகர்ச்செம்பங்கியெரிவிழிகள் நீண்டவசுரருயிரெல்லாம்*
தகர்த்துண்டுழலும்புட்பாகன் பெரியதனிமாப்புகழே. 6

தனிமாப்புகழேயெஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த்தான்தோன்றி*
முனிமாப்பிரமமுதல்வித்தாய் உலகமூன்றும்முளைப்பித்த*
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார்*
நனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கே. 7

நாளும்வாய்க்கநங்கட்கு நளிர்நீர்க்கடலைப்படைத்து*தன்
தாளும்தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி*
நீளும்படர்பூங்கற்பகக்காவும் நிறைபன்னாயிற்றின்*
கோளுமுடையமணிமலைபோல் கிடந்தான்தமர்கள்கூட்டமே. 8

தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும்சதிர்மூர்த்தி*
அமர்கொளாழிசங்குவாள் வில்தண்டாதிபல்படையன்*
குமரன்கோலவைங்கணைவேள்தாதை கோதிலடியார்தம்*
தமர்கள்தமர்கள்தமர்களாம் சதிரேவாய்க்கதமியேற்கே. 9

வாய்க்கதமியேற்கூழிதோறூழியூழி* மாகாயாம்
பூக்கொள்மேனிநான்குதோள் பொன்னாழிக்கையென்னம்மான்*
நீக்கமில்லாவடியார்தம் அடியாரடியாரடியாரெங்
கோக்கள்*அவர்க்கேகுடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே. 10

*நல்லகோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும்தான்நிறைந்த*
அல்லிக்கமலக்கண்ணனை அந்தண்குருகூர்ச்சடகோபன்*
சொல்லப்பட்டவாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள்*
நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே. 11

அடிவரவு :—நெடுமால் வியன்மூ வுறுமோ விங்கே, வழிபட் நுகர்ச்சி தனிமா நாளும், தமர்கள் வாய்க்க நல்லகோள் கொண்ட.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

எட்டாம்பத்து முற்றிற்று.

---

## ஒன்பதாம்பத்து

### முதல்திருவாய்மொழி—கொண்டபெண்டிர்

*கொண்டபெண்டிர்மக்களுற்றார் சுற்றத்தவர்பிறரும்*
கண்டதோடுபட்டதல்லால் காதல்மற்றியாதுமில்லை*
எண்டிசையும்கீழும்மேலும் முற்றவுமுண்டபிரான்*
தொண்டரோமாயுய்யலல்லால் இல்லைகண்டீர்துணையே. 1

துணையும் சார்வுமாகுவார்போல் சுற்றத்தவர்பிறரும்*
அணையவந்தவாக்கமுண்டேல் அட்டைகள்போல்சுவைப்பர்*
கணையொன்றாலேயேழ்மராமுமெய்த எங்கார்முகிலை*
புணையென்றுய்யப்போகிலல்லால் இல்லைகண்டீர்பொருளே. 2

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில் போற்றியென்றேற்றெழுவர்*
இருள்கொள் துன்பத்தின்மைகாணில் என்னேயென்பாருமில்லை*
மருள்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு*
அருள்கொளாளாயுய்யலல்லால் இல்லைகண்டீரரணே. 3

அரணமாவரற்றகாலைக்கு என்றென்றமைக்கப்பட்டார்*
இரணங்கொண்டதெப்பராவர் இன்றியிட்டாலுமஃதே
வருணித்தென்னே வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே*
சரணென்றுய்யப்போகலல்லால் இல்லைகண்டீர்சதிரே. 4

சதிரமென்றுதம்மைத்தாமே சம்மதித்தின்மொழியார்*
மதுரபோகம்துற்றவரே வைகிமற்றொன்றுறுவர்*
அதிர்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு*
எதிர்கொளாளாயுய்யலல்லால் இல்லைகண்டீரின்பமே. 5

இல்லைகண்டீரின்பமந்தோ உள்ளதுநினையாதே*
தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார்*
மல்லைமூதூர் வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே*
சொல்லியுய்யப்போகலல்லால் மற்றொன்றில்லைசுருக்கே. 6

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்*
சிற்றவேண்டாசிந்திப்பேயமையும் கண்டீர்களந்தோ*
குற்றமன்றெங்கள்பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான்*
குற்றமில்சீர்கற்றுவைகல் வாழ்தல்கண்டீர்குணமே* 7

வாழ்தல்கண்டீர்குணமிதந்தோ மாயவனடிபரவி*
போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு*
வாழ்துணையா வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே*
வீழ்துணையாப்போமிதனில் யாதுமில்லைமிக்கதே. 8

யாதுமில்லைமிக்கதனில் என்றென்றதுகருதி*
காதுசெய்வான்கூதைசெய்து கடைமுறைவாழ்க்கையும்போம்*
மாதுகிலின்கொடிக்கொள்மாட வடமதுரைப்பிறந்த*
தாதுசேர்தோள்கண்ணனல்லால் இல்லைகண்டீர்சரணே. 9

கண்ணனல்லாலில்லைகண்டீர்சரண் அதுநிற்கவந்து*
மண்ணின்பாரம்நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான்*
திண்ணமாநும்முடைமையுண்டேல் அவனடிசேர்த்துய்ம்மினோ*
எண்ணவேண்டாநும்மதாதும் அவனன்றிமற்றில்லையே. 10

*ஆதுமில்லைமற்றவனில் என்றதுவேதுணிந்து*
தாதுசேர்தோள்கண்ணனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன*
தீதிலாதவொண்டமிழ்கள் இவையாயிரத்துளிப்பத்தும்*
ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள்பண்டே. 11

அடிவரவு :—கொண்டபெண் துணையும் பொருள்கையுண் டரணம், சதிர மில்லைகண் மற்றொன்று வாழ்தல், யாதுமில் கண்ண னாதுமில் பண்டை.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாம்பத்து—இரண்டாந்திருவாய்மொழி—பண்டைநாளாலே

*பண்டைநாளாலேநின்திருவருளும் பங்கயத்தாள்திருவருளுங்
கொண்டு* நின்கோயில்சீய்த்துப்பல்படிகால் குடிகுடிவழிவந்தாட்செய்யும்*
தொண்டரோர்க்கருளிச்சோதிவாய்திறந்து உன்தாமரைக்கண்களால்நோக்காய்*
தெண்டிரைப்பொருநல்தண்பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே. 1

குடிக்கிடந்தாக்கஞ்செய்து நின்தீர்த்தவடிமைக்குற்றேவல்செய்து*உன்பொன்
னடிக்கடவாதே வழிவருகின்றவடியரோர்க்கருளி* நீயொருநாள்
படிக்களவாகநிமிர்த்த நின்பாதபங்கயமேதலைக்கணியாய்*
கொடிக்கொள்பொன்மதிள்சூழ்குளிர்வயல்சோலைத் திருப்புளிங்குடிக்கிடந்தானே.2

கிடந்தநாள்கிடந்தாயெத்தனைகாலம்கிடத்தி உன்திருவுடம்பசைய*
தொடர்ந்துகுற்றேவல்செய்து தொல்லடிமைவழிவருந்தொண்டரோர்க்கருளி*
தடங்கொள்தாமரைக்கண்விழித்து நீயெழுந்துன்தாமரைமங்கையும்நீயும்*
இடங்கொள்மூவுலகுந்தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக்கிடந்தானே. 3

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள்நின்று*
தெளிந்தவென்சிந்தையகங்கழியாதே யென்னையாள்வாயெனக்கருளி*
நளிர்ந்தசீருலகம்மூன்றுடன்வியப்ப நாங்கள்கூத்தாடிநின்றார்ப்ப*
பளிங்குநீர்முகிலின்பவளம்போல்கனிவாய்சிவப்ப நீகாணவாராயே. 4

பவளம்போல்கனிவாய்சிவப்பநீகாணவந்து நின்பன்னிலாமுத்தம்*
தவழ்கதிர்முறுவல்செய்து நின்திருக்கண்டாமரைதயங்கநின்றருளாய்*
பவளநன்படர்க்கீழ்ச்சங்குறைபொருநல் தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய்*
கவளமாகளிற்றினிடர்கெடத்தடத்துக் காய்சினப்பறவையூர்ந்தானே. 5

காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல்*
மாசினமாலிமாலிமானென்று அங்கவர்படக்கனன்றுமுன்னின்ற*
காய்சினவேந்தேகதிர்முடியானே கலிவயல்திருப்புளிங்குடியாய்*
காய்சினவாழிசங்குவாள் வில்தண்டேந்தியெம்மிடர்கடிவானே. 6

எம்மிடர்கடிந்திங்கென்னையாள்வானே யிமையவர்தமக்குமாங்கனையாய்*
செம்மடல்மலரும்தாமரைப்பழனத் தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய்*
நம்முடையடியர்கவ்வைகண்டுகந்து நாம்களித்துளநலம்கூர*
இம்மடவுலகர்காணநீயொருநாள் இருந்திடாயெங்கள்கண்முகப்பே. 7

எங்கள்கண்முகப்பேயுலகர்களெல்லாம் இணையடிதொழுதெழுதிறைஞ்சி*
தங்களன்பாரத்தமதுசொல்வலத்தால் தலைத்தலைச்சிறந்துபூசிப்ப*
திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய்தேவா*
இங்கண்மாஞாலத்திதனுளுமொருநாள் இருந்திடாய்வீற்றிடங்கொண்டே. 8

வீற்றிடங்கொண்டுவியன்கொள்மாஞாலத்து இதனுளுமிருந்திடாய்*அடியோம்
போற்றியோவாதேகண்ணிணைகுளிரப் புதுமலராகத்தைப்பருக*
சேற்றிளவாளைசெந்நெலூடுகளும் செழும்பணைத்திருப்புளிங்குடியாய்*
கூற்றமாயசுரர்குலமுதலரிந்த கொடுவினைப்படைகள்வல்லானே. 9

கொடுவினைப்படைகள்வல்லையாய் அமரர்க்கிடர்கெடவசுரர்கட்கிடர்செய்*
கடுவினைநஞ்சேயென்னுடையமுதே கலிவயல்திருப்புளிங்குடியாய்*
வடிவிணையில்லாமலர்மகள் மற்றைநிலமகள்பிடிக்கும்மெல்லடியை*
கொடுவினையேனும்பிடிக்கநீயொருநாள் கூவுதல்வருதல்செய்யாயே. 10

*கூவுதல்வருதல்செய்திடாயென்று குரைகடல்கடைந்தவன்றன்னை*
மேவிநன்கமர்ந்தவியன்புனல்பொருநல் வழுதிநாடன்சடகோபன்*
நாவியல்பாடலாயிரத்துள்ளும் இவையுமோர்பத்தும்வல்லார்கள்*
ஓவுதலின்றியுலகம்மூன்றளந்தான் அடியிணையுள்ளத்தோர்வாரே. 11

அடிவரவு :—பண்டை குடிக்கிட கிடந்தாள் புளிங்குடி, பவளக் காய்சின வெம்மிட செங்கள் கண், வீற்றிடம் கொடுவினைக் கூவுத லோரா.

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து—மூன்றுந்திருவாய்மொழி—ஓராயிரமாய்

*ஓராயிரமாய் உலகேழளிக்கும்*
பேராயிரம்கொண்டதோர் பீடுடையன்*
காராயின காளநன்மேனியினன்*
நாராயணன் நங்கள்பிரானவனே. 1

அவனேயகல்ஞாலம் படைத்திடந்தான்*
அவனே அஃதுண்டுமிழ்ந்தானளந்தான்*
அவனேயவனும் அவனுமவனும்*
அவனேமற்றெல்லாமும் அறிந்தனமே. 2

அறிந்தனவேத அரும்பொருள்நூல்கள்*
அறிந்தனகொள்க அரும்பொருளாதல்*
அறிந்தனரெல்லாம் அரியைவணங்கி*
அறிந்தனர் நோய்களறுக்கும்மருந்தே. 3

மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கென்று*
பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான்*
கருந்தேவனெம்மான் கண்ணன்விண்ணுலகம்*
தரும்தேவனைச் சோரேல்கண்டாய்மனமே. 4

மனமேயுன்னை வல்வினையேனிரந்து*
கனமேசொல்லினேன் இதுசோரேல்கண்டாய்*
புனமேவிய பூந்தண்டுழாயலங்கல்*
இனமேதுமிலானை அடைவதுமே. 5

அடைவதும் அணியார்மலர்மங்கைதோள்*
மிடைவதும் அசுரர்க்குவெம்போர்களே*
கடைவதும் கடலுளமுதம்*என்மனம்
உடைவதும் அவற்கேயொருங்காகவே. 6

ஆகம்சேர் நரசிங்கமதாகி*ஓர்
ஆகம்வள்ளுகிரால் பிளந்தானுறை*
மாகவைகுந்தம் காண்பதற்கு*என்மனம்
ஏகமெண்ணும் இராப்பகலின்றியே. 7

இன்றிப்போக இருவினையும்கெடுத்து*
ஒன்றியாக்கைபுகாமை உய்யக்கொள்வான்*
நின்றவேங்கடம் நீணிலத்துள்ளது*
சென்றுதேவர்கள் கைதொழுவார்களே. 8

தொழுதுமாமலர் நீர்சுடர்தூபம்கொண்டு*
எழுதுமென்னுமிது மிகையாதலில்*
பழுதில்தொல்புகழ்ப் பாம்பணைப்பள்ளியாய்*
தழுவுமாறறியேன் உனதாள்களே. 9

தாளதாமரையான் உனதுந்தியான்*
வாள்கொள்நீள்மழுவாளி உன்னாகத்தான்*
ஆளராய்த்தொழுவாரும் அமரர்கள்*
நாளுமென்புகழ்கோ உனசீலமே. 10

*சீலமெல்லையிலானடிமேல்*அணி
கோலநீள் குருகூர்ச்சடகோபன்*சொல்
மாலையாயிரத்துள் இவைபத்தினின்
பாலர்*வைகுந்தமேறுதல்பான்மையே. 11

அடிவரவு :—ஓரா வன்னே அறிந்தன மருந்தே, மனமே யடைவது மாகஞ்சேர் இன்றிப்போ, தொழுதுமா தாளதா சீலமெல் மையார்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து—நான்காந் திருவாய்மொழி—மையார்கருங்கண்ணி

*மையார்கருங்கண்ணி கமலமலர்மேல்
செய்யாள்*திருமார்வினில்சேர் திருமாலே*
வெய்யார்சுடராழி சுரிசங்கமேந்தும்
கையா*உன்னைக்காணக் கருதுமென்கண்ணே. 1

கண்ணேயுன்னைக் காணக்கருதி* என்னெஞ்சம்
எண்ணேகொண்டசிந்தையதாய் நின்றியம்பும்*
விண்ணோர்முனிவர்க்கென்றும் காண்பரியாயை*
நண்ணுதொழியேனென்று நானழைப்பனே. 2

அழைக்கின்றவடிநாயேன் நாய்கூழைவாலால்*
குழைக்கின்றதுபோல என்னுள்ளம்குழையும்*
மழைக்கன்றுகுன்றமெடுத்து ஆநிரைகாத்தாய்*
பிழைக்கின்றதருளென்று பேதுறுவனே. 3

உறுவதிதுவென்று உனக்காட்பட்டு*நின்கண்
பெறுவதெதுகொலென்று பேதையேன்நெஞ்சம்*
மறுகல்செய்யும் வானவர்தானவர்க்கென்றும்*
அறிவதரிய அரியாயவம்மானே. 4

அரியாயவம்மானை அமரர்பிரானை*
பெரியானைப் பிரமனைமுன்படைத்தானை*
வரிவாளரவினணைப் பள்ளிகொள்கின்ற*
கரியான்கழல்காணக் கருதும்கருத்தே. 5

கருத்தேயுன்னைக் காணக்கருதி*என்னெஞ்சத்
திருத்தாகவிருத்தினேன் தேவர்கட்கெல்லாம்
விருத்தா*விளங்கும்சுடர்ச்சோதி உயரத்
தொருத்தா*உன்னையுள்ளும் என்னுள்ளமுகந்தே. 6

உகந்தேயுன்னை உள்ளுமென்னுள்ளத்து* அகம்பால்
அகந்தானமர்ந்தே யிடங்கொண்டவமலா*
மிகும்தானவன்மார்வகலம் இருகூறு
நகந்தாய்* நரசிங்கமதாயவுருவே.

உருவாகிய ஆறுசமயங்கட்கெல்லாம்*
பொருவாகிநின்றான் அவனெல்லாப்பொருட்கும்*
அருவாகியவாதியைத் தேவர்கட்கெல்லாம்*
கருவாகியகண்ணனைக் கண்டுகொண்டேனே. 8

கண்டுகொண்டு என்கண்ணிணையாரக்களித்து*
பண்டைவினையாயின பற்றோடறுத்து*
தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன்*
அண்டத்தமரர்பெருமான் அடியேனே. 9

அடியானிவனென்று எனக்காரருள்செய்யும்
நெடியானை*நிறைபுகழஞ்சிறைப் புள்ளின்
கொடியானை*குன்றாமல் உலகமளந்த
வடியானை* அடைந்தடியேனுய்ந்தவாறே. 10

*ஆறுமதயானை அடர்த்தவன்றன்னை*
சேறார்வயல் தென்குருகூர்ச்சடகோபன்*
நூறேசொன்ன ஓராயிரத்துளிப்பத்தும்*
ஏறேதரும் வானவர்தமின்னுயிர்க்கே. 11

அடிவரவு :—மையார் கண்ணே அழைக்கின்ற வுறுவது, அரியாய கருத்தே யுகந்தே யுருவாகிய, கண்டுகொண் டடியா னாறு வின்னுயிர்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து—ஐந்தாந்திருவாய்மொழி—இன்னுயிர்ச்சேவல்

*இன்னுயிர்ச்சேவலும்நீரும் கூவிக்கொண்டு இங்கெத்தனை*
என்னுயிர்நோவமிழற்றேல்மின் குயில்பேடைகாள்*
என்னுயிர்க்கண்ணபிரானை நீர்வரக்கூவுகிலீர்*
என்னுயிர் கூவிக்கொடுப்பார்க்கும் இத்தனைவேண்டுமோ. 1

இத்தனைவேண்டுவதன்றந்தோ அன்றில்பேடைகாள்*
எத்தனைநீரும் நுஞ்சேவலும்கரைந்தேங்குதிர்*
வித்தகன்கோவிந்தன் மெய்யனல்லனொருவர்க்கும்*
அத்தனையாமினி யென்னுயிரவன்கையதே. 2

அவன்கையதேயெனதாருயிர் அன்றில்பேடைகாள்*
எவம்சொல்லிநீர்குடைந்தாடுதிர் புடைசூழவே*
தவம்செய்திலா வினையாட்டியேனுயிரிங்குண்டோ*
எவஞ்சொல்லிநிற்றும் நும்மேங்குகூக்குரல்கேட்டுமே. 3

கூக்குரல்கேட்டும் நங்கண்ணன்மாயன்வெளிப்படான்*
மேற்கிளைகொள்ளேல்மின் நீரும்சேவலும்கோழிகாள்*
வாக்கும்மனமும் கருமமும்நமக்காங்கதே*
ஆக்கையுமாவியும் அந்தரம்நின்றுழலுமே. 4

அந்தரம்நின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள்*
நுந்திறத்தேதுமிடையில்லை குழறேல்மினோ*
இந்திரஞாலங்கள்காட்டி யிவ்வேழுலகும்கொண்ட*
நந்திருமார்பன் நம்மாவியுண்ணநன்கெண்ணினன். 5

நன்கெண்ணிநான்வளர்த்த சிறுகிளிப்பைதலே*
இன்குரல்நீமிழற்றேல் என்னாருயிர்க்காகுத்தன்*
நின்செய்யவாயொக்கும்வாயன் கண்ணன்கைகாலினன்*
நின்பசுஞ்சாமநிறத்தன் கூட்டுண்டுநீங்கினன். 6

கூட்டுண்டுநீங்கிய கோலத்தாமரைக்கட்செவ்வாய்*
வாட்டமிலென்கருமாணிக்கம் கண்ணன்மாயன்போல்*
கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள்*
காட்டேல்மின்நும்முரு என்னுயிர்க்கதுகாலனே. 7

உயிர்க்கதுகாலனென்று உம்மையானிரந்தேற்கு*நீர்
குயில்பைதல்காள் கண்ணன்நாமமேகுழறிக்கொன்றீர்*
தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசிலும்தந்து*சொல்
பயிற்றியநல்வளமூட்டினீர் பண்புடையீரே. 8

பண்புடைவண்டொடுதும்பிகாள் பண்மிழற்றேல்மின்*
புண்புரைவேல்கொடு குத்தாலொக்கும்நும்மின்குரல்*
தண்பெருநீர்த்தடந்தாமரை மலர்ந்தாலொக்கும்
கண்பெருங்கண்ணன்*நம்மாவியுண்டெழநண்ணினன். 9

எழநண்ணிநாமும் நம்வானநாடனோடொன்றினோம்*
பழனநன்னாரைக்குழாங்கள்காள் பயின்றென்னினி*
இழைநல்லவாக்கையும் பையவேபுயக்கற்றது*
தழைநல்லவின்பம்தலைப்பெய்து எங்கும்தழைக்கவே. 10

*இன்பம்தலைப்பெய்தெங்கும்தழைத்த பல்லூழிக்கு
தன்புகழேத்தத் தனக்கருள்செய்தமாயனை*
தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள்ளிவை*
ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகுமுருகுமே. 11

அடிவரவு :—இன்னுயி ரித்தனை யவன்கை கூக்குரல், அந்தரம் நன்கெண்ணிக் கூட்டுண்டுயிர்க்கது, பண்புடைவண் டெழநண்ணி யின்பந்தலை யுருகும்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து—ஆறுந்திருவாய்மொழி—உருகுமால்நெஞ்சம்

*உருகுமால்நெஞ்சம் உயிரின்பரமன்றி*
பெருகுமால்வேட்கையும் என்செய்கேன்தொண்டனேன்*
தெருவெல்லாம்காவிகமழ் திருக்காட்கரை*
மருவியமாயன்றன் மாயம்நினைதொறே. 1

நினைதொறும்சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்*
வினைகொள்சீர்பாடிலும் வேமெனதாருயிர்*
சுனைகொள்பூஞ்சோலைத் தென்காட்கரையென்னப்பா*
நினைகிலேன்நானுனக்கு ஆட்செய்யும்நீர்மையே. 2

நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப்புகுந்து*என்னை
ஈர்மைசெய்து என்னுயிராயென்னுயிருண்டான்*
சீர்மல்குசோலைத் தென்காட்கரையென்னப்பன்*
கார்முகில்வண்ணன்றன் கள்வமறிகிலேன். 3

அறிகிலேன்தன்னுள் அனைத்துலகும்நிற்க*
நெறிமையால்தானும் அவற்றுள்நிற்கும்பிரான்*
வெறிகமழ்சோலைத் தென்காட்கரையென்னப்பன்*
சிறியவென்னுருயிருண்ட திருவருளே. 4

திருவருள்செய்பவன்போல என்னுள்புகுந்து*
உருவமுமாருயிரும் உடனேயுண்டான்*
திருவளர்சோலைத் தென்காட்கரையென்னப்பன்*
கருவளர்மேனி என்கண்ணன்கள்வங்களே. 5

என்கண்ணன்கள்வம் எனக்குச்செம்மாய்நிற்கும்*
அங்கண்ணனுண்ட என்னுருயிர்க்கோதிது*
புன்கண்மையெய்திப் புலம்பியிராப்பகல்*
என்கண்ணனென்று அவன்காட்கரையேத்துமே. 6

காட்கரையேத்தும் அதனுள்கண்ணாவென்னும்*
வேட்கைநோய்கூர நினைந்துகரைந்துகும்*
ஆட்கொள்வானொத்து என்னுயிருண்டமாயனால்*
கோட்குறைபட்டது என்னுருயிர்கோளுண்டே. 7

கோளுண்டானன்றிவந்து என்னுயிர்தானுண்டான்*
நாளுநாள்வந்து என்னைமுற்றவும்தானுண்டான்*
காளநீர்மேகத் தென்காட்கரையென்னப்பற்கு*
ஆளன்றேபட்டது என்னுருயிர்ப்பட்டதே. 8

ஆருயிர்பட்டது எனதுயிர்பட்டது*
பேரிதழ்த்தாமரைக்கண் கனிவாயதோர்*
காரெழில்மேகத் தென்காட்கரைகோயில்கொள்*
சீரெழில்நால்தடந்தோள் தெய்வவாரிக்கே. 9

வாரிக்கொண்டுன்னை விழுங்குவன்காணிலென்று*
ஆர்வுற்றவென்னையொழிய என்னில்முன்னம்
பாரித்து*தானென்னை முற்றப்பருகினான்*
காரொக்கும் காட்கரையப்பன்கடியனே. 10

*கடியனாய்க் கஞ்சனைக்கொன்றபிரான்றன்னை*
கொடிமதிள்தென்குருகூர்ச் சடகோபன்சொல்*
வடிவமையாயிரத்து இப்பத்தினால்சன்மம்
முடிவெய்தி*நாசங்கண்டீர்களெங்கானலே. 11

அடிவரவு :—உருகு நினைதொறும் நீர்மையா லறிகிலேன், திருவரு ளென்கண்ணன் காட்கரை கோளுண்டான், ஆருயிர் வாரிக்கொண் கடியனா யெங்கானல்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## ஒன்பதாம்பத்து—ஏழாந்திருவாய்மொழி—எங்கானலகங்கழிவாய்

*எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்திங்கினிதமரும்*
செங்காலமடநாராய் திருமூழிக்களத்துறையும்*
கொங்கார்பூந்துழாய்முடி யெங்குடக்கூத்தர்க்கென்தூதாய்*
நுங்கால்களென்தலைமேல் கெழுமீரோநுமரோடே. 1

நுமரோடும்பிரியாதே நீரும்நும்சேவலுமாய்*
அமர்காதல்குருகினங்காள் அணிமூழிக்களத்துறையும்*
எமராலும்பழிப்புண்டு இங்கென்தம்மாலிழிப்புண்டு*
தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமேகேளீரே. 2

தக்கிலமேகேளீர்கள் தடம்புனல்வாயிரைதேரும்*
கொக்கினங்காள்குருகினங்காள் குளிர்மூழிக்களத்துறையும்*
செக்கமலத்தலர்போலும் கண்கைகால்செங்கனிவாய்*
அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகளுக்கே. 3

திருமேனியடிகளுக்குத் தீவினையேன்விடுதூதாய்*
திருமூழிக்களமென்னும் செழுநகர்வாயணிமுகில்காள்*
திருமேனியவட்கருளீர் என்றக்கால்*உம்மைத்தன்
திருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே. 4

தெளிவிசும்புகடிதோடித் தீவளைத்துமின்னிலகும்*
ஒளிமுகில்காள் திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்கு*
தெளிவிசும்புதிருநாடாத் தீவினையேன்மனத்துறையும்*
துளிவார்கட்குழலார்க்கு என்தூதுரைத்தல்செப்புமினே. 5

தூதுரைத்தல்செப்புமின்கள் தூமொழிவாய்வண்டினங்காள்*
போதிரைத்துமதுநுகரும் பொழில்மூழிக்களத்துறையும்*
மாதரைத்தம்மார்வகத்தே வைத்தார்க்கென்வாய்மாற்றம்*
தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையும்கலையுமே. 6

சுடர்வளையும்கலையுங்கொண்டு அருவினையேன்தோள்துறந்த*
படர்புகழான் திருமூழிக்களத்துறையும்பங்கயக்கண்*
சுடர்பவளவாயனைக்கண்டு ஒருநாளோர்தூய்மாற்றம்*
படர்பொழில்வாய்க்குருகினங்காள் எனக்கொன்றுபணியீரே. 7

எனக்கொன்றுபணியீர்கள் இரும்பொழில்வாயிரைதேர்ந்து*
மனக்கின்பம்படமேவும் வண்டினங்காள்தும்பிகாள்*
கனக்கொள்திண்மதிள்புடைசூழ் திருமூழிக்களத்துறையும்*
புனக்கொள்காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே. 8

பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு*
ஏந்துநீரிளங்குருகே திருமூழிக்களத்தாருக்கு*
ஏந்துபூண்முலைபயந்து என்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப*
தாம்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே. 9

தகவன்றென்றுரையீர்கள் தடம்புனல்வாயிரைதேர்ந்து*
மிகவின்பம்படமேவும் மென்னடையவன்னங்காள்*
மிகமேனிமெலிவெய்தி மேகலையுமீடழிந்து*என்
அகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கே. 10

*ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையும் ஒண்சுடரை*
ஒழிவில்லாவணிமழலைக் கிளிமொழியாளலற்றியசொல்*
வழுவில்லாவண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த*
அழிவில்லாவாயிரத்திப்பத்தும் நோயறுக்குமே. 11

அடிவரவு :—எங்கானல் நுமரோடும் தக்கிலமே திருமேனி, தெளிவிசு தூதுரை சுடர்வளை யெனக்கொன்று, பூந்துழாய் தகவன் ஒழிவின்றி யறுக்கும்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து—எட்டாம்திருவாய்மொழி—அறுக்கும்வினையாயின

*அறுக்கும்வினையாயின ஆகத்தவனை*
நிறுத்தும்மனத்தொன்றிய சிந்தையினார்க்கு*
வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
குறுக்கும்வகையுண்டுகொலோ கொடியேற்கே. 1

கொடியேரிடைக் கோகனகத்தவள்கேள்வன்*
வடிவேல்தடங்கண் மடப்பின்னைமணாளன்*
நெடியானுறைசோலைகள்சூழ் திருநாவாய்*
அடியேனணுகப்பெறுநாள் எவைகொலோ. 2

எவைகொலணுகப்பெறுநாள் என்றெப்போதும்*
கவையில்மனமின்றிக் கண்ணீர்கள்கலுழ்வன்*
நவையில்திருநாரணன்சேர் திருநாவாய்*
அவையுள்புகலாவதோர் நாளறியேனே. 3

நாளேலறியேன் எனக்குள்ளன*நானும்
மீளாவடிமைப் பணிசெய்யப்புகுந்தேன்*
நீளார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா. 4

மணாளன்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும்*
கண்ணாளன் உலகத்துயிர்தேவர்கட்கெல்லாம்*
விண்ணாளன்விரும்பியுறையும் திருநாவாய்*
கண்ணாரக்களிக்கின்றது இங்கென்றுகொல்கண்டே. 5

கண்டேகளிக்கின்றது இங்கென்றுகொல்கண்கள்*
தொண்டேயுனக்காயொழிந்தேன் துரிசின்றி*
வண்டார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
கொண்டேயுறைகின்ற எங்கோவலர்கோவே. 6

கோவாகிய மாவலியைநிலங்கொண்டாய்*
தேவாசுரம்செற்றவனே திருமாலே*
நாவாயுறைகின்ற என்நாரணநம்பீ*
ஆவாவடியான் இவனென்றருளாயே. 7

அருளாதொழிவாய் அருள்செய்து*அடியேனைப்
பொருளாக்கி உன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்*
மருளேயின்றி உன்னையென்னெஞ்சத்திருத்தும்*
தெருளேதரு தென்திருநாவாயென்தேவே. 8

தேவர்முனிவர்க்கென்றும் காண்டற்கரியன்*
மூவர்முதல்வன் ஒருமூவுலகாளி*
தேவன்விரும்பியுறையும் திருநாவாய்*
யாவரணுகப்பெறுவார் இனியந்தோ. 9

அந்தோவணுகப்பெறுநாள் என்றெப்போதும்*
சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன்*
கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்*
வந்தேயுறைகின்ற எம்மாமணிவண்ணா. 10

*வண்ணம்மணிமாட நன்னாவாயுள்ளானை*
திண்ணம்மதிள் தென்குருகூர்ச்சடகோபன்*
பண்ணார்தமிழ் ஆயிரத்திப்பத்தும்வல்லார்*
மண்ணாண்டு மணம்கமழ்வர்மல்லிகையே. 11

அடிவரவு: —அறுக்கும் கொடியோர் எவைகொல் நாளேல், மணாளன் கண்டே கோவாகிய வருளாது, தேவர்முனி அந்தோ வண்ணம்மணி மல்லிகை.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழி—மல்லிகைகமழ்

*மல்லிகைகமழ்தென்றலீருமாலோ வண்குறிஞ்சியிசை தவழுமாலோ*
செல்கதிர்மாலையும்மயக்குமாலோ செக்கர்நன்மேகங்கள் சிதைக்குமாலோ*
அல்லியந்தாமரைக்கண்ணனெம்மான் ஆயர்களேறரியேறெம்மாயோன்*
புல்லியமுலைகளும்தோளும்கொண்டு புகலிடமறிகிலம்தமியமாலோ. 1

புகலிடமறிகிலம்தமியமாலோ புலம்புறுமணிதென்றலாம்பலாலோ*
பகலடுமாலைவண்சாந்தமாலோ பஞ்சமம்முல்லை தண்வாடையாலோ*
அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்து எங்குமளிக்கின்றவாயன்மாயோன்*
இகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரான் இனியிருந்தென்னுயிர்காக்குமாறென். 2

இனியிருந்தென்னுயிர்காக்குமாறென் இணைமுலைநமுகநுண்ணிடைநுடங்க*
துனியிரும்கலவிசெய்தாகம்தோய்ந்து துறந்தெம்மையிட்டகல்கண்ணன்கள்வன்*
தனியிளம்சிங்கமெம்மாயன்வாரான் தாமரைக்கண்ணும்செவ்வாயும்*
நீலப்பனியிருங்குழல்களும்நான்குதோளும் பாவியேன்மனத்தேநின்றீருமாலோ. 3

பாவியேன்மனத்தேநின்றீருமாலோ வாடைதண்வாடைவெவ்வாடையாலோ*
மேவுதண்மதியம்வெம்மதியமாலோ மென்மலர்ப்பள்ளிவெம்பள்ளியாலோ*
தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டுதுதைந்த எம்பெண்மையம்பூவிதாலோ*
ஆவியின்பரமல்லவகைகளாலோ யாமுடைநெஞ்சமும்துணையன்றாலோ. 4

யாமுடைநெஞ்சமும்துணையன்றாலோ ஆபுகுமாலையுமாகின்றாலோ*
யாமுடையாயன்றன்மனம்கல்லாலோ அவனுடைத்தீங்குழலீருமாலோ*
யாமுடைத்துணையென்னும்தோழிமாரும் எம்மில்முன்னவனுக்குமாய்வராலோ*
யாமுடையாருயிர்காக்குமாறென் அவனுடையருள்பெறும்போதரிதே. 5

அவனுடையருள்பெறும்போதரிதால் அவ்வருளல்லனவருளுமல்ல*
அவனருள்பெறுமளவாவிநில்லாது அடுபகல்மாலையும்நெஞ்சும்காணேன்*
சிவனொடுபிரமன்வண்டிருமடந்தை சேர்திருவாகமெம்மாவியீரும்*
எவமினிப்புகுமிடமெவம்செய்கேனோ ஆருக்கென்சொல்லுகேனன்னைமீர்காள். 6

ஆருக்கென்சொல்லுகேனன்னைமீர்காள் ஆருயிரளவன்றிக்கூர்தண்வாடை*
காரொக்குமேனிநங்கண்ணன்கள்வம் கவர்ந்தவத்தனிநெஞ்சமவன்கணஃதே*
சீருற்றகிற்புகையாழ்நரம்பு பஞ்சமம்தண்பசும்சாந்தணைந்து*
போருற்றவாடைதண்மல்லிகைப்பூப் புதுமணமுகந்துகொண்டெறியுமாலோ. 7

புதுமணமுகந்துகொண்டெறியுமாலோர் பொங்கிளவாடைபுன்செக்கராலோ*
அதுமணந்தகன்றநங்கண்ணன்கள்வம் கண்ணனிற்கொடிதினியதனிலும்பர்*
மதுமணமல்லிகைமந்தக்கோவை வண்பசும்சாந்தினில்பஞ்சமம்வைத்து*
அதுமணந்தின்னருளாய்ச்சியர்க்கே ஊதுமத்தீங்குழற்கேயுய்யேன்நான். 8

ஊதுமத்தீங்குழற்கேயுய்யேன்நான் அதுமொழிந்திடையிடைத்தன்செய்கோலத்*
தூதுசெய்கண்கள்கொண்டொன்றுபேசித் தூமொழியிசைகள்கொண்டொன்றுநோக்கி*
பேதுறுமுகம்செய்துநொந்துநொந்து பேதைநெஞ்சறவறப்பாடும்பாட்டை*
யாதுமொன்றறிகிலமம்மவம்ம மாலையும்வந்ததுமாயன்வாரான். 9

மாலையும்வந்ததுமாயன்வாரான் மாமணிபுலம்பவல்லேறணைந்த*
கோலநன்னுகுகளுகளுமாலோ கொடியனகுழல்களும்குழறுமாலோ*
வாலொளிவளர்முல்லைகருமுகைகள் மல்லிகையலம்பிவண்டாலுமாலோ*
வேலையும்விசும்பில்விண்டலறுமாலோ என்சொல்லியுய்வனிங்கவனைவிட்டே. 10

*அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா அணியிழையாய்ச்சியர்மாலைப்பூசல்*
அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி அணிகுருகூர்ச்சடகோபன்மாறன்*
அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்த ஆயிரத்துள்ளிவைபத்தும்கொண்டு*
அவனியுளலற்றிநின்றுய்ம்மின்தொண்டீர் அச்சொன்னமாலைநண்ணித்தொழுதே.

அடிவரவு :— மல்லிகை புகலிட மினியிரு பாவியேன், யாமுடை யவனுடை யாருக்கென் புதுமணம், ஊதும் மாலையும் அவனைவிட்டகன் மால்.

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—மாலைநண்ணி

*மாலைநண்ணித் தொழுதெழுமினோவினைகெட*
காலைமாலை கமலமலரிட்டுநீர்*
வேலைமோதும்மதிள்சூழ் திருக்கண்ணபுரத்து*
ஆலின்மேலாலமர்ந்தான் அடியிணைகளே. 1

கள்ளவிழும்மலரிட்டு நீரிறைஞ்சுமின்*
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை*
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
உள்ளி*நாளும்தொழுதெழுமினோதொண்டரே. 2

தொண்டர்நுந்தம் துயர்போகநீரேகமாய்*
விண்டுவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்*
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத்
தண்டவாணன்*அமரர்பெருமானையே. 3

மானைநோக்கி மடப்பின்னைதன்கேள்வனை*
தேனைவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்*
வானையுந்துமதிள்சூழ் திருக்கண்ணபுரம்*
தானயந்தபெருமான் சரணுகுமே. 4

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
மரணமானல் வைகுந்தம்கொடுக்கும்பிரான்*
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன்*தனதன்பர்க்கன்பாகுமே. 5

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
செம்பொனாகத்து அவுணனுடல்கீண்டவன்*
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தன்பன்*நாளும்தனமெய்யர்க்குமெய்யனே. 6

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம்*
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம்*
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்
தையன்*ஆகத்தணைப்பார்கட்கணியனே. 7

அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்*
பிணியும்சாரா பிறவிகெடுத்தாளும்*
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின்*நாளும்பரமேட்டிதன்பாதமே. 8

பாதநாளும் பணியத்தணியும்பிணி*
ஏதம்சாரா எனக்கேலினியென்குறை*
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்
தாதியானை*அடைந்தார்க்கல்லலில்லையே. 9

இல்லையல்லல் எனக்கேலினியென்குறை*
அல்லிமாதரமரும் திருமார்பினன்*
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல*நாளும்துயர்பாடுசாராவே. 10

*பாடுசாரா வினைபற்றறவேண்டுவீர்*
மாடநீடு குருகூர்ச்சடகோபன்*சொல்
பாடலானதமிழ் ஆயிரத்துளிப்பத்தும்
பாடியாடி *பணிமினவன்தாள்களே. 11

அடிவரவு :—மாலைக் கள்ளவிழ் தொண்டர் மானை, சரண மன்பன் மெய்ய னணியன், பாத மில்லை பாடுசாரா தாள்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—முதல்திருவாய்மொழி—தாளதாமரை

*தாளதாமரைத் தடமணிவயல்திருமோகூர்*
நாளுமேவிநன்கமர்ந்துநின்று அசுரரைத்தகர்க்கும்*
தோளுநான்குடைச் சுரிகுழல்கமலக்கண்கனிவாய்*
காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதியே. 1

இலங்கதிமற்றொன்றெம்மைக்கும் ஈன்தண்டுழாயின்*
அலங்கலங்கண்ணி ஆயிரம்பேருடையம்மான்*
நலங்கொள்நான்மறைவாணர்கள்வாழ் திருமோகூர்*
நலங்கழலவனடிநிழல் தடமன்றியாமே. 2

அன்றியாமொருபுகலிடம் இலமென்றென்றலற்றி*
நின்றுநான்முகன் அரனொடு தேவர்கள்நாட*
வென்றிம்மூவுலகளித்து உழல்வான்திருமோகூர்*
நன்றுநாமினிநணுகுதும் நமதிடர்கெடவே. 3

இடர்கெடவெம்மைப்போந்தளியாய் என்றென்றேத்தி*
சுடர்கொள்சோதியைத் தேவரும்முனிவரும்தொடர*
படர்கொள்பாம்பணைப் பள்ளிகொள்வான்திருமோகூர்*
இடர்கெடவடிபரவுதும் தொண்டீர்வம்மினே. 4

தொண்டீர்வம்மின் நம்சுடரொளியொருதனிமுதல்வன்*
அண்டமூவுலகளந்தவன் அணிதிருமோகூர்*
எண்டிசையுமீன்கரும்பொடு பெருஞ்செந்நெல்விளைய*
கொண்டகோயிலைவலஞ்செய்து இங்காடுதும்கூத்தே. 5

கூத்தன்கோவலன் குதற்றுவல்லசுரர்கள்கூற்றம்*
ஏத்தும்நங்கட்கும் அமரர்க்கும்முனிவர்க்குமின்பன்*
வாய்த்ததண்பணைவளவயல்சூழ் திருமோகூர்
ஆத்தன்*தாமரையடியன்றி மற்றிலமரணே. 6

மற்றிலமரண் வான்பெரும்பாழ்தனிமுதலா*
சுற்றுநீர்படைத்து அதன்வழித்தொன்முனிமுதலா*
முற்றும்தேவரோடு உலகுசெய்வான்திருமோகூர்*
சுற்றிநாம்வலஞ்செய்ய நம்துயர்கெடும்கடிதே. 7

துயர்கெடும்கடிதடைந்துவந்து எடியவர்தொழுமின்*
உயர்கொள்சோலை ஒண்தடமணியொளிதிருமோகூர்*
பெயர்களாயிரமுடைய வல்லரக்கர்புக்கழுந்த*
தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தினையே. 8

மணித்தடத்தடி மலர்க்கண்கள்பவளச்செவ்வாய்*
அணிக்கொள்நால்தடந்தோள்தெய்வம் அசுரரையென்றும்*
துணிக்கும்வல்லரட்டன் உறைபொழில்திருமோகூர்*
நணித்துநம்முடைநல்லரண் நாமடைந்தனமே. 9

நாமடைந்தநல்லரண் நமக்கென்றுநல்லமரர்*
தீமைசெய்யும்வல்லசுரரை அஞ்சிச்சென்றடைந்தால்*
காமரூபம்கொண்டு எழுந்தளிப்பான்திருமோகூர்*
நாமமேநவின்றெண்ணுமின் ஏத்துமின்நமர்காள். 10

*ஏத்துமின்நமர்காள் என்றுதான்குடமாடு
கூத்தனை*குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்*
வாய்த்தவாயிரத்துள்ளிவை வண்திருமோகூர்க்கு*
ஈத்தபத்திவையேத்தவல்லார்க்கு இடர்கெடுமே. 11

அடிவரவு :—தாள விலங்கதி அன்றியா மிடர்கெட, தொணடீர் கூத்தன் மற்றிலம் துயர் கெடும், மணித்தட நாமடைந் தேத்துமின் கெடுமிடர்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

### பத்தாம்பத்து—இரண்டாந்திருவாய்மொழி—கெடுமிடர்

கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன*நாளும்
கொடுவினைசெய்யும் கூற்றின் தமர்களும்குறுககில்லார்*
விடமுடையரவில்பள்ளி விரும்பினான்சுரும்பலற்றும்*
தடமுடைவயல் அனந்தபுரநகர்ப்புகுதுமின்றே. 1

இன்றுபோய்ப்புகுதிராகில் எழுமையுமேதம்சாரா*
குன்றுநேர்மாடமாடே குருந்துசேர்செருந்திபுன்னை*
மன்றலர்பொழில் அனந்தபுரநகர்மாயன்நாமம்*
ஒன்றுமோராயிரமாம் உள்ளுவார்க்கும்பரூரே. 2

ஊரும்புட்கொடியுமஃதே உலகெல்லாமுண்டுமிழ்ந்தான்*
சேரும்தண்ணனந்தபுரம் சிக்கெனப்புகுதிராகில்*
தீரும்நோய்வினைகளெல்லாம் திண்ணநாமறியச்சொன்னோம்*
பேருமோராயிரத்துள் ஒன்றுநீர்பேசுமினே. 3

பேசுமின்கூசமின்றிப் பெரியநீர்வேலைசூழ்ந்து*
வாசமேகமழுஞ்சோலை வயலணியனந்தபுரம்*
நேசம்செய்துறைகின்றானை நெறிமையால்மலர்கள்தூவி*
பூசனைசெய்கின்றார்கள் புண்ணியம்செய்தவாறே. 4

புண்ணியம்செய்து நல்லபுனலொடுமலர்கள்தூவி*
எண்ணுமினெந்தைநாமம் இப்பிறப்பறுக்குமப்பால்*
திண்ணநாமறியச்சொன்னோம் செறிபொழிலனந்தபுரத்து*
அண்ணலார்கமலபாதம் அணுகுவாரமரராவார். 5

அமரராய்த்திரிகின்றார்கட்கு ஆதிசேரனந்தபுரத்து*
அமரர்கோனர்ச்சிக்கின்று அங்ககப்பணிசெய்வர்விண்ணோர்*
நமர்களோசொல்லக்கேண்மின் நாமும்போய்நணுகவேண்டும்*
குமரனார்தாதைதுன்பம் துடைத்தகோவிந்தனாரே. 6

துடைத்தகோவிந்தனாரே உலகுயிர்தேவும்மற்றும்*
படைத்தவெம்பரமமூர்த்தி பாம்பணைப்பள்ளிகொண்டான்*
மடைத்தலைவாளைபாயும் வயலணியனந்தபுரம்*
கடைத்தலைசீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே. 7

கடுவினைகளையலாகும் காமனைப்பயந்தகாளை*
இடவகைகொண்டதென்பர் எழிலணியனந்தபுரம்*
படமுடையரவில்பள்ளி பயின்றவன்பாதம்காண*
நடமினோநமர்களுள்ளீர் நாமுமக்கறியச்சொன்னோம். 8

நாமுமக்கறியச்சொன்ன நாள்களும்நணியவான*
சேமநன்குடைத்துக்கண்டீர் செறிபொழிலனந்தபுரம்*
தூமநல்விரைமலர்கள் துவளறவாய்ந்துகொண்டு*
வாமனனடிக்கென்றேத்த மாய்ந்தறும்வினைகள்தாமே. 9

மாய்ந்தறும்வினைகள்தாமே மாதவாவென்ன*நாளும்
ஏய்ந்தபொன்மதிள் அனந்தபுரநகரெந்தைக்கென்று*
சாந்தொடுவிளக்கம்தூபம் தாமரைமலர்கள்நல்ல*
ஆய்ந்துகொண்டேத்தவல்லார் அந்தமில்புகழினாரே. 10

*அந்தமில்புகழ் அனந்தபுரநகராதிதன்னை*
கொந்தலர்பொழில் குருகூர்மாறன்சொல்லாயிரத்துள்*
ஐந்நினோடைந்தும்வல்லார் அணைவர்போயமருலகில்*
பைந்தொடிமடந்தையர்தம் வேய்மருதோளிணையே. 11

அடிவரவு :—கெடுமிட ரின்றுபோய் ஊரும்புள் பேசுமின், புண்ணிய மமரராய்த் துடைத்த கடுவினை, நாமுமக்கு மாய்ந்தறு மந்தமில் வேய்மரு.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—மூன்றாந்திருவாய்மொழி—வேய்மருதோள்

*வேய்மருதோளிணைமெலியுமாலோ மெலிவுமென்தனிமையும்யாதும்நோக்கா*
காமருகுயில்களும்கூவுமாலோ கணமயிலவைகலந்தாலுமாலோ*
ஆமருவினநிரைமேய்க்கநீபோக்கு ஒருபகலாயிரமூழியாலோ*
தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ தகவிலைதகவிலையேநீகண்ணா. 1

தகவிலைதகவிலையேநீகண்ணா தடமுலைபுணர்தொறும்புணர்ச்சிக்காரா*
சுகவெள்ளம்விசும்பிறந்தறிவைமூழ்க்கச்சூழ்ந்து அதுகனவெனநீங்கியாங்கே*
அகவுயிரகமகந்தோறுமுள்புக்கு ஆவியின்பரமல்லவேட்கையந்தோ*
மிகமிகவினியுன்னைப்பிரிவையாமால் வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கே. 2

வீவன்நின்பசுநிரைமேய்க்கப்போக்கு வெவ்வுயிர்க்கொண்டெனதாவிவேமால்*
யாவரும்துணையில்லையானிருந்து உன்னஞ்சனமேனியையாட்டம்காணேன்*
போவதன்றொருபகல்நீயகன்றால் பொருகயற்கண்ணிணைநீரும்நில்லா*
சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப்பிறந்த இத்தொழுத்தையோம்தனிமைதானே. 3

தொழுத்தையோம்தனிமையும்துணைபிரிந்தார் துயரமும் நினைகிலைகோவிந்தா*நின்
தொழுத்தனில்பசுக்களையேவிரும்பித் துறந்தெம்மையிட்டவைமேய்க்கப்போதி*
பழுத்தநல்லமுதினின்சாற்றுவெள்ளம் பாவியேன்மனமகந்தோறுமுள்புக்
கழுத்த*நின்செங்கனிவாயின்கள்வப்பணிமொழி நினைதொறுமாவிவேமால். 4

பணிமொழிநினைதொறுமாவிவேமால் பகல்நிரைமேய்க்கியபோயகண்ணா*
பிணியவிழ்மல்லிகைவாடைதூவப் பெருமதமாலையும்வந்தின்றாலோ*
மணிமிகுமார்வினில்முல்லைப்போது என்வனமுலைகமழ்வித்துன்வாயமுதந்தந்து*
அணிமிகுதாமரைக்கையையந்தோ அடிச்சியோந்தலைமிசைநீயணியாய். 5

அடிச்சியோந்தலைமிசைநீயணியாய் ஆழியங்கண்ணாவுன்கோலப்பாதம்*
பிடித்ததுநடுவுனக்கரிவையரும்பலர் அதுநிற்கவெம்பெண்மையாற்றோம்*
வடித்தடங்கண்ணிணைநீரும்நில்லா மனமும்நில்லாவெமக்கதுதன்னாலே*
வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்கு வேமெமதுயிரழல்மெழுகிலுக்கே. 6

வேமெமதுயிரழல்மெழுகிலுக்கு வெள்வளைமேகலைகழன்றுவீழ*
தூமலர்க்கண்ணிணைமுத்தம்சோரத் துணைமுலைபயந்தெனதோள்கள்வாட*
மாமணிவண்ணாவுன்செங்கமலவண்ணம் மென்மலரடிநோவநீபோய்*
ஆமகிழ்ந்துகந்தவைமேய்க்கின்றுஉன்னோடு அசுரர்கள்தலைப்பெய்யில்யவன்கொலாங்கே. 7

அசுரர்கள்தலைப்பெய்யில்யவன்கொலாங்கென்று ஆழுமென்னாருயிரான்பின்போகேல்*
கசிகையும்வேட்கையுமுள்கலந்து கலவியும்நலியுமென்கைகழியேல்*
வசிசெயுன்தாமரைக்கண்ணும்வாயும் கைகளும்பீதகவுடையும்காட்டி*
ஒசிசெய்நுண்ணிடையிளவாய்ச்சியர் நீயுகக்குநல்லவரொடுமுழிதராயே. 8

உகக்குநல்லவரொடுமுழிதந்து உன்றன்திருவுள்ளமிடர்கெடுந்தோறும்*நாங்கள்
வியக்கவின்புறுதுமெம்பெண்மையாற்றேம் எம்பெருமான்பசுமேய்க்கப்போகேல்*
மிகப்பலவசுரர்கள்வேண்டுருவங்கொண்டு நின்றுழிதருவர்கஞ்சனேவ*
அகப்படிலவரொடும்நின்னொடாங்கே அவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்தோ.

அவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்தோ அசுரர்கள்வன்கையர்கஞ்சனேவ*
தவத்தவர்மறுகநின்றுழிதருவர் தனிமையும்பெரிதுனக்கிராமனையு
முவர்த்தலை*உடன்திரிகிலையுமென்றென் றூடுற என்னுடையாவிவேமால்*
திவத்திலும்பசுநிரைமேயப்புவத்தி செங்கனிவாயெங்களாயர்தேவே. 10

*செங்கனிவாயெங்களாயர்தேவு அத்திருவடிதிருவடிமேல்*பொருநல்
சங்கணிதுறைவன்வண்டென்குருகூர் வண்சடகோபன்சொல்லாயிரத்துள்*
மங்கையராய்ச்சியராய்ந்தமாலை அவனொடும்பிரிவதற்கிரங்கி*தையல்
அங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தன இவையும்பத்தவற்றின்சார்வே.11

அடிவரவு :—வேய்மரு தகவிலை வீவனின் தொழுத்தை, பணிமொழி யடிச்சியோம் வேமெம தசுரர்கள் உகக்குநல் லவத்தம் செங்கனி சார்வே.

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—நான்காந்திருவாய்மொழி—சார்வேதவநெறி

*சார்வேதவநெறிக்குத் தாமோதரன்தாள்கள்*
கார்மேகவண்ணன் கமலநயனத்தன்*
நீர்வானம்மண்ணெரிகாலாய் நின்றநேமியான்*
பேர்வானவர்கள் பிதற்றும்பெருமையனே. 1

பெருமையனேவானத்திமையோர்க்கும் காண்டற்
கருமையனே *ஆகத்தணையாதார்க்கு*என்றும்
திருமெய்யுறைகின்ற செங்கண்மால்*நாளும்
இருமைவினைகடிந்து இங்கென்னையாள்கின்றனே. 2

ஆள்கின்றனுழியான் ஆரால்குறைவுடையம்*
மீள்கின்றதில்லைப் பிறவித்துயர்கடிந்தோம்*
வாள்கெண்டையொண்கண் மடப்பின்னைதன்கேள்வன்*
தாள்கண்டுகொண்டு என்தலைமேல்புனைந்தேனே. 3

தலைமேல்புனைந்தேன் சரணங்கள்*ஆலின்
இலைமேல்துயின்றான் இமையோர்வணங்க*
மலைமேல்தான்நின்று என்மனத்துளிருந்தானை*
நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேனே. 4

நிச்சித்திருந்தேன் எனநெஞ்சம்கழியாமை*
கைச்சக்கரத்தண்ணல் கள்வம்பெரிதுடையன்*
மெச்சப்படான்பிறர்க்கு மெய்போலும்பொய்வல்லன்*
நச்சப்படும்நமக்கு நாகத்தணையானே. 5

நாகத்தணையானை நாடோறும்ஞானத்தால்*
ஆகத்தணைப்பார்க்கு அருள்செய்யுமம்மானை*
மாகத்திளமதியம் சேரும்சடையானை*
பாகத்துவைத்தான்றன் பாதம்பணிந்தேனே. 6

பணிநெஞ்சேநாளும் பரமபரம்பரனை*
பிணியொன்றும்சாரா பிறவிகெடுத்தாளும்*
மணிநின்றசோதி மதுசூதனென்னம்மான்*
அணிநின்றசெம்பொன் அடலாழியானே. 7

ஆழியானாழி அமரர்க்குமப்பாலான்*
ஊழியானூழிபடைத்தான் நிரைமேய்த்தான்*
பாழியந்தோளால் வரையெடுத்தான்பாதங்கள்*
வாழியென்னெஞ்சே மறவாதுவாழ்கண்டாய். 8

கண்டேன்கமலமலர்ப்பாதம் காண்டலுமே*
விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்*
தொண்டேசெய்தென்றும் தொழுதுவழியொழுக*
பண்டேபரமன் பணித்தபணிவகையே 9

வகையால்மனமொன்றி மாதவனை*நாளும்
புகையால்விளக்கால் புதுமலரால்நீரால்*
திசைதோறமரர்கள் சென்றிறைஞ்சநின்ற*
தகையான்சரணம் தமர்கட்கோர்பற்றே 10

*பற்றென்றுபற்றிப் பரமபரம்பரனை*
மல்திண்டோள்மாலை வழுதிவளநாடன்*
சொல்தொடையந்தாதி ஓராயிரத்துளிப்பத்தும்*
கற்றார்க்கோர்பற்றாகும் கண்ணன்கழலிணையே. 11

அடிவரவு :—சார்வே பெருமைய ளுள்கின்றான் தலைமேல், நிச்சித்து நாகத்துப் பணிநெஞ்சே யாழியான், கண்டேன் வகையால் பற்றென்று கண்ணன்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—ஐந்தாந்திருவாய்மொழி—கண்ணன்கழலிணை

*கண்ணன்கழலிணை*நண்ணும்மனமுடையீர்*
எண்ணும்திருநாமம்*திண்ணம்நாரணமே. 1

நாரணனெம்மான்*பாரணங்காளன்*
வாரணம்தொலைத்த*காரணன்தானே. 2

தானேயுலகெல்லாம்*தானேபடைத்திடந்து*
தானேயுண்டுமிழ்ந்து*தானேயாள்வானே. 3

ஆள்வானாழிநீர்*கோள்வாயரவணையான்*
தாள்வாய்மலரிட்டு*நாள்வாய்நாடீரே. 4

நாடீர்நாடோறும்*வாடாமலர்கொண்டு*
பாடீரவன்நாமம்*வீடேபெறலாமே. 5

*மேயான்வேங்கடம்*காயாமலர்வண்ணன்*
பேயார்முலையுண்ட*வாயான்மாதவனே. 6

மாதவனென்றென்று*ஓதவல்லீரேல்*
தீதொன்றுமடையா*ஏதம்சாராவே. 7

சாராவேதங்கள்*நீரார்முகில்வண்ணன்*
பேராரோதுவார்*ஆராரமரரே. 8

அமரர்க்கரியானை* தமர்கட்கெளியானை*
அமரத்தொழுவார்கட்கு* அமராவினைகளே. 9

வினைவல்லிருளென்னும்* முனைகள்வெருவிப்போம்*
சுனைநன்மலரிட்டு* நினைமின்நெடியானே. 10

*நெடியானருள்சூடும்* படியான்சடகோபன்*
நொடியாயிரத்திப்பத்து* அடியார்க்கருள்பேறே. 11

அடிவரவு:—கண்ணன் நாரணன் தானே யாள்வான், நாடீர் மேயான் மாதவன் சாரா, அமரர்க்கு வினைவல் நெடியா னருள்பெறு.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—ஆறுந்திருவாய்மொழி—அருள்பெறுவாரடியார்

*அருள்பெறுவாரடியார்தம் அடியனேற்கு* ஆழியான்
அருள்தருவானமைகின்றான் அதுநமதுவிதிவகையே*
இருள்தருமாஞாலத்துள் இனிப்பிறவியான்வேண்டேன்*
மருளொழிநீமடநெஞ்சே வாட்டாற்றானடிவணங்கே. 1

வாட்டாற்றானடிவணங்கி மாஞாலப்பிறப்பறுப்பான்*
கேட்டாயேமடநெஞ்சே கேசவனெம்பெருமானை*
பாட்டாயபலபாடிப் பழவினைகள்பற்றறுத்து*
நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினமே. 2

நண்ணினம்நாராயணனை நாமங்கள்பலசொல்லி*
மண்ணுலகில்வளம்மிக்க வாட்டாற்றான்வந்து* இன்று
விண்ணுலகம்தருவானாய் விரைகின்றான்விதிவகையே*
எண்ணினவாறாகா இக்கருமங்களென்னெஞ்சே. 3

என்னெஞ்சத்துள்ளிருந்து இங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து*
வன்னெஞ்சத்திரணியனை மார்விடந்தவாட்டாற்றான்*
மன்னஞ்சப்பாரதத்துப் பாண்டவர்க்காய்ப்படைதொட்டான்*
நன்னெஞ்சேநம்பெருமான் நமக்கருள்தான்செய்வானே. 4

வானேறவழிதந்த வாட்டாற்றான்பணிவகையே*
நானேறப்பெறுகின்றேன் நரகத்தைநகுநெஞ்சே*
தேனேறுமலர்த்துளவம் திகழ்பாதன்* செழும்பறவை
தானேறித்திரிவான தாளிணையென்தலைமேலே. 5

தலைமேலதாளிணைகள் தாமரைக்கண்ணென்னம்மான்*
நிலைபேரானென்னெஞ்சத்து எப்பொழுதுமெம்பெருமான்*
மலைமாடத்தரவணைமேல் வாட்டாற்றான்* மதமிக்க
கொலையானைமருப்பொசித்தான் குரைகழல்கள்குறுகினமே. 6

குரைகழல்கள்குறுகினம் நங்கோவிந்தன்குடிகொண்டான்*
திரைகுழுவுகடல்புடைசூழ் தென்னாட்டுத்திலதமன்ன*
வரைகுழுவுமணிமாட வாட்டாற்றான்மலரடிமேல்*
விரைகுழுவுநறுந்துளவம் மெய்ந்நின்றுகமழுமே. 7

மெய்ந்நின்றுகமழ்துளவ விரையேறுதிருமுடியன்*
கைந்நின்றசக்கரத்தன் கருதுமிடம்பொருதுபுனல்*
மைந்நின்றவரைபோலும் திருவுருவவாட்டாற்றற்கு*
எந்நன்றிசெய்தேனா என்னெஞ்சில்திகழ்வதுவே. 8

திகழ்கின்றதிருமார்பில் திருமங்கைதன்னோடும்*
திகழ்கின்றதிருமாலார் சேர்விடம்தண்வாட்டாறு*
புகழ்கின்றபுள்ளூர்தி போரரக்கர்குலம்கெடுத்தான்*
இகழ்வின்றியென்னெஞ்சத்து எப்பொழுதும்பிரியானே. 9

பிரியாதாட்செய்யென்று பிறப்பறுத்தாளறக்கொண்டான்*
அரியாகியிரணியனை ஆகங்கீண்டானன்று*
பெரியார்க்காட்பட்டக்கால் பெறுதபயன்பெறுமாறு*
வரிவாள்வாயரவணைமேல் வாட்டாற்றான்காட்டினனே. 10

*காட்டித்தன்கனைகழல்கள் கடுநரகம்புகலொழித்த*
வாட்டாற்றெம்பெருமானை வளங்குருகூர்ச்சடகோபன்*
பாட்டாயதமிழ்மாலை ஆயிரத்துளிப்பத்தும்
கேட்டு*ஆரார்வானவர்கள் செவிக்கினியசெஞ்சொல்லே. 11

அடிவரவு :—அருள் வாட்டாற்றான் நண்ணின மென்னெஞ்சத்து, வானேறத் தலைமேல குரைகழல் மெய்ந்நின்று, திகழ்கின்ற பிரியாது காட்டித்தன் செஞ்சொல்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—ஏழாந்திருவாய்மொழி—செஞ்சொல்கவிகாள்

*செஞ்சொற்கவிகாளுயிர்காத்தாட்செய்மின் திருமாலிருஞ்சோலை*
வஞ்சக்கள்வன்மாமாயன் மாயக்கவியாய்வந்து*என்
நெஞ்சுமுயிருமுள்கலந்து நின்றாரறியாவண்ணம்*என்
நெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகிநிறைந்தானே. 1

தானேயாகிநிறைந்து எல்லாவுலகுமுயிரும்தானேயாய்*
தானேயானென்பானாகித் தன்னைத்தானேதுதித்து*எனக்குத்
தேனேபாலேகன்னலேயமுதே திருமாலிருஞ்சோலை*
கோனேயாகிநின்றொழிந்தான் என்னைமுற்றுமுயிருண்டே. 2

என்னைமுற்றுமுயிருண்டு என்மாயவாக்கையிதனுள்புக்கு*
என்னைமுற்றும்தானேயாய் நின்றமாயவம்மான்சேர்*
தென்னன்திருமாலிருஞ்சோலைத் திசைகைகூப்பிச்சேர்ந்தயான்*
இன்னம்போவேனேகொலோ என்கொலம்மான்திருவருளே. 3

என்கொலம்மான்திருவருள்கள் உலகுமுயிரும்தானேயாய்*
நன்கென்னுடலம்கைவிடான் ஞாலத்தூடேநடந்துழக்கி*
தென்கொள்திசைக்குத்திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை*
நங்கள்குன்றம்கைவிடான் நண்ணாவசுரர்நலியவே. 4

நண்ணாவசுரர்நலிவெய்த நல்லவமரர்பொலிவெய்த*
எண்ணாதனகளெண்ணும் நன்முனிவரின்பம்தலைசிறப்ப*
பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த்தன்னைத்தான்பாடி*
தென்னாவென்னுமென்னம்மான் திருமாலிருஞ்சோலையானே. 5

திருமாலிருஞ்சோலையானேயாகிச் செழுமூவுலகும்*தன்
ஒருமாவயிற்றினுள்ளேவைத்து ஊழியூழிதலையளிக்கும்*
திருமாலென்னையாளுமால் சிவனும்பிரமனும்காணாது*
அருமாலெய்தியடிபரவ அருளையீந்தவம்மானே. 6

அருளையீயென்னம்மானேயென்னும் முக்கணம்மானும்*
தெருள்கொள்பிரமனம்மானும் தேவர்கோனும்தேவரும்*
இருள்கள்கடியும்முனிவரும் ஏத்துமம்மான்திருமலை*
மருள்கள்கடியும்மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே. 7

*திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலேயென்தலையே*
திருமால்வைகுந்தமே தண்திருவேங்கடமேயெனதுடலே*
அருமாமாயத்தெனதுயிரே மனமேவாக்கேகருமமே*
ஒருமாநொடியும்பிரியான் என்னூழிமுதல்வனொருவனே. 8

ஊழிமுதல்வனொருவனேயென்னும் ஒருவனுலகெல்லாம்*
ஊழிதோறும்தன்னுள்ளே படைத்துக்காத்துக்கெடுத்துழலும்*
ஆழிவண்ணனென்னம்மான் அந்தண்திருமாலிருஞ்சோலை*
வாழிமனமேகைவிடேல் உடலுமுயிருமங்கவொட்டே. 9

மங்கவொட்டுன்மாமாயை திருமாலிருஞ்சோலைமேய*
நங்கள்கோனேயானேநீயாகி யென்னையளித்தானே*
பொங்கைம்புலனும்பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம்*
இங்கிவ்வுயிரேய்பிரகிருதி மானாங்காரமனங்களே. 10

*மானாங்காரமனங்கெட ஐவர்வன்கையர்மங்க*
தானாங்காரமாய்ப்புக்குத் தானேதானேயானானே*
தேனாங்காரப்பொழில்குருகூர்ச் சடகோபன்சொல்லாயிரத்துள்*
மானாங்காரத்திவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே. 11

அடிவரவு:—செஞ்சொல் தானேயாகி யென்னைமுற் றென்கொலம்; நண்ணு திருமா லருளாயீ திருமால், ஊழிமுதல் மங்கவொட்டு மானாங்கா திருமால்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—எட்டாந்திருவாய்மொழி—திருமாலிருஞ்சோலைமலை

*திருமாலிருஞ்சோலைமலை யென்றேனென்ன*
திருமால்வந்து என்னெஞ்சுநிறையப்புகுந்தான்*
குருமாமணியுந்துபுனல் பொன்னித்தென்பால்*
திருமால்சென்றுசேர்விடம் தென்திருப்பேரே. 1

பேரேயுறைகின்றபிரான் இன்றுவந்து*
பேரேனென்று என்னெஞ்சுநிறையப்புகுந்தான்*
காரேழ்கடலேழ் மலையேழுலகுண்டும்*
ஆராவயிற்றானை அடங்கப்பிடித்தேனே. 2

பிடித்தேன்பிறவிகெடுத்தேன் பிணிசாரேன்*
மடித்தேன்மனைவாழ்க்கையுள் நிற்பதோர்மாயையை*
கொடிக்கோபுரமாடங்கள்சூழ் திருப்பேரான்*
அடிச்சேர்வதெனக்கு எளிதாயினவாறே. 3

எளிதாயினவாறென்று என்கண்கள்களிப்ப*
களிதாகியசிந்தையனாய்க் களிக்கின்றேன்*
கிளிதாவியசோலைகள்சூழ் திருப்பேரான்*
தெளிதாகிய சேண்விசும்புதருவானே. 4

வானேதருவான் எனக்காயென்னோடொட்டி*
ஊனேய்குரம்பை யிதனுள்புகுந்து*இன்று
தானேதடுமாற்ற வினைகள்தவிர்த்தான்*
தேனேய்பொழில் தென்திருப்பேர்நகரானே. 5

திருப்பேர்நகரான் திருமாலிருஞ்சோலை*
பொருப்பேயுறைகின்றபிரான் இன்றுவந்து*
இருப்பேனென்று என்னெஞ்சுநிறையப்புகுந்தான்*
விருப்பேபெற்று அமுதமுண்டுகளித்தேனே. 6

உண்டுகளித்தேற்கு உம்பரென்குறை*மேலைத்
தொண்டுஉகளித்து அந்திதொழும்சொல்லுப்பெற்றேன்*
வண்டுகளிக்கும்பொழில்சூழ் திருப்பேரான்*
கண்டுகளிப்பக் கண்ணுள்நின்றகலானே. 7

கண்ணுள்நின்றகலான் கருத்தின்கண்பெரியன்*
எண்ணில்நுண்பொருள் ஏழிசையின்சுவைதானே*
வண்ணநன்மணிமாடங்கள்சூழ் திருப்பேரான்*
திண்ணமென்மனத்துப் புகுந்தான்செறிந்தின்றே. 8

இன்றென்னைப்பொருளாக்கித் தன்னையென்னுள்வைத்தான்*
அன்றென்னைப்புறம்போகப்புணர்த்தது என்செய்வான்*
குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ் திருப்பேரான்*
ஒன்றெனக்கருள்செய்ய உணர்த்தலுற்றேனே. 9

*உற்றேனுகந்துபணிசெய்து உனபாதம்
பெற்றேன்*ஈதேயின்னம் வேண்டுவதெந்தாய்*
கற்றார்மறைவாணர்கள்வாழ் திருப்பேராற்கு*
அற்றாரடியார்தமக்கு அல்லல்நில்லாவே. 10

*நில்லாவல்லல் நீள்வயல்சூழ்திருப்பேர்மேல்*
நல்லார்பலர்வாழ் குருகூர்ச்சடகோபன்*
சொல்லார்தமிழ் ஆயிரத்துள்ளிவைபத்தும்
வல்லார்*தொண்டராள்வது சூழ்பொன்விசும்பே. 11

அடிவரவு:—திருமால் பேரே பிடித்தே னெளிதாய், வானே திருப்பே ருண்டுகளி கண்ணுள், இன்றென்னை யுற்றேன் நில்லாவல் சூழ்விசு.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—ஒன்பதாந்திருவாய்மொழி—சூழ்விசும்பு

*சூழ்விசும்பணிமுகில் தூரியம்முழக்கின*
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின*
ஏழ்பொழிலும் வளமேந்தியவென்னப்பன்*
வாழ்புகழ்நாரணன் தமரைக்கண்டுகந்தே. 1

நாரணன்தமரைக்கண்டுகந்து நன்னீர்முகில்*
பூரணபொற்குடம் பூரித்ததுஉயர்விண்ணில்*
நீரணிகடல்கள் நின்றார்த்தன*நெடுவரைத்
தோரணம்நிரைத்து எங்கும்தொழுதனருலகே. 2

தொழுதனருலகர்கள் தூபநல்மலர்மழை
பொழிவனர்*பூமியன்றளந்தவன் தமர்முன்னே*
எழுமினென்றிருமருங்கிசைத்தனர் முனிவர்கள்*
வழியிதுவைகுந்தற்கென்று வந்தெதிரே. 3

எதிரெதிரிமையவர் இருப்பிடம்வகுத்தனர்*
கதிரவரவரவர் கைந்நிரைகாட்டினர்*
அதிர்குரல்முரசங்கள் அலைகடல்முழக்கொத்த*
மதுவிரிதுழாய்முடி மாதவன்தமர்க்கே. 4

மாதவன்தமரென்று வாசலில்வானவர்*
போதுமீனெமதிடம் புகுதுகவென்றலும்*
கீதங்கள்பாடினர் கின்னரர்கெருடர்கள்*
வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே. 5

வேள்வியுள்மடுத்தலும் விரைகமழ்நறும்புகை*
காளங்கள்வலம்புரி கலந்தெங்குமிசைத்தனர்*
ஆண்மின்கள்வானகம் ஆழியான்தமரென்று*
வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்தே. 6

மடந்தையர்வாழ்த்தலும் மருதரும்வசுக்களும்*
தொடர்ந்தெங்கும் தோத்திரம்சொல்லினர்*தொடுகடல்
கிடந்தவெங்கேசவன் கிளரொளிமணிமுடி*
குடந்தையெங்கோவலன் குடியடியார்க்கே. 7

குடியடியாரிவர் கோவிந்தன்றனக்கென்று*
முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள*
கொடியணிநெடுமதிள் கோபுரம்குறுகினர்*
வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே. 8

வைகுந்தம்புகுதலும் வாசலில்வானவர்*
வைகுந்தன்தமர் எமரெமதிடம்புகுதென்று*
வைகுந்தத்தமரரும் முனிவரும்வியந்தனர்*
வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே. 9

விதிவகைபுகுந்தனரென்று நல்வேதியர்*
பதியினில்பாங்கினில் பாதங்கள்கழுவினர்*
நிதியுநற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும்*
மதிமுகமடந்தையர் ஏந்தினர்வந்தே. 10

*வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து*
அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை*
கொந்தலர்பொழில் குருகூர்ச்சடகோபன்*சொல்
சந்தங்களாயிரத்து இவைவல்லார்முனிவரே. 11

அடிவரவு :—சூழ்விசு நாரணன் தொழுதன ரெதிரெதிர், மாதவன் வேள்வியுள் மடந்தையர் குடியடி, வைகுந்தம் விதிவகை வந்தவர் முனியே.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாம்பத்து—பத்தாந்திருவாய்மொழி—முனியே

*முனியேநான்முகனே முக்கண்ணப்பா என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கட்கருமாணிக்கமேயென்கள்வா*
தனியேனாருயிரே யென்தலைமிசையாய்வந்திட்டு*
இனிநான்போகலொட்டேன் ஒன்றும்மாயம்செய்யேலென்னையே. 1

மாயம்செய்யேலென்னை உன்திருமார்வத்துமாலைநங்கை*
வாசம்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணைகண்டாய்*
நேசம்செய்துன்னோடென்னை உயிர்வேறன்றியொன்றாகவே*
கூசம்செய்யாதுகொண்டாய் என்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ. 2

கூவிக்கொள்ளாய்வந்தந்தோ என்பொல்லாக்கருமாணிக்கமே*
ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்யான்*
மேவித்தொழும்பிரமன்சிவன் இந்திரனாதிக்கெல்லாம்*
நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பரந்ததுவே. 3

உம்பரந்தண்பாழேயோ அதனுள்மிசைநீயேயோ*
அம்பரநற்சோதி அதனுள்பிரமனரன்நீ*
உம்பரும்யாதவரும்படைத்த முனிவனவன்நீ*
எம்பரம்சாதிக்கலுற்று என்னைப்போரவிட்டிட்டாயே. 4

போரவிட்டிட்டென்னை நீபுறம்போக்கலுற்றால்*பின்னையான்
ஆரைக்கொண்டெத்தையந்தோ எனதென்பதென்யானென்பதென்*
தீரவிரும்புண்டநீரதுபோல என்னாருயிரை
ஆரப்பருக*எனக்காராவமுதானாயே. 5

எனக்காராவமுதாய் எனதாவியையின்னுயிரை*
மனக்காராமைமன்னி உண்டிட்டாயினியுண்டொழியாய்*
புனக்காயாநிறத்த புண்டரீகக்கட்செங்கனிவாய்*
உனக்கேற்கும்கோலமலர்ப்பாவைக்கன்பா என்னன்பேயோ. 6

*கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ*
நீலவரையிரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப*
கோலவராகமொன்றாய் நிலங்கோட்டிடைக்கொண்டவெந்தாய்*
நீலக்கடல்கடைந்தாய் உன்னைப்பெற்றினிப்போக்குவனோ. 7

பெற்றினிப்போக்குவனோ உன்னையென்தனிப்பேருயிரை*
உற்றவிருவினையாய் உயிராய்ப்பயனாயவையாய்*
முற்றவிம்மூவுலகும் பெருந்தூறாய்த்தூற்றில்புக்கு*
முற்றக்கரந்தொளித்தாய் என்முதல்தனிவித்தேயோ. 8

*முதல்தனிவித்தேயோ முழுமூவுலகாதிக்கெல்லாம்*
முதல்தனியுன்னையுன்னை யெனைநாள்வந்துகூடுவன்நான்*
முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்*
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலீயோ. 9

*சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ*
சூழ்ந்ததனில்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ*
சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞானவின்பமேயோ*
சூழ்ந்ததனில்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே. 10

*அவாவறச்சூழ் அரியையயனையரனையலற்றி*
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன*
அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும்*முடிந்த
அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே 11
உயர்வறவுயர்நலம்......தொழுதெழென்மனனே.

அடிவரவு:—முனியே மாயம் கூவிக்கொள் உம்பரம், போரவிட் டெனக்காரா கோலமலர் பெற்றினி, முதல்தனி சூழ்ந்தகன் றவாவற வுயர்வற.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவாய்மொழியாயிரம் முற்றிற்று.

ஸ்ரீ:

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

# இராமாநுச நூற்றந்தாதி

## தனியன்கள்

முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன்*
பொன்னங்கழற்கமலப் போதிரண்டும்—என்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன்*தென்புலத்தார்க்கு
என்னுக்கடவுடையேன் யான்.

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்றுநண்ணினர்பால்*
சயந்தருகீர்த்தி யிராமாநுசமுனிதாளிணைமேல்*
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுது* ஓங்குமன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதியோத விசைநெஞ்சமே.

சொல்லின்தொகைகொண்டுனதடிப் போதுக்குத்தொண்டுசெய்யும்*
நல்லன்பரேத்துமுன்நாமமெல்லாமென்றன்நாவினுள்ளே*
அல்லும்பகலுமமரும்படிநல்குஅறுசமயம்
வெல்லும்பரம*இராமாநுசஇதென் விண்ணப்பமே.

---

பூமன்னுமாதுபொருந்தியமார்பன்*புகழ்மலிந்த
பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன்*பல்கலையோர்
தாம்மன்னவந்தவிராமாநுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ*நெஞ்சேசொல்லுவோமவன்நாமங்களே. 1

கள்ளார்பொழில்தென்னரங்கன்*கமலப்பதங்கள்நெஞ்சிற்
கொள்ளாமனிசரைநீங்கி *குறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பனிராமாநுசன்மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு*ஒன்றறியேனெனக்குற்றபேரியல்வே. 2

பேரியல்நெஞ்சே அடிபணிந்தேனுன்னை*பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ளசுற்றம்புலத்தி*பொருவரும்சீர்
ஆரியன்செம்மையிராமாநுசமுனிக் கன்புசெய்யும்
சீரியபேறுடையார்* அடிக்கீழென்னைச் சேர்த்ததற்கே. 3

என்னைப்புவியிலொருபொருளாக்கி*மருள்சுரந்த
முன்னைப்பழவினைவேரறுத்து* ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்தவிராமாநுசன் பரன்பாதமுமென்
சென்னித்தரிக்கவைத்தான்*எனக்கேதும் சிதைவில்லையே. 4

எனக்குற்றசெல்வமிராமாநுசனென்று* இசையகில்லா
மனக்குற்றமாந்தர்பழிக்கில்புகழ்* அவன்மன்னியசீர்
தனக்குற்றவன்பரவன் திருநாமங்கள்சாற்றும் என்பா
வினக்குற்றம்காணகில்லார்*பத்தியேய்ந்தவியல்விதென்றே. 5

இயலும்பொருளுமிசையத்தொடுத்து*ஈன்கவிகளன்பால்
மயல்கொண்டுவாழ்த்து மிராமாநுசனை*மதியின்மையால்
பயிலும்கவிகளில் பத்தியில்லாதவென்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன்*அவன்றன்பெருங்கீர்த்திமொழிந்திடவே. 6

*மொழியைக்கடக்கும்பெரும்புகழான்*வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நம்கூரத்தாழ்வான் சரண்கூடியபின்*
பழியைக்கடத்துமிராமாநுசன்புகழ்பாடி அல்லா
வழியைக்கடத்தல்*எனக்கினியாதும் வருத்தமன்றே. 7

வருத்தும்புறவிருள்மாற்ற*எம்பொய்கைப்பிரான்மறையின்
குருத்தின்பொருளையும் செந்தமிழ்தன்னையும்கூட்டி*ஒன்றத்
திரித்தன்றெரித்ததிருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
யிருத்தும்பரமன்*இராமாநுசனெம்மிறையவனே. 8

இறைவனைக்காணு மிதயத்திருள்கெட*ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடிதாள்கள்*நெஞ்சத்
துறையவைத்தாளுமிராமாநுசன்புகழோதும்நல்லோர்
மறையினைக்காத்து*இந்த மண்ணகத்தேமன்னவைப்பவரே. 9

மன்னியபேரிருள்மாண்டபின்*கோவலுள்மாமலராள்
தன்னொடுமாயனைக் கண்டமைகாட்டும்*தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்று மிராமாநுசற்கன்புபூண்டவர்தாள்
சென்னியிற்சூடும்*திருவுடையாரென்றும்சீரியரே. 10

சீரியநான்மறைச் செம்பொருள்*செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப் பாண்பெருமாள்*சரணாம்பதுமத்
தாரியல்சென்னி யிராமாநுசன்றன்னைச்சார்ந்தவர்தம்
காரியவண்மை*என்னால்சொல்லொணாதிக்கடலிடத்தே. 11

இடங்கொண்டகீர்த்தி மழிசைக்கிறைவன்*இணையடிப்போ
தடங்குமிதயத் திராமாநுசன்*அம்பொற்பாதமென்றும்
கடங்கொண்டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக்காதல்செய்யாத்
திடங்கொண்டஞானியர்க்கே*அடியேனன்புசெய்வதுவே. 12

செய்யும்பசுந்துளபத்தொழில்மாலையும்*செந்தமிழில்
பெய்யும்மறைத்தமிழ் மாலையும்*பேராதசீரரங்கத்
தையன்கழற்கணியும்பரன்தாளன்றி ஆதரியா
மெய்யன்*இராமாநுசன்சரணேகதிவேறெனக்கே. 13

கதிக்குப்பதறி*வெங்கானமும்கல்லும் கடலுமெல்லாம்
கொதிக்கத் தவம்செய்யும்கொள்கையற்றேன்*கொல்லிகாவலன்சொல்
பதிக்கும்கலைக்கவிபாடும்பெரியவர்பாதங்களே
துதிக்கும்பரமன்*இராமாநுசனென்னைச்சோர்விலனே. 14

சோராதகாதல் பெருஞ்சுழிப்பால்*தொல்லைமாலையொன்றும்
பாராது அவனைப்பல்லாண்டென்றுகாப்பிடும்*பான்மையன்தாள்
பேராதவுள்ளத் திராமாநுசன்றன்பிறங்கியசீர்
சாராமனிசரைச்சேரேன்*எனக்கென்னதாழ்வினியே. 15

தாழ்வொன்றில்லாமறைதாழ்ந்து*தலமுழுதும்கலியே
ஆள்கின்றநாள்வந்து அளித்தவன்காண்மின்*அரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைச் சூடிக்கொடுத்தவள்தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல்*இராமாநுசனென்னும்மாமுனியே. 16

முனியார்துயரங்கள்முந்திலும்*இன்பங்கள்மொய்த்திடினும்
கனியார்மனம் கண்ணமங்கைநின்றானை*கலைபரவும்
தனியானையைத்தண்டமிழ்செய்தநீலன்றனக்கு உலகில்
இனியானை*எங்களிராமாநுசனை வந்தெய்தினரே. 17

எய்தற்கரியமறைகளை* ஆயிரமின்தமிழால்
செய்தற்குலகில்வரும்சடகோபனை*சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும் பெரியவர்சீரையுயிர்களெல்லாம்
உய்தற்குதவும்* இராமாநுசனெம்முறுதுணையே. 18

உறுபெருஞ்செல்வமும் தந்தையும்தாயும்*உயர்குருவும்
வெறிதருபூமகள்நாதனும்*மாறன்விளங்கியசீர்
நெறிதரும்செந்தமி ழாரணமேயென்றிந்நீணிலத்தோர்
அறிதரநின்ற* இராமாநுசனெனக்காரமுதே. 19

ஆரப்பொழில்தென்குருகைப்பிரான்* அமுதத்திருவா
யிரத்தமிழி னிசையுணர்ந்தோர்கட்கு* இனியவர்தம்
சீரைப்பயின்றுய்யும் சீலங்கொள்நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும்* இராமாநுசனென்றன்மாநிதியே. 20

நிதியைப்பொழியும்முகிலென்று*நீசர்தம்வாசல்பற்றித்
துதிகற்றுலகில்துவள்கின்றிலேனினி* தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத்துறைவனிணையடியாம்
கதிபெற்றுடைய* இராமாநுசனென்னைக்காத்தனனே. 21

கார்த்திகையானும் கரிமுகத்தானும்*கனலும்முக்கண்
மூர்த்தியும் மோடியும்வெப்பும்முதுகிட்டு*மூவுலகும்
பூத்தவனேயென்றுபோற்றிட வாணன்பிழைபொறுத்த
தீர்த்தனையேத்தும்* இராமாநுசனென்றன்சேமவைப்பே. 22

வைப்பாயவான்பொருளென்று* நல்லன்பர் மனத்தகத்தே
எப்போதும்வைக்கு மிராமாநுசனை* இருநிலத்தில்
ஒப்பாரிலாத வுறுவினையேன்வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவன்*என்னுமிது அவன்மொய்புகழ்க்கே. 23

மொய்த்தவெந்தீவினையால் பல்லுடல்தொறும்மூத்து* அதனால்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம்* இன்றுகண்டுயர்ந்தேன்
பொய்த்தவம்போற்றும் புலைச்சமயங்கள்நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து* இராமாநுசனென்னும்கார்தன்னையே. 24

காரேய்கருணையிராமாநுச* இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் நின்னருளின்தன்மை* அல்லலுக்கு
நேரேயுறைவிடம் நான்வந்துநீயென்னையுய்த்தபின் உன்
சீரேயுயிர்க்குயிராய்* அடியேற்கின்று தித்திக்குமே. 25

திக்குற்றகீர்த்தி யிராமாநுசனை *என்செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கியமேகத்தை*மேவும்நல்லோர்
எக்குற்றவாள ரெதுபிறப்பேதியல்வாகநின்றோர்
அக்குற்றமப்பிறப்பு* அவ்வியல்வேநம்மையாட்கொள்ளுமே. 26

கொள்ளக்குறைவற்றிலங்கி*கொழுந்துவிட் டோங்கியவுன்
வள்ளல்தனத்தினால் வல்வினையேன்மனம்நீபுகுந்தாய்*
வெள்ளைச்சுடர்விடு முன்பெருமேன்மைக்கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும்* இராமாநுசவென்தனிநெஞ்சமே. 27

நெஞ்சில்கறைகொண்ட கஞ்சனைக்காய்ந்தநிமலன்* நங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன்காதலன்*பாதம்நண்ணா
வஞ்சர்க்கரியவிராமாநுசன்புகழன்றியென்வாய்
கொஞ்சிப்பரவகில்லாது*என்னவாழ்வின்றுகூடியதே. 28

கூட்டும்விதியென்றுகூடுங்கொலோ*தென்குருகைப்பிரான்
பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ்தன்னை*தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்தவிராமாநுசன்புகழ்மெய்யுணர்ந்தோர்
ஈட்டங்கள்தன்னை*என்னாட்டங்கள்கண்டின்பமெய்திடவே. 29

இன்பந்தருபெருவீடுவந்தெய்திலென்*எண்ணிறந்த
துன்பந்தரு நிரயம்பலசூழிலென்*தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறையவன்மாயனெனமொழிந்த
அன்பனனகன்*இராமாநுசனென்னையாண்டனனே. 30

*ஆண்டுகள்நாள்திங்களாய்*நிகழ்காலமெல்லாம்மனமே
ஈண்டுபல்யோனிகள்தோறுழல்வோம்*இன்றோரெண்ணின்றியே
காண்டருதோளண்ணல் தென்னத்தியூரர்கழலிணைக்கீழ்ப்
பூண்டவன்பாளன்*இராமாநுசனைப்பொருந்தினமே. 31

பொருந்தியதேசும் பொறையும்திறலும்புகழும்*நல்ல
திருந்தியஞானமும் செல்வமும்சேரும்*செறுகலியால்
வருந்தியஞாலத்தை வண்மையினால்வந்தெடுத்தளித்த
அருந்தவன்*எங்களிராமாநுசனையடைபவர்க்கே. 32

அடையார்கமலத்து அலர்மகள்கேள்வன்*கையாழியென்னும்
படையோடுநாந்தகமும்படர்தண்டும்*ஒண்சார்ங்கவில்லும்
புடையார்புரிசங்கமுமிந்தப்பூதலம்காப்பதற்கென்று*
இடையே*இராமாநுசமுனியாயினவிந்நிலத்தே. 33

நிலத்தைச்செறுத்துண்ணும்நீசக்கலியை*நினைப்பரிய
பெலத்தைச்செறுத்தும் பிறங்கியதில்லை*என்பெய்வினைதென்
புலத்தில்பொறித்தவப் புத்தகச்சும்மைபொறுக்கியபின்
நலத்தைப்பொறுத்தது*இராமாநுசன்றன்நயப்புகழே. 34

நயவேனொருதெய்வம் நானிலத்தே*சிலமானிடத்தைப்
புயலேயெனக் கவிபோற்றிசெய்யேன்*பொன்னரங்கமென்னில்
மயலேபெருகு மிராமாநுசன்மன்னுமாமலர்த்தாள்
அயரேன்*அருவினையென்னையெவ்வாறின்றடர்ப்பதுவே. 35

அடல்கொண்டநேமிய னாருயிர்நாதன்*அன்றாரணச்சொல்
கடல்கொண்டவொண்பொருள் கண்டளிப்ப*பின்னும்காசினியோ
ரிடரின்கண்வீழ்ந்திடத் தானுமவ்வொண்பொருள்கொண்டு*அவர்பின்
படரும்குணன்*எம்மிராமாநுசன்றன்படியிதுவே. 36

படிகொண்டகீர்த்தி யிராமாயணமென்னும்பத்திவெள்ளம்*
குடிகொண்டகோயிலிராமாநுசன்குணங்கூறும்*அன்பர்
கடிகொண்டமாமலர்த்தாள்கலந்துள்ளங்கனியும்நல்லோர்
அடிகண்டுகொண்டுகந்து*என்னையுமாளவர்க்காக்கினரே. 37

ஆக்கியடிமைநிலைப்பித்தனையென்னையின்று*அவமே
போக்கிப்புறத்திட்டதென்பொருளாமுன்பு*புண்ணியர்தம்
வாக்கிற்பிரியாவிராமாநுசநின் னருளின்வண்ணம்
நோக்கில்தெரிவரிதால்*உரையாயிந்தநுண்பொருளே. 38

பொருளும்புதல்வரும் பூமியும்*பூங்குழலாருமென்றே
மருள்கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சே*மற்றுளார்தரமே
இருள்கொண்டவெந்துயர்மாற்றித்தன்னீறில்பெரும்புகழே
தெருளும்தெருள்தந்து*இராமாநுசன்செய்யும்சேமங்களே. 39

சேமநல்வீடும் பொருளும்தருமமும்*சீரியநற்
காமமும் என்றிவைநான்கென்பர்*நான்கினும்கண்ணனுக்கே
ஆமதுகாம மறம்பொருள்வீடிதற்கென்றுரைத்தான்
வாமனன்சீலன்*இராமாநுசனிந்தமண்மிசையே. 40

மண்மிசையோனிகள்தோறும்பிறந்து*எங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா*உலகோர்களெல்லாம்
அண்ணலிராமாநுசன்வந்துதோன்றியவப்பொழுதே
நண்ணருஞானம்தலைக்கொண்டு*நாரணற்காயினரே. 41

ஆயிழையார்கொங்கைதங்கும்* அக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியை வந்தெடுத்தானின்று* மாமலராள்
நாயகனெல்லாவுயிர்கட்கும்நாத னரங்கனென்னும்
தூயவன்*தீதிலிராமாநுசன்தொல்லருள்சுரந்தே. 42

சுரக்கும்திருவுமுணர்வும்* சொலப்புகில்வாயமுதம்
பரக்கும் இருவினைபற்றறவோடும்* படியிலுள்ளீர்
உரைக்கின்றனனுமக்கியானறஞ்சீறுமுறுகலியைத்
துரக்கும்பெருமை*இராமாநுசனென்றுசொல்லுமினே. 43

சொல்லார்தமிழொருமூன்றும்* சுருதிகள்நான்குமெல்லை
யில்லாவறநெறி யாவும்தெரிந்தவன்* எண்ணருஞ்சீர்
நல்லார்பரவுமிராமாநுசன்திருநாமம்நம்பிக்
கல்லாரகலிடத்தோர்*எதுபேறென்றுகாமிப்பரே. 44

பேறொன்றுமற்றில்லைநின்சரணன்றி* அப்பேறளித்தற்
காறொன்றுமில்லை மற்றச்சரணன்றி* என்றிப்பொருளைத்
தேறுமவர்க்குமெனக்குமுனைத்தந்தசெம்மைசொல்லால்
கூறும்பரமன்று*இராமாநுசமெய்ம்மைகூறிடிலே. 45

கூறும்சமயங்களாறும்குலைய* குவலயத்தே
மாறன்பணித்தமறையுணர்ந்தோனை* மதியிலியேன்
தேறும்படியென்மனம்புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறும்குணனை*இராமாநுசனையிறைஞ்சினமே. 46

இறைஞ்சப்படும்பரன் ஈசனரங்கனென்று* இவ்வுலகத்
தறம்செப்புமண்ணலிராமாநுசன்* என்னருவினையின்
திறம்செற்றிரவும்பகலும்விடாதென்றன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான்*எனக்காருநிகரில்லையே. 47

நிகரின்றிநின்றவென்நீசதைக்கு* நின்னருளின்கண்ணன்றிப்
புகலொன்றுமில்லை அருட்குமஃதேபுகல்* புன்மையிலோர்
பகரும்பெருமையிராமாநுச இனிநாம்பழுதே
அகலும்பொருளென்*பயனிருவோமுக்குமானபின்னே. 48

ஆனதுசெம்மையறநெறி* பொய்ம்மையறுசமயம்
போனதுபொன்றி யிறந்ததுவெங்கலி* பூங்கமலத்
தேனதிபாய்வயல்தென்னரங்கன்கழல்சென்னிவைத்துத்
தானதில்மன்னும்*இராமாநுசனித்தலத்துதித்தே. 49

உதிப்பனவுத்தமர்சிந்தையுள்* ஒன்னலர்நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன* கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தவென்புன்கவிப்பாவினம்பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன்*இராமாநுசன்றன்னிணையடியே. 50

அடியைத்தொடர்ந்தெழுமைவர்கட்காய்* அன்றுபாரதப்போர்
முடியப் பரிநெடுந்தேர்விடுங்கோனை* முழுதுணர்ந்த
அடியர்க்கமுதமிராமாநுசனென்னையாளவந்து இப்
படியிற்பிறந்தது*மற்றில்லைகாரணம்பார்த்திடிலே. 51

பார்த்தானறுசமயங்கள்பதைப்ப* இப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டு புன்மையினேனிடைத்தான்புகுந்து*
தீர்த்தானிருவினைதீர்த்தரங்கன்செய்ய தாளிணையோ
டார்த்தான்*இவையெம்மிராமாநுசன்செய்யுமற்புதமே. 52

அற்புதன்செம்மையிராமாநுசன்* என்னையாளவந்த
கற்பகம் கற்றவர்காமுறுசீலன்* கருதரிய
பற்பல் லுயிர்களும்பல் லுலகியாவும்பரனதென்னும்
நற்பொருள்தன்னை*இந்நானிலத்தேவந்துநாட்டினனே. 53

நாட்டியநீசச்சமயங்கள்மாண்டன* நாரணனைக்
காட்டியவேதம்களிப்புற்றது* தென்குருகைவள்ளல்
வாட்டமிலாவண்டமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து*இராமாநுசன்றன்னியல்வுகண்டே. 54

கண்டவர்சிந்தைகவரும் கடிபொழில்தென்னரங்கன்*
தொண்டர்குலாவுமிராமாநுசனை* தொகையிறந்த
பண்டருவேதங்கள்பார்மேல்நிலவிடப்பார்த்தருளும்
கொண்டலைமேவித்தொழும்*குடியாமெங்கள்கோக்குலமே. 55

கோக்குலமன்னரைமூவெழுகால்* ஒருகூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும்புனிதன்* புவனமெங்கும்
ஆக்கியகீர்த்தியிராமாநுசனையடைந்தபின் என்
வாக்குரையாது*என்மனம்நினையாதினிமற்றொன்றையே. 56

மற்றொருபேறுமதியாது* அரங்கன்மலரடிக்கு ஆ
ளுற்றவரே தனக்குற்றவராய்க்கொள்ளுமுத்தமனை*
நற்றவர்போற்றுமிராமாநுசனை யிந்நானிலத்தே
பெற்றனன்*பெற்றபின்மற்றறியேனொருபேதைமையே. 57

பேதையர்வேதப்பொருளிதென்றுன்னி* பிரமநன்றென்
றோதி மற்றெல்லாவுயிருமஃதென்று* உயிர்கள்மெய்விட்டு
ஆதிப்பரனொடொன்றாமென்றுசொல்லுமவ்வல்லலெல்லாம்
வாதில்வென்றான்*எம்மிராமாநுசன்மெய்ம்மதிக்கடலே. 58

கடலளவாயதிசையெட்டினுள்ளும்* கலியிருளே
மிடைதருகாலத்திராமாநுசன்* மிக்கநான்மறையின்
சுடரொளியாலவ்விருளைத்துரந்திலனேல் உயிரை
உடையவன்*நாரணனென்றறிவாரில்லையுற்றுணர்ந்தே. 59

உணர்ந்தமெய்ஞ்ஞானியர்யோகந்தொறும்* திருவாய்மொழியின்
மணந்தருமின்னிசைமன்னுமிடந்தொறும்* மாமலராள்
புணர்ந்தபொன்மார்பன்பொருந்தும்பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல்*இராமாநுசனெங்குலக்கொழுந்தே. 60

கொழுந்துவிட்டோடிப்படரும்வெங்கோள்வினையால்*நிரயத்
தழுந்தியிட்டேனை வந்தாட்கொண்டபின்னும்* அருமுனிவர்
தொழுந்தவத்தோனெம்மிராமாநுசன் தொல்புகழ்சுடர்மிக்
கெழுந்தது*அத்தால்நல்லதிசயங்கண்டதிருநிலமே. 61

இருந்தேனிருவினைப்பாசம்கழற்றி* இன்றியானிறையும்
வருந்தேனினியெம்மிராமாநுசன்* மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப்புன்மையினோர்க்கொன்றும்நன்மைசெய்யாப்
பெருந்தேவரைப்பரவும்*பெரியோர்தம்கழல்பிடித்தே. 62

பிடியைத்தொடரும்களிறென்ன* யானுன்பிறங்கியசீர்
அடியைத்தொடரும்படிநல்கவேண்டும்* அறுசமயச்
செடியைத்தொடரும்மருள்செறிந்தோர்சிதைந்தோடவந்து இப்
படியைத்தொடரும்* இராமாநுசமிக்க பண்டிதனே. 63

பண்டருமாறன் பசுந்தமிழ்* ஆனந்தம்பாய்மதமாய்
விண்டிட எங்களிராமாநுசமுனிவேழம்* மெய்ம்மை
கொண்டநல்வேதக்கொழுந்தண்டமேந்திக் குவலயத்தே
மண்டிவந்தேன்றது*வாதியர்காளுங்கள் வாழ்வற்றதே. 64

வாழ்வற்றதுதொல்லைவாதியர்க்கு* என்றும்மறையவர்தம்
தாழ்வற்றது தவம்தாரணிபெற்றது* தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்தகுணத்தினர்க்கு அந்
நாழற்றது*நம்மிராமாநுசன் தந்த ஞானத்திலே. 65

ஞானம்கனிந்தநலங்கொண்டு* நாடொறும்நைபவர்க்கு
வானம்கொடுப்பதுமாதவன் * வல்வினையேன்மனத்தில்
ஈனம்கடிந்தவிராமாநுசன் தன்னையெய்தினர்க்கு அத்
தானம்கொடுப்பது*தன்தகவென்னும் சரண்கொடுத்தே. 66

சரணமடைந்ததருமனுக்கா* பண்டுநூற்றுவரை
மரணமடைவித்தமாயவன்* தன்னைவணங்கவைத்த
கரணமிவையுமக்கன்றென்றிராமாநுசன் உயிர்கட்
கரணங்கமைத்திலனேல்*அரணார்மற்றிவ் வாருயிர்க்கே. 67

ஆரெனக்கின்றுநிகர்சொல்லில்* மாயன்அன்றைவர்தெய்வத்
தேரினிற்செப்பிய கீதையின்செம்மை* பொருள்தெரியப்
பாரினிற்சொன்னவிராமாநுசனைப் பணியும்நல்லோர்
சீரினிற்சென்றுபணிந்தது*என்னாவியும் சிந்தையுமே. 68

சிந்தையினோடுகரணங்கள்யாவும்சிதைந்து* முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண்டு* அவையென்றனக்கன்றருளால்
தந்தவரங்கனும்தன்சரண்தந்திலன் தானதுதந்து*
எந்தையிராமாநுசன்வந்தெடுத்தனன் இன்றென்னையே. 69

என்னையும்பார்த்தென்னியல்வையும்பார்த்து*எண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கில் அருள்செய்வதேநலம்* அன்றியென்பால்
பின்னையும்பார்க்கில்நலமுளதே உன்பெருங்கருணை
தன்னையென்பார்ப்பர்*இராமாநுசாவுன்னைச் சார்ந்தவரே. 70

சார்ந்ததென்சிந்தையுன்தாளிணைக்கீழ்* அன்புதான்மிகவும்
கூர்ந்தது அத்தாமரைத்தாள்களுக்கு* உன்றன்குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினைநீசெய்வினையதனால்
பேர்ந்தது*வண்மையிராமாநுசா எம்பெருந்தகையே. 71

கைத்தனன்தீயசமயக்கலகரை* காசினிக்கே
உய்த்தனன்தூயமறைநெறிதன்னை* என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போடிருந்தேத்தும்நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை* இராமாநுசன்மிக்க வண்மைசெய்தே. 72

வண்மையினாலும்தன்மாதகவாலும்* மதிபுரையும்
தண்மையினாலுமித்தாரணியோர்கட்கு* தான்சரணாய்
உண்மைநன்ஞானமுரைத்தவிராமாநுசனையுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை*மற்றோர்நிலை தேர்ந்திடிலே. 73

தேரார்மறையின்திறமென்று* மாயவன்தீயவரைக்
கூராழிகொண்டுகுறைப்பது* கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம்மிராமாநுசனவ் வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது* அப்போதொரு சிந்தைசெய்தே. 74

செய்த்தலைச்சங்கம்செழுமுத்தமீனும்* திருவரங்கர்
கைத்தலத்தாழியும்சங்கமுமேந்தி* நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னைவிடேனென்றிருக்கிலும் நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து*இராமாநுசாவென்னை முற்றுநின்றே. 75

*நின்றவண்கீர்த்தியும்நீள்புனலும்* நிறைவேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்தநாடும்குலவியபாற்கடலும்*
உன்றனக்கெத்தனையின்பந்தரும் உன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது*இராமாநுசாவிவை யீந்தருளே. 76

ஈந்தனனீயாதவின்னருள்* எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனன் அம்மறைப்பல்பொருளால்* இப்படியனைத்தும்
ஏய்ந்தனன்கீர்த்தியினாலென்வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன்*வண்மையிராமாநுசற்கென் கருத்தினியே. 77

கருத்திற்புகுந்துள்ளில் கள்ளம்கழற்றி*கருதரிய
வருத்தத்தினால்மிகவஞ்சித்து*நீயிந்த மண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்கியபின் என்னெஞ்சில்
பொருத்தப்படாது*எம்மிராமாநுசாமற்றோர் பொய்ப்பொருளே. 78

பொய்யைச்சுரக்கும்பொருளைத்துரந்து* இந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்குமிராமாநுசன்நிற்க* வேறுநம்மை
உய்யக்கொள்ளவல்லதெய்வமிங்கியாதென்றுலர்ந்து அவமே
ஐயப்படாநிற்பர்*வையத்துள்ளோர்நல்லறிவிழந்தே. 79

நல்லார்பரவுமிராமாநுசன்* திருநாமம்நம்ப
வல்லார்திறத்தை மறவாதவர்கள்யவர்* அவர்க்கே
எல்லாவிடத்திலுமென்றுமெப்போதிலுமெத்தொழும்பும்
சொல்லால்மனத்தால்*கருமத்தினால்செய்வன் சோர்வின்றியே. 80

சோர்வின்றியுன்றன் துணையடிக்கீழ்* தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றவெனக்கு* அரங்கன்செய்யதாளிணைகள்
பேர்வின்றியின்றுபெறுத்துமிராமாநுசா இனியுன்
சீரொன்றியகருணைக்கு*இல்லைமாறு தெரிவுறிலே. 81

தெரிவுற்றஞானம்செறியப்பெறாது* வெந்தீவினையால்
உருவற்றஞானத்துழல்கின்றவென்னை* ஒருபொழுதில்
பொருவற்றகேள்வியனாக்கிநின்றானென்ன புண்ணியனோ
தெரிவுற்றகீர்த்தி*இராமாநுசனென்னும் சீர்முகிலே. 82

சீர்கொண்டுபேரறம்செய்து* நல்வீடுசெறிதுமென்னும்
பார்கொண்டமேன்மையர்கூட்டனல்லேன்* உன்பதயுகமாம்
ஏர்கொண்டவீட்டையெளிதினிலெய்துவன் உன்னுடைய
கார்கொண்டவண்மை*இராமாநுசா! இதுகண்டுகொள்ளே. 83

கண்டுகொண்டேனெம்மிராமாநுசன் றன்னை* காண்டலுமே
தொண்டுகொண்டேனவன்தொண்டர்பொற்றாளில்* என்தொல்லைவெந்நோய்
விண்டுகொண்டேனவன்சீர்வெள்ளவாரியை வாய்மடுத்தின்
றுண்டுகொண்டேன்*இன்னமுற்றனவோதிலுலப்பில்லையே. 84

ஓதியவேதத்தினுட்பொருளாய்* அதனுச்சிமிக்க
சோதியை நாதனெனவறியாதுழல்கின்றதொண்டர்*
பேதைமைதீர்த்தவிராமாநுசனைத் தொழும்பெரியோர்
பாதமல்லாலென்றன்னாருயிர்க்கு*யாதொன்றும் பற்றில்லையே. 85

பற்றாமனிசரைப்பற்றி* அப்பற்றுவிடாதவரே
உற்றாரெனவுழன்றோடினையேனினி* ஒள்ளியநூல்
கற்றார்பரவுமிராமாநுசனைக் கருதுமுள்ளம்
பெற்றார்யவர்*அவரெம்மைநின்றாளும் பெரியவரே. 86

பெரியவர்பேசிலும்பேதையர்பேசிலும்* தன்குணங்கட்
குரியசொல்லென்றுமுடையவனென்றென்று* உணர்வில்மிக்கோர்
தெரியும்வண்கீர்த்திஇராமாநுசன்மறைதேர்ந்துலகில்
புரியுநன்ஞானம்*பொருந்ாதவரைப் பொரும்கலியே. 87

கலிமிக்கசெந்நெல் கழனிக்குறையல்* கலைப்பெருமான்
ஒலிமிக்கபாடலையுண்டு தன்னுள்ளம்தடித்து* அதனால்
வலிமிக்கசீயமிராமாநுசன்மறைவாதியராம்
புலிமிக்கதென்று*இப்புவனத்தில்வந்தமை போற்றுவனே. 88

போற்றருஞ்சீலத்திராமாநுச* நின்புகழ்தெரிந்து
சாற்றுவனேல் அதுதாழ்வதுதீரில்* உன்சீர்தனக்கோர்
ஏற்றமென்றேகொண்டிருக்கிலும் என்மனமேத்தியன்றி
ஆற்றகில்லாது*இதற்கென்னினைவாயென்றிட் டஞ்சுவனே. 89

நினையார்பிறவியைநீக்கும்பிரானை* இந்நீணிலத்தில்
எனையாளவந்தவிராமாநுசனை* இருங்கவிகள்
புனையார்புனையும்பெரியவர்தாள்களில் பூந்தொடையல்
வனையார்*பிறப்பில்வருந்துவர்மாந்தர் மருள்சுரந்தே. 90

மருள்சுரந்து ஆகமவாதியர்கூறும்* அவப்பொருளாம்
இருள்சுரந்தெய்த்தவுலகிருள்நீங்க* தன்னீண்டியசீர்
அருள்சுரந்தெல்லாவுயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்
பொருள்சுரந்தான்*எம்மிராமாநுசன்மிக்கபுண்ணியனே. 91

புண்ணியநோன்புபுரிந்துமிலேன்* அடிபோற்றிசெய்யும்
நுண்ணருங்கேள்விநுவன்றுமிலேன்* செம்மைநூற்புலவர்க்
கெண்ணருங்கீர்த்திஇராமாநுசா இன்றுநீபுகுந்து என்
கண்ணுள்ளும்நெஞ்சுள்ளும்*நின்றவிக்காரணம் கட்டுரையே. 92

கட்டப்பொருளைமறைப்பொருளென்று* கயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும்பிரானல்லனே* என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடுதன்னருளென்னுமொள் வாளுருவி
வெட்டிக்களைந்த*இராமாநுசனென்னும் மெய்த்தவனே. 93

தவந்தரும்செல்வும்தகவும்தரும்* சலியாப்பிறவிப்
பவந்தரும்தீவினைபாற்றித்தரும்* பரந்தாமமென்னும்
திவந்தரும் தீதிலிராமாநுசன்தன்னைச் சார்ந்தவர்கட்கு
உவந்தருந்தேன்*அவன்சீரன்றியானொன்றுமுள்மகிழ்ந்தே. 94

உண்ணின்றுயிர்களுக்குற்றனவேசெய்து* அவர்க்குயவே
பண்ணும்பரனும்பரிவிலனும்படி* பல்லுயிர்க்கும்
விண்ணின் தலைநின்றுவீடளிப்பானெம்மிராமாநுசன்
மண்ணின் தலத்துதித்து*உய்மறைநாலும் வளர்த்தனனே. 95

வளரும்பிணிகொண்டவல்வினையால்* மிக்கநல்வினையில்
கிளரும்துணிவுகிடைத்தறியாது* முடைத்தலையூன்
தளருமளவும்தரித்தும்விழுந்தும் தனிதிரிவேற்கு
உளரெம்மிறைவர்*இராமாநுசன் றன்னை யுற்றவரே. 96

தன்னையுற்றாட்செய்யும்தன்மையினோர்* மன்னுதாமரைத்தாள்
தன்னையுற்றாட்செய்ய என்னையுற்றானின்று* தன்தகவால்
தன்னையுற்றாரன்றித்தன்மையுற்றாரில்லையென்றறிந்து
தன்னையுற்றாரை*இராமாநுசன்குணம் சாற்றிடுமே. 97

*இடுமேயினியசுவர்க்கத்தில்* இன்னம்நரகிலிட்டுச்
சுடுமே அவற்றைத்தொடர்தருதொல்லை* சுழல்பிறப்பில்
நடுமேயினிநம்மிராமாநுசன் நம்மைநம்வசத்தே
விடுமேசரணமென்றால்*மனமேநையல் மேவுதற்கே. 98

தற்கச்சமணரும்சாக்கியப்பேய்களும்* தாழ்சடையோன்
சொற்கற்றசோம்பரும் சூனியவாதரும்* நான்மறையும்
நிற்கக்குறும்புசெய்நீசரும்மாண்டனர் நீணிலத்தே
பொற்கற்பகம்*எம்மிராமாநுசமுனி போந்தபின்னே. 99

போந்ததென்னெஞ்சென்னும்பொன்வண்டு* உனதடிப்போதிலொண்சீ
ராம்தெளிதேனுண்டமர்ந்திடவேண்டி* நின்பாலதுவே
ஈந்திடவேண்டுமிராமாநுசா! இதுவன்றியொன்றும்
மாந்தகில்லாது*இனிமற்றொன்றுகாட்டி மயக்கிடலே. 100

மயக்குமிருவினைவல்லியிற்பூண்டு* மதிமயங்கித்
துயக்கும்பிறவியில்தோன்றியவென்னை* துயரகற்றி
உயக்கொண்டுநல்குமிராமாநுசா! என்றதுன்னையுன்னி
நயக்குமவர்க்கிதிழுக்கென்பர்*நல்லவரென்றும்நைந்தே. 101

நையும்மனமுன்குணங்களையுன்னி* என்நாவிருந்தெம்
ஐயனிராமாநுசனென்றழைக்கும்* அருவினையேன்
கையும்தொழும்கண்கருதிடுங்காணக் கடல்புடைசூழ்
வையமிதனில்*உன்வண்மையென்பாலென் வளர்ந்ததுவே. 102

வளர்ந்தவெங்கோபமடங்கலொன்றாய்* அன்றுவாளவுணன்
கிளர்ந்தபொன்னாகம்கிழித்தவன்* கீர்த்திப்பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தையிராமாநுசனென்றன்மெய்வினைநோய்
களைந்து நன்ஞானமளித்தனன்*கையிற்கனியென்னவே. 103

கையிற்கனியென்னக்கண்ணனைக்காட்டித்தரிலும்* உன்றன்
மெய்யிற்பிறங்கியசீரன்றிவேண்டிலன்யான்* நிரயத்
தொய்யில்கிடக்கிலும்சோதிவிண்சேரிலும் இவ்வருள்நீ
செய்யில்தரிப்பன்*இராமாநுசா! என் செழுங்கொண்டலே. 104

*செழுந்திரைப்பாற்கடல்கண்டுயில்மாயன்* திருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சில்மேவுநன்ஞானி* நல்வேதியர்கள்
தொழுந்திருப்பாதனிராமாநுசனைத் தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடுமிடம்*அடியேனுக் கிருப்பிடமே. 105

*இருப்பிடம்வைகுந்தம்வேங்கடம்* மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர்நல்லோர்* அவைதன்னொடும்வந்
திருப்பிடம்மாயனிராமாநுசன் மனத்து இன்றவன்வந்
திருப்பிடம்*என்றனிதயத்துள்ளே தனக் கின்புறவே. 106

*இன்புற்றசீலத்திராமாநுச* என்றுமெவ்விடத்தும்
என்புற்றநோய் உடல்தோறும்பிறந்திறந்து* எண்ணரிய
துன்புற்றுவீயினும்சொல்லுவதொன்றுண்டுன் தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி*என்னையாக்கியங் காட்படுத்தே. 107

*அங்கயல்பாய்வயல்தென்னரங்கன்* அணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப்போற்றுதும்*பத்தியெல்லாம்
தங்கியதென்னத்தழைத்துநெஞ்சேநந்தலைமிசையே
பொங்கியகீர்த்தி*இராமாநுசனடிப் பூமன்னவே. 108

அடிவரவு :—பூமன் கள்ளார் பேரியல் என்னை யெனக் கியலும் மொழி வருத்தும் இறை மன்னிய சீர் ; சீரிடம் செய்யும் கதி சோராத தாழ் முனி யெய்தற் குறு ஆரப்பொழில் நிதி ; நிதி கார்த்தி வைப்பா மொய்த்த காரேய் திக்குக் கொள்ள நெஞ்சில் கூட்டு மின்ட மாண்டு ; ஆண்டு பொரு மடையார் நில நயவேன் அடல் படி யாக்கிப் பொருளும் சேம மண் ; மண்ணுயி சுரச் சொல்லார் பேறு கூறு மிறை நிக ரான துதிப்படி ; அடி பார்த் தற்புத நாட்டி கண் கோக்குலம் மற்றொரு பேதையர் கடலுணர் கொழுந்து ; கொழு விரும் பிடியைப் பண்டரு வாழ் ஞானம் சரண மாரெனச் சிந்தை யென்னையும் சார் ; சார் கைத்த வண்மை தேர் செய்த்தலை நின்ற ஈந்தனன் கருத்தில் பொய்யை நல் சோர்வி ; சோர் தெரிவுற்ற சீர் கண்டோதி பற்று பெரியவர் கலிமிக்க போற்றரும் நினையார் ; நினையார் மருள் புண்ணி கட்டத் தவ முண்ணின் வளரும் தன்னையுற் றிடுந் தற் போந்த ; போந்ததென் மயக்கும் நையும் வளர்ந்த கையிற் செழுந்திரை யிருப் பின் பங்க பூ.

தசகம் :—பூச்சீர் நிதி ஆண்டு மண் அடி கொழுந்து சார்ந்தது சோர்வு மருள் மயக்கு.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# உபதேசரத்தினமாலை

## — தனியன் —

முன்னந்திருவாய்மொழிப்பிள்ளை தாமுபதேசித்தநேர்
தன்னின்படியைத் தணவாதசொல் மணவாளமுனி
தன்னன்புடன்செய் உபதேசரத்தினமாலைதன்னைத்
தன்னெஞ்சுதன்னில் தரிப்பவர்தாள்கள்சரண் நமக்கே.

---

எந்தைதிருவாய்மொழிப்பிள்ளையின்னருளால்*
வந்தவுபதேசமார்க்கத்தைச்—சிந்தைசெய்து*
பின்னவருங்கற்க உபதேசமாய்ப்பேசுகின்றேன்*
மன்னியசீர்வெண்பாவில்வைத்து. 1

கற்றோர்கள்தாமுகப்பர் கல்விதன்னிலாசையுள்ளோர்*
பெற்றோமெனவுகந்துபின்புகற்பர்*—மற்றோர்கள்
மாச்சரியத்தால் இகழில்வந்ததென்னெஞ்சே!* இகழ்கை
ஆச்சரியமோதானவர்க்கு. 2

*ஆழ்வார்கள்வாழி அருளிச்செயல்வாழி*
தாழ்வாதுமில்குரவர்தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய அவர்களுரைத்தவைகள்தாம்வாழி*
செய்யமறைதன்னுடனே சேர்ந்து. 3

பொய்கையார்பூதத்தார்பேயார்*புகழ்மழிசை
ஐயன் அருள்மாறன்சேரலர்கோன்*—துய்யபட்ட
நாதனன்பர்தாள்தூளி நற்பாணன்நன்கலியன்*
ஈதிவர்தோற்றத்தடைவாமிங்கு. 4

அந்தமிழால்நற்கலைகள் ஆய்ந்துரைத்தவாழ்வார்கள்*
இந்தவுலகிலிருள்நீங்க*—வந்துதித்த
மாதங்கள்நாள்கள்தமை மண்ணுலகோர்தாமறிய*
ஈதென்றுசொல்லுவோம்யாம். 5

*ஐப்பசியிலோணம் அவிட்டம்சதயமிவை*
ஒப்பிலவாநாள்களுலகத்தீர்!*—எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார்பூதத்தார்பேயாழ்வார்*
தேசுடனேதோன்றுசிறப்பால். 6

மற்றுள்ளவாழ்வார்களுக்கு முன்னேவந்துதித்து*
நற்றமிழால்நூல்செய்துநாட்டையுய்த்த*—பெற்றிமையோ
ரென்று, முதலாழ்வார்களென்னும்பெயரிவர்க்கு*
நின்றதுலகத்தேநிகழ்ந்து. 7

பேதைநெஞ்சே! இன்றைப்பெருமையறிந்திலையோ !*
ஏதுபெருமையின்றைக்கென்றென்னில்*—ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ்மங்கையர்கோன் மாநிலத்தில்வந்துதித்த*
கார்த்திகையில்கார்த்திகைநாள்காண். 8

*மாறன்பணித்த தமிழ்மறைக்குமங்கையர்கோன்*
ஆறங்கம்கூறவவதரித்த*—வீறுடைய
கார்த்திகையில்கார்த்திகைநாள் இன்றென்றுகாதலிப்பார்*
வாய்த்தமலர்த்தாள்கள்நெஞ்சே! வாழ்த்து. 9

கார்த்திகையுரோகிணிநாள் காண்மினின்றுகாசினியீர் !*
வாய்த்தபுகழ்ப்பாணர்வந்துதிப்பால்*—ஆத்தியர்கள்
அன்புடனேதான் அமலனாதிபிரான்கற்றதற்பின்*
நன்குடனேகொண்டாடும்நாள். 10

மன்னியசீர்மார்கழியில் கேட்டையின்றுமாநிலத்தீர் !*
என்னிதனுக்கேற்றமெனிலுரைக்கேன்*—துன்னுபுகழ்
மாமறையோன் தொண்டரடிப்பொடியாழ்வார்பிறப்பால்*
நான்மறையோர்கொண்டாடும்நாள். 11

தையில்மகமின்று தாரணியீர்! ஏற்றம்* இந்தத்
தையில்மகத்துக்குச்சாற்றுகின்றேன்*—துய்யமதி
பெற்ற மழிசைப்பிரான்பிறந்தநாளென்று*
நற்றவர்கள்கொண்டாடும்நாள். 12

மாசிப்புனர்பூசம் காண்மினின்றுமண்ணுலகீர்*
தேசித்திவசத்துக்கேதென்னில்—*பேசுகின்றேன்
கொல்லிநகர்க்கோன் குலசேகரன்பிறப்பால்*
நல்லவர்கள்கொண்டாடும்நாள். 13

ஏரார்வைகாசி விசாகத்தினேற்றத்தை*
பாரோரறியப்பகர்கின்றேன்*—சீராரும்
வேதம்தமிழ்செய்த மெய்யனெழில்குருகை*
நாதனவதரித்தநாள். 14

*உண்டோவைகாசி விசாகத்துக்கொப்பொருநாள் ?*
உண்டோசடகோபர்க்கொப்பொருவர் ?*—உண்டோ
திருவாய்மொழிக்கொப்பு ? தென்குருகைக்குண்டோ*
ஒருபார்தனிலொக்குமூர். 15

இன்றைப்பெருமையறிந்திலையோ ஏழைநெஞ்சே !*
இன்றைக்கென்னேற்றமெனிலுரைக்கேன்*—நன்றிபுனை
பல்லாண்டுபாடிய நம்பட்டர்பிரான்வந்துதித்த*
நல்லானியில்சோதிநாள். 16

மாநிலத்தில்முன் நம்பெரியாழ்வார்வந்துதித்த*
ஆனிதன்னில்சோதியென்றால்தரிக்கும்*—ஞானியர்க்கு
ஒப்போரிலையிவ்வுலகுதனிலென்றுநெஞ்சே !*
எப்போதும்சிந்தித்திரு. 17

மங்களாசாசனத்தில் மற்றுள்ளவாழ்வார்கள்*
தங்களார்வத்தளவுதானன்றி*—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப்பட்டர்பிரான்பெற்றான்*
பெரியாழ்வாரென்னும்பெயர். 18

கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம்*
ஆதிதிருப்பல்லாண்டானதுவும்*—வேதத்துக்
கோமென்னுமதுபோல் உள்ளதுக்கெல்லாம்சுருக்காய்*
தான்மங்கலமாதலால். 19

*உண்டோதிருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர்கலைதான்*
உண்டோபெரியாழ்வார்க்கொப்பொருவர்—*தண்டமிழ்நூல்
செய்தருளுமாழ்வார்கள்தம்மில் அவர்செய்கலையில்*
பைதல்நெஞ்சேநீயுணர்ந்துபார். 20

ஆழ்வார்திருமகளாராண்டாள்*மதுரகவி
யாழ்வார் எதிராசராமிவர்கள்—*வாழ்வாக
வந்துதித்தமாதங்கள் நாள்கள்தம்மின்வாசியையும்*
இந்தவுலகோர்க்குரைப்போம்யாம். 21

*இன்றோதிருவாடிப்பூரம்*எமக்காக
வன்றோ இங்காண்டாளவதரித்தாள்—*குன்றாத
வாழ்வான வைகுந்தவான்போகந்தன்னையிகழ்ந்து*
ஆழ்வார்திருமகளாராய். 22

பெரியாழ்வார்பெண்பி(ள்)ளையாய் ஆண்டாள்பிறந்த*
திருவாடிப்பூரத்தின்சீர்மை—*ஒருநாளைக்
குண்டோ மனமேயுணர்ந்துபார்*ஆண்டாளுக்
குண்டாகிலொப்பிதற்குமுண்டு. 23

அஞ்சுகுடிக்கொருசந்ததியாய்* ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும்தன்மையளாய் —*பிஞ்சாய்ப்
பழுத்தாளையாண்டாளைப் பத்தியுடன்நாளும்*
வழுத்தாய்மனமேமகிழ்ந்து. 24

ஏரார்மதுரகவி யிவ்வுலகில்வந்துதித்த*
சீராரும்சித்திரையில்சித்திரைநாள்—*பாருலகில்
மற்றுள்ளவாழ்வார்கள் வந்துதித்தநாள்களினும்*
உற்றதெமக்கென்றுநெஞ்சேயோர். 25

வாய்த்ததிருமந்திரத்தின் மத்திமமாம்பதம்போல்*
சீர்த்தமதுரகவிசெய்கலையை—*ஆர்த்தபுகழ்
ஆரியர்கள்தாங்கள் அருளிச்செயல்நடுவே*
சேர்வித்தார்தாற்பரியம்தேர்ந்து. 26

இன்றுலகீர்சித்திரையில் ஏய்ந்ததிருவாதிரைநாள்*
என்றையினுமின்றிதனுக்கேற்றமென்தான் —*என்றவர்க்குச்
சாற்றுகின்றேன்கேண்மின் எதிராசர்தம்பிறப்பால்*
நாற்றிசையும்கொண்டாடும்நாள். 27

*ஆழ்வார்கள்தாங்கள் அவதரித்தநாட்களினும்*
வாழ்வானநாள்நமக்குமண்ணுலகீர்—*ஏழ்பாரு
முய்ய எதிராசருதித்தருளும்*சித்திரையில்
செய்யதிருவாதிரை. 28

எந்தையெதிராசர் இவ்வுலகிலெந்தமக்கா*
வந்துதித்த நாளென்னும் வாசியினால்—*இந்தத்
திருவாதிரைதன்னின் சீர்மைதனைநெஞ்சே*
ஒருவாமலெப்பொழுதுமோர். 29

எண்ணரும்சீர்ப்பொய்கைமுன்னோர் இவ்வுலகில்தோன்றியவூர்*
வண்மைமிகுகச்சிமல்லைமாமயிலை—*மண்ணிமினீர்
தேங்கும்குறையலூர் சீர்க்கலியன்தோன்றியவூர்*
ஓங்குமுறையூர்பாணனூர். 30

தொண்டரடிப்பொடியார் தோன்றியவூர்*தொல்புகழ்சேர்
மண்டங்குடியென்பர்மண்ணுலகில்—*எண்டிசையும்
ஏத்தும் குலசேகரனூரெனவுரைப்பர்*
வாய்த்ததிருவஞ்சிக்களம். 31

மன்னுதிருமழிசை மாடத்திருக்குருகூர்*
மின்னுபுகழ்வில்லிபுத்தூர்மேதினியில்—*நன்னெறியோர்
ஏய்ந்தபத்திசாரர் எழில்மாறன்பட்டர்பிரான்*
வாய்ந்துதித்தவூர்கள்வகை. 32

சீராரும்வில்லிபுத்தூர் செல்வத்திருக்கோளூர்*
ஏரார்பெரும்பூதூரென்னுமிவை—*பாரில்
மதியாருமாண்டாள் மதுரகவியாழ்வார்*
எதிராசர்தோன்றியவூரிங்கு. 33

ஆழ்வார்களேற்றம் அருளிச்செயலேற்றம்*
தாழ்வாதுமின்றியவைதாம்வளர்த்தோர்—*ஏழ்பாரு
முய்ய அவர்செய்தவியாக்கியைகளுள்ளதெல்லாம்*
வையமறியப்பகர்வோம்வாய்ந்து. 34

ஆழ்வார்களையும் அருளிச்செயல்களையும்*
தாழ்வாநினைப்பவர்கள்தாம்*—நரகில்வீழ்வார்க
ளென்றுநினைத்துநெஞ்சே யெப்பொழுதும்நீயவர்பால்*
சென்றணுகக்கூசித்திரி. 35

தெருளுற்றவாழ்வார்கள் சீர்மையறிவாரார்*
அருளிச்செயலையறிவாரார்—*அருள்பெற்ற
நாதமுனிமுதலாம் நந்தேசிகரையல்லால்*
பேதைமனமேயுண்டோ பேசு. 36

ஓராண்வழியாய் உபதேசித்தார்முன்னோர்*
ஏராரெதிராசரின்னருளால்—*பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்கூறுமென்று*
பேசிவரம்பறுத்தார்பின். 37

எம்பெருமானார் தரிசனமென்றேயிதற்கு*
நம்பெருமாள்பேரிட்டுநாட்டிவைத்தார்—*அம்புவியோர்
இந்தத்தரிசனத்தை யெம்பெருமானார்வளர்த்த*
அந்தச்செயலறிகைக்கா. 38

பிள்ளான்நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை*
தெள்ளார்வடக்குத்திருவீதிப் —பிள்ளை*
மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த*
குணவாளரென்று நெஞ்சேகூறு. 39

முந்துறவேபிள்ளான் முதலானோர்செய்தருளும்*
அந்தவியாக்கியைகளன்றாகில்—*அந்தோ
திருவாய்மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்கவல்ல
குருவார்*இக்காலம்நெஞ்சேகூறு, 40

தெள்ளாரும்ஞானத் திருக்குருகைப்பிரான்
பிள்ளான்*எதிராசர்பேரருளால்—*உள்ளாரும்
அன்புடனே மாறன்மறைப்பொருளையன்றுரைத்தது*
இன்பமிகுமாறாயிரம். 41

தஞ்சீரைஞானியர்கள் தாம்புகழும்வேதாந்தி*
நஞ்சீயர்தாம்பட்டர்நல்லருளால்*—எஞ்சாத
ஆர்வமுடன் மாறன்மறைப்பொருளையாய்ந்துரைத்தது*
ஏரொன்பதினாயிரம். 42

நம்பிள்ளைதம்முடைய நல்லருளாலேவியிட*
பின்பெரியவாச்சான்பிள்ளையதனால்—*இன்பா
வருபத்தி மாறன்மறைப்பொருளைச்சொன்னது*
இருபத்துநாலாயிரம். 43

*தெள்ளியதாநம்பிள்ளை செப்புநெறிதன்னை*
வள்ளல்வடக்குத்திருவீதிப்—பிள்ளை*இந்த
நாடறிய மாறன்மறைப்பொருளைநன்குரைத்தது*
ஈடுமுப்பத்தாறாயிரம். 44

அன்போடு அழகியமணவாளச்சீயர்*
பின்போரும்கற்றறிந்துபேசுகைக்கா—*தம்பெரிய
போதமுடன் மாறன்மறையின்பொருளுரைத்தது*
ஏதமில்பன்னீராயிரம். 45

பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும்
தெரிய*வியாக்கியைகள்செய்வால்—*அரிய
அருளிச்செயற்பொருளை ஆரியர்கட்கிப்போது*
அருளிச்செயலாய்த்தறிந்து. 46

நஞ்சீயர்செய்தவியாக்கியைகள் நாலிரண்டுக்கு*
எஞ்சாமையாவைக்குமில்லையே—*தம்சீரால்
வையகுருவின்தம்பி மன்னுமணவாளமுனி*
செய்யுமவைதாமும்சில. 47

சீரார் வடக்குத்திருவீதிப்பிள்ளை*எழு
தேரார்தமிழ்வேதத்தீடுதனை—*தாருமென
வாங்கிமுன்நம்பிள்ளை யீயுண்ணிமாதவர்க்குத்
தாம்கொடுத்தார்*பின்னதனைத்தான். 48

ஆங்கவர்பால்பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை*
தாம்கொடுத்தார்தம்மகனார்தம்கையில்—*பாங்குடனே
நாலூர்பிள்ளைக்கவர்தாம் நல்லமகனார்க்கவர்தாம்*
மேலோர்க்கீந்தாரவரே மிக்கு. 49

*நம்பெருமாள்நம்மாழ்வார் நஞ்சீயர்நம்பிள்ளை
யென்பர்*அவரவர்தமேற்றத்தால்—*அன்புடையோர்
சாத்துதிருநாமங்கள்தான் என்றுநன்னெஞ்சே*
ஏத்ததனைச்சொல்லிநீயின்று. 50

துன்னுபுகழ்க்கந்தாடைத் தோழப்பர்தம்முகப்பால்*
என்னவுலகாரியனோவென்றுரைக்க—*பின்னை
உலகாரியனெனும்பேர் நம்பிள்ளைக்கோங்கி*
விலகாமல்நின்றதென்றும்மேல். 51

பின்னை வடக்குத்திருவீதிப்பிள்ளை* அன்பால்
அன்னதிருநாமத்தையாதரித்து —*மன்னுபுகழ்
மைந்தருக்குச்சாத்துகையால் வந்துபரந்தது*எங்கும்
இந்தத்திருநாமமிங்கு 52

*அன்னபுகழ்முடும்பை அண்ணலுலகாசிரியன்*
இன்னருளால்செய்தகலையாவையிலும்—*உன்னில்
திகழ்வசனபூடணத்தின்சீர்மை ஒன்றுக்கில்லை*
புகழலவிவ்வார்த்தைமெய்யிப்போது. 53

முன்னம்குரவோர் மொழிந்தவசனங்கள்
தன்னை*மிகக்கொண்டுகற்றோர்தம்முயிர்க்கு — *மின்னணியாச்
சேரச்சமைத்தவரே சீர்வசனபூடணமென்
பேர்*இக்கலைக்கிட்டார்பின். 54

ஆர்வசனபூடணத்தின் ஆழ்பொருளெல்லாமறிவார்*
ஆரதுசொன்னேரிலனுட்டிப்பார் —*ஓரொருவ
ருண்டாகில் அத்தனைகாணுள்ளமே*எல்லார்க்கும்
அண்டாததன்றோவது. 55

உய்யநினைவுடையீர் உங்களுக்குச்சொல்லுகின்றேன்*
வையகுருமுன்னம்வாய்மொழிந்த—*செய்யகலை
யாம் வசனபூடணத்தினாழ்பொருளை*கற்றதனுக்
காம்நிலையில் நில்லுமறிந்து. 56

தேசிகர்பால்கேட்ட செழும்பொருளை*சிந்தைதன்னில்
மாசறவேயூன்றமனனஞ்செய்து—*ஆசரிக்க
வல்லார்கள்தாம் வசனபூடணத்தின்வான்பொருளை*
கல்லாததென்னோ கவர்ந்து. 57

சச்சம்பிரதாயம் தாமுடையோர்கேட்டக்கால்*
மெச்சும்வியாக்கியைகளுண்டாகில் —*நச்சி
அதிகரியும்நீர் வசனபூடணத்துக்கற்ற
மதியுடையீர்*மத்தியத்தராய். 58

சீர்வசனபூடணத்தின் செம்பொருளை*சிந்தைதன்னால்
தேறிலுமாம் வாய்கொண்டுசெப்பிலுமாம்—*ஆரியர்காள்
என்றனக்கு நாளுமினிதாகநின்றதையோ*
உந்தமக்கெவ்வின்பமுளதாம். 59

தன்குருவின்தாளிணைகள்தன்னில் அன்பொன்றில்லாதார்*
அன்புதன்பால்செய்தாலுமம்புயைகோன் —*இன்பமிகு
விண்ணாடு தானளிக்கவேண்டியிரான்*ஆதலால்
நண்ணாரவர்கள்திருநாடு. 60

*ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடைய
னான*குருவையடைந்தக்கால்—*மாநிலத்தீர்
தேனார்கமலத் திருமாமகள்கொழுநன்*
தானேவைகுந்தம்தரும். 61

உய்யநினைவுண்டாகில் உங்குருக்கள்தம்பதத்தே
வையும்*அன்புதன்னையிந்தமாநிலத்தீர்—*மெய்யுரைக்கேன்
பையரவில்மாயன் பரமபதமுங்களுக்காம்*
கையிலங்குநெல்லிக்கனி. 62

ஆசாரியன்செய்த உபகாரமானவது*
தூய்தாகநெஞ்சுதன்னில்தோன்றுமேல்—*தேசாந்
தரத்திலிருக்க மனந்தான்பொருந்தமாட்டாது*
இருத்தலினியேதறியோம்யாம். 63

தன்னாரியனுக்குத் தானடிமைசெய்வது*அவன்
இந்நாடுதன்னிலிருக்கும்நாள்—*அந்நே
ரறிந்துமதிலாசையின்றி ஆசாரியனைப்
பிரிந்திருப்பாரார்*மனமேபேசு. 64

ஆசாரியன் சிச்சனுருயிரைப்பேணுமவன்*
தேசாரும்சிச்சனவன்சீர்வடிவை*— ஆசையுடன்
நோக்குமவனென்னும் நுண்ணறிவைக்கேட்டுவைத்தும்*
ஆர்க்குமந்நேர்நிற்கையரிதாம். 65

பின்பழகராம் பெருமாள்சீயர்*பெருந்திவத்தில்
அன்பதுவுமற்று மிக்கவாசையினால்—*நம்பிள்ளைக்
கானவடிமைகள்செய் அந்நிலையைநன்னெஞ்சே*
ஊனமறவெப்பொழுதுமோர். 66

ஆசாரியர்கள் அனைவருமுன்னுசரித்த*
ஆசாரந்தன்னை யறியாதார்—*பேசுகின்ற
வார்த்தைகளைக்கேட்டு மருளாதே*பூருவர்கள்
சீர்த்தநிலைதன்னை நெஞ்சேசேர். 67

நாத்திகரும்நற்கலையின் நன்னெறிசேராத்திகரும்*
ஆத்திகநாத்திகருமாமிவரை—*ஓர்த்துநெஞ்சே
முன்னவரும்பின்னவரும் மூர்க்கரெனவிட்டு*நடுச்
சொன்னவரைநாளும்தொடர். 68

நல்லமணமுள்ளதொன்றை நண்ணியிருப்பதற்கு*
நல்லமணமுண்டாம்நலமதுபோல்—*நல்ல
குணமுடையோர்தங்களுடன் கூடியிருப்பார்க்கு*
குணமதுவேயாம் சேர்த்திகொண்டு. 69

தீயகந்தமுள்ளதொன்றைச் சேர்ந்திருப்பதொன்றுக்கு*
தீயகந்தமேறும்திறமதுபோல்—*தீய
குணமுடையோர்தங்களுடன் கூடியிருப்பார்க்கு*
குணமதுவேயாம் செறிவுகொண்டு. 70

முன்னோர்மொழிந்த முறைதப்பாமல்கேட்டு*
பின்னோர்ந்துதாமதனைப் பேசாதே—*தம்நெஞ்சில்
தோற்றினதேசொல்லி யிதுசுத்தவுபதேசவர
வாற்றதென்பர்*மூர்க்கராவார். 71

*பூருவாசாரியர்கள் போதமனுட்டானங்கள்*
கூறுவார் வார்த்தைகளைக்கொண்டுநீர்—தேறி*
இருள்தருமாஞாலத்தே யின்பமுற்றுவாழும்*
தெருள்தருமா தேசிகனைச்சேர்ந்து. 72

*இந்தவுபதேசரத்தினமாலைதன்னை*
சிந்தைதனில்நாளும் சிந்திப்பார்—*எந்தை
எதிராசர் இன்னருளுக்கென்றுமிலக்காகி*
சதிராக வாழ்ந்திடுவர்தாம். 73

மன்னுயிர்காளிங்கே மணவாளமாமுனிவன்*
பொன்னடியாஞ் செங்கமலப்போதுகளை—*உன்னிச்
சிரத்தாலேதீண்டில் அமானவனும்நம்மை*
கரத்தாலேதீண்டல் கடன். 74

அடிவரவு :—எந்தை, கற்றோர், ஆழ்வார், பொய்கை, அந்தமிழ், ஐப்பசி, மற்றுள்ள, பேதை, மாறன், கார்த்திகை, மன்னிய தை, மாசி, ஏரார், உண்டோ, இன்றை, மாநில. மங்கள, கோதில, உண்டோ, ஆழ்வார், இன்றோ, பெரியாழ்வார், அஞ்சுகுடி, ஏரார், வாய்த்த், இன்றுலகீர், ஆழ்வார்கள், எந்தை, எண்ணரும், தொண்டர், மன்னுதிரு, சீராரும், ஆழ்வார்களேற்றம், ஆழ்வார்களையும், தெருளுற்ற, ஓராண், எம்பெரு, பிள்ளான், முந்துறவே, தெள்ளாரும், தஞ்சீர், நம்பிள்ளை, தெள்ளியதா, அன்போடு, பெரியவாச்சான், நஞ்சீயர், சீரார், ஆங்கவர், நம்பெருமாள், துன்னுபுகழ், பின்னை, அன்ன, முன்னம், ஆர்வசனம், உய்யநினைவு, தேசிகர், சச்சம், சீர்வசனம், தன்குரு, ஞானம், உய்ய, ஆசாரியன், தன்னாரியன், ஆசாரியன், பின்பழக, ஆசாரியர்கள், நாத்திகரும், நல்லமணம், தீயகந்தம், முன்னோர், பூருவா, இந்தவுப, மன்னுயிருயர்.

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஜீயர் திருவடிகளே சரணம்.

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி

## — தனியன்கள் —

அல்லும்பகலு மனுபவிப்பார்தங்களுக்குச்
சொல்லும் பொருளுந்தொகுத்துரைத்தான்—நல்ல
மணவாளமாமுனிவன் மாறன்மறைக்குத்
தணவா நூற்றந்தாதிதான்.

மன்னு புகழ்சேர்மணவாளமாமுனிவன்
தன்னருளா லுட்பொருள்கள்தன்னுடனே—சொன்ன
திருவாய்மொழிநூற்றந்தாதியாந்தேனை
ஒருவாதருந்துநெஞ்சேயுற்று.

---

*உயர்வேபரன்படியை உள்ளதெல்லாந்தான்கண்டு*
உயர்வேதநேர்கொண்டுரைத்து*—மயர்வேதும்
வாராமல் மானிடரைவாழ்விக்குமாறன்சொல்*
வேராகவே விளையும்வீடு. 1

*வீடுசெய்துமற்றெவையும் மிக்கபுகழ்நாரணன்தாள்*
நாடுநலத்தாலடையநன்குரைக்கும்*—நீடுபுகழ்
வண்குருகூர்மாறன் இந்தமாநிலத்தோர்தாம்வாழ*
பண்புடனே பாடியருள்பத்து. 2

பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும்பிறப்பால்*
முத்திதரும்மாநிலத்தீர்மூண்டவன்பால்*—பத்திசெயு
மென்றுரைத்த மாறன் தனின்சொல்லாற்போம்*நெடுகச்
சென்றபிறப்பாமஞ்சிறை. 3

அஞ்சிறையபுட்கள்தமை ஆழியானுக்கு*நீர்
என்செயலைச்சொல்லு மெனவிரந்து*—விஞ்ச
நலங்கியதும்மாறனிங்கே நாயகனைத்தேடி*
மலங்கியதும் பத்தி வளம். 4

வளமிக்கமால்பெருமை மன்னுயிரின் தன்மை*
உளமுற்றங்கூடுருவவோர்ந்து*—தளர்வுற்று
நீங்கநினைமாறனைமால் நீடிலகுசீலத்தால்*
பாங்குடனேசேர்த்தான் பரிந்து. 5

பரிவதில்ஈசன்படியைப் பண்புடனேபேசி*
அரியனலனாராதனைக்கென்று*—உரிமையுடன்
ஓதியருள்மாறன் ஒழிவித்தானிவ்வுலகில்*
பேதையர்கள் தங்கள்பிறப்பு. 6

பிறவியற்றுநீள்விசும்பில் பேரின்பமுய்க்கும்*
திறமளிக்குஞ்சீலத் திருமால்*—அறவினியன்
பற்றுமவர்க்கென்று பகர்மாறன்பாதமே*
உற்றதுணையென்றுளமேயோடு. 7

ஓடுமனஞ்செய்கையுரை ஒன்றிநில்லாதாருடனே*
கூடிநெடுமாலடிமைகொள்ளுநிலை*—நாடறிய
ஓர்ந்தவன்றன்செம்மை உரைசெய்தமாறனென*
ஏய்ந்துநிற்கும் வாழ்வாமிவை. 8

இவையறிந்தோர்தம்மளவில் ஈசனுவந்தாற்ற*
அவயவங்கள்தோறுமணையுஞ்—சுவையதனைப்
பெற்று*ஆர்வத்தால்மாறன் பேசினசொல்பேச*மால்
பொற்றாள் நஞ்சென்னிபொரும். 9

பொருமாழிசங்குடையோன் பூதலத்தேவந்து*
தருமாறேரேதுவறத் தன்னை*—திரமாகப்
பார்த்துரைசெய்மாறன் பதம்பணிகவென்சென்னி*
வாழ்த்திடுகவென்னுடையவாய். 10

வாயுந்திருமால் மறையநிற்க*ஆற்றாமை
போய்விஞ்சி மிக்கபுலம்புதலாய்*—ஆய
அறியாதவற்றோடு அணைந்தழுதமாறன்*
செறிவாரைநோக்குந் தணிந்து. 11

திண்ணிதாமாறன் திருமால்பரத்துவத்தை*
நண்ணியவதாரத்தே நன்குரைத்த—*வண்ணமறிந்து
அற்றார்கள்யாவர் அவரடிக்கேயாங்கவர்பால்*
உற்றாரை மேலிடாதான். 12

ஊனமறவேவந்து உள்கலந்தமாலினிமை
யானது*அனுபவித்தற்காந்துணையா*—வானில்
அடியார்குழாங்கூட ஆசையுற்றமாறன்*
அடியாருடன் நெஞ்சேயாடு. 13

ஆடிமகிழ்வானில் அடியார்குழாங்களுடன்*
கூடியின்பமெய்தாக் குறையதனால்*—வாடிமிக
அன்புற்றார்தம்நிலைமை ஆய்ந்துரைக்கமோகித்து*
துன்புற்றான் மாறனந்தோ. 14

அந்தாமத்தன்பால் அடியார்களோடிறைவன்*
வந்தாரத்தான்கலந்த வண்மையினால்*—சந்தாபந்
தீர்ந்த சடகோபன் திருவடிக்கேநெஞ்சமே*
வாய்ந்தவன்பை நாடோறும்வை. 15

வைகுந்தன்வந்து கலந்ததற்பின்வாழ்மாறன்*
செய்கின்றகைச்சியத்தைச்சிந்தித்து*—கைகின்ற
தன்மைதனைக்கண்டு உன்னைத்தான்விடேனென்றுரைக்க*
வன்மையடைந்தான் கேசவன். 16

கேசவனாலென் தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும்*
தேசடைந்தாரென்று சிறந்துரைத்த*—வீசுபுகழ்
மாறன்மலரடியே மன்னுயிர்க்கெல்லா முய்கைக்கு*
ஆறென்றுநெஞ்சேயணை. 17

அணைந்தவர்கள்தம்முடனே ஆயனருட்காளாம்*
குணந்தனையேகொண்டுலகைக்கூட்ட*—இணங்கிமிக
மாசினுபதேசம்செய் மாறன்மலரடியே*
வீசுபுகழெம்மா வீடு. 18

எம்மாவீடும்வேண்டா என்றனக்குன் தாளிணையே*
அம்மாவமையுமெனவாய்ந்துரைத்த*—நம்முடைய
வாழ்முதலாம்மாறன் மலர்த்தாளிணைசூடி*
கீழ்மையற்று நெஞ்சேகிளர். 19

*கிளரொளிசேர் கீழுரைத்தபேறுகிடைக்க*
வளரொளிமால்சோலைமலைக்கே*—தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனும் நீடுபுகழ்மாறன்தாள்*
முன்செலுத்துவோமெம்முடி. 20

முடியார்திருமலையில் மூண்டுநின்றமாறன்*
அடிவாரந்தன்னி லழகர்—வடிவழகைப்
பற்றி* முடியுமடியும் படிகலனும்*
முற்றுமனுபவித்தான் முன். 21

முன்னமழகரெழில் மூழ்குங்குருகையர்கோன்*
இன்னவளவென்ன வொணக்கரிதாய்த்தென்ன*
கரணக்குறையின் கலக்கத்தை*கண்ணன்
ஒருமைப்படுத்தா னொழித்து. 22

*ஒழிவிலாக்காலம் உடனாகிமன்னி*
வழுவிலாவாட்செய்ய மாலுக்கு*—எழுசிகர
வேங்கடத்துப்பாரித்த மிக்காலஞ்சேர்மாறன்*
பூங்கழலைநெஞ்சே புகழ். 23

புகழொன்றுமால் எப்பொருள்களுந்தானாய்*
நிகழ்கின்றநேர்காட்டிநிற்க*—மகிழ்மாறன்
எங்குமடிமைசெய இச்சித்துவாசிகமாய்*
அங்கடிமைசெய்தான்மொய்ம்பால். 24

மொய்ம்பாருமாலுக்கு முன்னடிமைசெய்துவப்பால்*
அன்பாலாட்செய்பவரையாதரித்தும்*—அன்பிலா
மூடரைநிந்தித்தும் மொழிந்தருளும்மாறன்பால்*
தேடரியபத்திநெஞ்சேசெய். 25

செய்யபரத்துவமாய்ச் சீரார்வியூகமாய்*
துய்யவிபவமாய்த் தோன்றிவற்றுள்*—எய்துமவர்க்கு
இந்நிலத்தில் அர்ச்சாவதாரமெளிதென்றான்*
பன்னுதமிழ்மாறன் பயின்று. 26

பயிலுந்திருமால் பதந்தன்னில்*நெஞ்சம்
தயலுண்டுநிற்கும்ததியர்க்கு*—இயலுடனே
ஆளானார்க்காளாகும் மாறனடியதனில்*
ஆளாகார் சன்மம்முடியா. 27

முடியாதவாசைமிக முற்றுகரணங்கள்*
அடியார்தம்மைவிட் டவன்பால்—படியா*
ஒன்றொன்றின்செயல்விரும்ப உள்ளதெல்லாம்தான்விரும்ப*
துன்னியதேமாறன்றன் சொல். 28

சொன்னாவில்வாழ்புலவீர் சோறுகூறைக்காக*
மன்னாதமானிடரை வாழ்த்துதலாலென்னாகும்*
என்னுடனேமாதவனை ஏத்துமெனுங்குருகூர்*
மன்னருளால் மாறுஞ்சன்மம். 29

சன்மம்பலசெய்து தானிவ்வுலகளிக்கும்*
நன்மையுடைமால்குணத்தை நாடோறும்*—இம்மையிலே
ஏத்துமின்பம்பெற்றேன் எனுமாறனையுலகீர்!*
நாத்தழும்பவேத்துமொருநாள். 30

ஒருநாயகமாய் உலகுக்கு, வானோர்*
இருநாட்டிலேறியுய்க்கு மின்பம்—திரமாகா*
மன்னுயிர்ப்போகம்தீது மாலடிமையேயினிதாம்*
பன்னியிவை மாறனுரைப்பால். 31

பாலரைப்போல்சீழ்கிப் பரனளவில்வேட்கையால்*
காலத்தால்தேசத்தால் கைகழிந்து*—சால
அரிதானபோகத்தில் ஆசையுற்றுநைந்தான்*
குருகூரில்வந்துதித்த கோ. 32

கோவானவீசன் குறையெல்லாம்தீரவே*
ஓவாதகாலத்துவாதிதனை*—மேவிக்
கழித்தடையக்காட்டிக் கலந்தகுணமாறன்*
வழுத்துதலால் வாழ்ந்ததிந்தமண். 33

மண்ணுலகில்முன்கலந்து மால்பிரிகையால்*மாறன்
பெண்ணிலைமையாய்க் காதல்பித்தேறி*—எண்ணிடில்முன்
போலிமுதலானபொருளை அவனாய்நினைந்து
மேல்விழுந்தான்*மையல்தனின்வீறு. 34

வீற்றிருக்குமால்விண்ணில் மிக்கமயல்தன்னை*
ஆற்றுதற்காத்தன்பெருமை யானதெல்லாம்*—தோற்றவந்து
நன்றுகலக்கப்போற்றி நன்குகந்துவீறுரைத்தான்*
சென்றதுயர் மாறன் தீர்ந்து. 35

தீர்ப்பாரிலாதமயல் தீரக்கலந்தமால்*
ஓர்ப்பாதுமின்றி யுடன்பிரிய*—நேர்க்க
அறிவழிந்து உற்றாரு மறக்கலங்க*பேர்கேட்டு
அறிவுபெற்றான்மாறன்சீலம். 36

சீலமிகுகண்ணன் திருநாமத்தா லுணர்ந்து*
மேலவன்றன்மேனிகண்டு மேவுதற்கு*—சால
வருந்தியிரவும்பகலும் மாறாமல்கூப்பிட்
டிருந்தனனே*தென்குருகூரேறு. 37

ஏறுதிருவுடைய ஈசனுகப்புக்கு*
வேறுபடிலென்னுடைமை மிக்கவுயிர்—தேறுங்கால்
என்றனக்கும்வேண்டா எனுமாறன்தாளைநெஞ்சே*
நந்தமக்குப்பேறாக நண்ணு. 38

நண்ணாதுமாலடியை நானிலத்தே வல்வினையால்*
எண்ணாராத்துன்பமுறு மிவ்வுயிர்கள்*—தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமல் கண்கலங்குமாறனருள்*
உண்டுநமக்குற்றதுணையொன்று. 39

*ஒன்றுமிலைத்தேவு இல்வுலகம்படைத்தமால்*
அன்றியெனஆருமறியவே*—நன்றாக
மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன்தாள்தொழவே*
காதலிக்கு மென்னுடையகை. 40

கையாருஞ்சக்கரத்தோன் காதலின்றிக்கேயிருக்க*
பொய்யாகப்பேசும் புறனுரைக்கு—*மெய்யான
பேற்றையுபகரித்த பேரருளின்தன்மைதனை*
போற்றினனே மாறன்பொலிந்து. 41

*பொலிகபொலிகவென்று பூமகள்கோன்தொண்டர்*
மலிவுதனைக்கண்டுகந்து வாழ்த்தி*—உலகில்
திருந்தாதார்தம்மைத் திருத்தியமாறன்சொல்*
மருந்தாகப் போகுமனமாசு. 42

மாசறுசோதிக் கண்ணன்வந்துகலவாமையால்*
ஆசைமிகுந்துபழிக்கஞ்சாமல்—ஏசறவே*
மண்ணில்மடலூர மாறனொருமித்தான்*
உண்ணடுங்கத் தான்பிறந்தவூர். 43

ஊரநினைந்தமடல் ஊரவுமொண்ணாதபடி*
கூரிருள்சேர்கங்குலுடன் கூடிநின்று*—பேராமல்
தீதுசெய்ய, மாறன்திருவுள்ளத்துச்சென்றதுயர்*
ஓதுவதிங் கெங்ஙனேயோ. 44

எங்ஙனேநீர்முனிவது என்னையினிநம்பியழகு*
இங்ஙனேதோன்றுகின்ற தென்முன்னே*—அங்ஙன்
உருவெளிப்பாடா உரைத்ததமிழ்மாறன்*
கருதுமவர்க் கின்பக்கடல். 45

கடல்ஞாலத்தீசனை முன்காணாமல்நொந்தே*
உடனாவனுகரிக்கலுற்று*—திடமாக
வாய்ந்தவனாய்த்தான்பேசும் மாறனுரையதனை*
ஆய்ந்துரைப்பா ராட்செயநோற்றார். 46

நோற்றநோன்பாதியிலேன் உன்றனைவிட்டாற்றகில்லேன்*
பேற்றுக்குபாயமுன்றன்பேரருளே—சாற்றுகின்றேன்*
இங்கென்னிலையென்னும் எழில்மாறன்சொல்வல்லார்*
அங்கமரர்க் காராவமுது. 47

*ஆராவமுதாழ்வார் ஆதரித்தபேறுகளை*
தாராமையாலே தளர்ந்துமிக*—தீராத
ஆசையுடன் ஆற்றாமைபேசியலமந்தான்*
மாசறுசீர் மாறனெம்மான். 48

மாநலத்தால்மாறன் திருவல்லவாழ்புகப்போய்*
தானிளைத்துவீழ்ந்தவ்வூர் தன்னருகில்*—மேல்நலங்கித்
துன்பமுற்றுச்சொன்ன சொலவுகற்பார்தங்களுக்கு*
பின்பிறக்க வேண்டாபிற. 49

பிறந்துலகங்காத்தளிக்கும் பேரருட்கண்ணா*உன்
சிறந்தகுணத்தா லுருகுஞ்சீலத்—திறந்தவிர்ந்து*
சேர்ந்தனுபவிக்கும்நிலை செய்யென்றசீர்மாறன்*
வாய்ந்தபதத்தே மனமேவைகு. 50

வைகல்திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கு*என்
செய்கைதனைப்புள்ளினங்காள்! செப்புமென*—கைகழிந்த
காதலுடன்தூதுவிடும் காரிமாறன்கழலே*
மேதினியீர் நீர்வணங்குமின். 51

மின்னிடையார்சேர்கண்ணன் மெத்தனவந்தானென்று*
தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்த் தான்தள்ளி*—உன்னுடனே
கூடேனென்றாடும் குருகையர்கோன்தாள்தொழவே*
நாடோறும் நெஞ்சமே! நல்கு. 52

நல்லவலத்தால் நம்மைச்சேர்த்தோன்முன்நண்ணாரை*
வெல்லும்விருத்தவிபூதியனென்று*—எல்லையறத்
தானிருந்துவாழ்த்தும் தமிழ்மாறன்சொல்வல்லார்*
வானவர்க்கு வாய்த்தகுரவர். 53

குரவைமுதலாம் கண்ணன்கோலச்செயல்கள்*
இரவுபகலென்னுமலென்றும்*—பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப் பேசும்பராங்குசன்தன்*
சொல்தேனில் நெஞ்சே! துவள். 54

துவளறுசீர்மால்திறத்துத் தொன்னலத்தால்*நாளும்
துவளறுதன்சீலமெல்லாம் சொன்னான்*—துவளறவே
முன்னமனுபவத்தில் மூழ்கினின்றமாறன்*அதில்
மன்னுமுவப்பால் வந்தமால். 55

மாலுடனேதான்கலந்து வாழப்பெருமையால்*
சாலநைந்துதன்னுடைமை தானடையக்—கோவியே*
தானிகழவேண்டாமல் தன்னைவிடல்சொல்மாறன்*
ஊனமறுசீர் நெஞ்சேயுண். 56

உண்ணுஞ்சோறாதி ஒருமூன்றுமெம்பெருமான்*
கண்ணனென்றேநீர்மல்கிக் கண்ணிணைகள்*—மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில் மாயன்பால்போம்மாறன்*
பொன்னடியே நந்தமக்குப்பொன். 57

பொன்னுலகுபூமியெல்லாம் புள்ளினங்கட்கேவழங்கி*
என்னிடரைமாலுக்கியம்புமென—*மன்னுதிரு
நாடுமுதல் தூதுநல்கிவிடும்மாறனையே*
நீடுலகீர் போய்வணங்குமீர். 58

நீராகிக்கேட்டவர்கள் நெஞ்சழிய*மாலுக்கும்
ஏரார்விசும்பி லிருப்பரிதா—*ஆராத
காதலுடன் கூப்பிட்ட காரிமாறன்சொல்லை*
ஓதிடவேயுய்யு முலகு. 59

*உலகுய்யமால்நின்ற உயர்வேங்கடத்தே*
அலர்மகளை முன்னிட்டவன் தன்—மலரடியே*
வன்சரணாய்ச்சேர்ந்த மகிழ்மாறன் தாளிணையே*
உன்சரணாய் நெஞ்சமேயுள். 60

உண்ணிலாவைவருடனிருத்தி* இவ்வுலகி
லெண்ணிலாமாயன் எனைநலிய—எண்ணுகின்றான்*
என்றுநினைந்தோலமிட்ட இன்புகழ்சேர்மாறனென*
குன்றிவிடுமே பவக்கங்குல். 61

*கங்குல்பகலரதி கைவிஞ்சிமோகமுற*
அங்கதனைக்கண்டோ ரரங்கரைப்பார்த்து—*இங்கிவள்பால்
என்செயநீரெண்ணுகின்றதென்னும் நிலைசேர்மாறன்*
அஞ்சொலுற நெஞ்சுவெள்ளையாம். 62

வெள்ளியநாமங்கேட்டு விட்டகன்றபின்மோகம்*
தெள்ளியமால்தென் திருப்பேர் சென்றுபுக*—உள்ளமங்கே
பற்றிநின்றதன்மை பகரும்சடகோபற்கு*
அற்றவர்கள் தாமாழியார். 63

ஆழிவண்ணன் தன்விசயம் ஆனவைமுற்றுங்காட்டி*
வாழிதனாலென்று மகிழ்ந்துநிற்க—*ஊழிலவை
தன்னையின்றுபோல்கண்டு தானுரைத்தமாறன்சொல்*
பன்னுவரேநல்லதுகற்பார். 64

கற்றோர்கருதும் விசயங்களுக்கெல்லாம்*
பற்றாம்விபவ குணப்பண்புகளை—*உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர் தம்மிழவை வாய்ந்துரைத்தமாறன்சொல்*
பண்ணிலினிதான தமிழ்ப்பா. 65

பாமருவுவேதம் பகர்மால்குணங்களுடன்*
ஆமழகுவேண்டப்பாடாமவற்றை*—தாமனத்தால்
நண்ணியவனைக்காணா நன்குருகிக்கூப்பிட்ட*
அண்ணலைநண்ணாரேழையர். 66

ஏழையர்கள்நெஞ்சை யிளகுவிக்கும்மாலழகு*
சூழவந்துதோன்றித் துயர்விளைக்க*—ஆழுமனந்
தன்னுடனேயவ்வழகைத் தானுரைத்தமாறன்பால்*
மன்னுமவர் தீவினைபோம்மாய்ந்து. 67

மாயாமல்தன்னைவைத்த வைசித்திரியாலே*
தீயாவிசித்திரமாச் சேர்பொருளோ—டோயாமல்*
வாய்ந்துநிற்கும்மாயன் வளமுரைத்தமாறனைநாம்*
ஏய்ந்துரைத்து வாழுநாளென்று. 68

என்றனைநீயிங்குவைத்தது ஏதுக்கென*மாலும்
என்றனக்குமென்றமர்க்கு மின்பமதா—*நன்றுகவி
பாடவெனக் கைம்மாறிலாமைபகர்மாறன்*
பாடணைவார்க்குண்டாமின்பம். 69

இன்பக்கவிபாடுவித்தோனை* இந்திரையோடு
அன்புற்றுவாழ் திருவாறன்விளையில்—*துன்பமறக்
கண்டடிமைசெய்யக் கருதியமாறன்கழலே*
திண்டிறலோர் யாவர்க்கும்தேவு. 70

தேவனுறைபதியில் சேரப்பெறுமையால்*
மேவுமடியார்வசனும் மெய்ந்நிலையும்—*யாவையும்தா
னும்நிலையும்சங்கித்து அவைதெளிந்தமாறன்பால்*
மாநிலத்தீர் நங்கள்மனம். 71

நங்கருத்தைநன்றாக நாடிநிற்கும்மாலறிய*
இங்கிவற்றிலாசை யெமக்குளதென்—சங்கையினால்*
தன்னுயிரில்மற்றில்நசை தானொழிந்தமாறன்தான்*
அந்நிலையை யாய்ந்துரைத்தானங்கு. 72

அங்கமரர்பேண அவர்நடுவேவாழ்திருமாற்கு*
இங்கோர்பரிவரிலையென்றஞ்ச—*எங்கும்
பரிவருளரென்னப் பயந்தீர்ந்தமாறன்*
வரிகழல்தாள்சேர்ந்தவர்வாழ்வார். 73

வாராமலச்சமினி மால்தன்வலியினையும்*
சீரார்பரிவருடன் சேர்த்தியையும்—*பாருமெனத்
தானுகந்தமாறன்தாள் சார்நெஞ்சேசாராயேல்*
மானிடவரைச் சார்ந்துமாய். 74

மாயன்வடிவழகைக் காணுதவல்விடா
யாய்*அதறவிஞ்சியழுதலற்றும்—*தூயபுகழ்
உற்றசடகோபனை நாமொன்றிநிற்கும்போதுபகல்*
அற்றபொழுதானதெல்லியாம். 75

எல்லிபகல்நடந்த இந்தவிடாய்தீருகைக்கு*
மெல்லவந்துதான்கலக்க வேணுமென—*நல்லவர்கள்
மன்னுகடித்தானத்தே மாலிருக்கமாறன்கண்டு*
இந்நிலையைச் சொன்னனிருந்து. 76

இருந்தவன்தான்வந்து இங்கிவரெண்ணமெல்லாம்*
திருந்தவிவர்தந்திறத்தே செய்து—*பொருந்தக்
கலந்தினியனுயிருக்கக் கண்டசடகோபர்*
கலந்தநெறி கட்டுரைத்தார்கண்டு. 77

கண்ணிறையவந்து கலந்தமாலிக்கலவி*
திண்ணிலையாவேணுமெனச் சிந்தித்து—*தண்ணிதெனும்
ஆருயிரினேற்றம் அதுகாட்டவாய்ந்துரைத்தான்*
காரிமாறன் தன்கருத்து. 78

கருமால்திறத்தில் ஒருகன்னிகையாம்மாறன்*
ஒருமாகலவியுரைப்பால்—*திரமாக
அந்நியருக்காகாது அவன்றனக்கேயாகுமுயிர்*
அந்நிலையையோரு நெடிதா. 79

*நெடுமாலழகுதனில் நீள்குணத்தில்*ஈடு
படுமாநிலையுடையபத்தர்க்கு—*அடிமைதனில்
எல்லைநிலம்தானாக எண்ணினன்மாறன்*அது
சொல்லைநிலமான நிலைகொண்டு. 80

கொண்டபெண்டிர்தாம்முதலாக் கூறுமுற்றார்கன்மத்தால்*
அண்டினவரென்றே யவரைவிட்டு—*தொண்டருடன்
சேர்க்கும் திருமாலைச்சேருமென்றான்*ஆர்க்குமிதம்
பார்க்கும்புகழ்மாறன்பண்டு. 81

பண்டையுறவானபரனைப் புளிங்குடிக்கே
கண்டு*எனக்கெல்லாவுறவின் காரியமும்—*தண்டறநீ
செய்தருளென்றேயிரந்த சீர்மாறன்தாளிணையே*
உய்துணையென் றுள்ளமேயோர். 82

ஓராநீர்வேண்டினவை உள்ளதெல்லாம்செய்கின்றேன்*
நாராயணனன்றோ நானென்று—*பேருறவைக்
காட்ட அவன்சீலத்தில்கால்தாழ்ந்தமாறனருள்*
மாட்டிவிடும் நம்மனத்துமை. 83

மையார்கண்மாமார்பில் மன்னும்திருமாலை*
கையாழிசங்குடனே காணவெண்ணி—*மெய்யான
காதலுடன்கூப்பிட்டுக் கண்டுகந்தமாறன்பேர்*
ஓதவுய்யுமே யின்னுயிர். 84

இன்னுயிர்மால்தோன்றினது இங்கென்னெஞ்சிலென்று*கண்ணால்
அன்னவனைக் காணவெண்ணியாண்பெண்ணாய்—*பின்னையவன்
தன்னைநினைவிப்பவற்றால் தான்தளர்ந்தமாறனருள்*
உன்னுமவர்க்குள்ள முருகும். 85

உருகுமாலென்னெஞ்சம் உன்செயல்களெண்ணி*
பெருகுமால் வேட்கையெனப்பேசி—*மருவுகின்ற
இன்னாப்புடன் அவன்சீரேய்ந்துரைத்தமாறன்சொல்*
என்னாச்சொல்லாதிருப்பதெங்கு. 86

எங்காதலுக்கடி மாலேய்ந்தவடிவழகென்று*
அங்காதுபற்றாசாவாங்கவன்பால்—*எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப்போகவிடும்மாறன்றாள்*
உள்ளினர்க்குத் தீங்கையறுக்கும். 87

அறுக்குமிடரென்றவன்பால் ஆங்குவிட்டதூதர்*
மறித்துவரப் பற்றாமனத்தால்—*அறப்பதறிச்
செய்யதிருநாவாயில் செல்லநினைந்தான்மாறன்*
மையலினாற் செய்வறியாமல். 88

மல்லடிமைசெய்யும்நாள் மால்தன்னைக்கேட்க*அவன்
சொல்லுமளவும் பற்றாத்தொன்னலத்தால்—*செல்கின்ற
ஆற்றாமைபேசி அலமந்தமாறனருள்*
மாற்றாகப் போகுமென்றன்மால். 89

*மாலுமதுவாஞ்சைமுற்றும் மன்னுமுடம்பின்முடிவில்*
சாலநண்ணிச்செய்வனெனத் தானுகந்து—*மேலவனைச்
சீரார்கணபுரத்தே சேருமெனும்சீர்மாறன்*
தாராளே நந்தமக்குத்தாள். 90

தாளடைந்தோர்தங்கட்குத் தானேவழித்துணையாம்*
காளமேகத்தைக் கதியாக்கி—*மீளுதலாம்
ஏதமிலாவிண்ணுலகில் ஏகவெண்ணும்மாறனென*
கேதமுள்ளதெல்லாம் கெடும். 91

கெடுமிடர்வைகுந்தத்தைக் கிட்டினுப்போல*
தடமுடையனந்தபுரந் தன்னில்—*படவரவில்
கண்டுயில்மாற்காட்செய்யக் காதலித்தான்மாறன்*உயர்
விண்டனிலுள்ளோர் வியப்பவே. 92

வேய்மருதோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை*
தான்மருவாத்தன்மையினல் *தன்னையின்னம்—பூமியிலே
வைக்குமெனச்சங்கித்து மால்தெளிவிக்கத்தெளிந்த*
தக்கபுகழ்மாற னெங்கள்சார்வு. 93

சார்வாகவேயடியில் தானுரைத்தபத்திதான்*
சீரார்பலத்துடனே சேர்ந்ததனை—*சோராமல்
கண்டுரைத்தமாறன் கழலிணையேநாடோறும்*
கண்டுகக்குமென்னுடையகண். 94

கண்ணனடியிணையில் காதலுறுவார்செயலை*
திண்ணமுறவே சுருங்கச்செப்பியே—*மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கை தலைக்கட்டினன்மாறன்*
ஆனபுகழ்சேர் தன்னருள். 95

அருளாலடியிலெடுத்த மாலன்பால்*
இருளார்ந்த தம்முடம்பையிச்சித்து—*இருவிசும்பில்
இத்துடன்கொண்டேக இசைவுபார்த்தேயிருந்த*
சுத்திசொல்லும் மாறன்செஞ்சொல். 96

செஞ்சொற்பரன்தனது சீராரும்மேனிதனில்*
வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின்*—விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக் கைவிடுவித்துக்கொண்ட*
திண்டிறல்மாறன் னந்திரு. 97

திருமால்தன்பால் விருப்பம்செய்கின்றநேர்கண்டு*
அருமாயத்தன் றகல்விப்பானென்—*பெருமால்தீ
இன்றென்பால் செய்வானென்னென்ன இடருற்றுநின்றான்*
துன்னுபுகழ்மாறனைத்தான் சூழ்ந்து. 98

*சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லைவழிகாட்ட*
ஆழ்ந்ததனைமுற்றுமநுபவித்து—*வாழ்ந்தங்
கடியருடனே யிருந்தவாற்றையுரைசெய்தான்*
முடிமகிழ்சேர் ஞானமுனி. 99

*முனிமாறன்முன்புரைசெய் முற்றின்பம்நீங்கி*
தனியாகிநின்றுதளர்ந்து*—தனியாம்
பரமபத்தியால்நைந்து பங்கயத்தாள்கோனை*
ஒருமையுற்றுச் சேர்ந்தானுயர்ந்து. 100

## திருவாய்மொழி நூற்றந்தாதி

முற்றிற்று.

# இயல்சாத்து

(மணவாளமாமுனிகள் நியமித்தருளினது.)

நன்றுந் திருவுடையோம் நானிலத்தி லெவ்வுயிர்க்கும்*
ஒன்றும் குறையில்லை யோதினோம்—குன்ற*
மெடுத்தானடிசேரிராமாநுசன் தாள்*
பிடித்தார் பிடித்தாரைப் பெற்று.

வாழிதிருக்குருகூர் வாழிதிருமழிசை*
வாழி திருமல்லி வளநாடு—வாழி*
சுழிபொறித்த நீர்ப்பொன்னித் தென்னரங்கன் தன்னை*
வழிபறித்த வாளன் வலி.

திருநாடு வாழி திருப்பொருநல்வாழி*
திருநாட்டுத் தென்குருகூர்வாழி*—திருநாட்டுச்
சிட்டத்தமர்வாழி* வாழி சடகோபன்
இட்டத் தமிழ்ப்பாவிசை.

மங்கைநகர்வாழி வண்குறையலூர்வாழி*
செங்கை யருள்மாரி சீர்வாழி*—பொங்குபுனல்
மண்ணித் துறைவாழி* வாழிபரகாலன்
எண்ணில் தமிழ்ப்பாவிசை.

வாழியரோ தென்குருகை வாழியரோ தென்புதுவை*
வாழியரோ தென்குறையல் மாநகரம்*—வாழியரோ
தக்கோர்பரவும் தடஞ்சூழ் பெரும்பூதூர்*
முக்கோல் பிடித்தமுனி.

மொழியைக்கடக்கும் பெரும்புகழான்* வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நங்கூரத்தாழ்வான் சரண்கூடியபின்*
பழியைக்கடத்து மிராமாநுசன் புகழ்பாடியல்லா
வழியைக்கடத்தல்* எனக்கினியாதும் வருத்தமன்றே.

நெஞ்சத்திருந்து நிரந்தரமாக நிரயத்துய்க்கும்*
வஞ்சக்குறும்பின் வகையறுத்தேன்* மாயவாதியர்தாம்
அஞ்சப்பிறந்தவன் சீமாதவனடிக் கன்புசெய்யும்*
தஞ்சத்தொருவன் சரணம்புயமென் தலைக்கணிந்தே.

ஊழிதொறு மூழிதொறு முலகமுய்ய
உம்பர்களும் கேட்டுய்ய* அன்பினாலே
வாழியெனும் பூதம்பேய் பொய்கைமாறன்
மழிசையர்கோன் பட்டர்பிரான் மங்கைவேந்தன்*
கோழியர்கோன் தொண்டர்துகள் பாணன்கோதை
குலமுனிவன் கூறியநூலோதி*வீதி
வாழியென வருந்திரளை வாழ்த்துவார்தம்
மலரடி யென்சென்னிக்கு மலர்ந்தபூவே.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## சாத்துமுறை

பல்லாண்டு பல்லாண்டு—அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே.

ஸர்வதேசதசாகாலேஷ்வவ்யாஹத பராக்ரமா,
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம்.

ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா,
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹி லோகஹிதைஷிணீ.

ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய,
ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய.

நமஃ ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே,
ப்ரஸாதலப்தபரமப்ராப்ய கைங்கர்யசாலிநே.

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்,
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

வாழி திருவாய் மொழிப்பிள்ளை மாதகவால்
வாழும் மணவாள மாமுனிவன்—வாழியவன்
மாறன் திருவாய் மொழிப்பொருளை மாநிலத்தோர்
தேறும்படி யுரைக்கும் சீர்.

செய்ய தாமரைத் தாளிணை வாழியே சேலைவாழி திருநாபி வாழியே
துய்யமார்பும் புரிநூலும் வாழியே சுந்தரத்திருத் தோளிணை வாழியே
கையுமேந்திய முக்கோலும் வாழியே கருணைபொங்கிய கண்ணிணை வாழியே
பொய்யிலாத மணவாள மாமுனி புந்திவாழி புகழ்வாழி வாழியே.

அடியார்கள்வாழ அரங்கநகர்வாழ
சடகோபன் தண்டமிழ்நூல்வாழ—கடல்சூழ்ந்த
மன்னுலகம்வாழ மணவாள மாமுனியே
இன்னுமொரு நூற்றாண்டிரும்.

---

### ஆண்டாள் வாழித்திருநாமம்

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதுஞ் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கற்கே கண்ணியுகந் தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

## நம்மாழ்வார் வாழித்திருநாமம்

திருக்குருகைப் பெருமாள்தன் திருத்தாள்கள் வாழியே
திருவான திருமுகத்துச் செவியென்றும் வாழியே
இருக்குமொழி யென்னெஞ்சில் தேக்கினன் வாழியே
எந்தை யெதிராசர்க் கிறைவனார் வாழியே
கருக்குழியில் புகாவண்ணம் காத்தருள்வோன் வாழியே
காசினியிலாரியனைக் காட்டினன் வாழியே.
வருத்தமற வந்தென்னை வாழ்வித்தான்வாழியே
மதுரகவிதம்பிரான் வாழிவாழி வாழியே.

## எம்பெருமானார் வாழித்திருநாமமும் நாள்பாட்டும்

சீராருமெதிராசர் திருவடிகள் வாழி
திருவரையிற்சாத்திய செந்துவராடை வாழி
ஏராரும் செய்யவடி வெப்பொழுதும் வாழி
இலங்கிய முந்நூல்வாழியிணைத் தோள்கள் வாழி
சோராத துய்யசெய்ய முகச்சோதி வாழி
தூமுறுவல்வாழி துணைமலர்க்கண்கள் வாழி
ஈராறு திருநாமமணிந்தவெழில் வாழி
இனிதிருப்போடெழில் ஞானமுத்திரை வாழியே.

அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே
அறமிகு நற்பெரும்பூதூ ரவதரித்தான் வாழியே
அழகாருமெதிராசர் அடியிணைகள் வாழியே.

சங்கரபாற்கர யாதவபாட்டப் பிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலையென்று மிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமை யாறுமெனத்துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர் வாழ்வுமுளைத்திடுநாள்
மன்னியதென்னரங்காபுரிமாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள் சூழ்வயல்நாளும் சிறந்த பெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே.

## மணவாளமாமுனிகளின் விசேஷ வாழிதிருநாமமும் நாள்பாட்டும்

இப்புவியிலரங்கேசற் கீடளித்தான்வாழியே
எழில்திருவாய்மொழிப்பிள்ளை யிணையடியோன்வாழியே
ஐப்பசியில்திருமூலத் தவதரித்தான் வாழியே
அரவரசப்பெருஞ்சோதி யனந்தனென்றும் வாழியே

எப்புவியும் சீசைலமேத்தவந்தோன் வாழியே
ஏராருமெதிராச ரெனவுதித்தான் வாழியே
முப்புரிநூல்மணிவடமும் முக்கோல்தரித்தான் வாழியே
மூதறிவன் மணவாளமாமுனிவன் வாழியே.

செந்தமிழ்வேதியர் சிந்தைதெளிந்து சிறந்துமகிழ்ந்திடு நாள்
சீருலகாரியர்செய்தருள் நற்கலைதேசு பொலிந்திடு நாள்
மந்தமதிப்புவி மானிடர்தங்களை வானிலுயர்த்திடு நாள்
மாசறுஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வுமுளைத்திடு நாள்
கந்தமலர்ப்பொழில் சூழ்குருகாதிபர்கலைகள் விளங்கிடு நாள்
காரமர்மேனி யரங்கநகர்க்கிறை கண்கள்களித்திடு நாள்
அந்தமில்சீர் மணவாளமுனிப்பர னவதாரம்செய்திடு நாள்
அழகுதிகழ்ந்திடும் ஐப்பசியில் திருமூலம்அதெனு நாளே.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நாலாயிரதிவ்யப்ரந்தம்

முற்றுப்பெற்றது

---

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ருமுநீந்த்ராய மஹாத்மநே.
ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

---



வந்து வியந்துய்யக்கொண்ட தண்டாமரைக் கண்ணன்" என்றுமுள்ள பாசுரங்களில் சிறிது விரிவாக அநுஸந்திக்கப்பட்டுள்ளது.

முன் ஒரு கல்பத்தின் அந்தத்தில் பிரமதேவன் துயிலுகையில் அவன் முகங்களி னின்று வெளிப்பட்டுப் புருஷரூபத்துடன் உலாவிக்கொண்டிருந்த நான்கு வேதங்களையும் மஹாபலசாலியாய் நெடுங்காலந் தவஞ்செய்து பெருவரங்கள் பெற்றவனான சோமகனென் னும் அசுரன் கவர்ந்துகொண்டு பிரளய வெள்ளத்தினுள் மறைந்து செல்ல, அதனை யுணர்ந்து திருமால் ஒரு பெருமீனாய்த் திருவவதரித்து அப்பெருங்கடலினுட்புக்கு அவ்வசு ரனைத் தேடிப்பிடித்துக்கொன்று அவன் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து அவற்றைப் பிரமனுக்குக் கொடுத்தருளினன் என்ற வரலாறும் உண்டு. இவ்வசுரன் பெயர் சோமக னென்றலும் ஹயக்ரீவ னென்றலும் உண்டு. ... ... ... (1)

## 2. ஹம்ஸாவதார வரலாறு.

முன்னொரு காலத்தில் மதுகைடபரென்ற அசுரர்கள் பிரமதேவனிடத்திலிருந்து வேதங் களை அபஹரித்துக்கொண்டு கடலில் முழுகிமறைந்துவிட ஞானவொளியைத்தரும் பெரு விளக்கான வேதங்கள் ஒழிந்தமைபற்றி உலகமெங்கும் பேரிருள் மூடி நலியாநிற்க, பிரமன் முதலியோரனைவரும் கண் கெட்டவர் போல யாதொன்றும் செய்வறியாமல் திகைத்து வருந்துவது கண்டு திருவுள்ளமிரங்கித் திருமால் கடலினுட்புக்கு அவ்வசுரர்களைத் தேடிக் கண்டு பிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுக்கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளினன். இவ்வரலாறு சிறிது வேறுபடக் கூறுதலுமுண்டு. ... (2)

## 3. கூர்மாவதார வரலாறு

முன்னொருகாலத்தில், இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத் துச்சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கை வீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவருகையில் துர்வாஸமஹாமுநி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவ் விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவ லோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனிவந்துகொண்டிருந்த இந்திரனைக்கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக் கொடுக்க, அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்த வளவில் அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முனிவன் கடுங்கோபங்கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு செல்வச்செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துவிடக் கடவன' என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம் யாவும் ஒழிந்தன; ஒழியவே அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர். பிறகு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரண மடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகியென்னும் மஹா நாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்தி விட, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம் மலையின் கீழேசென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்த னன். இப்படி ஸ்ரீமந்நாராயணன் அக்கடலினிடையே மஹாகூர்மமாய் மந்தரபர்வதத்திற்கு ஆதாரமாய் எழுந்தருளியிருக்க, வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும்

தலையைப் பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இரு திறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால் தான் ஒரு திருமேனியைத் தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும், வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று வாஸுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக் கடைந்தனன். அப்பால் அந்த ஸ்ரீ மஹாவிஷ்ணு தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத் தரித்து அம்ருதபூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அந்த க்ஷீரஸமுத்ரத்திலிருந்து தோன்றினன். அப்பொழுது அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அம்ருதகலசத்தை பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள அந்த எம்பெருமான் ஜகந்மோஹனமான ஒரு பெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்களுடைய கோஷ்டிக்கு மாத்திரம் ப்ரஸாதித்தனன். ... ... ... ... (3)

## 4. வராஹாவதார வரலாறு

ஹிரண்யகசிபுவின் உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்ற போது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹாவராஹரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினாற் குத்திக் கொன்று பாதாள லோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற் குத்தி அங்கு நின்று எடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பதாம். இப்பொழுது நடக்கிற ச்வேத வராஹ கல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலே யெடுக்க நினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை எடுத்து வந்தனனென்ற வரலாறும் உண்டு. ... ... ... (4)

## 5. நரஸிம்ஹாவதார வரலாறு.

ஹிரண்யகசிபு என்பவன் தேவர் மனிதர் முதலிய எவ்வுயிர்களாலும் பகலிலும் இரவிலும் வானத்திலும் பூமியிலும் வீட்டின் அகத்திலும்புறத்திலும் தனக்கு மரணமுண்டாகாதபடி வரம்பெற்றான். இவன் தேவர் முதலிய யாவருக்கும் பலபல கொடுமைகளைப் புரிந்து அனைவரும் தன்னையே கடவுளாக வணங்கும்படி செய்து வருகையில், அவன் மகனான ப்ரஹ்லாதாழ்வான் இளமை தொடங்கி மஹாவிஷ்ணுபக்தனாய்த் தந்தையின் கட்டளைப்படி முதலில் அவன் பெயரைச் சொல்லிக் கல்விகற்காமல் நாராயணநாமம் சொல்லி வரவே கடுங்கோபங்கொண்ட இரணியன் ப்ரஹ்லாதனைத் தன் வழிப்படுத்துவதற்குப் பலவாறு முயன்றபின் அங்ஙனம் வழிபடாத அவனைக் கொல்வதற்கு என்னவுபாயஞ் செய்தும் அவன் பகவானுடைய அநுக்ரஹபலத்தினால் ஒரு கேடுமின்றியிருக்க, ஒரு நாள் ஸாயங்காலத்திலே அந்த ஹிரண்யன் தன் புத்திரனை நோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கேயுள்ளன்? காட்டு' என்ன, "தூணிலுமுளன் துரும்பிலுமுளன், எங்குமுளன்" என்று உறுதியாய்ச்சொல்ல, உடனே இரணியன் "இங்கு உளனோ?" என்று சொல்லி எதிரில் நின்ற தூணைப்புடைக்க, உடனே அதிலிருந்து திருமால் மநுஷ்யரூபமும் சிங்கவடிவுங்கலந்த நரசிங்கமூர்த்தியாய்த்தோன்றி இரணியனைப் பிடித்து வாசற்படியில் தன் மடிமீது வைத்துக் கொண்டு தன் திருக்கையில் நகங்களால் அவன் மார்பைப்பிளந்து அழித்திட்டு ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்தானென்பது பிரஸித்தம். "அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே, வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய், உளந்தொட்டிரணியனொண்மார்வகலம், பிளந்திட்ட கைகள்" என்றும், "எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்து, இங்கில்லையாலென்றிரணியன் தூண்புடைப்ப, அங்கப்பொழுதே அவன் வியத்தோன்றிய, என் சிங்கப்பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்தே" என்றும் ஆழ்வார்கள் ஈடுபடுவர்கள்.

## (நரஸிம்ஹாவதார விசேஷங்கள்.)

வேறேயொரு தூணிலிருந்து நரசிங்கமூர்த்தி தோன்றினால் முன்னமே ஒரு நரசிங்கத்தை உள்ளேவைத்து நாட்டிய தூண் அது என்று சொல்லிவிடக்கூடுமாகையாலே அந்தவார்த்தைக்கு இடமில்லாதபடி அந்த இரணியன் தானே தனது உயரம் பருமனுக்குப் பொருந்தப்பார்த்து அளந்து நாட்டிய அவன் வாசல் தூணிலிருந்தே திருமால் நரசிங்கமாய்த் தோன்றினனென்பதும், வேறு யாரேனும் கையால் தட்ட அத்தட்டியவிடத்திலிருந்து தோன்றினால் 'அவர்தம் கையில் நரசிங்கத்தை அடக்கிக்கொண்டுவந்து தூணிலே பாய்ச்சினார்' என்று சொல்லிவிடக்கூடுமாகையாலே அவ்வார்த்தைக்கு அவகாசமில்லாதபடி அவ்விரணியன் தானே தன்கையால் தட்டினவளவில் திருமால் தோன்றினனென்பதும்,—அவன் ஓரிடத்தில் தட்ட மற்றோரிடத்திலிருந்து நரசிங்கம் தோன்றினால் 'எங்குமுளன்' என்று ப்ரஹ்லாதன் செய்த பிரதிஜ்ஞை தவறி 'நீ சொல்லுகிறவன் இங்கில்லை' என்று இரணியன் செய்த பிரதிஜ்ஞை நிலைநிற்குமாகையாலே அதற்கு இடமில்லாதபடி அவன் தட்டின இடத்திலிருந்தே திருமால் தோன்றினனென்பதும்,—அவன் தட்டின பிறகு சிறிதுபோது கழித்து நரசிங்கம் தோன்றினால் 'நான் தட்டினபொழுது திருமால் அங்கில்லை' என்று அவன்சொல்லி திருமால் எங்கும் எப்பொழுதும் எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருக்கிற உண்மை நிலையை மறுக்கக்கூடுமாகையாலே அதற்கு இடமறும்படி கர்ப்பம் கருமுதிர்தல் ப்ரஸவித்தல் முதலியனவும் குழந்தையாய் ஜனித்தல் பிறகு நாளடைவில் வளர்தல் என்பனவுமில்லாமல் அவ்வெதிரியினும் பருத்து வளர்ந்த வடிவையுடையவனாய் அப்பொழுதே தோன்றினனென்பதும்,—அங்ஙன் தோன்றிய விடத்தும் ஹிரண்யன் ஜயசீலனாகவும் நரஸிம்ஹன் பராஜிதனாகவும் நேர்ந்தால் 'எங்குமுளன்' என்ற உண்மை நிலைத்தாலும் பரத்வம ஸித்தியாமற்போய்விடுதல் பற்றி அதைவிடத் தோன்றாமலிருப்பதே நலமென்னும்படி யிருக்குமாதலால் அங்ஙனமாகாதபடி அக்கொடியவனைத் தவறாது அழித்தனனென்பதும்,—தேவர் மனிதர் விலங்குகள் தாவரம் என்னும் நால்வகைப் பிறப்புக்களிலுள்ளவற்றில் ஒவ்வொன்றினாலும் தனித்தனி சாகாதபடியும், ப்ரஹ்மஸ்ருஷ்டிக்கு உட்பட்ட எந்த பிராணியினாலும் சாகாதபடியும், ப்ரஹ்மருத்ராதிகளிடத்திற் பெற்றவரம் பழுதுபடாமைக்காக நரங்கலந்த சிங்கமாய் ப்ரஹ்மஸ்ருஷ்டியினுட்படாமல் தன்னைத்தானே தோற்றுவித்துக்கொண்டு தோன்றினனென்பதும்,—அஸ்த்ரசஸ்த்ரங்களொன்றினாலும் சாகாதபடியும் ஈரமுள்ளதனாலும் ஈரமில்லாததனாலும் இறவாதபடியும் பெற்றவரம் வீண்போகாமே நகங்களினால் கிண்டு கொன்றனனென்பதும், பகலிலு மிரவிலுஞ் சாகாதபடி பெற்றவரம் பொய்படாதபடி அப்பகலிரவுகளின் ஸந்தியாகிய மாலைப்பொழுதிலே கொன்றனனென்பதும், பூமியிலும் வானத்திலும் சாகாதபடி பெற்றவரம் மெய்யாம்படி தன் மடிமீது வைத்துக் கொன்றானென்பதும்,—வீட்டின் அகத்திலும் புறத்திலும் இறவாதிருக்கும்படி பெற்றவரத்திற்கு விரோதமின்றி வாசற்படிமீது வைத்துக்கொண்டு கொன்றனனென்பதும் இவை போல்வன பல விசேஷங்கள் இவ்வவதாரத்திலே அருமையாக நோக்கத்தக்க விஷயங்களாம். "சுரரசுரர் முனிவர் நரர்கையில் பாரில் சுடர்வானில் பகலிரவில் உள்புறம்பில், பெருபடையில் தான் சாகா விரண்யன்றன்னைப் பிரகலாதன் தர்க்கித்துண்டென்ற தூணில், நரஹரியாய்ப் பொழுதுபுகு நேரந்தன்னில் நாடியுதித்துயர் வாசற்படிமீதேறி, இரணியனைத் தொடைமிசைவைத்துகிரினாலே இருபிளவாக்கினையரியே எம்பிரானே" என்றார் பின்னோரும்.

## 6, 7. வாமந, த்ரிவிக்ரமாவதார வரலாறு.

ப்ரஹ்லாதன் தனக்கு வயது சென்றபிறகு தன்னுடைய பகவத்தியானத்திற்கு இடையூறாயிருக்கிற ராஜ்யபரிபாலனத்தைத் தனது பௌத்திரனாகிய பலியினிடத்தில் ஒப்புவித்துத் தான் தவஞ்செய்யப்போவதாகக் கருதி அந்தமாவலியை ஒரு நாள் ஏகாந்தத்தில் அழைத்து 'நான் வெகுகாலம் அரசாண்டு வந்தேன்; என் காலத்தில் ஒருவரும் அதர்மம்

செய்யாதபடி நோக்கிவந்தேன்; ஸ்ரீ விஷ்ணுவே முழுமுதற் கடவுள் என்கிற ஸித்தாந்தத்தை நான் உலகிற் பரவச் செய்து அனைவர்களையும் விஷ்ணுபக்தர்களாக்கி வந்தேன். இப்போது நான் கிழவனாய் விட்டபடியால் விதிப்படி தவஞ்செய்யப் போகின்றேன்; விஷ்ணுத்வேஷியாய் மாண்டுபோன உன் தந்தையை [விரோசனனை]ப் போலல்லாமல் நீ பரமவிஷ்ணு பக்தனாயிருந்து ராஜ்யமாளக்கடவை' என்று நன்மதிகூறிப் பட்டங்கட்டித் தான் இமயமலையேறித் தவஞ்செய்யச்சென்றான்.

பிறகு மாவலி அப்படியே சிலநாள் அரசாண்டுவந்து ஒரு நாள் மந்திரிகளை அழைத்து 'நான் சில நன்மைகளையடையத் தவஞ் செய்யச்செல்ல விரும்புகிறேன்; நான் மீண்டும் வருமளவும் இந்தராஜ்ஜியத்தில் விஷ்ணுபக்தி வழுவாதபடி நோக்கி வாருங்கள்' என்று கட்டளையிட்டுத் தான் இமயமலையருகில் போய் நான்முகக் கடவுளை நோக்கித் தவஞ் செய்து கொண்டிருக்கையில் பிரமன் பிரஸந்நனாய் வந்து காட்சி தந்து 'வரம் வேண்டிக்கொள்' என்ன, 'ஸ்வாமின்! எனக்கு என் பாட்டனாருபதேசித்த விஷ்ணு பக்தியும் தருமசிந்தையும் எப்போதும் வழுவாதிருக்க வேணும்' என்றும் மூவுலகத்தையும் நான் வென்று வாழவேணும்' என்றும் இவை முதலான சிலவரங்களை வேண்டிப் பெற்றுக்கொண்ட மாவலி தனது ராஜதானியாகிய சோணிதபுரத்திற்கு வந்து சுக்கிராசாரியர் முதலிய ஆப்தர்களிடம் தான் பெற்ற வரங்களைச் சொல்லி அவர்களுடன் கூட மகிழ்ச்சியடைந்து ராஜ்யத்தைச் செங்கோல் செலுத்திக்கொண்டுவந்து பலபல யாகங்களையும் மற்றும் பலவிதமான தான தருமங்களையும் செய்துகொண்டு சுக்கிராசாரியரையும் ப்ரஸந்நராக்கி, தான் ஸகலலோகங்களையும் வெல்லத் தக்க வீறுடையனாம்படி அவரிடத்திலும் ஆசீர்வாதம் பெற்று அதனால் செருக்குற்று ஒருவரையும் மதியாமல் திரிந்து கொண்டிருந்தான்.

சிலநாள் கழிந்தபின் ஸ்வர்க்கலோகத்தையும் வென்று ஆளவேண்டுமெனக் கருதி சுக்கிராசாரியரை யழைத்து 'நீர் ப்ருஹஸ்பதியிடஞ்சென்று நான் சொன்னதாகச் சொல்லும்; அதாவது—ஓ ப்ருஹஸ்பதீ! உமக்கு இந்திரனைப் போல் நானுமொருசிஷ்யனே; எங்கள் குலத்தில் ஹிரண்யகசிபு ஆண்டுவந்த ஸ்வர்க்கலோகத்தைப் பின்பு ஒருவரும் ஆளத்தக்க பலசாலிகளாகப் பிறவாமையால் இந்திரன் பிடித்துக்கொண்டான்; இப்போது அதனை ஆளுகைக்கு எனக்கு வல்லமையுண்டு; ஆகையால் இப்போது அதை எனக்கு விட்டுவிட வேண்டியது; இல்லையாகில் போர் செய்யவேண்டியது; இதற்கு இந்திரன் என்ன சொல்லுகிறானோ அதை உணர்ந்து சொல்லும்' என்று சொல்லியனுப்பினான். சுக்கிரனால் இது கேட்ட ப்ருஹஸ்பதியும் இந்திரனோடு ஆலோசித்து ஒருமாதத்திற்குள் விடையளிப்பதாகச் சொல்லி சுக்கிரனை அனுப்பிவிட்டார். பிறகு இந்திரன் ஒன்றுந்தோன்றாமல் ப்ருஹஸ்பதியையுங் கூட்டிக்கொண்டு பிரமனிடஞ் சென்று செய்தியைச் சொல்ல, அதுகேட்ட நான்முகன் 'வரங்கொடுப்பதற்கு மாத்திரமே எனக்கு அதிகாரமுளது; கொடுத்த வரத்தினால் கெடுதி நேரிடுங்காலத்தில் வேறொரு உபாயத்தினால் அதை மாற்ற எனக்கு வல்லமை இல்லை' என்ன, பிறகு சிவனிடஞ் சென்று முறையிட, அச்சிவபிரானும் 'பிரமன் தந்த வரத்தை நான் அழிக்கவல்லேனல்லேன்; விஷ்ணுவிடஞ் சென்று முறையிடுதல் நன்று' என்று சொல்லிவிட, அவர்கள் விஷ்ணு பக்கலில் வந்து சொல்லிக்கொள்ள, அதற்கு விஷ்ணு 'ஓ ப்ருஹஸ்பதே! மாவலி எனக்குச் சிறந்த பக்தன், மிக்க தருமசிந்தை யுள்ளவன், திடீரென்று அவனை நான் ஒன்றுஞ் செய்யலாகாது; தக்க உபாயத்தை நீங்களே ஆராய்ந்து சிறிதுகாலங் கழியுங்கள்' என்று சொல்லிவிட்டு மறைந்தார்.

முன்பு சுக்கிரனிடம் ப்ருஹஸ்பதி சொல்லியிருந்த ஒரு மாத அவதி கடந்து விட, ஸ்வர்க்கலோகத்தினின்றும் ஒரு ஸமாசாரமும் வரக்காணாமையால் மாவலி தன் படைகளையெடுத்துவிட்டு ஜயபேரி முழங்கப் புறப்பட்டு இந்திரனோடு போர் புரிவதென்று ஸ்வர்க்கஞ்

சென்று அங்கு ஒருவரையுங் காணாமல் அங்குள்ள ஸிங்காசனத்தின்மீது தான் ஏறி வீற்றிருந்து இந்திரனைப்போல் மூன்று உலகங்களையும் ஆண்டுவந்தான். அப்போது மூன்று உலகங்களிலுமுள்ள ஸகல பிராணிகளும் விஷ்ணுபக்தராயினர். தருமம் குறையற நடைபெற்று வந்தது. ஒருநாள் ப்ருஹஸ்பதி மாவலியிடம் வந்து அரசனே! நீர் சுக்கிரனை வைத்துக் கொண்டு அரசுபுரியும்; நான் தவஞ்செய்யப் போகிறேன்' என்ன, அதற்கு மாவலி இந்திரனாக வருபவர்கட்கெல்லாம் உம்மைப் புரோகிதராக ஸ்ரீமஹாவிஷ்ணு நியமித்திருக்கிறாராகையாலிவ்விடம் விட்டு நீர் போகலாகாது' என்ன, அதற்கு அவர் 'நூறு அச்வமேதயாகஞ் செய்து எவனொருவன் இந்திர பட்டத்திற்கு வருகிறானோ அவனுக்கு நான் புரோஹிதனாம்படி விஷ்ணுநியமனமேயன்றி, கிரமமாக இருந்த இந்திரனை அச்சமுறுத்தித் துரத்திவிட்டு இந்த ஸ்தானத்திற்கு அநீதியாக வந்திருக்கிற உமக்கு நான் புரோஹிதனாகமாட்டேன்' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுக் கச்யபருடைய ஆச்ரமத்திற்கு வந்து அவருடைய தரும பத்தினியாகிய அதிதி தேவியிடத்தில் இந்திரனுடைய துக்கச் செய்திகளை யுரைக்க, அவள் கேட்டு மனம் பொறாமல் அழுதுகொண்டு தன் புத்திரனாகிய இந்திரனுக்கு நன்மைகள் உண்டாகும்படி விஷ்ணுவிடம் பிரார்த்திக்க விரும்பி பகவானைத் துதித்துக் கொண்டிருக்கையில் ப்ரஸந்நரான ஸ்ரீமஹாவிஷ்ணு அதிதியின் முன்னே வந்து ஸேவைஸாதித்து அவளுடைய கோரிக்கையை அறிந்துகொண்டு 'அம்மா! நான் உனக்குப் பிள்ளையாகப்பிறந்து இந்திரனுடைய துயரத்தைப் போக்குகிறேன்' என்று சோதிவாய் திறந்து அருளிச்செய்து மறைந்துவிட்டார்.

பிறகு சிறிதுகாலங் கழிந்தபின் அதிதி கர்ப்பந்தரித்து வாமனனைப் பெற்றனள். கச்யபர் அப்புதல்வனுக்கு ப்ராஹ்மண ஸம்ஸ்காரங்களை யெல்லாம் கிரமமாகச் செய்வித்தார். வாமனனும் தபஸ்வியாக இருந்து வந்தான். அக்காலத்தில் மாவலி நர்மதாநதியின் கரையில் வைஷ்ணவயாகஞ் செய்யமுயன்று யாகத்தை நடத்திக்கொண்டிருக்கையில் இவ்வாமனன் 'இந்திரனுக்கு நாம் உதவி செய்ய இதுவே தக்கசமயம்' என்றெண்ணி அங்கிருந்து புறப்பட்டு மாவலியின் யாகசாலைக்குச் சென்றார். பரமவிலக்ஷணமான திருக்கோலத்தைக் கண்ட மாவலி பெருமகிழ்ச்சிகொண்டு வாமனனை உபசாரபூர்வமாக ஆஸனத்தில் இருத்தி, வந்த காரியத்தை விநயத்துடன் விசாரிக்க, வாமனன் 'ஓ மன்னவனே! நான் தவஞ்செய்ய விரும்புகிறேன்; பிறருடைய நிலத்திலிருந்து தவஞ்செய்தால் பயனில்லை யாகையால் எனக்கு அறுதியாக என் காலால் மூவடிமண் தரவேண்டும்' என்ன, அது கொடுப்பதற்கு அவன் இசைந்தவுடனே திரிவிக்ரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து ஓரடியால் பூலோகத்தையும் மற்றோரடியால் மேலுலகத்தையும் அளந்து மூன்றாமடிக்காக அவன் இசைவின்படியே அவன் முடியிற் காலை வைத்து அவனைப் பாதாளத்திலழுத்தி அடக்கினன். ... (7)

## 8. சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறியது.

வாமநமூர்த்தியின் வடிவழகாலும் மழலைச் சொல்லாலும் மனமகிழ்ந்த மஹாபலி மூவடிமண்ணைக் கொடுக்க யத்நித்தவளவிலே, சுக்ராசார்யன் எம்பெருமானது வடிவையும் வந்தவகையையும் பேச்சையும் ஊன்றிப் பார்த்து 'இவன் ஸர்வேச்வரன், தேவகாரியம் செய்யும் பொருட்டு உன் செல்வத்தை யெல்லாம் பறித்துப்போக வந்தான்; ஆகையால் நீ இவனுக்கொன்றும் தரத்தகாது' என்று தாநத்தைத் தடுக்க, அவன் அதை ஆதரியாமல் தாரைவார்த்து தத்தம் செய்யப்புக, ஜலபாத்ரத்தின் [திருக்காவிரி] த்வாரத்திலே அந்த சுக்ரன் புகுந்துகொண்டு நீர் விழவொட்டாமல் தடுக்க, ஸ்ரீவிஷ்ணு த்வாரம் சோதிப்பவன் போல, தன்னுடைய திருக்கையிலணிந்த தர்ப்ப பவித்திரத்தின் நுனியால் அவன் கண்ணைக் குத்திக் கலக்க, அவனும் கண்கெட்டு அங்குநின்றும் வெளிப்பட, பின்பு மாவலியினிடத்தில் நீரேற்றுப் பெற்றனன். ... ... ... ... ... (8)

## 9. நமுசியை வானிற் சுழற்றியது.

வாமநமூர்த்தி மஹாபலியிடத்தினின்றும் தானம் வாங்கினவுடனே திரிவிக்ரமனாய் மூன்றடிமண்ணையளக்கப்புக, அதைக்கண்ட மஹாபலிபுத்திரனான நமுசி யென்பவன் ஓடிவந்து 'இது என்ன அநியாயம்!' என்று சொல்லி வளருகின்ற திருவடியைத் தகைய, ஸ்ரீவிஷ்ணு 'நீ ஏன் தகைகிறாய்? நான் தானம் பெற்றதை அளந்து கொள்ள வேண்டாவோ' என்ன; நமுசி 'நீ செய்கிறது கபடமன்றோ' என்ன; ஸ்ரீவிஷ்ணு 'உன்னுடைய தகப்பன் எனக்கு தாரைவார்த்து தத்தம் பண்ணினது பொய்யோ? என்ன; நமுசி 'என்னுடைய பிதா உன்னுடைய மோசவகை தெரியாமல் உன் வஞ்சனத்தில் அகப்பட்டுக் கொண்டான்' என்ன; ஸ்ரீவிஷ்ணு 'நான் செய்வதை வஞ்சகமென்று எதனால் சொல்லுகிறாய்?' என்ன; நமுசி 'நீ செய்வது வஞ்சனமன்றாகில் நீ முன்பு யாசித்தபோதிருந்த வடிவத்தைக் கொண்டு அளந்து கொண்டு போ' என்ன, ஸ்ரீவிஷ்ணு, 'சரீரமென்பது எப்போதும் ஒரே தன்மையாக இருக்கமாட்டாதே; விகாரப்படுந் தன்மையுடையது காண்; முன்னைய வடிவத்தைக் கொண்டு எப்படி அளக்கமுடியும்?' என்ன, இப்படி ஸமாதானஞ் சொல்லவுங் கேளாமல் தான் பிடித்த திருவடியின் பிடியைவிடாமல் உறுதியாயிருந்த நமுசியை வளர்ந்த திருவடியினால் ஆகாயத்திலே கொண்டுபோய்ச் சுழன்று விழும்படி செய்தருளினன். ... ... (9)

## 10. உலகளந்த திருவடியில் கங்கை பெருகியது.

திருமால் உலகமளந்தகாலத்தில் மேலே ஸத்தியலோகத்திற்சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தன் கைக்கமண்டல தீர்த்தத்தால் கழுவி விளக்க, அந்த ஸ்ரீபாத தீர்த்தமாகப் பெருகித் தேவலோகத்திலிருந்த ஆகாயகங்காநதியை, ஸூர்யகுலத்துப் பகீரத சக்ரவர்த்தி கபிலமுனிவனது கண்ணின் கோபத்தீக்கு இலக்காகி உடலெரிந்து சாம்பலாய் நற்கதியிழந்த தனது மூதாதையரான ஸகர புத்திரர் அறுபதினாயிரவரை நற்கதிபெறுவிக்கும் பொருட்டு நெடுங்காலந் தவஞ்செய்து மேலுலகத்திலிருந்து கீழுலகத்துக்குக் கொணர்கையில், அவனது வேண்டுகோளாற் சிவபிரான் அந்நதியை முடியின் மேல் ஏற்றுச் சிறிது சிறிதாகப் பூமியில் விட்டனன். ... ... (10)

## 11. பரசுராமாவதார வரலாறு.

உலகத்தில் எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத்திரிந்து கொடுமை இயற்றி வந்த க்ஷத்திரிய வம்சங்கள் பலவற்றை நாசஞ் செய்தற் பொருட்டு நாராயணமூர்த்தி ஜமதக்நி முனிவரது மனைவியான ரேணுகையிடம் இராமனாய்த் திருவவதரித்துப் பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனாற் பரசுராமனென வழங்கப்பெற்று வருகையில், ஒருநாள் கார்த்தவீர்யார்ஜுநனும் அவனது குமாரர்களும் ஜமதக்நியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப் புகுந்தகாலத்து, அங்கே அம்முனிவனது ஹோமதேநுவானது வேண்டின வஸ்துக்களையெல்லாம் யதேஷ்டமாக அளித்துக்கொண்டிருப்பதைக் கண்ட இவர்கள் அப்பசுவைக் கொள்ளைகொள்ளவிரும்பி அதனைக்கவர்ந்து அம் முனிவனையுங் கொன்றிட்டது காரணமாக (பரசுராமன்) அக்கார்த்தவீர்யார்ஜுநனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அதனாலேயே க்ஷத்திரியவம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டான். இப்பரசுராமன் ஏழுசிரஞ்சீவிகளில் ஒருவன். இவனது வலிமையும் வெற்றியும் அற்புதமானது. சிவபிரானது கைலாஸகிரியைப் பெயர்த்தெடுத்த இராவணன் மிகவலியவனென்றும், அவனிலும் கார்த்தவீரியன் வலியவனென்றும் அவனிலும் பரசுராமன் வலியவனென்றும் இதிகாஸங்களால் விளங்கும். சிவனோ விஷத்தையுண்டு கங்கையைத்தரித்து மேரு வில்வளைத்துத்

திரிபுரமெரித்து மன்மதனை நீறு படுத்தி யமனையுதைத்து ஸம்ஹாரத் தொழில்நடத்தும் பேராற்றலையுடைய உக்ரமூர்த்தியாவான்; அக்கடவுள் வீற்றிருக்கின்ற கைலாஸகிரியை இராவணன் ஒருகால் வேரோடு பெயர்த்தனன்; அங்ஙனம் மிகவலியவனும் திக்விஜயஞ் செய்து திக்கஜங்களையும் வென்ற இராவணனைக் கார்த்தவீர்யார்ஜுநன் கட்டிச் சிறையி லிட்டனன்; அன்னவனைப் பரசுராமபிரான் தோள் துணித்துத் தொலைத்திட்டனனென்றால் இவனது ஆற்றல் பேச்சுக்கு நிலமன்றே. எம்பெருமானது தசாவதாரங்களுள் ஆறும் அவதாரமாயிருப்பவனான பரசுராமன் ஏழாமவதாரமான தசரதராமன்மீது கோபித்தலும், இவ்விருவரும் ஒருவரோடொருவர் போர்செய்தலும், ஒருவர் மற்றொருவரை வெல்லுதலும் பொருந்துமோவெனின்; துஷ்டர்களாய்க் கொழுத்துத் திரிந்த அரசர்களைக் கொல்லும் பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்திவிசேஷமானது அக்காரியம் முடிந்தபின்பு அவ்விஷ்ணுவின் அம்சாவதாரமான தசரதராமனுற் கவர்ந்து கொள்ளப்பட்ட தாகையால் பொருந்துமென்க. இதனுல் ஆவேசாவதாரத்திற்காட்டிலும் அம்சாவதாரத் திற்கு உள்ள ஏற்றம் விளங்கும்.

ஸ்ரீமந்நாராயணனது விபவாவதாரங்கள் அளவற்றவை; அவை முக்கியம் அமுக்கியம் என இருவகைப்படும். இவற்றில் முந்தியது சிறந்தது. பிந்தியது அதனிலும் தாழ்ந்தது. முக்கியமாவது ஸாக்ஷாதவதாரம். அமுக்கியமாவது ஆவேசாவதாரம். ஆவேசம் ஸ்வரூபா வேசமென்றும் சக்தியாவேசமென்றும் இருவகையதாம். ஸ்வரூபாவேசமாவது—சேதநரு டைய சரீரங்களில் எம்பெருமான் தன்னுடைய ரூபத்துடன் ஆவேசித்து நிற்பது. பரசுராமன், பலராமன் போல்வார் இத்திறத்தார்கள். சக்தியாவேசமாவது-சேதநர்பக்கல் காரிய காலத் திலே எம்பெருமான் சக்திமாத்திரத்தால் தோன்றி விளங்குதல். கார்த்தவீர்யார்ஜுநன், அர்ஜுநன், வியாஸர்போல்வார் இத்திறத்தார். இவற்றில், சக்தியாவேசத்தைவிட ஸ்வரூபா வேசம் பிரபலம். இவற்றின் உண்மை நிலையை விஷ்வக்ஸேநஸம்ஹிதை முதலிய ஸ்ரீபாஞ்ச ராத்ரஸம்ஹிதைகளிலும் தத்வத்ரயத்திலும் அதன் வியாக்கியானத்திலும் பரக்கக் காண லாம். பரசுராமாவதாரம் ஸ்வரூபாவேசாவதாரம்.

முமுக்ஷுக்களுக்குப் பரசுராமாவதாரம் உபாஸனைக்கு உரியதன்றாகிலும் விரோதி களைக் களைந்தொழித்த உபகாரத்துக்குத் தோற்றுத் துதிப்பது மாத்திரமுண்டு. "வென்றிமா மழுவேந்தி முன் மண்மிசை மன்னரை மூவெழுகால் கொன்ற தேவா" என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்வதும், "மன்னடங்க மழுவலங்கைக்கொண்ட விராமநம்பீ" என்று பெரியாழ்வா ரருளிச் செய்வதும், "கோக்குலமன்னரை மூவெழுகால் ஒரு கூர்மழுவால், போக்கிய தேவனைப் போற்றும் புனிதன்......இராமாநுசன்" என்று அமுதனார் (இராமாநுச நூற்றந் தாதியில்) அருளிச்செய்வதும் விரோதி நிரஸநஸ்வபாவத்துக்குத் தோற்றுத் துதித்த மாத்திரமேயென்க. ... ... ... (11)

# ஸ்ரீ ராமாவதார வைபவ ஸங்க்ரஹம்

## 12. ஸ்ரீராமாதிகளின் திருவவதாரம்

தசரத சக்ரவர்த்தி புத்ரகாமேஷ்டி செய்ய, அந்த யஜ்ஞஸமாப்தி ஸமயத்தில் அக்நி புருஷன் நான்முகனுடைய நியமநம்பெற்று ஸ்வர்ணபாத்திரத்தில் பாயஸத்தைப் பூரித்துக் கொண்டுவந்து யஜ்ஞகுண்டத்தில் கிளம்பித் தசரதனுக்கு அப்பாயஸத்தைக் கொடுத்தான்.

தசரதனும் அப்பாயஸத்தை மிக்க மனமகிழ்ச்சியுடன் வாங்கி இரண்டுபாகமாக்கி ஒருபங்கைத் தன் ப்ரதாநமஹிஷியான கௌஸல்யைக்குக் கொடுத்து, இரண்டாவது பாகத்தை இரண்டாக்கி ஒன்றை ஸுமித்ரைக்குக் கொடுத்து மற்றொரு பாகத்தையும் இரண்டாக்கி அதில் ஒன்றைக் கைகேயிக்குக்கொடுத்து மிகுந்ததை மீண்டும் ஸுமித்திரைக்குக் கொடுத்துவிட்டு யஜ்ஞத்தை ஸாங்கமாகச் செய்துமுடித்து அவப்ருத ஸ்நாநஞ்செய்து, ருத்விக்கு முதலியவர்களைக் கிரமப்படி ஸம்மானித்து விடை கொடுத்தான். அதுமுதல் கௌஸல்யை முதலானோர் மூவரும் கர்ப்பலக்ஷணங்களைத் தரித்து மிக்க புகரை யுடையவர்களாய் விளங்கிவந்தனர். அக்காலத்தில் பகவான் தான் தேவர்களுக்குக் கொடுத்திருந்த வரத்தைத் தலைக்கட்டுகைக்காகத் தான் கௌஸல்யையின் கர்ப்பத்தில் ப்ரவேசித்தான். "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்" என்றபடி பகவானுக்கு அவ்வக்காலங்களுக்கு உரிய கைங்கரியங்களை நடத்திக்கொண்டு எப்பொழுதும் இணைபிரியாதிருக்கிற ஆதிசேஷன் ஸுமித்திரையின் கர்ப்பத்தில் பிரவேசித்தான். எப்போதும் பகைவரை வென்றுகொண்டு பகவானது திருக்கைமீது பொலிந்து வாழ்கின்ற ஸுதர்சந பாஞ்சஜந்யாழ்வார்கள் இருவரும் கைகேயியின் கர்ப்பத்தில் பிரவேசித்தனர்.

இப்படி பதினொரு திங்கள் கழிந்தபின்னர் பன்னிரண்டாவது திங்களாகிய சித்திரை மாதத்தில் சுக்லபக்ஷ நவமி கூடிய புநர்வஸு நக்ஷத்திரத்தில் கர்க்கட லக்நத்தில் பராத்பரனாகிய எம்பெருமான் (ஸ்ரீராமனாகி) ஸ்ரீகௌஸலையாருக்குக் குமாரனாகத் திருவவதரித்தான். புஷ்ய நக்ஷத்திரத்தில் கைகேயிதேவியினிடத்தில் பரதனும், ஆயில்யத்தில் ஸுமித்ரா தேவியிடத்தில் லக்ஷ்மணனும், மகத்தில்அந்த ஸுமித்ரா தேவியிடத்தில் சத்ருக்நனும் அவதரித்தனர். இப்புத்ர ஜந்மோத்ஸவத்தை மேலுலகத்தவர்களும் நிலவுலகத்தவர்களும் மிக்க சிறப்பாகக் கொண்டாடினர். பிறகு தசரதமகாராஜன் அப்புதல்வர்கட்குக் குலகுருவாகிய வஸிஷ்டரைக் கொண்டு விதிபூர்வமாக அவ்வக்காலங்களில் ஜாதகர்ம நாமகரணம் முதலிய வைதிகச் சடங்குகளை நடத்திவந்தனன். அந்த ராஜ குமாரர்களும் சுக்லபக்ஷத்துச் சந்திரன்போல நாள்தோறும் கலைகளினால் நன்கு விளங்கினர். தாய்தந்தையரும் மற்றுமுள்ள ப்ரஜைகளும் ஆநந்தத்தின் எல்லையிலே நின்றனர். இக்குமாரர்கள் வேதங்களை ஸாங்கோபாங்கமாகக் கற்று தநுர் வித்தையில் ஒப்புயர்வற்றதேர்ச்சியைப் பெற்றனர். (12)

## 13. விச்வாமித்ர யாகஸம்ரக்ஷணம்

தாசரதிகள் இங்ஙனே வளர்ந்துவருங் காலத்தில், ஒருநாள் விச்வாமித்ர மஹர்ஷி தசரதனிடம் வந்து, தான் ஸங்கல்பித்திருக்கும் யாகத்தை இடையூறின்றி நிறைவேற்றுதற்பொருட்டு இராமபிரானை இலக்குமணனோடு கூட்டித் தன்னுடன் அனுப்புமாறு கேட்டுக்கொண்டார்; அச்சொல்லைக்கேட்ட தசரதன் நஞ்சுதீற்றிய நாராசத்தினால் அடியுண்டவன்போல மிகவருந்தி மறுமொழிகூறமாட்டாது மனமழிந்து நெடும்போது கழித்துத் தெளிந்து "ஓ! மஹர்ஷியே! நான் அறுபதினாயிரம் வருஷம் மலடிருந்து இப்பொழுதுதான் இவ்வருமந்த பிள்ளைகளைப் பெற்றேன்; இவர்களை ஒரு க்ஷணகாலமாகிலும் காணேனாகில் நான் உயிர் துறந்திடுவேனே; அதுவுமன்றி இவர்கள் சிறுகுழந்தைகள்; யுத்தத்திற்கு உரியபருவம் இல்லை; வருத்தம் பொறுக்ககில்லாத ஸுகுமாரர்கள்; இவர்களை அழைத்துக்கொண்டு போவதனால் உமக்கு யாதொரு பயனும் விளையாது. அந்த முரட்டு அசுரர்களோடு போர் செய்யவல்ல நான் படைகளைத் திரட்டிக்கொண்டுவந்து அவர்களை வென்று வேள்வியை நிறைவேற்றுவிக்கிறேன். என்னிடம் அருள்கூர்ந்து இச்சிறுவர்களை மறந்துவிடும்" என்று வெகு நயப்புடனே கேட்டுக்கொண்டான். பிறகு விச்வாமித்திரன் 'ஓ அரசனே! இவர்களுடைய வல்லமையை நான் அறிவேன்; என்னைப்போன்ற மற்றவர்களும் அறிவார்கள்;

உனக்கு இவர்களுடைய மஹிமை தெரியாது. தெரிந்துகொள்ளவேணுமாகில் உன்னுடைய நன்மையையே நாடிநிற்கும் இந்த வஸிஷ்டபகவானைக் கேள்' என்றார். இப்படி இருவரும் பேசிக்கொண்டிருக்கையில் வஸிஷ்டபகவான், 'ஓ வேந்தனே! விச்வாமித்திரர் சொல்வது உண்மையே; அவர் உன் பிள்ளைகளுக்கு நன்மையை விளைவிக்க நினைத்து உன்னிடம் வந்து இவர்களை யாசிக்கிறார்; ஒரு குறையும் நேரிடாது; நன்மைகள் நன்குமிகும்; ஆகையால் இவருடன் உன்பிள்ளைகளை அனுப்பிவிடு' என்று போதித்தனர். அதைக்கேட்டு அரசன் மனக்கவலை தீர்ந்து ராமலக்ஷ்மணர்களை அழைத்து விச்வாமித்ர மஹர்ஷியிடம் அர்ப்பணம் செய்துவிட, அம்மஹர்ஷி இருவரையும் கூட்டிக்கொண்டு போகையில் இவர்களுக்கு இளைப்பு உண்டாகாமைக்காக **'பலா அதிபலா'** என்கிற இரண்டுவித்யைகளை உபதேசித்து அழைத்துக்கொண்டு போகும்வழியில் தாடகையென்ற ஓர் அரக்கி பெருங்கூச்சலிட்டுக்கொண்டு ஓடிவந்து வழியைத் தகைந்து வெருட்டிக்கொண்டு எதிரே பயங்கரமான உருவங்கொண்டு மலைபோல் நின்று இவர்களைக் கொல்லக்கருதினள். மாமுனிவர் ஒரு உங்காரத்தினால் அவளைத்தகைந்து ஸ்ரீராமனை ஏவ, இராகவன் மஹர்ஷியின் நியமநத்தினால் ஸ்த்ரீ என்று பாராமல் அந்நொடியிலே வில்லை வளைத்து நாணேற்றி அம்புதொடுத்து அவ்வரக்கியின் மீது எய்து அவளை உயிர் தொலைத்திட்டான். பின்பு விச்வாமித்திரர் இராமபிரானுக்குச் சில அஸ்த்ரங்களை உபதேசித்துத் தனது ஸித்தாச்ரமம்சேர்ந்து யாகஞ்செய்யத் தொடங்குகையில், அதனையறிந்த தாடகையின் பிள்ளைகளாகிய ஸுபாஹு, மாரீசன் என்கிற இருவரும் சில துஷ்டர்களுடன் வந்து யாகபூமியில் மாம்ஸம் முதலிய அசுத்தவஸ்துக்களை இறைக்கத் தொடங்கினர். அப்போது ராமலக்ஷ்மணரிருவரும் ஆடையை இறுக்கிக் கட்டிக்கொண்டு மிக்கபரபரப்புடன் ஆகாயத்தை நோக்கி வில்லை வளைத்து அம்புகளைப் பொழிந்து ஸுபாஹுவைக் கொன்று மாரீசனை ஓரம்பினால் கடலின் நடுவேதள்ளியழுத்தி மற்றவர்களைச் சிந்நபிந்நமாக அடித்து விழவிட்டு நிர்விக்நமாக யாகத்தை நிறைவேற்றுவித்தனர். பிறகு விச்வாமித்திரர் அவபிரதம் நீராடிப் பூரணகாமராயினர். யாகத்திற்காக வந்திருந்த ரிஷிகளும் தத்தம் இருப்பிடம்போய்ச் சேர்ந்தனர்.

## 15. ஸீதா விவாஹம்

இராமபிரானுடைய அவதார ரஹஸ்யமறிந்த மஹாநுபாவராகிய விச்வாமித்திரர், எம்பெருமானை எக்காலும் இணைபிரியாத பூமகளார் ஜநகமஹாராஜனுடைய யஜ்ஞவாடத்தில் அயோநிஜையாய் அவதரித்து வளர்ந்துவருகிற ஸீதாபிராட்டியை இராமனுக்கு விவாஹஞ் செய்துவைத்து க்ருதார்த்தராகக்கருதி இருவரையுங் கூட்டிக்கொண்டு மிதிலா நகரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் ஜநகனை நோக்கி 'நீர் கந்யாசுல்கமாக வைத்திருக்கிற வில்லை இராமனுக்குக் காட்டும்' என்ன; ஜநகன் சென்று ருத்ரனுடையதாகிய அவ்வில்லைப் பூஜித்து எடுத்துக்கொண்டுவந்து இராமன்முன்னே நிறுத்தி 'நான் யாகஞ்செய்கைக்காகப் பூமியை உழுங்காலத்தில் அந்தப்பூமியில் மிக்க அழகுவாய்ந்தவளாய் ஸகல லக்ஷண ஸம்பந்நையாய்த் திருமகள் போன்றவளான ஒருமகள் கிடைத்தாள்; அவளை நான் வெகு ஆதரத்துடன் எடுத்துக்கொண்டு வந்து உயிரோடொப்ப வளர்த்துவருகிறேன். அவள் இப்போது விவாஹத்துக்கு உரிய வயது உடையவளாயினள். இவளுக்குத் தக்க வரனைக் காணுமல் இவ்வில்லை நாணேற்றும் மஹாபுருஷனுக்குத் தாரைவார்த்துக் கொடுப்பதாக நிச்சயித்தேன், இதைப் பலர் வந்து பார்த்து அசைக்கவும் முடியாமல் மீண்டு போயினர்' என்றுரைத்தான்.

அதைக்கேட்டு ஸ்ரீராகவன் எழுந்து முனிவருடைய ஆஜ்ஞையைப் பெற்றுக் கொண்டு அந்த வில்லையெடுத்து அவலீலையாக நாணேற்றும்போது அந்தவில் இராமனுடைய பலத்தைப் பொறுமல் முறிந்து வீழ்ந்தது. அதனால் ஸ்ரீராகவனுடைய மஹிமையை ஒப்புயர்வற்றதாக ஜநகமஹாராஜன் அறிந்து இவரை மஹாபுருஷனென்று அறுதியிட்டு ஸீதாதேவியை இராமனுக்குக் கொடுத்து விவாஹம் செய்விப்பதாக ப்ரதிஜ்ஞை பண்ணி, தனது கர்ப்பத்தில் உதித்த ஊர்மிளையை லக்ஷ்மணனுக்குக் கொடுப்பதாகவும் நிச்சயித்து, தசரதமஹாராஜனுக்கு மணவோலை எழுதிவிட்டு மிதிலாபுரியில் விவாஹ கோலங் கோடித்தான். தசரத சக்கரவர்த்தி திருமணப்பத்திரிகையைக் கண்டு மிக மகிழ்ந்து பரத சத்ருக்ந ரிருவரையுங் கூட்டிக்கொண்டு புரோஹிதர் மந்திரிகள் முதலிய பரிவாரங்களுடன் பத்நீஸமேதனாய்ப் புறப்பட்டு மிதிலை சேர்ந்து ஜநகனால் பூஜிக்கப் பெற்று, மஹாராஜன் நேரில் மொழிந்த இராமனது வைபவத்தையும் ஸீதாதேவியின் மஹிமையையும் இவ்விருவர்கட்கும் விவாஹம் செய்விக்க முயன்றதையும் ஆனந்தமாகக்கேட்டு ஸ்ரீராமலக்ஷ்மணர்களைத் தழுவிக்கொண்டு உச்சிமோந்து ஜநகனை மிகவுங் கொண்டாடி, குசத்வஜருடைய பெண்களாகிய மாண்டவி, ச்ருதகீர்த்தி என்பவர்களை பரதசத்ருக்நர்களுக்குக் கொடுப்பதாக நிச்சயித்தபடியையுங் கேட்டுப் பிள்ளைகள் நால்வர்க்கும் கோதாநவ்ரதத்தை ஸாங்கமாக நடத்தினபின் விவாஹமஹோத்ஸவம் இனிது நடைபெற்றது.

## 17. பரசுராம பங்கம்

பின்பு தசரதசக்ரவர்த்தி புத்திரர்கள் நால்வரையும் மணாட்டுப்பெண்களுடன்கூட அழைத்துக்கொண்டு ஸபரிவாரமாகப் புறப்பட்டு அயோத்திக்கு மீண்டுவருங்கால் இச்செய்திகளையெல்லாம் அறிந்த பரசுராமன் வெகு கோபத்துடன் எதிர்வந்து ஸ்ரீராமனை நோக்கி 'ஓ பாலனே! நீ ஒரு சொத்தை வில்லை முறித்துத் தன்னைப் பலவானாக நினைத்துச் செருக்கியிருக்கிறாய்; அஃது ஒரு பொருளல்ல; நீ ஆண்பிள்ளையாகில் இவ்வில்லை முறி, பார்ப்போம், என்று தன் கையிலுள்ளதொரு வில்லைத் தந்தார். அதை இராமன் அவலீலையாக வாங்கி நாணேற்றி அம்பு தொடுத்துக் கோபத்துடன் 'ஓபரசுராமா! உம்மை அந்தணனென்று பொறுத்தேன்; ஆகையால் உம்மைக் கொல்லவில்லை; இந்த அம்புதொடுப்பு வீணாகப்போகாது; இவ்வம்பு கொண்டு, நீர் தபோபலத்தினால் ஸம்பாதித்திருக்கும் லோகங்களையாவது அழித்துவிடுகிறேன்; அல்லது உம்முடைய அந்தரிக்ஷத்தில் வாயுவேகமாய்ப் போகிற வழியையாவது அழித்துவிடுகிறேன்; இவ்விரண்டில் உமக்கு எது இஷ்டம்?' என்று கேட்க, பரசுராமன் 'நீர் ஸாக்ஷாத் விஷ்ணுவே; மற்றொருவனால் இது நாணேற்ற முடியாது; நான் இப்பூமியைக் காச்யபருக்குக் கொடுக்கும்போது அவர் என்னை இப்பூமியிலிருக்கக்கூடாதென்று சபதம்பண்ணி வாங்கிக்கொண்டாராகையால் நான் இந்நிலத்தில் அடிவையாமலே மஹேந்திரத்திற்குப் போய்விடுகிறேன்; இனி இவ்வம்பை என்னுடைய லோகங்களில் விட்டுவிடும்' என்று வெகு தீநஸ்வரமாய்ச் சொல்ல, இராகவனும் அப்பாணத்தினால் அவருடைய லோகங்களை அழித்துவிட்டார். பின்பு பரசுராமன் ஒளிமழுங்கி மஹேந்திரத்திற்குப் போய்விட்டான். முன் மூவெழுகால் மன்னரைக் கொன்ற மழுவேந்திய பரசுராமனைக் கண்டு 'நம் பிள்ளைகளுக்கு என்ன தீங்குவருகிறதோ!' என்று திகிலடைந்து மூர்ச்சித்திருந்த தசரதன் பயந்தீர்ந்து மகிழ்ந்து யதாக்ரமமாக அயோத்தி எய்தி நெறி வழுவாது ராஜ்ய நிர்வாஹம் செய்துகொண்டு வந்தான். திருக்குமாரர்கள் நால்வரும் தங்கள் தங்கள் மனைவிகளுடன்கூடி உல்லாஸமடைந்து இனிமையாக வாழ்ந்து வந்தனர்.

## 18, 19. இராமனுக்கு முடிசூட்ட முயற்சியும் கைகேயி வரம் வேண்டலும்:

தசரதாத்மஜர்களுக்கு விவாஹமான பின்பு கேகயராஜனுடைய மகனாகிய 'யுதாஜித்' என்பவன் தன்னுடைய மருமகனாகிய பரதனைத் தன் தேசத்துக்கு அழைத்துக்கொண்டு போனான். அந்தப் பரதனிடத்தில் மிக்க அன்புற்ற சத்ருக்நன் பரதனைவிட்டு நொடியளவும் பிரியமாட்டாத தன்மையனாகையாலே தானும் அவருடன் கூடவே பரிசர்யை பண்ணிக் கொண்டு கேகயதேசம் சென்றான். தசரதசக்ரவர்த்தி வயது முதிர்ந்தவனாகையால் ராஜ்ய பாரத்தை ஸ்ரீராமபிரானிடம் ஒப்புவித்துத் தான் ஸுகமாகக் காலக்ஷேபம் பண்ணிவரக் கருதி மந்திரிகளையும் புரோஹிதர்களையும் ப்ரஜைகளையும் திரட்டித் தன்மனக்கருத்தை வெளியிட்டான். அதைக்கேட்டு அனைவரும் அளவற்ற ஆநந்தமடைந்து 'ஓ அரசரே! நீர் எங்களை இது வரை வெகு ஒழுங்காகவே ஆண்டுவந்தபோதிலும் எங்கள் மனம் உம்முடைய பிள்ளை பக்கலிலேயேஊன்றியழுந்திக் கிடக்கிறது. அவருடைய குணங்கள் எண்ணிறந்தவை; எங்களுடைய பாக்கியத்தினால்தான் அவரை முடிசூட்ட உமக்குக் கருத்து உண்டாயிற்று. ஆநந்தம்! பரமாநந்தம்!!; விரைவில் தானே இக்கருத்தை நீர் நிறைவேற்றவேண்டும்' என்று தங்கள் ஆசையை அறிவித்தனர். அரசன் அதைக்கேட்டுக் களித்து அடுத்த புஷ்ய நக்ஷத்திரத்தில் இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய நிர்ணயித்தான். கோஸலநாடு முழுதும் ஒரே ஆநந்தமயமாகக்கிடக்கிறது. விசித்திரமான நகராலங்காரங்கள்நடைபெறுகின்றன.

பிறகு கைகேயி மந்தரையின் கலஹச்சொற்களைக் கேட்டு மனங்கலங்கி இராமனுடைய திருவபிஷேக மஹோத்ஸவத்தைக் கலைத்துவிடக்கருதி, அரசனே! நீர் முன்பு ஒரு காலத்தில் சம்பராஸுரனோடு போர்புரியப்போனீர்; அப்போது உம்முடைய தேரை நடத்தவல்ல பாகனில்லாமையால் நான் இருந்து உமக்கு வெற்றியுண்டாகும்படி தேரை நடத்தினேன். அதனால் நீர் அந்தச் சம்பராஸுரனை வென்று என்மீது மகிழ்ச்சியுற்று 'உனக்கு இரண்டு வரம் தருகிறேன்; உனக்கு இஷ்டமானதை வேண்டிக்கொள்' என்று எனக்குச் சொன்னீர்; அதற்கு நான் அவ்வரங்களை வேண்டும்போது மற்றொரு ஸமயம் பெற்றுக்கொள்வதாகச் சொல்லியிருக்கிறேனன்றோ? அவ்விரண்டு வரங்களையும் இப்போது எனக்குத் தரவேணும்; இராமனுக்கு இவ்வபிஷேகத்தைத் தவிர்த்துத் தபஸ்வி வேஷத்துடன் அவனைக் காட்டுக்கு அனுப்பவேணுமென்பது முதல்வரம்; என் பிள்ளையாகிய பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்விக்கவேணுமென்பது இரண்டாவது வரம். ஸத்யம் தவறாத நீர் இதைத் தவறவொண்ணாது. தவறினால் நான் உயிரை விட்டிடுகிறேன்' என்றாள். சக்கரவர்த்தி இக்கொடுஞ் சொல்லைக்கேட்டு இடி விழுந்தவன்போல மூர்ச்சித்துக் கிடந்து சிறிதுநேரங் கழித்து ப்ரஜ்ஞையடைந்து கண்கள் சுழன்று கண்ணீர்வழிந்து உடலம் விதிர்விதிர்த்து நாத்தழதழத்து தீனஸ்வரத்துடன் பலவும்பேசி, முடிவாக இராமபிரானைக் காட்டுக்குப் போக்க நேர்ந்தது.(19)

## 20. வனவாஸப் புறப்பாடும் குஹனுக்கு அருள் செய்தலும்

பிராட்டியையும் இளையோனையுங் கூட்டிக்கொண்டு ஸ்ரீராமன் சக்கரவர்த்தியிடஞ் சென்று 'நாங்கள் மூவரும் வநவாஸம் போகிறோம்; விடை கொடுக்கவேணும்' என்று பாதங் களிற்பணிந்து கைகூப்பிப் பிரார்த்திக்க, கைகேயி இவர்களுக்குக் காய்கிழங்குகள் வெட்டி வைத்துக்கொள்ளக் களைக்கொட்டும் சிறிய கூடையும் உடுக்க மரவுரியும் கொண்டுவந்து வைத்தாள். அம்மரவுரியை அவர்கள் மூவரும் அணிந்துகொண்டு ஆபரணங்களையும் பீதாம்பரங்களையும் விட்டுவிட்டு நிற்கக்கண்டு அந்தப் புரத்திலுள்ள ஜனங்களெல்லாம் கண்ணீர் விட்டுக் கூக்குரலோடு புலம்பின. பின்பு சக்கரவர்த்தியினது கட்டளையின்படி ஸுமந்

திரன் கொண்டு நிறுத்தின தேரின்மேலேறி இம்மூவரும் அயோத்தியை விட்டுத் தென் திசை நோக்கி நடந்தார்கள். தசரதன் பரிஜநங்களுடன் சிறிதுதூரம் வந்து அத்தேரைப் பார்த்துக்கொண்டிருந்து தேர் கண்ணுக்கு மறைந்தவுடனே புலம்பிக்கொண்டு திரும்பி வந்து அரண்மனையை அடைந்தான். நகரத்து ஜனங்களெல்லாம் ஸ்ரீராகவனுடன் கூடவே காடுசெல்ல நிர்ணயித்து அத்தேரைப் பின்தொடர்ந்து சென்று, அன்றிரவு தேரை ஓரிடத்தில் நிறுத்த, அதைச்சுற்றி அனைவரும் படுத்துக்கொண்டு உறங்குகிற ஸமயத்தில் இராகவன் ஸுமந்திரனை ஏவித் தேரைப் புல்மூடிக்கிடந்த வழியல்லா வழியே நடத்திக்கொண்டு வெகுதூரஞ் சென்று சிருங்கிபேரமென்ற ஊரை அடைந்தனர். கூட வந்திருந்து வழியிடையே உறங்கிப்போன ஜனங்கள் காலையில் விழித்துக்கொண்டு தேரைக் காணாமல் சிறிது தூரஞ்சென்று தேடித் தேர்போன வழியையும் அறியாதே 'இராமபிரான் நம்மை வஞ்சனை செய்து விட்டுப்போனார்' என்று சொல்லி வருந்திக்கொண்டு தத்தம் வீடேற வந்து சேர்ந்தனர். பின்பு இராமனும் இளையவனும் மரப்பாலை விட்டுத் தலைமயிரைச் சடையாகக் கட்டிக்கொண்டு அந்த சிருங்கிபேரபுரத்தில் நின்றும் புறப்பட்டுக் கங்கைக் கரையில் வந்து தேரை விட்டிழிந்து ஸுமந்திரனுக்கு விடை கொடுத்துவிட்டு, அங்கிருந்த வேடர் தலைவனாகிய குஹனென்பவனுடன் நேசித்து அவன்கட்டின தெப்பத்திலேறிக் கங்காநதியைத் தாண்டி, மறுநாள் பரத்வாஜ மஹா முனிவருடைய ஆச்ரமத்துக்குச் சென்று அவரைப் பணிந்து, அம்மஹா முனிவர் மிக ஆதரத்துடன் செய்த ஸத்காரங்களை ஏற்று அங்கு நின்றும் புறப்பட்டு அம்முனிவர் காட்டிக்கொடுத்த வழியே சென்று, அதிவிசித்திரமாய் அதிரமணீயமாயிருந்துள்ள சித்ரகூட பர்வதத்தையடைந்து அம்மலைச்சாரலில் மூவரும் இனிமையாக வஸித்துக்கொண்டிருந்தனர். (20)

## 21. பரதன் இராமனை அழைத்துவரச் சென்று பாதுகைபெற்று மீளுதல்.

ஸுமந்த்ரன் முதலிய மந்த்ரிகளும் வஸிஷ்டர் முதலிய ரிஷிகளும் சேர்ந்து பரதனை ஸபையில் வருவித்து 'ஓ ராஜகுமாரனே! சக்ரவர்த்தி பரலோகமடைந்தார்; ஸ்ரீ ராமன் கானகமே மிக விரும்பிப்போந்தான்; அரசனற்ற நாட்டில் நியாயம் நடவாது; மழை பெய்யாது; துர்ஜநங்கள் ஸாதுஜநங்களைப் பீடிப்பர்கள்—இவை முதலான பல தீங்குகள் விளையும்; ஆகையால் நீர் பட்டாபிஷேகஞ் செய்துகொள்ளவேணும்' என்று சொன்னார்கள். பரதன் கர்ணகடோரமான அப்பேச்சைக்கேட்டு 'ஓ வஸிஷ்டமஹரிஷியே! நீ எல்லாமறிந்திருந்து இங்ஙனம் சொல்லலாமா? இவ்வம்சத்தில் மூத்தாரிருக்க இளையார் முடிசூடுவதுண்டா? இதற்கு மேற்பட்ட அநீதியுண்டோ? இதற்கு நான் இசைந்தேனாகில் எனக்கு மேற்பட்ட கள்ளன் உண்டோ? நன்று சொன்னீர்கள்? இது ஒருநாளும் நடவாத காரியம்; நான் இப்போதே இராமபிரானெழுந்தருளி யிருக்குமிடம் விடைகொண்டு அவரை வணங்கி வேண்டி மீட்டுக் கொண்டுவரப்போகிறேன்' என்று சொல்லி ஸகல பரிஜனங்களையும் திரட்டிக்கொண்டு போவதற்காக் வழிகளைச் செப்பனிடும்படி கட்டளையிட்டு, தாய்மார்களையும் வஸிஷ்டாதிகளையும் ஸுமந்த்ராதிகளையும் மற்றுமுள்ள பரிஜநங்களையும் கூட்டிக்கொண்டு சத்ருக்நனும் தானுமாய்ப் புறப்பட்டு ஸ்ரீராமன்சென்ற வழியைப் பிடித்துக்கொண்டு சென்று சித்திரகூடமலைச்சாரலில் சென்று சேர்ந்து மிக்க பரபரப்புடன் இராமபிரானுடைய திருவடிவாரத்தில் வந்து வீழ்ந்து ப்ரலாபிக்க, இராமன் பரதனை எடுத்தணைத்துக்கொண்டு பரமப்ரீதியுடன் யோகக்ஷேமம் வினவி, சக்ரவர்த்தி பரலோகமடைந்ததைத் தெரிந்துகொண்டு மனம்வருந்தி மந்தாகிநிக்குப்போய் நீராடித் தர்ப்பணம் முதலிய மேற்காரியங்களை யெல்லாம் நடத்தி மீண்டும் தமது ஆச்ரமத்திற்கு வந்து சேர்ந்தவளவிலே, பரதன் பெருமானைத் திருவயோத்திக்கு எழுந்தருளும்படி பிரார்த்தித்துத் தன் மாதாவாகிய கைகேயியும் இதற்கு இசைந்தமையைச் சொல்லி, மற்றும் பல நியாயங்களையும் எடுத்துரைத்து, அப்படி எழுந்தருளாவிடில்

தான் அங்கேயே ப்ராயோபவேசம் செய்வதாகவும் சொல்ல, அதற்கு இராமபிரான் பித்ரு வாக்ய பரிபாலனத்தின் ஆவச்யகதையையும் அதனைத் தவறுவதால் விளையக்கூடிய பெருந் தீங்குகளையும் எடுத்துரைத்துப் பரதனுடைய வேண்டுகோளுக்காகத் தமது திருவடி நிலைகளைக்கொடுத்து 'இதைக்கொண்டு ராஜ்யம் செலுத்து' என்று நியமித்து விடைகொடுத் தார். பரதன் அப்பாதுகைகளைத் தன் முடிமீது தரித்துக்கொண்டு 'க்ருதார்த்தனானேன், தந்யனானேன்" என்று ஸந்தோஷ ஸம்ப்ரமங்களைப் பண்ணிக்கொண்டு தேரின்மேலேறிக் கூடவந்த பரிவாரங்களுடன் திரும்பி அயோத்தியுள்ளேபுகுதற்கு மனம்விரும்பாமல் அந்நகரத் தருகிலுள்ள நந்திக்ராமத்தில் ஸ்ரீராம பாதுகைகளுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துத்தான் தாபஸ வேஷங்கொண்டு வாஸஞ்செய்து கொண்டு அப்பாதுகைகளுக்குத் தான் மந்திரியா யிருந்து ராஜ்யநிர்வாஹஞ் செய்துவந்தான். (21)

## 22. காக விருத்தாந்தம்

சித்திரகூடமலைச்சாரலிலே பெருமாளும்பிராட்டியும் ஏகாந்தமாக இருக்கிறபோது இந் திரன் மகனான ஜயந்தன் பிராட்டியினழகைக்கண்டு அவளை ஸ்பர்சிக்கவேண்டுமென்னுந் தீய கருத்தினனாயும் மாம்ஸார்த்தியாயும் தேவ வேஷத்தை மறைத்துக் காக வேஷத்தைப்பூண்டு கொண்டுவந்து, பிராட்டியின் மடியிலே பெருமாள் பள்ளிகொண்டருளுகையில் பிராட்டியின் திருமார்பிற்குத்த, அவ்வளவிலே பெருமாள் உணர்ந்தருளி மிகக் கோபங்கொண்டு ஒரு தர்ப்பைப்புல்லை யெடுத்து அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தைப் பிரயோகித்து அதனை அந்தக் காகத்தின்மேல் மந்தகதியாகச் செலுத்த, அக்காகம் அந்த அஸ்த்ரத்திற்குத் தப்ப வழி தேடிப் பல விடங்களிலும் ஓடிச் சென்று சேர்ந்த விடத்தும் ஒருவரும் ஏற்றுக்கொள்ளாமை யாலே மீண்டும் பெருமாளையே சரணமடைய, அப் பெருமாள் அருள்கொண்டு அக்காகத் துக்கு உயிரைக்கொடுத்து அந்த அஸ்த்ரம் வீண்படாமல் காகத்தின் ஒரு கண்ணை அறுத்த வளவோடு விடும்படி செய்தருளினன். (இந்த வரலாறு பிராட்டியினால் அனுமானுக்கு ரஹஸ்யமான அடையாளமாய்ச் சொல்லப்படுவதாக ஸுந்தரகாண்டத்திலுள்ளது. இத னைப் பிராட்டிக்கு அனுமான் அடையாளமாகச் சொல்லுவதாய்ப் பெரியாழ்வார் திருமொழி யில் (3-10-6ல்) உள்ளது. அங்கே நமது திவ்யார்த்ததீபிகை காண்க.

## 23. விராதவதம்

ராமலக்ஷ்மணஸீதைகள் தண்டகாரணியம் சேர்ந்து பல மஹர்ஷிகளின் ஸத்காரங்க ளைப் பெற்று அவர்களிடம் நியமனம் வாங்கிக்கொண்டு அப்பால் ஓர் அரண்யத்திற்போகும் போது விராதனென்பானோர் அரக்கன் தன் சூலத்தில் பல மிருகங்களைக் குத்தியெடுத்துக் கொண்டு வந்து வழியில் இவர்களைப்பார்த்து விரைந்தோடிவந்து ஸீதையை எடுத்துத் தன் மடியில் வைத்துக்கொண்டு 'இவளை நான் பக்ஷித்துவிடுகிறேன்" என்று சொல்லித் தாசரதி களைப் பலவிதமாக நிந்திக்க அவர்கள் அவன்மேல் அம்புகளை எறிய அவன் பிராட்டியை விட்டுவிட்டு இவர்களைக் கொல்லக்கருதி இவர்கள்மேல் சூலம் முதலிய பல ஆயுதங்களைப் போட்டுக்கொண்டு வந்து இவ்விருவரையும் தனது தோளின்மேல் ஏற்றிக்கொண்டு போகை யில் இதைக்கண்டு பரிதபித்த பிராட்டியின் வருத்தம் தீருமாறு இருவரும் தங்கள்கத்தியை எடுத்து விராதனுடைய புஜங்களை வெட்டிவிட்டார்கள். இராமபாணம் பட்ட மஹிமையினால் விராதன் தனது பூர்வஜந்ம சரிதங்களை நினைத்துச் சொல்லிவிட்டு இவர்களுக்கு சரபங்கமா முனிவருடைய ஆச்ரமத்திற்கு வழிகாட்டிவிட்டுத் தான் சுவர்க்கமடைந்தனன். இராமலக்ஷ் மணர்கள் அங்கு ஓர் பெரிய குழிவெட்டி விராதனுடலை அதில் தள்ளித் தூற்றுவிட்டுப் பிராட்டியுடன் கூடச் சரபங்காச்ரமஞ் சென்று பஞ்சவடியும் சேர்ந்தார்கள். (23)

## 24. சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்தல்.

பஞ்சவடியில் எழுந்தருளியிருக்கும்போது ஹேமந்த காலத்தில் சூர்ப்பணகை யென்றொரு அரக்கி அழகிய வடிவமெடுத்து வந்து இராகவனைக்கண்டு காமவிகாரமடைந்து தன்னை மனைவியாகக் கொள்ளுமாறு விரும்ப, இராகவன் 'எனக்கு ஒரு மனைவி இருக்கிறாள்; என் தம்பியாகிய லக்ஷ்மணனை அடைந்தாயாகில் ஸுகமடையலாம்" என்று சொல்ல, அப்படியே அவள் லக்ஷ்மணனிடம் செல்ல, 'நான் ஒருவர்க்கு வேலைக்காரன்; என்னை அடைந்தால் நீயும் வேலைக்காரியாவாய்; ஆகையால் அவரையே அடைவது உனக்கு நலம்' என்று லக்ஷ்மணன் சொல்ல, இப்படி அங்குமிங்குமாய்த் திரிந்து இஷ்டத்தைப்பெறாமல், "நம் இஷ்டத்தை இந்த ஸீதை நிறைவேறவொட்டாமல் செய்கிறாளாகையால் இவளைத் தின்றுவிடுவோம்" என்று அவ்வரக்கி ஸீதாதேவியிடம் ஓட, உடனே இலக்குமணன் இராமபிரானது ஆஜ்ஞையினால் அவளைத்தகைந்து காதையும் மூக்கையும் அறுத்திட்டான் [இங்கே சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்தது இளையபெருமாளின் செய்கையாயினும் இதனை இராமபிரான் மேல் ஏற்றி அனுஸந்திப்பர் ஆழ்வார்கள், "சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு, அவள் ஆர்க்க அரிந்தானைப் பாடிப்பற" "கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கி" இத்யாதி அருளிச்செயல்கள் காண்க. இங்ஙனம் அருளிச்செய்வது—இராமனது கருத்துக்கு ஏற்ப அவன் கட்டளையிட்டபடி இவன்செய்தனனாதலின் ப்ரயோஜ்ய கர்த்தாவின் வினையாதல் பற்றியென்க. அன்றியும், "ராமஸ்ய தக்ஷிணோபாஹு:" என்றபடி இராமபிரானுக்கு லக்ஷ்மணன் வலத்திருக்கை எனப்படுதலால் அங்ஙனம் கையாகிற லக்ஷ்மணனுடைய செயலை ராமன் மேல் ஒற்றுமை நயம்பற்றி ஏற்றிச் சொல்லுதலும் தகுதியே. [பலராமன் செய்தருளிய ப்ரலம்பாஸுரவதத்தைக் கண்ணபிரான் செய்தருளியதாக அனுஸந்திப்பதும் இதுபோன்றதேயாம்.] ... ... ... ... (24)

## 25. கரதூஷணாதி வதம்.

சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு ஜநஸ்தானத்திலிருந்த தன் தமையனாகிய **கரன்** பக்கல் சென்று இச்செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கினாள். பிறகு அக்கரன் பதினாலாயிரம் ஸேநாதிபதிகளையும் பல ஸேனைகளையும், தூஷணன் த்ரிசிரஸ் என்பவர்களையும் இராமபிரானோடு போர் செய்ய அனுப்பினான். இராமன் அவர்களத்தனை பேரையும் தாம் ஒருவராகவே கொன்று வென்றிட, பிறகு இதனையறிந்த கரன் தானே நேரில் வந்து எதிர்க்க, இராமன் பிராட்டியை ஒரு மலைக்குகையில் வைத்து லக்ஷ்மணனைக் காவலிட்டு வந்து அக்கரனுடன் போர்செய்து, அகஸ்த்யர் கொடுத்த வைஷ்ணவ தநுஸ்ஸில் நாணேற்றிட்டு அம்பு தொடுத்துவிட்டு அவன் தலையை அறுத்துவிட்டு விஜயலக்ஷ்மியுடன் பிராட்டி பக்கல் செல்ல, அவள், அவ்வளவு சூரர்களையும் ஒருவராய் நின்று வென்றிட்ட தன் ப்ராணநாதரை, போர்க்களத்திற்பட்ட அம்புகளினாலுண்டான உள் வெதுப்பெல்லாம் ஆறும்படி வெகு மகிழ்ச்சியுடன் தழுவிக்கொண்டாள். ... ... (25)

## 26. இராவணன் மாரீசனோடு ஆலோசித்தலும் மாரீசன் மரணமடைதலும்.

ஜநஸ்தாநத்தில் இராமபாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளித்து ஓடிப்போன **அகம்பநன்** இலங்கைக்குச் சென்று ஜநஸ்தாநமடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ஒருவராலும் வெல்லமுடியாதவனென்பதையும் சொல்லி, 'ஸீதையை அபஹரித்துக்கொண்டு வந்தால் அந்த வருத்தத்தினால் இராமன் முடிந்துவிடக்கூடும்' என்றான். இராவணன் அவனது சொற்படியே 'ஸீதையைக் கொள்ளைகொள்ள உபாயமென்?' என்று யோசித்து

அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்து 'நீ எனக்கு ஒருதவி செய்ய வேணும்' என்று சொல்லித் தன் கருத்தை வெளியிட, அதுகேட்ட மாரீசன் 'அப்பா இராவணு! அந்த மஹாநுபாவனுடன் உனக்கு த்வேஷம் உதவாது; இந்த இராமன் சிறு பிள்ளையாயிருக்கும்பொழுதே விச்வாமித்ர யாகத்தில் அவனுடைய பாணத்துக்கு இலக்காகி நான் பட்டபாடு இன்னும் மறக்க முடியவில்லை; அத்திருநாமம் செவிப்படும்போதே என் உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே" என்று ஒழுங்காக உபதேசிக்க, அதைக்கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான். பிறகு சூர்ப்பணகை சென்று, தான் மூக்கறுப்புண்டபடியையும், தாசரதிகளுடைய ஸௌந்தர்ய பராக்ரமாதிகுண விசேஷங்கள் எல்லாகடந்திருக்கிறபடியையும், ஸீதையின் பெருமையையும்சொல்லி 'இராகவனை நீ எவ்விதத்திலாவது பங்கஞ் செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்லை' என்று கூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடம் சென்று நய பயங்களினால் அவனைத் தன் சொல்வழிப் படுத்திக்கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டு வந்து தானேரிடத்தில் ஒளித்திருந்தான். மாரீசன் பொன்மானின் வடிவெடுத்துக்கொண்டு ஸீதையின் பார்வையில் மேயத் தொடங்கினான். அப்பொன்மானை ஸீதை கண்டு அதைப்பிடித்துத் தர வேணுமென்று ஒரே பிடிவாதமாக இராமனிடம் சொன்னாள். அதற்கு இணங்கிய இராகவன் இளையோனைப் பிராட்டிக்குக் காவலாக வைத்துவிட்டுத் தான் வில்லையும் அம்புகளையு மெடுத்துக்கொண்டு மானின் பின்னேபோக, அந்தமான் கொஞ்சங் கொஞ்சமாக ஒதுங்கி ஒதுங்கிப்போய் அக்காட்டில் நெடுந்தூரம் இராகவனை இழுத்துக்கொண்டு போய்விட்டது. அப்பொழுது இராகவன் 'இவன் அரக்கன்' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனால் அடியுண்ட மாரீசன் மானுருவை விட்டு நிஜரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவனைப்போல் கூச்சலிட்டுக்கொண்டு மரணமடைந்தான்.

## 27. லக்ஷ்மணன் ஸீதையைப் பிரிந்து செல்லல்.

அந்தக் கூக்குரலை ஸீதாதேவி கேட்டு 'லக்ஷ்மணா! உன் தமையனாருக்கு அரக்கனால் ஏதோ தீங்கு நேரிட்டிருக்கிறது; அதனால் அவர் நம்மை நினைக்கிறார்; நீ விரைந்து சென்று ஆராய்ந்துவா' என்ன; அதற்கு லக்ஷ்மணன் 'அம்மா! இராமனுக்கு ஒரு தீங்குமில்லை பொன்மானாக வந்த ராக்ஷஸன் இராகவனால் கொல்லப்பட்டு அவரைப்போல் இப்படிக படமாகக் கூச்சலிடுகிறான்; உன்னை நான் தனியே விட்டுப்போனால் ராக்ஷஸர்களினால் உனக்கு ஏதாவது தீங்கு விளையும்; ஆகையால் நான் போகமாட்டேன்' என்ன; பிராட்டி இதைக் கேட்டு லக்ஷ்மணனை நோக்கி, சொல்லத்தகாத கடூரமான வார்த்தைகளைச் சொல்ல, லக்ஷ்மணன் அதைப் பொறுக்கமாட்டாமல் ஸீதையை விட்டுவிட்டுத் தான் இராமபிரான் போனவழியே போனான்.

## 28. இராவணன் பிராட்டியைக் கவர்ந்து போதல்.

அப்பொழுது இராவணன் ஸந்நியாசி வேஷம்பூண்டு ஸீதை யிருக்குமிடம் வந்து பிக்ஷைகேட்டு அவளுடைய வடிவைக்கண்டு மோஹித்துத் தன் செல்வங்களையும் வீரங்களையும் விஜயங்களையும் விஸ்தாரமாகச் சொல்லித் தன்னைக் கணவனாகக் கொள்ளுமாறு பிதற்ற, பிராட்டி அதைக்கேட்டு மிகுந்த கோபத்துடன் அவனை நோக்கிப் பல அவமானச் சொற்களைச்சொல்ல, பின்பு இராவணன் ஸந்நியாஸி வேஷத்தை விட்டுத் தன்னுடைய பயங்கரமான நிஜரூபத்தைக் காட்டி இவளைப்பிடித்தெடுத்துத் தேரேற்றிக்கொண்டு போகையில், ஓர் மரத்திலுட்கார்ந்திருந்த ஜடாயுவென்கிற பக்ஷி இவ்வநீதிச் செய்கையைக்கண்டு இராவ

ணனோடு வெகுநேரம் பெரும்போர் செய்து அவனுடைய தேரை முறித்து மாநபங்கஞ் செய்ய, பின்பு இராவணன் அந்த ஜடாயுவைத் தன் கத்தியினால் உயிர் நிலையில் அடித்துத் தள்ளிவிட்டு, செந்நாயின் கையில் அகப்பட்ட மான்பேடைபோல அஞ்சி நடுங்கிக் கதறுகின்ற ஸீதையைத் தூக்கிக்கொண்டு தேரின்மேலேறி இலங்கைக்குக் கொண்டுபோய்த் தனது அசோகவநிகையில் வைத்து ராக்ஷஸிகளைச் சுற்றும் பாதுகாக்க வைத்து 'இவளை எவ்விதத்திலாவது வசப்படுத்துங்கள்' என்று அவ்வரக்கிகட்குக் கட்டளையிட்டுத் தான் அரண்மனை சேர்ந்தான்.

## 29. இராமன் ஜடாயுவுக்கு முத்தியளித்தல்.

இராமன் மாயமானை முடித்துவிட்டு மீண்டுவருகையில் வழியிடையே இளையோனைக் கண்டுஸீதையைத் தனியே விட்டுஏன் வந்தாய்? என்று கோபித்துக்கொண்டு பஞ்சவடிக்குக் கடுநடையிட்டு வந்து அங்கு ஸீதையைக்காணாமல் மிகவும் வருந்தி லக்ஷ்மணனும் தானுமாகச் சுற்றுந் தேடியுங்காணாமல் ஸகல இந்திரியங்களும் தளர்ந்து மனம்வாடி உடல்கருகி ஏங்கி ப்ரலாபித்துக்கொண்டிருக்கையில், அங்குள்ள மான்கள் ஸீதை போனவழியைச் சிறிதுதூரம் ஓடிக் காட்ட, "இவ்வழியே போயிருப்பதாக மிருகங்கள் சொல்லுகின்றன; ஆகையால் இவ்வழியே போய்த் தேடுவோம்" என்று புறப்பட்டுத் தேடிக்கொண்டு வருகையில், அடியுண்டு குற்றுயிருடன் விழுந்து கிடந்த ஜடாயுவின் அருகே செல்ல, அக்கழுகரசன் இராகவனை நோக்கி ஸீதையை இராவணன் எடுத்துக்கொண்டு போனானென்றும், அவனை எதிர்த்த தன்னை இப்படி உயிர்மாய அடித்தானென்றும் சொல்லி உடனே உயிரை விட்டுவிட, இராகவன் தனக்காகச் சண்டைசெய்து பிராணனை விட்ட ஜடாயுவுக்கு மோக்ஷப்ராப்தியை அநுக்ரஹித்து மிகவும் வருந்தி அந்த ஜடாயுவை தஹநஞ்செய்து தர்ப்பணமுஞ் செய்துவிட்டு அங்கு நின்றும் புறப்பட்டுப்போனார்.

## 30. கவந்தனைக் கொல்லுதல்

தநுவென்னும் யக்ஷனது மகனாய், ஸ்தூலசிரஸ் என்னும் முனிவனது சாபத்தால் அரக்கனாகி, பிரமனருளால் தீர்க்காயுசு பெற்று, தேவேந்திரனோடு எதிர்த்து அவனது வஜ்ஜிராயுதத்தால் புடைப்பட்டுத் தனது தலை வயிற்றில் அழுந்தியமை பற்றிக் கபந்தம் போலுந் தோற்றமுடையவனானதால் கபந்தனென்று பெயர்பெற்ற அரக்கன் தண்டகாரணியத்தில் ஒருபக்கத்திலேயிருந்து தனது நீண்ட கைகளிரண்டையும் எட்டியமட்டில் பரப்பித் துழாவி அவற்றிற்குள் அகப்பட்ட ஜீவராசிகளையெல்லாம் வாரிவாய்ப்பெய்து விழுங்கிக் கொண்டிருக்க, அங்குச் சென்று இவன்கைகளினிடையே அகப்பட்டுக்கொண்ட ராமலக்ஷ்மணர்கள் இவன் தோள்களைத் துணித்துத் தள்ளியவளவில் இவன் முன்னையசாபமும் முற்பிறப்பின் தீவினையுந் தீர்ந்தவனாகி ராக்ஷஸசரீரத்தை யொழித்து திவ்யசரீரம் பெற்றுப் பெருமாளைப் பலவாறு துதித்துச் சபரியினிடம் செல்லும்படியும் ஸுக்ரீவனையநுக்ரஹிக்கும்படியும் சொல்லி நற்கதிக்குச் சென்றனன்.

## 31. ஸுக்ரீவ ஸக்யம்

பம்பாஸரஸ்ஸைச் சுற்றி நாற்புறங்களிலுமுள்ள அதிரமணீயமான வனப்ரதேசங்களையும் அவற்றில் நானாவகைப் பறவைகளினுடையவும் மிருகங்களினுடையவும் ஆடல் பாடல் முதலிய உல்லாஸ விலாஸங்களையும் இராமபிரான் கண்டு பிராட்டியின் பிரிவுக்கு இரங்கி ஆற்றாதானாய் மிக்க வருத்தத்துடன் ரிச்யமூகமென்னும் மலையை அடைந்தான். அம்மலையி

ஞுச்சியில் மதங்காச்ரமத்தில், அநுமான் நீலன் முதலிய சிலருடனே வாலிக்கு அஞ்சி மறைந்து வாழ்கிற ஸுக்ரீவன் இவ்விராம லக்ஷ்மணர்களைக்கண்டு 'இவர்கள் நம்மைக் கொல்லும்பொருட்டு வாலியினால் ஏவியனுப்பப்பட்டவர்கள் போலும் என்று நடுங்குமளவில் அநுமான் ராமலக்ஷ்மணரருகிற்சென்று சாதுர்யமாகப்பேசி அவர்களை இன்னாரென்று அறிந்துகொண்டு அவர்கட்குத் தங்கள் செய்தியையுங் கூறி அவர்களை ஸுக்ரீவனிடம் அழைத்து வந்து அவர்களோடு ஸுக்ரீவனுக்கு அக்நிஸாக்ஷிகமாக ஸ்நேஹம் செய்வித்தான்.

## 32. மராமரமேழெய்தது.

ஸுக்ரீவன் இராமனால் அபயப்ரதானஞ் செய்யப்பெற்ற பின்பும் மனம் தெளியாமல் வாலியின் பேராற்றலைப்பற்றிப் பலவாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும், துந்துபியின் உடலெலும்பை ஒரு யோஜனை தூரம் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக் கூறி, இவ்வாறு பேராற்றலமைந்தவனை வெல்லுவது கூடுமோ?' என்று சொல்ல, அதுகேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு விச்வாஸம் இல்லையாயின் இப்போது என்ன செய்ய வேண்டுவது?' என்ன, ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறு பூத்த நெருப்புப் போலத் தோன்றினும், வாலியின் வல்லமையை நினைக்கும்போது சங்கையுண்டாகின்றது; ஏழு மராமரங்களைத் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விற்கடைதூரம் தூக்கியெறிந்தால் எனக்கு நம்புதலுண்டாகும்' என்று சொல்ல, ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாகுமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது காற்கட்டை விரலினால் இலேசாய்த் தூக்கிப் பத்து யோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக் கண்ட ஸுக்ரீவன், 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கியெறிந்தான்; இப்போது உலர்ந்துவிட்ட இதனைத் தூக்கி எறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மரங்களின் மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச்சென்று மீண்டு அம்பறாத் தூணியை அடைந்தது.

## 33. வாலியை வதைத்தது.

பின்பு ஸுக்ரீவன் இராமபிரானுடைய நியமநத்தினால் கிஷ்கிந்தைக்குச் சென்று வீரநாதஞ் செய்ய, அதைக்கேட்டு வாலி பொறுக்கமாட்டாதவனாய் வெளிக்கிளம்பி வந்து ஸுக்ரீவனோடு யுத்தஞ்செய்யத் தொடங்கினான். அப்போது இராமன் அவ்விருவரில் இன்னான் ஸுக்ரீவன், இன்னான் வாலி என்று வாசி கண்டறியாமையால் வாலிமேல் அம்பு எய்யாதொழியவே, ஸுக்ரீவன் வாலியிடத்துப் பராஜயப்பட்டு வேதனை பொறுக்கமாட்டாமல் ரிச்யமூக பர்வதத்துக்கே மீண்டு ஓடிவந்து சேர, இராமன் அவனைப் பார்த்து 'அப்பா! நான் உங்களிருவரில் பேதமறிந்திலேன்; பாணம் உன்மேலே விழுந்து உனக்கே தீங்கை விளைத்திடுமோ என்றஞ்சி அம்பு எய்யாதொழிந்தேன்; இப்போது உனக்கு ஓர் அடையாளமிடுகிறேன்; மறுபடியும் வாலியை யுத்தத்துக்கு அழை' என்று சொல்லி அவன் கழுத்தில் பூமாலையைச் சுற்றிக் கிஷ்கிந்தைக்குப் போகவிட்டார், ஸுக்ரீவன் சென்று முன்போலவே வீரநாதஞ் செய்ய, அதைக்கேட்ட வாலி போர்க்குப் புறப்பட, அப்போது அவன் மனைவியாகிய தாரை 'ஓ ப்ராணநாதா! சற்று முன்பு அடிபட்டு ஓடினவன் திரும்பி இப்போதே சண்டைக்கு அழைக்கின்றமையால் இது வெறுமனன்று; ஏதோ ஒரு பெருத்த ஸஹாயத்தை அண்டைகொண்டு வந்திருக்கவேணும்; நீ இப்போது திடீரென்று போருக்குப் போவது தகுதியல்ல' என்று சொல்லித் தடுத்தவளவிலும் அவள் வார்த்தையைச் செவியிலுங் கொள்ளாமல் சடக்கெனப் புறப்பட்டு வந்து ஸுக்ரீவனுடன் பிணங்கினான். அந்த

வாலி ஸுக்ரீவர்களிருவரும் ஒருவருக்கொருவர் கீழே தள்ளுவது மேலே பாய்வது கட்டிக் கொண்டு நெருக்குவது கடிப்பது குத்துவது அடிப்பதாய் வலிதான யுத்தஞ் செய்யுங்காலத்தில், இராகவன் ஒரு மரத்தடியில் மறைந்திருந்து வாலியைப் பாணத்தினாலடித்தார். அந்த பாணத்தினால் வாலி மார்பு பிளந்து கீழே விழுந்துவிட்டான். இதைத் தாரை கேள்விப்பட்டு அங்கதனென்னும் புத்திரனுடன் கூட ஓடிவந்து வாலியைத் தழுவிக்கொண்டு பலவாறு புலம்பி, பிறகு எதிரில் நின்ற இராமனைப்பார்த்து அவருடைய மஹாபுருஷ லக்ஷணங்களைக் கண்டு இவர் ஸாக்ஷாத் பரமாத்மா வென்று நிச்சயித்துத் துதித்தனள். வாலியும் இராமனோடு வாதாடிப் பல ஸமாதானங்கள் சொல்லக்கேட்டு நன்மதி பெற்றுக் கையைக் கூப்பி இராகவனைத் தொழுது ஸுக்ரீவனைப்போல் அங்கதனையும் நோக்கிக் கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்துவிட்டுப் பிராணனையும் விட்டான்.

## 34. அனுமன் இலங்கையிலே பிராட்டியைக் கண்டுவருதல்

வாலிவதமான பிறகு பெருமாள் இரண்டு மாதம் மழைகாலத்தை மால்யவானிலே போக்கிப் பிறகு வானர சேனைகளை வரவழைத்துத் திசைதொறும் விடுக்க, விசேஷித்து நியமிக்கப்பெற்ற சிறிய திருவடி ஆகாச மார்க்கத்தினால் கடலைக்கடந்து இலங்கையிலே வந்து பிராட்டியைக்கண்டு அவள் கையிலே ராமநாமாங்கிதமான மோதிரத்தைக் கொடுத்து, அவளிடமிருந்து சூடாமணியைப்பெற்று, எதிரிகள் வலிமை எப்படிப்பட்டது?' என்று பெருமாள் கேட்டால் அது தெரியாதென்று சொல்ல வொண்ணாதாகையாலே அதையும் தெரிந்து கொண்டு செல்வோமென்று கருதி அதற்காகப் பொழிலிறுத்தல் முதலியன செய்து இராவணனை நேரில்கண்டு இதமுரைத்து, தன்வாலில் வைக்கப்பட்ட நெருப்பாலே இலங்கையை தஹித்து, கண்டேன் சீதையையென்று மீண்டு வந்தனன்.

## 35. ஸ்ரீ விபீஷணனுக்கு அரசளித்தது.

இலங்கையில் இராவணன் ஸபை கூட்டி "ஸுக்ரீவனுடைய மந்திரியாகிய ஓர் குரங்கு வந்து இலங்கையை அழித்துவிட்டுப் போயிற்று; இனி நாம் வெறுமனிருக்கலாகாது. இப்போது நான் செய்யத்தக்க உபாயமென்ன? எனக்கு ஸீதையை இராமனுக்குக் கொடுக்க இஷ்டமில்லை. உங்கள் கருத்தைச் சொல்லுங்கள்" என்ன, ப்ரஹஸ்தன் முதலிய மந்திரிகளும் இந்திரஜித்து முதலிய புதல்வர்களும் மற்றும் பந்துவர்க்கங்களும் தாமஸப்ரக்ருதிகளாய் நல்வழியறியாமல் இராவணன் சோற்றையுண்டு அவன் வழியே போமவர்களாகையால் இராவணன் சொன்னதையே அநுமோதித்து அதற்குத் தக்க யுக்திகளையுஞ் சொன்னார்கள். தர்மாத்மாவாகிய விபீஷணனும்வான் "அண்ணா! நான் சொல்லும் ஹிதத்தைக் கேளும்" என்று தொடங்கிப் பலவாறாக உஜ்ஜீவிக்கும் வழிகளைக் கூறியவிட்டும் இராவணன் யமனுக்கு ஆட்பட்டபடியாலே அந்த ஹிதோபதேசங்களை ஆதரியாமல் வெகுவாகத் திரஸ்கரித்தான். பிறகு விபீஷணனும்வான் 'இனி நமக்கு இப்பாவியின் ஸஹவாஸம் நொடிப்பொழுதும் தகாது. ஸ்ரீராமனையே சரணமடைந்து உஜ்ஜீவிக்கத்தகும்' என்று நிச்சயித்து உடனே அந்த ஸபையில் நின்றும் கதாபாணியாய் ஆகாசத்தில் உயரக் கிளம்பினார். அவருடன்கூட அவருடைய நான்கு மந்திரிகளும் கிளம்பினார்கள். விபீஷணன் அந்த மந்திரிகள் நால்வருடன்கூட வந்து தென்கடலுக்கு வடகரையில் இராகவனெழுந்தருளியிருக்குமிடத்தில் ஆகாசத்தில் நின்றவண்ணமாகவே ஸுக்ரீவாதி வாநரவீரர்களை முன்னிட்டு, தன் வரலாறுகளை யெல்லாம் சொல்லித் தன்னைப் பெருமாள் கைக்கொண்டருளுமாறு பிரார்த்தித்துச் சரணம் புகுந்தான். இதைக்கேட்ட வாநரர்கள் இராமபிரானிடமோடிச் சென்று "ஸ்வாமிந்! இராவணனுடைய தம்பியாம்; கையில் கதையை எடுத்துக்கொண்டு நான்கு அரக்கர்களுடன் கூட வந்திருக்கிறான். தேவரீரைச் சரணம் புகுந்ததாகச் சொல்லுகிறான். இவனை உள்ளே புகவிட்டால் ஸமயம் பார்த்துத் தீங்கு விளைத்திடுவான். இவனை இப்போதே

கொன்றுவிடுவதே நலம். இவனை ஏற்றுக்கொள்வதாகத் திருவுள்ளமுண்டாகிலும் பரிசோதனை செய்யாமல் ஏற்றுக்கொள்ளலாகாது" என்று அவரவர்கட்குத் தோன்றியபடியே தனித்தனி வானர முதலிகள் சொல்ல, பிறகு இராமபிரான், திருவடியின் கருத்தை உணர்ந்துகொண்டு 'இவ்விபீஷணன் அங்கீகரிக்கத்தக்க நற்குண நற்செய்கைகளை யுடையவனே' என்று நிர்த்தாரணஞ்செய்து அவனைத் தன்னருகே அழைத்துக்கொண்டுவரும்படி ஸுக்ரீவ மஹாராஜர்க்கு அருள்பாடிட, அவன் விபீஷணாழ்வானை இராமபிரானிடமழைத்துக்கொண்டு செல்ல, விபீஷணன் பெருமாளுடைய பாதாரவிந்தங்களிற் பணிந்து லங்காவ்ருத்தாந்தங்களையெல்லாம் விண்ணப்பஞ் செய்து யுத்தத்தில் இராகவனுக்கு வேண்டும் உதவிகளையெல்லாம் செய்வதாகப் பிரதிஜ்ஞை செய்ய, இராமபிரான் அந்த விபீஷணனுக்குக் கடலினின்றும் ஜலம் வரவழைத்து "லங்காராஜ்யத்தில் உமக்குப் பட்டாபிஷேகம் பண்ணினோம்" என்று அபிஷேகம் செய்வித்தார்.

## 36. கடலில் அணைக்கட்டினது.

விபீஷணன் பெருமானைப் பார்த்து "ஸ்வாமீ! இந்த நம்முடைய ஸேனைகள் கடலைக் கடந்து அப்பாற் செல்லவேண்டுமாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம்புகவேணும்" என்ன; இராமபிரான் "கடலைக்கடக்க உபாயம் சொல்ல வேண்டும்" என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்ப சயநத்திலும் படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசம் போல் கிடக்க; ஸமுத்ர ராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷையாயிருந்துவிடவே ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு 'அணைவரும் நடந்தே செல்லும்படி கடலை வற்றச் செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத் தொடங்கிய வளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து கடல் வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு, நளன் கையினால் நீரில் போகட்ட கற்களும் மிதக்குமென்று அவனுக்கு அவன் தகப்பனார் வரமளித்திருக்கிறாராகையால் அவனைக்கொண்டு ஸேது கட்டவேணுமென்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டான். இராகவனும் அப்படியே மற்ற வானரங்கள் சுற்றுமுள்ள மலைகளைப் பிடுங்கிக்கொண்டு வந்து நளன் கையில் கொடுக்கச் செய்து நளன் கையினால் அம்மலைகளை நீரில் போகவிடுத்து ஸேது கட்டுவித்தான். அவ்வழியாய் வானர ஸேனைகளெல்லாம் சென்று இலங்கைக்கருகிலுள்ள மலைச்சாரலில் சேர்ந்தனர்.

## 37. அணைகட்டுகையில் அணில்களின் தொண்டு

ஸேதுபந்தஞ் செய்யும்போது அணில்கள் நீரிலே மூழ்கி மணல் தரையிலே புரண்டு உடலில் ஒட்டிக்கொண்ட மணலைக் கடலிலே உகுத்து ஸேதுபந்தனத்திற்கு ஸேவை செய்ததாகத் திருமாலையில் (27 ஆம் பாட்டில்) உள்ளது.

## 38. கும்பகர்ணனும் இந்திரஜித்தும் பட்டுப்போனது

மற்றொருநாள் இராவணன் யுத்தத்திற்கு வந்து இராமனை எதிர்த்துச் சண்டைசெய்து பின்பு ஸ்ரீராமபாணத்தினாலடிபட்டு முன் நிற்கமாட்டாமல் ஓடிப்போய், உறங்கிக்கொண்டிருந்த கும்பகர்ணனையெழுப்பி யுத்தத்துக்கனுப்பினான். அவனைக்கண்டு வானரஸேனைகள் அஞ்சியோடின; இராமபிரான் அவனுடைய கைகால்களைத் துண்டம் துண்டமாகத் தறித்துவிட்டு அவனை யமலோகத்துக்கு அதிதியாக்கினார்.

மற்றொருநாள் இந்திரஜித்து யுத்தத்திற்கு வந்து சிறிதுநேரம் எதிரில் நின்றும் சிறிது நேரம் மாயையினால் ஆகாசத்தில் மறைந்திருந்தும் யுத்தஞ் செய்து பின்பு சென்று இவர்கள் முன்னே மாயாஸீதையின் தலையறுத்து இவர்களுக்கு வ்யஸநத்தை யுண்டாக்கிவிட்டுத் தான் நிகும்பிலை யென்னும் யாகஞ் செய்யத் தொடங்கினான். இதை விபீஷணனறிந்து ஓடி-

வந்து ஹநுமான்மேல் லக்ஷ்மணனை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு தானும் ஸஹாயமாய்ப் போய் அவனுடைய யாகத்தை அழித்து யுத்தஞ்செய்யத் தொடங்க, லக்ஷ்மணன் இந்திரஜித்துடன் மூன்று நாள் யுத்தஞ்செய்து மூன்றும்நாள் ஸாயங்காலம் இந்திரஜித்தினுடைய தலையை அறுத்துத் தள்ளிவிட்டார்.

## 39. இராவணனை முடித்து இலங்கை பாழ்படுத்தியது.

பின்பு கடைசிநாள் யுத்தத்தில் இராவணன் தேரேறி யுத்தத்திற்கு வர, இராமபிரான் கீழே நின்று யுத்தஞ்செய்வது தகுந்ததல்லவென்று தேவேந்திரன் மாதலியோடுகூட அனுப்பிய திவ்ய ரதத்தின்மேலேறி யுத்தஞ்செய்து அவனுடைய பொன்முடிகள் பத்தையும் அறுத்துத் தள்ளிவிட்டு அவனை யமபுரிக்கு அனுப்பிவிட்டார்.

## 40. அனுமனோடுடனுண்டது

ராவணஸம்ஹாரமான பின்பு விபீஷணன் முதலிய அரக்கர்களோடும் ஹநுமான் ஸுக்ரீவன் முதலிய வாநரர்களோடும் ஸீதாலக்ஷ்மணர்களுடனும் புஷ்பக விமானத்திலேறி ஸ்ரீராமபிரான் ஆகாயமார்க்கமாக அயோத்திநோக்கி மீண்டெழுந்தருளுமபோது கங்காநதியும யமுநாநதியும் சேருமிடமான பிரயாகையில் வஸிக்கின்ற பரத்வாஜ முனிவரது விருப்பத்தின்படி அவராச்ரமத்திலிறங்கி ஸேனைகளுடன் அங்கு விருந்துண்ணச் சம்மதித்து நின்றவளவிலே பரத்வாஜ முனிவர் தமது தவப்பெருமையால், அத்திரளிலுள்ளா ரெல்லார்க்கும் வேண்டியவளவு உண்கலங்களையும் உணவுகளையும் தெய்விகமாக வருவித்து வெகு ஸம்ப்ரமமாக விருந்து செய்தனர். அங்ஙனம் இராமனும் அவனைச்சார்ந்தவரனைவரும் தம்தமக்கென்று பறிமாறிய வாழையிலையில் உண்ணுகின்ற பொழுது, ஏற்கெனவே தவணை கடந்துவிடுகின்றதென்று பரதன் வருந்தித் தீக்குதித்து உயிர்துறந்து விடுவனோ வென்பதைச் சிந்தித்து, தாம் மீண்டுவந்த செய்தியைப் பரதனிடஞ் சொல்லி அவன் கருத்தை உணர்ந்துகொண்டு விரைந்து வருமாறு அனுப்பப்பட்டுப் பரதனிடஞ் சென்றிருந்த அனுமான் செய்திகூறி மீண்டனனாக, அச்சமயத்தில் அனுமானுக்காக முனிவன் தனியே ஓரிலையை மறுபடியும் வருவிக்க வேண்டாதபடி ஸ்ரீராமன் அனுமானைத் தனது எதிரில் இருந்து தனது இலையிலேயே ஒருபகுதியில் உண்ணும்படி நியமித்து அங்ஙனமே அவனுடன் ஸஹபோஜனஞ் செய்தனன். [இதைப்பற்றின விசேஷ விவரணங்கள் பெரிய திருமொழி 5—8—2 பாசுரத்தின் நமது திவ்யார்த்த தீபிகையில் காணலாம்.]

## 41. ஸ்ரீராமபட்டாபிஷேகம்.

ப்ரதிஜ்ஞைப்படி பதினான்கு வருஷம் நிரம்பியும் இராமபிரானெழுந்தருளக் காணுமையாலே துடித்துக் கொண்டிருந்த பரதாழ்வான் (முதல்நாள் திருவடிமூலமாக ஸ்ரீராமஸமாகமத்தை அறிந்து நகரமுழுதும் தோரணங்கள்கட்டிக் கொடிகளைத் தூக்கித் தெருக்களில் நீர் தெளித்துக் கோலமிட்டு மாளிகைகள்தோறும் பூர்ணகும்பங்களையும் மங்கள தீபங்களையும் வைப்பித்து அபரிமிதமான அலங்காரங்களைச் செய்வித்து, பேரீ சங்கம் முதலிய வாத்யங்களை எங்கும் முழங்குவித்து மங்களார்த்தமாகப் பொரிகளையும் மோதகங்களையும் பூர்ணகும்பங்களையும் புது வஸ்த்ரங்களையும் புஷ்பங்களையும் பழங்களையும் எடுத்துக்கொண்டு நகரத்திலுள்ள மஹா ஜனங்களோடு கூடி ப்ராஹ்மணர் ஸ்வஸ்திவாசநஞ் சொல்லத் தாம் எதிர்கொண்டு சென்று இராமபிரானையும் ஸீதாதேவியையும் திருவடிதொழுது இலக்குமணனை ஆரத்தழுவி, சிலர் ஸ்தோத்ரங்கள் சொல்ல, சிலர் காஹளங்களூத, சில பெண்கள் வெண்சாமரம் வீச, சிலர் மயில் தோகை சுருட்டிகளைப் பிடிக்க, சிலர் விசிறிகளெடுத்து வீச, சிலர் கீழ்விரி வீரிக்க, முத்துக்குடைகள் பிடிக்க, பெண்கள் மங்களம்பாட, வெகு கோலா

ஹலத்துடன் இராகவனை நகரப்ரதக்ஷிணமாக எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போய் நவ ரத்நமயமான மஹாமண்டபத்தில் திவ்ய ஸிம்ஹாஸநத்தில் இராமபிரான் வீற்றிருக்க, தானும் சத்ருக்நனும் கைகூப்பி நிற்க, அவ்வளவில் வஸிஷ்டமஹாமுனிவர் புண்ய தீர்த் தங்களினின்றும் தீர்த்தங்களை வரவழைத்து இராகவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தார், ஸ்ரீராமன் பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு கௌஸலையார் முதலிய தாய்மார்களையும் தம்பி களையும் பரிஜநங்களையும் பௌரஜநங்களையும் ஒருமிடருக உகப்பித்துக்கொண்டு தீய வழி களைச் சிதைத்து நல்வழிகளை விளக்கிக்கொண்டு பதினோராயிரம் வருஷகாலம் ராஜ்ய நிர் வாஹஞ்செய்து ஸுகமாக வாழ்ந்திருந்தார்.

## 42. மாலியை மடித்ததும் சுமாலி முதலானோரைப் பாதாளலோகம் செலுத்தியதும்

ஸுகேசனென்னும் இராக்கதனுக்கு மாலியவான், மாலி, ஸுமாலி என மூன்று பிள்ளைகள் பிறந்ததும், அவர்கள் தவம்புரிந்து பெருமை பெற்று இலங்கையிற் குடிபுகுந்து விவாஹஞ் செய்துகொண்டு பல மக்களைப் பெற்றதும், தேவர்கள் சிவபெருமானை அடைக் கலம் புகுந்து அவர் சொன்ன உபாயத்தினால் ஸ்ரீமந்நாராயணனைச் சரணமடைந்ததும், அவர் அவர்கட்கு அபயமளித்ததும்' அது தெரிந்து ராக்ஷசர்கள் கோபங்கொண்டு படையெடுத் துத் தேவலோகஞ் சென்றதும், அப்பொழுது கருடவாஹநாரூடராய்க் கேசவன் அங்கு வந்து தோன்ற அவரைச் சூழ்ந்து அரக்கர் அம்புமாரி பொழியப் புகுந்ததும், பிறகு அரக்கர் கட்கும் திருமாலுக்கும் பெருத்த யுத்தம் நடந்ததும், அதில் மாலி மரணமடைந்ததும், மற்ற மாலியவான் சுமாலி யென்னுமிருவரும் திருமாலுடன் போர்புரிந்து பராஜயமடைந்து மற்று முள்ள இலங்கையரையும் கூட்டிக்கொண்டு பாதாளலோகம் போய்ச் சேர்ந்ததும் உத்தர ஸ்ரீராமாயணத்தில் 5, 6, 7, 8 ஸர்க்கங்களில் விரிவாகக் கூறப்பட்டவை.

## 43. பலராமாவதாரம்

ஸ்ரீராமாவதாரத்தில் ஆதிசேஷனது அம்சமாய்த் தோன்றிய லக்ஷ்மணன் தனக்குச் செய்த அரிய பெரிய பணிவிடைக்கு உவந்து பகவானாகிய ஸ்ரீமந்நாராயணன் அவ்வாதி சேஷனை நோக்கி 'மற்றோரவதாரத்தில் உமக்கு நான் தம்பியாய்ப்பிறந்து உம்மைப் பூஜிக்கக் கடவேன்' என்று வரமளித்திருந்தார். அவ்வவதாரங்கழிந்த வெகுநாளைக்குப் பின்னர் த்வாபரயுகத்தில், இப்பூமியில் முன் ராமாவதாரத்தில் ராமபாணங்களால் அடிபட்டு மரண மடைந்த அரக்கர்கள் க்ஷத்ரிய ஜாதியிற் பிறந்து ஜனங்களை நலிந்துகொண்டிருக்கையில் பகவான் மீண்டும் அவதரித்து முன்போலவே அவர்களையழிக்கக் கருதி ஆதிசேஷனை நோக்கி 'எனக்குமுன் நீர்போய் வஸுதேவர்க்குப் பிள்ளையாகப் பிறக்கவேணும்' என்ன ஆதிசேஷனும் அப்படியே வடமதுரையில் வஸிக்கும் வஸுதேவரென்கிற யதுவம்சத்து க்ஷத்ரியனுடைய மனைவியாகிய தேவகியின் கருவில் புகுந்தார். பின்பு பகவான் தனது யோகமாயையையழைத்து 'நம்முடைய ஆதிசேஷன் தேவகியின் கருவிற் புகுந்திருக்கிறார். நீ போய் அந்தக் கருப்பிண்டத்தை அப்படியே யெடுத்து வஸுதேவருடைய முதல்மனைவியும் நந்தகோபருடைய கோகுலத்தில் வஸிப்பவளுமான ரோஹிணியின் கர்ப்பத்தில் வைத்திடு' என்று கட்டளையிட, அப்படியே தேவகியின் ஆறுமாதத்துக் கருப்பிண்டத்தை யோகமாயை பெயர்த்தெடுத்துக்கொண்டுபோய் ரோஹிணியின் வயிற்றிற் சேர்த்துவிட, சரத்காலத்துத் திங்கள்போன்ற வடிவுடையவராய்ப் பலராமன் அவதரித்தார். பிறகு, ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாய் ஒளித்து வளருங் கண்ணபிரானிடத்தில் மிகவும் விருப்ப முற்றவராய் அப்பெருமானுக்கு ஒருவகைத் தீங்கும் நேரிடாதபடி பாதுகாவலாக இருந்து கொண்டு இணைபிரியாது வாழ்ந்துவந்தார். இவர்க்கு நம்பிமூத்தபிரான் என்பது ஸம்ப்ரதாயத்

திருநாமம். இவர்க்குக் கலப்பை ஆயுதம். அதனால் இவர்க்கு 'ஹலீ' என்றும் 'ஹலாயுதன்' என்றும் திருநாமங்கள் வழங்கும். ஒரு காலத்தில் பலராமர், பக்கத்தில் ஓடுகின்ற யமுனா நதியை நோக்கி, 'ஓ யமுனாய்! நீ இங்கேவா நான் நீராடவேண்டும்' என்றழைக்க, அவ்யமுனை அவர் மதுபான மயக்கத்தினால் இப்படிச்சொல்லுகிறாரென்று அவரது வார்த்தையை அவமதித்து அங்கே வாராதொழிய, அதுகண்டு அவர் வெகுண்டு தமது கலப்பையைக் கையிலெடுத்து அதன் நுனியாலே அந்நதியை இழுக்க, அந்நதி தான் போகும்வழியை விட்டு அவரெழுந்தருளியிருக்கும் வனத்தில் வந்து பெருகியதன்றியும், தன்னுடைய சரீரத்தோடு அவர்க்கெதிரில் வந்து பயத்தினாலே மிகவும் நடுநடுங்கி விசேஷமாகவேண்டிக் கொள்ள, பின்பு அந்நதியை க்ஷமித்து அதில் நீராடினரென்றும்,—ஒருகால் ஹஸ்திநாபட்டணத்தில் துரியோதனன் தன்மகளான லக்ஷ்மணைக்கு ஸ்வயம்வரம் கோடிக்க, அக்கன்னிகையை ஸ்ரீகிருஷ்ணனது மஹிஷிகளுள் ஒருத்தியாகிய ஜாம்பவதியின் குமாரனான ஸாம்பனென்பவன் பலாத்காரத்தால் தூக்கிக் கொண்டுபோக, துரியோதனாதியர் எதிர்த்துயுத்தஞ் செய்து அவனைப் பிடித்துக் காவலிலிட்டுவைக்க, அச்செய்திகேட்ட பலராமன், தான் அவனை விடுவித்து வருவதாய்ச் சொல்லிப் புறப்பட்டு அஸ்தினாபுரத்திற் கெழுந்தருளி 'நம்முடைய ஸாம்பனை விடவேண்டும்' என்றருளிச்செய்ய, அக்கௌரவர்யாவரும் 'துஷ்டகாரியஞ்செய்த அவனை நாங்கள் விடமாட்டோம்' என்று ஒரே கட்டுப்பாடுடையவர்களாய் இகழ்ந்துபேச, பலராமர் அளவுகடந்த கோபங்கொண்டு எழுந்திருந்து 'குருகுலத்தார் வாஸஞ்செய்து கொண்டிருக்கின்ற இந்நகரத்தைக் கங்கையிற் கவிழ்த்துவிட்டுப் பூமியிற் கௌரவப்பூண்டில்லாமற் செய்துவிடுகிறேன், பாருங்கள்' என்று சொல்லித் தமது கலப்பையை மதிலின்மேலுள்ள நாஞ்சிலென்னும் உறுப்பில் மாட்டியிழுக்க அதனால் அப்பட்டண முழுவதும் அசைந்து சாயவே, அதுகண்ட கௌரவரெல்லாரும் மனங்கலங்கி வணங்கி வேண்ட, நம்பிமூத்தபிரான் அவ்வளவோடு கலப்பையை வாங்கியருளினன் என்றுமுள்ள பலகதைகளினால் இவரது கலப்பையின் ஆற்றல் அறியத்தக்கது.

# ஸ்ரீக்ருஷ்ணவதார வைபவ ஸங்க்ரஹம்

## 44. தந்தைகாலில் விலங்கறக் கண்ணன் திருவவதரித்தது.

பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல் வருத்தமற்றிருக்கும். ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்பு மூட்டையைத் தாங்குவதுபோல் மிக வருத்தமாம். ஆதலால், த்வாபரயுகத்தில் இப்பூமியின்கண் பிறந்த கம்ஸன் சிசுபாலன் முதலிய அஸுரர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்து மேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையை அடைந்து, அச்சபைநடுவில் வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வஸுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப்படுத்தவேணுமென வேண்டிக்கொள்ள, அதற்கு நான்முகன் சிறிதுகாலம் யோசித்து 'இது நம்மாலாகாது; ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு அறிவித்து அவர் மூலமாக இக்காரியத்தை நிறைவேற்றுவிக்கவேணும்' எனக்கருதி அந்தப்பூமியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பாற்கடலுள்பள்ளி கொள்கின்ற பரமனைத் தொழுது துதித்தனர். பின்பு திருமால் அருள்புரிந்த சிந்தை கொண்டு அவர்கட்குக் காட்சி தந்து யோக க்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி "ஓ தேவர்களே! உங்கள் கருத்தை அறிந்துகொண்டேன்; முற்காலத்தில் வருணனுடைய சாபத்தினால் கச்யபரும் அவரது மனைவியான அதிதியும் இப்பொழுது வஸுதேவ தேவகிகளாகப் பிறந்திருக்கின்றனர்: இப்பிறவியில் அவர்களுக்கு நான பிள்ளையாகப் பிறக்கிறேனென்று முன் வரமளித்திருக்கிறேன்; அங்ஙனமே நான் அவர்களுடைய கர்ப்பத்தில் தோன்றி ஸாது பரித்ராணமும் துர்ஜந விநாசமும் தர்ம ஸம்ஸ்தாபநமும்

செய்யக்கடவேன்; நீங்கள்போகலாம்" என்று சோதிவாய்திறந்து அருளிச்செய்ய: அவர்கள் பரமாநந்தத்துடன் விடைபெற்று தத்தம் ஸ்தானங்களை அடையலாயினர். அக்காலத்தில் மதுராநகரத்தில் யதுவம்சத்தாரில் உக்ரஸேநன் என்றொரு தார்மிகன் அரசனாயிருந்தான். அவனது மகன் கம்ஸனென்பான். இக்கஞ்சன் துஷ்டர்களில் தலைவனாயிருந்துகொண்டு பெரியோர்கட்குத் தீமையும் புல்லியர்கட்கு நன்மையும் செய்துகொண்டு தன் பலத்தினால்தனது தந்தையாகிய உக்ரஸேநனைச் சிங்காதனத்தினின்று தள்ளிவிட்டுத் தான் அரசாண்டு வருங்காலத்து:—கம்ஸன் தனது உடன்பிறந்தவளாகிய யுக்தவயதுவாய்ந்த தேவகியை வஸுதேவருக்கு விவாஹம் செய்வித்து அவ்விவாஹம் முடிந்தபின் அவளை வஸுதேவர் மாளிகையிற் கொண்டுவிடுகைக்காகத் தேரேற்றிக்கொண்டு தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரைநடத்திக்கொண்டு வரும்போது, ஆகாயத்தில், 'அறிவு கேடனே! நீ யாரிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றனையோ, அத்தேவகியின் எட்டாவதுகர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது' என்று ஒரு அசரீரவாக்குப் பிறக்க, அதனைக்கேட்ட கம்ஸன் மிகவும் திடுக்கிட்டு, 'இனி நாம் தப்ப வழி யாது?' என்று யோசித்து, 'இவள் பிழைத்திருந்தாலன்றோ இவளது எட்டாவது பிள்ளை நம்மைக் கொல்லப்போகிறது; இப்போதே இவளைக் கொன்றுவிடுவோம்' எனறறுதியிட்டுக் கத்தியை உருவிக்கொண்டு தேவகியைக் கொலை செய்யப்புக, வஸுதேவர் அவனுக்குப் பல தருமங்களையும் காலகதியையும் பரக்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஒரே பிடிவாதமாய் நிற்க, பின்பு வஸுதேவர் 'அப்பா! உனக்கு இவள்கையால் சாவு இல்லை; இவளுடைய பிள்ளை கையினாலல்லவோ சாவு நேரிடப் போகிறது; இவளுக்குப் பிள்ளை பிறந்தவுடன் அப்பிள்ளைகளை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன், நீ அவற்றைக் கொன்றுவிடு' என்று சொல்ல; கம்ஸன் அதை யுக்தமென்று கொண்டு அத்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான். திருமால் தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் [ஆவணி மாதம் க்ருஷ்ணாஷ்டமி கூடிய ரோஹிணீ நக்ஷத்திரத்தில் இரவு விருஷபலக்கினத்தில்] ஸ்ரீகிருஷ்ணனாய் அவதரிக்க, அப்போதே வஸுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்று முறிந்து விழுந்தொழிந்தது.

## 45 பூதனையின் முலையைச் சுவைத்து உயிருண்டது.

ஸ்ரீகிருஷ்ண சிசுவை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுக் கஞ்சன் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனை யென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து, அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ண சிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானாகிய குழந்தை அவ்வரக்கியின் ஸ்தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தருளினன்.

## 46 தாளைநிமிர்த்துச் சகடு முறித்தது

நந்தகோப கிருஹத்தில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப் போனாள். கம்ஸனால் ஏவப்பட்ட அசுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீகிருஷ்ணசிசுவின்மேலே விழுந்து கொல்ல முயன்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலேதூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழே விழுந்து அசுரனுட்பட அழிந்தது.

## 47 மருதம் முறிய நடை கற்றது

குழந்தைப்பருவமுள்ள கண்ணன் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினுற் கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமர [யமளார்ஜுன]த்தின் நடுவே எழுந்தருளியபோது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினுலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன், மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர். இந்த மருதமரங்களில் அஸுரா வேசமுமிருந்ததாகப் பெரியாழ்வார் திருவுள்ளம். "பொய்ம்மாய மருதான வசுரரை" என்ற பாசுரம் காண்க.

## 48 கண்ணன் வாயினில் வையமேழுங்கண்டது

ஒருநாள் கண்ணன் வீதியில் விளையாடிக்கொண்டிருக்கையில் பலராமன் வந்து 'அம்மா! கிருஷ்ணன் மண்ணைத் தின்கின்ருன்' என்று சொல்லக்கேட்ட யசோதை ஓடிப் போய்க் கண்ணனை வாரியெடுத்துக்கொண்டு உள்ளே வந்து 'ஏன் மண்ணைத் தின்ருய்?' என்று வெருட்ட, அதற்குக் கண்ணன் 'அம்மா! நான் மண்ணைத் தின்னவில்லை; பலராமன் என்மேல் வீணுகக் கோள் சொல்லுகிருன்; வேணுமாகில் என் வாயைப் பார்' என்று தன் வாயைத் திறந்து காட்ட, யசோதை அவ்வாய்வழியாக அவனுடைய திருவயிற்றில் ஏழு குலபர்வதங்களையும் ஏழு கடல்களையும் ஏழு தீவுகளையுமுடைய இப்பூமி முழுவதையுங்கண்டு "இவன் ஆயர்புத்திரனல்லன் அருந்தெய்வம்" என்று நிர்ணயித்துப் பின்னையும் சிறிது நேரத்தில் அந்த புத்திமாறித் தன்னுடைய பாலனுகவே எண்ணிக் கொண்டிருந்தாள்.

இக்கதையைப் பெரியாழ்வார் அநுஸந்திக்கும்போது "கையுங் காலும் நிமிர்த்துக் கடாரநீர், பையவாட்டிப் பசுஞ் சிறுமஞ்சளால், ஐயநாவழித்தாளுக்கங்காந்திட, வையமேழுங் கண்டாள் பிள்ளைவாயுளே" என்று குழந்தைப்பருவமாயிருக்கிற கண்ணனை யசோதைப் பிராட்டி நீராட்டும்போது முடிவில் மஞ்சள்தேய்வையைக்கொண்டு, அக்குழந்தையின் நாக்கை வழிக்கப்போகையில், அக்குழந்தையின் திறந்தவாயிலே ஸமஸ்தலோகங்களையும் ஸாக்ஷாத் கரித்தாள் என அநுஸந்தித்தனர். "என்னை நான் மண்ணுண்டேனுக, அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்து மனைவர்க்குங் காட்டிற்றிலேயே" என்ற அப்பெரியாழ்வார் திருமொழி யிலேயே முன்குறித்தவாறு கதையையும் யோஜித்துக் கொள்ளலாம். யசோதைப்பிராட்டி இப்படிக்கண்டது ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஞானக்கண்ணைக் கொடுத்துத் தனது விச்வரூபத்தைக் காட்டினுற்போல, யசோதைப்பிராட்டிக்குத் தன்னுடைய தெய்வத்தன்மை யைக் காட்டவேணுமென்று கொண்ட ஸ்வதந்த்ரேச்சையினுலே அவ்யசோதைக்கு ஞானக் கண்ணைக் கொடுத்ததனுலாகியது. [கண்ணன் முலைப்பாலுண்ணும்போது கொட்டாவி விடுகிற வியாஜத்தினுல் வாயைத்திறந்து யசோதைக்கு விச்வரூபங்காட்டினுனென்பதும் சில புராணங்களிலுண்டு.]

இப்படி சிறிது நாள் கழிந்தபின் கிருஷ்ணன் தன்னேராயிரம் பிள்ளைகளோடு சேர்ந்து கன்றுகளை மேய்க்கக் காட்டுக்குப்போய் "சீலைக்குதம்பை ஒரு காது ஒரு காது செந்நிறமேல் தோன்றிப்பூ, கோலப்பணைக்கச்சுங் கூறையுடையும் குளிர்முத்தின் கோடாலமும், காவிப் பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடம்" "தழைகளுந் தொங்கலும் ததும்பியெங்கும் தண்ணுமை எக்கம் மத்தளி தாழ்பீலிக், குழல்களுங் கீதமுமாகி யெங்குங் கோவிந்தன் வருகின்ற

கூட்டம்" என்றபடி பல்வகை அலங்காரங்களுடன் வேணுநாதம் செய்து பசுக்களையுங் கன்றுகளையுங் களிக்கச்செய்து ஆச்சிமார்களின் கண்ணையும் நெஞ்சையுங் கவர்ந்துகொண்டு தாய் தந்தையர்க்கு மிக்க அன்பனாயிருந்தான்.

## 49 பிலம்பாசுரனைப் பிணமாக்கியது.

ப்ரலம்பனென்னும் பெயரையுடைய ஒரு கொடிய அஸுரன் ஸ்ரீக்ருஷ்ண பலராமர்களையும் மற்றுமுள்ள கோவலர் யாவரையும் வதைசெய்து தான் வெற்றிபெறக் கருதித் தனது மாயையினால் ஒரு கோபால குமாரனைப்போல் வேஷம் பூண்டு, அக்கோபால ரனைவர்க்கும் தன்னிடத்தில் ஸஜாதீயபுத்தி பிறக்கும்படி அவர்களை மயக்கி, நெஞ்சிற் கபடத்துடன் அவர்களுடன் கலந்து நேசித்திருந்தான்; ஸர்வஜ்ஞனாகிய கண்ணபிரான் இக்கபடச்செய்தியை நன்குணர்ந்து அவனைச் சிக்ஷித்தொழிப்பதற்குத் தக்க சூழ்ச்சிகளைச் செய்துகொண்டிருந்தும், 'இவன் நம்மிடத்தில் மிக்க அன்புகொண்டேயிருக்கிறான்' என்று தோற்றும்படி நடனஞ்செய்து, ஒருநாள், கோபால குமாரர்களனைவரையும் விளித்து 'நாமனைவரும் ஒன்று சேர்ந்து இரவி மறையுமளவும் சில சிலைகளை ஓரிடத்தில் ஸ்தாபித்துக் குறிவைத்துப் பந்துகளடித்து அவ்விளையாட்டினால் வருகிற ஜயாபஜயங்களையடைந்து அவற்றுக்குத்தக்க பந்தயங்களையும் அநுபவிப்போம் வாருங்கள்' என்றழைக்க, அனைவரும் அதற்கு உடன்பட்டு வர, பின்பு கண்ணபிரான் தான் பேருத்தியும், ஸ்ரீதாமனென்னும் கோபாலன் தனக்கு எதிர்ப்பேருத்தியும், தன்னுடைய பக்ஷத்தில் மாயா கோபாலப்ரலம்பன் ஒரு பேருத்தியும், அவனுக்கெதிர் பலராமன் ஒரு பேருத்தியுமாக ஏற்படுத்தி, மற்ற கோபாலர்களைச் சிறிய உத்திகளான சேவகர்களாக வகுத்து அவர்கள் யாவரையுங் கணக்கு செய்து இரண்டு பக்ஷத்திற்கும் ஸமமாகப் பாவித்து இரண்டு இனமாகப் பிரிந்தவர்களுடன் ஸ்ரீப்ருந்தாவனத்தின் மஹாவிசால மார்க்கங்களிற் சென்று மஹாவிருக்ஷங்களையும் பெரிய சிலைகளையும் குறிகளாக்கிக் கைகளிற் பந்துகளேந்திப் பாண்டீரமென்கிற ஆலமரத்தின் நிழலிற் சேர்ந்து "இவ்வாட்டத்தில் தோற்றவர்கள் ஜயித்தவர்களைச் சுமந்துகொண்டு, பசுக்கூட்டங்கள் பிரிந்து அப்புறம் சிதறிப்போகாமல் அம்மந்தைகளை ப்ரதக்ஷிணமாக வந்து மடக்கவேண்டியது; மஹாவ்ருக்ஷ சிலாலக்ஷ்யங்களைத் தொட்டு அத்தானத்தில் வந்து இறங்கவேண்டியது; என்று எல்லாரும் சபதமேற்படுத்திக்கொண்டு விளையாடிக்கொண்டிருக்கையில், ஒருகால் கண்ணன்வகுப்பில் தோல்வி நேரிட, அப்போது ஸ்ரீதாமனென்பவனைக் கண்ணபிரானும், பலராமனைப் பிரலம்பனும் வாஹனமாகிச் சுமந்துகொண்டு ஸமயபந்தத்தின்படி லக்ஷ்ய ப்ரதக்ஷிணஞ் செய்யப்போனார்கள், பலராமனைச் சுமந்துகொண்டு செல்லுகிற பிரலம்பன் மாத்திரம் தீயகருத்தினனாய் லக்ஷ்ய ஸ்தானத்தைத் தாண்டிப்போக, பலராமன் தனது சக்தி விசேஷத்தினால் அவனுக்குச் சுமக்க முடியாத பாரமாகிவிட, அவன் மிகவும் வருந்தி நடக்கமாட்டாதவனாய் அந்தக்கோபால வேஷத்தைவிட்டு நிஜாகாரமாகிய கொடிய ராக்ஷஸ ரூபத்தைப் பூண்டு ஊழிப்பெருங்காற்றினுங் கடியனாக விரைந்து ஆகாயமார்க்கத்திற் செல்ல, பலராமன் அவனது கோரமான வடிவைக்கண்டு இவன் அஸுரனேயென்று நிச்சயித்துத் தனது ஸங்கர்ஷணம்ச பலத்தினால் முஷ்டிபிடித்து அவனது சிரோபாகத்திற்குச் சரியாகப்பாய்ந்து, கைமுட்டியினால் அவன் சிரம் பிளந்து சிந்நபிந்நமாய் அழியும்படி ஓர் அறை அறைந்து ஒரே குட்டாகக் குட்டினார். உடனே அவ்வஸுரன் தலைபிளந்து சிந்நபிந்நமாகச் சிதைய, அவனது சரீரமெங்கும் செந்நீராய்ப்பெருக முகத்தினின்றும் ரக்தமாம்ஸங்கள் ஒழுக, கதறிக்கொண்டு பூமியில் விழுந்து உயிரொழிந்தனன். [இங்ஙனம் பலராமனாற் செய்யப்பட்ட அவ்வஸுர வதத்தைக் கண்ணபிரான் செய்தருளியதாகவே சில ஆழ்வார்கள் அநுஸந்தித்துப் போருவர், அது ஒற்றுமைநயம் பற்றியாம்.]

## 50 காளியனுச்சியில் நட்டம் பாய்ந்தது.

இப்படியிருக்கையில் ஒருநாள் கிருஷ்ணன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத்தொடங்க, மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற் சென்றால், யமுனா நதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படி செய்த காளிய னென்னும் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடும் வாஸஞ் செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கி விடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன; அதைக்கேட்ட கண்ணபிரான் உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்க வேண்டுமென்ற திருவுள்ளங் கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்ப மரத்தின் மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கலிய பிக்ஷை இட்டருள வேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாக கன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினன்.

## 51 தேநுகாஸுரனைத் தொலைத்தருளியது.

பின்பொருநாள் கண்ணபிரான், பலராமனோடும் ஆயர் சிறுவர்களோடும் ஆநிரை மேய்த்துக்கொண்டு, பழங்கள் அழகாக மிகுதியாய்ப் பழுத்து வாஸனை வீசிக்கொண்டிருந்த ஒரு பனங்காட்டையடைந்து, அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக்கொண்டு வருகையில், அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங்கொண்ட தேநுகாஸுரன் கோபமுண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் அதிவேகமாய்ப் பின்னங்காலிரண்டையும் பற்றி அவ்வசுரக் கழுதையைச் சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின்மேல் எறிந்து அழித்து, பிறகு எல்லாருமாய் அங்குள்ள இனிய கனிகளை அருந்திப் பொழுதுபோனவாறே வீடுபோய்ச் சேர்ந்தனர்.

## 52 அரிஷ்டாஸுரனை அழித்தருளியது.

பின்பொருநாள், கம்ஸனாலேவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருது வடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனது திருவயிற்றின்மேற் கண்வைத்துக் கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவர, கண்ணபிரான் அவனைக் கொம்புகளிற் பிடித்து அசைய வொட்டாமற் செய்து தன் காலினால் அவன் வயிற்றில் ஓரிடி இடித்து அவன் கழுத்தைப்பிடித்துக் கசக்கி அவனுடைய கொம்புகளில் ஒன்றைப்பறித்து அதனாலேயே அவனை அடித்துக்கொன்றனன். [கண்ணனுடைய சரிதைகளில் எருதடர்த்ததாக ஆழ்வார்கள் அநுஸந்திக்குமிடங்களில் இக்கதையும் கொள்ளத்தகும். ஏழ்விடை செற்றதாகவும் ஏழெருதுகள் தழுவினதாகவும் அருளிச்செய்யுமிடங்களில் நப்பின்னைக்காகச் செய்த செயல் அநுஸந்திக்கத்தக்கது.]

## 53 ஏழ்விடை செற்றுப் பின்னைதோள் புணர்ந்தது.

கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாயும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவருக்கும் அடங்

காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்து கொண்டனன்"

## 54 கேசியின் வாயைக் கீண்டெறிந்தது.

பின்பொருநாள் கம்ஸனுலேவப்பட்ட **கேசி** என்பானேர் அஸுரன் குதிரையினுருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் துரத்திக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர அப்பெருமான் தன் திருக்கையை நன்ருகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற் கொடுத்துத்தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன்.

## 55 கொக்கின் வாயைக் கிழித்தெறிந்தது.

மற்றொருநாள் **பகன்** என்னும் ஓரஸுரன் கொக்குவடிவங்கொண்டு கண்ணபிரானைக் கொல்வதாக நெருங்கிவர, அப்பொழுது கண்ணன் அப்பறவையின் வாயலகுகளை இருகையாலும் பிடித்துக்கிழித்து அதனை அழித்தனன்.

## 56 கன்றினால் விளவெறிந்தது.

கம்ஸனுலேவப்பட்ட அசுரர்களில் கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய் கண்ணன் தன்கீழ்வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்க, அதனையறிந்து கிருஷ்ணபகவான் அவ்வாறே தன்னை முட்டிக்கொல்லும் பொருட்டுக் கன்றின் வடிவங் கொண்டு வந்த வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச் சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவரும் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தனர். (இது முள்ளைக்கொண்டே முள்ளைக் களைவது போலாம்.)

## 57 குருந்தமரமொசித்தது.

மற்றொருநாள் வேறொரு அஸுரன், கண்ணபிரான் மலர்கொய்தற்பொருட்டு விரும்பியேறும் குருந்தமரத்திற் பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும்போது தான் முறிந்து வீழ்ந்து இவனை வீழ்த்திக்கொல்லக் கருதியபோது,மாயவனுன கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற் பிடித்துத் தன் வலிமைகொண்டு முறித்து அழித்தனன்.

## 58 கோவர்த்தனத்தைக் குடையாக வெடுத்தது.

கண்ணபிரானுடைய இப்படிப்பட்ட அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைக்கண்டு ஆயர்களனைவரும் 'இவனே நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப்படியே நாம் ஒழுகவேண்டும்' என்று அறுதியிட்டனர். இங்ஙனமிருக்கையில் சரத்ருது வந்தது. அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவைகளைச் சேகரிப்பதைக்கண்டு கிருஷ்ணன் 'ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனுல் ஜீவிக்கிறேமோ அதற்கே பூஜைசெய்வது தகுதி; இக்கோவர்த்தன கிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது. இந்திர

ஞல் நமக்கு என்ன பயனுண்டு? ஒன்றுமில்லை, ஆகையால் நீங்கள் இப்பூசனையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ண பிரான் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள அவ்விந்திரன் கோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பி மேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்கு தரும்படி கல் மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தநமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லா வுயிர்களையும் காத்தருளினன்.

## 59 திருக்குரவை கோர்த்த — ராஸக்ரீடை

மற்றொருகால், கண்ணபிரான் தன்னிடத்து விருப்பமுற்ற ஆயர் மாதருடைய ஆவலைத் தீர்க்கக்கருதி சரத்காலத்தில் ஓரிரவில் யமுனைக்கரையில் நின்று வேணுநாதம் செய்ய, அதனைக்கேட்ட இடைப்பெண்களெல்லாரும் மாமியார் மாமனார் முதலியோரையும் மதியாமல் காவல் கடந்து புறப்பட்டுச் சென்று க்ருஷ்ண கோஷ்டியில் அந்வயிக்க, அன்றிரவு அவர்களுடன் பரம போக்யமாகக் குரவைக் கூத்தாடினன். (குரவையாவது-ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்தில் ஒவ்வொரு கண்ணனாகப் பலவடிவெடுத்து நின்று மண்டலித்தாடும் ராஸக்ரீடை.) அப்பொழுது கோபிமார்கள் பரமாநந்தத்தின் எல்லையிலே நிற்பதைக்கண்ட கண்ணபிரான் 'இது வெள்ளக்கேடாக வொண்ணாது: இந்த ரஸத்தை மாற்றவேணும்" என நினைத்து அவ்வாயர் மங்கையரைவிட்டுப் பிரிந்துபோய் ஒளிக்க, கோபிகள் கண்ணனைத்தேடிக் காணாமல் காதல்மீதூர்ந்து அப்பிரானைக் காணுமளவும் தாங்கள் உயிர்த்தரித்திருக்கைக்காக, ஒருத்தி க்ருஷ்ணனாகவும் மற்றொருத்தி காளியனாகவும் வேறொருத்தி வேறொன்றாகவும் பாவனைகள் செய்துகொண்டு க்ருஷ்ணனுடைய செயல்களையெல்லாம் அநுகரித்துத் தரித்திருக்கையில் "தாஸாமாவிரபூத் சௌரி: ஸ்மயமாந முகாம்புஜ:, பீதாம்பரதாஸ் ஸ்ரக்வீ ஸாக்ஷாந் மந்மதமந்மத: என்றபடி—புன்முறுவல்செய்து பீதகவாடை யுடுத்துப் பரமவிலக்ஷணமான திருக்கோலத்துடனே எழுந்தருளி அவர்களுக்கு ஸேவைஸாதித்து அப்பொழுதே அவர்களது தாபமெல்லாம் ஆறும்படி பலவித லீலைகளைச்செய்து ஆனந்தப்படுத்தினன்.

## 60 கோபி வஸ்த்ராபஹரணம்

திருவாய்ப்பாடியிலுள்ள கோபஸ்த்ரீகள் கண்ணபிரானிடங்கொண்ட வேட்கை மிகுதியினால் அவன் தம்மிடம் காதல் விஞ்சுமாறு நோன்புநோற்று அந்நோன்பின் முடிவில் யமுநாநதியிலே நீராட, அப்பொழுது அவர்கள் இடைச்சாதி யொழுக்கத்தின்படி கரையில் அவிழ்த்து வைத்துவிட்டுப்போன ஆடைகளையெல்லாம் கண்ணன் ரஹஸ்யமாகவந்து எடுத்துக்கொண்டு அருகிலிருந்ததொரு மரத்தின்மேலேறியிருந்து சிறிதுபோது அவர்களை அலைக்கழித்துப்பின்பு அவர்கள் கைகூப்பி வணங்கி மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதனால் அவர்களுக்கு அத்துகில்களை அளித்தருளினன்.

## 61 வடமதுரையில் வில்விழ வழித்தது

ஸ்ரீக்ருஷ்ண பலராமர்கள் திருவாய்ப்பாடியில் வாழ்ந்து கொண்டிருக்கையில், கம்ஸன் தனது நகரமான மதுரையில் தான் தநுர்யாகமொன்று செய்வதாக வைத்து அதைக் காண்பதற்காக ஸ்ரீக்ருஷ்ண பலராமர்களை கோகுலத்திலிருந்து அழைத்து வரும்படி

அக்ரூரரை யனுப்பி யிருந்தான். அவர் கோகுலஞ் சென்று அவ்விருவரையும் அழைத்து வர, அவர்கள் வடமதுரையில் வந்து சேர்ந்தனர். கண்ணன் கம்ஸனுடைய தீயபுத்தியை அறிந்தவனாகையாலே வில்விழா நடக்கிற ஆயுதசாலையிலே புகுந்து 'இவனுக்கு வில்லொரு கேடு, விழாவொருகேடு' என்று சொல்லி அந்த வில்லையெடுத்து முறித்தெறிந்தனன். [திருப்பல்லாண்டில் (10) *திருமதுரையுள் சிலைகுனித்து *என்றவிடத்து அநுஸந்தித்த கதை இது. *விற்பெருவிழவுங் கஞ்சனும் மல்லும் *இத்யாதி பாசுரங்களும் காண்க.]

## 62 சாந்து பெற்றுக் கூன் நிமிர்த்தது

வடமதுரையில் ராஜவீதியில் செல்லுகின்ற கண்ணன் சந்தனக்கிண்ணத்தைக் கையிலேந்தி வருகிற மங்கைப்பருவமுடைய ஒரு கூனியைக்கண்டு 'நங்காய்! யாருக்கு நீ இந்தப் பூச்சுக்கொண்டு போகிறாய்?' என்று விலாஸத்தோடு கேட்டருள, அந்தகூனி இவ்வாறு காதலுடையவன் போலக் கண்ணன் அருளிச்செய்தது கேட்டு அவனது திருக்கண்களினாலே மனமிழுக்கப்பட்டவளாய் "அழகனே! நான் **நைகவக்கிரை** யென்பவளென்றும் கம்ஸனாலே சந்தநாதிப் பூச்சுக்கள் ஸித்தஞ்செய்யும் வேலையில் வைக்கப்பட்டவளென்றும் நீ அறியாயோ?" என்ன: கண்ணன் எங்கள் திருமேனிக்கு ஏற்ற வெகு நேர்த்தியான இந்தப் பூச்சை எங்கட்குக் கொடுக்கவேண்டும்' என்று சொன்னவுடனே, அவள் 'அப்படியே திருவுள்ளம் பற்றுங்கள்' என்று மிக்க அன்போடு ஸமர்ப்பிக்க, அப்பூச்சைத் திருமேனியில் அணிந்து ஸ்ரீ க்ருஷ்ணன் இவளிடத்து மிகவும் ப்ரஸந்நனாய், நடுவிரலும் அதன் முன்விரலுங்கொண்ட நுனிக்கையினாலே அவளை மோவாய்க்கட்டையைப் பிடித்துத் தன் திருவடிகளினால் அவள் கால்களை அமுக்கி இழுத்துத் தூக்கிக் கோணல் நிமிர்த்து அவளை மகளிரிற் சிறந்த உருவினளாக்கியருளினன்.

## 63 குவலயாபீட பஞ்ஜநம், மல்லவதம், கம்ஸவதம்

பின்பு கம்ஸனுடைய அரண்மனையை நோக்கிச் செல்லுகையில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட **குவலயாபீட** மென்னும் மதயானை கோபித்து வர, அவ்யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அவற்றால் அடித்து அவ்யானையை உயிர்தொலைத்து விட்டு உள்ளே செல்லுகையில், அவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்ரமாகப் பெரும்போர்செய்ய, அவர்களையெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டுப் பிறகு மஞ்சத்தின்மீது வீற்றிருந்த கம்ஸன்மேல் வேகமாக எழும்பி கிரீடம் கழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர்பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான்விழுந்து அவனைக் கொன்றிட்டனன் கண்ணபிரான்.

## 64 ஸாந்தீபிநி புத்திரனை மீட்டுக்கொடுத்தது

பலராம கிருஷ்ணர்களிருவரும் வேதாத்யயநஞ் செய்ய விரும்பி அவந்தி நகரத்திற்குச் சென்று அங்கிருந்த **ஸாந்தீபிநி** என்னும் ப்ராஹ்மணோத்தமர் பக்கல் ஸகல சாஸ்திரங்களையும் அறுபத்துநான்கு நாளைக்குள் அதிகரித்து விடைபெறுங் காலத்திலே குருதக்ஷிணை

ஸமர்ப்பிக்கத் தேடுமளவில், அவ்வாசாரியரும் கண்ணபிரானுடைய அதிமாநுஷ சேஷ்டித சக்தியை அறிந்தவராகையாலே 'பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு ப்ரபாஸதீர்த்த கட்டத்திற் கடலில் மூழ்கி இரந்துபோன என் புத்திரனைக் கொண்டுவந்து தரவேண்டும்' என்று அபேக்ஷிக்க, கண்ணன் 'அப்படியே என்று, அப்புத்திரனைக் கொண்டுபோன, சங்கின் ரூபந்தரித்து ஸமுத்திர ஜலத்தில் வாஸஞ்செய்கின்ற **பஞ்சஜநன்** என்கிற அஸுரனைக் கொன்று, யமபட்டணத்துக்கு எழுந்தருளி அங்கு யாதனையிற் கிடந்த அக்குமாரனைப் பூர்வ தேஹத்தில் ஒன்றும் விசேஷமறக் கொண்டுவந்து கொடுத்தருளி ராமகிருஷ்ணரிருவரும் மதுராநகரம் போய்ச் சேர்ந்தனர்.

## 65 ருக்மிணீ பரிணயம்

விதர்ப்பதேசத்தில் குண்டினமென்கிற பட்டணத்தில் பீஷ்மகனென்கிற அரசனுக்கு ருக்மி என்கிற பிள்ளையும் **ருக்மிணி** என்கிற பெண்ணுமிருந்தனர். அந்த ருக்மிணியானவள் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அவதாரம். அவளுக்கு யுக்தவயது வந்தவுடன் கிருஷ்ணன் சென்று இப்பெண்ணை எனக்கு விவாஹஞ் செய்துகொடுக்கவேணுமென்று கேட்க, ருக்மி என்பவன் அவளைச் சேதிதேசத்தரசனை சிசுபாலனுக்குக் கொடுக்கவிரும்பியவனுதலால் கிருஷ்ணனுடைய விருப்பத்திற்கு உடன்படாதொழிந்தான். சிலநாள் கழிந்தபின் அந்த ருக்மிணியின் கல்யாணத்துக்காக ஸ்வயம்வரம் கோடித்து ஸகல தேசத்தரசர்களையும் ருக்மி வரவழைத்தான். அவர்கள் வந்து சேர்ந்தவுடனே கிருஷ்ணனும் பலராமன் முதலியவர்களைக் கூட்டிக்கொண்டு அப்பட்டணத்துக்குப்போய் கல்யாணத்துக்கு முதல்நாள் அந்த ருக்மிணியை உபாயமாய் அபஹரித்துக்கொண்டு வந்துவிட்டான்; **தந்தவக்த்ரன்** முதலிய பல அரசர்கள் போர்செய்ய எதிர்த்துவர அவர்களைப் பலராமனும் கண்ணபிரானும் முதுகு காட்டி ஓடும்படி செய்துவிட்டனர். பிறகு ருக்மிணிப்பிராட்டியின் தமையனை ருக்மியானவன் 'இப்படி செய்கையாவது ஏன்?' என்று எதிர்ப்பொருது மீட்பதாக நினைத்துவந்து கண்ணனைத் தகைய, அப்போது ஸ்ரீகிருஷ்ணன் ' இவனைக்கொன்றால் ருக்மிணி மனம்வருந்துவள் என்று அவனைப் பிடித்துத் தனது தேர்க்காலிலேகட்டி அப்பால் அவனது தலையைச் சிரைத்திட்டு மாநபங்கம் செய்துவிட்டுப் பின்பு ருக்மிணியை விதிபூர்வமாகக் கல்யாணஞ்செய்து கொண்டு அவளிடத்தில் ப்ரத்யும்நனென்ற பிள்ளையைப் பெற்றார். அதனால் காமர்தாதையாயினர்.

## 66 நரகாஸுர வதமும், பாரிஜாதாபஹரணமும்

எம்பெருமான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக்கோட்டாற் குத்தியெடுத்தபொழுது எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக குமாரனாய்ப் பிறந்தவனும் அஸமயத்திற் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான **நரக**னென்பவன் ப்ராக்ஜோதிஷ மென்னும் பட்டணத்திலிருந்து கொண்டு ஸகல ப்ராணிகளையும் நலிந்து தேவ ஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம் புணர்வதாகக் கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்நபர்வதத்தையும் தேவர் தாயான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்து போனதுமன்றி இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக் கொண்டுபோகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்துப் பூமிதேவியின் அம்சமான **ஸத்யபாமை** யுடனே தான் கருடன்மேலேறி அந்நகரத்தை யடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்திரியான **முரன்** முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த

நரகாஸுரனையும் அறுத்துத்தள்ளி அழித்து, அவன் பல திசைகளிலிருந்து கொண்டுவந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு அந்த நரகனால் முன்பு கவரப்பட்ட (இந்திரன் தாயான அதிதி தேவியின்) குண்டலங்களை அவ்வதிதிதேவிக்குக் கொடுக்கும்பொருட்டு ஸத்யபாமையுடனே கருடனது தோள்மேலேறிக் கொண்டு தேவலோகத்துக்குச் செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்பிக்கவில்லை யாதலின், அவள் அதனைக்கண்டு விருப்புற்றவளாய் நாதனை நோக்கி 'பிராணநாதனே! இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டு போகவேண்டும்' என்றதைக் கண்ணபிரான் திருச்செவி சார்த்தி உடனே அந்த வ்ருக்ஷத்தை வேரோடு பெயர்த்துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர்செய்த இந்திரனை ஸகலதேவ ஸைந்யங்களுடன் சங்கநாதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு பாரிஜாத மரத்தை த்வாரகைக்குக் கொண்டுவந்து ஸத்யபாமை வீட்டுப் புழைக்கடைத் தோட்டத்தில் நாட்டியருளினன்.

## 68 பந்தவிலோசனத்து வேண்டடிசிலுண்டது

*(நாச்சியார் திருமொழியில் 12—6 பாட்டில் அநுஸந்தித்த கதை)*

ஒருநாள் கண்ணபிரானும் பலராமனும் பசுக்களுடனும் இடையர்களுடனும் யமுனையாற்றின் கரையிலே சென்று நெடும்போது பசுக்களை மேய்த்துக் களைத்து ஆற்றங்கரையில் ஓரிடத்திலே உட்கார்ந்தவளவில், இடைப்பிள்ளைகளெல்லாரும் க்ருஷ்ண பலராமர்களை நோக்கித் தங்களுடைய பசியின் கொடுமையைக்கூறி 'இப்போதே நீங்கள் இப்பசியைப்போக்கியருளவேணும்' என்று மிக்க ஆர்த்தியுடன் பிரார்த்திக்க, அவர்களுடைய பரிதாபத்தை யறிந்த கண்ணபிரான், 'ஓ பிள்ளைகளே! ஸமீபத்தில் சில மஹரிஷிகள் **ஆங்கிரஸ** மென்னும் வேள்வியை அநுஷ்டித்துக்கொண்டிருக்கிறார்கள், நீங்கள் அவர்களிடம்போய் என்பெயரையும் என்தமையனார் பெயரையும் சொல்லி, இன்னாரால் நாங்கள் அனுப்பப்பட்டிருக்கிறோமென்று கூறி அன்னம்விரும்புங்கள், பசிதீரும்' என்று கட்டளையிட்டனுப்பினான். அவர்களும் அங்ஙனமே அவ்விடஞ் சென்று விநயத்துடன் இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்து அடிசில் வேண்ட, அவ்வந்தணர்கள் இவ்வாயர்களின் பேச்சைச் செவிகொடுத்துங் கேளாதொழியவே ஆய்ப்பிள்ளைகள் க்ருஷ்ண பலராமர்களிடம் மீண்டுவந்து செய்தியைச் சொல்ல, அதுகேட்ட கண்ணபிரான் புன்முறுவல்செய்து, 'பிள்ளைகாள்! அந்த மஹரிஷிகளுடைய தர்மபத்தினிகள் இருக்கிறார்களே, அவர்களிடஞ் சென்று நானும் பலராமனும் இங்கே இருப்பதாகச் சொல்லி ப்ரஸாதம் கேளுங்கள், அப்பெண்டிர் தவறாது தந்திடுவர்கள்' என்று சொல்லி அவர்களை ரிஷிபத்னிகளிடமனுப்ப, உடனே அவர்கள் அவ்விடஞ்சென்று அந்த ரிஷிபத்னிகளை நமஸ்கரித்து 'அம்மனைமீர்! இதோ ஸமீபத்தில் கண்ணபிரானும் நம்பி மூத்தபிரானும் பசுக்களை மேய்த்துக் களைத்திருக்கின்றனர், அவர்களோடு அநுசரர்களாக வந்த அஸ்மதாதிகளும் களைத்திருக்கின்றோம், எல்லாரும் பசிதீர்ந்து மகிழும்படி ப்ரஸாதம் தரவேணும்' எனவேண்ட, அப்பெண்டிர்கள் ஸ்ரீக்ருஷ்ண நாமச்ரவண மாத்திரத்திலே பரமானந்தமடைந்து உடம்பு மயிர்க்கூச்செறிந்து உடனே பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம் சோஷ்யம்—என நான்குவகைப்பட்ட அன்னவர்க்கங்களையும் நல்ல நல்ல பாத்திரங்களிலெடுத்துக் கொண்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்களிருக்குமிடத்தை நோக்கிப் புறப்படுகையில், தந்தையர் தாய்மார் மக்கள் உடன்பிறந்தார் பர்த்தாக்கள் முதலானோர் எவ்வளவு தடுத்தும் அவர்களுடைய தடைக்கு உடன் படாதாராய் நிலைநின்ற பக்திநிஷ்டையையுடையவர்களாய் விரைந்து வந்து யமுனையாற்றங்கரைச்சோலையிலே நம்பிமூத்தபிரானையும், கண்ணபிரானையும்

ஸேவித்து, கொணர்ந்த அன்னவர்க்கங்களை ஸமர்ப்பித்துவிட்டுப் பரமாநந்த பூரிதர்களாய் மீண்டுசென்றனர். அவ்வடிசிலைக் கண்ணபிரான் அவ்வாயர் பிள்ளைகளுக்குத் தந்துதானும் அமுதுசெய்தான். அவ்வடிசில் நாடோறும் குறிப்பிட்ட காலத்தில் வரும்.

## 69 வாணனுயிரந் தோள் துணித்ததும், வாணனுக்கு அருள்புரிந்ததும்

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷை யென்பவள், ஒருநாள் ஒரு புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிகுந்த ஆசைபற்றியவளாய், தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ண னுடைய பௌத்திரனும் ப்ரத்யும்னனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்து கொண்டு 'அவனைப் பெறுவதற்கு உபாயஞ் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால், துவாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டு வந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்து வர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்தப் பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினாலே பொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப்போட்டிருக்க, துவாரகை யிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரத முனிவ னால் நடந்த வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரிய திருவடியை நினைத் தருளி, உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட் டணத்தின் சமீபத்திற் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரான் பிரமத கணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற் றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தை உண்டாக்கி, அதன் சக் தியினாலே அதனைத் துரத்திவிட்ட பின்பு சிவபிரானது அநுசாரகையாற் பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர்செய்யத் தொடங்க, அவனுக்குப் பக்க பலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த் துப்போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்திரத்தைப் பிரயோகித்துச்சிவனை ஒன்றுஞ்செய்யா மற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமானமான தனது சக்ராயுதத்தை யெடுத்துப் பிரயோகித்து, அப்பாணனது ஆயிரந்தோள் களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக விருக் கையில், பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்த னுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின் மீண்டுவந்தனன்.

## 70 பௌண்ட்ரகவாஸுதேவனைப் பரிசழித்தது.

க்ருஷ்ணவதார காலத்தில் பௌண்ட்ரகவாஸுதேவன் என்பானொரு அரசன் பிறந் திருந்தான்; பலமூடர்கள் திரண்டு 'நீ தான் வாஸுதேவன்' என்று அவனைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். அதனால் அவனும் 'நானே வாஸுதேவன்' என்று மயங்கி மார்பு நெறித்துச் சங்கு சக்கரம் கிரீடம் முதலியவற்றைச் செய்வித்துத் தானணிந்துகொண்டு, தூதனையழைத்து "நீ கிருஷ்ணனிடம்போய் என் பெயரைச்சொல்லி 'இன்னான் வாஸுதேவ

னுயிருக்க, நீ அவனுடைய சங்கு சக்கரங்களைத் தரிக்கக்கூடாது! இன்று முதல் விட்டுவிட வேண்டியது; இல்லையாகில் அவனோடு யுத்தஞ்செய்து அவனை வென்றாயாகில் தரிக்கலாம்' என்று சொல்லவேண்டியது" என்று சொல்லியனுப்ப, அங்ஙனமே அந்தத்தூதன் வந்து கிருஷ்ணனிடம் அச்செய்தியைச் சொல்ல, கண்ணபிரான் சினமுற்றுப் பெரிய திருவடியின் மீதேறிச் சென்று போர்செய்து அப்பௌண்ட்ரகனைத் தனது திருவாழியினால் தலையறுத்துக் கொன்றொழித்தனன்.

## 71 காசீ நகரத்தைக் கொளுத்தியது.

பிறகு பௌண்ட்ரகன் இறந்துபோனதை அவனுடைய தோழனாகிய காசி மன்னன் கேள்விப்பட்டு க்ருஷ்ணனையும் மற்றும் யாதவர்களையும் த்வாரகையையும் அழித்திடுவதாகச் சங்கற்பித்து ஒரு பிசாசத்தை ஸ்ருஷ்டித்து ஏவலிட்டான்; அப்பிசாசம் த்வாரகைக்கு வந்து ஜனங்களைப் பாதிக்கத்தொடங்கிற்று. இச்செய்தியைச் செவியுற்ற கண்ணபிரான் தனது திருவாழியை ப்ரயோகிக்க, அந்தச் சக்கரம் அந்தப் பிசாசத்தைத் துரத்திக்கொண்டு காசியளவும் போய் அப்பிசாசத்தையும் அத்துடன் சேர்ந்து வந்த கணங்களையும் அந்தக் காசி பட்டணத்தையும் நீறுக்கிவிட்டு ஸ்ரீக்ருஷ்ணபகவானருகில் வந்து சேர்ந்தது.

## 72 சிசுபாலனைச் சிரமறுத்தது.

சிசுபாலன், பிறந்தபொழுது, நான்கு கைகளையும் மூன்று கண்களையுமுடையனாயிருந்தான்; அப்பொழுது அனைவரும் இது என்னவென்று வியக்கும்போது ஆகாயவாணி 'யார் இவனைத் தொடுகையில் இவனது கைகளிரண்டும் மூன்றும் விழியும் மறையுமோ, அவனால் இவனுக்கு மரணம்' என்று கூறிற்று; அவ்வாறே பலரும் தொடுகையில் மறைபடாத கைகளும் கண்ணும், கண்ணபிரான் தொட்டவளவிலே மறைபட்டன; அதனால் 'இவனைக் கொல்பவன் கண்ணனே' என்றறிந்த இவன்தாய் 'யாது செய்யினும் என் மகனைக் கொல்லலாகாது' என்று கண்ணனைவேண்ட; அந்தஅத்தையின் நன்மொழிக்கு ஒரு சார் இணங்கிய கண்ணன் 'இவன் எனக்கு நூறுபிழை செய்யுமளவும் இவன் பிழையைப் பொறுப்பேன்' என்று கூறியருளினன். பின்பு, சிசுபாலன், தனக்குக் கண்ணன் சத்துருவென்பதை இளமையிலேயே யறிந்து அதனாலும் பூர்வஜந்ம வாஸனையாலும் வளர்ந்த மிக்க பகைமையைப் பாராட்டி, எப்பொழுதும் அப்பெருமானுடைய திவ்ய குணங்களையும் திவ்ய சேஷ்டிதங்களையும் நிந்திப்பதே தொழிலாக இருந்தான். இவனுக்கு மணஞ்செய்து கொடுப்பதென்று நிச்சயித்திருந்த ருக்மிணியைக் கண்ணன் வலியக் கவர்ந்துமணஞ்செய்துகொண்டது முதல் இவன் கண்ணனிடத்து மிக்க வைரங்கொண்டனன். பின்பு இந்த்ரப்ரஸ்த நகரத்தில் நடந்த ராஜஸூய யாகத்தில் தர்மபுத்திரனாற் கண்ணபிரானுக்கு அக்ரபூஜை செய்யப்பட்டதைக் கண்டு அளவிறந்த வசைச்சொற்களைப் பிதற்றி அதுபற்றிக் கண்ணபிரானது சக்ராயுதத்தால் தலை துணிக்கப்பட்டு இறந்து தேஜோமயமான திவ்ய சரீரம் பெற்று எம்பெருமானது திருவடியை அடைந்தனன்.

## 73 காண்டவ வனத்தைத் தீமூட்டிவிட்டது.

ஒரு நாள் அக்நிபகவான் ஒரு அந்தணவேடம் பூண்டு, அர்ஜுநனும் கண்ணபிரானும் கூடியிருக்குமிடத்திலே வந்துசேர, அவ்வந்தணனைக் கிருஷ்ணார்ஜுநர்கள் நன்கு உபசரிக்க, அவன் உணவுவேண்ட, 'வேண்டிய உணவை அளிப்போம்' என்று அவ்விருவரும் உறுதிமொழி கூற, உடனே அவ்வந்தணன் தான் இன்னானென்று உண்மை தெரிவித்துக் காண்

டவவனத்தைத் தனக்கு இரையாக அளிக்குமாறு வேண்ட அவர்களும் பல கொடிய அசுரர்களும் அரக்கர்களும் துஷ்டமிருகங்களும் நிரம்பியிருக்குமிந்தக் காடு அழிந்தொழிவது நன்றே' என்று நிச்சயித்து அக்நிபகவானை நோக்கி 'அங்ஙனமே உண்பாயாக' என்று அநுமதிதந்ததின்பேரில் அக்நி அக்காடு முழுவதையும் ஆக்கிரமித்துப் பூர்ண திருப்தியாக உண்டனன் [என்ற கதை மஹா பாரதத்தில் ஆதிபருவத்தில் விரித்துரைக்கப் பட்டுள்ளது.] *மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனான கண்ணபிரான் தனது அன்பனான இந்திரன் வருந்தும்படி அவனது காட்டை யழிக்குமாறு அநுமதித்தது அவதார ப்ரயோஜனம் நிறைவேறுதற்காகவேயாம; அக்காட்டிலுள்ள அளவற்ற துஷ்ட ஜந்துஸமூஹங்கள் தொலைந்தொழியும் முகத்தால் பூமியின் பாரத்தைக் குறைத்தருளினனென்றுணர்க. இவ்வனத்தின் தன்மையைப்பற்றி வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தில் காண்டவவனதகனச் சருக்கத்தில்—"மிடைந்த நால்வகை மகீருகங்களு நெடு வெற்பினங்களுந் துன்றி, அடைந்த தானவரரக்கர் பேருரகருக்காலயங்களுமாகிக், குடைந்துசோரி கொள் வாளுகிரி முதற்கொடு விலங்கினமிக்குக், கடைந்த கூரெயிற்றரல் தக்ககனும் வாழ் கானனமது கண்டீர்" என்ற செய்யுள் இங்குக் குறிக்கொள்ளத்தக்கது.

## 74 பாண்டவர்க்குத் தூது சென்றது.

பாண்டவர்களையும் கௌரவர்களையும் எவ்வகையினாலும் ஒருங்கவிட்டு வாழ்வித்தற் பொருட்டுக் கண்ணபிரான் துரியோதனனிடம் தூது சென்றது உலகப் பிரசித்தம்.

## 75 துரியோதனன் பொய்யாஸனமிட்டபோது கண்ணபிரான் விச்வரூபமெடுத்து மல்லரை முடித்தது

(பெரியதிருமொழி 9—1—8 பாட்டில் அநுஸந்தித்த கதை.)

கண்ணபிரான் பாண்டவர்கட்குத் தூதனாய்த் தன்னிடம் வரப்போகிறானென்பதையறிந்த துரியோதனன் எவ்வகையினாலேனும் க்ருஷ்ணனை முடித்துவிடுவதே கருமமென்று துணிந்து ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப்பெரிய நிலவறை யொன்றைத் தோண்டுவித்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே யிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற் பிளப்புகளால் மேலே மூடி அதன் மேற் சிறந்த ரத்நாஸந மொன்றை யமைத்து அவ்வாஸநத்தின்மீது கண்ணபிரானை வீற்றிருக்கச்சொல்ல, கண்ணன் அங்ஙனமே அதன்மேலேறின மாத்திரத்திலே மூங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆஸனம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் மல்லர்கள் எதிர்த்துவர, பெருமாள் மிகப்பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையுங் கால்களையுங் கொண்டு எதிர்த்து அந்த மல்லர்களை மடிவித்தான்.

## 76 பார்த்தன் தேரில் பாகனாய் நின்றது.

கண்ணபிரான், பாண்டவர் துரியோதனாதியர் என்ற இருவகுப்பினரையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துரியோதனாதியரிடம் தூதாகச் சென்று 'பாண்டவர்களும் நீங்களும் பகைமைகொள்ளவேண்டாம்; ராஜ்யத்தில் இருவகுப்பினர்க்கும் பாகமுண்டு; ஆதலால் ஸமபாகமாகப் பிரித்துக்கொண்டு சமாதானமாக அரசாட்சி செய்து வாழுங்கள்' என்று பல்வாறாக அருளிச்செய்ய, அவர்கள் அந்த நல்லவார்த்தைகட்குச் சிறிதும் உடன்படாமல் 'பராக்ரமமிருந்தால் போர்செய்து ஜயித்துக்கொள்ளட்டும்; இந்தப் பூமி வீரர்க்கே உரியது' என்று மிக்க செருக்குக்கொண்டு சொல்லவே, தான் பாண்டவபக்ஷபாதியாயிருந்து அவர்கட்கே வெற்றி யுண்டாக்கும் பொருட்டுப் பார்த்தன் தேரில் பாகனாய் நின்றனன்.

## 77 அர்ஜுநனது தேர்க்குதிரைகளின் விடாயை மோழையெழுவித்துத் தீர்த்தது

(பெரியாழ்வார் திருமொழி 4—2—7 பாட்டில் அநுஸந்தித்த கதை.)

அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகள் தண்ணீர்க்கு விடாய்த்து இளைத்தவளவில் அவன்பக்கல் பக்ஷபாதியான கண்ணபிரான், கடினமான ஸ்தலத்திலும் நீர் நாமபு அறிய வல்லவனாதலால், அங்கு வாருணாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கீழுள்ள நீரை வெளிக்கிளப்பிக் குதிரைகளைவிட்டு நீரூட்டிப்புரட்டி யெழுப்பிக் கொண்டுபோந்து பூட்டிக்கொண்டுவந்து முன்னே நிறுத்த, இதைக்கண்ட மாற்றரசரெல்லாம் 'அர்ஜுனன் பக்கல் இக்கண்ணனுக்குப் பக்ஷபாதமிருந்தபடி யென்!, இனி நாம் இவனை வெல்லுகையென்று ஒன்றுண்டோ?' என்று குடல் மறுகினர்.

## 78 ஆழியால் இரவியை மறைத்தது. (ஜயத்ரதனை மடித்தது)

மஹாபாரத யுத்தத்திற் பதின்மூன்றுநாளிலே அர்ஜுன புத்திரனை அபிமன்யுவைத் துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனான ஸைந்தவன் கொன்றுவிட, அங்ஙனம் தன் மகனைக்கொன்ற அந்த ஜயத்ரதனை மற்றைநாள் ஸூர்யாஸ்தமனத்திற்குள் தான் கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவதாக அர்ஜுனன் சபதஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினான்காநாட் பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின் நடுவே நிலவறையில் மறைத்து வைத்திருக்க, அர்ஜுனனது சபதம் பொய்த்துவிடுமே யென்று சிந்தித்த கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சில நாழிகைக்கு முன்னமே தன் சக்ராயுதத்தால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருள் அடர்ந்ததனால் அர்ஜுனன் அக்நிபிரவேசஞ் செய்யத் தொடங்க, அதனைக் களிப்போடு காணுதற்குத் துரியோதனனுடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க, அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிவிடவே, பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுனன் ஜயத்ரதனைத் தலைதுணித்தான்.

## 79 அபிமந்யுவின் மகனை உயிர்மீட்டருளியது

பண்டு பாரதப்போரில், அர்ஜுனன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை என்பவளுடைய கருவை நோக்கி அசுவத்தாமாவினால் பிரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்திரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரிக்ஷித்] நீருயொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர்பெறுத்த வேணுமென்று ஸுபத்திரையினால் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரை மலர்போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிதொடங்கி முடியீறாக ஸ்பர்சித்தருள, உத்தரக்ஷணத்திலேயே அச்சிசு உயிர்பெற்றது. பிறகு ப்ராப்தகாலத்தில் ஜனித்தது.

## 80 வைதிகன் பிள்ளைகளை மீட்டுக் கொடுத்தது

ஒரு பிராமணனுக்கு முறையே பிறந்த மூன்றுபிள்ளைகள், பிறந்த அப்பொழுதே பெற்றவளுமுட்பட முகத்தில் விழிக்கப்பெறாதபடி இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணாது போய்விடுகையாலே நான்காம் பிள்ளையை ஸ்த்ரீ ப்ரஸவிக்கப் போகிறவளவிலே அந்த அந்தணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒருபிள்ளையையாயினும் தேவரீர் பாதுகாத்துத் தந்தருள வேண்டும்' என்று பிரார்த்திக்க, கிருஷ்ணன் 'அப்படியே செய்கிறேன்' என்று அநுமதிசெய்த பின்பு, ஒருயாகத்திலே தீக்ஷிதனாயுள்ள கண்ணபிரான் எழுந்தருளக் கூடாதென்பதுபற்றி அர்ஜுனன் "நானேபோய் ரக்ஷிக்கிறேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, ப்ராஹ்மணனையுங் கூட்டிக்கொண்டுபோய், ப்ரஸவிக்கிற க்ரு

ஹத்தைச் சுற்றும் காற்றுமுட்படப் பிரவேசிக்கவொண்ணுதபடி சாக்கூடங்கட்டிக் காத்துக்கொண்டு நிற்கையில் பிறந்த பிள்ளையும் வழக்கப்படியே பிறந்தவளவிற் காணவொண்ணுது போய்விடவே, ப்ராஹ்மணன் வந்து அர்ஜுநனை மறித்து 'க்ஷத்ரியாதமா! உன்னுலேயன்றே என் பிள்ளை போம்படியாயிற்று; க்ருஷ்ணன் எழுந்தருளிக்காப்பதை நீயன்றே தடுத்தாய்!' என்று நிந்தித்துக் கிருஷ்ணன் பக்கலிலே இழுத்துக்கொண்டுவர, கண்ணபிரான் கண்டு புன்சிரிப்புக்கொண்டு 'அவனைவிடு; உனக்குப் பிள்ளையை நான் கொண்டுவந்து தருகிறேன்' என்றருளிச் செய்து, ப்ராஹ்மணனையும் அர்ஜுநனையும் தன்னுடன் கொண்டு தேரிலேறி, அர்ஜுநனைத் தேர்செலுத்தச்சொல்லி, அத்தேர்க்கும் அவர்கட்கும் திவ்யசக்தியைத் தனது ஸங்கல்பத்தால் கற்பித்து, இவ் வண்டத்துக்கு வெளியே நெடுந்தூரமளவுங் கொண்டுபோய், அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தேஜோரூபமான பரமபதத்திலே தன் நிலமாகையாலே தானேபோய்ப் புக்கு, அங்கு நாச்சிமார் தங்கள் ஸ்வாதந்திரியங் காட்டுகைக்காகவும் கண்ணபிரானது திவ்ய ஸௌந்தர்யத்தைக் கண்டு களிக்கைக்காகவும் அழைப்பித்து வைத்த அந்தப் பிள்ளைகள் நால்வரையும் அங்கு நின்றும் பூர்வரூபத்தில் ஒன்றுங்குலையாமற் கொண்டு வந்து கொடுத்தருளினன்.

## 81 அர்ஜுநன் கண்ணபிரானது சேவடிமேல் அர்ச்சித்த புஷ்பங்களைச் சிவபிரானது முடிமேற் கண்டது

பாரதயுத்தம் நிகழுங்காலத்தில் அர்ஜுநனுக்குப் பாசுபத அஸ்திரம் வேண்டியிருந்தது; அது பசுபதியாகிய சிவபெருமானது அஸ்திரமாதலால் அப்பெருமானை ஆராதித்துப் பெறவேண்டியதாயிருந்தது. அதற்காக அர்ஜுனன் புறப்படப்புகுமளவிலே கண்ணபிரான் தனது முழந்தாளைக் காட்டி 'அர்ஜுந! நீ சிவபிரானுக்குச் செய்ய நினைத்திருக்கும் பூசனையை இங்கே செய்வாயாக' என்று நியமிக்க, அர்ஜுநனும் அங்ஙனமே செய்திட, அன்றிரவு சிவபெருமான் அந்த ஆராதனையைத் தனது முடிமேல் தாங்கிக் கொண்டுவந்து அர்ஜுநனுக்குக் காட்சிதந்து பாசுபதாஸ்திரத்தை அளித்துச் சென்றனன். (இதனால் சிவபிரான் எம்பெருமானது அவயவ ஏகதேசமென்பது விளங்கிற்றும்.) (இக்கதை திருவாய்மொழி 2—8—6ல் நம்மாழ்வார் அநுஸந்தித்தது.)

## 82 ரைவதககிரியில் கண்ணபிரானை நாரத முனிவர் புகழ்ந்தது

துரியோதநாதியருடைய யாகத்தில் வந்த அரசர்களனைவரும் ஸ்ரீத்வாரகையின் மஹிமையையும், அங்கு ஸ்ரீக்ருஷ்ணன் எழுந்தருளியிருக்கிற மதிப்பையுமெல்லாம் துரியோதநாதிகளின் முகமாகக் கேட்டுத் தாங்கள் கண்ணபிரானேடு உறவு பண்ணிக்கொள்ள விரும்பி, அத்துரியோதநாதியருடனும் பாண்டவர்களுடனும் ஸபரிவாரராய்ப் புறப்பட்டு ரைவதகபர்வதத்திற்குப் போந்து, தாங்கள் க்ருஷ்ணஸேவார்த்தமாக வந்திருக்கிறபடியைக் கண்ணபிரானுக்குத் தெரிவிக்க, அதையறிந்த கண்ணனும், 'இவர்கள் பரிவாரங்களுடன் திரண்டுவருகைக்குக் காரணம்யாதோ' என்று சிந்தித்து, ஸ்ரீபலராமனையும் ஸாத்யகியையும் முன்னிட்டுக்கொண்டு ஸேனைகளுடனும் ஆயுதங்களுடனும் அவர்களிருப்பிடத்திற் கெழுந்தருளி எல்லாரையும் குசலங்கேட்டு, அவரவர்களுடைய வயஸ்ஸுக்கும் வலிவுக்கும் அறிவுக்கும் பெருமைக்கும் தக்கவாறு ஆஸநமிடுவித்துத் தானும் தனக்கேற்றதொரு சீரியசிங்காசனத்தில் எழுந்தருளியிராநிற்கச்செய்தே ஸ்ரீ நாரத மஹரிஷிவந்து வணங்கி ஸ்ரீக்ருஷ்ண பகவானை நோக்கி "ஸர்வதேவர்களிற் காட்டிலும் நீர் ஆச்சரியகாரும் தந்ய [தந்யன்—க்ருதார்த்தன்.] ருமாகாநின்றீர்; இங்ஙனிருப்பார் இவ்வுலகில் வேறு யாருமில்லை" என்று விண்ணப்பஞ்செய்ய, கண்ணபிரான் அதைக்கேட்டுப் புன்முறுவல்செய்து, "முனிவனே! தக்ஷிணை

களோடுகூட நான் ஆச்சரியனாகவும் தன்யனாகவும் சொல்லப்பட்டவன்" என்றருளிச்செய்ய அதனைக்கேட்ட முனிவன் மிகவும் மனமகிழ்ந்து, 'பிரானே! தேவரீர் அருளிச்செய்த வாக்கியத்தினால் அடியேன் மிகவும் மகிழ்வுற்றேன்; இனி வந்தவழியே விடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பஞ்செய்து போக நினைத்தவளவில், அங்குள்ள அரசர்கள் இப்படி ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் நாரதமுனிவற்கும் நடந்த ஸம்வாதத்தின் உட்பொருளைத் தாங்கள் அறியாமையாலே ஸ்ரீ கிருஷ்ணனுடைய திருமுகமண்டலத்தைநோக்கி "நாரதமுனிவன் தேவரைக் குறித்துச் சொன்னவாக்கியமும், அதற்கு உத்தரமாகத் தேவர் அருளிச்செய்த வாக்கியமுமாகிற இந்த மஹாரஹஸ்யம் எங்களுக்கு இன்னதென்று விளங்கவில்லை; இதனை விரித்துரைக்கவேணும்" என்று பிரார்த்திக்க, கண்ணபிரானும் அம்முனிவன்றன்னையே கூறுமாறு நியமித்தருள, அம்முனிவன் அவ்வரசர்களை நோக்கி இவ்வண்ணம் கூறத் தொடங்கினான்;—

நான் . ஒருகால் கங்கைக்கரையிலே த்ரிஷவண ஸ்நாநாதிகளைப் பண்ணி வர்த்தியாநிற்கச்செய்தே, ஒருநாள் இரவு கழிந்து சூரியனுதித்தவளவில், கூப்பீடுவழியளவு அகலமும் அதில் இரட்டிநீளமுமாய் நீரினுள்ளே நனைந்து உடம்புமுழுவதும் பாசி பற்றிக் கண்ணுக்கு இனிதாயிருப்பதொரு ஆமையைக் கண்டு "இப்படி நீரினுள்ளே ஒன்றையும் சிந்தியாமல் சங்கையற்றுத் திரியா நின்ற நீ அற்புதமான சரீரத்தையுடையனாகா நின்றாய், தந்யனாகா நின்றாய் என்று யான் அறுதியிட்டிருக்கின்றேன்" என்று நான் சொல்ல; அதனைக்கேட்ட அந்த ஆமை என்னைப்பார்த்து, ஒரு மநுஷ்யன் சொல்லுவதுபோல, "வாரீர் முனிவரே! என்னிடத்தில் ஆச்சரியமேது? நான் எங்ஙனே தந்யனாகாநின்றேன்? என்னைப்போன்ற பதினாயிரம் ஸத்வங்கள் ஸஞ்சரிக்கப்பெற்ற கங்காநதியன்றோ அங்ஙனாவது" என்றுசொல்ல; பிறகு நான் அக்கங்கையைக் குறித்து அங்ஙனே சொல்ல; அதுகேட்ட அக்கங்கையானது ஒரு வடிவுகொண்டு நின்று ஆமையைப் போலவே சொல்லி, "என்னைப்போற் பல்லாயிரம் நதிகள் சென்று சேர்தற்கிடமான கடலன்றோ ஆச்சரியமும் தந்யமுமாவது" என்று சொல்ல; பிறகுநான் அக்கடலைநோக்கி அங்ஙனே சொல்ல; அக்கடல் என்னைப்பார்த்து, "நீர் சொன்னவையிரண்டும் எனக்கில்லை; யாதொரு பூமியின்மேல் நான் வாஸம்பண்ணா நிற்கிறேனோ அப்பூமிக்கன்றோ அவையிரண்டு முளது" என்ன; பிறகு நான் பூமியை நோக்கிப் புகழ்ந்துகொண்டு "ஆச்சரிய பூதையாகா நின்றாய், தந்யையாகாநின்றாய்" என்று சொல்ல; அது கேட்ட பூமி "யான் அங்ஙனுள்ளவளல்லள், எனக்கு ஆதாரமாயிருக்கின்ற பர்வதங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன; பிறகுநான் அப்பர்வதங்களைக்கிட்டி அங்ஙனே சொல்ல; அவை என்னைப்பார்த்து "அப்படிப்பட்டவை நாம் அல்லோம், பிரஜாபதியான பிரமனன்றோ இவை யிரண்டையுமுடையான்" என்ன; பிறகு நான் பிரமனைச் சென்று கிட்டி அடைவுபட அநுவர்த்தித்துப் புகழ்ந்துகொண்டு "பிரமதேவனே! ஆச்சரியனாகாநின்றாய், தன்யனாகா நின்றாய், உன்னை யொப்பவர் ஆருமில்லை" என்ன; அதைக்கேட்ட பிரமன் என்னைப்பார்த்து "இங்ஙனே என்னைப் புகழ்வதென்? ருக், யஜுஸ் ஸாமம், அதர்வணம் என்னும் பெயருடையனவும் தத்துவங்களை உணர்த்துவனவும், உலகங்களையும் என்னையும் தரியாநின்றனவுமான வேதங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன; பிறகு நான் வேதங்களைக்கிட்டி "நீங்களன்றோ ஆச்சரிய பூதரும், தன்யரும்" என்ன; அந்தவேதங்கள் என்னைப்பார்த்து "நாங்கள் யஜ்ஞார்த்தமாகப் படைக்கப்பட்டவர்களாதலால், எமக்குப் பராயணங்களான [பராயணம்—சிறந்தகதி] அந்த யஜ்ஞங்களன்றோ அப்படிப்பட்டவை" என்ன; பின்பு நான் அந்த யஜ்ஞங்களைப் பார்த்துப் புகழ்ந்து "உலகத்தில் உங்களிற்காட்டில் ஆச்சரியங்களுமில்லை, தந்யங்களுமில்லை" என்ன; அந்த யஜ்ஞங்கள் என்னைப்பார்த்து "ஆச்சரியசப்தமும், தந்யசப்தமும் எங்கள் பக்கலில் இல்லை; விஷ்ணுவிடத்தில் அவை உள்ளன; அவ்விஷ்ணுவே எங்களுக்குச் சிறந்த கதி; தீயில் ஹோமம் பண்ணப்பட்டு எம்மால் ஸ்வீகரிக்கப்படும் நெய்யை அவ்விஷ்ணுதானே கொடுக்கிறார்" என்ன; அதனைக்கேட்டயான் பூமியில் வந்து உங்கள் திரளின்

நடுவே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணபகவானைக்கண்டு ஸேவித்து "நீர் ஆச்சரியருமாகா நின்றீர், தந்யருமாகாநின்றீர்" என்று நான் விண்ணப்பஞ்செய்ததற்கு உத்தரமாக-"தக்ஷிணைகளோடேகூட நான் ஆச்சர்யனாகவும் தந்யனாகவுஞ் சொல்லப்பட்டவன்" என்று கண்ணபிரானருளிச் செய்த வார்த்தை என்னை மகிழ்வித்தது.

எங்ஙனே யென்னில்;—எல்லா யஜ்ஞங்களுக்கும் தக்ஷிணையோடே கூடியிருந்துள்ள ஸர்வேச்வரன் கதியாகையாலே, "தக்ஷிணையோடுகூட நான் ஆச்சரியனாகாநின்றேன், தந்யனாகாநின்றேன்" என்று கண்ணபிரான் அருளிச்செய்த இவ்வாக்யத்தினால் என்னுடைய ப்ரச்நம் நிறைவேறிற்று என்றுசொல்லி. முதலில் ஆமையினிடத்துச் சொல்லப்பட்டு, அநந்தரம் பரம்பரையாக இவ்வளவும் வந்த "ஆச்சரியனாகாநின்றாய், தந்யனாகாநின்றாய்" என்ற வாக்கியம் தக்ஷிணையோடு கூடின இக்கண்ணபிரானைக் குறித்து என்னால் பிரதிபாதிக்கப்பட்டது; இந்த ரஹஸ்யார்த்தத்தை உங்கட்கு நான் சொல்லித் தலைக்கட்டினேன். இனி நான வந்தவழியேபோகிறேன் என்று, ஸ்ரீ ஹரிவம்ச-விஷ்ணுபர்வத்தில் நூற்றுப்பதினோராவது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட கதை. பெரியாழ்வார் திருமொழி 4—9—5ல் காண்க.

## 83 மாலிகன் தலையைச் சக்ரத்தாலறுத்தது

[பெரியாழ்வார் திருமொழி 2-7-8 பாட்டில் அநுஸந்தித்த கதை இது]

**மாலிகன்** என்பானொருவன் கண்ணபிரானுக்கு உயிர்த்தோழனாய் அப்பிரானிடத்திற் பலவகை ஆயுதங்களையும் பயின்று ஒருவர்க்கும் அஞ்சாமல் அஹங்காரியாய் ஸாதுஜநங்களை ஹிம்ஸித்துக் கொண்டிருக்க, கண்ணபிரான், நண்பனாகிய இவனை நாம் கொல்வது தகாதே! என்ன செய்யலாம்' என்று வியாகுலப்பட்டு ஒரு நாள் அவனை நோக்கி 'நீ இப்படி செய்வது தகாது' என்ன, ஆஸுரப்ரக்ருதியான அந்த மாலிகன் தன் வாயில் வந்தபடி பிதற்றி 'நீ எல்லா ஆயுதங்களையும் எனக்குக் கற்பித்தும் சக்ராயுதப் பயிற்சிமாத்திரம் செய்விக்கவில்லையே' என்று கண்ணன் மேற் குறைகூற 'இதில் பழகுவது உனக்கு முடியாது, எனக்கே அஸாதாரணமானது' என்ன, என்னால் முடியாததுமொன்றுண்டோ? நீ அவச்யம் அதைக் கற்பிக்கவேணும்' என்று அவன் நிர்ப்பந்திக்க, கண்ணன் 'இதுதான் தக்கசமயம்' என்று திருவுள்ளத்திற் கொண்டு சக்ராயுதத்தை யெடுத்துத் தன் ஒற்றை விரலால் சுழற்றி மேலெறிந்து கையிலேற்க, 'இது உனக்கு அரிதே' என்று கண்ணன சொல்லவும் அதை அவன் கேளாமல் அச்சக்ராயுதத்தை வாங்கிச் சுழற்றியெறிந்து பிடிப்பதாக நினைத்துத் தன்கைவிரலைக் கழுத்துக்கு அடுத்து வைத்துநிற்க, அச்சக்கரம் சுழன்று வருவதற்கு இடம்போதாமையாலே அதன் வீச்சு இவன் கையிற்பிடிபடாமல் இவன் தலையை அரிந்துவிட்டது.

## 84 கற்கியவதாரம்

புருஷோத்தமனாகிய ஸ்ரீமந்நாராயணன் க்ருஷ்ணாவதாரம் செய்தருளி மண்ணின் பாரத்தை நீக்கித் தருமநெறிகளை நிலைநிறுத்தித் தன்னடிச் சோதிக்கெழுந்தருள, உடனே இப்புவியில் கலிபுருஷன் செங்கோல்செலுத்தப் புகுந்து அதர்மம் அவிவேகம் அநாசாரம் முதலியவற்றை மெல்ல ஜனங்களிடத்தில் உண்டுபண்ணிக்கொண்டு வந்து நெடுநாள்வரையில் முற்றிவிட்டான். இங்ஙனம் கலி முற்ற முற்ற ஜனங்கள் அல்பாயுஸ்ஸுக்களாவார்கள்; சரீரத்தில் வளர்த்தியும் வலிவும் குறைந்துவிடப்போகிறது; அழகும் தெளிவும் தேஜஸ்ஸும் அடியோடே அழியப்போகிறது; அல்பபுத்திகளாகவும் ஆசாரஹீனர்களாகவும் கல்வியற்றவர்களாகவும் ஆகப்போகிறார்கள். பல சொல்லியென்? எல்லாம் தலைகீழாகப்போகிறது. பாவிகள் எல்லையில்லாமல் நிற்கப்போகிறார்கள். அப்போது நிலமங்கை தாங்கமாட்

டாமல் முன்போலவே எம்பெருமானிடம் சென்று முறையிடவும் அதற்கு அவர் நானே மீண்டும் வந்து அவதரித்துத் துயர்தீர்ப்பேன் என்று அபயமளிக்கவும் நேரப்போகிறது. பிறகு பகவான் வடதிசையின்கணுள்ள சம்பளகிராமத்தில் வாஸம் செய்கிற வைதிகோத்தமனை விஷ்ணுயசஸ் என்பவருடைய மனைவியாகிய ஸுமதியினுடைய கருவிற் புகுந்து பன்னிரண்டாண்டு உறைந்து வைசாகசுக்லத்வாதசியினன்று திருவவதரிக்கப்போகிறார். பிறகு வ்யாஸர் முதலியபெரியோர்கள்சென்று அக்குழந்தைக்கு கல்கியென்று பெயரிடப்போகிறார்கள். பிறகு கல்கிபகவான் வேதமோதுகைக்காகப் பரசுராமனை நாடிச் சிறிது நாள் குருகுலவாஸஞ் செய்து வேதங்களையும் அஸ்த்ரசஸ்த்ரங்களையும் கற்று 'தருமபரிபாலனஞ் செய்வதே குரு தக்ஷிணை' என்று அப்பரசுராமனளிப்பதைக் கொண்டாடி அதிலே கண்ணுங்கருத்துமா [illegible]யிருந்து அவதார காரியத்தை முடிக்கைக்காக ஸங்கல்பம் செய்துகொண்டு, விச்வஜித் அ[illegible]முதலிய யாகங்களைச்செய்ய வேண்டுமென்று தந்தையிடம் அநுஜ்ஞைபெற்று [illegible] திக்விஜயஞ் செய்யப் புறப்பட்டு, முந்துறமுன்னம் பௌத்தர்களின் ராஜ்யத்தை [illegible]ன்று அவர்கள்மேல் படையெடுத்து அங்குள்ளாரை யெல்லாம் தொலைத்திட்டு [illegible]ம யவநர்களுடைய ராஜ்யத்திற்குச் சென்று அங்குள்ள மிலேச்ச சேனைகளையும் அரசர்களையும தான் குதிரைமேலேறிக் கத்தியைக் கையில்பிடித்துத் துண்டுதுண்டாக வெட்டியெறிந்து அத்தேசமெங்கும் ரத்தவெள்ளமும் பிணக்காடுமாக ஆக்கி, அத்தேசங்களில் தன்னை அநுவர்த்தித்துவரும் அரசர்களைப் பட்டாபிஷேகம் செய்வித்துத் தரும மார்க்க பரிபாலனம் செய்விக்கப்போகிறார். பிறகு கலிபுருஷன் மிக்க கோபத்துடனே உருவமெடுத்துக்கொண்டு அதர்மம் அஜ்ஞானம் முதலியவற்றுக்கு அதிஷ்டாந தெய்வங்களையுங் கூட்டிக்கொண்டு கோரரூபியாய்ப் படையெடுத்து வந்தெதிர்ப்பான். பின்பு பகவான் குதிரைமீதேறி அதிவிசித்திரமாக அச்சேனைத்திரளில் ஸஞ்சரித்துத் தான் பிடித்த கத்தியினால் அவர்களுடன் யுத்தஞ்செய்து அவர்கள் பிரயோகிக்கும் ஆயுதங்களையும் மாயைகளையும் நீருக்கிச் சேனைகளை ஒன்றொழியாமற் கொன்று கலிபுருஷனைப் பலவகைகளிலும் பங்கப்படுத்தி அவனுடைய பராக்கிரமத்தை யெல்லாம் ஓய்வித்துப் பின்பு அவன் குடுமியைப் பிடித்திழுத்து அவனது கழுத்தின்மேற் கத்தியையெறிந்து வெட்டப்புகுங்காலத்தில் அக்கலிபுருஷன் பகவானைப் பலவகையாக வேண்டிக்கொண்டு பாதங்களிற்பணிந்து தன்னுயிரை மாத்திரம் தப்பவைத்துக்கொண்டு இவ்வுலகைவிட்டு ஓடிப்போய் ஒளித்துக்கொள்வான். அதன்றியும் அவனுடைய தோழர்களாகிய சோகன் விசோகன் என்ற இரண்டு பெயர் கலிபுருஷனோடிப்போனதைக் கேட்டுக் கல்கி பகவான்மீது மிகவு கோபங்கொண்டு எதிர்த்து வந்து யுத்தஞ்செய்ய, அவர்களை எத்தனையடி அடித்தாலும் அவர்கள் சாவின்றியே யிருப்பதைக்கண்டு இதற்கென்ன காரணமென்று யோசித்துக்கொண்டிருக்கையில் பிரமதேவன் வந்து'ஸ்வாமின்! இவர்களிருவரையும் ஒருபொழுதே கொல்லவேணும்; தனித்தனியே இவர்கட்கு மரணமுண்டாகாதபடி நான் வரங்கொடுத்திருக்கிறேன் 'என்று சொல்லக்கேட்டுக் கல்கிபகவான் தன்னுடைய வஜ்ராயுதத்தை யெடுத்து ஓங்கி இருவர் தலையிலும் அடிக்க அவர்கள் கீழேவிழுந்து மாண்டுபோவார்கள். இப்படி கல்கிபகவான் உலகத்திலுள்ள துஷ்டர்களையெல்லாம் ஸம்ஹரித்து அதர்மத்தை வேரறுவித்துத் தருமத்தை எங்கும் பரவச்செய்து கிருதயுகத்தைப் பிரவர்த்திப்பித்துத் தன் தாய் தந்தையர்க்கும் முத்தியளித்து; இங்ஙனம் தன்னுடைய அவதாரப்ரயோஜநம் தலைக்கட்டினவாறே பதரிகாச்ரமத்துக் கெழுந்தருளி மற்றவர்களைப்போல் யோகாப்யாஸஞ் செய்து திருவாழி திருச்சங்கு முதலிய ஸகல லக்ஷணங்களோடுங் கூடிய தனது அப்ராக்ருத திவ்ய ஸ்வரூபத்தை ஆவிஷ்கரித்துப் பின்பு, பரமபதத்திலிருந்து அநந்தகருட விஷ்வக்ஸேநாதி நித்யஸூரிகள் பூர்ணகும்பமேந்தி ஸாமகானம் கோஷித்துக்கொண்டு வந்து திருவடிதொழ, சிறப்புடனே, தன்னுடைச்சோதிக் கெழுந்தருளப்போகிறார்—என்பது கல்கியவதார கதைச்சுருக்கம். ... *

# விடுதியான இதிஹாஸங்கள்

(இவையும் திவ்யப் பிரபந்தங்களில் அநுஸந்திக்கப்பட்டவையே.)

## மார்க்கண்டேயனுக்கு நீண்ட வாழ்ச்சிதந்தது.

ம்ருகண்டுவென்னும் முனிவர் பிள்ளையில்லாக் குறையால் பிரமனைக் குறித்துத் தவஞ்செய்தபோது, பிரமன் ப்ரத்யக்ஷமாகி 'முனிவரே! அறிவில்லாமையும் அங்கஹீனத்வ மும் பெரும்பிணியும் தீய குணங்களுமுடையனாய் நூறு பிராயம் உயிர்வாழ்பவனை புத்திரனை விரும்புகின்றீரோ? அன்றி, கூர்மையான புத்தியும் அழகுபொலிந்த வடிவமும் [illegible] நற்குணமுமுடையனாய்ப் பதினாறு பிராயமே வாழ்பவனை குமாரனை விரும்புகி[illegible] லும்' என்ன; முனிவர் சிறிதேனும் அறிவும், ஆயுள் அழகுங் குணமும் சிறந்[illegible] ரும் ஸத்புத்ரனையே வேண்டுகின்றேன்' என்று தம் கருத்தைக்கூற, நான்முகக்கடவுள் அவ்வாறே அநுக்ரஹித்தனர். அங்ஙனம் ஊழ்வினையாற் பதினாறு பிராயம் பெற்றுப் பிறந்த புத்திரனான மார்க்கண்டேயன் தனது அல்பாயுஸ்ஸைக்குறித்து வருந்திய தாய் தந்தையரைத் தேற்றித் தான் விதியைக் கடந்து வருவதாகச்சொல்லி, தீர்க்காயுஸ்ஸை பெறுதற்பொருட்டுத் தினந்தோறும் சிவபூஜை செய்துவருகையில், ஒருநாள் யமன் தூதரை யனுப்ப, அவர்கள் மார்க்கண்டேயனது தவக்கனலால் அவனை அணுகமாட்டாது அவன் செய்யும் சிவபூஜைச் சிறப்பைக்கண்டஞ்சி வெருண்டோடி யமனிடஞ்செய்தி சொல்ல, யம னும் கோபித்துத் தனது மந்திரியான காலனை ஏவ, அவன் வந்து நயபயங்களாலழைக்கவும் மார்க்கண்டேயன் வரமாட்டேனென்று சொல்லிவிட, பிறகு யமன் மிகக்கோபித்துத் தானே நேரில்வந்து மார்க்கண்டேயனைக் காலபாசத்தாற் கட்டியிழுக்கத் தொடங்குகையில் அம் முனிகுமாரன் சிவலிங்கத்தைத் தழுவிக்கொள்ள, யமன் சிவலிங்கமுமுட்பட வலித்திழுக்கும் போது சிவபிரான் ஸ்ரீமந்நாராயணனைச் சிந்தைசெய்து அவனது திருவருள்பெற்று அங்கு நின்று வெளிப்பட்டு யமனைக் காலாலுதைத்துத்தள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறு பிராயமாகவே அனேககல்பகாலமளவும் இனிதுவாழும்படி தீர்க்காயுஸ்ஸைக் கொடுத்தனன்.

## 86 முதலையைத்துணித்துக் கஜேந்திரனைக் காத்தது.

மஹாவிஷ்ணு பக்தனான இந்த்ரத்யும்நனென்னும் அரசன் வழக்கப்படி ஒருநாள் விஷ்ணு பூஜை செய்துகொண்டிருந்தபோது அகஸ்திய மஹாமுனிவன் அவனிடம் எழுந் தருள, அப்பொழுது அவ்வரசன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூஜிப்பதில் செலுத்தியிருந்ததனால் அம்முனிவனது வருகையை அறியாதவனாய் அவனுக்கு உபசார மொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன் அரசன் நம்மை அலக்ஷியஞ் செய்தானென்று மாறாகக் கருதிக்கோபித்து, நீ, யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக்கடவை, என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத் தோன்றினனாயினும் முன் செய்த விஷ்ணு பக்தியின் மஹிமையினால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை அர்ச்சித்துப் பூஜித்துவருகையில், ஒருநாள் பெரிய தொரு தாமரைத்தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறிப்பதற்குப் போய் இறங்கிற்று; முன் பொருகால் தேவலனென்னும் முனிவன் ஒரு நீர்நிலையில் நின்று தவஞ்செய்துகொண்டிருந்த போது அவனது காலைப்பற்றி யிழுத்து அதனாற்கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூவென்னுங் கந்தர்வன் அவ்வானையின் காலைக்கௌவிக் கொள்ள, அதனை விடுவித்துக்கொள்ள முடியாமல் கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!'

என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அப்பொய்கைக் கரையிலே அரை குலேயத் தலைகுலேய விரைந்தெழுந்தருளித் தனது திருவாழியைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன் வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முக்தியை அருளினன்.

## 87 கோவிந்தஸ்வாமிக்குக் கருத்தறிந்து காரியஞ்செய்தது.

(பெரிய திருமொழி 5–8–5ல்மாக மாநிலம் முழுதும் வந்திறைஞ்சுமென்கிற பாட்டில்மட்டும் அநுஸந்திக்கப்பட்ட கதை இது.)

கோவிந்தஸ்வாமி யென்பானொரு பிராமணன் இதிஹாஸ புராணங்களைப் பலகாலுங் கேட்டு அதனாலே கண்ணபிரானுடைய பால்ய சேஷ்டிதங்களையும் ராஸக்ரீடை [குரவை கோத்தல்] முதலிய திருவிளையாடல்களையும் ஸாக்ஷாத்தாகக் கண்டு களிக்கக் கருத்துக் கொண்டவனாய், 'இதை எம்பெருமான் பக்கல் நாம் பிரார்த்தித்தால் அப்பெருமான் அருள் செய்யக் குறையில்லை' என்றெண்ணி *ஊன்வாடவுண்ணாது உயிர்காவலிட்டு உடலிற் பிரியாப்புலனைந்தும் நொந்து தான்வாடவாடத் தவஞ்செய்கையில், எம்பெருமான் இவனது நினைவின்படியே க்ருஷ்ணாவதார க்ருத்யங்களையெல்லாம் அவ்வண்ணமே ஸாக்ஷாத்கரிப்பித்து 'இன்னமும் உனக்கு வேண்டுவதென்?' என்று கேட்டருளினன்; அதற்கு இவன் 'தேவரீரோடு கூடவே அத்தாணிச் சேவகனாயிருந்து நித்யாநுபவம் பண்ணிக்களிக்க விரும்பியிருக்கிறேன்' என்றான்; இவன்றான் வாயாலே இங்ஙனே கூறினனாயினும் *உள்ளுவாருள்ளிற்றெல்லாமுடனிருந்தறியுமெம்பெருமான் அவனுடைய நாபியிலுள்ள உண்மைக்கருத்தை உள்ளபடியே கண்டறிய வல்லவனாதலால் 'இவனுக்கு நம்மோடு நித்யாநுபவம் பண்ணுகை தான் உண்மையான விருப்பமோ?' என்று ஆராய்ந்து பார்த்தான்; பார்த்ததில், 'இவனுக்கு சப்தாதி விஷயபோகங்களில் இன்னமும் நசை விட்டபாடில்லை' என்றறிந்து, 'அந்தணா! நீ இன்னம் சிறிதுகாலம் இந்நிலத்திலேயேயிருந்து விஷயபோகங்களை ஆசை தீரச் செய்து தலைக்கட்டி, பின்பு நம்மோடே வரக்கடவாய், என்றருளிச்செய்து அந்தர்த்தானமடைந்தனன்.

## 88 ஸுமுகனுக்கு அபயளித்தது.

தேவேந்திரனுக்கு நண்பனும் மந்திரியும் ஸாரதியுமான மாதலியானவன் அழகிலும் [illegible]லும் மிகச்சிறந்த தன் புத்திரியான குணகேசியென்னுங் கன்னிகைக்குத் [illegible] வரனைத் தேடுபவனாய்ப் புறப்பட்டு வழியில் நாரதமுனிவரைச் சந்தித்துத் துணையாகக் கொண்டு பலவுலகங்களிற்சென்று பார்த்துத் தக்க வரனைக் காணாமல் பாதாளலோகத்தில் வாஸுகியினாலாளப்படுகின்ற போகவதி யென்னுஞ் சிறந்த நகரத்தையடைந்து அங்கேயிருக்கின்ற அனேக நாககுமாரர்களைப் பார்க்கின்றபொழுது ஸுமுகனென்னும் நாககுமாரனை நோக்கி அவனது ரூபலாவண்யங்களிலீடுபட்டு அவனுக்குத் தன்மகளைக் கொடுக்கக் கருதி அவனது பாட்டனாரைக்கண்டு பேச, அவர் மகிழ்ச்சியோடு துயரமுங் கொண்டவராய் 'இவனது தந்தையைக் கருடன் பக்ஷித்து இந்த ஸுமுகனையும் ஒரு மாதத்திற்குள் பக்ஷிப்பேனென்று சொல்லியிருக்கின்றானாதலால் இவனுக்கு மணஞ்செய்தல் ஏற்றதன்று' என்று தெரிவித்தார். அதுகேட்ட மாதலி 'என்றால் மருமகனாக வரிக்கப்பட்ட உனது பௌத்திரனைாக நுடன் வந்து தேவேந்திரனைக் காண்பானாயின் இவனுக்கு ஆயுளைத் தந்து கருடனைத் தடுக்க முயல்வேன்' என்று சொல்லி ஸுமுகனை யழைத்துக்கொண்டு இந்திரனிடஞ்சென்று சேர, அங்கு இந்திரனுடனே உபேந்திர மூர்த்தியான திருமாலும் வீற்றிருக்கையில், நிகழ்ந்த செய்திகளையெல்லாம் நாரதமுனிவர் சொல்லக்கேட்ட திருமால் இந்திரனை நோக்கி, இவனுக்கு அமிர்தத்தைக் கொடுக்கலாம்; அதனால் இவர்கள் இஷ்டஸித்தியடைந்தவராவர்

என்று சொல்லியருள, இந்திரன் கருடனது பராக்ரமத்தை ஆலோசித்துத் திருமாலை நோக்கி 'தேவரீரே அவனுக்கு அமுதத்தையும் ஆயுளையுந் தந்தருள்க' என்றதற்கு, திருமால் 'ஸகலலோகாதிபதியான நீ கொடுப்பதே போதும்; அதனை மாற்றுபவர்யார்?' என்றுகூற, பிறகு இந்திரன் ஸுமுகனுக்குஅமிர்தமுண்பியாமல் நீண்ட ஆயுளை வரமளிக்க,உடனே மாதலி ஸுமுகனுக்குத் தன்மகளை மணம்புரிவித்தான். இச்செய்தியைக் கேள்வியுற்ற கருடன் கோபங்கொண்டு இந்திரனோடு மாறுபட்டுத் தனது இரையை அவன் தடுத்துவிட்டதற்காகப் பலபல நிஷ்டுர வார்த்தைகள் கூறுகையில், ஸுமுகன் தான் நீண்ட ஆயுளை வரம்பெற்றிருந்தாலும் கருடனுடைய கறுவுதலைக்கண்டஞ்சிப் பாம்பு வடிவமாய்த் திருமாலினருகிற் சேர்ந்து அப்பெருமானது கட்டிலின் காலைக்கட்டிக்கொண்டு சரண்புக, பின்பு கருடன் திருமாலை நோக்கி 'ஸகல தேவர்களினுள்ளும் மஹாபலசாலியான வுன்னைச் சிறிதும் சிரமமின்றி இறகு முனையாற் சுமக்கின்ற என்னினும் வலிமையுடையார் யார்? இதனைச்சற்று ஆலோசித்துப் பார்' என்று செருக்கிப்பேச, அக்கடுஞ்சொற்கேட்ட திருமால் கருடனை நோக்கி 'மிகவும் துர்ப்பலனான நீ உன்னைத் தானே மஹாபலசாலியாக எண்ணி எமது முன்னிலையில் தற்புகழ்ச்சி செய்துகொண்டது போதும்; மூவுலகமும் எனது உடம்பை வகிக்க முடியாதே; யானே எனது சக்தியால் என்னை வஹித்துக்கொண்டு உன்னையும் வஹிக்கின்றேன்; எனது இந்த வலக்கையொன்றை மாத்திரமாவது நீ தாங்கவல்லையாயின் உனது செருக்குமொழி பயன்பட்டதாகும்' என்று சொல்லிக் கருடனது தோளில் தனது வலக்கையை வைத்த மாத்திரத்தில் அவன் அதன் அதிபாரத்தைத் தாங்கமாட்டாமல் வருந்தி வலிமையொழிந்து மூர்ச்சித்து விழுந்து பின்னர் அறிதில்தெளிந்து திருமாலை வணங்கிப் பலவாறு பணிமொழி கூறி 'அடியேனுடைய பிழையைப் பொறுத்தருளவேண்டு' மென்று பிரார்த்திக்க, திருமால் திருவுள்ள மிரங்கி அவனுக்கு ஸமாதானங்கூறித் தனது திருவடியின் பெருவிரலால் ஸுமுகனையெடுத்துக் கருடன் தோளிலிட்டு 'இவனை நீ உனது அடைக்கலமாகக்கொண்டு பாதுகாக்கக் கடவை' என்று குறிப்பிக்க, அது முதல் கருடன் ஸுமுகனோடு நண்புகொண்டு அவனைத் தோளில் தரிக்க, அவனும் அச்சமின்றி 'கருடா! ஸுகமா' என்று க்ஷேமம் விசாரிப்பவனாயினன்.

## 89 அரனது சாபத்தை அகற்றினது.

ஒருகாலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்[illegible]ரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது [illegible]மொன் [illegible] கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொள்[illegible] [illegible] 'இதற்கு என் செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்[illegible] [illegible]லேப் பிச்சையெடுக்க வேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்[illegible] கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பலத்தலங்களிலுஞ் சென்று பிச்சை யேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது, அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது.

## 90 உரோமசனால் நான்முகனது செருக்கை நீக்கினது

(பெரிய திருமொழி 3-4-2 பாசுரத்தில் அநுஸந்தித்த கதை இது.)

ரோமசரென்பவர் சரீரமுழுவதும் (கரடிபோல்) அடர்ந்த மயிர்களையுடைய ஒரு மாமுனிவர். இவர் நீண்டகாலம் வாழ்ந்திருந்து எம்பெருமானைச் சிந்தனை செய்யவேணுமென்று குதூஹலமுடையராய், தீர்க்காயுஸ் பெறுவதற்காக ஒரு புண்ய நதிக்கரையிலிருந்து

தவஞ்செய்து கொண்டிருக்கையில் அளவு கடந்த ஆநந்தங்கொண்ட ஸ்ரீமந் நாராயணன் இவர் முன்னேவந்து ஸேவைதந்தருளி 'உம்முடைய விருப்பத்தைக் கூசாதே வேண்டிக் கொள்ளும்' என்று சோதிவாய் திறந்தருளிச்செய்ய, மாமுனிவரும் 'இவ்வுடம்போடே உன்னை வெகுகாலம் வழிபடவேணுமென்று பேராசை கொண்டிருக்கிறேன் நான்; அநேகமாயிரம் ப்ரஹ்மாக்களுடைய ஆயுளை என்னொருவனுக்குக் கல்பித்தருளினால் மஹாப்ரஸாதமாகும்' என்று கைகூப்பி விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் அப்படியே திருவுள்ளமுவந்து "மாமுனிவரே! ப்ரஹ்மாவினுடைய ஆயுளின் அவதி உமக்குத் தெரிந்ததே; ஒரு ப்ரஹ்மா காலஞ்சென்றால் உம்முடைய உடம்பினின்றும் ஒரு ரோமம இற்றுவிழக்கடவது; இப்படி ஒவ்வொரு ப்ரஹ்மாவின் முடிவிலும் ஒவ்வொரு மயிராக இற்றுவந்து 'இனி உம்முடைய உடம்பில் ஒரு ரோமமும் இல்லை' என்று சொல்லத்தக்க நிலைமை நேருமளவும் நீர் ஜீவித்திருக்கக்கடவீர்" என்று வரந்தந்தருளி மறைந்திட்டனன், [இக்கதையின் விவரணத்தை வேறுவகையாகவும் சிலர் கூறுவர்; வல்லார்வாய்க் கேட்டுணர்க.]

## 91 தொண்டைமன்னனுக்கருள் செய்தது

(பெரியதிருமொழி 5-8-9 பாட்டில் அநுஸந்தித்த கதை இது.)

சோழநாட்டரசனுடைய குமாரனும் தொண்டைநாட்டரசனுமான தொண்டைமான் சக்ரவர்த்தி திருவேங்கடமலையில் எம்பெருமானையடுத்து மிக்கபக்தியுடனே சிந்தித்து வந்தித்து வாழ்த்தி வழிபாடு செய்ய, திருவுள்ளமுவந்த அத்திருவேங்கடமுடையான் மெய்த்தொண்டனான அவ்வரசனை நண்பனாகக்கொண்டு அவன் வரும்பொழுதெல்லாம் தனது அர்ச்சாவதார வரம்பைக்கடந்து அவனுடன் பேசுவானாயினனென்றும், அவ்வரசனுக்கு அஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தையும் அதன அருமையான பொருள்களையும் மற்றும் பல ஹிதங்களையும் உபதேசித்தருளினதுமன்றி, அவனுக்குப் பகைவெல்லுதற்பொருட்டுத் தனது சங்குசக்கரங்களையும் கொடுத்தருளினனென்றும், அவ்வரசன் அந்தப்பெருமானுக்குக் கோபுரம் மண்டபம் திருமதில் முதலிய பல திருப்பணிகளைச் செய்து மஹாவிபவத்துடன் நித்ய நைமித்திக உத்ஸவங்களையெல்லாம் நடத்திவைத்ததுமன்றி நாள்தோறும் ஸ்வர்ண மயமான ஆயிரத்தெட்டு தாமரைகளைக் கொண்டு ஸ்ரீநிவாஸனுக்கு ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்துவந்து இறுதியில் அப்பரமனருளால் பரகதியடைந்தனனென்றும் அறிக.

[தொண்டைமான் என்பது] அக்குலத்து அரசரில் ஒருவனது பெயராயிருந்து பிறகு அந்நாட்டரசர்க்கெல்லாம் வழங்குகின்றதென்றும் தொண்டைமானது நாடு தொண்டைநாடென வழங்கலாயிற்றென்றுங் கூறுவர். தொண்டைமானென்ற பெயரின் காரணம்:— தொண்டைநாட்டின் ராஜதானியான காஞ்சிபுரத்திலிருந்து தொண்டைமானிளந்திரையனைக் குறித்துப் பாடப்பட்ட பெரும்பாணாற்றுப்படையில், "அந்நீர்த் திரைதருமரபின்......பல்வேல் திரையன்" என்றவிடத்து நச்சினார்க்கினியருரையில்—"நாகப்பட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தில் நாகலோகத்தே சென்று நாககன்னிகையைப் புணர்ந்தகாலத்து அவள் "நான் பெற்ற புதல்வனை என்செய்வேன்?' என்றபொழுது, தொண்டையை [தொண்டை-ஓர்கொடி] அடையாளமாகக் கட்டிக் கடலிலேவிட, அவன்வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாட்டாசி கொடுப்பன், என்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிட, திரைதருதலின் திரையனென்று பெயர்பெற்ற கதைகூறினான்" என்றும், "தொண்டையோர் மருக" என்றவிடத்து உரையில் "தொண்டையைச் சூடினோருடைய குடியிலுள்ளவனே!' என்றும் உரைத்தவாற்றால் விளங்கும். இனி, பூமியாகியபெண்ணுக்குத் தொண்டை (கழுத்து) ஸ்தானமாயிருப்பதால் தொண்டைநாடென்றும்; "தொண்டைநன்னாடு சான்றோருடைத்து" என்றபடி எம்பெருமானது தொண்டர்கள் பலர் வஸிக்கின்ற நாடு தொண்டை நாடு என்று காரணங்கூறுதலு முண்டு. "மேற்குப் பவளமலை வேங்கடம்

நேர்வடக்காம், ஆர்க்கு முவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர் தெற்குப் பிணுகி திகழிருப தின்காதம், நற்றொண்டைநாடெனவே நாட்டு" என்றதனால் தொண்டைநாட்டின் எல்லையை உணர்க.]

## 92 நரநாராயணனாய் அறநூல் விரித்தது.

ஸ்ரீபதரிகாச்ரமத்தில் ஸர்வேச்வரன் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை வெளியிட்டருளினது பிரஸித்தம்.

## 93 மதிகோள் விடுத்தது.

சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்ரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் ரோஹிணி யென்பவளிடத்து மிகவுங் காதல் கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங்கூடி வாழ்ந்திருக்க, மற்றை மகளிரின் வருத்தத்தை நோக்கிச் சினங்கொண்ட அம்முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக" என்று சபிக்க, அச் சாபத்தால் சந்திரன் பதினாறு கலைவடிவாகவுள்ள தனது உடல் நாளடைவிற் குறைபவனாகி அங்ஙனம் தனக்கு விரைவில் நேரக்கடவதான அழிவைப் போக்கிக்கொள்ளுதற்கு வேறு புகலிடமொன்றுங் காணாமல் சிந்தித்து ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை யடைந்து அங்குள்ள நவதீர்த்தங்களிலொன்றும் கோயிலின் வடபுரத்தே யுள்ளதுமான புண்யதீர்த்தத்தில் நீராடி அதன் கரையில் ஒரு புன்னைமரத்தின் நிழலில் இருந்து ஸ்ரீரங்கநாதனைக் குறித்துத் தவஞ்செய்ய, அந்நம்பெருமாள் அவனுக்குப் பிரத்யக்ஷமாகி, மீண்டும் கலைகள் நாளதோறும் வளர்ந்து வரும்படி அநுக்ரஹித்தனனென்பதாம். அத்திவ்ய தீர்த்தம் இதனால் சந்த்ரபுஷ்கரணி யென்று பெயர் பெற்றது. ஸ்ரீபட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் இப்புஷ்கரிணியைப்பற்றின ச்லோகத்தில் யஸ்யா:, அப்யாஸதோபாமகர்ஷணீநாம சந்த்ரஸ் ஸுதாதிதிதிதாமவாப." என்றது காண்க. "கோள்வாய்மதியம் நெடியான் விடுத்தாங்கு" (சீவகசிந்தாமணி) எனப் பிறவிடத்து திருமால் சந்திரனுக்கு உதவியாகக் கூறுதல் காண்க. சந்திரன் தர்மகசிபருடைய சாபத்தினால் தனது கலைகள் குறையப்பெற்று வந்து தவஞ்செய்து ஸ்ரீரங்கநாதனின் கிருபையினாற் பழையபடி கலைநிரம்பப்பெற்றனனென்ற வரலாறு வழங்குதலுமுண்டு.

## 94 மதுகைடபர்களையாய்த்தது.

பிரமதேவனது திநப்ரளயத்தில் இவ்வுலகமெல்லாம் பெருங்கடலினால் சூழப்பட்டு எங்கும் நீர்மயமாயிருந்தபொழுது அவ்வெள்ளத்தில் திருமால் அரவணையில் அயர்ந்திருக்கையில், அத்திருமாலினிடத்தினின்று ரஜஸ்தமோகுணங்களின் வடிவமாகத் தோன்றி "எம்மை நீ கொலைபுரிக என்று நம்வாயாற் சொல்லிய பின்னரே நம்மைப்பிறர் கொல்லலாகும்" என்று வரம் பெற்ற மதுகைடபரிருவரும் அப்பிரளயநீரைக் குழப்பிக்கொண்டு பேராரவாரத்துடன் சென்று பிரமதேவனைக் கண்டு அவனிடத்தினின்று வேதங்களையெல்லாம் பறித்துக் கொண்டு அப்பிரளய வெள்ளத்தில் மறைந்தனராக, அப்போது தான் செய்யவேண்டுவது இன்னதெனத் தேறாது திகைப்புக்கொண்ட அப்பிரமன் பின்னர்ச் சிறிது தெளிந்து திருமாலைத் துதித்துத் தனக்கு நேர்ந்த ஆபத்தை முறையிட, அக்கடவுள் ஹயக்ரீவாவதாரஞ் செய்து அக்கடலிற்புக்கு இனியதோரிசையைப் பாட, அவ்வினிய கீதத்தைக்கேட்ட அவ்வசுரர்கள் அவ்வேதங்களை ஓரிடத்து வைத்திட்டு அவ்வொலி வந்தவழியைப் பிடித்துச் செல்லுமளவில் திருமால் அவ்வேதங்களுள்ளவிடத்திற் சென்று அவற்றைக் கொணர்ந்து பிரமனுக்குத் தந்தருள, அப்போது ஒருவரையுங் காணாதவராய் வேதங்களும் எடுத்துக்

கொண்டுபோகப்பட்டதை யுணர்ந்த அவ்வசுரர்கள் மிகச்சினந்து அரவணையில் அறிதுயிலமரும் பரம்பொருளைத் தேடிப் போர்செய்யத் தொடங்கவே திருமாலுக்கும் அவ்வசுரர்க்கும் வெற்றிதோல்விகளின்றி நெடுங்காலம் பெரும்போர் நிகழ்ந்ததாக, முடிவில் திருமாலை நோக்கி அவர்கள் 'உனது ஆற்றலுக்கு உவந்தோம்; வேண்டும் வரம் பெற்றுக்கொள்' என்ன; அக்கடவுள் 'யான் உங்களைக் கொல்லவேண்டும்' என்று வரம்வேண்ட, அவர்களும் அதற்கு இணங்குகையில், திருமாலும் 'உங்கட்கு வேண்டும் வரம் கொண்மின்' என்ன; 'ஒருவரும் இறவாத இடத்தில் நாங்கள் இறக்கவேண்டும்' என்று அவர்கள் வேண்ட, திருமாலும் அங்ஙனமே வரமளித்துத் தனது துடையைக்கொண்டு அவர்களை இறுக்கிக் கொன்றிட்டனன். (இவ்வரலாறு சிறிது வேறுபடக் கூறப்படுதலுமுண்டு.)

## 95 உலகமுண்டதும் ஆலிலைத்துயின்றதும்.

முடிவில் மஹாப்ரளயப் பெருங்கடல்வெள்ளத்தில் உலகங்களெல்லாம் அழியப்புக, திருமால் அவற்றை யெல்லாம் தனது விசித்ரசக்தி விசேஷத்தாலே சிறிய திருவயிற்றிலே விசாலமாக இருத்தி, ஆதிசேஷாம்சமான சிறியதோர் ஆலந்தளிரிலே யோகநித்திரை புரிவதாக ஏற்றுக்கொள்கை.

## 96. "ஈசனைவென்ற சிலைகொண்ட" என்றவிடத்தடங்கிய வரலாறு.

[திருமழிசைப்பிரானருளிய நான்முகன் திருவந்தாதியில்]

ஒரு ஸமயத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ருத்ரனை ஒரு சிலையால் வென்றார்; அந்த வில் பரசுராமனிடத்தில் வந்து சேர்ந்திருந்தது; அதனை ஸ்ரீராமாவதாரத்தில் மிதிலையில் நின்று மீண்டெழுந்தருளும்போது அப்பரசுராமனிடத்திற் கொண்டார்; (இவ்வரலாற்றை விரித்துரைப்போம்.) முன்னொருகாலத்தில் தேவ சில்பியான விச்வகர்மாவினால் நிருமிக்கப்பட்ட சிறந்த இரண்டுவிற்களுள் ஒன்றைச் சிவபிரானும் மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக் கொண்டார்கள். பின்பு ஒரு காலத்தில் அவ்விற்களுள் சிறந்தது இன்னதென்பதை அறிய விரும்பிய தேவர்களின் வேண்டுகோளால் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரை மூட்டிவிட அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக்கொண்டு போர்புரிகையிற் சிவபிரானது வில் சிறிது முறிபட்டது; அவ்வாறு இற்றவில்லைச் சிவபிரான் ஜநககுலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்ச பரம்பரையாய் ஜநகமஹாராஜனளவும் வந்தது; இது நிற்க; இறாத வலிய வில்லை விஷ்ணு ரிசிக முனிவனிடம் கொடுத்துச் செல்ல, அது அவன் குமாரனான ஜமதக்நியினிடத்தும் அவன் குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது. முற்கூறிய சிவதநுஸ்ஸை ஸீதைக்குக் கந்யா சுல்கமாக ஜநகன் வைத்திருந்தான்; இராமபிரான் அந்தவில்லை முறித்துத் தன் பேராற்றலை விளங்கச்செய்து பிராட்டியை மணந்து கொண்டு மிதிலாபுரியினின்றும் புறப்பட்டு அயோத்திக்கு வரும்போது வழியிடையே செருக்கிவந்த பரசுராமனது கையிலிருந்த விஷ்ணுதநுஸ்ஸைவாங்கி எளிதில் வளைத்து நாணேற்றிக் கணைதொடுத்து 'இவ்வம்புக்கு இலக்கு என்?' என்று வினவ, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங்கொடுக்க அவன் க்ஷத்ரிய வம்சத்தைக் கருவறுத்தவனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம் பூண்டவனுமாயிருத்தல் பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்த மாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளினன் என்ற வரலாறுகள் இதிஹாஸ ப்ரஸித்தம்.

## 97 பிரமனிடம் மறைந்துவந்த இராவணனைக் காட்டிக்கொடுத்தது.

(முதல் திருவந்தாதியிலும் மூன்றாந் திருவந்தாதியிலும், நான்முகன் திருவந்தாதியிலும்)

முன்பு இராவணன் பத்துத் தலைகளை மறைத்துக்கொண்டு நான்முகனிடஞ் சென்று வரம் வேண்டிக்கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறு குழந்தை வடிவாய் அப்பிரமனுடைய மடியிலே உறங்குவான்போலே கிடந்து 'இவன் பத்துத்தலைகளையுடைய இராவணன்; ஸ்வஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு உன்னை வஞ்சித்து வரம்வேண்டிக்கொள்ள வந்திருக்கிறான்; இவனுக்கு நீ வரமளித்தால் பெருந்தீங்காக முடியும்' என்று தெரிவிப்பவன்போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத்தலைகளையும் எண்ணிக்காட்டினன்.

## 98 சிவபிரானுக்குத் திருமேனியில் கூறு கொடுத்தது

தாமஸதெய்வமான ருத்ரனுக்கும் தனது திருமேனியின் வலப்பக்கத்தில் இடங்கொடுத்து ஆதரிக்குமவனும் எம்பெருமான். திருவாய்மொழியில் "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" (1—3—9) என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்" என்ற மோக்ஷ தர்ம வசநத்தை எடுத்துக் காட்டியிருப்பது காணத்தக்கது. "தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா—ஸ்வ பார்ச்வே தக்ஷிணே சம்போர் நிவாஸ: பரிகல்பித:" என்றொரு வசநமும் இருபத்திநாலாயிரப்படியிற் காண்பதுண்டு. [சிவன் பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தானம் அமைத்துக கொடுத்தருளினன்—என்பது இதன்பொருள்.]

"ஏறாளுமிறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளுந்தனியுடம்பன்' என்றும், "அக்கும்புலியினதளு முடையாரவரொருவர், பக்கம் நிற்க நின்ற பண்பர்" என்றும் ஆழ்வார்கள் அடிக்கடி அருளிச்செய்கிறார்களே, சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப் பற்றியிருக்கிறார்களோ? என்றொரு சங்கை பிறக்கக்கூடும்; இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூருவர்களுரைத்த வியாக்கியானங்களிலேயே உள்ளன. கீழ் உதாஹரித்த திருவாய்மொழிப் பாசுரத்தின் வியாக்கியானங்களிலேயே—"ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே யிருப்பர்களோ வென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹா குணமாகையாலே ஆழ்வார்கள் எப்போதுமொக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள். ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்திவிடார்களிறே. ஒரோ கலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந் தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று' என்று, பின்னும் ப்ராப்திசொல்லிவைக்குமா போலே" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் அறிக.

## 99. முதலாழ்வார்கட்குத் திருக்கோவலிடைகழியில் காட்சி தந்தது

[முதல் திருவந்தாதியில் "**நீயுந்திருமகளும் நின்றாயால்**" என்ற பாசுரத்தில் ஸூசிப்பிக்கப்பட்டது.]

ஸ்ரீராம பரதலக்ஷ்மணர்போல அடுத்தடுத்த நாள்களில் அவதரித்தவர்களும் அயோநிஜர்களுமாகிய முதலாழ்வார்களென்று ப்ரஸித்தர்களான பொய்கையார் பூதத்தார் பேயார் என்கிற மூவர்க்கும், ஸ்ரீ வைகுண்டநாதனுடைய திருவாணையினால் ஸேனை முதலியார் இந்

நிலத்திற் கெழுந்தருளிப் பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து திருமந்திரப் பொருள்களையும் உபதேசித்தருளினர். அதனால் இவர்கள் "முக்குணத் திரண்டவையகற்றி, ஒன்றினிலொன்றி நின்று" என்றாற்போல ரஜோகுணமும் தமோகுணமும் சிறிதுமற்று சுத்த ஸாத்விகர்களாய் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதையே பெரும பேறாகக்கொண்டு ஞான பக்திவிரக்திகளுக்குப் பிறப்பிடமென்னலாயபடி விளங்கி "உண்ணுஞ்சோறு பருகுநீர்த்தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்" என்றாற்போல பகவத் குணாநுபவத்தையே தாரகமும் போஷகமும் போக்யமுமாகக்கொண்டு அன்னபானாதிகளையொழித்து, உண்டியே உடையே உகந்தோடுகின்ற இம்மண்டலத்தாரோடு கூடகில்லாமல் ஒருநாளிருந்தவிடத்தில் மற்றொருநாளிராதபடி ஓடித்திரியும் யோகிகளாய், தம்மில் ஒருவரையொருவர் அறியாமல் தனித்தனியே ஸஞ்சரித்துக்கொண்டிருந்தனர்.

இப்படி ஸஞ்சரித்துக்கொண்டிருந்த இம்மூவரையும் ஓரிடத்திலே சேர்த்து ஆட்கொண்டு இவர்கள் மூலமாக உலகத்தை வாழ்விக்க வேணுமென்கிற குதூஹலம் எம்பெருமான் திருவுள்ளத்திலுண்டாயிற்று.

ஸத்யகாமனாய் ஸத்யஸங்கல்பனான எம்பெருமானுடைய மனோரதம் பழுதுபடுமோ? அவனுடைய திருவுள்ளம் நிறைவேறுதற்கு வழியுண்டாயிற்று. அதாவது—ஒருநாள் ஸூர்யன் அஸ்தமித்தபின்பு **பொய்கையாழ்வார்** திருக்கோவலூரையடைந்து அங்கு **ம்ருகண்டு மஹர்ஷி**யின் திருமாளிகையிற்சென்று அதன் இடைக்கழியிற் பள்ளிகொண்டிருந்தார். பிறகு **பூதத்தாழ்வாரும்** அங்கே வந்துசேர, "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா **தண்டவத்**-ப்ரணமேத் புவி' என்கிற சாஸ்திர முறைப்படி ஒருவரை யொருவர் வந்தனை வழிபாடுகள் செய்தவுடன், "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் உட்கார்ந்திருக்கலாம்" என்று பொய்கையார் விண்ணப்பஞ்செய்ய, அவ்விதமே இருவரும் அங்கு உட்கார்ந்திருந்தனர். அதன் பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்திற்கே வந்துசேர, ஒருவரையொருவா தண்டன் ஸமர்ப்பித்து உபசரித்துக்கொண்ட பின் "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்" என்று பொய்கை பூதத்தாரிருவரும் சொல்ல, அவ்விதமே மூவரும் அவ்விடத்திலே நின்றுகொண்டு பரஸ்பரம பகவத்குணங்களைச் சொல்லுதலும் கேட்டலுஞ் செய்து களித்திருந்தனர்.

அப்பொழுது உலகளந்த மூர்த்தி அவர்கள் திறத்திலே திருவருள் செய்யும் பொருட்டுப் பெருத்த இருளையும் கனத்த மழையையுமுண்டாக்கி, பெரிய வடிவத்தோடு அவர்களிடையே சென்று நின்று பொறுக்கமுடியாத மிக்க நெருக்கத்தைச் செய்தருளினன். அதன்மேல் இவர்கள் 'இதுவரையிலும் இல்லாத நெருக்கம் இப்போது உண்டானதற்குக் காரணமென்கொல்!; பிறரெவரேனும் இங்கு வந்து புகுந்தவருண்டோ?' என்று சங்கிக்கையில், பொய்கையாழ்வார் பூமியாகிய தகழியில் கடல் நீரையே நெய்யாகக்கொண்டு ஸூர்யனை விளக்காக ஏற்ற, பூதத்தாழ்வார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவுங்கொண்டு ஞானதீபத்தை ஏற்ற, இவ்விரண்டினொளியாலும் இருளற்றதனால், பேயாழ்வார் எம்பெருமானைத் தாம ஸேவித்தமை கூறியவளவிலே மூவரும் பகவத் ஸ்வரூபத்தை நன்கறிந்து அநுபவித்து ஆநந்தப் பெருவெள்ளமெய்தி அதனுக்குப் போக்கு வீடாகப் பிரபந்தங்களருளிச்செய்து உலகத்தாரை உய்விக்கத் திருவுள்ளம்பற்றினர்.

### 100. சிவபிரான் திரிபுரமெரித்ததும் அப்போது திருமால் நிர்வாஹகராய் அமைந்ததும்

முற்காலத்தில் தாரகாஸுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து பிரமனிடம் பெருவரம் பெற்று வானத்துப் பறந்துசெல்லுந் தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களை யடைந்து மற்றும் பல அசுரர்

களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்த விடங்களிற் பறந்துசென்று பலவிடங்களின் மேலும் இருந்து அவ்விடங்களைப் பாழாக்கி வருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தோராகவும் சந்த்ர ஸூர்யர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில்நாணியாகவுங் கொள்ள, வாயுவாகிய சிறகமைந்த அக்நியை முனையாகவுடைய அம்பின் ஸ்தானத்திலே விஷ்ணு நிற்க, இவ்வளவு அமைப்புடனே யுத்தஸந்நத்தனாய்ச் சென்று போர் தொடங்கும் போது சிரித்து அச்சிரிப்பில் நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன்—என்பது சிவபிரான் திரிபுரமெரித்த வரலாறு. இந்த த்ரிபுர ஸம்ஹாரம் செய்தது சிவனேயாகிலும் இது நிறைவேறியதற்கு முக்கிய காரணம் திருமாலேயென்க. மஹாபாரதத்தில் கர்ணபருவத்தில் இருபத்துநான்கா மத்தியாயம் முதலாக நான்கு அத்யாயங்களில் இவ்வரலாறு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது; எம்பெருமான் சிவனுக்கு அந்தராத்மாவாக இருந்ததினாலும் அம்பாக அமைந்ததினாலும் இக்காரியம் எளிதாக கைகூடிற்றென்றது. திருவாய்மொழியில் **"புரமொரு மூன்றெரித்து"** (*1—1—8,*) என்று த்ரிபுரதஹநத்தை எம்பெருமானுடைய காரியமாகவே சொல்லிற்றும் இது பற்றியே.

## 101. சிவபிரான் தக்கன் வேள்வி தகர்த்தது

[பெரிய திருமொழி 5—2—6 பாட்டில் காணும் கதை.]

முன்பொருகால் தக்ஷப்ரஜாபதி யென்பவர் ஒரு யஜ்ஞஸதஸ்ஸிலே செல்ல, அப்போது அங்கிருந்த தேவர்களும் மஹர்ஷிகளு மெல்லாரும் சடக்கென எழுந்து கௌரவிக்க, பிரமனும் சிவனும் எழுந்திராமல் இருந்தபடியே யிருக்க, தக்ஷன் பிரமனை 'லோககுரு' என்னும் பிரதிபத்தியாலே நமஸ்கரித்துவிட்டு, தன்னுடைய பெருமை விளங்குமாறு சிவன் தன்னை வணங்கி வழிபாடுகளொன்றுஞ் செய்திலனென்று சீற்றங் கொண்டவனாய் இந்த 'ருத்ரன் எனக்கு மாப்பிள்ளையானபோதே எனக்கு சிஷ்யனாய்வைத்து இங்ஙனே ஸ்தப்தனாய்க் கிடக்கிறானே, இவனில் மிக்க பாபி உலகிலுண்டோ? க்ருத்யாக்ருத்ய விவேகசூந்யனான இந்த மூர்க்கனுக்கு அநியாயமாய் அருமருந்தன்ன பெண்ணைக் கொடுத்துக் கெட்டேன்;' என்று பலவாறாக நிந்தித்து, "இந்த ருத்ரன் யாகங்களில் தேவதைகளோடுகூட ஹவிர்ப்பாகம் அடையக்கடவனல்லன்" என்று சபித்துவிட்டு மஹா கோபத்துடனே எழுந்து தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தான். பிறகு நெடுநாளைக்கப்பால் அந்த தக்ஷன் ப்ருஹஸ்பதிஸவ மென்றொரு யஜ்ஞம் பண்ணத்தொடங்கின செய்தியைப் பார்வதி கேள்விப்பட்டு 'தந்தை நிகழ்த்தும் வேள்வியின் விபவங்களை நாமும் கண்டுவருவோம்' என விரும்பிப் புறப்பட, ருத்ரன் பழைய வைரத்தை நினைத்து 'அங்கே நீ போகலாகாது' என்று தடுத்தவளவிலும் அவள் கேளாதே குதூஹலாதிசயத்தினால் விரைந்து புறப்பட்டுத் தந்தையின் மாளிகையில் வந்து சேர, அங்கே இவளைக்கண்டு தந்தை நல்வரவு கூறுதல் யோகக்ஷேமம் வினவுதல் ஒன்றுஞ் செய்யாது விமுகனாயிருக்கு மிருப்பையும் ருத்ரபாகமில்லாமல் யாகம் நடைபெறுவதையுங் கண்டு அளவுகடந்த கோபமுடைந்தவளாய் 'இந்த மஹாபாபியான தக்ஷனிடத்தில் நின்றுமுண்டான இந்த என் சரீரம் இனி முடிந்துபோவதே நன்று' என்று அறுதியிட்டு யோக பலத்தினால் ஒரு அக்நியையுண்டாக்கி அதுதன்னிலே சரீர த்யாகம் பண்ணிவிட, இங்ஙனே பார்வதி அவமாநம் பொறுக்ககில்லாமல் இறந்தொழிந்தாளென்றுணர்ந்த சடையான் மிகச் சினந்து தக்கன் வேள்வியைப் பலபடிகளாலும் தகர்த்துவிடக்கடவோமென்று நிச்சயித்துத் தனது சடையில் நின்றும் ஒரு மயிரையெடுத்துக் கீழே எறிய, அதில் நின்றும் கோரரூபியான வீரபத்ரன் கிளம்பி ருத்ரனுடைய ஆஜ்ஞையைப்பெற்று தக்ஷயாக பூமியிலே சென்று வாசாமகோசரமான க்ஷோபங்களை யுண்டுபண்ண, ருத்ரனும் கூடச்சென்று தக்ஷனைத் தலை

யறுத்து ஸ்வாஹாகாரங்களை யெல்லாம் ஹாஹாகாரமாக்கி, '**தக்ஷாத்வரத்வம்ஸி**' என்றும் '**தக்கன் வேள்விதகர்த்த தலைவன்**' என்றும பெயர் பெற்றுனென்கிற வரலாறு ஸ்ரீபாகவதத்தில் நான்காம் ஸ்கந்தத்தின் ஆதியில் விரித்துரைக்கப்பட்டுள்ளது.

### 102. சிவபிரான் நால்வர்க்கு உபதேசித்தது

[பொய்கையாழ்வாரும் திருமழிசையாழ்வாரும் தமது திருவந்தாதிகளில் அநுஸந்தித்த கதை இது.]

சிவன் ஒருகாலத்திலே அகஸ்தியர் புலஸ்தியர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நான்கு முனிவர்களைச் சிஷ்யர்களாக அமைத்துக்கொண்டு ஆலமரத்தடியிலே ஸ்ரீமந்நாராயண தத்வோபதேசம் செய்தருளினன்.

### 103. மந்தேஹரென்னும் அசுரர் மாய்வது

[திருவிருத்தத்தில் "எரிகொள் செந்நாயிறு" என்னும் பாசுரத்தில் அநுஸந்தித்தது.]

மந்தேஹாருண மென்னும் த்வீபத்தில் வாழும் மந்தேஹரென்னும் அசுரர்கள் உக்ரமான தவத்தைச்செய்து பிரமனிடத்து வரம்பெற்று அதனுற் செருக்கடைந்து எப்பொழுதும் ஸூர்யனை வளைந்து எதிர்த்துத் தடுத்துப் போர் செய்கின்றனர்: அந்தணர் முதலியோர் செலுத்தும் அர்க்கியத்தின் ஆற்றலால் ஸூர்ய மண்டலத்தினிடையே ஒரு சேந்தீ எழுந்து ஜ்வலிக்க, (விளக்கில் விட்டில்போல்) அத்தியில் அவ்வசுரர்கள் விழுந்துமாள்வர்.

### 104. வாசவதத்தை தலைக்காலன் பின்சென்றது

[சிறிய திருமடலில் காணும் கதை.]

ஸுபந்து என்னுமொரு மஹாகவியால் இயற்றப்பட்ட **வாஸவதத்தா** என்று ப்ரஸித்தமான ஸம்ஸ்க்ருத—ஆக்யாயிகாப்ரபந்தத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட வாஸவதத்தை யென்ற கதாநாயகிதான் சிறிய திருமடலில் உதாஹரிக்கப்பட்டவளென்று பலர் ப்ரமித்திருக்கின்றனர். அந்த வாஸவதத்தை கவியினுல் கல்பித்துக் கொள்ளப்பட்டவளேயன்றி ஒரு புராண நாயகியல்லள்; காதம்பரி, மாலதீ, வஸந்தா என்று சில வ்யக்திகளைக் கவிகள் தாமே கல்பித்துக்கொண்டு நாவல் போன்ற க்ரந்தங்களை எழுதினுற்போல் ஸுபந்துகவியும் வாஸவதத்தை யென்ற பெயரால் ஒரு வ்யக்தியைக் கல்பித்துக்கொண்டு தனது புத்தி சமத்காரத்தால் ஒரு கதை எழுதிவைத்தான். அர்வாசீநமாகிய அந்த நூலில் வருணிக்கப்பட்ட வாஸவதத்தை திருமடலில் உதாஹரிக்கப்பட்டவளல்லள்; அந்த வாசவதத்தையின் சரிதையே வேறு. அவள் ஓரு சாப விசேஷத்தால் கல்லுருவமடைந்ததாகவும் தனது காதலனுகிய கந்தர்ப்பகேதுவின் கரஸ்பர்சத்தாலே சாபம் நீங்கிப் பெண்ணுருவம் பெற்று அக்காதலனைக் கூடி மகிழ்ந்ததாகவும் அதிற் சொல்லப்பட்டுள்ளது. திருமடலில் ஆழ்வார் எடுத்துக்காட்டும் வாஸவதத்தையின் சரிதை அங்ஙனன்று; காதலனும் அப்பெயருடையனல்லன், "தோழிமாருடைய பெரிய திரளைக் கடுக விட்டு, விலங்கிட்டிருக்கிற வத்ஸராஜன் பின்னே போனுள்" என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்துள்ளமையால், இவளது காதலனுடைய பெயர் வத்ஸராஜனென்றும், இவளது வரலாறே வேறுவகையானதென்றும் நன்கு விளங்கக் குறையில்லை. இவளுடைய சரித்திரம் ஏதோ ஒரு புராணத்தில் கூறப்பட்டிருக்கவேணும்; ஸ்ரீமஹாபாரதம் முதலிய சில புராண இதிஹாஸங்களை ஆராய்ந்து பார்த்ததில் அடியேனுடைய சிற்றறிவிற்கு இவளுடைய வரலாறு எட்டவில்லை. இவளது கணவனுன வத்ஸராஜனுடைய பெயர் மாத்திரம் மஹாபாரதத்தில் ஒரு மூலையில் படிக்கப்பட்டுள்ளது.

ஏனெனில்; ஆதிபர்வத்தில் த்ரௌபதியின் ஸ்வயம்வரத்திற்காகத் திரண்ட அரசர்களின் பெயர்களைச் சொல்லிவரும் ப்ரகரணத்தில், இருநூற்றோராமத்தியாயத்தில் இருபத்திரண்டாம் ச்லோகத்தில் [வத்ஸராஜச்ச மதிமாந்] என்றுள்ளதுகாண்க, அந்த வத்ஸராஜனே திருமடலில் "தாரார் தடந்தோள் தளைக்காலன்" என்று ப்ரதிபாதிக்கப்பட்டானாகக் கொள்க. இந்த வரலாறு விரிவாக வந்தவிடத்தே கண்டுகொள்க. அரும்பதவுரைகாரரொருவர்—"வாஸவதத்தையான ராஜபுத்ரி வத்ஸராஜனென்பானோடே ஸங்கதையாக, அவனை ராஜா சிறையிலே வைக்க, அவனையுங் கூட்டிக்கொண்டு அவன் பின்னே போனாளென்கிற கதை" என்றெழுதி வைத்திருக்கக் காண்கிறோமித்தனை. ஆனால், "கதாஸரித்ஸாகரம்" என்கிற வடமொழிப் புத்தகமொன்றில் பன்னிரண்டாவது தரங்கத்தில் இந்த வாஸவதத்தையின் சரித்திரம் இவ்விடத்திற்குச் சிறிது பொருத்தமாக மிகவும் விரிவாயெழுதப்பட்டுள்ளது; கண்டுகொள்க. அப்புத்தகத்திற்கு எந்தப் புராணம் மூலமென்று ஆராயவேண்டும்.

## 105. வேகவதி யென்பாள் தன் கணவனுடன் சேர்ந்தது

[பெரிய திருமடலில் காணும் கதை.]

வேகவதி என்னும் தெய்வமாதின் சரிதையை எடுத்துக் காட்டுகிறார் பெரிய திருமடலில். சிறிய திருமடலிற் சொல்லப்பட்ட வாஸவதத்தையின் சரித்திரத்துக்கு மூலமாகிய புராணம் இன்னதென்று தெரியாதது போலவே இவ்வேகவதியின் சரிதைக்கு மூலமான புராணமும் இன்னதென்று தெரியவில்லை. தமிழ்நாடுகளில் ப்ரஸித்தமான பெருங்கதை என்ற தொகுதியில் உதயணன் சரித்திரப் பகுதியில் இத்தெய்வமாதுகளின் வரலாறு ஒருவிதமாக எழுதப்பட்டுள்ளது. வடமொழியிலும் கதாஸரித்ஸாகரம் என்ற கதைப்புத்தகத்தில் இவர்களின் சரித்திரம் சொல்லப்பட்டுள்ளது. பிற்காலத்தவர்கள் எழுதிய அப்புத்தகங்களை ஆழ்வார் ஸ்ரீஸூக்திகட்கு மூலமாகச் சொல்லவொண்ணாது. கதைப்போக்கிலும் வேறுபாடு உள்ளதுபோலும். ஆகையாலே இக்கதையை இங்கு விரித்துரைக்க விரும்புகின்றிலோம்.

அழகிற் சிறந்த வேகவதி என்னுமோர் தேவகன்னிகை தனது கணவன் முகத்திலே தான் விழிக்க வொண்ணாதபடி தன்னைத் தனது தமையன் தடைசெய்து இழுத்துக்கொண்டு போக, அவள் அவனை லக்ஷியம் பண்ணாமல் திரஸ்கரித்து உதறித் தள்ளிவிட்டுத் தனது காதலன் ஒரு போர்க்களத்திலே யுத்தம் செய்துகொண்டிருப்பதாகத் தெரிந்து அங்கே போய் 'இப்படித்தானா என்னை நீ கைவிட்டுத் திரிவது!' என்று தார்க்காணித்து அந்தப் போர்க்களத்திலே பலருமறிய அவன் கையைப் பிடித்திழுத்துத் தன்னூர்க்குக் கொண்டு சென்று இஷ்டமான போகங்களை அனுபவித்து வாழ்ந்தாள்—என்பதாக இவ்வளது கதை ஏற்படுகிறது. இதன் விரிவை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

## 106. பன்னகராயன் மடப்பாவை பார்த்தனைப் புணர்ந்தது

[இதுவும் பெரிய திருமடலில் காணும் கதை.]

அர்ஜுனன் தீர்த்த யாத்திரையாகச் செல்லும்போது ஸ்நாநஞ்செய்யக் கங்கையில் இறங்கி நீராடிக் கரையேறப் புகும்போது உலூபி யென்னும் நாககன்னிகை அவனைக்கண்டு காமமோஹமடைந்து ரமிக்க இவனைத் தண்ணீரினுள்ளே இழுத்துக்கொண்டுசெல்ல இவனும் உள்ளேசென்று 'நீ யார்? என்னை எதுக்காக இங்கே கொணர்ந்தாய்?' என்று கேட்க, அவ்வுலூபி 'ஐராவத குலத்திற் பிறந்த கௌரவ்யனென்னும் ஸர்ப்பராஜனுடைய பெண் நான், உன்னைக் கண்டவாறே மன்மத பாணங்களுக்கு இலக்கானேன்; எப்படியாவது நீ

என்னைப் புணர்ந்து மகிழ்விக்க வேணும்' என்று வேண்ட; அதற்கு அர்ஜுநன் 'அம்மா! நான் இப்போது ஸம்வத்ஸர ப்ரஹ்மசர்ய வ்ரதத்தில் நிஷ்டனாயிருக்கிறேன்; ஆகையால் எங்ஙனே புணர்ச்சி செய்வேன்? உனது விருப்பை நிறைவேற்ற வேணுமென்கிற ஆசையும் எனக்கு உளது; என்செய்வேன்? என் விரதமும் கெடாமல், உன் விருப்பமும் பழுதுபடாமல் காரியமாகும்படியான உபாயத்தை நீயே சொல்' என்ன, அதற்கு அவ்வுலூபிகை 'உன் விரதத்தின் வரலாறு எனக்குத் தெரியும்; நான் காம நோயைத் தாங்கமுடியாது உன்னைச் சரணமடைகிறேன்; அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிடுதல் அதர்மமன்றோ; என்னை ரக்ஷிப்பதற்காக நீ புணர்ச்சி செய்வாயாகில் இது உன் வ்ரதத்தைக் கெடுக்கமாட்டாது; என்னைக் கைவிடுவாயாகில் இப்போதே என் உயிர் அற்றொழியும்படி பாராய்' என்று மிக்க ஆர்த்தியுடன் சொல்ல, அர்ஜுநன் அதற்கிணங்கி அன்றிரவு அவளோடே கலந்திருந்து இராவாந் என்கிற அழகிய ஒருபுத்திரனையும் அவளிடத்திற் பிறப்பித்து மீண்டுசென்றான்—என்கிற கதை மஹாபாரதத்தில் ஆதிபர்வத்தில் இருநூற்று முப்பத்துநான்கா மத்தியாயத்திற் கூறப்பட்டுள்ளது.

## 107. உஷை அநிருத்தனைப் புணர்ந்தது

[இதுவும் பெரிய திருமடலில் காணும் கதை.]

பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷை யென்பவள், ஒருநாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய்த் தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு, 'அவனைப் பெறுதற்கு உபாயஞ் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டு வந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்து வந்தாள் என்கிற கதை அறியத்தக்கது. (இதற்குமேல் நடந்த வரலாறு வாணனைத் தோள் துணித்த வரலாற்றில் காணத்தக்கது.)

## 108. பார்வதி பரமசிவனைத் தவஞ்செய்து பெற்றது

[இதுவும் பெரிய திருமடலில் காணும் கதை.]

**"சிவபிரான் தக்கன் வேள்வி தகர்த்தது"** என்னுங் கதையிற்கண்ட விவரணத்தின்படி ருத்ர பத்நியானவள் அக்நியிலே சரீரத்யாகம் பண்ணிவிட்ட பிறகு மலையரசனாகிய ஹிமவானுக் குப் பெண்ணாய்ப் பிறந்து [பர்வத புத்ரீ என்னுங் காரணத்தால்] பார்வதியென்று பெயர் பெற்று அப்பிறப்பிலும் அந்தப் பரமசிவனையே கணவனாகப் பெறவேணுமென்று ஆசை கொண்டு கடுந்தவம் புரிந்து அத்தவத்தின் பயனாக அங்ஙனமே மனோரதம் நிறைவேறி மகிழ்ந்தாள்.

மற்றொரு ஸமயத்திலும் பார்வதி தவம் புரிந்ததுண்டு; முன்னொரு காலத்திற் கைலாஸ மலையிலே சிவபிரானும் தானும் ஏகாஸநத்தில் நெருக்கமாக வீற்றிருந்தபொழுது ப்ருங்கி யென்னும் மாமுனி சிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ் செய்யவிரும்பி ஒரு வண்டுவடிவ மெடுத்து அந்த ஆஸனத்தை இடையிலே துளைத்துக்கொண்டு அதன் வழியாய் நுழைந்து சென்று அம்பிகையை விட்டுச் சிவனை மாத்திரம் பிரதக்ஷிணஞ் செய்ய, அது கண்ட பார்வதி தேவி தன் பதியைநோக்கி 'முனிவன் என்னைப் பிரதக்ஷிணஞ் செய்யாமைக்குக் காரணம் என்ன?' என்று கேட்க, அதற்குச் சிவன் 'இம்மை மறுமைகளில் இஷ்டஸித்திபெற விரும்பு

மவர்கள் உன்னை வழிபடுவார்கள்; முத்திபெற விரும்புமவர்கள் என்னை வழிபடுவார்கள்; இது நூல் துணிபு' என்று சொல்ல, அது கேட்ட பார்வதி 'இறைவன் வடிவத்தைப் பிரிந்து தனியே யிருந்ததனாலன்றோ எனக்கு இவ்விழிவு நேர்ந்தது' என்று வருந்தி, தான் சிவபிரானைவிட்டுப் பிரியாதிருக்குமாறு கருதி, புண்ணிய க்ஷேத்திரமான கேதாரத்திற் சென்று தவம் புரிந்து வரம்பெற்று அப்பிரானது வடிவத்திலே வாமபாகத்தைத் தனக்கு இடமாக அடைந்து அவ்வடிவிலேயே தான் ஒற்றுமைப்பட்டு நின்றனள் என்று சைவ புராணங்களிற் சொல்லிப்போரும் கதையுமுண்டு.

## 109. பாண்டியநாடன் மேருமலை முடியில் மகரகேது நாட்டியது

[பெரியாழ்வார் திருமொழியில் 5—4—7 பாட்டிலுள்ள கதை.]

பாண்டியகுலத்துத் தலைவனாயிருந்த ஒரு அரசன் தனது நாட்டில் நின்றும் மஹாமேருகிரியளவும் வழியிலுள்ள காடுகளைக் களைந்து, பகைவர்களைப் பாற்றித் தனக்கும் தனது பரிஜனங்களுக்கும் நடை எளிதாம்படி பெருவழியாக்கிக்கொண்டு சென்று, தனது வெற்றி தோற்றும்படி அம்மேருகிரியின் சிகரத்தில் தனது மகரகேதுவை நாட்டிப்போயினன்.

## 110. மலயத்வஜராஜன் திருமாலிருஞ்சோலையில் மண்டியது

[பெரியாழ்வார் திருமொழியில் 4—2—7. பாட்டின் பிற்பாதியிலுள்ள கதை இது.]

அகஸ்தியமுனிவன் வீற்றிருக்கும் மலய பர்வதத்திற்சென்று 'தர்மமே நடத்தக்கடவேன்" என்று மலயபர்வதத்தை யெழுதிக் கொடியெடுத்த 'மலயத்வஜன்' என்ற அரசன் தேரேறிக் கங்கைநீராடப் போகாநிற்கச் செய்தே, "மதிதவழ் குடுமியளவிலே சென்றவாறே தேர் வடக்கு ஓடாமல் நிற்க, அவ்வரசன் அவ்விடத்திலே தேரை நிறுத்தி, 'இங்கே தீர்த்த விசேஷமும் எம்பெருமானும் ஸந்நிதிபண்ணி யிருக்கவேணும்" என்று நினைத்து இறங்கி ஆராய்ந்து பார்க்க, அவ்விடத்தில் நித்யஸந்நிஹிதரான அழகர் அவ்வரசனை நோக்கி, 'இவ்வாற்றிலே நீராடு" என்று நியமித்தருள, நாமங்கேட்டுணர்ந்து நீராட வேண்டுகையால் இவ்வாற்றுக்குப் பெயர் என்?" என்று அரசன் கேட்க, முன்பு நாம் உலகளந்தபோது பிரான் திருவடி விளக்கின காலத்தில் நம் பாதச்சிலம்பில் நீர் இதிலே தெறித்துச் 'சிலம்பாறு' என்று பெயர்பெற்றது என்று அழகர் அருளிச்செய்ய, அதுகேட்ட அரசன் அவ்வாற்றில் நீராடி, கங்காஸ்நாநவிருப்பத்தையுந் தவிர்ந்து அத்திருமாலிருஞ்சோலைமலையிற்றானே பேரன்பு பூண்டிருந்தனன்.

## 111. மல்லிகை மாமாலையால் பிராட்டி பெருமானைக் கட்டியது

(பெரியாழ்வார் திருமொழியில் 3—10—2 பாட்டில்மட்டும் அநுஸந்திக்கப்பட்ட கதை)

அயோத்தியிலிருந்த காலத்தில் பிராட்டியும் பெருமாளும் ராத்ரி வேளையில் ஏகாந்தமான இடத்தில் உல்லாஸமாக இருக்கையில், பிரணய ரோஷத்தினால் பிராட்டி பெருமானை மல்லிகைமாலையைக்கொண்டு கட்டியதை அநுமான் அடையாளமாகக் கூறுவதாகப் பெரியாழ்வார் அருளிச் செய்கிறார். இந்த வ்ருத்தாந்தம் இதிஹாஸ புராணங்களில் இல்லையென்றும் ஆழ்வார் தாமே ஸாக்ஷாத்கரித்ததென்றும் பெரியோர் கூறுவர்.)

## 112. க்ஷத்ரபந்து பரகதி கண்டது

(திருமாலையில் நான்காவது பாட்டில் மட்டும் அநுஸந்திக்கப்பட்ட கதை இது.)

மிகக்கொடிய நடத்தைகளையுடையனாய், பல்வகைப் பாவங்களும் உருவெடுத்து வந்தனனென்னும்படி மஹாபாபியான **க்ஷத்ரபந்து** என்பானொருவன் இருந்தான்; அவன் தனது கொடுமையினால் தாய்தந்தை மக்கள் மித்திரர் அனைவராலும் கைவிடப்பட்டவனாய், காட்டிலே திரிந்துகொண்டு ஜீவஹிம்ஸையினால் வயிறுவளர்த்து வந்தான். இங்ஙனம் நெடுநாள் சென்றவளவில், ஒருநாள் ஒரு மாமுனிவர் கொடிய வெய்யில் வேளையில் வழிபோகாநிற்கையில் வழிதப்பி, இப்பாவி திரியுங் கானகத்திலே புகுந்து இவனது கண்ணுக்கு இலக்காயினர். அவரைக்கண்டதும் அவருடைய பரிதாபத்தைக் கண்ட இவனுக்குத் தன்னையுமறியாமல் அம்முனிவர் விஷயத்திற் காருண்யமுண்டாகி, 'மாமுனிவரே! இஃது உம்முடைய வழியன்றே; வழிதப்பிவந்தீர்போலும்; உற்றுநோக்கிப்பாரும்' என்று முனிவரை நோக்கிக் கூற, அவரும் உணர்ந்து, பொறுக்க முடியாத தாஹத்தையுடையராய் ஒரு தடாகத்தைத் தேடிச்செல்லுகையில் அருகே ஒரு அழகிய பொய்கையைக்கண்டு, தாபமிகுதியால் சடக்கென அக்குளத்திற்போய் விழுந்திட்டார். அப்போது அருகிருந்த க்ஷத்ரபந்து தனது கையிலிருந்த வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு, அம்முனிவரைப் பிடித்துத் தூக்கித் தேற்றித் தாமரைக் கிழங்குகளை உணவாகக்கொடுத்து விடாயைப் போக்கி மகிழ்வித்தான். பிறகு அவர் கரைமீதேறி ஒரு மரத்தடியில் உட்கார, அவரது கால்களின் நோவுதீர நன்றாகப் பிடித்து உபசாரங்களைச் செய்த க்ஷத்ரபந்துவை நோக்கி அம்முனிவர், 'பேருபகாரம்புரிந்த பெரியோனே! யாருடைய சிறந்த குலத்திற் பிறந்தவன் நீ? உனது வரலாறுகளைக் கேட்க விரும்புகிறேன்' என்ன; அதுகேட்ட அவனும் 'முனிவர்கோமானே! நான் ஸூர்யவம்சத்தில் **விச்வரதன்** என்பவற்கு மகனாய்த்தோன்றியவன்' என்று தொடங்கித் தனது கொடுமைகளையெல்லாம் ஒன்றும் ஒளிக்காமல் உள்ளபடி சொல்ல; அவற்றைச் செவியுற்ற முனிவர் இவனை நல்வழியிற் செலுத்தவேணுமென்ற கருத்துக்கொண்டு 'அப்பா! இனி இத்தீய குணங்களையெல்லாம் விட்டிட்டு ஜீவகாருண்யத்தையே பரமதர்மமாகக் கடைப்பிடிக்க உன்னாலாகாதோ?' என்று கேட்க; அதற்கு அவன் 'காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்னும் தீக்குணங்கட்குப் பிறப்பிடமான நான் அவற்றைவிட்டுப் பிரிந்து ஒரு க்ஷணகாலமும் இருக்ககில்லேன்; என் மனம் என்வசமன்று; இது தவிர வேறு நியமமுண்டாகில் சிரமேற் கொள்ளக் காத்திருக்கிறேன்' என்ன; எப்படியாவது இவனை வழிபடுத்த வேணுமென்னும் பேரவாக்கொண்ட முனிவர் 'இது மாட்டாயாகில், எப்போதும் **கோவிந்த! கோவிந்த!** என்று சொல்லிக்கொண்டிருக்கவாவது உன்னால் முடியுமோ? இருமினாலும் தும்மினாலும் **கோவிந்த!** என்றே சொல்லிக்கொண்டிருப்பாயாகில் உனக்கு மிக்க நன்மையுண்டாம்' என்று சொல்லிவிட்டுப் போயினர். அது முதலாக க்ஷத்ரபந்து கோவிந்த நாமத்தை இடைவிடாது ஸங்கீர்த்தநம் பண்ணிக்கொண்டிருந்தான். சிலகாலங் கழித்து அவன் மரணமடைந்து அந்தணர் குலத்தில் பூர்வஜந்ம ஸ்மரணத்துடன் பிறந்தான். உடனே அவனுக்கு இக்கொடிய ஸம்ஸாரத்தில் மிக்க நிர்வேதம் உண்டாயிற்று. இப்படிப்பட்ட உத்தமோத்தமமான ப்ராஹ்மண குலத்தில் எனக்குப்பிறவி நேர்ந்ததும் பூர்வஜந்ம ஸ்மரணமுண்டானதும் நான் முன்பு பண்ணின கோவிந்தநாமஸங்கீர்த்தநத்தின் பயனன்றோ? ஆகவே எனக்கு மேலான நன்மையை விளைத்த அந்த ஸ்ரீகோவிந்தனையே நான் ஆராதனஞ்செய்து, * திண்டாவழும்புஞ் செந்நீருஞ் சீயுநரம்புஞ் செறிதசையும் வேண்டா நாற்றமிகுமுடலைவிட்டு* மாயவன்சேற்றள்ளற் பொய்ந்நிலத்தைக் கடந்து நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்தை அடையக்கடவேன் என்பதாகத் துணிந்து அங்ஙனமே செய்து பரமபாகவதனாகி வீடுபெற்றனன்.

## 113. நமனும் முற்கலனும் பேசினது

(திருமாலையில் 12-ஆவது பாட்டில்மட்டும் அநுஸந்திக்கப்பட்ட கதை இது.)

முத்கலோபாக்யாநம் ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே தொண்ணூறாவது அத்யாயத்திற் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் வருமாறு. முத்கலனென்பவன் பெரும்பாவிகளில் தலைவன்; அவன் ஒருநாள் கோதாநம் பண்ணும்போது, "க்ருஷ்ணாய" என்று சொல்லி தாநஞ் செய்தான். பின்பு அவன் மாண்ட பிறகு யமகிங்கரர் வந்து நெருக்கி அவனை யமன் பக்கலிலே கொண்டு செல்ல, யமன் இவனை எதிர்கொண்டு ஸம்பாவனை செய்தான். அதுகண்ட முத்கலன், "உன்னுடைய படர்கள் என்னை நெருக்கிக் கொண்டுவராநிற்க, நீ என்னை கௌரவிப்பதற்கு என்ன காரணம்?" என்றுகேட்க; "உன்னுடைய மேன்மையை அவர்களுமறிந்திலர், நீயுமறிந்திலை,—க்ருஷ்ண நாமத்தை நீ ஒருகால் சொன்னாய் காண்!" என்று யமன் அதனைப் புகழ்ந்துகூற, இப்படி ப்ரஸக்தாநு ப்ரஸக்தமான இந்த ஸம்வாதம் நரகாநுபவம் பண்ணுகிறவர்களுடைய காதிலே விழுந்தவாறே அந்த நரகந்தானே துக்காநுபவத்திற்குரிய நிலமாயிருந்த நிலைமாறி ஆநந்தாநுபவ நிலமாய்விட்டதென்றால் இத்திருநாமத்தின் வைபவம் எப்படிப்பட்டதாயிருக்க வேணும்!" "என்னை நீ ஸத்கரிப்பதற்குக் காரணமென்ன?" என்று முத்கலன் கேட்க, "முன்பு க்ருஷ்ணநாமம் சொன்னாய்" என்று யமன் உத்தரமுரைத்த இவ்வளவேயாய்த்துப் பிறந்தது; யமன் தனக்குப்பாவநமாக அத்திருநாமத்தை உச்சரித்தவனல்லன் முற்கலன் ப்ரார்த்திக்க அவனுக்கு உபதேசித்தவனுமல்லன்; நரகாநுபவம் செய்கிறவர்களின் காதிலே இது விழுந்து அவர்கள் உய்வுபெறவேணுமென்று நினைத்துச் சொன்னவனுமல்லன்; இனி இதனைக் கேட்டவர்களோ பாபம் பண்ணுகிற ஸமயத்திலே அநுதபித்து மீண்டு ப்ராயச்சித்தம் செய்துகொள்ளக் கூடிய காலத்திலே கேட்டவர்களல்லர்; பாபத்தினுடைய பலன்களை அநுபவிக்கும்போதாயிற்றுக் கேட்டது. அப்போது தானும் இச்சையோடு கேட்டாருமல்லர்; யாத்ருச்சிகமாகத் திருநாமம் செவிப்பட்ட வித்தனையே; இப்படிப்பட்ட திருநாமமே இவ்வளவு பெருமையுடைத்தானால், பின்னை என் சொல்லவேண்டும்? ... ... ... ... ...

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் எழுதிய

திவ்ய ப்ரபந்த பகவத்கதாம்ருதம்

முற்றுப்பெற்றது.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



... அச்சுக்கூடம், காஞ்சீபுரம்.